1-முதல் 52-பாரங்கள் வரை மதராஸ் பாரதிவிலாஸ் பிரஸிலும்,

மற்றைய பாரங்கள்

மதுரை, எக்ஸெல்ஸியர் பிரஸிலும் பதிப்பிக்கப்பெற்றது.

இப் புத்தகமும் இன்னும் இதர புத்தகங்களும் மதுரை, புதுமண்டபம், புத்தக வியாபாரம், இ. மா. கோபாலகிருஷ்ணக்கோனரிடமும், சென்னை, இட்டா. சக்கரபாணி நாயுடு அன்பிரதர் இடமும் சகாயமான விலைக்குப் பெற்றுக்கொள்ளலாம்.



ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# கம்பர் சரித்திரம்.

சாலிவாகன சகாப்தம் எட்டாவது நூற்றாண்டின் பிற்பாதியில், சுமார் கூ - வருடங்களுக்குமுன், சோழநாட்டின்கணுள்ள திருவழுந்தூரில், அவதரித்துப் பலவளமிக்க நலமிகு திருவெண்ணெய்நல்லூர் வேளாண் குலதிலகரும் நீதியும், வாய்மையும் இறையளவேனுந் திறம்பாதவருமாகிய சடையப்பமுதலியாரவர்கள், திருமாளிகையிலிருந்துவளர்ந்து, அவர் குமாரர்களுக்கு ஸ்ரீகோசம் தாங்கிச்சென்று. அவர்கள் பயிலும் கல்விக்கழகத்தில் பயின்றுவருங்காலத்தில், தினைப்புனங்காக்கும் முறைவந்துநேர்ந்து, அங்கு எய்தியகாலையில், நித்திரைவர, சமீபத்திலிருந்த ஒரு காளிகோயிலில் அயர்ந்து தூங்குகையில், தன் ஆசிரியர் தினைப்புனத்தில், அவ்வூராள்வோனாகிய காளிங்கராயன் குதிரை மேய்வதாகச் சொற்பனங்கண்டு, திடுக்கிட்டெழுந்து, ஓடிவந்து பார்த்து, எவ்விதமாயோட்டியும் போகாமைகண்டு, “ஆசிரியர் விஷயத்தில் அபசாரப்பட்டோமே! இதற்கு யாதுசெய்வ” தென எண்ணுதுமெண்ணி, மறுபடியும் அக்காளி கோயிலுக் கெதிரில் நின்று ஓலமிட்டுக்கொண் டிருக்கையில், காளி பிரசன்னமாய், “பிள்ளாய் ஏதுக்கு ஓலமிடுவது! அஞ்சாதே! உன் நாவை நீட்டு” என்று சொன்னவண்ணம் நீட்ட, அதில் பீஜாட்சரத்தைத் தீட்டி மறைய, இவர் மறுபடியும் தினைப்புனத்திற்கு வந்துபார்க்க, அக்குதிரைபோகாது மேய்ந்துகொண்டிருந்ததைப் பார்த்துச், சீற்றமிகுந்து,

“வாய்த்த வயிரபுர மாகாளி யம்மேகேள்
காய்த்த தினைப்புனத்திற் காலைவைத்துச்-சாய்த்துக்
கதிரைமா ளத்தின்ற காளிங்க னேறும்
குதிரைமா ளக்கொண்டு போ”

என்று ஒரு வசைகவி சொல்லியவுடன் அக்குதிரை யுதைத்துக்கொண்டு,தொட்டென்றுகீழேவிழுந்து இறக்க,அச்செய்திகேட்ட தன் ஆசிரியர் துயரங்கண்டு; நான்காமடியை “குதிரைமீளக் கொண்டுவா” என்று மாற்றிக் குதிரையைப் பிழைப்பித்தது முதலியன யாவும் காளிங்கராயன் செவி புக்கமாத்திரத்தில் இவரை வருவிக்க, கையில் கிளியோட்டுங் கோலுடன் தன்சகசில்வந்த பிள்ளையைப்பார்த்து, ‘இக்கம்பனு’என, அங்குள்ளோர் ஆமென, அதுமுதல் இவருக்குக் கம்பனென்று பேருண்டாய், அனேக வரகவிமுதலியனபாடி, மஹாகவியெனப் பெயர்பெற்று வியாபகரா யிருக்கையில், இவையாவும் கேட்ட முதலியாரவர்கள் சங்கேதப்படி அன்பினுல் யாவர்க்கும், தாயொப்பவராகிய குலோத்துங்கராஜன் கட்டளையிட, ஆத்மகோடிகள் உஜ்ஜீவார்த்தம் சிறை யிருந்தா ளாகிய

சீதாபிராட்டியின் புருஷகார வைபவமாகிய இதிகாசமென்னும் ஸ்ரீராமாயணத்தைக் காளிதேவி அநுக்கிரகத்தால், சரஸ்வதி கடாக்ஷம்பெற்று நவரசங்களோடு, வான்மீகம் வசிஷ்டம், போதாயனம் முதலாகிய ராமாயணங்களையும் மற்றும் புராணாதிகளையும், இராமுழுது மாராய்ந்து, பகல் முழுதுக்கும் எா-கவிவீதம்பாடி, மகுடாபிஷேகம்வரையில் ௰தூ - செய்யுளில் ஆறுகாண்டமும் இயற்றி, சோழன் முதலாயினோர்க்குத் தெரிவித்துப், பெரியபெருமாள் நியமநப்படி ஆழ்வார் விஷயமாய் ஓர் அந்தாதியு மியற்றிச் செந்திறத்த தமிழோசையின் சொல்நயம் பொருள்நயம் நன்குவிளங்க, யாவரும் செவியில்மாந்தி ஆனந்தமாக்கடலில் ஆழும் வண்ணம் ஆட்சேபங்களுக்கெல்லாம் தக்க சமாதானம் சொல்லி, மகிழ்வித்ததால், அனேகவிதமான பரிசுபெற்று, திருவரங்கம் பெரிய கோயிலில் ஸ்ரீமந் நாதமுனிகள் முதலாயினோர் அவைக்களத்தில் மோட்டழகிய சிங்கர் கரம் நீட்டிச் சிரக்கம்பனஞ்செய்யுமாறு அரங்கேற்றுதல் செய்து, புலவர் பெருமானார் "கவிச்சக்கிரவர்த்தியார் கம்பர்" என்று பேரும் பெற்று விளங்கினார்.

இவர் இயற்றிய வேறு பிரபந்தங்கள் சடகோபரந்தாதி, ஏரெழுபது, திருக்கைவழக்கம், சரஸ்வதியந்தாதி, முதலானவைகளா.

இவர்காலததிருந்த வித்வான்கள் ஔவைப்பிராட்டியார், புகழேந்திப் புலவர், ஒட்டக்கூத்தர் முதலாயினோரேம்.

இவர் சரித்திரத்தையும், அரங்கேற்றிய விஷயத்தையும் சென்னைச் சர்வகலா சாலைத் தமிழ்ப்புலவராயிருந்த அட்டாவதானம் - இயற்றமிழாசிரியர், வீராசாமிச்செட்டியா ரவர்கள் இயற்றிய விநோதரசமஞ்சரியில் பரக்கக் காணலாம்.



ஸ்ரீ

ஸ்ரீமதேராமா நுஜாயநம.

# ஸ்ரீமத்கம்பராமாயண

## பாலகாண்ட விஷயத்திறம்.



ஸ்ரீமத் பாலகாண்டத்தில் விளங்க வுரைத்தது யாதெனின், "மாட்சிமைதங்கிய, சரயுநதிசூழ்ந்த அயோத்தியா நகரத்தைத் தர்மம், சாந்தம், கொடை, நீதியோடு அரசாண்டு, பெரும்புகழ்படைத்த தசரதசக்கிரவர்த்தியார்; குழவியில்லாக்குறையால் தம் குலகுருவாகிய வசிஷ்டமஹா முனிவரை நோக்கி, சுவாமிகாள், அடியேன் அறுபதினாயிரம் வருடம் இப்பெரும்புவியைத் தேவர் திருவடித்தாமரை மலரைச் சிரமேற்கொண்டு ஆண்டுவந்தேன். இனி ஆள்வதற்கும், முத்தியிலே சேர்ப்பதற்கும், பிள்ளை காணேனென விண்ணப்பஞ்செய்ய, முனிவர் பெருமானர் "ஆதியஞ் சோதியுருவை யங்குவைத் திங்குப்பிறக்கும்" ரகசியவார்த்தைப்பாட்டைத் தன் திருவுளத்தில் நினைவுகூர்ந்து, சக்கிரவர்த்தியைநோக்கி, கலைக்கோட்டு மஹா முனிவரைக்கொண்டு மகமியற்றுதி யாயின், புத்திரர் உளராவ றென்றவாறே, மாரியில்லாக் குறையால், உரோமபத நாட்டில் எழுந்தருளி யிருக்கும் கலைக்கோட்டு முனிவரை எழுந்தருளப்பண்ணி, விதிப்படி யாகமியற்ற, அவ் யாகத்தினின்றும் ஓர் பூதம் பிரசாதமேந்திவர, அதைக் கலைக்கோட்டுமுனிவர் ஆக்ஞைப்படி தேவியர் மூவர்க்கும் முறையே பகிர்ந்துகொடுத்து, மிகுந்தசேஷத்தை இரண்டாமுறையும் சுமித்திரைக்குக் கொடுத்தார். அஃதுண்டமூவரும் திருவயிறுவாய்த்துக் கௌசல்லியா தேவி - ஸ்ரீராமபிரானையும், கைகேசி - பரதனையும், சுமித்திரா தேவி - இலக்குமணனையும் சத்துருக்கனையும் முறையே ஈன்றனர். பின்னர் சக்கிர வர்த்தியார் இவர்களைக் குறித்துச் செய்யவேண்டுவன வாகிய தானங்கள்செய்து வசிஷ்ட முனிவரைக்கொண்டு, ஜாத கர்மமுதலிய செய்வித்தபின், பலகலையிலும் பயின்று, ஊசியும் சரடும்போல நால்வரும் ஒருவரையொருவர் பிரியாது, பெற்றோர், உற்றோர், மற்றோர் யாவரும் கண்களிக்கக் களித்து, வளர்ந்துவரும் காலையில், விசுவாமித்திர முனிவர், அங்கு எழுந்தருளி, காம வெகுளி மயக்கங்கள்போல ராக்ஷசாள் மத்தியில் இடையூறு இயற்றுவண்ணம், நின் புத்திரர்நால்வரில், கரியசெம்மலைக் கொடுக்கக் கடவையென்ற மாத்திரத்தில், சக்கிரவர்த்தியார் - கண்ணிலான் பெற்றிழந்தா லெனவருந்தி-பிர்மா - சிவன்-தேவேந்திரன் இவர்கள் இடையூற்றுக்கு இடையூறு உண்டாக்கத் தக்கதாக யான் தேவரீர் வேள்வியைக் காக்கின்றேன். எழுந்தருள்வீராக வென வுரைத்த மாத்திரத்தில், முனிக்குக் கோபம்பிறக்க, அப்போது அயலிலிருந்த வசிஷ்டர், முனியின் கோபமாற்றி, சக்கிரவர்த்திக்குச் சொல்ல வேண்டுவன சொல்லி, உன்

புத்திரனுக்கு அளவில் விஞ்சைகள் வரவிருக்கிறதைத் தடுக்கின்றனையோ வென வுரைத்து, முனிபின் கூட்டிவிட, அவர் இராமனையும், இளையபெருமாளையும் கூட்டிக்கொண்டு, பாலைவன முதலியவற்றைக் கடந்து செல்கையில், சுரத்தின்கொடுமை தணிய சில்மந்திரம் உபதேசித்துப் பின்னர், தாடகையின் வரலாற்றைச்சொல்லி, அவளை முடிவித்து, தோள்வண்ணங் கண்டுணர்ந்து, மாவலியின்வரலாறு, வாமனாவதாரவிசேஷம், துர்வாசர் பிராட்டியின் மாலையைத் தேவதாஸ்திரியால் பெற்று, இந்திரன் பவனிச்சிறப்பு கண்டுகொடுக்க, அவன் அம்மாலையை அவமதித்தலால் கொடுத்தசாபம், விமோசனம், பகீரதன் வரலாறு, முதலியன சொல்லிச் செல்லுகையில் தாள்வண்ணம் கண்டு, அகலிகையின் வரலாறு, அவள் சாபவிமோசனம், முதலியவைகளைச்சொல்லி, அவளை நாயகனிடம் சேர்த்துத் தெரியவேண்டுவன யாவும் தெரிந்துகொண்டு, மிதிலாநகரம் கிட்டி, கொடிகளின் காட்சியையும், யானைகள் போரிடும் விதத்தையும், நெடிய வீதிகளின் அலங்காரத்தையும், மாதர்கள் ஆடிக்கொண்டிருக்கும் ஊசலின் அழகையும், கடைவீதிகளின் ஒழுங்கையும், மாதர் ஆடல்பாடல்களின் விநோதத்தையும், குதிரைகள் சுழன்று ஓடுவதின் தன்மையையும், மாதர் பந்தாடும் விசேஷத்தையும், மாதர் நீராடும் இடங்களையும், வாலிபர் வாள்முதலிய ஆயுதங்கள் பயிலுமிடங்களையும், ஆதிசேஷன் முடிமீதிருக்கும் அகழியையும் நோக்கிக் கொண்டேசென்று கன்னிகா மாடத்தருகு நின்றனர். அப்போது சீதை ராமனையும், ராமன் சீதையையும் நோக்க, நகரமாந்தர், மாதர் பலர் நம்பியையும், அவர் தம்பியையுங்கண்டு மயலிலாழ்ந்தவர்களாய்,

"தோள்கண்டார் தோளேகண்டார் தொடுகழற் கமலமன்ன
தாள்கண்டார் தாளேகண்டார் தடக்கைகண் டாருமஃதே
வாள்கொண்ட கண்ணார்யாரே வடிவினை முடியக்கண்டார்
ஊழ்கொண்ட சமயத்தன்னா னுருவுகண் டாரையொத்தார்.

நம்பியைக் காணநங்கைக் காயிர நயனம்வேண்டும்
கொம்பினைக் காணுந்தோறுங் குரிசிற்கு மன்னதேயாம்
தம்பியைக் காண்மினென்பார் தவமுடைத் துலகமென்பார்
இம்பரிந் நகரிற்றந்த முனிவனை யிறைஞ்சுமென்பார்"

என்றவாறு குதுகலித்துக்கொண் டிருக்கையில், மூவரும் அரண்மனையிற்புக்கு, ஜனகமஹாராஜன் யாகசாலையைக் கண்ணுற்று நின்றபோது, முனிவரை ஜனக மஹாராஜன் நோக்கி, 'இக்காளையர்யாவரென' அப்போதவர் 'உன் விருந்தினர், நின்யாகத்தைக் காணியவந்தார், வில் வலியுங்காண்பார், தசரதன் புதல்வர்' என்று குலமுறையோடு அவதார விசேஷத்தையும் சொல்ல, சதானந்தர் அப்போது திரியம்பகமென்னும் வில் வரலாற்றையும், சீதாபிராட்டியின் அவதார விசேஷத்தையும் சொன்னபின், அவர் ஆனந்த மாக்கடலில் மூழ்கி, அனேக ஆயிரகிங்கரர்களால் அந்நகர மாந்தர் பலரும் அநுதபிக்குமாறு அந்த வில்லை

எடுப்பித்து வந்து, ஸ்ரீராமபிரான் திருமுன்னர் வைத்தமாத்திரத்தில், விசுவாமித்திரமுனியின் ஆணைப்படி வில்லை யெடுத்ததைப் பார்த்திலர், இற்றது கேட்டாராகிய நகர மாந்தர் சீதாபிராட்டியின் திருமணமுடிந்த தென்று குதுகலமா யிருக்கும்போது' சதாநந்தரை நோக்கித் தாடகையை முடித்து, என் யாகங் காத்து, நின் அன்னை சாபமும் தீர்த்து, என் இடர் முழுதுந் தீர்த்தானென்ற மாத்திரத்தில், சதாநந்தர் ஸ்ரீராம பிரானை நோக்கி, விசுவாமித்திர முனியின் ஆற்றல் விளக்கத்தை உரைக்க, அதுகேட்ட சக்கிரவர்த்தித் திருமகன் திருமணச்செய்தியைத் தசரதசக்கிர வர்த்திக்குத் தெரிவிக்க, அச்செய்திகேட்ட அயோத்தியா நகரமாந்தர் யாவரும் தங்கள் தங்கள் வழிபடுகடவுளைத் தொழுது திருமணங்காணிய பிர யாணமாய்ச் சந்திரசைலவழியாய் வெகு ஆடம்பரத்தோடு அங்குள்ள வளமெல்லாங்கண்டு, பூக்கொய்தல், நீர்விளையாடல்முதலிய செய்து கொண்டு,மிதிலாநகரம்வந்து சேர்ந்தபின்,தசரதமஹாராஜன் தன் உறவின ரோடும், தேவியர் மூவரோடும், பரதசத்துருக்கனரோடும் வர, ஜனக மஹாராஜன் எதிர்கொண்டுபோய்,உபசாரத்தோடு அழைத்துவந்து,மணத் துக்குரிய யாவுஞ்செய்து, பங்குனி உத்திரத்தில் வசிட்டரைக்கொண்டு, நல்ல ஓரையில் ஸ்ரீராமனுக்கும், சீதைக்கும் அலங்காரஞ்செய்து, மண்டபத்தில் எழுந்தருளச்செய்து, விதிப்படி திருமணமுடித்தபின், தம்பதிகள் கேகயன் மாதை முன்னர் அடிதொழுது, பின்னர் தாயின் பாதம் பணிந்து, அதற்குப்பின் சுமித்திரையின் பாதபங்கயம் முடிசூடியவுடன் தாய்மார் மூவரும் மனங்களித்தவர்களாய்த் தன்மகனுக்குச் சீதாபிராட்டி நல்ல அணியென்று தழுவிக்கொண்டு, அனேகவிதமான ஆடை ஆபரணங்கள் வழங்கப்பெற்றவுடன் ஜனகமஹாராஜன் சக்கிரவர்த்தியைநோக்கிச் சுற்றத்தாரோடு கலந்து வார்த்தைசொல்லித் தன்சோதரர் குசத்வஜமகா ராஜன்புத்திரிகளாகிய மூவரில் மாண்டவியை - பரதனுக்கும், ஊர்மிளையை - இலட்சுமணருக்கும், சுருதகீர்த்தியை-சத்துருக்கனருக்கும் பாணிக்கிரகணஞ்செய்வித்து, நல்லசுபதினத்தில் அயோத்திக்குப் பிரயாணமாய் வரும்வழியில், பெருமாள் ஆற்றல் உணராது வந்து எதிர்த்த, பரசுராமனைக் கர்வபங்கஞ்செய்து, தம்நகரத்தில் வெகுசந்தோஷமாய்ச் சக்கிரவர்த்தியோடு வந்துசேர்ந்து இருந்தனர்'' என்பதை உணர்த்துவதே.



ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:












நன்ருக. குருவாழ்க. குருவேதுணே.

# ஸ்ரீமத் கம்பராமாயணம்.

## பாலகாண்டம் மூலமும் - உரையும்.

ஸ்ரீமத் கம்பராமாயணம் - ஸ்ரீமத் கம்பநாட்டாழ்வாரால் அருளிச்செய்யப்பட்ட ராமாயணம்.

ராமாயணம் என்பது முதனூலால்வந்த காரணப்பெயர். ராமன் என்பதற்குத் தன்றிறத்தி லெல்லாரு மனங்களித்திருக்கப் பெற்றவன் என்பது பொருள். கல்யாணகுணங்க ளெல்லாவற்றையு முடையவன் என்பது கருத்து. அயநம்-இடம்-ராமசரிதத்துக் கிடமாயுள்ள நூல் என்பது திரண்டபொருள். அயநம் என்பதற்கு அடைதற்கு அல்லது அறிதற்குக் கருவியாயுள்ளது என்பது பொருளாதலால் ராமனை அடைதற்கு அல்லது அறிதற்குக் கருவியாயுள்ள நூல் என்றலும் ஒன்று. ராமனை விஷயமாகவுடைய நூல் என்றலும் பொருந்தும். "ஸ்ரீராமாயணத்தால் சிறையிருந்தவளேற்றஞ் சொல்லுகிறது" என்னும் ஸ்ரீவசநபூஷண வாக்யபலத்தால், பிராட்டியின் வைபவத்தை யுணர்த்துநூல் என்றும் கூறலாம்.

அபியுக்தர் செய்தருளிய தனியன்கள்.

நேரிசைவெண்பா.

1. தராதலத்தி னுள்ள தமிழ்க்குற்ற மெல்லாம்
அராவு மரமாயிற் றன்றே - இராவணன்மேல்
அம்புநாட் டாழ்வா னடிபணியு மாதித்தன்
கம்பநாட் டாழ்வான் கவி.

(இ-ள்.) இராவணன்மேல் - ராவணன்மீது, அம்பு-பாணத்தை, நாட்டு-தைக்கவிட்ட, ஆழ்வான் - ஸ்ரீராமபிரானது, அடி-திருவடிகளை, பணியும் - வணங்குகின்ற, ஆதித்தன் - சூரியனாகிய, கம்பநாட்டாழ்வான் - கம்பநாட்டாழ்வாரது, கவி - கவியானது, தராதலத்தின் உள்ள - பூதலத்திலுள்ள. தமிழ் - தமிழ்ப்பாடல்களின், குற்றமெல்லாம் - (சொற்சோர்வு பொருட்சோர்வு முதலிய குற்றங்களாகிய) இரும்புகளையெல்லாம், அராவும் - தேய்த்துச் சமமாக்குகின்ற, அரம் ஆயிற்று அன்றே- அரமேயாயினது—எ-று.

முன்னுள்ள ஆழ்வான் என்பதில் ளகரத்துக்கு ழகரம்போலி. சூரியன் தான் விளக்கமுடையவனாயிருந்து, பொருள்களை விளங்கச் செய்தல்போலத், தாமும் மெய்யறிவுடையரா யிருத்தலேயன்றித், தன்செய்யுளால் பிறரையும் அறிவு விளங்கச் செய்தலால் ஆதித்தனென உருவகஞ்செய்தார். இவரது கவியை அரமென்றலால், தமிழ்க்குற்றங்களை யிரும்பென்றுரைத்தோம். இது ஏகதேசவுருவகம்.

நேரசைக் கட்டளைக்கலித்துறை.

2. வாழ்வார்திருவெண்ணெய் நல்லூர்ச்சடையப்பன் வாழ்த்துபெறத்
தாழ்வாருயரப் புலவோரகவிரு டானகலப்
போழ்வார்கதிரி னுதித்ததெய்வப்புல மைக்கம்பநாட்
டாழ்வார்பதத்தைச் சிந்திப்பவர்க்கியாது மரியதன்றே.

(இ - ள்.) வாழ்வு ஆர் - (இவ்வுலகவாழ்க்கைக்குரிய) உபகரணங்களெல்லாம் நிறையப்பெற்ற, திருவெண்ணெய்நல்லூர் - திருவெண்ணெய்நல்லூரில் (அவதரித்த) சடையப்பன்-சடையப்பனென்னு மியற்பெயரையுடையவன், வாழ்த்துபெற-ஆசிரியரது மங்களாசாசநத்தை அடையவும், தாழ்வார் உயர - (தமிழ்ப்புலமையில்) தாழ்ந்தவர்கள் உயர்வையடையவும், புலவோர் - வித்துவான்களுடைய, அக இருள்-உள்ளிருளானது, தான் அகல - தானே யொழிந்துபோகவும், போழ் - (புறவிருளைப்) பிளக்கின்ற, வார்கதிரின் - நீண்ட கிரணங்களையுடைய சூரியனைப்போல, உதித்த - அவதரித்தருளின, தெய்வப்புலமை - தெய்வப்புலமை யமைந்த, கம்பநாட்டாழ்வார் - கம்பநாட்டாழ்வாருடைய, பதத்தை - திருவடிகளை, சிந்திப்பவர்க்கு - நினைப்பவர்களுக்கு, யாதும் - (இம்மை மறுமை யின்பங்களைத் தருதற்குரிய) எந்தப்பொருளும், அரியது அன்று - அருமையானதல்ல—எ-று. (உ)

ஏ-அசை. வாழ்வு-காரியவாகுபெயர். வார்கதிர்-அடையடுத்த சினையாகுபெயர்.

3. அம்பரா வணிசடை யர னயன்முத
லும்பரான் முனிவரால் யோகரா லுயர்
இம்பராற் பிணிக்கரு மிராம வேழஞ்சேர்
கம்பராம் புலவரைக் கருத் திருத்துவாம்.

(இ-ள்.) அம்பு - கங்கையையும், அரா - சர்ப்பத்தையும், அணி - தரித்த, சடை-சடாபாரத்தையுடைய, அரன் - சிவன், அயன் - பிரமன், முதல் - முதலான, உம்பரால் - தேவர்களாலும், முனிவரால் - ருஷிகளாலும், யோகரால் - யோகிகளாலும், உயர் - சிறந்த, இம்பரால் - இல்லறத்தாராலும், பிணிக்க அரு - கட்டுதற்கரிதான, இராமவேழம் - ஸ்ரீராமபிரான் என்கிற யானையானது, சேர் - (தானேவந்து) சேர்தற்குரிய, கம்பர்ஆம் - கட்டுத்தறியை நிகர்க்கின்றவராகிய, புலவரை - (இந்நூலாசிரியராகிய) பேரறிவுடையவரை, கருத்து - (எமது) மனத்தின்கண், இருத்துவாம்-யாம் நிலைபெறுத்துவோம்—எ-று. (௩)

கொம்பு, என்பது கொம்பர் என்றாயினதுபோலக், கம்பு, என்பது கம்பர் எனப் போலியாயிற்று. பொருள், புகழ்களை விரும்பாத முனிவரையும், யோகரையும், முன் கூறினமையின், இம்பர் என்பதற்கு, அவற்றை விரும்புதற்குரிய இல்லறத்தார் என்று பொருள் கூறப்பட்டது. இராமவேழஞ்சேர் என்றது நிர்ஹேதுகக்ருபையை வெளிப்படுத்துகின்றது.

4. சம்பநாடன் னுமைசெவி சாற்றுபூங்
கொம்பனுடன் கொழுந னிராமப்பேர்

பம்பநாடழைக் குங்கதை பாச்செய்த
கம்பநாடன் கழறலே யிற்கொள்வாம்.

(இ-ள்.) சம்பு - சிவன், அநாள் - பூர்வகாலத்தில், தன் - தனக்குரியளான, உமை - உமாதேவியின், செவி - காதுகளில், சாற்று - உபதேசித்த, பூங்கொம்பு அன்னாள் கொழுநன் - பூங்கொம்பு போல்பவளாகிய ஜாநகீநாதனாகிய, இராமப் பேர் - ஸ்ரீராமபிரானது நாமமானது, பம்ப - (உலகமுழுதும்) வியாபிக்க, நாள்- எக்காலத்தும், தழைக்கும் - (வடமொழியில்) விருத்தியடையாநிற்கிற, கதை - ராம சரிதத்தை, பாசெய்த - தமிழ்ச்செய்யுளாகச் செய்தருளிய, கம்பநாடன்-கம்பநாட்டாழ்வாருடைய, கழல் - திருவடிகளாகிய மலர்களை, தலையில் கொள்வாம் - யாம் சிரசில் சூடுவோம்—எ-று, (௪)

கொம்பனுடன் என்பதில் தன் சாரியை - உமை செவி சாற்று என்ற விசேடணத்தால் இடைநிகழ்ந்த இராமபிரான் திருநாமமென்பது பெற்றும்.

5. நாரணன் விளையாட் டெல்லா நாரத முனிவன் கூற
ஆரணக் கவிதை செய்தா னறிந்தவான் மீகி யென்பான்
சீரணி சோழ நாட்டுத் திருவழுந் தூருள் வாழ்வோன்
காரணக் கொடையான் கம்பன் தமிழினாற் கவிசெய் தானே.

(இ-ள்.) நாரணன் - ஸ்ரீராமபிரானது, விளையாட்டெல்லாம் - லீலைமுழுதும், நாரதமுனிவன்கூற - நாரதமுனிவன் சொல்ல, அறிந்த - கேட்டுணர்ந்த, வான்மீகி யென்பான் - வால்மீகியென்று சிறப்பித்துச் சொல்லப்பட்ட முனிவரன், ஆரணக் கவிதை செய்தான்-கீர்வாண சுலோகங்களாகச் செய்தனன், (அந்த ராமசரிதத்தை) சீர் அணி - சிறப்புப்பெற்ற, சோழநாட்டு - சோழநாட்டின்கண், திருவழுந்தூருள்- திருவழுந்தூரென்னுந் திவ்வியதேசத்தில், வாழ்வோன் - வாழ்பவனும், கார் அண்- மேகத்தையொத்த, அ கொடையான் - (கைம்மாறுகருதாத) அக்கொடையையுடையவனுமாகிய, கம்பன் - கம்பநாட்டாழ்வான், தமிழினால் கவிசெய்தான் - தமிழ்ப் பாஷையில் விருத்தக் கவிகளாகப் பாடினன்—எ-று. (௫)

நாரணன் என்பது தர்மியைக்கியத்தால் ஸ்ரீராமபிரானை யுணர்த்திற்று. ஆரணம் கீர்வாண பாஷாரூபமா யிருத்தலின் ஆரணக்கவிதை யென்றதற்குக் கீர்வாண சுலோகமெனப் பொருள் கூறப்பட்டது. அன்றி வேதத்தோடொத்த கவியெனினுமாம். வல்மீகம்-புற்று-புற்றிலிருந்து கேட்டுணர்ந்தனன் ஆகலானும், புற்றிலிருந்து வெளிப்பட்டானாகலானும் வால்மீகியெனக் காரணக் குறியாயிற்று. காரணக் கொடை யென்பதற்குப், புகழுக் காரணமாகிய கொடையெனினும், முதன்மையான கொடையெனினு மமையும். கொடைக்குக் காரணம் அருளாதலால் காரணம் என்பது அருளெனக்கொண்டு, அருட்கொடை யென்றலு மொன்று.

6. அம்பிலே சிலையை நாட்டி யமரர்க்கன் றமுத மீந்த
தம்பிரா னென்னத் தானும் தமிழிலே தாலை நாட்டிக்
கம்பநா டுடைய வள்ளல் கவிச்சக்கிர வர்த்தி பார்மேல்
நம்புபா மாலை யாலே நரருக்கின் றமுத மீந்தான்.

(இ-ள்.) அம்பில் - (திருப்பாற்) கடலில், சிலையை - (மந்தர) மலையை, நாட்டி- மத்தாக நட்டுக் (கடைந்து), அமுதம் - (அதிலுண்டான) அமிர்தத்தை, அன்று-அக் காலத்தில், அமரர்க்கு ஈந்த - தேவர்களுக்குக் கொடுத்த, தம்பிரான் என்ன - (உப

காரசீலனுன) ஸ்ரீமந் நாராயணனைப்போல, கம்பநாடு - கம்பநாட்டை, உடைய - தனக்கு வாஸஸ்த்தாநமாக வுடைய, வள்ளல் - உதாரசீலனும், கவிச்சக்கிரவர்த்தி- கவிச்சக்கிரவர்த்தியுமாகிய கம்பநாட்டாழ்வான், தானும்-தானும், தமிழில் - தமிழ்ப் பாஷையாகிய பாற்கடலில், தாலேநாட்டி - தன்னுவாகிய (மந்த்ரமலேயை) நட்டுக் (கடைந்து), இன்று-இக்காலத்தில், நரருக்கு - மாநுடருக்கு, பார்மேல் நம்பு-தமிழ் நாட்டிலுள்ளார் நம்புகின்ற, பாமாலேயால் - தமிழ்ச்செய்யுட் டொகுதியாகிய பாத்திரத்தால் (மொண்டு), அமுதம் - (ராமசரிதமாகிய) அமிர்தத்தை, ஈந்தான்-உபகரித் தருளினுன்—எ-று. (சு)

அம்பு-நீர். அது நீரையுடைய கடலுக்கானமையால் கருவியாகுபெயர். அது இவ்விடத்திற்குத் தகுதியாய்ப் பாற்கடலென்று சொல்லப்பட்டது. சிலே - கல். அது கற்களேயுடைய மலேயையுணர்த்தினமையின் இதுவுமது. சிலேயெனப் பொதுப் படக் கூறினுராயினும், இவ்விடத்திற்கேற்ப மந்தரமலேயென்றேம், தால் என மெய்யீருய் நில்லாது தாலு என உகரவீருயும் வரும். பிரான்-உபகார குணமுள்ள வன். தம்பிரான் என்பது, ஒரு சொன்னீர்மையாய், இறைவனென்னும் பொருள் படநின்றது. வள்ளல் - கவிக்கொடையால் வந்த பண்பாகு பெயர், ஏனேயகவி களின் மேற்பட்டிருத்தலால் கவிச்சக்கிரவர்த்தியென்ருர்.

7\. எண்ணிய சகாத்த மெண்ணூற் றேழின்மேற் சடையன் வாழ்வு
நண்ணிய வெண்ணெய் நல்லூர் தன்னிலே கம்ப நாடன்
பண்ணிய விராம காதை பங்குனி யத்த நாளில்
கண்ணிய வரங்கர் முன்னே கவியரங் கேற்றி னுனே.

(இ-ள்.) எண்ணிய - எண்ணப்பட்ட, சகாத்தம் - சகவருஷங்கள், எண்ணூற் றேழின்மேல் - எண்ணூற்றேழுக்குமேல், சடையன் - சடையப்பன், வாழ்வு நண்ணிய-தான் உறைவிடமாகப் பொருந்திய, வெண்ணெய் நல்லூர் தன்னில் - திரு வெண்ணெய் நல்லூரில், கம்பநாடன் - கம்பநாட்டாழ்வான், பண்ணிய - செய்தரு ளிய, இராமகாதை-ராமசரிதத்தை, பங்குனி அத்தநாளில் - பங்குனிமாஸம் அஸ்த நக்ஷத்ரத்தில், கண்ணிய - யாவராலும் நினைக்கப்பட்ட, அரங்கர்முன் - ரங்கநாதன் சந்நிதியில், கவி அரங்கேற்றினுன்-வித்வத் சபையாருக்கு ஏற்பித்தான்—எ-று.

மூந்நூற்றேழின்மேல் எனவும் பாடமுண்டு, இத்திருவிருத்தத்தால் காலமும், களனும், ஆக்கியோன்பெயரும், நூற்பெயரும், நுதலியபொருளும், கூறியவாறு காண்க,

8\. இம்பர் நாட்டிற் செல்வமெல்லா மெய்தி யரசாண் டிருந்தாலும்
உம்பர் நாட்டிற் கற்பகக்கா வோங்கு நீழ லிருந்தாலும்
செம்பொன் மேரு வனையபுயத் திறல்சே ரிராமன் றிருக்கதையில்
கம்பநாடன் கவிதையிற் போற் கற்றேர்க் கிதயங் களியாதே.

(இ-ள்,) இம்பர்நாட்டில் - இவ்வுலகத்தில், செல்வம் எல்லாம் எய்தி - ஐசுவரி யங்களேயெல்லா மடைந்து, அரசு ஆண்டு இருந்தாலும்-அரசு செய்துக்கொண்டிருந் தாலும், உம்பர் நாட்டில் - தேவலோகத்தில், கற்பகக்கா - கற்பகச்சோலேயின், ஓங்கு-மிகுந்த, நீழல்-நிழலின்கண், (இருந்தாலும்) - இந்திரனுய் வீற்றிருந்தாலும், கற்றேர்க்கு - (வீட்டு நூல்களேக்) கற்ற அறிஞர்க்கு, செம்பொன் - செம்பொன்னு லாகிய, மேரு அனைய - மேருமலேயையொத்த, புயம் - தோள்களின், திறல்சேர் - வெற்றி யமைந்த, இராமன் - ஸ்ரீராமபிரானது, திருக்கதையில் - திவ்ய சரிதகங்

ளுள், கம்பநாடன் - கம்பநாட்டாழ்வான் செய்த, கவிதையிற்போல் - தமிழ்க்கவி களில் களிப்பதுபோல, இதயம் களியாது - (வேறொன்றில்) மனங் களிப்படை யாது—எ-று. (அ)

கம்பராமாயணக் கவியின் சொற்சுவை பொருட்சுவைகளின் ஏற்றம் சொல்லப் பட்டது.

9. கழுந்தராயுன் கழல்பணியாதவர் கதிர்மணி முடிமீதே
அழுந்தவாளிகள் தொடுசிலைராகவ வபிநவ கவிநாதன்
விழுந்தநாயிறு வெழுவதன்முன் மறை வேதிய ருடனாராய்ந்
தெழுந்தநாயிறு விழுவதன்முன் கவி பாடின தெழுநூறே.

(இ-ள்.) கழுந்தராய் - கழுந்தையொத்தவர்களாய், உன்கழல் - உன் திருவடி களை, பணியாதவர் - வணங்காதவர்களாகிய தீயோர்களுடைய, கதிர் - பிரகாசத் தையுடைய, மணிமுடிமீது - ரத்நகிரீடங்களின்மேல், அழுந்த - பதியும்படி, வாளி கள்தொடு - பாணங்களைப் பிரயோகித்தற்குரிய, சிலை - கோதண்டத்தையுடைய, ராகவன் - ராகவன் விஷயமாய், அபிநவம் - மிக்க புதுமையான, கவிநாதன் - கவிச் சக்ரவர்த்தியாகிய கம்பநாட்டாழ்வான், விழுந்தநாயிறு - அஸ்தமித்தசூரியன், எழு வதன்முன் - உதித்தற்குமுன்னே, மறை - வேதாதிகாரிகளாகிய, வேதியருடன் - பிராமணருடனிருந்து, ஆராய்ந்து - (கீர்வாண ராமாயணத்தை) யாராய்ந்தறிந்து, எழுந்தநாயிறு - உதித்தசூரியன், விழுவதன்முன் - அஸ்தமிப்பதற்குமுன்னே, பாடி னது - பாடினதாகிய, கவி - கவித்தொகை, எழுநூறு - எழுநூறும்—எ-று. (கூ)

கழுந்து - படைக்கலங்களிற் கைப்பிடியாற் றேய்ந்த இடம் - இவ்வுவமையால் அறிவு தேய்ந்தவர் என்றவாறாயிற்று.

---

## பயன்.

1. நாடிய பொருள்கைகூடு ஞானமும் புகழுமுண்டாம்
வீடியல் வழியதாக்கும் வேரியங் கமலைநோக்கு
நீடிய வரக்கர்சேனை நீறுபட் டழியவாகை
சூடிய சிலையிராமன் றோள்வலி கூறுவோர்க்கே.

(இ-ள்.) நீடிய-மிகுதியான, அரக்கர்சேனை - ராக்ஷஸசேனை, நீறுபட்டு அழிய- பொடிபட்டு நசிக்க, வாகைசூடிய - வெற்றிமாலையைத்தரித்த, சிலை - கோதண்ட மென்னும் வில்லையேந்திய, இராமன் - ஸ்ரீராமபிரானது, தோள்வலி - புஜபலத்தை, கூறுவோர்க்கே - புகழ்ந்து சொல்வோர்க்கே, நாடிய - அவர்களால் விரும்பப்பட்ட, பொருள் - சர்வார்த்தங்களும், கைகூடும் - கைவசமாகும், ஞானமும் - பேரறிவும், புகழும்-கீர்த்தியும், உண்டாம் - உளவாகும், (அவர்களை) வீடு இயல் - மோக்ஷத்தை யடைதற்கு இயைந்த, வழி - நன்னெறியை, ஆக்கும் - உண்டாக்குகிற, வேரி - பரி மளமுள்ள, அம் - அழகான, கமலை - தாமரைமலரி லெழுந்தருளியிருக்கும் திரு மகள், நோக்கும் - கடைக்கணித்தருளுவாள்—எ-று. (க)

சேதநரது குற்றத்தைக், குணமாக ஏற்பித்து, எம்பெருமான் திருவுளமிரங்கப் பண்ணும் புருஷகார பூதையாகலின், "வீடியல்வழியதாக்கும் வேரியங்கமலை" யென்றார்.

அவர்களை என ஒருசொல் வருவியாது, வீடு இயல் - மோக்ஷத்தை யடைதற்குரிய, வழி - மார்க்கத்தை, ஆக்கும் - உண்டாக்குகிற, வேரி - பரிமளமுள்ள, அம்- அழகாகிய, கமலை - தாமரைப்பூவில் எழுந்தருளியிருக்கும் திருமகளது, நோக்கும்- கடாக்ஷமும், (உண்டாகும்.) எனப்பொரு ளுரைத்தலுமாம்.

வேரியங்கமலைநோக்கும் தோள்வலியென இயைத்துரைப்பினு மமையும். இப்பொருட்கு, நோக்குமென்பதனைப் பெயரெச்சமாகக் கொள்க.

நீறுபட்டு என்பதனானே அவர்கள் நீறுபட்டது வெளியாகாநிற்க, அழியவெனல் மிகையன்றோவெனின், அன்று, அவ்வரக்கரிருந்த விடமுஞ் சுவடுந் தோன்றா தொழிந்ததென்றற்கு இவ்வாறு கூறினாரா தலினென்க. 'வாகைசூடிய' என்பதற்குப், படைமேற் சென்று வெற்றியடைந்தோர் புனையும் வாகை மலர்மாலையை யணிந்த எனினும் பொருந்தும். சிலையென்பது வில்லுக்குப் பொதுப்பெயராயினும், சக்ரவர்த்தித் திருமகனாரது திருக்கரத்துள்ளது, கோதண்டமென்னும் சிறப்புப் பெயரை யுடையதாகலின், கோதண்டமெனப் பொருள் கூறப்பட்டது. 'நீடியவரக்கர்சேனை நீறுபட்டழியவாகை சூடியசிலையாயினும்; சுமந்த, தாங்கிய முதலிய வினை கொடாமல் சிலையிராமன் என்றமையான், அவரது தோள்வலிக்கு அது ஒரு பொருளன்றென்பது தோன்றுகின்றது. ஆகையால்தான் யாமும் சிலையைச் சுமந்த இராமனென்னாது, ஏந்திய வென்னுஞ் சொல்லை யிடையிற் சேர்த்துச் சொன்னோம். இக்கருத்துப் பற்றியன்றோ, ஆசிரியர், "மதிப்பாதியான் பிடித்தவில், பற்றப்போதுமோ" என மழுவாளி கூறியதாகக் கூடியதூஉமென்றுணர்க. கூறுவோர்க்கே என்பதனீற்று ஏகாரம் தேற்றம், அவர்கட்கே நாடியபொருள் முதலியன கிடைக்கும் என்பதும், பிறர்க்குக் கிடையாவென்பதும் தோன்றுகின்றதால், ஈற்றசையெனக் கொள்வாருமுளர். வலிகூறுவோர்க்கு உண்டாகும் பிரயோசனம் இப்படிப்பட்டதானல் அவ்வலிக்கிருப்பிடமான தோள்களையும், அத்தோள்களையுடைய ஸ்ரீராமபிரானையுங் கூறுவோர்க்குக் கிடைக்கும் பயனை விவேகிகள் ஆராய்ந்து உணரவேண்டும்.

யாவரும் சர்வார்த்த சித்தியின்பொருட்டு, இறைவன் திருவடிகளைப் புகழ்ந்து கூறுதல், பெருவழக்காயிருக்க, "தோள்வலி கூறுவோர்க்கே" எனக் கூறியது சான்றோர் கூற்றுக்கு மாறுகொளக்கூற லன்றோவெனின், அன்று, தாடகையை வதைத்து, சுபாஹுவைச் சிதைத்து, விசுவாமித்திரமுனிவரது வேள்வியை முடித்து, மிதிலையில் அரன்வில்லையொடித்து, சீதா விவாக முடித்து, திருவயோத்திக்கு மீண்டுவரும் வழியில் பரசுராமனைவென்று, வனத்தில் விராதனைக்கொன்று கரதூஷணாதியரை அதமாக்கி, மாயமானை முடித்து, கபந்தனை இறுதிசெய்து, மராமரங்கள் ஏழையுந் தொளைத்து, வாலியைச் சிக்ஷித்து, மஹாராஜரை ரக்ஷித்து, வருணனை வாட்டி, மகராக்ஷனை மாட்டி, கும்பகர்ணனை வீட்டி, மூலபலத்தை முடித்து, ராவணாதியரை நாசம்பண்ணி, வீபீஷணாழ்வானுக்கு முடிசூட்டிய இதுகாறும் வர ஆத்யந்தங்களாக அவ்விறைவனது தோள்வலியே சிறந்து விளங்குதலா லிவ்வாறு கூறினாரா தலினென்க.

நாடியபொருள், கல்வி, செல்வங்கள். அவைகளால் முறையே ஞானமும், யுகமும், அவற்றால் வீடியல்வழியும், வேரியங்கமலையினோக்கு முண்டாகும் எனக் கூறினுமமையும். நீடிய அரக்கர்சேனை என்பதற்கு, ஆயுள் முதலியவற்றாற் சிறந்த ராவணாதியரான அரக்கரும், அவரது சேனையும் எனவும் பொருளுரைத்தலுமாம். வேலியழியப் பயிரழிதல்போல, அரக்கரழிவு அவரது சேனையழிவுக்குக் காரணமாயிற்று ஆதலால், அரக்கரை முற்கூறிச் சேனையைப் பிற்கூறினர்.

2. நன்மையுஞ் செல்வமு நாளு நல்குமே
திண்மையும் பாவமுஞ் சிதைந்து தேயுமே
சென்மமு மரணமு மின்றித் தீருமே
இம்மையே ராமவென் றிரண் டெழுத்தினால்.

(இ-ள்.) ராம என்ற இரண்டெழுத்தினால்-ராம எனறு சொல்லப்பட்ட இரண் டெழுத்தின் உச்சாரணத்தால், இம்மையே - இந்த ஜன்மத்திற்றனே, நன்மையும்- எல்லாநன்மைகளும், செல்வமும் - அவற்றின் காரியங்களாகிய எல்லா ஐசுவரியங்க ளும், நாளும் - தினந்தோறும், நல்கும் - பிரசாதிக்கப்படும், திண்மையும் - தீச்செயல் களும், பாவமும் - அவற்றாலுண்டாகும் பாவமும், சிதைந்துதேயும் - அழிந்தொழி யும், சென்மமும் மரணமும் - பிறப்பும் இறப்பும், இன்றித்தீரும் - இல்லாம லொழி யும்—எ-று. (உ)

ராம என்னும் இரண்டு எழுத்தின் உச்சாரணத்தால் சகல துக்கமும்போய் நன்மையுண்டாகும் என்பதைக் கூறியவாறுபிற்று.

3. வடகலை தென்கலை வடுகு கன்னடம்
இடமுள பாடையா தொன்றி னாயினும்
திடமுள ரகுகுலத் திராமன் றன்கதை
அடைவுடன் கேட்பவ ரமர ராவரே.

(இ-ள்.) இடம் உள - உலகிலுள்ள, வடகலை - வடமொழி, தென்கலை - தென் மொழி, வடுகு - வடுகு, கன்னடம் - கன்னடம், (என்கிற) பாடை யாதொன்றினாயி னும் - எந்தப்பாஷையி லாயினுமுள்ள, திடம் உள - திடமான, ரகுகுலத்து - ரகு குலத்தி லவதரித்த, இராமன்கதை - ராமசரிதத்தை, அடைவுடன் - கேட்கவேண் டிய கிரமப்பிரகாரம், கேட்பவர் - சிரவணஞ்செய்வோர், அமரர் ஆவர் - நித்யசூரிக ளாவார்கள்—எ-று. (ங)

எந்தப்பாஷையிலேனும் இராமாயணத்தைச் சிரவணம் செய்வோர் அடையும் பயனைச் சொல்லியவாறாயிற்று.

இராமன் தன் என்பதில் தன்சாரியை. அமரர், இறவாதவர் என்னும் பொருள் படுவதோர் சொல்லாதலால், அதற்கு நித்யசூரிகளென்று பொருள் கூறினோம். தேவர்களுக்கும் ஒருபெயராயினும் அது உபசாரவழக்காலமையும்.

4. வென்றிசே ரிலங்கையானை வென்றமால் வீரமோத
நின்ற ராமாயணத்தி னிகழ்த்திடு கதைகடம்மில்
ஒன்றினைப் படித்தோர்தாமு முரைத்திடக் கேட்டோர்தாமும்
நன்றிது வென்றோர்தாமு நரகமதெய்திடாரே.

(இ-ள்.) வென்றிசேர் - வெற்றி தானேவந்தடைதற்குரிய, இலங்கை யானை- இலங்காபுரியை யுடையவனாகிய ராவணனை, வென்ற - எளிதில் வென்ற, மால்- திருமாலின், வீரம் - சத்யபராக்ம வைபவத்தை, ஓத - யாவரும் ஓதியுய்ய, நின்ற- உலகில் நிலைபெற்றிருக்கிற, ராமாயணத்தில் - ராமசரிதத்தில், நிகழ்ந்திடு - வந்து வழங்குகிற, கதைகள் தம்மில் - கதைகளில், ஒன்றினை - ஒருகதையை, படித்தோர் தாமும் - படித்தவர்களும், உரைத்திட - ஒருவர் சொல்ல, கேட்டோர்தாமும் - சிர வணஞ்செய்தவர்களும், இது நன்று என்றோர் தாமும் - இது நன்றென்று கொண் டாடினவர்களும், நரகமது எய்திடார் - நரகலோகத்தை யடையார்கள்—எ-று. (ச)

நரகமது என்பதில்; து, பகுதிப்பொருள் விகுதி. அகரம் சாரியை, இராமாயணத்தைப் படித்தல் முதலியன செய்வோர் அடையும் பயன் கூறியவாறாயிற்று.

5. இராகவன்கதையி லொருகவிதன்னி லேகபாதத்தினை யுரைப்போர்
பராவருமலரோ னுலகினிலவனும் பன்முறை வழுத்தவீற்றிருந்து
புராதனமறையு மண்டர்பொற்பதமும் பொன்றுநா ளதனினும்பொன்றா
அராவணையமல னுலகெனும்பரம பதத்தினை யணுகுவரன்றே. [ரு

(இ-ள்.) இராகவன் கதையில் - ராமசரிதத்தில். ஒருகவிதன்னில் - ஒருகவியில், ஏகபாதத்தினை - ஒரு அடியை, உரைப்போர் - படிப்பவர்கள், பராவு - புகழ்தற்குரிய, அரு - அரிய, மலரோன் உலகினில் - பிரமலோகத்தில், அவனும் - அந்தப் பிரமனும், பன்முறை - பலமுறை, வழுத்த - துதிக்க, வீற்றிருந்து - வீற்றிருந்து, புராதனம் - பழமையான, மறையும்-வேதங்களும், அண்டர் பொற்பதமும்-தேவர்களுடைய திவ்ய பதவிகளும், பொன்றும் நாள் அதனினும் - அழிகின்ற சர்வ சம்ஹார காலத்தினும், பொன்றா - அழியாத, அரா அணை அமலன் - சர்ப்ப சயநத்தையுடைய பரிசுத்தனாகிய திருமாலின், உலகு எனும் - உலகமென்று சொல்லப்படுகிற, பரமபதத்தினை - வைகுந்தத்தை, அணுகுவர் - அடைவார்கள்—எ-று.

பரா - வரும் - எனப் பிரித்து, புகழ்தல் வருகின்ற எனப் பொருளுரைப்பினும் பொருந்தும்.

6. இறுவரம்பி னிராமவென் றோருமபர்
நிறுவரென்பது நிச்சய மாதலான்
மறுவின்மாக்கதை கேட்பவர் வைகுந்தம்
பெறுவரென்பது பேசவும் வேண்டுமோ.

(இ-ள்-) இறுவரம்பின் - மரணகாலத்தில், இராம என்றோர் - ராம என்றுச்சரித்தவர்கள், உம்பர் நிறுவர் என்பது - பரமபதத்தில் நிலைத்திருப்பார்களென்பது, நிச்சயம் ஆதலால் - துணிவாகையால், மறு இல் - களங்கமில்லாத, மாகதை - பெருமையையுடைய ராமசரிதத்தை, கேட்பவர் - விதிப்படி கேட்போர்கள், வைகுந்தம் பெறுவர் என்பது - பரமபதத்தை யடைவார்களென்பதை, பேசவும் வேண்டுமோ - சொல்லவும் வேண்டுமோ—எ-று. (அ)

இறுவரம்பின் - காசியில் உயிர் நீங்கும் காலத்தில், இராம என்று-ராம என்று, ஓர் - உபபற்ற, உம்பர் - தேவனாகிய பரமசிவன், நிறுவர் என்பது - வலக்காதிற்புக உபதேசிப்பர் என்று நூல்கள் சொல்லுவது, என்றிவ்வாறும் கூறலாம்.

7. அன்னதான மகிலநற் றானங்கள்
கன்னிதானங் கபிலையின் றானமே
சொன்னதானப் பலமெனச் சொல்லுவர்
மன்னிராம கதைமற வார்க்கரோ.

(இ-ள்.) மன் - நிலைபெற்ற, இராமகதை - ராமசரிதத்தை, மறவார்க்கு - மறவாமல் எப்போதும் பாராயணம் பண்ணுவோருக்குண்டாவது, அன்னதானம் - அன்னதானத்தினுடையவும், நல் அகிலம் தானங்கள் - நல்ல பூமி தானங்களுடையவும், கன்னிதானம் - கந்நியாதானத்தினுடையவும், கபிலையின் தானம் - கோதானத்தினுடையவும், சொன்னதானம் - சுவர்ணதானத்தினுடையவும், பலம்-பயன்களாம், எனச்சொல்லுவர் - என்று அறிஞர் சொல்வார்கள்—எ-று. (எ)

சொன்ன தானம் என்பதற்கு, ஷோடச மஹாதானங்களில் அன்னதான முதலாக எடுத்துச்சொன்னவையொழிய, மற்று மெடுத்துச் சொல்லப்பட்ட தானங்களெனினு மொக்கும்.

ஆதியரியோநம நாராயணர்திருக்கதை யறிந்தனுதினம் பரவுவோர்
நீதியனுபோகநெறி நின்றுநெடுநாளதி னிறந்துசெக தண்டமுழுதுக்
காதிபர்களாயரசு செய்துளநினைத்தது கிடைத்தருள் பொறுத்துமுடிவில்
சோதிவடிவாயழிவின்முத்திபெறுவாரெனவுரைத்தசுருதித்தொகைகளே.

(இ-ள்.)* ஆதி-தொடக்கத்தில், அரி ஓம் நம-அரி ஓம் நம (என்று சொல்லி,) நாராயணர் - ஸ்ரீராமபிரானது, திருக்கதை-திவ்யசரிதத்தை, அறிந்து-கற்றாயினுங் கேட்டாயினு மறிந்து, அனுதினம் பரவுவோர்-நாள்தோறும் கொண்டாடுவோர்,நீதி-நீதியாய், அனுபோகம்-அனுபவித்தலாகிய,நெறி-நல்வழியில், நெடுநாள்-நெடுங்காலம் நின்று-நிலைத்திருந்து, அதின் இறந்து-அதினின்றும் நீங்கி, செகதண்டமுழுதுக்கும்-பூலோகம் ஸ்வர்க்கலோகம் ஆகிய எல்லாவற்றுக்கும், ஆதிபர்களாய்-இறைவர்களாய், அரசுசெய்து-அரசாட்சிசெய்து, உளம் நினைத்தது கிடைத்து-மனம் விரும்பினதைப் பெற்று,அருள்பொறுத்து-பகவத்ப்ரஸாதத்தை யடைந்து, முடிவில்-சரமகாலத்தில், சோதிவடிவாய்-தேஜோ ரூபமாய், அழிவு இல்-அழிவில்லாத, முத்தி-பரமபதத்தை, பெறுவார் என-அடைவார் என்று, சுருதித் தொகைகள்-வேதக்கூட்டங்கள், உரைத்த-கூறின.

9. இனையநற் காதைமுற்று மெழுதினோர் வியந்தோர்கற்றோர் [போர்
அனையது தன்னைச் சொல்வோர்க் கரும்பொருள் கொடுத்துக் கேட்
கனைகடற் புடவிமீதே காவலர்க் கரசாய்வாழ்ந்து
வினையம தறுத்துமேலாம் விண்ணவன் பதத்திற்சேர்வார்.

(இ-ள்.) இனைய-இத்தன்மையதான, நல்-விலக்ஷணமான, காதைமுற்றும்-ராம சரிதமுழுதும், எழுதினோர்-எழுதினவர்களும்,வியந்தோர்-கொண்டாடி னோர்களும், கற்றோர்-கற்றோர்களும், அனையதுதன்னை - அதை, சொல்வோர்க்கு -.சொல்வோர் களுக்கு, அரும்பொருள் கொடுத்து-அரிதான திரவியத்தைக்கொடுத்து, கேட்போர் கேட்பவர்களும், கனை-ஒலிக்கின்ற, கடல்-கடல்சூழ்ந்த, புடவிமீது - நிலவுலகத்தில், காவலர்க்கு அரசாய்வாழ்ந்து-ராஜராஜனென சக்கிரவர்த்தியாய் வாழ்ந்து, வினையமது அறுத்து-பாவபந்தங்களைச்சேதித்து, மேலாம் விண்ணவன்-யாவர்க்கும் மேலான தேவனாகிய ஸ்ரீமந்நாராயணனது, பதத்தில்-பரமபதத்தில், சேர்வார்-(போய்ச்) சேர் வார் சேர்வார்கள்—எ-று. (கூ)

இவ்விரண்டு திருவிருத்தத்தாலும் தினம் இடைவிடாமல் ராமஸ்மரணைசெய்தல் முதலிய நற்கிரியைகளைச்செய்வோர் "விண்ணுமாளுவர் மண்ணூடே" என்று ஆழ் வார் அருளிச்செய்தபடி சகலபாக்கியமும் பெற்று, ஆயுண்முடிவில் பரமபதம் பெறு வாரென்பது கூறப்பட்டது

---

## நான்முகம்.

### ஆழ்வார் துதி.

1. தருகை நீண்ட தயரதன் றன்றரும்
இருகை வேழத் திராகவன் றன்கதை
திருகை வேலைத் தரைமிசைச் செப்பிடக்
குருகை நாதன் றுரைகழல் காப்பதே.

(இதன் பதப்பொருள்.)

தரு-கொடுக்குமியல்புள்ள, கைநீண்ட-கைகள் நீளப்பெற்ற, தயரதன் தரும்-தச ரதசக்ரவர்த்தியால் புத்திரனாகப் பெறப்பட்ட, இருகைவேழத்து-இரண்டுதுதிக்கை களையுடைய யானையையொத்த, இராகவன்-ரகுகுலோத்பவனாகிய ஸ்ரீராமபிரானது, தை-சரித்திரத்தை, திருகு-மாறுபாட்டையும், ஐ-அழகையுமுடைய, வேலை - கட

லாற்சூழ்ப்பட்ட, தரைமிசை-பூமியின்மீது (வழங்கும்படி) செப்பிட-தமிழிற் சொல்லுதற்கு, குருகைநாதன்-திருக்குருகூருக்கு நிர்வாஹகனுன சடாரியினுடைய, குரைகழல்-ஒலிக்கின்ற கழலையணிந்த திருவடி, 'காப்பது-(இடையூறுகளைநீக்கிக்) காக்கவல்லது—என்றவாறு. (க)

தருகைநீண்ட என்பதற்குக் கொடையிற்சிறந்த எனவும், கொடையாற் சிறந்த எனவும், பொருள் கூறலாம். அன்றியும், தரு-கை-நீண்ட - கற்பகத் தருவையொத்த கைகள்நீண்ட எனினுமொக்கும். இப்பொருட்குத், தருக்கையெனற்பாலது சந்தவின்பப்பொருட்டுக் ககரவொற்றுத் தொகுத்ததாகக் கொள்க. தான் - அசை. தன்-சாரியை. தேவபாஷையில் முன்னரே யுண்டாயிருத்தலின் செப்பிட என்பதற்குத் தமிழிற்சொல்லுதற்கு எனப் பொருள் கூறப்பட்டது.

தாயின் அவயவங்களெல்லாமிருக்கக், குழவி தனக்குத் தாரகமான முலையில் வாய்வைப்பதுபோல, இவரும் தமக்குத் தாரகமான திருவடிகளில் கண்வைத்தார். "நஞ்சடகோபனைப் பாடினையோவென்று நம்பெருமாள் விஞ்சியவாதரத்தாற்"கேட்டற்குரியராதலின் நூன்முகத்தில் முன்னர் ஆழ்வாரை வாழ்த்துவராயினர்.

காப்பது என்பதில் து பகுதிப்பொருள் விகுதி. அகரம் சாரியை. ஏ-அசை.

தசரதன் என்பதற்குப் பத்துத்திக்கினுந் தன்னிரதத்தைச் செலுத்தும் ஆற்றலுள்ளோன் என்பது பொருள். "ஈத லிசைபட வாழ்த லதுவல்ல, தூதிய மில்லையுயிர்க்கு" என்னுங் குறளுரையில், "உணவின்பண்ட முண்டிமுதற்று" ஆகலின் ஈதல் சிறந்த தென்பதற்கு ஞாபகமாக ஈதலென்றார், எனப் பரிமேலழகர் உரைத்தமையானும், "உரைப்பா ருரைப்பவை யெல்லா மிரப்பார்க்கொன், றீவார் மேனிற்கும் புகழ்" என்றமையானும், ஆசிரியரும் புகழ்க்குக், குலம், குடிப்பிறப்பு, கல்வி, அறிவு, ஒழுக்கம், ஆண்மைமுதலிய பிரகாரணங்கள் உண்டாயிருந்தாலும், அவை ஈதல்போலச் சிறந்தனவன்றென்று துணிந்து, "மூவர்காரியமுந் திருத்து முதல்வனை" தனக்குப் புதல்வனுகப் பெறுதற்குரிய மஹாபாக்யவானுன சக்ரவர்த்திக்கு, "நல்லா றெனினுங் கொளறீது மேலுலக, மில்லெனினு மீதலே நன்று" எனச் சிறப்பித்துக் கூறப்பட்ட கொடையையே விசேடணமாக்கினர். இராகவன்-காரணவிடுகுறியாயினும் இவ்விடத்துக்கேற்ப ஸ்ரீராமபிரான் என்று பொருளுடைத்தோம். குரைகழல்-வினைத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை.

அநுமான் துதி.

2. அஞ்சிலே யொன்றுபெற் றா னஞ்சிலே யொன்றைத்தாவி
அஞ்சிலே யொன்றாறுக வாரியற் காகவேகி
அஞ்சிலே யொன்றுபெற்ற வணங்கைக்கண் டயலாரூரில்
அஞ்சிலே யொன்றைவைத்தா னவனெம்மை யளித்துக்காப்பான்.

(இ-ள்.) அஞ்சில் ஒன்று-பஞ்சபூதங்களி லொன்றாகிய வாயுவினால், பெற்றான்-(புதல்வனுகப்) பெறப்பட்டவரும், அஞ்சில் ஒன்றை - பஞ்சபூதங்களி லொன்றாகிய நீரை (சமுத்திரத்தை), தாவி - தாண்டி, அஞ்சில் ஒன்று - பஞ்சபூதங்களிலொன்றாகிய ஆகாசம், ஆறு ஆக - வழி யாயிருக்க, ஆரியற்காக - பூஜ்யனுன ஸ்ரீராமபிரானது கைங்கரியார்த்தமாய், ஏகி-போய், அஞ்சில் ஒன்று - பஞ்சபூதங்களி லொன்றாகிய பூமியினால், பெற்ற-(புதல்வியாகப்) பெறப்பட்ட, அணங்கை-சீதாபிராட்டியை, கண்டு-சேவித்து, அயலார் ஊரில்-பகைவரது ஊராகிய இலங்கையில், அஞ்சில் ஒன்றை-பஞ்சபூதங்களி லொன்றாகிய நெருப்பை, வைத்தான் - மூட்டினவருமாகிய, அவன் - அந்த ஆஞ்சநேயர், எம்மை - நம்மை, அளித்துக்காப்பான் - கிருபைசெய்து ரக்ஷிப்பார்—எ-று. (உ)

அஞ்சிலே என்னும் ஏகாரங்கள் ஐந்தும் அசைகள். பெற்றான், பெற்ற, என்பன செயப்பாட்டு வினைகள். ஐந்து என்னும் வரையறைப் பண்பாகுபெயர், அத்தொகை யுடைப்பொருள்கள் பலவற்றையுமுணர்த்துமேனும், ஈண்டுப்பெற்றான் முதலிய வினைகட்கேற்பப் பஞ்சபூதங்களை யுணர்த்திநின்றது. ஒன்று- வரையறைப் பண்பாகு பெயர். ஆரியர்க்காக எனவும் பாடம். அதற்கு விதிசிவேந்திராதி தேவர்களுக்காக வென்பது பொருள்.

இலங்கையரக்கர் ஆஞ்சநேயருக்குப் பகைவரல்லராகவும், இவரது தன்னிகரில்லாத் தலைவனுக்குப் பகைவராதலின், ஒற்றுமைநயத்தான் இவர்க்குப் பகைவரென்றார். நன்மையளித்துக்காப்பான் எனவும் பாடம். அதற்கு எல்லாச்சுபங்களையும் கிருபைசெய்து ரக்ஷிப்பார் என்பது பொருள்.

சரசுவதி துதி.

3. புத்தகம் படிகமாலை குண்டிகை பொருள்சேர்ஞான
வித்தகந் தரித்தசெங்கை விமலையை யமலைதன்னை
மொய்த்த கொந்தளகபார முகிண்முலைத் தவளமேனி
மைத்தகு கருங்கட் செவ்வா யணங்கினை வணங்கள் செய்வாம்.

(இ-ள்.) புத்தகம்-புத்தகத்தையும், படிகமாலை - படிகமாலையையும், குண்டிகை-கரகத்தையும், பொருள்சேர் - உண்மையமைந்த, ஞானவித்தகம் - ஞானக்குறியாகிய சின்முத்திரையையும், தரித்த - தரித்திருக்கிற, செங்கை - செம்மையாகிய கைகளை யுடைய, விமலையை அமலைதன்னை-மிகவும் பரிசுத்தமானவளும், மொய்த்த - நெருங்கிய, கொத்து-பூங்கொத்துக்களையணிந்த, அளகபாரம்-கூந்தற்சுமையையும், முகிழ்-தாமரையரும்பையொத்த, முலை - ஸ்தநங்களையும், தவளம்மேனி-வெண்ணிறத் திருமேனியையும், மைதகு-அஞ்சந மெழுதப்பெற்ற, கருகண் - கரியகண்களையும், செவ்வாய்-செம்மையாகிய திருவதரத்தையுமுடைய, அணங்கினை - தெய்வப்பெண்ணுமாகிய சரசுவதிதேவியை, வணங்கல் செய்வாம்-நாம்பணிதலைச் செய்வோம்—எ-று.

விமலை என்பதற்குத், தான் பரிசுத்தையா யிருப்பவளெனவும், அமலை என்பதற்குத், தன்னையடைந்தவர்களையும் பரிசுத்தர்களாகச் செய்பவளெனவும், பொருளுரைப்பினு மொக்கும். விமலை, தேக நைர்மல்யமுள்ளவள் எனவும், அமலை மனோநைர்மல்யமுள்ளவள் எனவும் பொருளுரைப்பினுமாம். அணங்கு என்பதற்குத் தெய்வப்பெண் என்பது பொருளாயினும், புத்தகம், படிகமாலை முதலிய விசேடணங்களால் சரசுவதியெனப் பொருளுரைக்கப்பட்டது. முகிழ், என்பதற்குக், கோங்கரும்பு எனப், பொருள் கூறுதலுமொன்று. இவ்வாசிரியர் "சரோருகமே திருக்கோயிலுங்கைகளுந் தாளிணையும், உரோருகமும்" என்று கூறியிருப்பதனால் இவ்விடத்துத், தாமரையரும்பென்பதே பொருத்தப்பொருள். முகிழ், என்பதைவினைத்தொகையாகக் கொண்டுரைப்பினுமாம். வணங்கல்செய்வாம் என்பதை, ஒரு சொன்னீரதாக்கி வணங்குவாம் என்றலுமொன்று. வணக்கத்துக்கு வினை முதலாகிய நாம் என்பது வருவிக்கப்பட்டது. புத்தகம், படிகமாலை, குண்டிகை, ஞானவித்தகம், என்பவற்றிற்கு முறையே, இடப்பாற்கீழ்க்கரம், வலப்பாற் கீழ்க்கரம், இடப்பான் மேற்கரம், வலப்பான்மேற்கரம், என்பன இடங்களாம்.



ஸ்ரீ

முதலாவது

# பாலகாண்டம்.

பெரும்பாலும் ஸ்ரீராமபிரானது திருவவதாரம் முதலாகிய பாலிய சரித்திரத்தை யுணர்த்துங் காண்டம் என்பது இதன்பொருள்.

## முதலாவது சிறப்புப்பாயிரம்.

தொடர்நிலைச் செய்யுள் செய்வோர் தாம் வழிபடுகடவுளை யாதல் நூலுக்கு ஏற்புடைக் கடவுளையாதல் வாழ்த்துதல் முறைமையாகலின், இவ்வாசிரியரும் இவ்விரண்டு கடவுளருமாய் நின்ற இறைவனை வாழ்த்துவான்றொடங்கி, அவனது செயலை இம்முதற் செய்யுளாற் கூறுகின்றார்.

1. உலகம்யாவையுந் தாமுள வாக்கலும்
நிலைபெறுத்தலு நீக்கலு நீங்கலா
அலகிலாவிளை யாட்டுடை யாரவர்
தலைவரன்னவர்க் கேசர ணாங்களே.

(இதன்பதப்பொருள்.)

உலகம் யாவையும்-எல்லாவுலகங்களையும், தாம்-தாமே, உள ஆக்கலும்-படைத்தலையும், நிலைபெறுத்தலும் - இரக்ஷித்தலையும், நீக்கலும்-சங்கரித்தலையும், நீங்கலா-தம்மைவிட்டு நீங்காத, அலகு இலா - அளவில்லாத, விளையாட்டுடையார் - லீலையாக வுடையவராகிய, அவர்-அவரே, தலைவர்-உலகங்களுக்கெல்லாம் மூலபுருஷர், அன்னவர்க்கே-அத்தன்மையராகிய இறைவர்க்கே, நாங்கள் சரண்-யாங்கள் சரணடைந்தவரானோம்—என்றவாறு.

சான்றோர் ஆசாரப்படி, நூல்களெல்லாவற்றுக்கும் மங்கலமொழிமுதல் வகுத்துக் கூறவேண்டுதலின், இந்நூலாசிரியரும் உலகம் என, மங்கலமொழிமுதல் வகுத்துக்கூறினர். வேறோருதவியின்றி யென்றற்குத் தாமென்றார். முத்தொழில்களையும் விளையாட்டாக வுடையவரெனவே, அவர் கண்ணூன்றி முயன்றுசெய்யுங் காரியம் எத்துணைச் சிறப்பினையுடைத்தென்பது தானேவிளங்கும். தோன்றியழிதன் மாலையவாகிய வுலகங்களின் காட்சியானே, இவைகட்கு மூல புருஷனொருவனுளனாதல் வேண்டுமென அநுமிதித்து, "விளையாட்டுடையார் அவர் தலைவர்" என்றார். "முச்சகநிழற்றுமுழு மதிமுக்குடை அச்சுதன்" என்றதூஉமிக் கருத்தேபற்றி வந்தது. அவ்விறைவரன்றி, வேறுபுகலிடமின்மையின், அன்னவர்க்கே சரண் என்றார். "உலகு ஆதிபகவன் முதற்றே" எனப் பிறகு மிங்ஙனங் கூறுதல் காண்க. நீங்கலா-நீங்கலாக. அலகு இலா-(இன்னமும்) அளவில்லாத, எனவும் பொருளுரைத்தல் கூடும்.

இதனால் குணத்தைக் கூறுகின்றார்.

2. சிற்குணத்தர் தெரிவரு நன்னிலை
யெற்குணர்த்தரி தெண்ணிய மூன்றனுண்

முற்குணத்தவ ரேமுத லோரவர்
நற்குணக்கட லாடுத னன்றரோ.

(இ-ள்.) சிற்குணத்தர் - (பேரறிவாகிய) ஞான குணத்தையுடைய ஞானிகளும், தெரிவு அரு - உணர்த லருமையாகிய, நல்நிலை - அத்தலைவரது நல்ல நிலையை, உணர்த்து - உணர்த்துதல், எற்கு அரிது - (சிற்றறிவையுடைய) எனக்கு அரியது, (ஆயினும்) எண்ணிய - எண்ணப்பட்ட, மூன்றனுள் - முக்குணங்களுள், முற்குணத்தவரே - சிறந்த குணமாகிய சாத்துவிக குணத்தையுடையவரே, முதலோர்- முதல்வர், (ஆதலால்) அவர் - அவரது, நற்குணம் - மங்களகுணங்களாகிய, கடல் - கடலில், ஆடுதல் - மூழ்குதல், நன்று - நன்மையாம்—எ-று. (உ)

சிற்குணத்தர் என்பத னீற்றில் உயர்வு சிறப்பும்மை தொக்கது. முற்குணத்தவரே என்னுமேகாரம் பிரிநிலை மற்றையரல்ல ரென்னும் பொருள் தருதலின் ஆடுதல் இடைவிடாது குணாநுபவம் பண்ணுதல். நன்னிலை யெற்குணர்த் தரிதாயினும் அவர் நற்குணக் கடலாடுதலால் உணர்த்தும் ஆற்ற லுண்டாமெனத் துணிந்து நன்றென்றார். நன்று-நல்லவுபாயம் எனினும் பொருந்தும். உணர்த்து முதனிலைத் தொழிற்பெயர். உணர்த்த அரிது என்பதில் உணர்த்த என்னுஞ் செயவெனச் சத்து அகரம் தொகுத்ததெனினு மமையும். கடலென்றதற்கு ஏற்ப ஆடுதலென்றார். சிற்குணத்தின் என்றும் பாடம். அதற்குக் கடவுளுடைய ஞானகுணத்தினது எனவும், ஞானியரது ஞானகுணத்தினாலும், எனவும் பொருள் கூறலாம்.

இதனால் திருநாமத்தைக் கூறுகின்றார்.

3. ஆதியந்தம ரீயென யாவையும்
ஓதினாரல கில்லன வுள்ளன
வேதமென்பன மெய்ந்நெறி நன்மையன்
பாதமல்லது பற்றிலர் பற்றிலார்.

(இ-ள்.) அலகு இல்லன - (சாகைகளால்) அளவில்லனவும், (அலகு) உள்ளன - (வகைகளால்) அளவுள்ளனவுமாகிய, வேதம் என்பன யாவையும் - வேதங்களென்று சொல்லப்பட்ட எல்லாவற்றையும், ஆதி அந்தம் - முதல் இறுதிகளில், அரீயென - ஹரி: ஓம் என்றெடுத்துச்சொல்லி, ஓதினார்-ஓதி அவற்றின் மெய்ப்பொருளையுணர்ந்தவர்களாகிய, பற்றிலார் - பற்றற்றவர்கள், மெய்ந்நெறி நன்மையன் - பொய்தீரொழுக்கங்களை யருளிச்செய்த நல்லோனாகிய கடவுளது, பாதமல்லது - திருவடிகளல்லாததாகிய மற்றெப்பொருளையும், பற்றிலர் - தமக்காதாரமாகப் பற்றமாட்டார்கள்—எ-று. (ந)

“அநந்தாவை வேதா:” என்பதனால் “அலகு இல்லன” எனவும், “சதுர்வேதம்” என்பதனால் “அலகு உள்ளன” எனவும் கூறினர். இவ்வாறன்றி, உள்ளன என்பதற்கு, என்றும் அழியாதிருப்பனவெனப் பொருளுரைத்தலுமொன்று. மக்களுயிர்க்கு உறுதி பயப்பனவாகிய பொய்தீரொழுக்கங்களை யருளிச்செய்து உய்வித்தலால் நன்மையன் என்றார். ஆதியந்த மரியன யாவையும் எனவும் பாடம்; அதற்கு அரிய நூல்களெல்லாவற்றையும் ஆத்யந்தமாக எனப் பொருளுரைக்க. “ஆதியந்தமரீயென யாவையும் ஓதினார் மெய்ந்நெறி நன்மையன் பாதமல்லது பற்றிலர் எனவே” அவ்வேத ப்ரதிபாத்யன் இக்கடவுளேயென்பதூஉம், அவ்வேதசாரம் இவன் பாதமேயென்பதூஉம் வெளியாயிற்று.

முதற்றிருவிருத்தத்தா லிறைவனது செயலையும், இரண்டாந் திருவிருத்தத்தாற் குணத்தையும் நிரூபித்து, இத்திருவிருத்தத்தால் அவன் திருநாமத்தைக் கூறினர். செயல்குணங்களை யுணர்ந்தன்றி இறைவனுக்குத் திருநாம நிரூபணம் செய்தல் கூடாமையின் இவ்வாறு கூறினர். இதனன் இதுசெயல் குணங்களைப்பற்றி வந்த காரணக் குறியாயிற்று.

படைப்புக்காலத் திறைவனும் அவனருள் வழிப்பட்ட முனிவரும் சிலபொருள்களுக் கிடுகுறிப்பெயர் அமைத்ததுபோல இவரும் இறைவனுக்கு இடுகுறிப்பெயர் அமைக்கலாகாதோ வெனின், பொருள்கட்குமுன் இறைவனுள னாயினாற்போல இறைவனுக்கு முன் இவர் உளராயினன்றோ இடுகுறியமைக்கலாவது, அங்ஙன மின்மையின் அமைக்கலமையாதென்க. இது "ஆதிபகவன் முதற்றேயுலகு" எனக் காரியம்பற்றிக் காரணனைக்கூறிய தெய்வப்புலமைத் திருவள்ளுவர் வாக்கானு முணர்க. அரி என்பதற்கு இறுதிக்காலத்தில் எல்லாப் பொருள்களையும் தமது திருவயிற்றி லடக்குவோன் என்பது பொருளாதலாற் செயலும், அவ்வாறு செய்தலும் உயிர்களிடத்துக் கிருபைக்குணமேயாகலின் குணமும் காரணமாகவந்த திருநாமம். தம்மையடைந்தவர்களுடைய பாவங்களைப் போக்குவோனுதலால் அரியென்றலுமொன்று. இதற்கு அத்வைதிகள் நேதிவாக்யத்தால் பிருதிவியாதிகளைக் களைந்து செல்ல முடிவிற் சேடித்து நிற்கும் பொருளெனப் பொருளுரைப்பர்.

இம்மூன்று திருவிருத்தங்களானும் இறைவனுக்குச் செயல், குணம், திருநாமம் இல்லை யென்பாரை நிரசித்தவாறாயிற்று; அவரை நிரசிக்குங் கருத்துடைய ரல்லரேனும், நெற்செய்யப் புற்றேய்வதுபோலத் தன் மதத்தை நிறுவுதலானே அயலார் மதம் தானே நிரசிக்கப்பட்டது.

## அவையடக்கம் கூறுகின்றார்.

4. ஓசைபெற்றுயர் பாற்கட லுற்றொரு
பூசைமுற்றவு நக்குபு புக்கென
ஆசைபற்றி யறையலுற் றேன்மற்றிக்
காசில்கொற்றத் திராமன் கதையரோ.

(இ-ள்.) ஒரு பூசை - ஒரு பூனையானது, ஓசைபெற்றுயர் - ஒலியைப்பெற்றுயர்ந்த, பாற்கடல் உற்று - திருப்பாற்கடலை யடைந்து, முற்றவும் - அதிலுள்ள பால் முழுதும், நக்குபு புக்கென - (ஆசைகொண்டு) நக்கப் பிரவேசித்தாற்போல, இ - இந்த, காசு இல் கொற்றத்து - குற்றமில்லாத வெற்றியையுடைய, இராமன் கதை - ராமசரிதத்தை, ஆசைபற்றி - ஆசைகொண்டு, அறையல் உற்றேன் - சொல்லத் தொடங்கினேன்—எ-று. (ச)

நக்குபு என்பது செயவெனெச்சத்திரிபு. புக்கு என - புக்கால் என. அமிருதம் முதலியவற்றைக் கொடுத்து உபகரித்ததனல் உயர்பாற்கடலென்றார். உயர் பாற் கடல் என்றதற்கு இவ்வாறன்றி, "பாற்கடலுலெட் டிலக்கயோசனை" என்றபடி ஆழம் நீளம் முதலியவற்றாலுயர்ந்த எனினும் பொருந்தும். ஆசைபற்றி என்றமையான், உவமானத்தினும் ஆசைகொண்டு என வருவித்துப் பொருள் கூறப்பட்டது. ஆசைபற்றி யறையலுற்றேன் என்னுஞ் சொற்களினாற்றலான், ஆற்றல் பற்றி யறையலுற்றேனல்லேன் என்னும் பொருள்போதரலின், பூசைக் கருத்து முற்றாததுபோல, என் கருத்தும் முற்றாதெனஅவையடக்கங் கூறியவாறாயிற்று. ஒரு பூசை யென்றதற்குச் சிறிய பூனையெனவும், பேதைமையால் ஒப்பற்ற பூனை

யெனவும் பொருளுரைக்கலாம். அக்காசில் எனவும் பாடம். அப்பாடத்தில், அ, என்பதற்கு அத்தன்மையதான பெருமையுள்ள எனப்பொருள் கூறுக. காசு இல் கொற்றம் - சத்யபராக்ரமத்தாலுண்டான வெற்றி.

5. நொய்தி னொய்யசொ னூற்கலுற் றேனெனை
வைத வைவின் மராமர மேழ்தொளை
யெய்த வெய்தவற் கெய்திய மாக்கதை
செய்த செய்தவன் சொன்னின்ற தேயத்தே.

(இ-ள்.) வைதவைவின் - பெரியோர்கள் சபித்த சாபத்தாற்போல, மராமரம் ஏழ் - ஏழு மராமரங்களும், தொளை எய்த - துவாரத்தையடைய, எய்தவற்கு - பாணம்பிரயோகித்த ஸ்ரீராமபிரான் விஷயமாக, எய்திய - உண்டாயிருக்கிற, மா கதை - பெருமைபொருந்திய சரிதத்தை, செய்த - வடமொழியிற்செய்த, செய்தவன் - செய்துமுடிந்த தவத்தை யுடையவனுகிய வான்மீகிமுனிவனது, சொல் - காப்பியமானது, நின்ற - நிலைபெற்ற, தேயத்தே - தேசத்தில்தானே, நொய்தின் நொய்யசொல் - அற்பத்தினும் அற்பமான தமிழ்ச்சொற்களால், நூற்கலுற்றேன் - இந்த நூலை நூற்கத்தொடங்கினேன், எனை - இது என்ன ஆச்சரியம்—எ-று.

நிறைமொழிமாந்தராதலின் அவர் சாபத்தா லொருவனது ஏழ்படிகாலும் அழிவெய்தல்போல, ராகவனது ஒரு பாணம் ஏழு மராமரங்களையு முருவிச்செல்ல வென்றார் எடுத்துக்காட்டுவமைமுகத்தான், ஏழ் என்பதில் முற்றும்மை தொகுக்கப் பட்டுநின்றது. செய்தவன் சொல் என்னு மிடத்திற்சொல்லென்பது கருவியாகு பெயர். நூல் என்றதற்கேற்ப நூற்கலுற்றேன் என்றார். நூல் என்றது உவமை யாகுபெயராய்க் காப்பியத்தை யுணர்த்திற்று. மா - கதை - செய்த - செய்தவன் என்பதற்கு, பெருமையுள்ள இந்த ஸ்ரீராமசரிதத்தைச் செய்தற்குக் காரணமாகிய செய்தற்குரிய தவத்தைச் செய்தவனெனினு மொக்கும். என்னை யென்பது - எனை யெனத் தொகுத்தது. இது எவன் என்னும் விஞப்பெயரின் மரூஉவாயினும், இரண்டு வியப்புப் பொருண்மேலது. என்னை - என்பதற்கு, என்ன அறியாமை யெனினுமாம். எனை - என்னை, வைத - யானே வைதுகொண்ட, வைவின் - வசவு போல, எனினுமாம்.

6. வையமென்னை யிகழவு மாசெனக்
கெய்தவும்மி தியம்புவ தியாதெனில்
பொய்யில்கேள்விப் புலமையி னோர்புகல்
தெய்வமாக்கவி மாட்சி தெரிக்கவே.

(இ-ள்.) வையம் - உலகம், என்னை இகழவும் - என்னைப் பரிஹஸிக்கவும், மாசு எனக்கு எய்தவும் - அதினுலுண்டாகும் பழிப்பு என்னை யடையவும், இது இயம்பு வது - இந்தத் தமிழ்நூலைச் சொல்வதற்குக் காரணம், யாது எனில் - என்னென்று நீர் வினவுவீராயின், பொய் இல் கேள்வி - மெய்யான கேள்விகளா லுண்டாகிய, புலமையினோர் - அறிவினையுடையவராகிய வான்மீகி முதலாயினோர், புகல் - சொல் லிய, தெய்வம் - தைவிகமான, மா கவி - பெருமைபொருந்திய வடமொழிக் கவி களின், மாட்சி - சிறப்பை, தெரிக்கவே - தெரிவித்தலே—எ-று. (சு)

வையம், என்றது உயிர்கண்மேல் நின்றது. தெரிவிக்க - தெரிக்க, எனத்தொ குத்தது. தெரிக்க, என்பது இண்டுத்தொழிற் பெயர்ப்பொருட்டு. வினவுதற்கு எழு வாயாகிய நீர் என்பது வருவிக்கப்பட்டது. நீர், என்றது அறிவுடையோரை.

7. தேவபாடையி னிக்கதை செய்தவர்
மூவரானவர் தம்முளு முந்திய
நாவினாருரை யின்படி நான்றமிழ்ப்
பாவினாலி துணர்த்திய பண்பரோ.

(இ-ள்.) தேவபாடையின் - வடமொழியில், இக்கதைசெய்தவர் - இந்த ராமசரித்தைச் சொன்னவராகிய, மூவரானவர் உள்ளும் - மூவருள்ளும், முந்திய - முதன்மையாகிய, நாவினார்-வாக்கினையுடையவராகிய வான்மீகிமுனிவரது, உரையின்படி- சொல்லின்படியே, நான் தமிழ்ப்பாவினால் - யான் தமிழ்க்கவிகளால், இது - இந்தக் காவியத்தை, உணர்த்திய - செய்த, பண்பு - முறைமை—எ-று. (எ)

தம் - சாரியை. அரோ - அசை. உள்ளும், என்பது உளும் எனத் தொகுத்தல் பெற்றது. மூவரானவர் தம்முளும் முன்னிய நாவினான் உரையின்படி எனவும், பாடம். இதற்கு மூவருடைய கருத்தையுமறிந்த சரசுவதியின் உரையின்படி எனவும், முன்னிய நாவினான் உரையின்படி எனப்பாடமோதி முற்பட்ட நாவினையுடைய வான்மீகி முனிவனது உரையின்படி யெனவும் பொருளுரைப்பினு மமையும். மூவர் - வான்மீகி, வசிட்டர், போதாயநர் என்பவர்.

8. துறையடுத்த விருத்தத் தொகைக்கவிக்
குறைபடுத்த செவிகளுக் கோதில்யாழ்
நறையடுத்த வசுணநன் மாச்செவிப்
பறையடுத்தது போலுமென் பாவரோ.

(இ-ள்.) துறையடுத்த - பல துறைகளையுடைய, விருத்தத்தொகைக் கவிக்கு- விருத்தத்தொகையாகிய கவிகளுக்கு; உறையடுத்த - இடமாகப் பொருந்திய, செவிகளுக்கு - அறிஞரது செவிகளுக்கு, என்பா ஓதில் - என் தமிழ்ப் பாடல்களைச் சொல்லின், யாழ்நறையடுத்த - கேட்டற்கினிய யாழோசையாகிய தேனைப்பருகின, நல் - அழகிய, அசுணமாசெவி - அசுணப்பறவையின் செவிகளில், பறையடுத்தது போலும் - வெறுப்படைதற்குரிய பறையோசை கேட்டதை யொக்கும். (அ)

அசுணம் பறவைக்கூட்டத் தொன்றாயினும், உயர்ந்த ரஸிகர் கேட்டு இன்புறுதற்குரிய யாழின் இனிய வோசையைக் கேட்டு இன்புறுதலால், அசுணநன்மா வெனப் புனைந்துரைத்தார். பேரறிவினையுடையவரது இன்கவிகளைக் கேட்டு இன்புறும் பெரியோருடைய செவிகளுக்குச், சிற்றறிவினையுடைய என்னாற் செய்யப்பட்ட புன்கவிகள் வெறுப்பைத்தருமென்பதிதனாற்போந்த கருத்து. உறையடுத்த செவி யென்றதனால், இடைவிடாது கேட்டுக்கொண்டிருக்கின்ற செவிகளென்றாயிற்று. பலதுறை - அநேகவிஷயங்கள். இனிதான யாழோசை கேட்டு இன்புறுங்கால், பறையோசைகேட்கப்படின், அசுணப்புள் மூர்ச்சையடையுமெனப் பெரியோர் சொல்லுவர்.

9. முத்தமிழ்த்துறை யின்முறை போகிய
உத்தமக்கவி கட்கொன் றுணர்த்துவென்
பித்தர்சொன்னவும் பேதையர் சொன்னவும்
பத்தர்சொன்னவும் பன்னப் பெறுபவோ.

(இ-ள்.) முத்தமிழ்த்துறையில் - முத்தமிழின் துறைகளில், முறைபோகிய - கிரமமாகக் கைவந்த, உத்தமக்கவிகட்கு - சிறந்த வித்துவான்களுக்கு, ஒன்று உணர்த்துவென் - ஒன்றைச்சொல்லுகிறேன், (அது யாதெனின்) பித்தர் சொன்

னவும் - பித்தராற் சொல்லப்பட்டனவும், பேதையர் சொன்னவும் - அறிவிலிகளாற் சொல்லப்பட்டனவும், பத்தர் சொன்னவும்-பத்தராற் சொல்லப்பட்டனவும், பன்னப் பெறுபவோ-(குற்றங்கள்) ஆராயப்படுதற்குரியனவோ (அல்ல)—எ-று.

ஓகாரம் எதிர்மறை. முத்தமிழ்த்துறையின் முறைபோகிய உத்தமக்கவிகளாத லின், அவரிடத்து மிகுதியாய் உரையாடல் தகுதியன்றெனக்கருதி, ஒன்றுணர்த்து வென் என்றார். பித்தர் மனத்தெளிவில்லாதவ ராதலானும், பேதையர் பகுப்பறிவில் லாதவராதலானும், பத்தர் பரவசராதலானும், அவர்களாற் சொல்லப் பட்டவற்றில் குணங்குற்றம் நாடப்புகல் மணற்சோற்றிற் கல்லாய்தலா மாதலின், பித்து, பேதை மை, பத்தி, என்னு மூன்றனையு மொருங்குடைய என்சொல்லினும் குணங் குற்றம் நாடல் உத்தமக்கவிகட்குத்தக்க செயல் அன்றென்றாராயிற்று.

10. அறையு மாடரங் கும்மடப் பிள்ளைகள்
தறையிற் கீறிடிற் றச்சருங் காய்வரோ
இறையு ஞான மிலாதவன் புன்கவி
முறையி னாலுணர்ந் தாரு முனிவரோ.

(இ-ள்.) மடப்பிள்ளைகள்-அறியாமையையுடை குழந்தைகள், தறையில் - நிலத் தில், அறையும்-அறைகளினுருவத்தையும்,ஆடரங்கும்-நடநசாலைகளினுருவத்தையும், கீறிடின்-கீறிவிளையாடின், (அதைக்கண்ட) தச்சரும்-(சிற்பநூன்முறையுணர்ந்த) சிற் பரும், காய்வரோ-(அவற்றுக்குரிய இலக்குண மில்லாமையால்) கோவிப்பார்களோ, (கோவியார்) (அதுபோல) இறையும்-அற்பமும், ஞானம்இலாத - முறையினாலுணர் ஞானமில்லாத, என் புன்கவி-எனது அற்பகவிகளை (நோக்கி) முறையினாலுணர்ந் தாரும்-கிரமமாக அறிவுநூற் பொருள்களைக்கற்றறிந்த முதியோரும், முனிவரோ- (கவியிலக்கண முதலாயின அமைந்திராமையால்) வெறுப்பாரோ,வெறுக்கமாட்டார் கள்—எ-று.

தரா, என்னும் வடமொழி தரையென்றாய்த், தறையெனமருவிற்று. முறையி னாலுணர்ச்சி தச்சருக்குங் கூட்டி யுரைக்கப்பட்டது. முறையினாலுணர்ந்தார், நல்லாராதலின், என்புன்கவியின் குற்றங்களை நாடாரென்பது கருத்து, "நல்லார் பிறர்குற்றநாடார், என்றார்" பிறரும் ஓகாரமிரண்டும் எதிர்மறைப் பொருளன.

இந்நூல்செய்த இடமும் உபகாரியின் பெயரும்.

11. நடையி னின்றுயர் நாயகன் றோற்றத்தின்
இடைநிகழ்ந்த விராமாவ தாரப்பேர்த்
தொடை நிரம்பிய தோமறு மாக்கதை
சடையன் வெண்ணெய் நல்லூர்வயிற் றந்ததே.

(இ-ள்.) நடையில் நின்று - நல்லொழுக்கத்தினின்று, உயர் - உயர்ந்த, நாய கன் - இறைவனது, தோற்றத்தின் இடை - அவதாரங்களுள், நிகழ்ந்த - நடந்த தாகிய, இராமாவதாரம் - ராமாவதாரத்தைக் குறித்த, பேர் - பிரசித்தமான, தொடைநிரம்பிய - கவித்தொடைகள் நிறைந்த, தோம் அறு - குற்றமற்ற, மாக்கதை- பெருமைபொருந்திய சரிதமானது, சடையன் - சடையப்பமுதலியாரது, வெண் ணெய் நல்லூர்வயின் - திருவெண்ணெய் நல்லூரில், தந்தது - செய்யப்பட்டது— எ-று. (கக)

நடையினின்றுயர்தலாவது, இராசத தாமத குணங்களாற் செய்யப்படுவன வாகிய படைப்பழிப்புகளையன்றிச், சாத்துவிககுணத்தாற் செய்யப்படுவதாகிய

காத்தற்றொழிலானுயர்வெய்தல். தசரதராமாவதாரம், பரசுராம பலராமாவதாரங் களுக் கிடையேநிகழ்ந்ததாகலின், இடைநிகழ்ந்த விராமாவதாரம் என்றார், அன்றித் தசாவதாரத்தின் முதலீறுகளிலன்றி, இடையே நிகழ்ந்தமையின், இடை நிகழ்ந்த விராமாவதாரமென்றாரெனினு மமையும். இந்நூன்முழுதும், ராமநாமம் நிரம்பி யிருத்தலின், இராமாவதாரப் பேர்த்தொடை நிரம்பியவென்றார் - சடையன் எனச் சுட்டினது இந்நூலகினிலவுதல்போல அவன்பெயரும் நிலவுதல் வேண்டுமென்னுங் கருத்தால்.

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

## உ - வது. ஆற்றுப்படலம்.



12. ஆசலம்புரி யைம்பொறி வாளியுங்
காசலம்பு முலையவர் கண்ணெனும்
பூசலம்பு நெறியின் புறஞ்செலாக்
கோசலம்புனை யாற்றணி கூறுவாம்.

(இ-ள்.) ஆசு அலம்புரி - குற்றத்தை மிகவுஞ் செய்கிற, ஐம்பொறிவாளியும் - ஆடவருடைய ஐம்பொறிகளாகிய பாணங்களும், காசு அலம்பும் - ரத்நஹாரங்க ளொன்றோடொன்று தாக்குண்டொலித்தற் கிடமான, முலையவர் - கொங்கைகளை யுடையவராகிய மாதருடைய, கண் என்னும் - கண்களென்று சொல்லப்படுகிற, பூசல் அம்பும் - போர்த்தொழில் அமைந்த பாணங்களும், நெறியின்புறம் - நன்மார்க் கத்துப் புறமாகிய துர்மார்க்கத்தில், செலா - போகாமைக்குக் காரணமாகிய, கோச லம் - கோசலதேசத்தை, புனை - அலங்கரித்துக்கொண்டிருக்கிற, ஆறு அணி - ஆற றழகை, கூறுவாம் - யாம் சொல்வோம்—எ-று. (க)

குற்றத்தை மிகவுஞ் செய்தலாவது, தமக்கேற்றவாறு விடயங்களிற் பிரவே சித்து, அதனாலுளதாகும் பாவங் காரணமாக இம்மை மறுமை யின்பங்களை யிழப் பித்தல். ஆசு அலம்புரி, என்பதற்கு விரைவாகச் சஞ்சலத்தை யுண்டாக்குகிற எனினுமாம். ஆசு புரி குற்றத்தைச் செய்கிற எனக்கொண்டு அல் அம் இரண்டுஞ் சாரியை யென்பாருமுளர். கண்ணெனும் பூசலம்புக்கும் இஃதொக்கும், இங்ஙனஞ் செய்யு மியற்கையவாயினும், இவை நெறியின் புறஞ்செலாமைக்குக் காரணம் கோசலதேயத்தின் புண்ணியப்பிரபாவ மென்றதாயிற்று. அது “இடுமெடுப்புமி லீசன்” தன்னிடத்தில் திருவவதரித்தற்குரிய புண்ணியம். ஐம்பொறிவாளியும் என்பதற்கு ஐந்து என்னு மடையாளமுள்ள மன்மத பாணங்கள் எனவும் பொருள் கூறலாம். “அறன்கடை” என்றதுபோல நெறியின் புறமென்றது தீநெறியை யுணர்த்திற்று. இத்துணைச் சிறப்பிற்றாய நாட்டணியை முதற்கட் கூறாது ஆற்றணி கூறுவான்றொடங்கிய தென்னையெனின், அந்நாட்டுக்கு மோரழகுசெய்து நிற்றலா னும், “நீரின்றமையாதுலகு” என்ப வாகலானும் என்க. நெறியின் புறஞ்செல்லுத லாவது, தத்தமக்குரிய நெறிக்கு அப்பாற்படுகை. அது ஆடவர் மகளிர் என்னு மிருதிறத்தார்க்கும் முறையே தமது குலமாதரிடத்தும் கணவரிடத்தும் ஐம்புல நுகர்ச்சி யின்பமெய்தாமல் பிறன்மனைநயத்தல் பரபுருஷனைச் சேர்தல் என்பவற் றிற் செல்லுதல். அவ்வாறாய தீயொழுக்கம் இந்நாட்டார்க்கில்லையென்றது ஆடவ ருடைய ஐம்பொறிகளும் மாதருடைய கண்களும் நெறியின் புறஞ்செலா என் றுரைத்தமையால் அவை அப்படிப்போகிற பழக்க மில்லாதவை யென்றதாயிறறு.

கூறுவாம் என்னும் பயனிலைக்கு யாம் ஒன்னும் எழுவாய் வருவித்துரைக்கப் பட்டது. முலையவர் என மகளிரைக்குறித்தமையான் ஐம்பொறியென்றதற்கு ஆடவருடைய ஐம்பொறிகளென்றனம். ஐந்தென்னு மடையாள முள்ள மன்மதபாணங்களுக்கு நெறியின் புறஞ்செலாமை தாம் தமக்குரியகாமுகர்பாற் செல்லுதலன்றி, பொறிகளைவென்ற பெரியோரிடத்திற் செல்லாதிருத்தல்.

மேகங்கள் சிவனைப்போலப் போய்,
திருமாலைப்போலத் திரும்பின வென்பது.

13 நீறணிந்த கடவு ணிறத்தவான்
ஆறணிந்துசென் றார்கலி மேய்ந்தகிற்
சேறணிந்த முலைத்திரு மங்கைதன்
வீறணிந்தவன் மேனியின் மீண்டவே.

(இ-ள்.) நீறு அணிந்த-விபூதியை மேனிமுழுதும் பூசிய. கடவுள்-ருத்ரமூர்த்தியின், நிறத்த-வெண்ணிறத்தை யுடையனவாகிய, வான்-மேகங்கள், ஆறு - போகும் வழியை, அணிந்து சென்று - அலங்கரித்துக்கொண்டுபோய், ஆர்கலி - கடல்நீரை, மேய்ந்து - குடித்து, அகிற்சேறு - அகிற்குழம்பை, அணிந்த-பூசிய, முலை-தனங்களை யுடைய, திரு-இலக்குமியாகிய, மங்கை-மங்கைப்பருவப்பெண்ணை, தன்வீறு-தனது மேம்பாட்டுக்குக் குறியாக, அணிந்தவன்-(திருமார்பின் வலப்புறத்தில்) தரித்திருப்பவனாகிய திருமாலின், மேனியின்-திருமேனிநிறம்போலக் (கறுத்து,) மீண்ட-திரும்பின—எ-று. (உ)

"எரிபோன் மேனிப்பிரான்" "பவளத்தடங்குன்று" "முக்கட்பவளமலை" எனப் பலவிடங்களினுங் கூறப்படுதலான் வெணணிறம் வருதற்பொருட்டுநீறணிந்த கடவுளென்றார். வான் இடவாகுபெயர் ஆர்கலி-வினைத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர். மங்கை-பதினோராண்டும் பத்துத்திங்களும் புக்கபெண், "வடிவாய்நின்வல மார்பினில்வாழ்கின்றமங்கையும்" என்றமையான் திருமார்பின் வலப்புறத்தெனப் பொருள்கூறப்பட்டது, மேனிபொருளாகுபெயர். வெண்ணிறத்தோடுபோய்க் கருநிறத்தோடு மீண்டனவென்பதுகருத்து. திருமங்கை தன்வீறு அணிந்தவன் என்பதற்குத் திருமங்கையின் இன்பத்தைப் பொருந்தினவன் எனப்பொருளுரைத்தலு மொன்று.

மலையரையனுக்குத் திருமஞ்சனம்செய்யக் கடல் எழுந்ததென்பது.

14 பம்பிமேகம் பரந்தது பானுவால்
நம்பன்மாதுலன் வெம்மையை நண்ணினன்
அம்பினாட்டுது மென்றகன் குன்றின்மேல்
இம்பர்வாரி யெழுந்தது போன்றதே.

(இ-ள்.) மேகம்-மேகங்கள், பம்பிப்பரந்தது - நெருங்கிப்பரவினது, நம்-நமது, பன்-துதித்தற்குரிய, மாதுலன் - மாமனாகிய மலையரையன், பானுவால் - சூரியனால், வெம்மையை நண்ணினன்-வெப்பத்தையடைந்தான், (ஆகையால்) அம்பின்ஆட்டுதுமென்று-(அவ்வெப்பத்தைத் தணித்தற்பொருட்டு) நீராட்டுவோமென்று, அகன்குன்றின்மேல்- விசாலமாகிய அவ்விமயமலையின்மேல், இம்பர்வாரி - இவ்வுலகத்திலுள்ள கடலானது, எழுந்ததுபோன்றது-எழுந்ததையொத்தது—எ-று. (ந)

நம்பல்-நம்புதற்குரிய, மாதுலன்-மாமன், எனக்கூறலும்பொருந்தும். இற்றே காரம் அசைவாரியென்றது சமுத்திரராஜனே கங்கை மலையரையனுக்கு மூத்தகுமாரத்தியாதலானும், சமுத்திரராஜன் அக்கங்கைக்குக் கொழுநனுதலானும் இவ்வாறு கூறப்பட்டது. கங்கை மலையரையனுக்கு மூத்தகுமாரத்தியென்பதை, ஸ்ரீமத் வால்மீகராமாயணம் பாலகாண்டம் ௨௯-வது சருக்கம், ௧௬-வது சுலோகத்திலும், ௩௬-வது சருக்கம், ௨-வது சுலோகத்திலும் விசதமாகக்காணலாம். நம்பன் மாதுலன் என்பதற்குச் (சிவனுக்கு மாமனுகிய மலையரையன் எனப்பொருள்கூறுவாருமுளர்.)

மேகம் வள்ளியோர்போலச் சொரிந்தன வென்பது.

15\. புள்ளிமால்வரை பொன்னென நோக்கிவான்
வெள்ளிவீழிடை வீழ்த்தெனத் தாரைகள்
உள்ளியுள்ளவெல் லாமுவந் தீயுமவ்
வள்ளியோரின் வழங்கின மேகமே.

(இ-ள்.) புள்ளி-சிறப்பித்துக்கூறப்படும் புகழுள்ள, மால்-பெரிய, வரை-அவ்விமயமலையானது, பொன் எனல் நோக்கி-பொன்னென்பதைப்பார்த்து, வான் - விண்ணுலகினர், வெள்ளிவீழ் - வெள்ளிக்கம்பிகளை, இடை-அப்பொன் மலையின்மேல், வீழ்த்தென-(அழகாக)வீழ்த்திருற்போலத் (தோன்றும்படி,) உள்ளி-(செல்வத்தின் நிலையாமை மறுமைப்பயன் முதலியவற்றை) யாலோசித்து, உள்ளவெல்லாம்- (தம்மிடத்துள்ள) பொருள்களையெல்லாம், உவந்து ஈயும் - மனமுவந்து (வரையாதும் கைம்மாறு கருதாதும்) கொடுக்கின்ற, அவ்வள்ளியோரின் - அவ்வள்ளன்மையை யுடையவர்போல, தாரைகள்-மழைத்தாரைகளை, மேகம் வழங்கின-மேகங்கள்சொரிந்தன-எ-று. (௪)

பொன் என நோக்கி எனப் பாடமோதி, பொன்னென்று நினைத்து எனப்பொருளுரைத்தலுமாம். வள்ளன்மையையுடையவர் இரவலர் முதலானவர்க்குக் கொடுத்து, அவரின்புறக்கண்டு தாமு மின்புறுவராகலின் "உவந்தீயுமவ்வள்ளியோர்" என்றார். பொன்மலையாகிய மேருவை யடுத்திருப்பதனல் இமயமலைக்கும் பொன்னிறமுண்டு, அது, "பனிமாலிமயப், பொருப் பகஞ்சேர்ந்தபொல்லாக் கருங்காக்கையும் பொன்னிறமாயிருக்கும்" என்பதனுனு முணர்க.

வெள்ளம்தசரதனது புகழ்போலவும்

அந்தணர்களுக்குக்கொடுத்த தானம்போலும் பெருகிற்றென்பது.

16\. மானநேர்ந்தற நோக்கி மனுநெறி
போனதண்குடை வேந்தன் புகழெனா
ஞானமுன்னிய நான்மறை யாளர்கைத்
தானமென்னத் தழைத்தது நீத்தமே.

(இ-ள்.) மானம்நேர்ந்து-மானத்தைப் பொருந்தி. அறம் நோக்கி-தருமத்தைக் கருதி, மனுநெறிபோன-மனுவிதித்த நெறியேசென்ற, தண்குடைவேந்தன்- குளிர்ச்சியாகிய முத்துக்குடையையுடைய அரசனுகிய தசரதனது, புகழ் என-கீர்த்தி (பெருகுதல்) போலவும், ஞானம் உன்னிய-ஞானநெறியைக் கருதிய, நான்மறையாளர்-நான்குவேதங்களையு மாராய்ந்தறிந்த அந்தணரது,கை-கையிற்கொடுத்த,தானம் என்ன-தானப்பலன் (பெருகுதல்) போலவும், நீத்தம்-(அந்தமழைத்தாரைகளாலுண்டான) வெள்ளமானது, தழைத்தது-பெருகிற்று—எ-று. (௫)

மானம் என்றது தனது நிலைக்குரிய பெருமை. "அறம்நோக்கி" என்பதற்குத் தருமசாத்திரங்களை யொருங்காராய்ந்தறிந்து எனப் பொருள்கூறலு மொன்று. பொன், மணி, முத்து என்பவற்றாற் புனைந்த முக்குடைகளில், முத்துக்குடை குளிர்ச்சியாகிய நிழலைத்தருவதாதலால் குடை என்பதற்கு முத்துக்குடையெனப் பொருளுரைத்தனம். மானம் நேர்ந்து, அறம்நோக்கி, மனுநெறிபோன அரசனது குடைநிழல், உலகத்துயிர்கள் தங்கி யின்புறுதற்குரியதாதலால் மானம்நேர்தல் முதலானவற்றை முற்கூறி, தண்குடைவேந்தன் எனப் பிற்கூறினார், வேந்தன் புகழ் என்ற சொற்களின் ஆற்றலால், இத்தன்மையனான வேந்தனைத் தற்கிழமைப் பொருள்போலப் புகழ் நீங்காதிருக்குமென்றவாறாயிற்று. புகழ்என - தானமென, என்பவற்றிற்குப் புகழும் தானமும்போல எனவும் பொருளுரைக்கலாம், இப்பொருட்கு, என இரண்டும் எண்ணிடைச் சொற்கள். பின்னதில் னகரம் விரித்தல். தழைத்தது என்றதற்கேற்ப உவமானங்களினும் பெருக்கம் வருவித்துரைக்கப்பட்டன. புகழென, தானமென, என்பவற்றீற்றில் எண்ணும்மைகள் தொக்குநின்றன. "அறிவையறிவது பொருள்"! என்ப வாகலான் நான் மறையாளரா யிருப்பினும் பயனின்றென்பார், ஞானமுன்னிய நான்மறையாளரென்றார்.

வேசைக்கும் வெள்ளத்திற்கும் சிலேடை.

17. தலையுமாகமுந் தாளுந்தழீஇ யதன்
நிலைநிலாதிறை நின்றது போலவே
மலையினுள்ள வெலாங்கொண்டு மண்டலால்
விலையின்மாதரை யொத்ததவ் வெள்ளமே.

(இ-ள்.) அவ்வெள்ளம் - அந்த வெள்ளமானது, விலையின்மாதரை ஒத்தது - பொருட்பெண்டீரை ஒத்திருந்தது—எ-று.

எப்படியெனின், (விலைமாதர் தம்மிடத்துவந்த காமுகரது) தலையும் - சிரத்தையும், ஆகமும் - மார்பினையும், தாளும் - பாதத்தையும், தழீஇய - தழுவின, தன் நிலைநிலாது - தன்வெளி விருப்பத்தின் நிலையினளவாயினும் நில்லாமல், இறை நின்றது போலவே - சிறிதுநேரம் நின்றதுபோன்றே (காணப்பட்டு) உள்ள எல்லாம் - அக்காமுகரிடத்துள்ள (பொன்மணிமுதலிய பொருள்களை) யெல்லாம், கொண்டு - கிரகித்துக்கொண்டு, மண்டலால் - விரைந்துபோதலால் எனவும், (வெள்ளம்) தலையும் - மலையினுச்சியையும், ஆகமும் - நடுவிடத்தையும், தாளும் - அடிவாரத்தையும், தழீஇய - தழுவின, தன்நிலை நிலாது - தனது முன்னிலையில் நில்லாமல், இறைநின்றது போலவே - சிறிதுநேரம் நின்றதுபோலவே தோன்றி, மலையின் உள்ள எல்லாம் - மலையினிடத்துள்ள எல்லாப் பொருள்களையும் - கொண்டு-வாரிக்கொண்டு, மண்டலால் - வேகமாகச் செல்லுதலால், எனவும் பொருள்படுதலான் என்க. (கூ)

இது செம்மொழிச்சிலேடை. விலைமாதர் காமுகரது பொருள்களைக் கவருமளவும் அவர்களைத் தழுவிக்கொண்டிருந்து, கவர்ந்தவாறே விரைவில்விட்டு நீங்குதல்போல, வெள்ளமும் மலையிலுள்ள பொருள்களையெல்லாம் வாரிக்கொள்ளுமளவும் மலையைத் தழுவிக்கொண்டிருந்து, வாரிக்கொண்டவாறே விட்டு நீங்கிற்றென்பது கருத்து.

வணிகருக்கும் வெள்ளத்திற்கும்.

18. மணியும்பொன்னும் மயிற்றழைப்பீலியும்
அணியுமானைவெண் கோடுமகிலுந்தன்

இணையிலாரமு மின்னகொண்டேகலான்
வணிகமாக்களை யொத்ததவ்வாரியே.

(இ-ள்.) அவ்வாரி-அந்த வெள்ளமானது, வணிகமாக்களை ஒத்தது - வியாபாரிகளை யொத்திருந்தது—எ-று.

எப்படியெனின், (வணிகமாக்கள்) மணியும் - இரத்தினங்களும், பொன்னும் - சுவர்ணமும், மயில் தழை பீலியும் - மயிலினது செழிப்பாகிய தோகையும், அணியும் - ஆபரணங்களும், ஆனை வெண்கோடும் - யானைகளின் வெண்மையாகிய தந்தங்களும், அகிலும் - அகிற்கட்டைகளும், தன் இணை இல் ஆரமும் - தனக்குச் சமானமில்லாத சந்தனக்கட்டையும், (ஆகிய) இன்ன - இத்தன்மையவான பொருள்களை, கொண்டு ஏகலான் - கொண்டுசெல்லுதலான், எனப் பொருள்பட்டு வெள்ளத்துக்கும் ஒத்திருத்தலாமெனக. (எ)

தழைப்பீலி - தழைத்தலையுடைய பீலியெனினுமாம். ஆனை - ஆனையென்பதன் மரூஉ. மலையிலுள்ள மூங்கில் முதலானவைகளில் முத்துப்படுதலுண்மையான், ஆரமும் என்பதற்கு முத்துக்களும் எனப் பொருளுரைப்பினு மமையும்.

வானவில்லிற்கும் வெள்ளத்திற்கும்.

19. பூநிறைந்து மென்றாது பொருந்தியும்
தேன்வளாவியுஞ் செம்பொன் விராவியும்
ஆனைமாமத லாற்றொ டளாவியும்
வானவில்லை நிகர்த்தது வாரியே.

(இ-ள்.) வாரி - அந்த வெள்ளமானது, வானவில்லை நிகர்த்தது - இந்திரவில்லையொத்திருந்தது—எ-று.

(எப்படியெனின்,) பூநிரைத்தும் - மலர்களை வரிசையாகப் பொருந்தியும், மேல் தாதுபொருந்தியும் - மிருதுவான மகரங்களைப் பொருந்தியும், தேன்வளாவியும் - தேனொடு கலந்தும், செம்பொன்விராவியு - செம்பொன்னைச் சேர்ந்தும், ஆனை - யானைகளுடைய, மாமதம் ஆற்றொடு அளாவியும் - பெரியமதநதிகளோடு கூடியும் வருதலான் என்க. (அ)

வானவில் பலநிறங்களோடுகூடிக் காணப்படுதல்போல, வெள்ளமும் மலர்கள் முதலான பொருள்களின் பலநிறங்களோடுகூடிக் காணப்படுதலால் ஒப்பாயிற்று.

வானரவெள்ளத்திற்கும் வெள்ளத்திற்கும்.

20. மலையெடுத்து மரங்கள் பரித்துமா
டிலைமுதற் பொருள் யாவையு மேந்தலான்
அலைகடற்றலை யன்றணை வேண்டிய
நிலையுடைக்கவி நீத்தமந் நீத்தமே.

(இ-ள்.) அ நீத்தம்-அந்த வெள்ளமானது, அலை-அசைகிற, கடல்தலை-கடலில், அன்று-முற்காலத்தில், அணைவேண்டிய - அணைகட்ட விரும்பிய நிலைஉடை - மனநிலையையுடைய, கவிநீத்தம் - வானரவெள்ளத்தை யொத்திருந்தது—எ-று.

(எப்படியெனின்,) மலை எடுத்தும் - மலைகளைப் பிடுங்கிக்கொண்டும், மரங்கள் பரித்தும் மரங்களைப் பரித்துக்கொண்டும், மாடு - இரண்டுபக்கங்களிலுமுள்ள, இலைமுதற்பொருள் யாவையும் - இலைமுதலான பொருள்க ளெல்லாவற்றையும், ஏந்தலான் - ஏந்திக்கொண்டும் வருதலால் என்க. (கூ)

வெள்ளத்துக்குச் செல்லும்போது அணைவேண்டிய என்பதற்கு அணைதலை விரும்பின எனப்பொருள் கூறுக. மற்றவை இரண்டதற்கு மொக்கும். இலைமுதற் பொருள் யாவையும் என்பதை ஈகவிநீத்தூத்துக் குரைக்குங்கால், ஆகாரத்துக்கு ரிய இலை காய் கனி கிழங்குமுதலிய பொருள்களெனக் கூறுக. அலை - அலையெறி கிற எனினுமாம்.

கட்குடியருக்கும் வெள்ளத்திற்கும்.

21. ஈக்கள்வண்டொடு மொய்ப்ப 'வரம்பிகந்
தூக்கமேமிகுந் துட்டெளி வின்றியே
தேக்கெறிந்து வருதலிற் றீம்புனல்.
மாச்குதேனுகர் மாக்களை மானுமே.

(இ-ள்.) தீம்புனல் - மதுரமாகிய நீரையுடைய வெள்ளமானது, வாக்கு - வார்க் கப்படுகிற, தேன் - கள்ளை, நுகர் - குடிக்கின்ற, மாக்களை - மனிதர்களை, மானும் - ஒத்திருக்கின்றது—எ - று.

(எப்படியெனின்) ஈக்கள் - ஈய்க்கள், வண்டொடு மொய்ப்ப - வண்டுகளோடு மொய்க்க. வரம்பு இகந்து - அணையைக்கடந்து, ஊக்கம் மிகுந்து - வலிமிகுந்து, உள்தெளிவு இன்றி - உள்ளிடத்துந் தெளிவில்லாமல், தேக்கு எறிந்து - தேக்க மரங்களை வீசிக்கொண்டு, வருதலின்-வருதலான் என்க. (ய)

கட்குடியர் மேலேற்றிக் கூறுமிடத்து, கள்நாற்றத்துக்கும் இனிமைக்கும் ஈக்கள் வண்டொடுமொய்ப்ப, தமது குலம் குடிப்பிறப்பு முதலியவைகட்குரிய வொழுக்க வரம்பைக்கடந்து, மனோத்ஸாஹமே யதிகரித்து, மனத்தெளிவில்லா மல், ஏப்பமிட்டுக்கொண்டு வருதலால் என வுரைக்க. வாக்கு - வடிக்கப்படுகின்ற எனினும் பொருந்தும்.

வெள்ளம் சமுத்திரராஜன்மேல்.

போர்செய்யப்போதலுக்கும் வெள்ளத்திற்கும்.

22. பணைமுகக்களி யானைபன் மாக்களோ
டணிவகுத்தென வீர்த்திரைத் தார்த்தலின்
மணியுடைக்கொடி தோன்றவந் தூன்றலால்.
புணரிமேற்பொரப் போவது போன்றதே.

(இ-ள்.) (வெள்ளமானது) புணரிமேல், சமுத்திரராஜன்மேல், பொர - போர் செய்ய, போவது போன்றது-போவதை யொத்திருந்தது—எ-று.

(எப்படியெனின்) பணை - பருத்த, முகம் - முகத்தையும், களி - களிப்பையு முடைய, யானை -யானைகளை, பல்மாக்களோடு-அநேக மிருகங்களோடு, அணிவகுத் தென - அணிவகுத்தாற்போல, ஈர்த்து - இழுத்துக்கொண்டு, இரைத்து - ஒலித்து, ஆர்த்தலின் - ஆரவாரித்தலாலும், மணி உடை - அழகையுடைய, கொடி - கொடி கள், தோன்ற - தோன்றும்படி, வந்து ஊன்றலால் - வந்து குத்துதலானும் என்க.

பொரப்போதற்கு வினைமுதலாகிய வெள்ளம் அதிகாரத்தான் வருவிக்கப்பட் டது. பொருதலைக் குறித்துரைக்குங்கால், பணைமுகக்களியானை, பன்மாக்க ளோடு, அணிவகுத்து, இழுத்துக்கொண்டும், ஒலித்துக்கொண்டும், ஆரவாரித்த லாலும், இரத்தினக்கொடிகளைப் புலப்படும்படி கொண்டுவந்து நாட்டுதலாலும்

எனவுரைக்க. இதில் பன்மாக்கள் என்றது குதிரைப்படைவீரர், தேர்ப்படைவீரர், காலாட்படை வீரர்களை என்று கொள்க

சரயுநதியின் நீர்த்தவிசேஷம்

23. இரவிதன்குலத் தெண்ணில்பல் வேந்தர்தம்
பரவுநல்லொழுக் கின்படி பூண்டது
சரயுவென்பது தாய்முலை யன்னதிவ்
வுரவுநீர்நிலத் தோங்கு முயிர்க்கெலாம்.

(இ-ள்.) இரவி - சூரியனது, குலத்து குலத்திற்பிறந்த, எண் இல் - எண்ணிறந்த, பல்வேந்தர் - பல அரசர்களுடைய, பரவும் - யாவரும் துதித்தற்குரிய, நல் ஒழுக்கின்படி - நல்லொழுக்கத்தின் இடையறுத்தன்மையை, பூண்டது - தன்னிடத்துக்கொண்டிருப்பதாகிய, சரயு என்பது - சரயு என்று சொல்லப்படுவதாகிய நதியானது, உரவுநீர் - கடல்சூழ்ந்த, இநிலத்து - இந்த நிலவுலகத்தில், ஓங்கும்-விருத்தியடையாநிற்கிற, உயிர்க்கு எலாம் - உயிர்களுக்கெல்லாம், தாய்முலை அன்னது - நற்றாய்முலையை யொத்தது—எ - று. (கஉ)

இரவி தன், வேந்தர்தம் என்பவற்றிலுள்ள தன் தம் இரண்டும் சாரியை யிடைச்சொற்கள்.

நதிக்கு ஒழுக்கு இடையறுதொழுகுதற் றன்மை, தாய் முலை மக்களுக்குத் தன்னிடத்துள்ள பாலுண்பித்து வளர்த்தல்போல, சரயுநதியானது உலகத்துயிர்களுக்குத் தன்னிடத்துள்ள நீருண்பித்து வளர்க்கின்றது என்பது கருத்து. உரவுநீர் பண்புத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகைக்காரணப்பெயர். உயிர்க்கெலாம் என்றமையின் புல்முதலிய வோரறிவுயிர்களையுங்கொள்க.

சரயுநதி அடித்துவரும் வாசனைத் திரவியங்கள்.

வே று.

24. கொடிச்சிய ரிடித்தசுண்ணங் குங்குமங் கோட்டமேலம்
நடுக்குறு சத்தஞ்சிந்து ரத்தொடு நரந்தநாகம்
கடுக்கையார் வேங்கைகோங்கு பச்சிலைகண்டில் வெண்ணெய்
அடுக்கலி னடுத்ததீந்தே னகிலொடு நாறுமன்றே.

(இ-ள்.) (வெள்ளமானது) கொடிச்சியர் - குறத்தியர், இடித்த - இடித்துச் செய்த, சுண்ணம்- வாசனைப்பொடியோடும், குங்குமம் - குக்குமமரத்தோடும், கோட்டம் - கோஷ்டமரத்தோடும், ஏலம் - ஏலச்செடியோடும், நடுக்குஉறு - அசைகின்ற, சந்தனம் - சந்தன மரத்தோடும், சிந்தூரத்தொடு - வெட்சிமரத்தோடும், நரந்தம் - நாரத்தை மரத்தோடும், நாகம் - புன்னை மரத்தோடும், கடுக்கை - கொன்றை மரத்தோடும், ஆர்-ஆத்திச்செடியோடும், வேங்கை-வேங்கை மரத்தோடும், கோங்கு - கோங்கமரத்தோடும், பச்சிலை - பச்சிலைமரத்தோடும், கண்டில் வெண்ணெய் - கண்டில்வெண்ணெய்மரத்தோடும், அடுக்கலின் அடுத்த-மலையிற் கட்டப்பட்ட,தீதேன் - இனிமையாகிய தேன்கூட்டோடும், அகிலொடு-அகில் மரத்தோடும், (கூடி) நாறும் - பரிமளிக்கும்—எ-று, (கங)

அன்று ஏ இரண்டும் அசையிடச்சொற்கள்.

நாறும் என்பதற்கு வினைமுதலாகிய வெள்ளம் அதிகாரத்தால் வருவிக்கப்பட்டது. நாறும்-தோன்றும் எனினுமாம். குங்குமம் என்பது குங்குமப்பூவெனினுமாக்கும். சிந்தூரம் அதில் இவ்விரண்டொழிய ஏனையவைகட்கு ஒடு சேர்க்கப்பு

ட்டது. நரந்தம்-கஸ்தூரி யெனினுமாம். நடு-குறு - சந்தம் - எனப் பிரித்து நடுவில் தறிக்கப்பட்ட சந்தனக்கட்டை யென்பாருமுளர். நடுக்குறு - குளிர்கின்ற என்றலு மொன்று. காரியமாகிய இது காரணத்தின்மேனின்றது.

வெள்ளத்திற்கும் சேனைக்கும்.

25. எயினர்வாழ் சீறூரப்பு மாரியி னிரியல்போக்கி
வயின்வயி னெயிற்றிமாதர் வயிறலைத் தோடவோடி
அயின்முகக் கணையும்வில்லும் வாரிக்கொண் டலைக்குநீரால்
செயிர்தருங் கொற்றமன்னர் சேனையை மானுமன்றே.

(இ-ள்.) (வெள்ளமானது) செயிர்தரும் - குற்றத்தைச்செய்கின்ற. கொற்றம்-வெற்றியையுடைய, மன்னர்-அரசரது, சேனையை-படையை, மானும்-ஒத்திருக்கின்றது—எ-று.

(எப்படியெனின்) எயினர்வாழ்-வேடர்கள் வாழ்கிற, சீறூர்-சிற்றூர்களை, அப்பு மாரியின்-அம்புமழையால், இரியல்போக்கி-ஓடச்செய்து, வயின் வயின் - எவ்விடத்தும், எயிற்றுமாதர் - வேடப்பெண்கள், வயிறு அலைத்து ஓட - வயிற்றிலறைந்து கொண்டு ஓடும்படியாக, ஓடி-விரைந்துபோய், அயில்-கூர்மையான, முகம்-நுனியை யுடைய, கணையும்-பாணங்களையும், வில்லும்-விற்களையும்,வாரிக்கொண்டு-கிரகித்துக் கொண்டு, அலைக்கும்-அலைக்கின்ற, நீரால்-நீரினுல் என்க. ()

அப்புமாரி-வலித்தல், அம்பு-நீருக்கும் பாணத்துக்கும் ஆகும், நீர்-ஜலத்துக்கும் தன்மைக்கும் ஆகும், அன்று-ஏ-அசைகள், அயில்-உயிர்களை யுண்ணுகின்ற, முகம் - வாயையுடைய, என்றும் சொல்லலாம்.

வெள்ளத்திற்கும் கண்ணனுக்கும்.

26. செறிநறுந் தயிரும்பாலும் வெண்ணெயுஞ் சேர்ந்தநெய்யும்
உறியொடு வாரியுண்டு குருந்தொடு மருதமுந்தி
மறியுடை யாயர்மாதர் வளைதுகில் வாருநீரால்
பொறிவரி யரவினாடும் புனிதனும் போலுமன்றே.

(இ-ள்.) (வெள்ளமானது) பொறி-புள்ளிகளையும்,வரி-வரிகளையு முடைய, அரவின்-பாம்பின்மேல், ஆடும்-ஆடின. புனிதனும் - பரிசுத்தனுகிய கண்ணனையும், போலும்-ஒக்கும்—எ-று,

(எப்படியெனின்) செறி - உறைந்த, நறு தயிரும் - நன்மணமுள்ள தயிரையும், பாலும்-பாலையும், வெண்ணெயும்-வெண்ணெயையும், சேர்ந்தநெய்யும் - (தொலையாமல்) சேர்ந்த நெய்யையும், உறியொடுவாரி உண்டு-கட்டித் தூக்கியிருந்த உறியோடு வாரிப்பருகி, குருந்தொடு மருதம் உந்தி-குருந்தமரத்துடன் மருதமரத்தைத்தள்ளி, மறி உடை - ஆடுகளைத் தமக்குச் செல்வமாகப்பெற்ற, ஆயர் - இடையர்களுடைய, மாதர்-பெண்களது, வளை-உடுக்கின்ற, துகில்-வஸ்திரங்களை,வாரும்-வாரிக்கொண்டு போகின்ற, நீரால்-நீரினுல், என்க. (கசு)

செறி-தோய்ந்திறுகின. சேர்ந்த எனத் தன்வினையாற் கூறினமையின், தயிர் பால் வெண்ணெய்களாகவுண்டுந் தொலையாமை பெற்றும். கண்ணன்மேலேற்றிக் கூறுமிடத்து, உறியொடு வாரி உண்டு - உறியோடுவாரி, அதிலிருந்த தயிர்முதலிய வற்றை உண்டு எனக்கொள்க. உறியொடு என்பதில் ஒடு எழாவதன் இடப்பொரு

ளில்வந்தது. வனை-அலங்கரித்த எனினுமமையும். நீர்-ஜலம், தன்மை. வரி-நீட்சியெனி னுமாம். அரவு-காளிங்கன் என்னும் பாம்பு. புனிதனும் என்னும் உம்மை இறந்தது தழீஇயது. அன்று-ஏ-அசைகள். இயற்கையிற் றாயனுகலின் புனிதன் என்றார்.

வெள்ளத்திற்கும் யானைக்கும்.

27. கதவினைமுட்டி மள்ளர் கையெடுத் தார்ப்பவெய்தி
நுதலணி யோடைபொங்க நுகர்வரி வண்டுகிண்டத்
ததைமணி சிந்தவுந்தித் தறியிறத் தடக்கைசாய்த்து
மதமழை யானையென்ன மருதஞ்சென் றடைந்ததன்றே.

(இ-ள்.) (வெள்ளமானது) கதவினைமுட்டி-மதகுக்கதவுகளைமுட்டி, மள்ளர்-உழவர், கை எடுத்து ஆர்ப்ப-கைகளையுயரவெடுத்து ஆரவாரிக்க, எய்தி - போய், நுதல் அணி-முன்னணியிலுள்ள, ஓடை-ஓடைகள், பொங்க-பெருகவும், நுகர்-தமது இரையையுண்ணுகிற, வரி-கீற்றமைந்த, வண்டு - வண்டுகள், கிண்ட - குடையவும், ததை-நெருங்கிய, மணிசிந்த - இரத்தினங்கள் சிதறவும், உந்தி - நதியின் இருகரையினும் நட்ட, தறி இற-தூண்கள் முறியவும், தடம் கைசாய்த்து-பெரிய அலைகளாகிய கைகளாற் சாயச்செய்து, மதம் மழை - மதவர்ஷத்தையுடைய, யானை என்ன - யானைபோல, மருதம்-மருதநிலத்தில், சென்று அடைந்தது-போய்ச் சேர்ந்தது—எ-று. ()

மள்ளர்கையெடுத்தார்த்தல் - புதுப்பெருக்கைக்கண்டு மனமகிழ்ச்சியாற் கையெடுத்து ஆரவாரித்தல். யானையைக்குறித்து உரைக்குமிடத்து, பந்திக்கதவுகளைமோதி, பாகர் மக்கள் விலகும்படி கைகளையுயர்த்தி யார்ப்பரிக்கப்போய், நெற்றியிலணிந்திருக்கிற பொற்பட்டம் விளங்கவும், மதநீரையுண்ணுகின்ற இசைப்பாட்டையுடைய வண்டுகள் கிண்டவும், நெருங்கின இருபுறத்து மணிகள் சிதற வெறிந்து, கட்டுத்தறி முறியும்படி பெரியதுதிக்கையினுல் சாய்த்து எனக்கூறுக. கதம்-வினை-முட்டி-கோவமாகிய தொழிலால் முட்டியெனினுமாம். நுதல்-நெற்றியிலுள்ள, அணி-அழகான, என்றலும் பொருந்தும். அன்று-ஏ-அசைகள். முட்டி, எய்தி, உந்தி, சாய்த்துச் சென்றடைந்தது என வினைமுடிக்க. தறியென்பது யானையைத்தடுக்கு மரமெனினு மமையும். இம்மரத்துக்குத் கணையமென்று பெயர்.

வெள்ளத்திற்கும் இருவினைக்கும்.

28. முல்லையைக் குறிஞ்சியாக்கி மருதத்தை முல்லையாக்கிப்
புல்லிய நெய்தறன்னைப் பொருவரு மருதமாக்கி
யெல்லையிற் பொருள்களெல்லா மிடைதடு மாறுநீராற்
செல்லுறு கதியிற்செல்லும் வினையெனச் சென்றதன்றே

(இ-ள்.) முல்லையை-முல்லைநிலத்தை, குறிஞ்சிஆக்கி-குறிஞ்சிநிலமாகச்செய்தும், மருதத்தை-மருதநிலத்தை, முல்லை ஆக்கி - முல்லைநிலமாகச் செய்தும், புல்லியநெய்தலை-அற்பப்பயனைத் தருவதாகிய நெய்தனிலத்தை, பொருவு அரு-பயனளித்தலில் சமானமில்லாத, மருதம் ஆக்கி-மருதநிலமாகச்செய்தும், எல்லையில்-அவ்வந்நிலங்களிலுள்ள, பொருள்கள் எல்லாம்-திரவியங்களெல்லாம், இடை தடுமாறும்நீரால்-தத்தம் நிலத்தைவிட்டுத் தலைமயங்குதற்கு ஏதுவாகிய நீரினுல், செல் உறு-உயிர்கள் போகவுற்ற, கதியில்-நால்வகைக்கதிகளில், செல்லும்-தொடர்ந்துபோகின்ற, வினை என-இருவினைபோல, சென்றது-அவ்வெள்ளம்போயிற்று—எ-று,

அன்று-ஏ-அசைகள். மருதத்தையடுத்த நிலமாதலால், புல்லியநெய்தல் என்று ரெனினுமமையும். நெய்தறன்னை என்பதில் தன்சாரியை, பொருவரு என்பதில் அருமை, இன்மைகுறித்துநின்றது. நானிலங்களிற் சிறந்திருத்தல்பற்றி யிவ்வாறு கூறினர். எல்லை இல் - எல்லையில்லாத - எனப் பொருள் கூறலுமாம். வினைக்கு நீர்-குணம். நாற்கதியாவன, தேவகதி, மக்கட்கதி, விலங்குக்கதி, நரககதி என்பன. இருவினை, நல்வினை தீவினை என்பன. வினைகள், தம்மைச்செய்த வுயிர்களை ஒருகதியினின்று மற்றொருகதியிற்கொண்டு, செலுத்துதல்போல, வெள்ளமும் ஒருநிலப் பொருளை மற்றொருநிலத்திற் கொண்டு சென்றதென்பது கருத்து.

வெள்ளத்திற்கும் குலத்திற்கும்.

29. காத்தகான் மள்ளர்வெள்ளக் கலிப்பறை கறங்கக்கைபோய்ச்
சேர்த்தநீர்த் திவலைபொன்னு முத்தொடு திரையின்வீசி
நீத்தமாந் தலையவாகி நிமிர்ந்துபார் கிழியநீண்டு
கோத்தகா லொன்றினொன்று குலமெனப் பிரிந்தவன்றே.

(இ-ள்.) காத்த-தம்மால் காக்கப்பட்ட, கால்-நீர்க்கால்களையுடைய, மள்ளர்களது, வெள்ளம்-வெள்ளக்குறிப் புணர்த்துதற்குரிய, கலி-ஒலிக்கின்ற, பறை-கிணையென்னும் மருதநிலப்பறைகள், கறங்க-முழங்காநிற்க, கைபோய்-ஒழுங்காகப்போய், சேர்த்த-திரண்ட, நீர்த்திவலை - நீர்த்துளிகளையும், பொன்னும்-பொன்னையும், முத்தொடு-முத்துக்களோடு சேர்த்து, திரையின் வீசி-அலைகளால் எறிந்தும், நீத்தம் ஆம் தலைஆகி-வெள்ளமாகிய முதலிடத்தை யுடையனவாகி, நிமிர்ந்து - உயர்ந்தும், பார் கிழிய-பூமிபிளக்கும்படி, நீண்டு - நீண்டும், கோத்த - முறையாகத்தொடர்ந்த, கால்-கால்கள், ஒன்றின் ஒன்று - ஒன்றினின்று மற்றொன்று, குலம் என - குலபரம்பரை போல, பிரிந்த-பிரிந்தன—எ-று.

பிரிந்த என்பதற்கு வினைமுதல் கால்.

வெள்ளத்திற்கும் சமயத்திற்கும்.

30. கல்லிடைப் பிறந்துபோந்து கடலிடைக் கலந்தநீத்தம்
எல்லையின் மறைகளாலு மியம்பரும் பொருளீதென்னத்
தொல்லையி னொன்றேயாகித் துறைதொறும் பரந்தசூழ்ச்சி
பல்பெருஞ் சமயஞ்சொல்லும் பொருளும்போற் பரந்ததன்றே.

(இ-ள்.) கல் இடை-இமயமலையில், பிறந்து-உற்பத்தியாகி, போந்து-சென்று, கடல இடை-கடலில், கலந்த-சேர்ந்த, நீத்தம்-வெள்ளமானது, எல்லை இல்-அளவில்லாத, மறைகளாலும்-வேதங்களாலும், இயம்பு அரு-சொல்லுதலரிதான, பொருள்-பரம்பொருள், ஈது என்ன-இதுவென்று சொல்லும்படி, தொல்லையில் - ஆதிகாலத்தில், ஒன்றேஆகி-ஒன்றாகவேயிருந்து, துறைதொறும் - குளம் ஏரிமுதலான எல்லாவிடங்களினும், பரந்த-பரவிய, சூழ்ச்சி-யோசனைக்குரிய தோற்றத்தால், பல் - பலவாகிய, பெருஞ்சமயம்-பெருஞ்சமய நூல்களால், சொல்லும் - சொல்லப்படுகிற, பொருள்-பரம்பொருளானது,பரந்ததும்போன்றது-எல்லாச்சமயங்களினும்வியாபித்ததையும் ஒத்திருந்தது—எ-று,

பொருளினும்மை பரந்ததென்பதிலும், பரந்தது என்பதின் இடைநிலை முதலியவை போல் என்பதிலும் சேர்த்துரைக்கப்பட்டன.

31. தாதுகு சோலைதோறுஞ் சண்பகக்காடு தோறும்
போதவிழ் பொய்கைதோறும் புதுமணற் றடங்கடோறும்
மாதவி வேலிப்பூக வனந்தொறும் வயல்கடோறும்
ஓதிய வுடம்புதோறு முயிரென வுலாயதன்றே.

(இ-ள்.) தாது-மகரந்தம்,உகு-சிந்துகின்ற,சோலைதோறும்-சோலைகள்தோறும், சண்பகக்காடுதோறும்-சண்பகமரக்காடுகள்தோறும்,போது - பேரரும்புகள், அவிழ்-விரிகின்ற, பொய்கைதோறும்-குளங்கள்தோறும், புது-நூதனமான, மணற்றடங்கள் தோறும்-மணற்பாங்குகள்தோறும், மாதவிவேலி - குருக்கத்திமரவேலியையுடைய, பூகவனந்தொறும்-கமுகஞ்சோலைகள்தோறும்,வயல்கள்தோறும்-கழனிகள்தோறும் ஓதிய-(அறிஞரானும் நூல்களானும் சிறப்பித்துச்) சொல்லப்பட்ட,உடம்புதோறும்-எல்லாச்சரீரங்களிலும், உயிர் என-உயிர் உலாவுதல்போல,உலாயது-(அவ்வெள்ளஞ்) சென்றுலாவியது.

புதுமணல்-புதியமணலுள்ள, தடங்கள்தோறும் - தடாகங்கள்தோறும் எனினுமாம். முத்தியடைதற்குக் கருவியாதலின், ஓதிய என்பதற்கு, அறிஞரானும் நூல்களானும் சிறப்பித்துச் சொல்லப்பட்ட எனப்பொருள் கூறப்பட்டது.

உ-வது ஆற்றுப்படலம் முற்றிற்று.

---

## ங-வது. நாட்டுப்படலம்.

கோசலநாட்டுவளப்பங் கூறுகின்றபடலம்.

32. வாங்கரும் பாதநான்கும் வகுத்துவான் மீகியென்பான்
தீங்கவி செவிகளாரத் தேவரும் பருகச்செய்தான்
ஆங்கவன் புகழ்ந்தநாட்டை யன்பெனு நறவமாந்தி
மூங்கையான் பேசலுற்றா னென்னயான் மொழியலுற்றேன்

(இ-ள்.) வாங்கு அரு-(தேவர்களுக்கும் முனிவர்களுக்கும்) நீக்குதலருமையான, பாதம் நான்கும்-நான்கடிகளையும், வகுத்த-சுலோகங்களுக் கேற்படுத்திய, வான்மீகியென்பான்-வான்மீகியென்று சொல்லப்படுகிற முனிசிரேஷ்டன்,தீங்கவி - மதுரமாகியகவியமுதத்தை, தேவரும்-(கடலமுதுபருகின) தேவர்களும்,செவிகள் ஆர-காதுகளாகிய வாய்கள் நிரம்ப, பருக-உண்ணும்படி, செய்தான் - உண்டாக்கினான், ஆங்கு அவன் புகழ்ந்த-அவ்வாறு அவன் புகழ்ந்துரைத்த, நாட்டை-கோசலதேசவளத்தை, மூங்கையான் பேசலுற்றான் என்ன-ஊமையானவன் பேசத் தொடங்கினான் போல, அன்பு என்னும்-ஆசையென்று சொல்லப்படுகிற, நறவம் - கள்ளை, மாந்தி - குடித்து, யான்-நான், மொழியல் உற்றேன்-சொல்லத்தொடங்கினேன்—எ-று. (க)

நான்கும் என்னு மும்மை முற்றும்மை. என்பான் - செயப்பாட்டுவினை. பருக என்றதற்கேற்பக் கவியை யமுதமாகவும், செவியை வாயாகவு முருவகஞ் செய்துரைத்தனம். தேவரும் என்னுமும்மை உயர்வு சிறப்பு. ஆங்கு அசையெனினுமாம். நாடு பொருளாகுபெயர். முற்றுணர்வுள்ள வான்மீகிமுனிவர் புகழ்ந்த நாட்டைச் சிற்றுணர்வுள்ள யான் புகழ்தலமையாதென்பார், மூங்கையான் பேசலுற்றானெ

ன்ன என்றார். நறவமாந்தினோன் முறைபிறழ்ந்து பேசுதல்போல, அன்பெனு நறவமாந்தி, யான் பேசுதலு முறை பிறழ்வாமென அவையடக்கங் கூறியவாறு.

33. வரம்பெலா முத்தந்தந்து மடையெலாம் பணிலமாநீர்க்
குரம்பெலாஞ் செம்பொன்மேதிக் குழியெலாங் கழுநீர்க்கொள்ளை
பரம்பெலாம் பவளஞ்சாலிப் பரப்பெலா மன்னம்பாங்கர்க்
கரம்பெலாஞ் செந்தேன்சந்தக் காவெலாங் களிவண்டீட்டம்.

(இ-ள்.) வரம்பு எலாம் - வரம்புகளிலெல்லாம், முத்தம் - முத்துக்களும், தந்தும்-தடுத்திருக்கிற, மடையெலாம் - மடைகளிலெல்லாம், பணிலம் - சங்குகளும், மா - மிகுதியான, நீர் - நீரினது, குரம்பு எலாம் - செய்கரைகளி லெல்லாம், செம்பொன் - செம்பொன்னும், மேதி - எருமைகள் படிகின்ற, குழியெலாம் - பள்ளங்களிலெல்லாம், கழுநீர்க்கொள்ளை - கழுநீர்மலரின் மிகுதியும், பரம்பு எலாம் - பரம்படித்த இடங்களிலெல்லாம், பவளம் - பவளங்களும், சாலிப்பரப்பு எலாம் - நெற்பயிர்ப் பரப்புகளிலெல்லாம், அன்னம் - அன்னப்பறவைகளும், பாங்கர் - அவற்றின் பக்கத்திலிருக்கின்ற, கரம்பு எலாம் - கரம்பு நிலங்களிலெல்லாம், செந்தேன் - செந்தேனும், சந்தம் - அழகான, கா எலாம் - சோலைகளிலெல்லாம், களி - களித்த, வண்டு ஈட்டம் - வண்டுக் கூட்டங்களும் (உள்ளன) எ-று. (உ)

முத்தம் முதலான எழுவாய்களுக்கு உள்ளன என்னும் பயனிலை யெஞ்சி நின்றது. இதனை யெச்சப்பயனிலை யென்பர்.

34. ஆறுபா யரவமள்ள ராலைபா யமலையாலைச்
சாறுபா யோசைவேலைச் சங்குவாய் பொங்குமோதை
ஏறுபாய் தமரநீரி லெருமைபாய் துழனியின்ன
மாறுமா றாகித்தம்மின் மயங்குமா மருதவேலி.

(இ-ள்.) ஆறுபாய் - நதி நீர்ப்பாய்தலாலுண்டாகின்ற, அரவம் - ஓசையும், மள்ளர்-உழுநர், ஆலைபாய் - ஆலையாடுதலாலுண்டாகிற, அமலை - ஓசையும், ஆலை - அவ்வாலையினின்றும் வெளிப்படுகிற, சாறு - கருப்பஞ்சாறு, பாய் - பாய்தலாலுண்டாகிற, ஓசை - சப்தமும், வேலை - நீர்க்கரைகளில் உள்ள, சங்குவாய்-சங்குகளின் வாய்களில், பொங்கும் - மிகுகின்ற, ஓதை - ஓசையும், ஏறுபாய் - எருதுகள் ஒன்றையொன்று தாக்குதலாலுண்டாகிற, தமரம்-ஓசையும், நீரில் - நீரினிடத்து, எருமைபாய் - எருமைகள் விழுவதனாலுண்டாகிற, துழனி - ஓசையும், இன்ன - இவைபோல்வனவாகிய பிறவோசைகளும், தம்மில் மாறு மாறு ஆகி - தமக்குள் ஒன்றுக்கொன்று பகையுடையனவாகி, மருதவேலி - மருத நிலத்தில் - மயங்கும் - இன்னவோசையெனத் துணியப்படாதனவாகும்—எ-று. (ங)

வயங்கும் எனப் பாடமோதி, விளங்கும் எனப் பொருள் கூறுவாரு முளர். வேலைச்சங்கு-புதுநீரிலேறிவந்த கடற்சங்கெனினு மமையும்.

35. தண்டலை மயில்களாடத் தாமரை விளக்கந்தாங்கக்
கொண்டல்கண் முழவினேங்கக் குவளைகண் விழித்துநோக்கத்
தெண்டிரை யெழினிகாட்டத் தேம்பிழி மகரயாழின்
வண்டுக ளினிதுபாட மருதம்வீற் றிருக்குமாதோ-

(இ-ள்.) தண்டலை - சோலையாகிய (ஆடரங்குகளில்), மயில்கள் ஆட - மயில்களாகிய (நாட்டியப்பெண்கள்) நடிக்கவும், தாமரை - செந்தாமரைக்கொடிகள், விளக்

கம் தாங்க-மலர்களாகிய தீபங்களையேந்தவும், கொண்டல்கள்-மேகங்கள், முழவின் ஏங்க - மத்தளம்போலொலிக்கவும், குவளை - கருங்குவளைக்கொடிகள், கண் - (மலர்களாகிய) கண்ணை, விழித்து நோக்க - விழித்துப் பார்க்கவும், தெள்திரை - தெளிவான அலைகளென்கிற, எழினி - திரையை, காட்ட - (தடாகங்கள்) காட்டவும், தேம்பிழி - இனிய தேனையொத்த, மகரயாழின் - மகரயாழிேனாசைபோல, வண்டுகள் - வண்டுகளாகிய இசைவல்லார், இனிது பாட - இனிதாகப் பாடவும், மருதம்-மருதநிலமாகிய அரசன், வீற்றிருக்கும் - அரசிருப்பான்—எ-று. (௪)

விளக்கம் என மேல் வருதலால் தாமரையென்பதற்குச் செந்தாமரையெனப் பொருள் கூறினோம். தெள்திரை யெழினிகாட்ட என்பதற்குத் தெளிவாகிய அலைகள் தம்மைத் திரைகளாகத் தோன்றுவிக்கவெனினு மமையும். பிழியென்பது பிழியப்படுவதென்னும் பொருளில் செயப்படு பொருண்மை விகுதியாகிய ஐபுணர்ந்து கெட்டது.

36. தாமரைப் படுவவண்டுந் தகைவருந் திருவுந்தண்டார்க்
காமுகர்ப் படுவமாதர் கண்களுங் காமனம்பும்
மாமுகிற் படுவவாரிப் பவளமும் வயங்குமுத்தும்
நாமுதற் படுவமெய்யு நாமநூற் பொருளுமன்றே.

(இ-ள்.) வண்டும் - வண்டுகளும், தகைவரும் திருவும் - அழகு வளர்கின்ற திருவும், தாமரைபடுவ - தாமரைமலர்களிற் றங்குவன, மாதர் கண்களும் - விலைமாதருடைய கண்களும், காமன் அம்பும் - மன்மத பாணங்களும், தண்தார் - குளிர்ச்சியாகிய பூமாலையையணிந்த, காமுகர்ப்படுவ - காமுகரைத் தாக்குவன, வாரி - கடலிற் றோன்றுகின்ற, பவளமும் - பவளங்களும், வயங்கும் - பிரகாசிக்கிற, முத்தும்-முத்துக்களும், மாமுகில் படுவ - பெரிய மேகங்களினிடத்திற் றங்குவன, மெய்யும்-உண்மையும், நாமம் - பிரபலமான, நூல்பொருளும் - சாஸ்திரார்த்தங்களும், நாமுதல்படுவ - நாவினிடத்துத் தங்குவன—எ-று. (௫)

காமுகர்ப்படுவ வென்றமையால், மாதர் என்பதற்கு விலைமாதரெனப் பொருள் கூறப்பட்டது. மேகங்கள் கடல் நீரைப் பருகுமிடத்துப், பவளமும், முத்தும் தம்மிடத்துத் தங்கவைத்து, உலகியலுக் கின்றியமையாத நீரொன்றையுமே பெய்தனவாதலால், மாமுகிற் படுவனவாயின. திரு, சொல்லால் அஃறிணையையொத்தலால், படுவ என்றார்.

37. நீரிடை யுறங்குஞ்சங்க நிழலிடை யுறங்குமேதி
தாரிடை யுறங்கும்வண்டு தாமரை யுறங்குஞ்செய்யாள்
தூரிடை யுறங்குமாமை துறையிடை யுறங்குமிப்பி
போரிடை யுறங்குமன்னம் பொழிலிடை யுறங்குந்தோகை.

(இ-ள்.) சங்கம் - சங்குகள், நீர் இடை - நீரில், உறங்கும் - இன்புறுவன, மேதி-எருமைகள், நிழல் இடை - மரநிழலில், உறங்கும் - இன்புறுவன, வண்டு - வண்டுகள், தார் இடை - பூமாலையில், உறங்கும் - இன்புறுவன, செய்யாள் - திருமகள், தாமரை - தாமரைமலரில், உறங்கும் - இன்புறுவாள், ஆமை-ஆமைகள், தூர் இடை - கரையிலுள்ள மரவேர்களில், உறங்கும் - இன்புறுவன, இப்பி - சிப்பிகள், துறை இடை - நீர்த்துறைகளில், உறங்கும் - இன்புறுவன, அன்னம் - அன்னப்பறவைகள், போர் இடை - நெற்போர்களில், உறங்கும் - இன்புறுவன, தோகை - மயில்கள் பொழில் இடை - சோலைகளில், உறங்கும் - இன்புறுவன.

தார் என்பதற்குப் பூ எனினும் பொருந்தும்.

38. படையுழ வெழுந்த பொன்னும் பணிலங்க ளுயிர்த்த முத்தும்
இடறிய பரம்பிற் காந்து மினமணித் தொகையு நெல்லும்
மிடைபசுங் கதிரு மீனு மென்றழைக் கரும்பும் வண்டும்
கடைசியர் முகமும் போதுங் கண்மலர்ந் தொளிரு மாதோ.

(இ-ள்.) படை உழ - கலப்பைக ளுழுதலால், எழுந்த - மேலேயெழுந்த, பொன்னும் - சுவர்ணமும், பணிலங்கள் - சங்குகள், உயிர்த்த - ஈன்ற, முத்தும் - முத்துக்களும், இடறியபரம்பில் - பரம்படித்த நிலங்களில், காந்தும் - பிரகாசிக்கிற, இனம்மணி தொகையும் - இனமாகிய இரத்தினத் தொகுதியும், நெல்லும் - நெல்லும், மிடை - நெருங்கிய, பசுகதிர் - பசுமையாகிய கதிர்களை, ஈனும் - தரும், மெல்தழை - மென்மையாகிய தழைகளையுடைய, கரும்பும் - கரும்புகளும், வண்டும் - வண்டுகளும், கடைசியர் - உழத்தியருடைய, முகமும் - முகங்களும், போதும் - மலர்களும், கண்மலர்ந்தொளிரும் - கண்மலர்ந்தொளிரும்—எ-று. (எ)

பொன்னும் முத்தும் மணித்தொகையும் கிரணங்களை விரிக்கும் என்பது கருத்து. நெல் கண்மலர்ந்தொளிர்தலாவது, இடந்தோறும் பரவியிருத்தல், கரும்பு கண்மலர்ந் தொளிர்தலாவது, கணுக்களோடு விளங்குதல். வண்டு கண் மலர்ந் தொளிர்தலாவது, மாதர் கண்கள்போல விளங்குதல். கடைசியர் முகம் கண்மலர்ந் தொளிர்தலாவது, கண்கள் மலர்ந்து விளங்குதல். போது கண்மலர்ந் தொளிர்தலாவது, தேனொடு விகசித்து விளங்குதல். கதிரும் என்பதில் இம்சாரியை. இவ்வாறன்றி, பொன் முதலானவற்றை, மும்மூன்றாகப் பிரித்துப் பொருள்கூறி யிடர்ப்படுவாரு முளர்.

39. தெள்விளி சிறியாழ்ப் பாணர் தேம்பிழி நறவ மாந்தி
வள்விசி கருவி பம்ப வயின்வயின் வழங்கு பாடல்
வெள்ளிவெண் மாடத் தும்பர் வெயில்விரி பசும்பொற் பள்ளி
எள்ளருங் கருங்கட் டோகை யின்றுயி லெழுப்பு மன்றே.

(இ-ள்.) தெள்விளி - தெள்விளிப்பண்ணைப் பாடுதற்குரிய, சிறியாழ் - சிறிய யாழையுடைய, பாணர் - பாணர்கள், தேம் - மதுரமாகிய, பிழி - வடிக்கப்படுகிற, நறவம் - கள்ளை, மாந்தி - குடித்து, வள்விசிகருவி - வாரினாலிறுக்கிய தோற்கருவியாகிய மத்தளவோசையானது, பம்ப - யாழோசைக்கிணங்கி யொலிக்க, வயின் வயின் - இடங்கள்தோறும், வழங்கு - பாடுகிற, பாடல் - பாட்டானது, வெள்ளி - வெள்ளியினாற்செய்த, வெண்மாடத்து உம்பர் - வெண்ணிறத்தையுடைய மாளிகைகளின் மேலிடங்களில், வெயில்விரி - ஒளியைப்பரப்புகின்ற, பசும்பொன் - பசும்பொன்னாற் செய்யப்பட்ட, பள்ளி - சயநத்தில் நித்திரைசெய்கிற, எள் அரு - நிந்திக்கக்கூடாத, கருகண் - கருங்கண்களையுடைய, தோகை - மயிலியன்மாதரை, இன்றுயில் இனிதான நித்திரையினின்றும், எழுப்பும் - விழிப்பிக்கும்—எ-று. (அ)

சிறிய யாழ் என்பது பெயரெச்சத்து அகரங்குறைந்து சிறியாழ் என நின்றது.

40. ஆலைவாய்க் கரும்பின் றேனு மரிதலைப் பாளைத் தேனும்
சோலைவாய்க் கனியின் றேனுந் தொடையிழி யிறாலின் றேனும்
மாலைவா யுகுத்த தேனும் வரம்பிகந் தோடி வங்க
வேலைவாய் மடுப்ப வுண்டு மீனெ லாங்களிக்கு மாதோ.

(இ-ள்.) ஆலைவாய் - ஆலையிற் சிதைந்த, கரும்பின் தேனும் - கரும்புகளின் சாறும், அரிதலை - அரிந்த தலைகளையுடைய, பாளை - பாளைகளினின்று முண்டா

கிற, தேனும் - கள்ளும், சோலைவாய்-பொழில்களிலுண்டாகிற, கனியின் தேனும்-முக்கனிகளின் சாறும், தொடை - ஒழுங்காக, இழி - ஒழுகுகிற, இறாலின் தேனும்-தேன்கூட்டிலிருந்து ஒழுகுகிற தேனும், மாலை - பூமாலைகள், வாய் - தம்மிடத்திருந்து, உகுத்த - சிந்திய, தேனும் - தேனும், வரம்பு இகந்து ஓடி - அளவுகடந்தோடி, வங்கம் - கப்பல்கள் சஞ்சரிக்கிற, வேலைவாய் - கடலில், மடுப்ப-பொருந்த, மீன் எலாம் - அக்கடலிலுள்ள மீன்களெல்லாம், உண்டு - அந்தத் தேனையுண்டு, களிக்கும் - களியாநிற்கும்—எ-று. (௩)

முக்கனி; வாழை, மா, பலா என்பன. கனியென வாளா கூறினமையின், முக்கனியையேயன்றிப் பிறகனிகளையுங் கோடலமையும். கரும்பு-இன்-தேனும்-எனப் பிரித்துக் கரும்பினது இனிதான சாறும் என்றலுமாம். சோலைவாய்க்கனியின் தேனும், தொடையிழியிறாலின் தேனும் என்பவற்றிற்கும் இஃதொக்கும்.

41. பண்கள்வாய் மிழற்று மின்சொற் கடைசியர் பரந்து நீண்ட
கண்கைகான் முகம்வா யொக்குங் களையலாற் களையி லாமை
உண்கள்வார் கடைவாய் மள்ளர் களைகலா துலாவி நிற்பார்
பெண்கள்பால் வைத்த நேயம் பிழைப்பரோ சிறியோர் பெற்றால்.

(இ-ள்.) பண்கள் - பண்கள்போல, வாய்மிழற்றும் - வாயினால் வசனிக்கிற, இன்சொல்-இன்சொற்களையுடைய, கடைசியர் - உழத்தியருடைய, பரந்து நீண்ட - அகன்று, நீண்ட, கண் - நேத்திரங்களையும், கை - உள்ளங்கைகளையும், கால்-பாதங்களையும், முகம் - முகங்களையும், வாய் - வாய்களையும், ஒக்கும் - ஒக்கின்ற, களை அலால்-களைகளேயல்லாமல், களை இலாமை - புல் முதலிய பிறகளைகளில்லாமையால், உண்-குடிக்கின்ற, கள் வார் - கள்ளொழுகா நிற்கிற, கடைவாய் - கடைவாயையுடைய, மள்ளர் - உழவர்கள், களைகலாது - அவற்றைக் களையுமாற்றலிலராய், உலாவி நிற்பார் - உலாவிக்கொண்டு நிற்பார்கள், (ஏனெனின்) சிறியோர் - கீழோர், பெற்றால்-அடைந்தால், பெண்கள்பால்வைத்த - பெண்களிடத்து வைத்த, நேயம் - அன்பை, பிழைப்பரோ - தவறுவார்களோ—எ-று. (௰)

கண்-கை-கால் - முகம் - வாய் - ஒக்கும் களையென்றது,நீலோற்பலம். செந்தாமரை, செவ்வல்லி என்னு மிவைகளின் மலர்களை. பிழைப்பரோ என்னும் ஓகாரம் எதிர்மறை. பேற்றால் எனப் பாடமோதி வேறொரு பயனால் எனவும் பொருள் கூறலாம். கண் முதலியவற்றை யொத்த களையென்று சொன்னதனால், கருங்குவளை, செந்தாமரை, செவ்வல்லி என்னும் இவற்றின் மலர்களைக்கொள்க. பெண்கள்பால் வைத்த நேயம் என்றது பிறிதினியைபுநீக்கிய விசேடணம்பெற்றது.

12. புதுப்புனல் குடையு மாதர் பூவொடு நாவி பூத்த
கதுப்புறு வெறியே நாறுங் கருங்கடற் றரங்க மென்றான்
மதுப்பொதி மழலைச் செய்வாய் வாட்கடைக் கண்ணின் மைந்தர்
விதுப்புற நோக்கு மன்னர் மிகுதியை விளம்ப லாமே.

(இ-ள்.) புதுபுனல் - புதியநீரில், குடையும் - மூழ்குகின்ற, மாதர் - பெண்களுடைய, பூவொடு நாவிபூத்த - மலர்களோடு கஸ்தூரி பொருந்திய, கதுப்பு உறு - அளகபாரத்தில் மிக்கிருக்கிற, வெறியே - வாசனையே, கருகடல் தரங்கம் - கரிய கடலினலைகள், நாறும் என்றால் - கமழுமென்றால், மதுபொதி - தேனையொத்த, மழலை - மலலைச்சொல்லையும், செவ்வாய் - செவந்த வாயையும், (உடையவர்களாய்) வாள் - வாள்போன்ற, கடைக்கண்ணின் - கடைக்கண்களால், மைந்தர் - ஆடவர்,

விதுப்பு உற-ஆசைமிகும்படி, நோக்கும் - பார்க்கின்ற, அன்னார் - அந்தப்பெண்களுடைய, மிகுதியை-மேம்பாட்டை, விளம்பல் ஆமே-சொல்லுதல்கூடுமோ—எ-று.

பூவொடு என்னும் ஒடுவை, எண்ணுப்பொருளதாக்கி நாவியோடுங் கூட்டி, பூவும், நாவியும், பூத்த எனவும் பொருளுரைக்கலாம். வெறியே என்னும் ஏகாரம் தேற்றம். மிகுதி என்பதற்கு தொகுதிப் பெருக்கமெனவும் பொருள் கூறலாம். அந்த நாட்டுப் பெண்கள், நீராடும்போது அந்த நீரானது அவர்களுடைய அளகபாரத்திலுள்ள வாசனையோடுகூடிச்சென்று, கருங்கடலிற் பாய்ந்து, அதின் புலால் நாற்றத்தை நீக்கி, அந்த நீரையும் பரிமளிக்கப் பண்ணும் என்பது கருத்து.

43. வெண்டளக் கலவைச் சேறுங் குங்கும விரைமென் சாந்தும்
குண்டலக் கோல மைந்தர் குடைந்தநீர்க் கொள்ளை சாற்றில்
தண்டலைப் பரப்புஞ் சாலி வேலியுந் தழீஇய வைப்பும்
வண்டலிட் டோடு மண்ணு மதுகர மொய்க்கு மாதோ.

(இ-ள்.) வெள் தளம் கலவைசேரும்-வெள்ளிய அழுத்தமான பச்சைக்கர்ப்பூர முதலியவை கூடின சந்தனக்குழம்பையும், குங்குமம் விரை மெல் சாந்தும் - குங்குமப்பூ முதலியவை சேர்ந்த பரிமளமுள்ள மிருதுவான சந்தனக்குழம்பையும், (பூசிக்கொண்டிருக்கிற) குண்டலம்-குண்டலத்தையணிந்த, கோலம்-அழகையுடைய, மைந்தர்-ஆடவர், குடைந்த-மூழ்கின, நீர் கொள்ளைசாற்றில்-நீரின் மிகுதியைச் சொல்லுமிடத்தில், தண்டலைப்பரப்பும் - சோலைப்பரப்புகளிலும், சாலிவேலியும் - நெற்பயிர் நிலங்களிலும், தழீஇய-இவைகளைச்சார்ந்த, வைப்பும் - கரம்புநிலங்களிலும், வண்டலிட்டு ஓடும்-வண்டலிட்டுக் கொண்டோடுகின்ற, மண்ணும்-மண்ணினிடத்தும், மதுகரம்-வண்டுகள், மொய்க்கும்-மொய்த்துக்கொண்டிருக்கும்—எ-று. (௧௨)

மாது-ஓ-அசைகள். மண்ணும் என்னும் உம்மை இழிவுசிறப்பு. தழீஇய என்றதனால், வைப்பு என்பதற்குக், கரம்புநிலமென்று பொருளுரைக்கப்பட்டது.

44. சேலுண்ட வொண்கணாரிற் றிரிகின்ற செங்கா லன்னம்
மாலுண்ட நளினப்பள்ளி வளர்த்திய மழலைப்பிள்ளை
காலுண்ட சேற்றுமேதி கன்றுள்ளிக் கனைப்பச் சோர்ந்த
பாலுண்டு துயிலப்பச்சைத் தேரைதா ராட்டும் பண்ணை.

(இ-ள்.) பண்ணை-வயல்களில், சேல் உண்ட - சேல்போன்ற, ஒள்கண்ணாரின்-விளக்கமாகிய கண்களையுடைய மாதர்கள்போல், திரிகின்ற - நடக்கிற, செங்கால் அன்னம் - செம்மையாகிய கால்களையுடைய அன்னங்கள், மால் உண்ட - பெருமை பொருந்திய, நளினம்-தாமரைமலர்களாகிய, பள்ளி-சயநத்தில், வளர்த்திய - வளர்த்தின, மழலைப்பிள்ளை-இளங்குஞ்சுகள், கால் உண்ட - காலிற்பட்ட, சேறு-சேற்றையுடைய, மேதி-எருமைகள், கன்று உள்ளி-(ஊரில் விட்டுவந்த)கன்றுகளைநினைத்து, கனைப்ப-கதற, சோர்ந்த-(அன்புமிகுதியால்) ஒழுகின, பால் உண்டு துயில - பாலைக் குடித்து நித்திரைசெய்ய, பச்சைத்தேரை-பச்சைத்தவளைகள், தாராட்டும் - தாலாட்டும்—எ-று. (௧௩)

சேல் உண்ட - என்பதற்கு, சேல்மீனை யொத்த, மையுண்ட எனப் பொருளுரைத்தலுங்கூடும். அன்னம் மாதரது நடை யொன்றிற்கே உவமை. கன்று உள்ளி என்றதனால் ஊரில் விட்டு வந்த என்பது பெறப்பட்டது. தாமரைமலருக்குப் பெருமையாவது மலர்களெல்லாவற்றினுஞ் சிறந்திருத்தல், அது "பூவிற்குத்தா

மரையே'' என்பதனூற் காண்க, தார் ஆட்டும் எனப்பிரித்து, மலர்களை அசைக்கும் எனப் பொருள் கூறலுமாம்.

45, குயிலினம் வதுவை செய்யக் கொம்பிடைக் குனிக்கு மஞ்ஞை
அயில்விழி மகளி ராடு மரங்கினுக் கழகு செய்யப்
பயில்சிறை யரச வன்னம் பன்மலர்ப் பள்ளி நின்றும்
துயிலெழுத் தும்பி காலைச் செவ்வழி முரல்வ சோலை.

(இ-ள்.) சோலை-சோலைகளில் உள்ள, குயில் இனம்-குயிற் குலங்கள், கொம்பு இடை- மரக்கிளைகளில், வதுவைசெய்ய - மணஞ்செய்யவும், குனிக்கும் - ஆடுகின்ற, மஞ்ஞை-மயில்கள், அயில்விழி வேல்போன்ற கண்களையுடைய மகளிர் - நாட்டியப் பெண்கள், ஆடும்-ஆடுகின்ற, அரங்கினுக்கு-நாடகசாலையினும், அழகு செய்ய - அழகையுண்டாக்கவும், பயில் சிறை-நெருங்கின இறகுகளையுடைய, அரச அன்னம்-ராஜஹம்ஸங்கள், பல்-பலவாகிய, மலர்ப்பள்ளிநின்று-தாமரைமலர்களாகியசயநத்தினின்றும், துயில் எழ-துயில் நீங்கவும், தும்பி - வண்டுகள், காலை - காலையில், செவ்வழி-செவ்வழிப்பண்ணை, முரல்வ-பாடுவன—எ-று, (௪௫)

மலர்ப்பள்ளி நின்றும் என்னுமிடத்தில், மலர்களாவன, சோலையிலுள்ள தடாகங்களிற் பூத்தமலர்கள். மலர் என்று பொதுப்படச் சொன்னாராயினும், "அரசவன்னம்மலர்ப்பள்ளி நின்றும்துயிலெழ" என்றதனுல் தாமரைமலரென்றுரைத்தோம். காலை செவ்வழி என்பதற்கு, உதயராகம் என்றுரைத்தலுங்கூடும். உதயராகம், பூபாளம் முதலியன

46. பொருந்திய மகளி ரோடு வதுவையிற் பொருந்து வாரும்
பருந்தொடு நிழல்சென் றன்ன வியலிசைப் பயன்றுய்ப் பாரும்
மருந்தினு மினிய கேள்வி செவியுற மாந்து வாரும்
விருந்தினர் முகங்கண் டன்ன விழாவணி விரும்பு வாரும்.

(இ-ள்.) பொருந்தியமகளிரோடு - பொருத்தமான மாதர்களுடன், வதுவையில் பொருந்துவாரும்-விவாகச்சடங்கில் பொருந்தி யிருப்பவர்களும், பருந்தோடு - பருந்துடன், நிழல்சென்றன்ன-அதின் சாயையுஞ் சென்றாற்போன்ற, இயல் - இலக்கணமமைந்த, இசைப்பயன் - இராகமாகிய பயனை, துய்ப்பாரும் - அநுபவிப்பவர்களும், மருந்தினும் - அமிர்தத்தினும், இனிய - இனிதான, கேள்வி-சாத்திரசிரவணத்தை, செவி உற - காதாகிய வாயிற்பொருந்த, மாந்துவாரும் - உண்பவர்களும், விருந்தினர் - விருந்தினருடைய, முகம் கண்டு - முகங்களைப்பார்த்து, அன்ன விழா அணி-அன்னத்திருவிழாவி னலங்காரத்தை, விரும்புவாரும்-விரும்புவோர்களும்—எ-று. ()

சென்றால் அன்ன என்பது சென்றன்ன என நின்றது. இயல் இசைப்பயன் என்பதற்கு, இயலிசைகளின் பயன் என்றும் பொருள் கூறலாம். முகம் கண்டன்ன என்பதற்கு, முகத்தைப் பார்த்தாற்போன்ற எனினு மமையும்.

47. கறுப்புறு மனமுங் கண்ணிற் செவப்புறு சூட்டுங் காட்டி
உறுப்புறு படையிற் றாக்கி யுறுபகை யின்றிச் சீறி
வெறுப்பில களிப்பின் வெய்போர் மதுகைய வீர வாழ்க்கை
மறுப்பட வாவி பேணு வாரணம் பொருத்து வாரும்.

(இ-ள்.) கறுப்பு உறு - கோவம் மிகுந்த, மனமும் - மனத்தையும், கண்ணின்-கண்களைப்போல, செவப்பு உறு - செம்மை நிறம்பொருந்திய, சூட்டும் - உச்சிக்

கொண்டையையும், காட்டி-காட்டி, உறுப்பு - அவயவமாகிய காலில், உறு-பொருந்திய, படையின் - முள்ளாகிய ஆயுதத்தால், தாக்கி - ஒன்றையொன்று அடித்து, உறு - முன்பொருந்திய, பகை இன்றி - பகையில்லாமலே, சீறி - கோவித்து, வெறுப்பு இல - போர்செய்தலில் வெறுப்பில்லாதனவாகி, களிப்பின்-செருக்கினால், வெம்போர் - வெவ்விய போரில், மதுகைய - வலிமையுடையனவாகி, வீரவாழ்க்கை மறுப்பட - தமது வீரவாழ்க்கைக்குக் களங்கமுண்டாயின், ஆவிபேணா-உயிரையும் விரும்பாத, வாரணம் - சேவற்கோழிகளை, பொருத்துவாரும் போர்செய்யப் பொருத்திவிடுகிற மைந்தர்களும்—எ-று. (௧௬)

கறுப்பு வைரம் எனினும் பொருந்தும். கண்ணின் என்பதற்கு கண்களைப் பார்க்கினும் எனவும் பொருள் கூறலாம். உறுப்பறு படையென்பதற்கு, சிறு சுரிகையென்றும் அர்த்தம் சொல்லலாம். வீரவாழ்க்கை மறுப்படுதலாவது தோல்வியடைதல். ஆவி என்பதி னீற்றில் உயர்வு சிறப்பும்மை தொக்கது. வாரணம் பொருத்துவாரும் என்லமையால் மைந்தர்களும் என்று பொருள் கூறப்பட்டது. வரும்பாட்டிற்கும் இஃது ஒக்கும்,

48. எருமைநா கின்ற செங்க ணேற்றையோ டேற்றை சீற்றத்
துருமிவை யென்னத் தாக்கி யூழுற நெருக்கி யொன்றாய்
விரியிரு ளிரண்டு கூறாய் வெகுண்டன் வனைய நோக்கி
அரியினங் குஞ்சி யார்ப்ப மஞ்சுற வார்க்கின் றாரும்.

(இ-ள்.) எருமைநாகு - பெண்ணெருமைகள், ஈன்ற - பெற்ற, செங்கண் - செந்நிறமாகிய கண்களையுடைய, ஏற்றையோடு ஏற்றை - ஒரு கடாவோடு மற்றொருகடா, இவை - இவைகள், சீற்றத்து - கோவத்தையுடைய, உருமு என்ன - இடிகளென்று சொல்லும்படி, தாக்கி - முட்டி, ஊழ் உற - பகைமிகும்படி, நெருக்கி - தலைகளை நெருக்கி, ஒன்றாய் - ஒரு வடிவாகி, விரி - பரவிய, இருள் - இருளானது, இரண்டு கூறாய்-இரண்டு வடிவாகி, வெகுண்டன அனைய - கோவித்தாற்போன்றஅவைகளை, நோக்கி - பார்த்து, அரியினம் - வண்டுக்கூட்டங்கள், குஞ்சி - தமது சிகைகளில், ஆர்ப்ப-ஆரவாரிக்கும்படி, மஞ்சு உற - மேகமண்டலம் வரையில் கேட்கும்படி, ஆர்க்கின்றாரும் - முழங்குகின்ற மைந்தர்களும் எ—று. (௧௭)

எருமைநாகு, இருபெயரொட்டுப் பண்புத்தொகை. ஏற்றை என்பதில், ஐசாரியை. மஞ்சு உற என்பதற்கு, மேக முழக்கத்தைப்போல எனவும் பொருளுரைக்கலாம். அரியினம் குஞ்சியார்த்தற்குக் காரணம், தேன் பொருந்திய மலர்மாலைகளைத் தரித்திருத்தல்.

49. முள்ளரை முளரி வெள்ளி முளையிற முத்தும் பொன்னும்
தள்ளுற மணிகள் சிந்தச் சலஞ்சலம் புலம்பச் சாலில்
துள்ளிமீன் றுடிப்ப வாமை தலைபுடை சுரிப்பத் தூம்பி
னுள்வரா லொளிப்ப மள்ள ருழுபக டுரப்பு வாரும்.

(இ-ள்.) முள் அரை - முட்பொருக்குகளையுடைய, முளரி - தாமரைகளின், வெள்ளிமுளை - வெண்மையான முளைகள், இற - ஒடியவும், முத்தும் - முத்துகளும், பொன்னும் - சுவர்ணமும், தள் உற - தள்ளப்படவும், மணிகள் - இரத்தினங்கள், சிந்த - சிதறவும், சலஞ்சலம் - சலஞ்சலமென்னுஞ் சங்குகள், புலம்ப - முழங்கவும், சாலில் - படைச்சால்களில், மீன் துள்ளி துடிப்ப - மீன்கள் துள்ளித்துடிக்கவும், ஆமை - ஆமைகள், தலை - தலையையும், புடை - பக்கத்திலுள்ள நான்கு கால்களை

யும், சுரிப்ப - தமதுடம்புகளில் அடக்கிக்கொள்ளவும்; வரால் - வரால் மீன்கள், தூம்பினுள் - மதகுகளுக்குள்ளே, ஒளிப்ப - ஒளித்துக்கொள்ளவும் மள்ளர் உழு பகடு உரப்புவாரும் - உழுகடாக்களை அதட்டுகின்ற மள்ளர்களும் (உளர்)

சலஞ்சலம் - சங்குவிசேடம். "ஆமைதலை புடைசுரிப்ப" என்பதற்கு ஆமை தலையை யுள்ளே சுரித்துக்கொள்ள எனப் பொருள் கூறுவாருமுளர் அப்பொருள் "ஒருமையுளாமைபோ லைந்தடக்கலாற்றின்" எனவும், "ஆமையாருறுப்பைந்தையு மோர்மெள்ளடக்கலின்" எனவும் சான்றோர் கூறுவனவற்றாற் சிறவாமையறிக.

50. முந்துமுக் கனியி னானா முதிரையின் முழுத்த நெய்யிற்
செந்தயிர்க் கண்டங் கண்ட மிடையிடை செறிந்த சோற்றில்
தந்தமி லிருந்து தாமும் விருந்தொடுந் தமரி னோடும்
அந்தண ரமுத ருண்டி யயில்வுறு மமலைத் தெங்கும்.

(இ-ள்.) எங்கும் - அந்நாட்டி னெவ்விடமும், முந்தும் - கனிகளில் முற்படுகின்ற, முக்கனியின்-முக்கனிகளாலும், நானாமுதிரையின் - பலவகையான பருப்பினாலும், முழுத்த - அவைகளை யமிழ்த்த, (விடுகிற) நெய்யின் - நெய்யினாலும், செந்தயிர்க்கண்டம் - செந்நிறமாகிய தயிர்க்கட்டிகளாலும், கண்டம் - கண்டசர்க்கரையினாலும், இடையிடைசெறிந்த - இடையிடையே சேர்க்கப்பட்ட, சோற்றின் - அன்னத்தை, தம்தம் இல் இருந்து - தத்தம் வீடுகளி லிருந்துகொண்டு, தாமும் - தாங்களும், விருந்தொடும் - விருந்தினரோடும், தமரினோடும் - சுற்றத்தாரோடும், அந்தணர் - பிராமணர், அமுதர் உண்டி - தேவருணவாகிய அமிர்தம்போல் இனிதாக, அயில்வு கூறும் - உண்ணுகின்ற, அமலைத்து-ஓசையையுடையது.

"அந்தணர் அமுதர் உண்டி அயில்வுறும் அமலைத்து" என்பதற்கு, பிராமணர் தேவருணவாகிய அவிசு உண்பித்தற்குரிய வேள்விசெய்தற்கணுண்டாகும் ஓசையையுடையது எனவும் பொருள் கூறலாம். செந்தயிர் - செவக்கக்காய்ச்சித் தோய்த்த தயிர். "செந்தயிர்க்கண்டம் கண்டம் எடை யெடைசெறிந்த" எனவும் பாடமுண்டு. அதற்கு, செந்நிறமாகிய தயிர்க்கட்டியும் சர்க்கரைக்கட்டியும் எடைக்கெடைசேர்த்த எனப் பொருள்கூறுக.

51. முறையறிந் தவாவை நீக்கி முனிவுழி முனிந்து வெஃகும்
இறையறிந் துயிர்க்கு நல்கு மிசைகெழு வேந்தன் காக்கப்
பொறைதவிர்ந் துயிர்க்குந் தெய்வப் பூதலந் தன்னிற் பொன்னின்
நிறைபரஞ் சொரிந்து வங்க நெடுமுது காற்று நெய்தல்.

(இ-ள்.) முறை - மநுமுறையை, அறிந்து - உணர்ந்து, அவாவைநீக்கி - ஆசையைத் தவிர்த்து, முனிவுழி முனிந்து - கோவிக்கவேண்டுமிடத்தில் கோவித்து, வெஃகும் - தான் விரும்பத்தக்க, இறை - குடியிறையை, அறிந்து - இவ்வளவென்றறிந்து, உயிர்க்கு - உயிர்களுக்கு, நல்கும் - இரங்குகின்ற, இசை கெழு - கீர்த்தியொடு பொருந்திய, வேந்தன் - அரசன், காக்க-தாங்க, பொறை - பாரத்தை, தவிர்ந்து-நீங்கி, உயிர்க்கும் - இளைப்பாறுகின்ற, தெய்வம் - தெய்வத்தன்மையுள்ள, பூதலம் தன்னின்-பூமியைப்போல, வங்கம் - கப்பல்கள், பொன்னின் - பொன்னினால், நிறை - நிறைக்கப்பட்ட, பாரம்-பாரத்தை, நெய்தல் - நெய்தனிலத்தில், சொரிந்து-சொரிந்துவிட்டு, நெடுமுதுகை-நெடிய முதுகை, ஆற்றும்- ஆற்றிக்கொள்ளும்-எ-று.

உயிர் என்றது குடிகளை. தசரதனால் காக்கப்படுகிற கோசல தேயத்தில் எனவும் கூறலாம். முறையறிதல் முதலாயினவுடைய அரசனுக்கு அவற்றால் கீர்த்தி

யுண்டாதல் திண்ணமாதலால், காரணகாரிய முறைப்படி "முறையறிந்தவாவை நீக்கி" எனத் தொடங்கி "இசைகொழுவேந்தன்" என முடித்தார்.

52, எறிதரு மரியின் சும்மை யெடுத்துவா னிட்ட போர்கள்
குறிகளும் போற்றிக் கொள்வார் கொன்றநெற் குவைகள் செய்வார்
வறியவாக் குதவி மிக்க விருந்துண மனையி னுய்ப்பான்
நெறிகளும் புதையப் பண்டி நிரைத்துமண் ணெளிய வூர்வார்.

(இ-ள்.) எறிதரும் - அரியப்பட்ட, அரியின்சும்மை - நெல்லரிகளாலாகிய சுமைகளை, எடுத்து - எடுத்துக்கொண்டுபோய், வான் இட்டபோர்கள் - ஆகாயத்தை யளாவும்படியாகப் போட்ட போர்களில், குறிகளும் போற்றிக்கொள்வார் - அடையாளங்களும் வைத்துக்கொள்வார்கள், கொன்ற - (அந்தப் போர்களைச் சரித்துக் கடாக்களால்) மிதிப்பித்தெடுத்த, நெல்-நெல்லை, குவைகள் செய்வார்-அம்பாரஞ் செய்வார்கள், வறியவர்க்கு உதவி - (அந்த நெல்லை) எளியவர்க்குக் (கொடுக்கவேண்டிய கிரமப்படி) கொடுத்து, மிக்க - மிகுதியான நெல்லை, விருந்து உண்ண - (தக்க) விருந்தினரோடு (தாமு) முண்பதற்காக, மனையின் - தமது வீடுகளில், உய்ப்பான் - கொண்டுபோய்ச் சேர்த்தற்கு, பண்டிநிரைத்து - பண்டிகளில் நிரப்பி, நெறிகளும் புதைய - போகும் வழிகளும் புதையும்படியாகவும், மண் நெளிய - பூமிதேவி முதுகு நெளியும்படியாகவும், ஊர்வார் - (அந்த நெல்லேற்றிய பண்டிகளை) செலுத்துவார்கள்—எ-று. (௨௧)

"விருந்து உண" என்பதற்கு விருந்தினர் முதலாயினோர் எனப் பொருள்கூறுவாரு முளர். தாமிருந்தே விருந்தினர் முதலாயினோரை யோம்ப வேண்டுதலாலும், "தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கலுனென்றாங் - கைம்புலத்தாறோம்ப றலை" என்று தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனார் கூறுதலாலும், தருமர், மணக்குடையார், தாமத்தர் முதலான உரையாசிரியர் பதின்மருள்ளுஞ் சிறந்த பரிமேலழகரும் இத்திருக்குறளுரையில், "எல்லாவறங்களும் தானுளனாய் நின்று செய்யவேண்டுதலின் தன்னையோம்பலும் அறனாயிற்று" என்று கூறுதலாலும் அப்பொருள் சிறவாமையறிக. தக்க விருந்தினர் என்றது ஞானவொழுக்கங்களால் உயர்ந்த விருந்தினரை.

53. கதிர்படு வயலி னுள்ள கடிகமழ் பொழிலி னுள்ள
முதிர்பல மரத்தி னுள்ள முதிரைகள் புறவி னுள்ள
பதிபடு கொடியி னுள்ள படிவளர் குழியி னுள்ள
மதுவன மலரிற் கொள்ளும் வண்டென மள்ளர் கொள்வார்.

(இ-ள்.) கதிர்படு - பயிர்களுண்டாகிய, வயலின் உள்ள - கழனிகளிலுள்ள பொருள்களையும், கடிகமழ் - வாசனை பரிமளிக்கிற, பொழிலின் உள்ள - சோலைகளிலுள்ள, முதிர் - முதிர்ந்த, பல - பலவகைப்பட்ட, மரத்தின் உள்ள-மரங்களிலுள்ள பொருள்களையும், முதிரைகள் - பருப்புவகைகளையும், புறவின் உள்ள - முல்லை நிலத்திலுள்ள, பதிபடு - பதிகள் பதிக்கப்பட்ட, கொடியின் உள்ள - கொடிகளிலுள்ள பொருள்களையும், படிவளர் - பூமியில் விருத்தியடையாநிற்கிற, குழியினுள்ள - குழிகளிலுள்ள பொருள்களையும், வனம் மலரின் - அழகாகிய மலர்களினின்றும், மது கொள்ளும் - தேனைக் கிரகிக்கிற, வண்டு என - வண்டுகள்போல, மள்ளர் - உழவார்கள், கொள்வார் - கிரகிப்பார்கள்—எ-று. (௨௨)

கதிர் சினையாகுபெயர். வண்டுகள் எல்லா மலர்களினிடத்துஞ்சென்று தேனைக் கிரகித்துக்கொண்டுவந்து ஓரிடத்திற் சேர்ப்பதுபோல, மள்ளர் எல்லாவிடத்துஞ்

சென்று அவ்வவ்விடத்துப் பொருள்களைக் கிரகித்துக்கொண்டுவந்து தமது இருப்பிடத்திற் சேர்ப்பார்களென்பது கருத்து. கழனிப்பொருள் - நெல் முதலியன. மரப்பொருள்-கனி முதலியன. கொடிப்பொருள் - அவரை முதலிய காய் வகை. குழிப்பொருள் - பூசினி முதலாயின.

வேறு.

54. பருவ மங்கையர் பங்கய வாண்முகத்
துருவ வுண்கணை யொண்பெடை யாமெனக்
கருதி யன்பொடு காமுற்று வைகலும்
மருத வேலியின் வைகின வண்டரோ.

(இ-ள்.) வண்டு-ஆண் வண்டுகள், பருவம்-இளமையாகிய, மங்கையர்-மங்கைப் பருவப்பெண்களுடைய, பங்கயம்-தாமரை மலர்போன்ற, வாள்முகத்து - ஒளி பொருந்திய முகத்திலுள்ள, உருவம் - நிறத்தையுடைய, உண்-மையுண்ட, கண்ணை-கண்களை, ஒண்பெடை ஆம் என - அழகாகிய பெண் வண்டுகளாமென்று, கருதி - நினைத்து, அன்பொடு - அன்புடன், காமுற்று - ஆசைப்பட்டு, வைகலும் - நாள்தோறும், மருதவேலியின் - மருதநிலத்தில், வைகின - தங்கியிருந்தன—எ-று. (௫௩)

ஒண்பெடையென்றதனால், வண்டு என்பதற்கு ஆண் வண்டென்று பொருள் கூறப்பட்டது. கண்ணையெனற்பாலது கணையெனத் தொகுத்தல்பெற்றது. "பங்கயம்முகத்து உருவம்வாள் உண் கண்ணை" என நிறுத்தி, தாமரை மலர்போன்ற முகத்திலுள்ள, நிறத்தையுடைய, வாள்போன்ற, மையுண்ட கண்களை எனப் பொருளுரைத்தலுமாம்.

55. வேளை வென்ற முகத்தியர் வெம்முலை
ஆளை நின்று முனிந்திடு மங்கோர்பால்
பாளை தந்த மதுப்பரு கிப்பரு
வாளை நின்று மதர்க்கு மருங்கெலாம்.

(இ-ள்.) அங்கு ஓர்பால்-அவ்விடத்தொருபக்கத்தில், வேளை - (அழகிற்சிறந்த) மன்மதனையும், வென்ற -(அழகால்) வெற்றிகொண்ட, முகத்தியர்-முகத்தையுடைய வுழத்தியருடைய, வெம்முலை - (பார்ப்பவர்களுக்கு) விருப்பத்தை யுண்டாக்குகின்ற தனங்கள், ஆளை - ஆடவர்களை, நின்று முனிந்திடும் - இடைவிடாமல் கோவிக்கும், மருங்கெலாம் - பக்கங்களிலெல்லாம், பருவாளை-பெரிய வாளைமீன்கள், பாளை தந்த- தென்னம்பாளைகள் சொரிந்த, மது - கள்ளை, பருகி - உண்டு, நின்று மதர்க்கும்- மதர்த்திருக்கும்—எ-று. (௫௪)

நின்று மதர்க்கும் என்பனவற்றை முன்பின்னாகவைத்து விகுதிபிரித்துக் கூட்டிப் பொருள் கூறப்பட்டது. வேளை என்பத னீற்றில் உயர்வு சிறப்பும்மை தொக்கது. மதர்த்தல்-களிப்படைந்திருத்தல்.

56. ஈர நீர்படிந் திந்நிலத் தேசில
கார்க ளென்ன வருங்கரு மேதிகள்
ஊரி னின்றகன் றுள்ளிட வுண்முலை
தாரை கொள்ளத் தழைப்பன சாலியே.

(இ-ள்.) ஈரம் - குளிர்ச்சிபொருந்திய, நீர்-நீரில், படிந்து - விழுந்து, இந்நிலத்து- இந்த நிலவுலகத்தில், சிலகார்கள் என்ன - சிறுமேகங்கள் வருதல்போல, வரும்,

வருகின்ற, கருமேதிகள்-கருநிறமுள்ள எருமைகள், ஊரில் நின்ற-ஊரிலிருக்கின்ற, கன்று - கன்றுகளை, உள்ளி—நினைப்பதினால், உண்-அவைகளுண்ணத்தக்க, முலை-முலைகள், தாரைகொள்ள - பால்தாரை பொழிதலைப்பொருந்த, (அந்தத் தாரைகளால்) சாலி-நெற்பயிர்கள், தழைப்பன-தழையாநிற்பன—எ-று. (உ௫)

உள்ளிட என்பது ஒருசொல். உள்விட என்னும் செயவெனெச்சம் காரணப்பொருட்டு ஊரில் நின்ற என்பதற்கு தம்மோடுவராமல் ஊரில் நின்றுவிட்ட எனவும் பொருளுரைக்கலாம். சிறுமையைச் சிற என்றது தகுதி.

சமையலுக்குரிய வுபகரணங்கள்.

57. முட்டி லட்டின் முழங்குற வாக்கிய
நெட்டுலைக் கழு நீர்நெடு நீத்தந்தான்
பட்டமென் கமு கோங்கு படப்பைபோய்
நட்ட செந்நெலி னாறு வளர்க்குமே.

(இ-ள்.) முட்டு இல் - குறைவில்லாத, அட்டில் - சமையல் வீட்டில், முழங்கு உற - ஒலித்தலைப்பொருந்த, வாக்கிய - வார்க்கம்பட்ட, நெடு உலை-பெரிய வுலைகளினது, கழுநீர் - கழுநீரினது, நெடுநீத்தப் - மிகுந்த வெள்ளமானது, பட்டம் - குளங்களிலும், மெல் - மிருதுவான, கமுகு - கமுகமரங்கள், ஓங்கு - மிகுந்திருக்கிற, படப்பைபோய் - சோலைகளிலும்போய், நட்ட - நடப்பட்டிருக்கிற, செந்நெலின் நாறு - செந்நெல்லின் நாறுகளை, வளர்க்கும் - வளர்விக்கும்—எ-று. (உ௬)

அடு இல் - அட்டில் எனடகரவொற்றிரட்டி நின்றது. உலைக்கழுநீர் என்பதற்கு உலை பெய்தற்குரிய அரிசிகளையும் நீர் எனவும் பொருள்கூறலாம். முழங்கு முதனிலைத் தொழிற்பெயர், அன்னச்சாலைகளின் மிகுதி இதனால் கூறப்பட்டது.

58. சூட்டுடைத் துணைத் தூநிற வாரணம்
தாட்டுணைக் குடை யுந்தகை சான்மணி
மேட்டி மைப்பன மின்மினி யாமெனக்
கூட்டி னுய்க்குங் குரீஇக் குழாமரோ.

(இ-ள்.) சூட்டு உடை-உச்சிக்கொண்டையையுடைய, துணை-சேவலோடு கூடிய, தூநிறம் வாரணம்-பரிசுத்தமான நிறத்தையுடைய பெட்டைக்கோழிகள், தாள் துணை-இரண்டுகால்களாலும், குடையும்-சீத்தலால் வெளிப்படுகின்ற, தகை-அழகு மிகுந்த, மணி-மாணிக்கங்கள், மேடு இமைப்பன - குப்பைமேடுகளில் பிரகாசிப்பன, (அவற்றை) மின்மினி ஆம் என-மின்மினியாமென்று நினைத்து, குரீஇ குழாம்-தூக்கணங்குருவிக்கூட்டங்கள், கூட்டின்-தமது கூடுகளில், உய்க்கும் - கொண்டுபோய் வைத்துக்கொள்ளும்—எ-று. (உ௭)

உடைய எனற்பாலது உடை என அகரவீறு குறைக்கப்பட்டது. தூநிறம்-வெண்ணிறம்-மணியெனப் பொதுப்படக் கூறினாராயினும் இவ்விடத்திற்கேற்ப மாணிக்கமெனப் பொருள் கூறப்பட்டது. இதனால் செல்வப்பெருக்கம் கூறப்பட்டது.

59. தோயும் வெண்டயிர் மத்தொலி துள்ளவும்
ஆய வெள்வளை வாய்விட்ட ரற்றவும்
தேயு நுண்ணிடை சென்று வணங்கவும்
ஆய மங்கை யுரங்கை வருந்துவார்,

(இ-ள்.) தோயும்-தோய்ந்த, வெள்தயிர்-வெண்டயிர்த்தாழிகளில், மத்து ஒலி-மத்துகளின் ஓசையானது, துள்ளவும்-விட்டுவிட்டுமிக்கொலிக்கவும், ஆயவெள்வளை வெண்மையாகிய சங்கவளையல்கள், வாய்விட்டு, அரற்றவும் - மிக்கொலிக்கவும், தேயும்-மெலிந்த, நுண் இடை-நுட்பமான இடைகள், சென்றுவணங்கவும்-போய்வளையவும், ஆயமங்கையர்-இடைப்பெண்கள், அங்கைவருந்துவார்-அகங்கைகள் வருந்தக் கடைவார்கள்—எ-று. (௨அ)

சென்று வணங்குதல்-இருபுறத்துஞ் சென்று துவளுதல், இதனால் முல்லை நில வளங் கூறப்பட்டது.

60. குற்ற பாகு கொழிப்பவர் கோணெறி
கற்றி லாத கருங்க ணுளைச்சியர்
முற்றி லார முகந்துதம் முன்றிலிற்
சிற்றில் கோலிச் சிதறிய முத்தமே

(இ-ள்.) குற்ற-தறிக்கப்பட்ட, பாகு-பாக்குகளை, கொழிப்பவர் - கொழிப்பவர்களால் (கொழிக்கப்படுவன) கோள் நெறி - ஆடவர்களுடைய கருத்தை யுணர்ந்து கொள்ளும் நெறியை கற்றிலாத, கருகண்-கரியகண்களையுடைய, நுளைச்சியர்-நெய்தனிலச்சிறுமியர், முற்றில் ஆர-முச்சில் நிறைய, முகந்து-வாரி, தம்முன்றிலில்-தமது முற்றத்தில், சிறுஇல்கோலி-சிறுவீடுகள்கட்டி, சிதறிய-விளையாட்டிற் சிதறிவிட்ட முத்தமே-முத்துக்களேயாம்—எ-று. (௨௯)

கொழிக்கப்படுவன என்னுஞ் சொல் வருவிக்கப்பட்டது. இல் மூல் என்பது முன்றில் எனநின்றது. சிறு இல் என்பது சிற்றில் எனத்தன்னொற்றிரட்டித்து நின்றது. குற்றபாகுக் கொழிப்பவர் எனப் பாடமோதி, குற்றபாகுக்கு (கூடக்கலந்து கிடக்கிற பொருள்களை) ஒழிப்பவர் எனவும் பொருளுரைப்பாருமுளர். இப்பாடத்துக்கு இவ்வாறன்றி, குற்றபாகுகொள்வதற்குத் தம்மிடத்து மிகுதியாய்ச் சேர்ந்திருக்கிருக்கிற முத்துக்களைத் தொலைப்போர் எனவும் பொருள்கூறலாம் இதனால் மருதமும் நெய்தலும் அணிய என்பது கூறப்பட்டது.

61. துருவை மென்பிணை யீன்ற துளக்கிலா
வரி மருப்பின வன்றலை யேற்றைவான்
உருமிடித் தெனத் தாக்குறு மொல்லொலி
வெருவி மால்வரைச் சூன்மழை மின்னுமே.

(இ-ள்.) மெல்பிணைதுருவை-மேன்மையாகிய பெண் செம்மறியாடுகள், ஈன்ற-பெற்ற, துளக்கு இல்லா-அசைவில்லாத, வரிமருப்பின-வரிகளோடு கூடின கொம்புகளையுடையனவாகிய, வல்தலை-வலியதலைகளுள்ள, ஏற்றை-கடாக்கள், வான்-மேகத்திலுள்ள, உருமு இடித்தென-இடி யிடித்தாற்போல, தாக்குறும் - ஒன்றையொன்று முட்டுதலாலுண்டாகிற, ஒல் ஒலி-ஒல்லென்கிற வோசைக்கு, வெருவி-பயந்து, மால் பெரிய, வரை-மலைகளின்மேல் படிந்திருக்கிற,சூல்-கருப்பங்கொண்ட,மழை-மேகங்கள், மின்னும்-வெருவா நிற்கும்—எ-று. (௩௰)

அயர்ந்திருக்கையில் பேரொலி செவியில் பட்டவர் வாய்திறத்தல் இயல்பாதலால் மேகங்கள அச்சத்தினால் வாய்திறந்தன. வாய்திறத்தலால் மின்னலுண்டாதலை "கருங்கொண்மூவாய்திறந்த பின்னுப்போல்" எனப் பிறர் கூறலாலுமுணர்க. துளக்கு முதனிலை திரிந்ததொழிற்பெயர். இல்லாத என்பது இல்லா எனப்

பெயரெச்சத் தகரவீறுகுறைந்து நின்றது. எற்றை என்பதில் ஐ சாரியை. இடித்தென - இடித்தால் எனப்பிரிக்க. தாக்கு முதனிலைத் தொழிற்பெயர். ஒல்-ஓசைக் குறிப்பு. ஒலி வெருவி என்பதற்கு, ஒலியால் வெருவியெனவும், ஒலியை வெருவியெனவும் விரிக்கலாம். நீருண்டமேகம் சூல் முதிருமளவும் மலைமேற்படிந்திருந்து, முதிர்ந்தபின் வானிலேறி மழைபெய்த லியல்பாதலால் மால்வரைச்சூன் மழை என்றார்.

62. தினைச் சிலம்புவ தீஞ்சொ லிளங்கிளி
நனைச் சிலம்புவ நாகிள வண்டுபூம்
புனைச் சிலம்புவ புள்ளினம் வள்ளியோர்
மனைச் சிலம்புவ மங்கல வள்ளையே.

(இ-ள்.) தினை - தினைப்புனங்களில், தீ - மதுரமாகிய, சொல் - சொற்களையுடைய, இளங்கிளி - இளங்கிளிகள், சிலம்புவ - ஒலிப்பன, நனை - பூவரும்புகளில், நாகு இளவண்டு - மிக்க இளமையாகிய வண்டுகள், சிலம்புவ - ஒலிப்பன, புனை - நீரில், புள் இனம் - பறவைக்கூட்டங்கள், சிலம்புவ - ஒலிப்பன, வள்ளியோர்மனை - வள்ளன்மையை யுடையவர்களுடைய வீடுகளில், மங்கலம்-மங்கலமான, வள்ளை - உலக்கைப்பாட்டுகள், சிலம்புவ - ஒலிப்பன—எ-று. (௬௧)

நாகு இளமை - ஒரு பொருட்பன்மொழி. வள்ளை - மகளிர் பரிமளப்பொடி முதலியவற்றை யிடிக்கும்போது தந்தலைவன் வளங்கூறிப்பாடும்பாட்டு. புனற்சிலம்புவ எனப் பாட மோதுவாருமுளர். எதுகையிலிருத்தலாய் புனையென்பதே தொன்று தொட்டு வழங்குவதாய்த் தோற்றுகிறது.

63. கன்றுடைப் பிடி நீக்கிக் களிற்றினம்
வன்றொடர்ப் படுக் கும்வன வாரிசூழ்
குன்றுடைக் குல மள்ளர் குழுக்குரல்
இன்றுணைக் களி யன்ன மிரிக்குமே.

(இ-ள்.) கன்று உடை - கன்றுகளையுடைய, பிடி - பெண் யானைகளை, நீக்கி - நீக்கிவிட்டு, களிறு இனம் - ஆண் யானைக்கூட்டங்களை, வல்தொடர் - வன்மையான சங்கிலிகளில், படுக்கும் - அகப்படுத்துகின்ற, வனம் - காடுகளிலோடுகின்ற, வாரி - வெள்ளமானது, சூழ் - சூழ்ந்த, குன்று உடை - மலைகளைத் தமதாட்சியாகவுடைய, குலம் - சிறந்த, மள்ளர் - குறிஞ்சி நிலமாக்களது, குழு - கூட்டத்திலுண்டாகிற, குரல் - ஓசையானது, இன் - இனிய, துணை - பெட்டைகளுடன்கூடி, களி - களித்துக்கொண்டிருக்கின்ற, அன்னம் - ஆண் அன்னங்களை, இரிக்கும் - பிரித்துவிடும் எ-று.

துணையாயிருப்பதனைத் துணையென்றார். "கன்றுடைப்பிடிநீக்கி" என்பதற்கேற்ப, குலமள்ளர் என்றதற்குச் சிறந்த மள்ளர் எனப் பொருளுரைக்கினும் பொருந்தும்.

64. வள்ளி கொள்பவர் கொள்வன மாமணி
துள்ளி கொள்வன தூங்கிய மாங்கனி
புள்ளி கொள்வன பொன்விரி புன்னைகள்
பள்ளி கொள்வன பங்கயத் தன்னமே.

(இ-ள்.) வள்ளி - கிழங்குகளை, கொள்பவர் - தோண்டிக் கொள்பவர்களால், மாமணி - பெருமைபொருந்திய மாணிக்கங்கள். கொள்வன - கொள்ளப்படுவன, தூங்கிய - பாரத்தால் தொங்குகின்ற, மாங்கனி - மாம்பழங்கள், துள்ளி - ரசத்துளிகளை, கொள்வன - கொண்டிருப்பன, பொன்விரி - பொன்போலப் பூப்பராகம் விரிந்த, புன்னைகள் - புன்னைமலர்கள், புள்ளி - புள்ளிகளை, கொள்வன - கொண்டிருப்பன, அன்னம் - அன்னப்பறவைகள், பங்கயத்து - தாமரைமலர்களில், பள்ளி கொள்வன - சயனித்துக்கொண்டிருப்பன—எ-று. (௬௩)

வள்ளி - சினையாகுபெயர். அன்றிங்காரியவாகு பெயரென்றாலும் பொருந்தும் புன்னை - பங்கயம் - என்பன முதலாகுபெயர்கள்.

65. கொன்றைவேய்ங்குழற் கோவலர் முன்றிலிற்
கன் றுறக்குங் குரவை கடைசியர்
புன்றலைப் புனங் காப்புடை போதரச்
சென் றிசைக்கு நுளைச்சியர் செவ்வழி

(இ-ள்.) கடைசியர் - உழத்தியர் பாடுகின்ற, குரவை - குரவைப்பாட்டுகள், கொன்றை-கொன்றைக்குழல்களையும், வேய்ங்குழல் - வேய்ங்குழல்களையுமுடைய, கோவலர் - இடையர்களுடைய, முன்றிலில் - முற்றத்திலிருக்கிற, கன்று - பசுவின் கன்றுகளை, உறக்கும் - உறங்கப்பண்ணும், நுளைச்சியர் - நெய்தனிலப்பெண்கள் பாடுகின்ற, செவ்வழி - செவ்வழியென்னும் பண்ணானது, புல்தலை-சிறிய இடத்தை யுடைய, புனம் காப்பு - தினைப்புனக்காவல், உடைபோதர - நீங்கிப்போக, சென்று இசைக்கும் - போயொலிக்கும்—எ-று. (௬௪)

புல்தலை என்பதற்கு, சிறு கதிர்களையுடைய வெனினும் அமையும். புனம்-காப்புடை - போதர - எனப் பிரித்து, தினைப்புனத்தில் காக்குந் தொழில்புக எனவுமுரைக்கலாம். புடை ஏழனுருபு. செவ்வழிப்பண்காலையில் பாடுவது.

66. சேம்புகால் பொரச் செங்கழு நீர்க்குளத்
தூம்பு காலச் சுரிவளை மேய்வன
காம்புகால் பொரக் கண்ணகன் மால்வரைப்
பாம்பு நான்றெனப் பாய்பசுந் தேறலே.

(இ-ள்.) காம்பு - மூங்கில்கள், கால்பொர - காற்றினால் மோதப்படுதலால், கண் அகல் - இடமகன்ற, மால்வரை - பெரிய மலைகளிலிருக்கும், (தேன்கூடுகள் கிழிய அவற்றிலிருந்து) பாம்புநான்றென - பாம்பு தொங்கினாற்போல, பாய் - ஒழுகாநின்ற, பசுந்தேறலே - பசுந்தேனொழுக்கினையே, செங்கழுநீர்-செங்கழுநீர் மலர்களுள்ள, குளம் - குளங்களின், தூம்பு - மதகுகள், கால-கக்குவதனால், (அத்தேனை) சுரிவளை - சுரிமுகத்தையுடைய சங்குகள், சேம்பு - சேப்பமடல்கள், கால் - காற்றினால், பொர-தம்மேல் மோதும்படி, மேய்வன-மேயாநிற்பன—எ-று. (௬௫)

நான்றென - நான்றாலென. பசுந்தேறலே யென்றமையால் மற்றோருணவை யுண்ணா என்றவாறாயிற்று. தேறலே என்னும் ஏகாரம் பிரிநிலை. இவ்விடத்துக் கேற்ப, பாய் என்பதற்கு ஒழுகாநின்ற எனப் பொருள் கூறப்பட்டது.

67. பெருந் தடங்கட் பிறைநுத லார்க்கெலாம்
பொருந்து செல்வமுங் கல்வியும் பூத்தலால்
வருந்தி வந்தவர்க் கீதலும் வைகலும்
விருந்து மன்றி விளைவன யாவையே.

(இ-ள்.) பெருந்தடம்கண் - மிகப்பெரியகண்களோடு, பிறைநுதலார்க்கு எல்லாம் - பிறைபோன்ற நெற்றியையுமுடைய மாதர்களுக்கெல்லாம், பொருந்து - நிலைத்த, செல்வமும் - ஐசுவரியமும், கல்வியும் - கல்வியறிவும், பூத்தலால் - உண்டாயிருத்தலால், வருந்திவந்தவர்க்கு - வறுமையால் வருத்தமடைந்து தம்மைக்குறித்து வந்தவர்களுக்கு, ஈதலும் - வேண்டியவற்றைக் கொடுத்தலும், வைகலும் - நாள்தோறும், விருந்தும் - விருந்தோம்பலும், அன்றி - அல்லாமல், விளைவன - உண்டாகுந் தொழில்களாவன, யாவை - எவை எ - று. (சசு)

எவை என்னும் வினா, இன்மை குறித்துநின்றது. பெருந்தடம் - ஒரு பொருட் பன்மொழி. இவ்வாறு கொள்ளாமல், பெருமை, நீட்சிக்கும், தடம், அகற்சிக்குங் கொள்ளினும் பொருந்தும். "ஒரோ குடங்கைப்பெரியன கெண்டைக்குலம்" என்று பெரியாரும் திருவாய்மலர்ந்தருளினர். விருந்து - புதுமை. அஃது இவ்விடத்தில் ஆகுபெயராய்ப் புதியார்மேனின்றது. அவர் இருவகையர், முன்பழக்கமுள்ளவர்களும் இல்லாதவர்களுமென.

68\. பிறை முகத்தலைப் பெட்பினிரும்பு போழ்
குறை கறித்திரள் குப்பை பருப்பொடு
நிறைவெண் முத்தி னிறத்தரி சிக்குவை
உறைவ கொட்பின வூட்டிடந் தோறெலாம்.

(இ-ள்.) பிறைமுகம்தலை - பிறைமுகம்போன்ற தலையினையுடைய, பெட்பின் இரும்பு - பெரிய அரிவாள்மணையினால், போழ்-பிளந்து, குறை - துண்டித்த, கறித்திரள் - கறித்தொகைகளும், குப்பைபருப்போடு - பருப்புக்குவியல்களோடு, நிறை - நிரம்பிய, வெண்முத்தின் நிறத்து-வெண்மையாகிய முத்தின் நிறத்தையுடையனவாகிய, அரிசிக்குவை - அரிசிக் குவியல்களும், கொட்பின ஊட்டிடந்தோறு எல்லாம் உறைவ - சூழ்ந்திருப்பனவாகிய அன்னசத்திரங்களெல்லாவற்றிலும் கொட்டப்பட்டுக் கிடப்பன—எ - று. (சுஎ)

பிறைமுகத்தலை - தேங்காய்துருவல் முதலானவை. கறித்திரள் குப்பை என்றமைக்கேற்ப, பெட்பின் இரும்பென்றதற்கு பெரிய அரிவாள்மணையென்று பொருளுரைக்கப்பட்டது. இரும்பு என்றது பிறைமுகத்தலையென்னும் விசேடணத்தால் அரிவாள்மனையை யுணர்த்தி நின்றது.

ஊட்டு இடம் - உண்பிக்குமிடம். "வரிப்புனைபந்து என்பதில்" வரியென்னும் முதனிலை வினையெச்சப் பொருடந்ததுபோல, போழ் என்னும் முதனிலை வினையெச்சப்பொருளது.

69\. கலஞ் சுரக்கு நிதியங் கணக்கிலா
நிலஞ் சுரக்கு நிறைவள நன்மணி
பிலஞ் சுரக்கும் பெறுதற் கரியதங்
குலஞ் சுரக்கு மொழுக்கங் குடிக்கெலாம்.

(இ-இ.) குடிக்கு எல்லாம்-அந்த நாட்டிலுள்ள குடிகளுக்கெல்லாம், கலம்-மரக்கலங்கள், நிதியம் - திரவியங்களை, கணக்கு இலா - கணக்கற்றவைகளாக, சுரக்கும் - பலதேயங்களினின்றும் கொண்டுவந்து கொடுக்கும், நிலம் - பூமியானது, நிறை - நிறைந்த, வளம் -(விளையுள்முதலிய) வளங்களை, சுரக்கும் - (எப்போதும்) கொடுக்கும், பிலம் - கனிகள், நல்மணி - நல்லரத்தினங்களை, சுரக்கும் -(தளராது) கொடுக்கும், பெறிதற்கு அரிய - பெருதற்கருமையாகிய, தம்குலம் - தமது குடிப்பிறப்பு, ஒழுக்கம் - நல்லொழுக்கத்தை; சுரக்கும்-(இடைவிடாது) கொடுக்கும் ()

கனி - ரத்தினங்கள் முதலானவை பிறக்குமிடம். இது குழிகளென்றுஞ் சொல்லப்படும். நிதியம் என்பதில் அம்சாரியை. ஒழுக்கமாவது, அந்தணர் முதலிய வருணத்தார், தத்தமக்கு விதிக்கப்பட்ட பிரமசரிய முதலிய நிலைகளினின்று, அவ்வவற்றிற்கோதிய அறங்களின் வழுவா தொழுகுதல்.

70. கூற்ற மில்லையோர் குற்ற மிலாமையால்
சீற்ற மில்லைதஞ் சிந்தையிற் செய்கையால்
ஆற்ற னல்லற மல்ல திலாமையால்
ஏற்ற மல்ல திழிதக வில்லையே.

(இ-ள்.) ஓர்குற்றம் இல்லாமையால் -(அந்நாட்டுச் சீவர்களிடத்தில்) சிறிது குற்றமும் இல்லா திருத்தலால், கூற்றம் இல்லை-யமபயம் இல்லை, தம் சிந்தையிற் செய்கையால் - தமது மனச்செய்கையாகிய நல்லெண்ணத்தினால், சீற்றம் இல்லை-கோபம் இல்லை, நல் அறம் அல்லது - சிறந்த அறத்தைச் செய்தலன்றி, ஆற்றல் இல்லாமையால் - வேறொன்றைச் செய்தல் இல்லாமையால், ஏற்றம் அல்லது - மேன்மையேயன்றி, இழிதகவு இல்லை - தாழ்வு இல்லை—எ-று. (௬௯)

குற்றம் என்றது காமாதிகளை. அவையில்லாதவிடத்தில் யமனாணை பயன்படாதென்பார், "ஓர் குற்றம் இலாமையால் கூற்றமில்லை" என்றும், முக்குணத்தினுட் சிறந்த சத்துவத்தின் காரியமாகிய நல்லெண்ணந் தலையெடுத்தபோது தமசின் காரியமாகிய கோபம் பயன்படாதென்பார், "தம்சிந்தையிற் செய்கையால் சீற்றமில்லை" என்றும், புருஷார்த்த சதுஷ்டயத்துள். தலைமைபற்றி முன்னிற்றற் சிறப்புடைய அறமுள்வழி பாபகாரியமாகிய தாழ்வுண்டாகாதென்பார் "ஆற்றனல்லறமல்லதிலாமையால், ஏற்றமல்ல திழிதகவில்லை" என்றும் கூறினார். கூற்றமின்மை, சீற்றமின்மை, நல்லறமல்ல தின்மை, என்பவற்றால் அந்நாட்டார்க்கு நற்கதிப்பேற்றினுண்மை கூறப்பட்டது.

71. நெறி கடந்து பரந்தன நீத்தமே
குறி யழிந்தன குங்குமத் தோள்களே
சிறிய மங்கையர் தேயு மருங்குலே
வெறிய வும்மவர் மென்மலர்க் கூந்தலே.

(இ-ள்.) நெறிகடந்து - நெறியைக்கடந்து, பரந்தன - பரந்துசெல்வன, நீத்தமே - வெள்ளங்களே, குறி அழிந்தன-குறியழிந்திருப்பன, குங்குமத்தோள்களே - (மாதர்களுடைய குங்குமத்தொய்யிற் குழம்பில்பட்ட புயங்களே, சிறிய - சிறியவைகளாயிருப்பன, மங்கையர் - மாதர்களுடைய, தேயும்-மெலிந்த, மருங்குலே - இடைகளே, வெறியவும் - வெறியுள்ளவைகளும், அவர்-அவர்களுடைய, மென்மலர்-மெல்லிய மலர்மாலையை யணிந்த, கூந்தலே - கூந்தல்களே—எ-று. (௭௦)

ஏகாரம் நான்கும் தேற்றம். வெறிவும் என்னும் உம்மை இறந்ததுதழீஇய எச்சவும்மை. நெறிகடந்து பரத்தல் முதலான நீத்தமுதலியவற்றின் தொழில்களே என்றமையால், அந்நாட்டிலுள்ளார் நெறிகடவாரென்றும், பெருட்குறி யழியாவென்றும், சிறியவரில்லையென்றும், பயனற்றவரில்லையென்றும் தெரியப்படுகின்றமை காண்க. வெறி என்பது கூந்தலுக்கு வாசனையும், மக்கட்கு உறுதிப் பெருமை முதலியவற்றாலுண்டாகும் வெறியுமாகப் பொருள்கொள்க.

72. அகிலிடும் புகை யட்டிலிடும் புகை
நகலி ஞலை நறும்புகை நான்மறை

புகலும் வேள்வியிற் பூம்புகை யோடளாய்
முகிலின் விம்மி முழங்கின வெங்கணும்.

(இ-ள்.) அகில் இடும்புகை - அகிற்கட்டைகளி லுண்டாகும் புகையும், அட்டில் இடும்புகை-சமையல் வீடுகளிலுண்டாகும் புகையும், நகலின் - நன்கு விளங்குத லுடைய, ஆலைநறும்புகை - கருப்பஞ்சாறு காய்ச்சும் நல்ல புகையும், நான்மறை புக லும் - நான்கு வேதங்களைச் சொல்லுகிற, வேள்வியில் - யாகங்களி லுண்டாகிற. பூபுகையோடு - பொலிவாகிய புகையுடனே, அளாய் - கலந்து, முகிலின் - மேகம் போல, விம்மி - அதிகப்பட்டு, எங்கணும் - எவ்விடத்தும், முழங்கின - பலர் கண் ணுக்கும் தோன்றுவன—எ-று. (சக)

முழங்கின என்பது, யாவர் கண்ணுக்குந் தோன்றுவன என்றபடி "புண்கணீர் பூசறரும்" என்பதும் இது. முகிலின் என்பதற்கு மேகங்களினும் எனவும் பொருள் கூறலாம். நான்மறை புகலும் வேள்வியிற் புகை புண்யதூமமாதலால், பூம்புகை யென்றார். பூம்புகை என்பதற்கு, அழகாகிய புகையெனினும் அமையும். நறும் புகை, நன்மணமுள்ள புகையென்றலுமொன்று.

வே று.

73. இயல் புடைபெயர்வன மயின்மணியிழையின்
வெயில்பிடை கெயர்வன முலையவர் குழல்போற்
புயல்புடை பெயர்வன பொழிலவர் விழிபோற்
கயல்புடை பெயர்வன கடிகமழ் கழனி.

(இ-ள்.) முலையவர்-அழகிய தனங்களையுடைய பருவமங்கையரது, இயல் - சாய லைப்போல, மயில்-மயில்கள், பொழில்புடை - சோலையினிடத்து, பெயர்வன - சஞ் சரிப்பன, மணியிழையின் - அவர்களணிந்திருக்கும் ரத்நாபரணங்களின் ஒளிபோல், வெயில் - வெயிலானது, புடைபெயர்வன - அப்பொழிலினிடத்து விளங்குவன, குழல்போல் - அவர்களுடைய கூந்தலைப்போல், புயல்-மேகங்கள், புடை - அச்சோ லையினிடத்து, பெயர்வன-தவழ்வன, அவர்-அவர்களுடைய, விழிபோல்-கண்களைப் போல, கடிகமழ்-வாசனை பரிமளிக்கின்ற, கழனிப்புடை-வயல்களினிடத்து, கயல்- சேல்மீன்கள், பெயர்வன - சஞ்சரிப்பன—எ-று. (சஉ)

மகளிரது சாயலைப்போல மயில்கள் சஞ்சரிப்பன, அவர்களுடைய ஆபரண காந்திபோல வெயில் விளங்குவன, அவர்களுடைய கூந்தல்போல மேகங்கள் தவழ் வன, அவர்களுடைய கண்கள்போலச் சேல்மீன்கள் சஞ்சரிப்பன என்பது கருத்து.

74. இடையிற மகளிர்க ளெறிபுனன் மறுகக்
குடைபவர் துவரித ழலர்வன குமுதம்
மடைபெய ரனமென மடநடை யளகக்
கடைசியர் முகமென மலர்வன கமலம்.

(இ-ள்.) இடை இற-இடையானது ஒடியவும், எறி - அலைவீசுகிற, புனல் - நீரா னது, மறுக - கலங்கவும், குடைபவர் - மூழ்குவோராகிய, மகளிர்கள் - மாதர்களு டைய, துவர் - பவளம்போன்ற, இதழ் - இதழையுடைய வாய்கள்போல், குமுதம் - செவ்வல்லிமலர்கள், அலர்வன - மலர்கின்றன, மடைபெயர் - மடைகளில் சஞ்சரிக் கிற, அன்னம் என - அன்னங்கள்போல, மடநடை - மடப்ப நடையையும், அளகம்-

அளகத்தையுமுடைய, கடைசியர் - உழத்தியரது. முகம் என - முகம்போல, கமலம் - செந்தாமரைமலர்கள், மலர்வன - மலர்வன—எ-று. (சங)

இதழ் சினையாகுபெயர். மடநடை-மென்னடை. துவர் என்பதற்கு செந்நிறமெனப் பொருளுரைத்தலுமாம்.

75. விதியினை நகுவன வயில்விழி பிடியின்
கதியினை நகுவன வவர்நடை கமலப்
பொதியினை நகுவன புணர்முலை கலைவாழ்
மதியினை நகுவன வனிதையர் வதனம்.

(இ-ள்.) வனிதையர் - மாதர்களுடைய, அயில்-வேல்போன்ற, விழி - கண்கள், விதியினை - முனிவரது நியமத்தை, நகுவன-பழிப்பன, அவர் நடை - அவர் நடைகள், பிடியின் - பெண்யானைகளின், கதியினை-நடையை, நகுவன-பழிப்பன, புணர் முலை - அவர்களுடைய நெருங்கிய முலைகள், கமலம் - தாமரையின், பொதியினை - பேரரும்புகளை நகுவன - பழிப்பன, வதனம் - அவர்களுடைய முகங்கள், கலை வாழ்-கலைகள் நிறைந்த, மதியினை-சந்திரனை, நகுவன-பழிப்பன—எ-று. (சச)

விதியினை நகுவன வயில்விழி என்பதற்கு, பிரமன் நியமித்த ஆயுள் நியமத்தைத் தடுத்து இடையே கொல்ல வல்லனவாதலால், விதியினை நகுவன வயில்விழி என்றார் எனினும், ஆயுள் நியமமேற்படுத்தின பிரமனையே நகுவன வென்பார் இங்ஙனங் கூறினரெனினும், சாத்திரங்களால் மக்களுக்கு விதிக்கப்பட்ட விதியை நகுவன வெனினும், பொருந்தும். மகளிர் கண்கள் விதியைத் தடுக்கவல்லனவாதலால் "விதியினை நகுவன அயில்விழி" எனவும், நடை பெண்யானையின் மென்னடையினுஞ் சிறந்ததாதலால், "அவர் நடைபிடியின் கதியினைநகுவன" எனவும், தனங்கள் எப்பொழுதும் மலர்தல் குவிதல் முதலிய குணங்கள் தம்மிடத்தில்லாமலொருதன்மையவாய் விளங்குதலால் "கமலப்பொதியினை நகுவன புணர்முலை" எனவும், முகங்கள் கலைகள் நிறைந்திருப்பினும் களங்கமுள்ள சந்திரன்போலாது களங்கமற்று விளங்குதலால், "கலைவாழ்மதியினை நகுவனவனிதையர் வதனம்" எனவுங் கூறினர். கலைவாழ் என்பதற்கு, மான் வாழ்கின்ற எனவும் பொருள் கூறலாம், இது, "அம்புதியின்வாழ்மான்" என்பதனாலும், முகம் களங்கமற்றொளிர்தல், "அறுவாய்நிறைந்த வவிர்மதிக்குப்போல - மறுவுண்டோ மாதர்முகத்து" என்பதனாலு முணர்க: கலை வாழ் மதியினை நகுவன வனிதையர் வதனம், என்பதற்குச் சாத்திர ஞானங்கள் நிறைந்த அறிவைமுகங்கள் கண்டு நகைப்பன எனக் கூறலுமொன்று.

76. பகலினொ டிகலுவ படர்மணி மடவார்
நகிலினொ டிகலுவ நளிவள ரிளநீர்
துகிலினொ டிகலுவ சுதைபுரை நுரைகார்
முகிலினொ டிகலுவ கடிமண முரசம்.

(இ-ள்.) படர்மணி - எவ்விடத்திலும் பரவிக்கிடக்கிற மணியொளிகள், பகலினொடு - சூரியகாந்தியோடு, இகலுவ-பகைப்பன, நளிவளர் - குளிர்ச்சியோடு வளர்கின்ற, இளநீர் - இளநீர்கள், மடவார் நகிலினொடு - மாதருடைய தனங்களோடு, இகலுவ - பகைப்பன, சுதைபுரை - வெண்ணிறத்தால் அமிர்தத்தையொத்த, நுரை-நுரைகள், துகிலினொடு - அவர்களுடைய வஸ்திரங்களோடு, இகலுவ - பகைப்பன, கடி-புதுமையாகிய, மணமுரசம்-கலியாண பேரிகைகள், கார்முகிலினொடு - கருமையாகிய மேகங்களோடு, இகலுவ-பகைப்பன—எ-று. (சரு)

மணி - பகல் - இரண்டும் பொருளாகுபெயர்கள். நகிலம் என்பது நகில் என அம்முச்சாரியை குறைந்துநின்றது. சுதை புரை நுரை என்பதற்குப் பாலையொத்த நுரையென்றும் பொருள் சொல்லலாம். முழக்கத்தைச்செய்வது அதுவாகலால் கார்முகில் என்றார். கார்முகில்-கார்காலத்து முகில் என்றாலும் பொருந்தும். இக லுவ என்றது, சொல்லப்பட்ட இரண்டிரண்டு பொருள்களுள் ஒன்றினுமென்று மேம்பட்டுப் பிரகாசித்தல்.

77. காரொடு நிகர்வன கடிபொழில் கழனிப்
போரொடு நிகர்வன புணர்முலை யணைசூழ்
நீரொடு நிகர்வன நிறைகட னிதிசால்
ஊரொடு நிகர்வன விமையவ ருலகம்.

(இ-ள்.) கடிபொழில் - மணமுள்ள சோலைகள், காரோடு நிகர்வன - மேகங்களை ஒத்திருபன, புணர்முலை - (மகளிருடைய) நெருங்கியதனங்கள், கழனி - வயல்களிலுள்ள, போரொடு - நெற்போர்களை, நிகர்வன - ஒத்திருப்பன, நிறை கடல் - நிறைந்த கடல்கள், அணைசூழ் - கரைகளால் சூழப்பட்ட, நீரோடுநிகர்வன- நீர்நிலைகளை ஒத்திருப்பன, இமையவர் உலகம் - தேவர்களுடைய லோகங்கள், நிதிசால் - திரவியம் மிகுந்த, ஊரொடுநிகர்வன - (அந்தநாட்டிலுள்ள) ஊர்களை யொத்திருப்பன—எ-று. (சகூ)

போர் - மெய், உரு இவைபற்றி உவமையாயின.

78. நென்மலை யல்லன நிரைவரு தரளம்
சொன்மலை யல்லன தொடுகட லமிர்தம்
நன்மலை யல்லன நதிதரு நிதியம்
பொன்மலை யல்லன மணிபடு புளினம்.

(இ-ள்.) நிறைவரு - வரிசையாகிய, தரளம் அல்லன - முத்துக்குவியல்கள் அல்லன, நெல்மலை - நெற்போறகளேயாம், தொடு - தோண்டப்பட்ட, கடல் - பாற்கடலிலுண்டாகிய, அமிர்தம் அல்லன - அமுதங்களல்லன, சொல்மலை -(உழத்தியர்களுடைய) சொல் மிகுதியேயாம். நல்மலை அல்லன - நல்லமலைகளல்ல, நதி தரு - நதிகளால் தரப்பட்ட, நிதியம் - திரவியமலைகளேயாம், பொன்மலை அல்லன - பொற்குவைகள் அல்ல, மணிபடு - மணிகள்பொருந்திய, புளினம் - மணற் குன்றுகளேயாம்—எ-று. (சஎ)

இதற்கு இவ்வாறன்றி, நெல்மலை அல்லன - நெற்போர்களில்லாத இடங்களில், நிறைவருதரளம் - வரிசையாகிய முத்துக்குவியல்களிருக்கின்றன, சொல் மலை அல்லன - சொல்லப்பட்ட அந்த முத்துக்குவியல்களில்லாக இடங்களில், தொடுகடல் அமிர்தம் - தோண்டப்பட்ட கடலிலுண்டாகிய உப்புக்குவியல்களிருக்கின்றன, நல்மலை அல்லன - நல்ல அந்த உப்புக்குவியல்களில்லாத இடங்களில், நதிதருநிதியம் - நதிகளால் தரப்பட்ட நிதிக்குவியல்களிருக்கின்றன, பொன் மலை அல்லன - அந்தப் பொற்குவியல்களில்லாத இடங்களில், மணிபடு புளினம்- மணிகள்பொருந்திய மணற்குன்றுகளிருக்கின்றன, என்றும் பொருள்கூறலாம். மேலும், நெற்போர்களல்ல, முத்துக்குவியல்களாமெனவும். மாதர்சொல் மிகுதியல்ல, அமுதமாமெனவும். நல்ல மலைகளல்ல, நதிகளாலே தரப்பட்ட நிதியமாமெனவும். மணற்குன்றுகளல்ல, பொன்மலைகளாமெனவும் ஒருபொருள் அமைக்கலாம். நிதியம் என்பதில் அம்சாரியை.

79. பந்தினை யிளையவர் பயிலிட மயிலூர்
கந்தனை யனையவர் கலைதெரி கழகம்
சந்தன வனமல சண்பக வனமாம்
நந்தன வனமல நறைவிரி புறவம்.

(இ-ள்.) இளையவர் - மங்கையர்கள், பந்தினைபயில் இடம் - பந்துவிளையாடு மிடங்கள், சந்தனவனம் அல்ல - சந்தனக்சோலைகளல்ல, சண்பகவனம் ஆம் - சண்பகச்சோலைகளாம், மயில் ஊர் - மயில்வாகனத்தை நடத்துகிற, கந்தனை - சுப்பிரமணியனை, அனையவர் - ஒத்த இளைஞர்கள், கலை-வேதமுதலாகிய கலைகளை, தெரி- ஆராய்கின்ற, கழகம் - கல்விச்சாலைகள், நந்தனவனம் அல்ல - நந்தனவனங்களல்ல, நறவிரி - தேன்பரந்த, புறவம் - முல்லைவனமாம—எ-று. (சஅ)

நறைவிரி என்பதற்கு - தேனொடு மலர்கின்ற என்றும், வாசனைபரவிய என்றும் பொருளுரைத்தலும் கூடும். மங்கையர்கள் பந்தடிக்கு மிடங்கள் சந்தன வனங்களேயாயினும், அவர்களுடையமேனி நிறத்தினாலும், மூச்சின் பரிமளத்தினாலும், பந்தடித்தலால் வண்டுகள் மொய்க்காமையினாலும் சண்பகவதனம் என்றும், பிரமசரிய வொழுக்கத்தராதலால் இளைஞர்கள் கலைதெரி கழகங்கள் நந்தனவனங்களேயாயினும், அவர்கள் கலைபயிலும்போது பற்கள் முல்லையரும்பு போலப் பிரகாசித்தலாலும், வேதமோதும் இசை வண்டிசைபோலிருத்தலாலும், புறவறம் என்றும், கூறினார். கலைதெரிபவர்கள் பிரமசாரிகளாதலால் அட்டபோகத்தொன்றாகிய் தாம்பூலம் தரிக்கமாட்டார்கள், ஆகையால், அவற்கள் பற்கள் வெண்மையால் முல்லையரும்பையொத் திருக்குமென்றதாயிற்று. கலைதெரிகழகம் நந்தனவனம் அல்ல, நறைவிரிபுறவம் என்பதற்கு தநுர்வேதம் பயிலுமிடம் நந்தனவனம் அல்ல நறைவிரி புறவம் (ஏனென்றால்) ஆயுதம் பயிற்று மிடமாதலால் பயந்து அவ்விடத்தில் ஒருவரும் போகமாட்டார்கள். அப்போது அது காட்டுக்கு நிகராம் என்பது கருத்து. இளையவர் பந்தினைப்பயிலிடம் சந்தன்வனமேயல்ல சண்பகவனமுமாம் எனவும், கந்தனையனையவர் கலைதெரி கழகம் நந்தனவனமேயல்ல நறைவிரிபுறவமுமாம் எனவும் ஒருபொருள் சொல்லலாம்.

80. கோகில நவில்வன விளையவர் குதலைப்
பாகியல் கிளவிக ளவர்பயி னடமே
கேகய நவில்வன கிளரிள வளையின்
நாகுக ளுமிழ்வன நகைபுரை தரளம்.

(இ-ள்.) இளையவர் - மாதர்களுடைய, குதலை - மழலைச்சொல்லாகிய, பாகு - சர்க்கரைப்பாகின், இயல் - இனிமைச்சுபாவமுள்ள, கிளவிகள் - வசனங்களை, கோகிலம் நவில்வன - குயில்கள் கற்றுக்கொள்வன, அவர் - அவர்கள், மயில் - (ஆடிப்) பழகுகின்ற, நடமே - நடநத்தையே, கேகயம் நவில்வன - மயில்கள் கற்றுக்கொள்வன, கிளர்-விளங்குகின்ற, இளவளையின் நாகுகள் - இளமையான பெண் சங்குகள், அவர் - அவர்களுடைய, நகைபுரை - தந்தங்களையொத்த தரளம் - முத்துக்களை, உமிழ்வன - சொரிவன—எ-று,

இளையவர் குதலைச்சொற்கள்போலக் குயில்கள் பேசும், அவர்கள் செய்யும் நடநம்போல மயில்கள் நடிக்கும் எனவும் பொருள் கூறலாம்.

81. பழையர்த மனையன பழநறை நுகரும்
உழவர்த மனையுன வுழுதொழில் புரியும்

மழவர்த மனையன மணவொலி யிசையின்
கிழவர்த மனையன கிளைபயில் வளையாழ்.

(இ-ள்.) பழநறை - பழையகள், பழையர்தம் மனையன - கள்விலைஞர்களுடைய வீடுகளினிடத்தன, உழுதொழில் - உழுதொழில்கள், நுகரும் - அந்தக்கள்ளை யுண்கின்ற, உழவர்தம்மனையன - மள்ளர்களுடைய வீடுகளினிடத்தன, மணவொலி - கலியாணவாத்திய வோசைகள், புரியும்-அவ்வுழுதொழிலைச் செய்கின்ற, மழவர்தம் மனையன - இளைஞர்களுடைய வீடுகளினிடத்தன, கிளைபயில் - கிளையென்னு மிசை பொருந்திய, வளை - வளைந்த, யாழ் - வீணைகள், இன்-இனிய, இசைக்கிழவர்தம் மனையன-சங்கீதபாடகர்களுடைய வீடுகளினிடத்தன—எ-று.

பழையர்தம்மனையன - கள்விலைஞர் வீடுகளிலுள்ள குழந்தைகள், பழநறை நுகரும்-பழங்களைக்குடிக்கும், உழவர்தம்மனையன - மள்ளர் வீடுகளிலுள்ள குழந்தைகள், உழுதொழில்புரியும் - உழுதொழிலைச்செய்யும், மழவர்தம்மனையன - இளைஞர்களுடைய வீடுகளிலுள்ள குழந்தைகள், மணவொலி - மணவொலியைச் செய்யும், இசையின் கிழவர்தம்மனையன - சங்கீத பாடகர்களுடைய வீடுகளிலுள்ள குழந்தைகள், கிளைபயில் - கிளையென்னு மிசையோடுகூடிய, வளை - வளைந்த, யாழ்-வீணையை வாசிக்கும் என்றிவ்வாறு கூறுதலுமொன்று. இதில், மேலிரண்டடிகளால் ஒருசாதியார் தொழில் வேறொரு சாதியார் செய்யாரென்பது விளங்குகின்றது. தம் நான்கும் சாரியைகள். இன்னும் சாரியையெனக் கொள்வாருமுளர். நிரனிறைப் பொருள் கோளாகக்கொண்டு, பழையர்தமனையன, கிளை-கிள்ளைகள், பழநறை நுகரும், உழவர்தமனையன - பயில் - நத்துகள், உழுதொழில்புரியும், மழவர்தமனையன வளை-மணச்சங்குகள், மணவொலிபுரியும், இசையின்கிழவர்த மனையன-யாழ்-வீணைகள், (வாசிக்கப்படும்) என்றிவ்வாறிசைத்துரைப்பினுமாம்.

82. கோதைகள் சொரிவன குளிரிள நறவம்
பாதைகள் சொரிவன பருமணி கனகம்
ஊதைகள் சொரிவன வுறையுறு மமுதம்
காதைகள் சொரிவன செவிநுகர் கவிகள்.

(இ-ள்.) குளிர் - குழர்ந்த, இளநறவம்-இளந்தேனை, கோதைகள் - பூமாலைகள், சொரிவன-பொழிவன, பருமணி - பெரிய ரத்திநங்களையும், கனகம் - பொன்களையும், பாதைகள் - மரக்கலங்கள், சொரிவன - பொழிவன, உறை உறும் அமுதம்-மழைத்திவலைகளாகப் பொருந்திய நீரை, ஊதைகள் - குளிர்காற்றுகள், சொரிவன-கொண்டுவந்து வீசுவன, செவிநுகர் கவிகள் - செவிகளாகிய வாய்களால் உண்ணப்படுகிற கவியமுதத்தை, காதைகள் - சரித்திரங்களாகிய பூங்கொத்துக்கள், சொரிவன - பொழிவன—எ-று. (நக)

பாதைகள் சொரிவன பருமணிகனகம் என்பதற்கு, மார்க்கங்கள் பருமணிகளையும் பொன்களையும் அரிப்பாளர்க்குக் கொடுப்பன எனப் பொருள்கூறி, அதற்கு, "அரிப்பர்கை யகப்படுவ வாயிரத்திரட்டி" என்னுஞ் சிந்தாமணிச் செய்யுளை யுதாரணங் காட்டுவாருமுளர், மேல். "சூட்டுடைத்துணைத் தூநிறவாரணம் - தாட்டுணைக் குடை யுந்தகைசான்மணி - மேட்டிமைப்பன" எனவும், "வண்மையில்லையோர் வறுமையின்மையால்" எனவும், "கொள்வாரிலாமைக் கொடுப்பார்களு மில்லை மாதோ" எனவும், கூறப்படுதலால் அஃது உரையன்மையறிக. நறு-நற எனக் குறுகி, உகரமேற்று அம்முச்சாரியையும் பெற்றது. மாலைமலர்கள் நூதனமாய்ச் சொரிகிற தேனுதலால் இளநறவம் என்றார்.

வே று.

83. இடங்கொள் சாயல்கண் டிளைஞர் சிந்தைபோல்
தடங்கொள் சோலைவாய் மலர்பெய் தாழ்குழல்
வடங்கொள் பூண்முலை மடந்தை மாரொடும்
தொடர்ந்து போவன தோகை மஞ்ஞைகள்.

(இ-ள்.) இடம்கொள் - பெருமை கொண்ட, சாயல்கண்டு - சாயலைக்கண்டு, இளைஞர் - பாலியருடைய, சிந்தைபோல் - மனந்தொடர்ந்து போவதுபோல, தடம்கொள் - விசாலத்தைக் கொண்டிருக்கிற, சோலைவாய் - சோலைகளில், மலர்பெய் தாழ்குழல் - மலர்களையணிந்த நீண்ட கூந்தலையும், வடம்கொள் - முத்துமுதலிய இரத்திந வடங்களைக்கொண்ட, பூண் - ஆபரணங்களையணிந்த, முலை - தனங்களையுமுடைய, மடந்தைமாரொடும் - இளம் பெண்களுடனும், தோகை - கலாபத்தையுமுடைய, மஞ்ஞைகள்-மயில்கள், தொடர்ந்துபோவன தொடர்ந்து பின்செல்வன.()

தடம்கொள் என்பதற்கு தடாகங்களைத் தம்மிடத்துக்கொண்டிருக்கிற எனப் பொருளுரைத்தலுமாம்.

84. வண்மை யிலலையோர் வறுமை யின்மையால்
திண்மை யில்லைநேர் செறுந ரின்மையால்
உண்மை யில்லைபொய் யுரையி லாமையால்
வெண்மை யில்லைபல் கேள்வி மேவலால்.

(இ-ள்.) ஓர் வறுமையின்மையால் - அற்பதரித்திரமு மில்லாமையால், வண்மையில்லை-கொடையில்லை, நேர்செறுநர் இன்மையால் - எதிர்த்துப் போர்செய்வோரில்லாமையால், திண்மையில்லை - பராக்ரமமில்லை, பொய் உரை இல்லாமையால்-பொய்வார்த்தை யில்லாமையால், உண்மையில்லை - மெய்யில்லை, பல்கேள்வி மேவலால் - பலகேள்விகளைப் பொருந்துதலால், வெண்மையில்லை - வெளிற்றுத்தன்மை இல்லை—எ-று, (௫௩)

வெளிற்றுத்தன்மை - அறியாமை.

85. எள்ளு மேனலு மிறுங்குஞ் சாமையும்
கொள்ளுங் கொள்ளையிற் கொணரும்;பண்டியும்
அள்ள லோங்களத் தமுதின் பண்டியும்
தள்ளு நீர்மையிற் றலை மயங்குமே.

(இ-ள்.) எள்ளும்-எள்ளையும், ஏனலும் - தினையையும், இறுங்கும் - சோளத்தையும், சாமையும் - சாமையையும், கொள்ளும் - கொள்ளையும், கொள்ளையின் - மிகுதியாக, கொணரும் - கொண்டுவருகிற, பண்டியும் - பண்டிகளும், அள்ளல் - குழை சேறுளது, ஓங்கு - மிகுந்திருக்கிற, அளத்து - அளத்திலுண்டாகிய, அமுதின் பண்டியும்-உப்பைக்கொண்டுவருகிற பண்டிகளும், தள்ளும் நீர்மையில் - ஓட்டிப்போய்த் தள்ளுகின்ற தன்மையினால், தலைமயங்கும் - பொருள்கள் ஒன்றோடொன்று கலக்கும்—எ-று. (௫௪)

தலைமயங்கும் என்பதற்கு இடமயங்குமெனப் பொருளுரைத்தலுங் கூடும்.

86. உயருஞ் சார்விலர் வுயிர்கள் செய்வினைப்
பெயரும் பல்கதி பிறக்கு மாறுபோல்

அயிருந் தேனுமின் பாகு மாயரூர்த்
தயிரும் வேரியுந் தலை மயங்குமே.

(இ-ள்.) உயரும் - உயர்தற்குரிய, சார்வு இல்லா - சார்பை யுடையன வல்லாத, உயிர்கள் - சீவர்கள், செய் - செய்கிற, வினை-வினையினால், பெயரும் - மாறிச் செல்லுகிற, பல்கதி - நாற்கதிகளில், பிறக்கும் ஆறுபோல் - பிறக்கும் வழிபோல, அயிரும்-சர்க்கரையும், தேனும் - தேனும், இன்பாகும் - இனிதான வெல்லப்பாகும், ஆயர்ஊர்-இடையரூராகிய பாடியிலுண்டாகிய, தயிரும் - தயிரும், வேரியும் - கள்ளும், தலைமயங்கும்-இடமாறும்—எ-று. (ருசு)

"ஆயரூர்தயிர்" எனத் தயிருக்கும் இடங்கூறினாற்போல், மற்றையபொருள்கட்குங் கூறுதொழிந்தமையால், அவ்வந்நிலங்கட்குரிய பொருள்களை யெடுத்துரைத்துக்கொள்க. உயரும் சார்பாவது, அஞ்ஞானவயத்தால் பிறந்திறந்து தாழ்ந்தகதிகளிற் செல்லுதலொழிந்து, மோக்ஷத்தை யடைதற்குக் கருவியாகிய மெய்ஞ்ஞானம்.

87. கூறு பாடலுங் குழலின் பாடலும்
வேறு வேறுநின் றிசைக்கும் வீதிவாய்
ஆறு மாறும்வந் ததிர்ந்த வாமெனச்
சாறும் வேள்வியுந் தலை மயங்குமே.

(இ-ள்.) கூறுபாடலும் - பாடுகின்றபாடலும், குழலின்பாடலும் - வேயங்குழலின்பாடலும், வேறுவேறுநின்று - வேருவேருய்நின்று, இசைக்கும் - சத்தித்தற்கிடமாகிய, வீதிவாய் - தெருக்களில், ஆறும் ஆறும் - நதியும் நதியும், வந்து எதிர்ந்த ஆம் என - வந்தெதிர்ப்பட்டன வென்னும்படி, சாறும்-திருவிழாவும், வேள்வியும் - மணக்கோலமும், தலைமயங்கும்-ஒன்ருேடொன்று கலக்கும்—எ-று. (ருகூ)

திருவிழாவோடு வருவோரும் மணக்கோலத்தோடு வருவோருமாகிய மக்கள் ஒருவரோ டொருவர் கலப்பரென்பது கருத்து.

88. மூக்கிற் றாக்குறு மூரி நந்துநேர்
தாக்கிற் றாக்குறும் பறையுந் தண்ணுமை
வீக்கிற் றாக்குறும் விளியு மள்ளர்தம்
வாக்கிற் றாக்குறு மொலியின் மாயுமே.

(இ-ள்.) மூக்கின் - மூக்கினிடத்தில், தாக்குறும் - ஒழித்தலைப் பொருந்துகிற, மூரிநந்தும் - பலமுள்ள சங்கோசையும், நேர்தாக்கின்-நேராகத் தாக்குங்கோலால், தாக்குறும் - ஒலித்தலை யடைகின்ற, பறையும் - பறையோசையும், வீக்கின் - வார்க்கட்டினால், தாக்குறும்-ஒலித்தலைப்பொருந்துகின்ற, தண்ணுமை - மத்தளத்தின், விளியும்-ஓசையும், மள்ளர்-பள்ளர்களுடைய, வாக்கின்தாக்கும் - வாக்கினால் ஒலிக்கின்ற, ஒலியின்-ஆரவாரத்தினால், மாயும் - அடங்கிவிடும்—எ-று. (ருஎ)

மூக்கென்றது, சங்கின் சுரிமுகத்தின் முனையை.

89. தாலியைம் படை தழுவு மார்பிடை
மாலைவா யமு தொழுகு மக்களைப்
பாலி றூட்டுவார் செங்கைப் பங்கயம்
வால் நிலாவுறக் குவிவு மானுமே,

(இ-ள்.) தாலி - தாலிச்சரட்டிற்கோக்கப்பட்டிருக்கிற, ஐம்படை-பஞ்சாயுதங் களும், தழுவும் - பொருந்திய, மார்பு இடை - மார்பினிடத்தில், மாலை-ஒழுங்காக, வாயமுது-வாயமுதானது, ஒழுகும்-ஒழுகாநின்ற, மக்களை-குழந்தைகளுக்கு, பாலின் ஊட்டுவார் - பாலுண்பவர்களாகிய மாதருடைய, செங்கை - (குவிந்த) செவந்தகை கள், வால்நிலாஉற - வெண்மையான சந்திரிகை பொருந்த, பங்கயம் - தாமரைமலர் கள், குவிவமானும் - குவிவனவற்றை யொத்திருக்கும். (ருஅ)

ஐம்படை, தாலிதழுவும் எனப் பதங்களைநிறுத்தி, பஞ்சாயுதங்களையும் பொன் னிறைச்செய்து கோத்த தாலிச்சரடு தழுவுகின்ற எனப் பொருளுரைத்தலுமாம். மாற்பிடை என்றது தாய்மாருடைய மார்பிடை எனவும், மக்களுடைய மார்பிடை யெனவும் கொள்ளலாம். மாலையென்பதற்கு-மாலைக்காலத்தில் எனப் பொருள் கூறி, வானிலாவுற என்பதனோடியைத் துரைப்பினு மமையும். பாலின் என் பதில், இன்சாரியை இதற்குப் பாலுடன் அன்னத்தையெனப் பொருள்கூறினும் பொருந்தும். ஐம்படை - சக்கரம், சங்கு, தண்டு, வில், வாள் என்பவன.

90. பொற்பி னின்றன பொலிவு பொய்யிலா
நிற்பி னின்றன நீதி மாதரார்
அற்பி னின்றன வறங்க ளன்னவர்
கற்பி னின்றன கால மாரியே.

(இ-ள்:)பொலிவு - கீர்த்திகள், பொற்பின் - ஆடவர்களுடைய குணநலத்தால், நின்றன - நிலைபெற்றிருந்தன, நீதி நீதிகள், பொய் இல்லாநிற்பின் - அவரவர்க ளுடைய உண்மைநிலையால், நின்றன - நிலைபெற்றிருந்தன, அறங்கள் - தருமங்கள், மாதரார் - மகளிருடைய, அற்பின் - அன்பினால், நின்றன - நிலைபெற்றிருந்தன, காலமாரி - காலமழைகள், அன்னவர் - அவர்களுடைய, கற்பின் - கற்பினால் நின் றன - நிலைபெற்றிருந்தன—எ-று. (ருகூ)

அறங்கள்மாதரார் அற்பினின்றன, காலமாரி அன்னவர் கற்பினின்றன என் றதனால், பொற்பு நிற்பு என்பவற்றிற்கு ஆடவர்களுடைய குணநலம் அவர்களுடைய வுண்மைநிலை எனப்பொருள் கூறம்பட்டது.

91. சோலை மோநிலந் துருவி யாவரே
வேலை கண்டுதா மீள வல்லவர்
சாலும்வார் புனற் சரயு வும்பல
காலி னோடியுங் கண்ட தில்லையே.

(இ-ள்.) சோலை - சோலைகளால் சூழப்பட்ட, மா - பெருமைபொருந்திய, நிலம் - அந்தக்கோசலதேயத்தை, துருவி - தேடி, வேலை - எல்லையை, கண்டு - பார் த்து, மீளவல்லவர் - மீண்டுவந்து சொல்லவல்லவர், யாவர் - எவர், (ஒருவருமில்லை) (இவர்கள் நிற்க) சாலும் - நிறைந்த, வார்புனல் - பெருநீரையுடைய, சரயுவும் - சரயூநதியும், பலகாலின் ஓடியும் - பலகால்களால் ஓடிச்சென்றும், கண்டது இல்லை- (அத்தேயத்தினெல்லையைக்) கண்டதில்லை—எ-று. (கூ0)

இதனால் இரண்டுகாலுள்ள உயர்திணைப்பொருள்களாலும் பலகால்களுள்ள அஃறிணைப்பொருள்களாலும் காணக்கூடாத எல்லையையுடையது கோசலதேய மென்றதாயிற்று.

92. வீடு சேரநீர் வேலை கான்மடுத்
தூடு பேரினு மூலைவிலா நலம்

கூடு கோசல மென்னுங் கோதிலா
நாடு கூறினு நகரங் கூறுவாம்.

(இ-ள்.) வீடுசேர - யாவும் அழிதலைப்பொருந்த, நீர்-நீர்-மிகுதியுள்ள, வேலை - சமுத்திரங்கள், கால்மடுத்து-சண்டமாருதத்தினல் மோதப்பட்டு, ஊடுபேரினும் - இடம்விட்டுப் பெயர்ந்துவந்து மூடிக்கொண்டாலும், உலைவு இல்லா - கெடுதல் இல்லாத, நலம்கூடு - நன்மைகள் சேர்கிற, கோது இல்லா - குற்றமில்லாத, கோசலம் என்னும் நாடு - கோசலம் என்கிற நாட்டுவளத்தை, கூறினும் - சொல்லினேம், நகரம்-நகரவளத்தை, கூறுவாம் - இனிச்சொல்லுவோம்—எ-று. (கூக)

வீடு முதனிலைத்தொழில்பெயர். நாடு, நகரம் என்பன பொருளாகுபெயர்கள்.

ங-வது நாட்டுப்படலம் முற்றிற்று.

## ச-வது. நகரப்படலம்.

### அயோத்யா நகரவளப்பங் கூறுகின்ற படலம்.

93. செவ்வியமதுரஞ் சேர்ந்தநற் பொருளிற் சீரியகூரியதீஞ்சொல்
வவ்வியகவிஞ ரனைவரும்வடநூன் முனிவரும் புகழ்ந்ததுவரம்பில்
எவ்வுலகத்தோர் யாவருந்தவஞ்செய் தேறுவாணுதரிக்கின்ற
அவ்வுலகத்தோ ரிழிவதற்கருத்தி புரிகின்றதயோத்திமாநகரம்.

(இ-ள்.) செவ்விய - செவ்வியனவும், மதுரம்சேர்ந்த - இனிமைபொருந்தியனவும், நல்பொருளின் சீரிய - நற்பொருள் தருவதிற் சிறந்தனவும், கூரிய - நுட்பமாயினவுமாகிய, தீம்சொல் - அமிரச்சொற்களை, வவ்விய - கவர்ந்த, கவிஞர் அனைவரும் - சடகோபர்முதலியோராலும், வடநூல்முனிவரும் - வடநூலில் வல்ல வான்மீகி முதலாகிய முனிவராலும், புகழ்ந்தது - புகழப்பட்டதும், வரம்பு இல் - அளவற்ற, எவ்வுலகத்தோர்யாவரும்-எல்லா வுலகத்தவராகிய எல்லாரும், தவம்செய்து-தவம்பண்ணி, ஏறுவான் - பெறுதற்கு, ஆதரிக்கின்ற - விரும்புகின்ற, அவ்வுலகத்தோர் - அந்தப் பரமபதமாகிய வுலகத்திலிருப்பவர்களும், இழிவதற்கு - இறங்கி வருவதற்கு, அருத்திபுரிகின்றது - விருப்பத்தைச் செய்தற்குரியதும், அயோத்திமாநகரம்-திருவயோத்யையென்னும் பெருமைபொருந்திய நகரம் எ-று. (கூஉ)

எவ்வுலகம் என்றது இவ்விடத்தில் வினப்பொருளைத் தராமல் எஞ்சாமைப் பொருளைத்தந்துநின்றது. யாவரும் என்றதும் அது. அவ்வுலகம் எனச் சேய்மைச் சுட்டாற் கூறினமையால், தவஞ்செய்யாதார் ஏற வாதரித்தல் கூடாதென்னு மருமை தோன்றுநின்றது. அத்தன்மையது பரமபதமேயாதலால் அவ்வுலகம் என்றதற்குப் பரமபதமென்று பொருள்கூறப்பட்டது. அவ்வுலகத்துள்ளார் நிரதிசயானந்திகளாதலால் வேறுலகத்தில் விருப்பம் வையாரென்பது தோன்ற அருத்திபுரிகின்றதென்றார். உபயவிபூதிநாயகன் பூரணகலையோடு ராமதிவாகரனுய்த் திருவவதரித்த இடமாதலால் திருவயோத்யையை மாநகரமென்றார். அவ்வுலகத்தோர், என்பத னீற்றில் உயர்வு சிறப்பும்மை தொக்கது. அவ்வுலகத்தோர் என்றது, இறைவன் திருவவதரித்தகாலத்துக் கூடத்திருவவதரித்த பெரியபிராட்டி முதலாயினேரை, புகழ்ந்தது, புரிகின்றது வினைமுற்று இரண்டடுக்கி அயோத்திமாநகரமென்னும் பெயர்கொண்டது.

94. *நிலமகண்முகமோ திலகமோகண்ணோ நிறைநெடுமங்கலநாணோ*
*இலகுபூண்முலைமே லாரமோவுயிரி னிருக்கையோதிருமகட்கினிய*
*மலர்கொலோமாயோன்மார்பினன்மணிகள் வைத்தபொற்பெட்டியோவானோர்*
*உலகின்மேலுலகோவூழியினிறுதி யுறையுளோயாதெனவுரைப்பாம்.*

(இ-ள்.) (*அந்த அயோத்திமாநகரமானது*) நிலமகள் - *பூமிதேவியினுடைய*, முகமோ - *முகந்தானோ*, திலகமோ - *அந்த முகத்திலணிந்த பொட்டுத்தானோ*, கண்ணோ - *அந்த முகத்துக்கின்றி யமையாத நேத்திரந்தானோ*, நிறைநெடுமங்கல நாணோ - *நிறைவாகிய நித்தியமங்கல சூத்திரந்தானோ*, இலகு - *விளங்குகின்ற*, பூண் - *ஆபரணங்களையணிந்த*, முலைமேல் - *தனங்களின்மேல் புரள்கின்ற*, ஆரமோ - *முத்து வடந்தானோ*, உயிரின் இருக்கையோ - *உயிரினிருப்பிடந்தானோ*, திருமகட்கு - *பெரிய பிராட்டிக்கு*, இனிய - *இனிதாகிய*, மலர்கொலோ - *தாமரைப்புட்பந்தானோ*, மாயோன்மார்பின் - *ஆச்சர்யகுண சேஷ்டிதங்களையுடைய இறைவனது மார்பில் பிரகாசிக்கிற*, நல்மணிகள் - *சிறந்த கௌஸ்துபரத்நங்கள்*, வைத்த - *வைக்கப்பட்டிருக்கிற*, பொன்பெட்டியோ - *பொன்னாற்செய்யப்பட்ட பெட்டிதானோ*, வானோர் உலகின்மேல் - *பிரமன் முதலிய தேவருலகிற்கு மேற்பட்டிருக்கிற*, உலகோ - *ஸ்ரீ வைகுண்டலோகந்தானோ*, ஊழியின் இறுதி - *யுகாந்தகாலத்தில்*, உறையுளோ - *நகரங்களெல்லாஞ் சென்றொடுங்குமிடமாகிய ஸ்ரீமந் நாராயணனது திருவயிறு தானோ*, யாது என உரைப்பாம் - (*இவற்றுள்*) *யாதென்று துணிந்துசொல்வோம்* எ-று. (உ)

*நிலம் என்பது சொல்லால் அஃறிணையை யொத்திருந்தாலும் பொருளாற் பூமி தேவியைக் குறிக்கின்றமையால் நிலமகளென்றும், முகம், எல்லா அவயவங்களினுஞ் சிறந்ததாகலான், நிலமகள் முகமோ என்றும், திலகம் அவ்வாறு சிறந்த அவயவமாகிய முகத்திற்கு அழகை யுண்டாக்குதலால் திலகமோ என்றும், கண்களில்லாவிடின் அத்திலகத்தழகு பயன்படாதாதலால் கண்ணோ என்றும், திலகமுங் கண்களுமாகிய இவற்றொடு கூடியிருக்கிற முகத்தை யழகுசெய்தலிலும் பெண்மையை யுண்டாக்குதலிலும் மங்கலநாண் சிறந்ததாதலால் நிறைநெடுமங்கல நாணோ என்றும், மங்கலநாண் மகளிர்க்குச் சிறந்ததாயினும் அது மற்றைய ஆபரணங்களோடொன்றாய்க் கழுத்தில் மறைந்துகிடக்குமாதலாலும், அம்மகளிரைப் பொருந்து மைந்தர்க்கு மகிழ்ச்சியைக் கொடாமையாலும், அம்மைந்தர் கண்ணுற்பார்த்தவுடன் தருவி மகிழ்தற் கேதுவாகிய ஆபரணம் ஸ்தநாபரணமாதலாலும், இலகுபூண் முலைமேலாரமோ என்றும், இப்பூமிதேவிக்கு உயிர் ஸ்ரீமந்நாராயணனாதலால் அவனிருந்து விளங்குமிடமாகிய இதனை உயிரினிருக்கையோ என்றும், திருமகள் எக்காலத்தும் தாமரைமலரி லுறைதல்போல இந்நகரத்தினுமினிது உறைதலால் திருமகட்கினிய மலர்கொலோ என்றும், மாயோன் மார்பினன் மணிகள்வைத்த பொற்பெட்டியாகிய பாற்கடல்போல அவனுக்கு இந்நகரம் இனிது தங்குமிடமாதலால் மாயோன் மார்பினன் மணிகள்வைத்த பொற்பெட்டியோ என்றும், நிரதிசயாநந்தத்தைத் தருதலால் வானோர் உலகின்மே லுலகோ என்றும், கற்பமுடிவில் எல்லாச் சீவராசிகளும் இறைவனது திருவயிற்றிலடங்கி யழிவின்றி யிருத்தல்போல இந்நகரத்தினுமடங்கி யழிவின்று யிருத்தலால் ஊழியினிறுதி யுறையுளோ என்றும், இவற்றுள் ஒன்றைத் துணிந்து சொல்லக்கூடாமையால் யாதென வுரைப்பாம் என்றும் கூறினர். அயோத்திமாநகரம் பூமியின் ஏகதேசபாகமாதலால் முதலில் "நிலமகண் முகமோ" என்று தொடங்கி "உயிரினிருக்கையோ" என்னு மளவுங்கூறி, "அகலகில்லே னிறையுமென்றலர்மேன் மங்கையுறைமார்பா" என்கிறபடி இறைவனது*

வலமார்பி லெழுந்தருளியிருக்கும் பெரிய பிராட்டியைக்குறித்து "திருமகட்கிடிய மலர்கோலோ" என்றும் அவளோடு கூடப்பிறந்த கௌஸ்துபமணியை "மாயோன் மார்பினன் மணிகள்வைத்த பொற்பெட்டியோ" என்றுங் கூறினர்.

95. உமைக்கொருபாகத்தொருவனுமிருவர்க் கொருதனிக்கொழுநனுமலர்மேற் கமைப்பெருஞ்செல்வக் கடவுளுமுதலோர் கண்டிலாநகரதுகாண்பா அமைப்பருங்காதன் முன்பிடித்துந்த வந்தரஞ்சந்திராதித்தர் [ன் இமைப்பிலர்திரிவரிதுவலாலதனுக் கியப்பலாமுவமைபற்றியாதோ

(இ-ள்.) உமைக்கு உமாதேவிக்குக் கொடுத்த, ஒருபாகத்து - ஒருபாகத்தினையுடைய, ஒருவனும் - ஒப்பற்றபரமசிவனும், இருவர்க்கு-வள்ளிதெய்வயானைகளாகிய இருவருக்கும், தனி - ஒப்பற்ற, ஒருகொழுநனும் - ஒருகணவனுகிய சுப்பிரமணியனும், மலர்போல் - தாமரைமலரினிடத்து விளங்கும், கமை - பொருமையாகிய, பெருஞ்செல்வம் - பெருஞ்செல்வத்தையுடைய, கடவுளும் - பிரமதேவனும், முதலோர் - இவர்கள் முதலிய தேவர்கள், கண்டு இலா - சிறப்புமுதலியவற்றைக் கண்டுணராத, நகரது-இவ்வயோத்திக்கு ஒப்பான நகரமென்று, காண்பான் - தாங்கள்காண, அமைப்புஅரு - அடக்குதற்குரிய, காதல் - ஆசையானது, பிடித்து-பிடரியைப்பற்றி, முன் உந்த - முன்னேதள்ள, அந்தரம் - ஆகாயத்தில் சந்திராதித்தர் - சந்திரனுஞ் சூரியனும், இமைப்பு இலர் - கண்கள் இமைக்குதல் இல்லாதவர்களாய், திரிவர் - நோக்கிக்கொண்டு இன்னமும் உழலுகின்றார்கள், (ஆதலால்) இதனுக்கு - இந்நகரத்துக்கு, இதுஅல்லால் - இந்நகர உவமையேயல்லாமல், இயல்பலாம் - சொல்லும்படியான, உவமை - உவமையான, மற்று இயாதோ - பிறிதுயாதோ (இல்லை)—எ-று. (௩)

[உவமை - ஒழுவாய் யாது பயனிலே.] நகரது என்பதிலிருக்கும் அதுகாரகத்தின்கண் வந்தது. காரகமென்பது, வினைகொண்டு வேற்றுமைமுடிவது- உயர்திணையும்மைத் தோகைபலரீறே என்னுஞ் சூத்திரவிதியால் சந்திரனுஞ் சூரியனும் என்னும் எண்ணும்மைகள் தொக்குப் பலரீருகொண்டு முடிந்தன. சந்திர ஆதித்தர் என்னும் பதம் சந்திராதித்தர் எனப் புணர்ந்தது வடமொழிச்சந்தி, இதனைத் தீர்க்கசந்தி எனக் கூறுவர்.

உருத்திரன் முதலான தேவர்களே இந்நகரத்துக்கு ஒப்பான நகர் ஒன்றுங் காணுதவர்களாயிருக்க, சந்திரசூரியர்கள் அவர்கள் காணுமை அறிந்தோ, அல்லது, அரியாமலோ தாங்கள் காணவேண்டுமென்று ஆசைகொண்டு இமைகளை மூடாமல் கண்கள் விழித்தவண்ணமாகவே இன்னமும் உழன்றுகொண்டிருக்கின்றார்கள், ஆதலால், இந்நகரமானது தனக்குத்தானே ஒப்பானதென்று சொல்லுவதன்றி வேறே ஒப்பிருக்குமென்று எவ்வாறு சொல்லக்கூடும். ஒப்பிலாநகரமென்றுணராமல் காணத்தொடங்கினமையின் திரிவரென எளிதுபடக்கூறினர். இமைப்பிலரென்றதனுல் அதிக சாக்கிரதையாக நோக்கித் திரிகின்றாரென்றதாயிற்று.

முக்கண்ணும், பன்னிரண்டுகண்ணும், எட்டுக்கண்ணும் உடைய கடவுளரைக் கூறி, மற்றைக் கடவுளரை முதலோரென்றொழிந்தார்கட் சிறியராதல்நோக்கி.

இவ்வாறு நோக்கித்திரிவது சந்திரசூரியர்களுக்குச் சம்பந்தமில்லாமை தெரிந்திருந்தும் சம்பந்தங்கற்பித்துக் சொல்லுகையில் இது அதிசயோத்தியலங்காரம். நாயகவாசி யின்மையாகிய குற்றம் நேருமென்பதை யுணராதவர் இருவர்க்கொரு தனிக் கொழுநன் என்பதற்குத் திருமாலெனப் பொருள் கூறுவர்.

96. அயின்முகக்குலிசத் தமரர்கோனகரு மளகையுமென்றிவையயனார்
பயிலுறவுற்ற படிபெரும்பாலு மிப்பெருந்திருநகர்படைப்பான்
மயன்முதற்றெய்வத் தச்சருந்தத்த மனத்தொழினாணினர்மறந்தார்
புயறொடுகுடுமி நெடுநிலைமாடத் திந்நகர்புகலுமாறெவனோ.

(இ-ள்.) அயனார் - பிரமதேவன், அயில்முகம் - கூர்மையைத் தன்னிடத்துக் கொண்ட, குலிசத்து - வஜ்ராயுதத்தையுடைய, அமரர்கோன் - தேவேந்திரனது, நகரும்-நகராகிய அமராவதியும், அளகையும் - (குபேரனது) நகரமாகிய அளகாபுரியும், என்ற இவை - என்று சொல்லப்பட்ட இவைகளை, பயிலுறவு உற்றபடி - (படைத்துப்) பயிற்சிமிக்க வகையால், பெரும்பாலும்-பெரும்பான்மையும், இ-இந்த பெருந்திரு நகர்படைப்பான் - பெருஞ்செல்வவளமுள்ள நகரத்தைப் படைக்கலாயினான் (ஆதலால் இதுபோல வேறொரு பெருநகரத்தைப் படைக்க நமக்கியலாதென்று) மயன்முதல் - மயன்முதலான, தெய்வத்தச்சரும் - தேவதச்சர்களும், நாணினர்-நாணினவர்களாய், தத்தம்-தங்கள் தங்களுடைய, மனத்தொழில்-நினைப்பினால் படைக்குந் தொழில்களை, மறந்தார் - மறந்துவிட்டார்கள், (அப்படியிருக்க) புயல்தொடு - மேகத்தைத்தொடுகின்ற, குடுமி - சிகரங்களோடுகூடிய, நெடுநிலை - நெடிய மேல்நிலைகளையுடைய, மாடத்து - மாளிகைகள் நிரம்பின, இ நகர் - (பிரமன் பயின்றுபடைத்த) இந்த நகரச்சிறப்பை, புகலும் ஆறு எவன் - சொல்லும் பிரகாரம் யாது—எ-று. (௪)

என்ற இவை என்பதில் நிலைமொழியீற்றுப் பெயரெச்சத்தகரம் தொகுத்தல். நாணினர் - வினைமுற்று வினையெச்சமானது. பிரமதேவன் - அமராவதி, அளகை, இவைகளைப் படைத்துப் பழகின பின்பு இந்த நகரத்தைப் படைப்பானாயினான். இந்தக் கைத்தொழிலாற் படைக்கப்பட்ட நகரம்போல நாம் மனத்தொழிலானும் படைக்க வொண்ணாதென்று தம்மனத்தொழிலை நாணத்தால் மறந்தாரென்றதாயிற்று. அமராவதியினும் அளகையினும் இந்தத் திருவயோத்யை சிறந்ததென்பது கருத்து.

97. புண்ணியம்புரிந்தோர்புகுவதுதுறக்கமென்னுமீதருமறைப்பொருளே
மண்ணிடையாவ ரிராகவனன்றி மாதவமறத்தொடும் வளர்த்தார்
எண்ணருங்குணத்தி னவனினிதிருந்திவ் வேழுலகாள்விடமென்றால்
ஒண்ணுமோவதனின்வேறொருபோகமுறைவிடமுண்டெனவுரைத்தல்.

(இ-ள்.) புண்ணியம்புரிந்தோர் - புண்ணியங்களைச் செய்தவர்கள், புகுவது - (அப்புண்ணிவபாவங்களை அநுபவிக்கும்பொருட்டு) அடைவது துறக்கம் - வீட்டுலகம், என்னும் - என்றுசொல்லுகிற, ஈது - இது, அருமைப்பொருளே - அருமையான வேதத்திற் சொல்லப்படுகின்ற அர்த்தமே, மாதவம் - பெரியதவத்தையும், அறத்தோடும்-சிறந்த அறத்தையும், மண்ணிடை-பூமியின்கண், இராகவன் அன்றி - ஸ்ரீராமபிரானைக்குறித்தல்லது. யாவர் - எவர், வளர்த்தார்-வளர்த்தவர், (ஒருவருமில்லை) எண் அருகுணத்தின் - நினைத்தற்கரியமங்கள குணங்களையுடைய, அவன் - அந்த ஸ்ரீராமபிரான், இனிது இருந்து-இனிதாக வீற்றிருந்து, இ எழ் உலகு - இப்த வேழுலகங்களையும், ஆள் - ஆளுதற்குரிய, இடம் என்றால் - இடமானது திருவயோத்யையாயின், அதனின்-அதுபோல, போகம் உறை-சுகங்கள் தங்குவதான வேறொரு இடம்-மற்றோரிடமானது, உண்டு என உரைத்தல்-உளதென்று சொல்லுதல், ஒண்ணுமோ - கூடுமோ (கூடாது)—எ-று. (௫)

ஒண்ணுமோ என்பதினீற்றிலுள்ள ஓகாரம் எதிர்மறை. இதனின் என்பதற்கு இதினும் என உறழ் பொருள் கொள்ளினும் பொருந்தும். பிறப்பிறப்புகளின் துன்புநீக்கி நிரதிசய இன்பத்தை அநுபவிக்கும்படி வீட்டுலகை அடையவேண்டி, முழுமுதல்வனுகிய இராகவனைநோக்கி மாதவத்தையும் அறத்தையும் செய்தனர்கள் யாவரும், அங்ஙனமாக, அவ்வீட்டுலகநாதன், அவ்வுலகினும், இந்நகரம் இன்பந்தருவதெனக் கருதி இங்கவதரித்து அரசாட்சி செய்தானுதல் இதுபோல இன்பந்தருமுலகுண்டென்று சொல்லுதல்கூடாது. அதற்பொருட்டாதற் பொருளதாகிய குவ்வுருபு "இராகவனன்றி என்பதில்" தொகுத்தலாயிற்று சந்த இன்பப்பொருட்டு.

98. தங்குமாபொருளுந் தருமமுந்துணையாத் தம்பகைப்புலன்களைத்தவிர்க்கும்
பொங்குமாதவமு ஞானமும்புணர்ந்தோர் யாவர்க்கும்புகலிடமான
செங்கண்மால்பிறந்தாண்டளப்பருங்காலந் திருவின்வீற் றிருந்தமை தெரிந்
தால், அங்கண்மாஞாலத் தந்நகரொக்கும் பொன்னகரமரர்நாட்டியாதோ.

(இ-ள்.) மாதங்கும் - பெருமைபொருந்திய, பொருளும்-திரவியமும், தருமமும்-தருமமும், துணையா-சார்பாக, தம் - தம்முடைய, பகை-பகையாகிய, புலன்களை-ஐம்புலன்களையும், தவிர்க்கும்-நீக்கும், பொங்கும்-அழகாய்ப்பொங்கிய, மா-பெரிய, தவமும்-தவங்களையும், ஞானமும்-ஞானத்தையும், புணர்ந்தோர்-பொருந்தினேர், யாவர்க்கும்-எல்லோருக்கும், புகல் இடமான - சென்றடையும் இடமாகிய, செங்கண்-செந்தாமரை மலர்போன்ற கண்களையுடைய, மால் - நாராயணக்கடவுள், பிறந்து-திருவவதாரஞ்செய்து, ஆண்டு-அவ்விடத்து, அளப்பு-அளத்தற்கு, அரு-அரிய, காலம்-காலம், திருவின்-திருமகளோடு, வீற்றிருந்தமை - வீற்றிருந்தாரென்பது, தெரிந்தால்-தெரிந்தால், அம்-அழகிய, கண்-இடத்தையுடைய, மா-பெரிய, ஞாலத்து - பூமியின் கண்விளங்கும், அந்நகர் ஒக்கும்-அவ்வயோத்திநகரையொத்த, பொன்நகர்-அழகுள்ளநகரம், அமரர்நாட்டு-தேவருலகத்தினும், யாதோ-இல்லை—எ-று. (சு)

பொருளும் தருமமும் துணையாகக்கொண்டல்லது புலப்பகை களையலாகாமையால் "தங்குமாபொருளுந் தருமமுந்துணையாத் தம்புலப்பகைகளைத் தவிர்க்கும்" என்றும், புலப்பகை தவிர்க்கப்படவே, தவம் கைகூடி, அதனுல் மெய்ஞானமுண்டாகி, அதனுல் அவ்வெல்லார்க்கும் புகலிடமான செங்கண்மாலையடைவராதலால், "பொங்குமாதவமு ஞானமும்புணர்ந்தோர் யாவர்க்கும்புகலிடமான செங்கண்மால்" என்றும் கூறினர். புலம்-சப்தாதிவிஷயங்கள்.

99. அரைசெலாமவணவணியெலா மவணவரும்பெறன் மணியெலாமவண
புரசைமால்களிறும் புரவியுந்தேரும் பூதலத்தியாவையுமவண்
விரசுவார்முனிவர் விண்ணவரியக்கர் விஞ்சையர்முதலினேரெவரும்
உரைசெய்வாரானு ரானபோததனுக்குவமைதானரிதரோவுளதோ.

(இ-ள்.) அரைசெலாம்-பூதலத்திலுள்ள அரசுகளெல்லாம், அவண-அவ்விடத்திலுள்ளன, அணியெலாம்-ஆபரணங்களெல்லாம், அவண-அவ்விடத்திலுள்ளன, அரும்பெறல்-பெறுதற்கரிய, மணியெலாம் - மணிகளெல்லாம், அவண - அவ்விடத்திலுள்ளன, புரசை-கழுத்துக்கயிற்றையுடைய, மால்களிறும்-பெரியயானைகளும், புரவியும்-குதிரைகளும், தேரும்-தேர்களும், பூதலத்தியாவையும்-பூமியின் கணுள்ள மற்ற எல்லாப்பொருள்களும், அவண-அவ்விடத்திலுள்ளன, (இவைகளுமன்றி) முனிவர்-முனிவர்களும், விண்ணவர்-தேவர்களும், இயக்கர்-யக்ஷர்களும், விஞ்ஞையர்-வித்தி

யாதாரும், முதலினோரெவரும் - இவர்கள்முதலிய எல்லாரும், விரசுவார்-அந்நகரத் தின்கண்ணே வருபவர்களாய், உரைசெய்வாரானார்-புகழ்கின்றவர்களானார்கள், ஆன போது - அவ்வாறு புகழ்சொல்லாயினபோது, அதனுக்கு-அந்நகரத்துக்கு, உவமை- உவமை, அரிது-அருமை, உளதோ-அருமையிற்றேடிச் சொல்லலாமென்று கருதின் அது வேறுண்டோ (இல்லை)—எ-று.

பூதலத்தியாவையு மவண என்பதனோடு என்று என ஒருசொல்லைச்சேர்த்து, விரசுவார் என்பதற்கு, வந்து கலப்பவராகிய எனப் பொருள்கொண்டு, முனிவர் முதலினோரெவரும் உரைசெய்வாரானார் எனக் கூறினுமாம். எல்லாத்தேயத்தரசர் களும் கோசலதேயத்தரசனாகிய தயாதனால் தமதரசுகளைப்பெற்று நெடிது வாழ்வா ராதலால் "அரசெலாமவண" என்றார். உவமை உளதோ-அரிது, எனநிறுத்தி, உவ மையுண்டோ இல்லை எனக் கூறினுமமையும். உளதோ என்னு மோகாரமே எதிர் மறையாய்நின்று இன்மைக்குறிக்க அரிது என மேலுங்கூறுதல் உவமை யில்லையென் பதை வற்புறுத்தற்கு.

100. நால்வகைச்சதுர விதிமுறைநாட்டி நனிதவவுயர்ந்தனபனிதோய்
மால்வரைக்குலத்தின் யாவையுமில்லை யாதலாலுவமைமற்றில்லை
நூல்வரைத்தொடர்ந்துமயத்தொடும்பழகி நுணங்கியநுவலருமுணர்வே
போல்வகைத்தல்லா லுயர்வினோடுயர்ந்த தென்னலாம்பொன்மதினிலையே.

(இ-ள்.) உயர்வினோடு - இவ்வுயர்ச்சியோ (டொப்ப,) உயர்ந்ததென்னலாமல் லால்-உயர்ந்துநின்றனவென்று சொல்லலாமன்றி, நால்வகைச்சதுரம்-நான்குவகைப் பட்ட சதுரமாக, விதிமுறை-சிற்பநூல் விதிமுறைப்படி, நாட்டி-வகுத்து, நனிதவ- மிகவும், உயர்ந்தன-உயர்ந்தனவாகி, பனிதோய்-குளிர்ச்சிபொருந்திய, மால்வரைக் குலத்தின்-பெரியமலைக்குலங்களில், யாவையுமில்லை-எவையுமில்லை, ஆதலால்-ஆகை யால், உவமையற்று இல்லை-இதனோடுவமைசொல்ல வேறொரு மலையுமில்லை, (ஆயி னும்) நூல்வரை - நூலினளவெவ்வளவோ அதுவரையில், தொடர்ந்து - கருத்தைச் செலுத்தி யாராய்ந்துணர்ந்து, பயத்தோடும்பழகி-அவைகளிற் கூறும் பயனாகிய அற முதலியவற்றிலும் பழகி, நுணங்கிய - கூர்மைபெற்ற, நுவலரு-சொல்லுதற்கரிய, உணர்வேபோல்வகைத்து - ஞானமேபோலும் தன்மையினை யுடையது, பொன்- பொன்னாற்செய்த, மதில்-மதிலினது, நிலை-நிலைமை.

உயர்வினோடுயர்ந்த தென்னலாமல்லாம் எனமாறுக. உயர்வினோடுயர்ந்த என் பத னிடையில் ஒப்ப என ஒருசொல் கூட்டப்பட்டது, நனிதவ - ஒருபொருட்பன் மொழி, மதிலைக்குறிக்குங்கால், நூல்-கயிறு. பயம்-நீர். கற்றுணர்ந்தோரது உணர்ச் சியானது தேவர்கட்கும் எட்டுத லருமையான பரம்பொருளை யெட்டத்தக்கதாத லால், மதில் அவ்வுணர்ச்சியை யொக்குமென்றார். நூல்வரைத்தொடர்ந்து பயத்தொ டும்பழகி என்பதை மதின்மேலேற்றிக் கூறுகையில், சிற்பநூலினது இலக்கணவரம் பைக்கடவாமல், அகழியினீரொடு பயின்று என உரைக்க.

101. மேவருமுணர்வு முடிவிலாமையினால் வேதமுமொக்கும்விண்புகலால்
தேவருமொக்கு முனிவருமொக்குந் திண்பொறியடக்கியசெயலால்
காவலிற்கலியூர் கன்னியையொக்குஞ் சூலத்தாற்காளியையொக்கும்
யாவையுமொக்கும் பெருமையாலெய்தற்கருமையாலீசனையொக்கும்.

(இ-ள்.) (அந்தமதில்) மேவு அரு உணர்வும் - அடைதலருமையான உணர்வுக் ரும், முடிவு இலாமையால் - முடிவுகாணுதல் கூடாமையால், வேதமும் ஒக்கும்-வே தங்களையும் ஒத்திருக்கின்றது, விண்புகலால் - சுவர்க்கலோகத்தை யடைதலால்

தேவரும்-ஒக்கும் - தேவர்களையும், ஒத்திருக்கும், திண்-வன்மையுள்ள, பொறி-பொறிகளை, அடக்கிய செயலால் - அடக்கினதொழிலால், முனிவரும் ஒக்கும் - முனிவரையும் ஒத்திருக்கும், காவலில் - காவற்றொழிதலால், கலையூர் கன்னியை ஒக்கும் - கலைமானையேறி நடத்துகிற துர்க்கையையுமொத்திருக்கும், சூலத்தால் - சூலத்தையுடைத்தாயிருத்தலால், காளியை ஒக்கும் - காளியையும் ஒத்திருக்கும், பெருமையால்-பெருமையினால், யாவையும் ஒக்கும் - பெரிய பொருள்கள் எல்லாவற்றையும் ஒத்திருக்கும், எய்தற்கு அருமையால் - அடைதற்கரிய தன்மையால், ஈசனை - ஒக்கும்-சர்வேசுரனையு மொத்திருக்கும்—எ-று, (க)

வேதம் முடிவில்லாமல், அளவற்ற சாகோபசாகைகளாய் விரிந்து நுட்பமான அறிவுக்கும் முடிவுகாணக் கூடாதிருத்தல்போல, மதிலும் அளவற்ற வேலைப்பாடுகளால் விசாலித்து முடிவு காணக்கூடாதிருக்கின்ற தென்றும், தேவர் விண்ணுலகத்தை யடைந்திருத்தல்போல இதுவும் உயர்ச்சியால் விண்ணுலகத்தை யடைந்திருக்கின்றதென்றும், முனிவர் விடயங்களிற் செல்லுதலில் திட்பமான ஐம்பொறிகளை யடக்கிநிற்குந் திறம்போல இதுவும் திண்மையான யந்திரங்களைத் தன்னிடத் தடக்கி நிற்கின்றதென்றும், கலையூர் கன்னி நகரத்துக்குக் காவலாயிருப்பதுபோல இதுவும் நகரத்துக்குக் காவலா யிருக்கின்றதென்றும், காளி சூலத்தைத்தாங்கி நிற்றல்போல இதுவும் சூலத்தைத் தாங்கி நிற்கின்றதென்றும், நாராயணன் யாவர்க்கும் அடைதற்கரியனா யிருத்தல்போல இதுவும் எல்லார்க்கும் அடைதற்கரியதா யிருக்கின்றதென்றும் பொருள் விரித்துரைத்துக்கொள்க.

102. பஞ்சிவான்மதியையூட்டி யவனையபடருகிர்ப் பங்கயச்செங்கால் [பணைத்தோள்
வஞ்சிபோன்மருங்குல் குரும்பைபோற் கொங்கைவாங்கு வேய்வைத்தமென்
அஞ்சொலார்பயிலு மயோத்திமாநகரி னழகுடைத்தன் றெனவறிவான்
இஞ்சிமானோங்கி யிமையவருலகங் காணியவெழுந்த தொத்துளதே.

(இ-ள்.) பஞ்சி - செம்பஞ்சிக்குழம்பில், வால் - வெண்ணிறமுள்ள, மதியை- சந்திரனை, ஊட்டிய அனைய - சேர்த்ததையொத்த, படர் - பரந்த, உகிர் - நகங்களோடுகூடிய, பங்கயம் - செந்தாமரை மலர்போன்ற, செங்கால்-செம்மை நிறமாகிய பாதங்களையும், வஞ்சிபோல் - பூங்கொடிபோல்கின்ற, மருங்குல் - இடையையும், குரும்பைபோல்-தென்னங்குரும்பைபோல்கின்ற, கொங்கை-தனங்களையும், வாங்கு- வளைதற்குரிய இளமைவாய்ந்த, வேய்வைத்த - மூங்கிலையொத்த, மெல் - மிருதுவாகிய, பணை - திரட்சியாகிய, தோள் - தோள்களையும், அம்சொல்லார்-மதுரமொழிகளையுமுடைய மாதர், பயிலும் - வாசம்பண்ணுகிற, அயோத்திமாநகரின் - அயோத்திமா நகரம்போல, அழகு உடைத்து அன்று என் - அழகினையுடையதோ அன்றோ வென்று, அறிவான் - அறியும்பொருட்டு, இஞ்சி-மதிலானது, வானோங்கி - ஆகாயத்தில் உயர்ந்து, இமையவர் உலகம்காணிய-தேவலோகத்தைப் பார்க்கும்பொருட்டு, எழுந்தது ஒத்து உளது - எழுந்ததை யொத்திருக்கின்றது—எ-று. (உ)

உடைத்து அன்று என்பவற்றி னிறுதியில் ஓகாரம் சேர்க்கப்பட்டது. சொல்லுக்கு அழகு மதுரமாதலால் மதுரமொழியெனப் பொருள் கூறப்பட்டது. அஞ்சொலார் பயிலும் என்றதனால் இமையவருலகம் இந்திராணி, ரம்பை, ஊர்வசி, திலோத்தமை, மேனகை என்பவர்களும், வித்யாதர அப்ஸரஸ்ஸுக்கள் முதலானவர்களும் ஆகிய இவர்களால் நிரப்பப்பட்டுள்ள தென்பதும், போகாதிக ளநுபவித்தற்குச் சிறந்த இடமென்பதும் இனிது விளங்கும். அது இந்திராணியொருத்தியின் போகசுக மநுபவித்தற்கே நூறு வேள்விசெய்து முடித்துவருதல் புராணங்களா

லுணர்க, கால்விரலின் நகம் வெள்ளியதாயிருத்தல் வேண்டலின் வான்மதியை அதற்குவமையாக்கினர்.

103. கோலிடையுலக மளத்தலிற்பகைஞர் முடித்தலைகோடலின்மனுவின்
நூனெறிநடக்குஞ செவ்வையின்யார்க்குநோக் கருங்காவலின்வலியின்
வேலொடுவாள்விற் பயிற்றலின்வெய்ய சூழ்ச்சியின்வெலற்கருவலத்திற்
சால்புடையுயர்விற் சக்கரநடத்துந் தன்மையிற்றலைவ ரொத்துளதே.

(இ-ள்.) (மதிலானது) கோலிடை - கோலால், உலகம் - சிற்பம் வல்லோர், அளத்தலின் - அளத்தலாலும், பகைஞர் - பகைவருடைய, முடித்தலை-கிரீடமணிந்த தலைகளை, கோடலின் - (யந்திரங்களால்) கொள்ளுதலாலும், மனுவின் நூல்நெறி- மனுவினால் செய்யப்பட்ட சிற்பநூலின்வழியே, நடக்கும் - வேலைப்பாடுகள் நடத்தப்படுகின்ற, செவ்வையின் - அழகாலும், யார்க்கும் - யாவர்க்கும், நோக்கு அரு - நோக்குதற்குமரிய, காவலின் - காவலினாலும், வலியின் - பலத்தினாலும், வேலொடு- வேலுடன், வாள்வில்-வாள்விற்களை, பயிற்றலின் - பயில்வித்தாலும், வெய்யசூழ்ச்சியின் - நுட்பமா யுணரத்தக்க வுபாயங்களை யுடைத்தாதலாலும், வெல்லற்கு அரு - பிறர் வெல்லுதற்கரிய, வலத்தின்-வெற்றியினாலும், சாயல்பு உடை உயர்வின்-நிறைவாகிய வுயர்ச்சியினாலும், சக்கரம் நடத்தும் தன்மையின் - சக்ரம் நடத்துமெ தன்மையினாலும், தலைவர் ஒத்து உளது-அயோத்யாநகரம் சக்ரவர்த்திகளை யொத்திருக்கின்றது—எ-று. (கக)

சக்ரவர்த்தியைக் குறிக்கும்போது, கோல்-செங்கோல். மனுவின் நூல்நெறி- மனுநூலின்வழி. காவல்-காத்தற்றொழில். நிறைவாகிய வுயர்ச்சி யென்றது உயர்ச்சிக்கெல்லை இனி யில்லையென்னுமாறு உயர்ந்திருத்தல். சக்கரம் ஆஜ்ஞா சக்கரம். மதிலுக்குச் சூழ்ச்சி - புறத்தோர் வரத்துப்போக்குகளைச் செய்யாமைக்கும் உள்ளிடத்தோர் அவைகளைச் செய்தற்குமுரிய நுழை முதலியவைகளைக் கொண்டிருத்தல் (நுழை - திட்டிவாயில்) கோலிடையுலகம் அளத்தல் - என்பதற்கு கோலால் நடுப்பிரதேசம் சிற்பத்தில் உயர்ந்தவர்களால் அளக்கப்படுதல், மதிலுக்கும்; செங்கோலினால் இடமகன்ற பூமிமுற்றும் அளவுசெய்தல் சக்ரவர்த்திக்கும் உரைக்க.

104. சினத்தயில்கொலைவாள் சிலைமழுத்தண்டு சக்கரந்தோமரமுலக்கை
கனத்திடையுருமின் வெருவருங்கவண் கல்லென்றிவை கணிப்பிலகொதுகின்
இனத்தையுமுவணத் திறையையுமியங்கும் காலையுமிதமலநினைவார்
மனத்தையுமெறியும் பொறியுளவென்றான் மற்றினியுணர்த்துவதெவனோ.

(இ-ள்.) சினத்து - கோபத்தையுடைய, அயில் - வேலும், கொலை - கொலைசெய்யும், வாள் - வாளும், சிலை - வில்லும், மழு - மழுவும், தண்டு-தடியும், சக்கரம்-சக்கரமும். தோமரம் - கைவேலும், உலக்கை - உலக்கையும், கனத்திடை - மேகத்தின்கண் விளங்கும், உருமின் - இடியைப்போல, வெருவரும்-அச்சத்தைக் கொடுக்கும், கவண்கல் என்ற இவை - கவண்கல்லுமென்று சொல்லப்பட்ட இவை, கணிப்பு இல - எண்ணில்லாதன, கொதுகின் இனத்தையும் - கொசுகின் இனங்களையும், உவணத்து இறையையும் - கருடனையும், இயங்கும் காலையும்-செல்லுங்காற்றினையும், இதம் அல - தீங்குகளை, நினைவார்-நினைப்பவர்களுடைய, மனத்தையும் - மனத்தையும், எறியும் - வெட்டத்தக்க, பொறியுளவென்றால் - இயந்திரங்களம்மதிலின் கணுள ஆயின், இனி உணர்த்துவது எவனோ - அம்மதிற்காவ லிவ்வளவினவென்று சொல்லுவ தெவ்வாறு—எ-று. (கஉ)

கொதுகினினத்தையும் உவணத்திறையையும் என்றமையால், படிந்தும் உயர்ந்தும் செல்லும் பொருள்களையும், இயங்குங்காலையும் இதமலரினைவார் மனத்தையும் என்றமையால் பரிசம் பரிசமின்மைகளையுமுடைய பொருள்களையும் எறியும் என்ற வாருயிற்று.

105. பூணினும்புகழேயவையுமென்றினைய பொற்பினின்றுயிர்நனிபுரக்கும்
யாணரெண்டிசைக்கு மிருளறவிமைக்கு மிரவிதன்குலமுனிருபர்
சேனையுங்கடந்து திசையையுங்கடந்து திகிரியுஞ்செந்தனிக்கோலும்
ஆணையுங்கடக்கு மாயினுநகருக் கணியெனவியற்றியதன்றே.

(இ-ள்.) பூணினும் - ரத்நாபரணங்களினும், புகழே - கீர்த்தியே, அமையுமென்று - ஆபரணமாகப் பொருந்துவதென்று கருதி, இனைய - இத்தன்மையுள்ள, பொற்பின்நின்று - பொலிவோடுநின்று, உயிர் - உயிர்களை, நனி - மிகுதியும், புரக்கும் - இரட்சியாநின்ற, யாணர் - நன்மையையுடைய, எண்திசைக்கும் - அட்ட திக்குகளினிடத்துள்ள, இருள் அற - இருளகல, இமைக்கும் - ஒளிரும், இரவி தன் குலம் - சூரியகுலத்திலுண்டாகிய, முதல்நிருபர்-தலைமைபொருந்திய அரசருடைய, திகிரியும் - ஆணைச்சக்கரமும், தனி - ஒப்பற்ற, செங்கோலும் - நீதியும், ஆணையும் - கட்டளையும், சேனையுங்கடந்து - சுவர்க்கத்தையுங்கடந்து, திசையையுங்கடந்து - திக்குகளையுங்கடந்து, கடக்கும் ஆயினும் - இவ்வுலகத்தையுங் கடக்குமேயானாலும், நகருக்கு - நகருக்கு, அணியென - அழகைத்தருவதென்று, இயற்றியது அன்றே - இம்மதில் செய்யப்பட்டிருக்கின்றதே—எ-று. (கரு)

பூண் உடம்பொன்றினுக்கே அழகையுண்டாக்கும். புகழ் உலகமெல்லாங் கொண்டாடத்தக்க பேரழகையுண்டாக்கி, புகழ்படைத்தோன் மறையினும் தான் மறையாது நிலைபெற்றிருத்தலால், பூணினும் புகழேயமையும் என்றார். புகழ் கல்வியறிவொழுக்கங்களாலும், வீரம், கொடை, முதலியவற்றாலும் உண்டாவது. திகிரியும், செங்கோலும், ஆணையும், சேனையும், திசையையும், உலகமுழுமையையும் கடக்குமாயினும், மதிலாற் பயனிலதே எனின்; அங்ஙனமன்று; நகர்க்கு இன்றியமையாச் சிறப்பிற்றாதலால் கட்டியதென உணர்க. இனி ஒருரை. உயர்ச்சியினால் சேனையும், பரப்பினால் திக்குகளையும், அத்திபாரத்தினால் நாகலோகத்தையும், திகிரியும், செங்கோலும். ஆணையும்சொல்லாத இடங்களிலும் சென்று கடத்தலால், அம்மதிலைவைத்தல் கூடாதெனின், நகர்க்கு அழகைத் தருவதெனக் கட்டினதாதலால் வைத்தனரென்றவாறு.

106. அன்னமாமதிலுக் காழிமால்வரையை யலைகடல்சூழ்ந்தவகழி
பொன்விலைமகளிர் மனமெனக்கீழ்போய்ப்புகன்கவியெனத்தெளிவின்றிக்
கன்னியரல்குற் றடமெனயார்க்கும் படிவருங்காப்பினதாகி [நாம்.
நண்ணெறிவிலக்கும் பொறியெனவெறியுங் கராத்ததுநவிலலுற்றது

(இ-ள்.) அன்ன - அத்தன்மையாகிய, மாமதிலுக்கு - பெரியமதிலை, மால் ஆழி வரையை - பெரியசக்கரவாளகிரியை, அலைகடல் - அலைநீரையுடைய பெரும்புறக் கடல், சூழ்ந்தால் அன - சூழ்ந்தால் ஒத்ததாய்ச் சூழ்ந்திருக்கும், அகழி - அகழியானது, பொன்விலைமகளிர் - பொன்விலைகூறித் தம்நலம்விற்கும் பரத்தைமாதரது, மனம்என - மனம்போல, கீழ்போய் - ஆழ்ந்ததும், புல்கவியென - முற்றக் கல்லாதாருடைய புன்மையாகிய கவிபோல, தெளிவு இன்றி - தெளிவில்லாததும், கன்னியர் - குலமகளிராகிய கன்னியர்களுடைய, அல்குல் தடமென - அல்குற்ற

டம்போல, யாவர்க்கும் - யாவர்க்கும், படிவு அரு - தோய்தற்கரிய, காப்பினதாகி - காவலானதுமாய், நல்நெறி - நல்லவொழுக்கத்திற் செல்லவொட்டாது, விலக்கும் - விலக்குகின்ற. பொறி என - ஐம்பொறிகள்போல, வெறியும் - மதர்க்கின்ற, கராத்தது - முதலைத்திரள்களையுடையது, நாம் நவிலல் உற்றது-இவ்வகழியின் பெருமை இனி நம்மாற் சொல்லப் பொருந்திற்று—எ-று- (கசா)

அகழியானது ஆழ்ந்து, தெளிவின்றி, காவலானதுமாம், நம்மாற் சொல்ல லுற்றதென முடிக்க. சக்ரவாளகிரி ஏழுகடற்கும் அப்புறத்திலிருப்பது. பெரும்புறக் கடல் அம்மலைப்புறத்திற் சூழ்ந்திருப்பது. விலைமாதர் மனம்போல அளவறியப் படாமையால், "பொன்விலைமாதர் மனமெனக்கீழ்போய்" என்றும், குலமாதர் பருவத்தை யடைந்திருந்தாலும் விவாகமாவதற்கு முன்னெ ஒருவருஞ் சேரக் கூடாமல் காவலுற்றிருத்தல்போல, இதுவும் ஒருவரு நீராடாவண்ணம் தோயக் கூடாத காவலோடு கூடியிருத்தலால், "கன்னியரல்குற்றடமெனயார்க்கும்படிவருங் காப்பினதாகி" என்றுங்கூறினர். கன்னியர் விவாகமாகாத பெண்கள், சூழ்ந்தன்ன- சூழ்ந்தாலன்ன. கராம் - முதலை.

வே று.

107. ஏகுகின்றதங்கணங்க ளோடுமெல்லைகாண்கிலா
நாகமொன்றகன்கிடங்கை நாமவேலையாமெனா
மேகமொண்டுகொண்டெழுந்து விண்டொடர்ந்தகுன்றமென்
றாகநொந்துநின்றுதாரை யம்மதிற்கண்வீசுமே.

(இ-ள்.) மேகம் - மேகமானவை, ஏகுகின்ற-நீரைமுகக்கச்செல்லாநின்ற, தங்கணங்கள் - தங்கள் கூட்டங்கள், ஓடும் எல்லை-ஓடுகின்றவழியை, காண்கிலா - நாடாமல், நாகம் - நாகலோகம் வரைக்கும், ஒன்று - பொருந்திய, அகல் - அகன்ற கிடங்கை - அகழியையே, நாமம் - அச்சத்தைத்தரும், வேலையாமெனா - கடலாமென்றெண்ணி, கொண்டுகொண்டு-அதன்கண்ணுள்ள நீரைமொண்டுகொண்டு, எழுந்து- மேலெழுந்து. விண்தொடர்ந்த - ஆகாயத்தையாளாவிய, குன்றமென்று - மலையென்றெண்ணி, அம்மதிற்கண் - அம்மதிலினிடத்து, ஆகம்நொந்து - உடல்வருந்தியேறி, நின்று - சூல்முதிருகிறவரைக்கும் படிந்திருந்து (பின்பு மேலுயர்ந்து), தாரை - மழையை, வீசும் - பொழியும் எ-று. (கரு)

காண் இலா என்பது இடையில் குச்சாரியைபெற்று, அக்குற்றியலுகரத்தின் மேல் வருமொழி முதலுயிரேறிக் காண்கிலாஎன நின்றது. இதனால் மதிலினுயரமும் அகழியின் அகல ஆழங்களுங் கூறப்பட்டன. மேகம் அகழியைக்கண்டளவில், அதையே சமுத்திரமாகக்கருதி அதின் நீரையுண்டு, மதிலை மலையாகக் கருதி அதன்மேற் பொழியுமென்பது கருத்து,

108. அந்தமாமதிற்புறத் தகத்தெழுந்தலர்ந்தநீள்
கந்தநாறுபங்கயத்த கானமானமாதரார்
முந்துவாண்முகங்களுக் குடைந்துபோனமொய்ப்பெலாம்
வந்துபோர்மலைக்கமா மதில்வளைத்தன்மானுமே.

(இ-ள்-) அந்தமாகில்-அந்தப்பெரியமதிலின், புறத்து - வெளிப்புறத்து விளங்கும், அகத்து - அகழியினகத்து, எழுந்து அலர்ந்த - எழுந்துமலர்ந்த, நீள் - மிளகுந்த, கந்தம் நாறும்-மணங்கமழும், பங்கயத்த - தாமரையாகிய, கானம் - வனமானது, மானம்-மானமுள்ள, மாதரார்-அந்நகர மகளிர்களுடைய, வாள் - ஒளிபொரு

திய, முகங்களுக்கு - முகங்களுக்கு, முந்து-முன்னுளில், உடைந்துபோன-தோற்று நீங்கிய, மொய்ம்பு எலாம் - வலியெல்லாம், வந்து-பின்வந்தமையால், போர்மலைக்க-மீட்டும் போர்செய்ய, மாமதில் - அப்பெரியமதிலை. வளைந்தல்-சூழ்ந்ததை, மானும்-ஒப்பாகும்—எ-று. (கசு)

செந்தாமரைமலர்கள் அந்நகரத்திலுள்ள மாதர் முகங்களுடன் போர்செய்ய மதிலைச் சூழ்ந்துகொண்டதை யொத்ததென்பது கருத்து.

109. சூழ்ந்தநாஞ்சில்சூழ்ந்தவாரை சுற்றுமுற்றுபாரெலாம்
போய்ந்தமாகிடங்கிடைக் கிடந்துபொங்கிடங்கர்மா
தாழ்ந்தவங்கவாரியிற் றடுப்பொணுமதத்தினுல்
ஆழ்ந்தயானைமீதெழுந் தழுந்துகின்றபோலுமே.

(இ-ள்.) சூழ்ந்த - மிகுந்த, நாஞ்சில் - நாஞ்சில்களுடன், சூழ்ந்த - சூழப்பட்ட, ஆரை-அம்மதிலை, சுற்றும் - சூழ்தலைப்பொருந்திய, முற்றுபார் எலாம்-எல்லா நிலத்தையும், போழ்ந்த-அகழ்ந்துபோன்ற, மாகிடங்கிடை - பெரிய அகழியினிடத்து, கிடந்து - இருந்து, பொங்கு - பொங்குகின்ற, இடங்கர்மா - முதலைகள் (உள்ளே யாழ்ந்து மீட்டு மேலெழுவது எவ்வாறெனில்) தாழ்ந்த - ஆழ்ந்த, வங்கம்-மரக்கலங்களையுடைய, வாரியில் - சமுத்திரத்தினிடத்தில், தடுப்பு ஒணு - தடுக்க ஒண்ணுத, மதத்தினுல் - மதமயக்கத்தினுலே, ஆழ்ந்த - அமிழ்ந்த, யானை - யானைகள்மீது, எழுந்து-மேலெழுந்து, அழுந்துகின்றபோலும் - மீட்டும் அழுந்துகின்றனபோலிருக்கின்றன—எ-று. (கஎ)

நாஞ்சில் - மதிலுறுப்பு. முதலை ஆழ்ந்தெழுதல் யானை யாழ்ந்தெழுதல்போன்றிருக்கின்றதென்பது கருத்து.

110. ஈரும்வாளின்வால்விதிர்த் தெயிற்றிளம்பிறைக்குலம்
பேரமின்னிவாய்விரித் தெதிர்ந்தகட்பிறங்குதீ
சோரவொன்றையொன்றுமுன் றொடர்ந்துசீறிடங்கர்மா
போரில்வந்துசீறுகின்ற போரரக்கர்போலுமே.

(இ-ள்.) ஈரும்வாளின் - ஈர்கின்ற வாள்போல, வால்விதிர்த்து - வாலை அசைத்து, எயிறு-பற்களாகிய, இளம் - இளமைபொருந்திய, பிறைக்குலம் - பிறைக்கூட்டங்கள், மின்னிப்பேர - ஒளிவிட்டு விளங்க, வாய்விரித்து - வாயைத் திறந்துகொண்டு, எதிர்ந்த - எதிர்த்த, கண் - கண்களினின்றும், பிலங்குதீ - விளங்குந் தீப்பொறிகள், சோர - சொரிய, ஒன்றையொன்று - ஒன்றை மற்றென்று, முன்றொடர்ந்து - எதிரிட்டுத்தொடர்ந்து, சீறு-சீறுகின்ற, இடங்கர்மா - முதலைகள் (விளங்குவதெவ்வாறெனில்), போரில்வந்து - போர்க்களத்தின்கண் வந்து, சீறுகின்ற - ஒருவரை யொருவர் பார்த்துச் சீறுகின்ற, போரரக்கர்போலும் - போர்செய்கின்ற அரக்கர்போலும்—எ-று. (கஅ)

பல்லின் பன்மையைநோக்கி அதற்குவமையாகிய பிறையையும் பன்மையாகப் பிறைக்குலமென்றுர். முதலைகள் ஒன்றோடொன்று போர்செய்தல் அரக்கர் ஒருவரோடொருவர் போர்செய்தலை யொத்திருந்ததென்பது கருத்து.

111. ஆளுமன்னம்வெண்குடைக் குலங்களாவருங்கரா
கோளெலாமுலாவுகின்ற குன்றமன்னயானையாத்
தாளுலாவுபங்கயத் தரங்கமுந்துரங்கமா
வாளும்வேலுமீனமாக மன்னர்சேனைமானுமே.

(இ-ள்.) ஆளும் - அவ்வகழியில் பயின்றுகொண்டிருக்கும், அன்னம் - அன்னப் பட்சிகள், வெண்குடைக் குலங்களா - வெண்குடைக் குலங்களாகவும், வரும்கரா- அதிற்சஞ்சரிக்கும் முதலைகளெல்லாம், கோள் எலாம் - சூரியன்முதலிய ஒன்பது கோள்களும், உலாவுகின்ற-ஊரும்படியான (உயர்வுள்ள), குன்றம் அன்ன-மேருவை யொத்த, யானையா-யானைகளாகவும், தாளுலாவு - கொடிகள் பொருந்திய, பங்கயம்- தாமரைகளையுடைய, தரங்கமும் - அலைகளும், துரங்கமா-குதிரைகளாகவும், மீனம்- மீன்கள், வாளும் - வாள்களும், வேலும் ஆக - வேல்களும் ஆகவும், மன்னர் சேனை மானும் - மன்னர் சேனையொடு மொத்துவிளங்கும்—எ-று. (கக)

அகழியானது அன்னங்களாகிய வெண்குடைக்குலங்கள் முதலானவற்றைக் கொண்டிருத்தலால் மன்னர் சேனையை யொத்திருந்ததென்பது கருத்து.

112. விளம்புதெற்றிமுற்றுவித்து வெள்ளிகட்டியுள்ளுறப்
பளிங்குபொற்றலத்தகட் டடுத்துறப்படுத்தலில்
தளிர்ந்தகற்றலத்தொடச் சலத்தினைத்தனித்துறத்
தெளிர்ந்துணர்த்துகிற்றுமென்றல் தேவராலுமாவதே.

(இ-ள்.) விளிம்பு - அவ்வகழியினருகே, தெற்றி - திண்ணைகள், வெள்ளிகட்டி- வெள்ளியாற்கட்டி, முற்றுவித்து - முடிப்பித்து, உள் உற - உள்ளெலாம் பொருந்த, பொன்தலம்-பொன்தலமாகிய, தகடு - தகட்டினிடத்து, பளிங்கு -படிகம், அடுத்து உற-அடுத்தடுத்துப்பொருந்த, படுத்தலின்-படுத்திருத்தலினால், தளிர்ந்த - போழ்ந்த, கல் தலத்து ஒடு - அப்படிகக்கல்லுடன், அச்சலத்தினை - அவ்வகழியிலுள்ள நீரை, தனித்து உற - தனித்துப்பொருந்த, தெளிந்து - இது படிகக்கல் இது நீரெனப் பகுத்தறிந்து, உணர்த்துகிற்றுமென்றல் - சொல்லவல்லோ மென்பது, தேவராலு மாவதே - தேவர்களாலு மாகாது—எ-று. (உ0)

தேவராலுமாவதே என்றமையால மற்றையோர்க்குச் சொல்லவேண்டா தாயிற்று.

113. அன்னநீரகன்கிடங்கு சூழ்கிடந்தவாழியைத்
துன்னிவேறுசூழ்கிடந்த தூங்குவீங்கிருட்பிழம்
பென்னலாமிறும்புசூழ் கிடந்தசோலையெண்ணிலப்
பொன்னின்மாமதிட்குடுத்த நீலவாடைபோலுமே.

(இ-ள்.) அன்ன - அத்தன்மையாகிய, நீர்-நீர்வளமுடைய, அகல் - அகலமாகிய, கிடங்கு - அகழியை, சூழ்கிடந்த-சூழ்ந்துகிடக்கின்றனவாகிய, ஆழியை-பெரும்புறக் கடலை, துன்னி - கிட்டி, வேறுசூழ்கிடந்த - தனியே சூழ்ந்துள்ள, தூங்கு - நிலைத் துள்ள, வீங்கு - மிகுந்த, இருட்பிழம்பு - இருளினது திரட்சி, என்னல் ஆம்-என்று சொல்லத்தக்கதாகிய, இறும்பு - மலையரண் உளது, சூழ்கிடந்த - சூழ்ந்த, சோலை- காட்டரணை, எண்ணில் - எண்ணுமிடத்தில், பொன்னின்-பொன்னாலாகிய, அம்மா மதிட்கு - அப்பெரியமதிலுக்கு, உடுத்த - சுற்றிய, நீல ஆடைபோலும் - நீலத்திரைச் சீலையைப்போலும்—எ-று. (உக)

அகழியின்புறத்துச் சூழ்ந்திருக்கு மலையரண் பெரும்புறக்கடலுக்குப் புறத் திருக்கும் இருட்பிழம்புபோலும், அம்மலையரணைச் சூழ்ந்த காட்டரண், நகரத்துக் குக் கண்ணெச்சில்படாமல் சுற்றிவைத்த நீலவாடையை ஒக்கும். அகழியைச் சூழ்ந்த மலைகளும், காடுகளும் விளங்கியதன்மை இவ்வாறென்ப திதன்கருத்து.

114. எல்லைநின்றவென்றியானை யென்னநின்றமுன்னமால்
ஒல்லையும்பர்நாடளந்த தாளின்மீதுயர்ந்தவால்
மல்லன்ஞாலம்யாவுநீதி மாறுறாவழக்கினல்
நல்லவாறுசொல்லும்வேத நான்குமன்னவாயிலே.

(இ-ள்.) வாயில் - வாயில்கள், எல்லைநின்ற - நான்குதிக்குகளி னிடத்திற்கும், வென்றி - வெற்றிபொருந்திய, யானை என்ன . யானைகள்போல, நின்ற - நிலைபெற்று நின்றன, (அன்றியும்) முன்னம் - முற்காலத்தில், மால் - திருமால், ஒல்லை-விரைவாக, உம்பர்நாடு - மேலுலகத்தை, அளந்த - அளந்த, தாளின் - சீர்பாதம் போல, மீதுஉயர்ந்த - மேலாகவுயர்ந்தன, (இவ்வாறுயர்ந்ததுமன்றி) மல்லல் - வளப்பத்தையுடைய, ஞாலம்யாவும் - உலகங்களிலுள்ள ரெல்லார்க்கும், நீதி மாறுறா - நீதிமாறுபடாமல், வழக்கினல் - தீர்மானம் வழங்குதலால், நல்லவாறு - நன்னெறிகளை, சொல்லும் - சொல்லுகின்ற, நான்குவேதம் - நான்குவேதங்களையும், அன்ன - ஒத்திருக்கின்றன—எ-று. (உஉ)

பகைவரால் அழிக்கப்படாத திண்மையும் நிலைமையையுமுடையதென்பது தோன்ற எல்லைநின்ற வென்றியானையென்ன வென்றும், ஒருபொருளைப்பற்றி இருவர் மாறுபட்டு வாயிலின்வழிச்சென்று, அரசர்க்கரசன்க ணுணர்த்தியபோது, இருவரும் ஒப்ப நீதிமுறையைக்கூறிச் செல்லவிடுத்தலால் அதனை வாயிலின்மேலேற்றி வேதநான்குமன்ன என்றும் கூறினர்.

115. தாவில்பொற்றலத்தினற் றவத்தினோர்கடங்குதாட்
பூவுயிர்த்தகற்பகப் பொதும்பர்புக்கொதுங்குமால்
ஆவியொத்தவன்புசேவல் கூவவந்தணைந்திடா
ஓவியப்புறாவின்மா டிருக்கவூடுபேடையே.

(இ-ள்.) ஆவியொத்த - தன்னுயிரொத்த, அன்பு - அன்பினையுடைய, சேவல் - ஆண்புறாவானது, கூவ - தான்கூவவும், வந்து அணைந்திடா - வந்துசேராமல், ஓவியம் - அக்கோபுரசிகரங்களில் சித்திரமாகச்செய்யப்பட்ட, புறாவின்மாடு - பெட்டைப்புறாவினிடத்தில், இருக்க - இருக்கக்கண்டு, ஊடு - ஊடிய, பேடை - பெட்டைப்புறாவானது, நல் - நல்ல, தவத்தினோர்கள் - தவமுள்ளவர்கள், தங்கும் - வாசமாயிருக்கும், தாஇல் - குற்றமில்லாத, பொன்தலத்து - பொன்னுலகத்திலிருக்கும், தாள் - தாள்களையுடைய, பூ - மலர்களை, உயிர்த்த - மலர்ந்த, கற்பகப்பொதும்பர் - கற்பகமரச்செறிவினிடத்து, புக்கு ஒதுங்கும் - சென்றுசேரும்—எ-று.

பெட்டைப்புறா கூவவும், சேவற்புறா வராமல் சித்திரப்புறாப் பேடையினிடத்திருக்கக்கண்டு ஊடித் தெய்வலோகத்திலிருக்கும் கற்பகச்சோலையிற் போயிருக்குமெனக் கூட்டியுரைக்க, பெருந்தவங்களைச் செய்தவர்கள் தங்குதற்குரிய கற்பகச்சோலையில் ஒதுங்கும் [மயங்கித் தன்சேவல் சித்திரப்பெட்டையினின்று அழைக்க ஊடியபெட்டை] இத்திருவிருத்தம் இந்நகரத்தின் புண்ணியமிகுதியை யுணர்த்திற்று. பஞ்சதருக்களாவன: அரிச்சந்தனம் - கற்பகம் - சந்தானம் - பாரிசாதம் - மந்தாரம் - என்பவை.

116 கல்லடித்தடுக்கிடுவாய் பளிங்கரிந்துகட்டிமீது
எல்லிடப்பசும்பொன்வைத் திலங்குபன்மணிக்குலம்
புல்லிடக்குயிற்றிவாள் விரிக்கும்வெம்வெள்ளிமாமரம்
புல்லிடக்கிடத்திவச் சிரத்தகால்பொருந்தியே.

(இ-ள்.) கல் அடித்து - கற்களைச் செம்மைசெய்து, அடுக்கி - அடித்தலத்தி லடுக்கி, பளிங்கு - பளிங்குகளை, அரிந்து - சிறுக அரிந்து, வாய் - வாயில்வைத்து, கட்டி - கட்டி, மீது - மேலே, எல்விட-ஒளிவிட, பசும்பொன் - பசும்பொன்னால், வைத்து-சுவர்வைத்து, இலங்கும் விளங்கிய, பல்-பலவாகிய, மணிக்குலம் - மணித் திரள்களை, வில்விட - ஒளிவிட, குயிற்றி - அச்சுவரின்க ணழுத்தி, வாள்விரிக்கும்- ஒளியை வீசும், வெள்ளிமரமரம் - வெள்ளியாலரகிய பெரிய உத்திரமரங்கள், புல்லிட - பொருந்த, கிடத்தி - சேர்த்து, வச்சிரத்த - வச்சிரங்களாலாகிய, கால்-திரு நிலைக்கால்கள், பொருத்தி - நாட்டி—எ-று. (௨௪)

இதுகுளகம் - இதுவுமது.

117. மரகதத்திலங்குபோதி கைத்தலத்துவச்சிரம்
புரைதபுத்தடுக்கிமீது பொன்குயிற்றிமின்குலா
நிரைமணிக்குலத்தினாளி நீள்வகுத்தவோளிமேல்
விரவுகைத்தலத்திலுய்த்த மேதகத்தின்மீதரோ.

(இ-ள்.) மரகதத்த -(அத்திருநிலைக்கால்களின்மேல்) மரகதங்களாற் செய்யப் பட்டு, இலங்கு-விளங்குகின்ற, போதிகை - போதிகைகளைவைத்து, தலத்து - அத் தலத்தின்மேல், வச்சிரம் - வச்சிரங்களை, புரைதபுத்து - பழுதுநீக்கி, அடுக்கி - உற் திரப்பாக்களாகச் சேர்த்தடுக்கி, மீது - அதன்மீது, பொன்குயிற்றி - பொன்னாற் செய்த தகடுகளமைத்து, மின்குலாம்-ஒளிவிளங்கும், நிறை - வரிசையாக, மணிக்கு லத்தின் - பல மணிகளாலும், ஆளி - ஆளிவடிவாகச்செய்த, நீள்வகுத்த - பெருந் தூண்வைத்த, ஒளிமேல் - நீண்டநிலமாகக்செய்த ஒழுங்குள்ள ஆதாரவுத்திரத்தின் மேல்உள்ள, விரவுகைத்தலத்தில் - பரந்த கொடுங்கைகளின்மேல், உயத்த - வைக்கப்பட்ட, மேதகத்தின்மீது - கோமேதகவரிச்சலின்மேல்—எ-று. (௨௫)

118 ஏழ்பொழிற்குமேழ்நிலத்த லஞ்சமைத்ததென்னநூல்
ஊழுறக்குவித்தமைத்த வும்பர்செம்பொன்வேய்ந்துமீக்
சூழ்சுடர்ச்சிரத்துநன் மணித்தசல்புதோன்றலால்
வாழ்நிக்குலக்கொழுந்தை மௌலிசூட்டியன்னவே.

(இ-ள்.) ஏழ்பொழிற்கும் - மேலேழுலகத்தாரும் உலாவுதற்கு, ஏழ்நிலத்தலம் - ஏழுநிலைகளை, சமைத்ததென்ன - உண்டாக்கியதுபோல, நூல் - சிற்பநூலிற்சொல் லும், ஊழ் உற -விதிக்குச்சரியாகப் பொருந்த, குவித்து அமைத்த - குவித்துக்கட் டிய, உம்பர் - அதன்மேல், செம்பொன்-செம்பொன்னால், வேய்ந்து-முகடுவேய்ந்து, மீசூழ்சுடர் - அதன்மே லொளிசூழ்ந்த, சிரத்து - சிகரத்தில், நல் - நல்ல, மணி - மாணிக்கங்களால் செய்யப்பட்ட, தசம்பு-குடங்கள், தோன்றலால் - தோன்றுத லால், (அக்கோபுரமானது) வாழ் - வாழும், நிலக்குலக்கொழுந்தை - பூமிபிராட் டிக்கு, மௌலிசூட்டியன்ன - முடிசூட்டினாற்போன்றன—எ-று.

இந்நகரத்தை முன்னம் நிலமகள் முகமோ என்றதற்கேற்பக் கோபுரத்தை மகுடமாகக் கூறினர்,

வே று.

119. திங்களுங்கரிதெனவெண்மைதீற்றிய
சங்கவெண்சுதையுடைத் தவளமாளிகை
வெங்டுங்கால்பொரமேக்குநோக்கிய
பொங்கிரும்பாற்கடற் றரங்கம்போலுமே.

(இ-ள்.) திங்களும்-சந்திரனும், கரிதென - கரியதென்றுசொல்லும்படி, வெண்மைதீற்றிய-வெண்மைநிறம் பொருந்தப்பூசிய, வெண்சங்கச்சுதை உடை - வெண்சங்குச்சாந்தத்தையுடைய, தவளம்-தவளநிறமுள்ள, மாளிகை-மாளிகைகள், (விளங்குதலெவ்வாறென்னில்) வெம் - கிருதியாகிய, கடுங்கால்பொர - கடுங்காற்றடித்தலால், மேக்குநோக்கிய-மேல்நோக்கியெழுந்த, பொங்கு-பொங்கிவரும், இரு-பெருமையையுடைய, பாற்கடல்-திருப்பாற்கடலின், தரங்கம்போலும்-அலைபோலும்—எ-று.

உம்மை சிறப்பும்மை. உடைய என்னும் குறிப்புப்பெயரெச்ச விறுதிநிலை விகாரத்தாற் றொக்கது. கரிது என்றற்கு முதனிலை-கருமை. பொர-காரணப்பொருட்டு

120. புள்ளியம்புறவிறை பொருந்துமாளிகை
தள்ளருந்தமனியத் தகடுவேய்ந்தன
எள்ளருங்கதிரவ னிளவெயிற்குழாம்
வெள்ளியங்கிரிமிசை விரிந்தபோலுமே.

(இ-ள்.) புள்ளி - புள்ளிகளையுடைய, புறவு - புறாக்கள் வாசஞ்செய்யும், இறை-இறப்புகளை, பொருந்தும்-பொருந்திய, மாளிகை-மாளிகைகளின்மேல், தள்ளரு-நீக்குதற்கரிய, தமனியத்தகடுவேய்ந்தன- பதிக்கப்பட்டிருக்கும் பொற்றகடுகள், வெள்ளியங்கிரிமிசை-வெள்ளிமலைமேல்,விரிந்த-பரந்த,எள் அரு-இகழ்ச்சியில்லாத, கதிரவன் - சூரியனுடைய, இளவெயிற்குழாம்போலும் - இளங்கதிர்க்கூட்டத்தை யொக்கும்—எ-று. (உஅ)

புள்ளி அம்-வெள்ளி அம்-இவற்றிலிருக்கும் அம் என்பவை சாரியை. புறா என்பது புறஎனக் குறுகி உகரச்சாரியைபெற்றுப் புறவு என நின்றது.

அழகென உரைக்கினும் இழுக்காது. புறவு இறை-சிறந்த புறாக்களெனினும் பொருந்தும்.

121. வயிரநற்கான்மிசை மரகதத்துலாம்
செயிரறப்போதிகை கிடத்திச்சித்திரம்
உயிர்பெறக்குயிற்றிய வும்பர்நாட்டவர்
அயிருறவிமைப்பன வளவில்கோடியே.

(இ-ள்.) வயிரம்-வயிரமணியாலாகிய, நல் - நல்ல, கால்மிசை-தூண்களின்மேல், மரகதத்துலாம்-மரகத உத்திரம், செயிர் அற-குற்றமற, போதிகை கிடத்தி-மரகதப் போதிகைகளின்மேல் கிடத்தி, உயிர்பெற - உயிரைப் பெற்றிருப்பதுபோற்றோன்றும், சித்திரம் - சித்திரங்களை, குயிற்றிய - செய்யப்பட்டனவாகி, உம்பர்நாட்டவர்-தேவர்களும், அயிர்உற - (உயிருள்ளனவோ இல்லனவோ என்று) ஐயப்படும்படி இமைப்பன-விளங்குவன, அளவு இல்கோடி-அநேகங் கோடிமாளிகைகள்—எ-று.

122. சந்திரகாந்தத்தின் றலத்தசந்தனப்
பந்திசெய்தூணின்மேற் பவளப்போதிகைச்
செந்தனிமணித்துலாஞ் செறிந்ததிண்சுவர்
இந்திரநீலத்த வெண்ணில்கோடியே.

(இ-ள்.) சந்திரகாந்தத்தின் - சந்திரகாந்தக்கற்கள் பதித்த, தலத்த - நிலத்தை யுடையனவாகியும், பந்தி-வரிசையாக, செய் - நிறுத்திய, சந்தனத்தூணின்மேல்-சந்தனமரத்தூண்களின்மேல், பவளப்போதிகை - பவளப்போதிகைகளின்மேல், செந் தனிமணித்துலாம்-சிவந்த ஒப்பற்ற மாணிக்க உத்திரங்கள், செறிந்த-நெருங்கிய, திண்-வலிய, சுவர்-சுவர்கள், இந்திரநீலத்த-இந்திரநீல ரத்தினங்களால் செய்யப்பட்டனவாகியும், (விளங்குமாளிகைகள்) எண்ணில்கோடி-பலகோடியாம்—எ-று. (௬௦)

உம்மைகள் விகாரத்தாற்றொக்கன. நீலரத்தினங்களுக்குள் இந்திரநீலரத்தினம் சிறந்தது. இதன்குணம் ஒருகுடப் பசுவின்பாலில் இம்மணியைப்போட்டால் அப்பால்முழுவதும் நீலநிறமாயிருக்குமென்பது. இது !இவ்வாசிரியரோடொத்த சான்றோர்நூல்களிற் காண்க.

மகளிர்க்கும் மாளிகைக்கும் சிலேடை.

123. பாடகக்காலடி பதுமத்தொப்பன
சேடரைத்தழீஇயன செய்யவாயன
நாடகத்தொழிலன நடுவுதுய்யன
வாடகத்தோற்றத்த வளவிலாதன.

(இ-ள்.) பாடகம்-பாடகம் அணிந்த, கால் அடி-கால்களின் அடிகள், பதுமத்து ஒப்பன - செந்தாமரைமலர்களை யொப்பனவாகியும், சேடரை - பாங்கர்களை, தழீஇயன-அன்புபாராட்டுவனவாகியும்,செய்யவாயன-செம்மைநிறம்பொருந்தியவாயினை யுடையனவாகியும், நாடகத்தொழிலன-பரதத்தொழிலுள்ளனவாகியும், நடுவு துய்யன நூற்கதிர் நுனிபோன்ற இடையினையுடையனவாகியும், ஆடகத்தோற்றத்த-பொன்னொளியன்ற காட்சியை யுடையனவாகியுமிருத்தலால் மகளிரையொத்திராநின்ற மாளிகைகள், அளவிலாதன-அளவில்லாதவைகளா யிருக்கின்றன—எ-று.

அடி-கீழ்ப்புறமானது, பதுமத்து ஒப்பன - தாமரைமலரை ஒப்பனவாகி, பாடகம்-விசித்திரமான தொழிலுள்ளவைகளாகிய, கால் - தூண்களை யுடையவைகளும், சேடரைததழீஇயன - அஸ்திவாரத்தினால் ஆதிசேஷன்முடியைப் பொருந்தியவைகளும், செய்யவாயின - ஒழுங்குபடச்செய்தமைத்தவைகளும், நாடு - யாவரும் வியப்புடன் பார்க்கும்படியான, அகத்தொழிலன-உட்புறத்தொழிலுள்ளவைகளும், நடுவு-நடுப்புறம், துய்யன - இழைநூற்பஞ்சுபோன்ற தொழில் நாணயமுள்ளவைகளும், ஆடகம்-பொன்மயமாகிய, தோற்றத்த-காட்சியை யுடையனவாகியும் விளங்காநின்ற மாளிகைகள், அளவு இலாதன - அளவில்லாதவைக ளிருக்கின்றன எனப்பொருள் கூறுவதுமொன்று. (௬௧)

ஒப்பன முதலிய முற்றுகள் எச்சமுற்றுகள். தழுவிய எனற்பாலது விகாரவகையால் தழீஇயன என நின்றது. இத்திருவிருத்தத்தை வீட்டின்மேலேற்றிக் கூறுகையில் பாடு அகம்-பெருமையாகிய வீட்டினது, காலடி-தூண்களின் அடிகள், பதுமத்தொப்பன-தாமரைமலர்களை ஒப்பன, சேடரை தழீஇயன - (அத்திபாரத்தினால்) ஆதிசேடனைச் சேர்ந்துள்ளன, செய்ய ஆயன - அலங்காரமமைந்தனவாயுள்ளன, நாடு-(யாவரும்) நாடுகின்ற, அகத்தொழிலன - தம்மிடத்துச் சித்திரத்தொழிலுள்ளன, நடுவுதுய்யன-நடுவிடம் தூயன, ஆடகத்தோற்றத்த-பொன்போலும் காட்சியன, அளவு இலாதன-அளவில்லாதன—எ-று.

124. புக்கவர்கண்ணிணை பொருந்துறாதொளி
தொக்குடன்றயங்கிவிண் ணவரிற்றோன்றலால்
திக்குறநினைப்பினிற் செல்லுந்தெய்வவீ
டொக்கநின்றிமைப்பன வும்பர்நாட்டினும்.

(இ-ள்.) புக்கவர் - அம்மாளிகைகளைப் பார்க்கப்புகுந்தவர்கள், கண் இணை - இரண்டுகண்களும், பொருந்து உறாது - (இமைகள்) பொருந்தாமல், ஒளிதொக்கு- ஒளி நிரம்பி, உடன் தயங்கி - அவற்றோடு விளங்கி, விண்ணவரில்-நித்தியசூரிகளைப் போல, தோன்றலால் - காணப்படுதலால், நினைப்பினில் - தியானத்தால், திக்கு உற-(சேதனனுக்கு) பெருந்துணையாகப் பொருந்த, செல்லும் - செல்லுதற்குரிய, தெய்வவீடு - முதற்கடவுளுடைய பரமபதத்தை, ஒக்கநின்று - ஒப்பாகத்தோன்றி, உம்பர்நாட்டினும் - தேவருடைய அமராவதியினும், இமைப்பன - ஒளிவீசுகின்றன- எ-று. (௬௨)

உம்பர்நாட்டினும்-தேவர்கள் ஆராய்ந்து துணிந்தாலும். எனவும் உரைக்கலாம்.

125. அணியிழைமகளிரு மலங்கல்வீரரும்
தணிவனவறநெறி தணிவிலாதன
மணியினும்பொன்னினும் வனைந்தவல்லது
பணிபிறிதியன்றன பாங்குமில்லையே.

(இ-ள்.) (அம்மாளிகைகள்) அணியிழை-அழகுசெய்கின்ற ஆபரணங்க ளணிந்துள்ள, மகளிரும் - மாதர்களையும், அலங்கல்-மாலைகள்சூடிய, வீரரும் - ஆடவர்களையும், தணிவன-நீங்குவன ஆயினும், அறநெறிதணிவு இலாதன - தருமநெறிகளை நீங்காதனவாகி, மணியினும்-மணிகளாலும், பொன்னினும்-பொன்னினாலும், வனைந்த வல்லது - செய்யப்பட்டவைகளேயல்லாமல், பிறிது - வேறொரு பொருளால், பணி இயன்றன - தொழில்செய்யப்பட்ட மாளிகைகள், பாங்கும் இல்லை - பக்கங்களிலும் இல்லை—எ-று. (௬௩)

உரிய ஆடவர்களும், மாதர்களும் யாத்திரைசெய்யினும், அவர்கள் அமைத்துள்ள அறங்கள் மாறாமல் நடக்கும் அம்மாளிகைகளில் என்பது.

126. வானுறநிமிர்ந்தன வரம்பில்செல்வத்த
தானுயர்புகழெனத் தயங்குசோதிய
ஊனமிலறநெறியுற்றவெண்ணிலாக்
கோனிகர்குடிகடங் கொள்ளைசான்றன.

(இ-ள்.) (அம்மாளிகைகள்) வான் உற - சுவர்க்கத்தையளாவும்படி, நிமிர்ந்தன- உயர்ந்தவைகளும், வரம்பு இல் - அளவில்லாத, செல்வத்த-செல்வத்தையுடையவைகளும், உயர்புகழென - உயர்ந்த புகழை ஒத்தனவாகி, தயங்கு - விளங்குகின்ற, சோதிய - ஒளியையுடையவைகளும், ஊனமும் இல் - பழுதில்லாத, அறநெறியுற்ற- அறநெறியைப் பொருந்தியவைகளுமாய், கோன்நிகர் - செல்வங்களால் சக்கரவர்த்தியை ஒத்த, எண்ணிலா-அளவில்லாத, குடிகள்தங்கொள்ளை-குடிகளுடைய மிகுதி, சான்றன-நிறைவுபெற்றன—எ-று. (௬௪)

127. அருவியிற்றாழ்ந்துமுத் தலங்குதாமத்த
விரிமுகிற்குலமெனக் கொடிவிராயின
பருமணிக்குவையன பசும்பொற்கோடிய
பொருமயிற்கணத்தன மலையும்போன்றன.

(இ-ள்.) (அம்மாளிகைகள்) அருவியின்தாழ்ந்து - அருவிகளைப்போலத் தாழ்ந்து, அலங்கும் - அசையும், முத்துத்தாமத்த - முத்துமாலைகளை யுடையனவாகியும், விரிமுகில்குலமென - பரந்தமேகக்கூட்டம்போல, கொடி-நீலத்துகிற்கொடிகளால், விராயின - கலக்கப்பட்டுள்ளவைகளாயும், பருமணிக்குவையன - பருத்த மணிக்குவைகளையுடையனவாகியும், பசும்பொன்கோடிய - பசும்பொன் மிகுதிகளை யுடையனவாகியும், பொரும் - பொருந்திய, மயில் கணத்தன - மயில் கூட்டம்போன்ற மாதர்களையுடையனவாகியும், மலையும்போன்றன-மலையினையும் ஒப்பனவாம்-எ-று. ()

மாளிகைக்கு - பொருமயிற்கணத்தன என்பதை, பொரும் - போர் செய்தற்குரிய, அயில்கணத்தன-கூரிய ஆயுதங்களையுடையன என உரைக்க. பசும்பொன்-மாற்றுயர்ந்தபொன்,

128. அகிலிடுகொழும்புகை யளாய்மயங்கின
முகிலொடுவேற்றுமை தெரிகலாமுழுத்
துகிலொடுநெடுங்கொடிச் சூலமின்னுவ
பகலிடுமின்னணிப் பரப்புப்போன்றவே.

(இ-ள்.) அகிலிடு - அகிற்கட்டையினால் இடப்பட்ட, கொழும்புகை - செழுமையாகிய புகையுடனே, அளாய்மயங்கின - கலந்தவைகளாய், முகிலொடு - நீருண்ட மேகத்துடன், வேற்றுமை - வேறுபாடு, தெரிகலா - தெரியாத, முழுத்துகிலொடு- பெரிய துகிற்கொடியுடன், நெடுங்கொடிச்சூலமின்னுவ - நெடிய கொடி முனையிலுள்ள சூலங்கள் மின்னுகின்றவை, பகலிடு - பகற்போதிலிடுகின்ற, மின் - மின்னலினுடைய, அணி - வரிசையின், பரப்புபோன்றன - விரிவைப் போன்றிருக்கின்றன—எ-று. (௩௬)

அகிற்புகையுடன் கலந்தகொடியாடை மேகம்போன்றிருப்பதினால் அதன் முனையிலுள்ள சூலம் பகலில் விளங்கு மின்னல்போன்றிருக்கின்றன வென்பது இதன் கருத்து.

129. துடியிடைப்பணைமுலைத் தோகையன்னவர்
அடியிணைச்சிலம்புபூண் டரற்றுமாளிகைக்
கொடையிடைத்தரளவெண் கோவைசூழ்வன
கடியுடைக்கற்பகங் கான்றமாலையே.

(இ-ள்.) துடியிடை - உடுக்கைபோலு மிடையும், பணைமுலை - பருத்த முலைகளையுமுடைய, தோகையன்னவர் - மயில்போலுஞ் சாயலுள்ள மகளிர்களது, அடியிணை-இரண்டு பாதங்களிலும், சிலம்புபூண்டு - சிலம்புகள் சூழ்ந்து, அரற்றும்-ஒலித்துக்கொண்டிராநின்ற, மாளிகை - மாளிகைகளின்மேல் கட்டிய, கொடியிடை கொடிகளினிடத்து, வெள் - வெண்மையாகிய, தரளம்கோவை சூழ்வன முத்துமாலைகள் சூழ்வனவெல்லாம், கடியுடை - மணம் பொருந்திய, கற்பகம் - கற்பக விருக்ஷம், கான்ற - உதிர்த்த, மாலையே - மாலையையேயொத்தன—எ-று.

துகிற்கொடிகள் சுவர்க்கத்தை அளாவி யசைவதினால் கற்பகங்களினின்றும் உதிர்கின்ற மலர்வரிசைகளையே அம்முத்துமாலைகள் ஒத்தன. சுருங்கிய இடை பருத்தமுலை பாரஞ்செய்தலினாலிறும், மெல்ல நடமினென்று பாதங்களைச் சூழ்ந்து கொண்டு சிலம்புகள் கதறுவன ஆயின, என்பது.

130. காண்வருநெடுவரைக் கதலிக்கானம்போல்
கோணிமிர்பதாகையின் குழாந்தழைத்தன

வானணிமழுங்கிட மடங்கிவைகலும்
சேண்மதிதேய்வதக் கொடிகடேய்க்கவே.

(இ-ள்.) நெடுவரை - பெரியமலையினிடத்து, காண்வரு - காணப்படுகின்ற, கதலிக் கானம்போல் - வாழைக்காடுபோல் - கோள்நிமிர் - நவக்கிரக மண்டலம் வரைக்கும் உயர்ந்த, பதாகையின்குழாம் - பெருங்கொடித்திரள், தழைத்தன - தழைத்திருக்கின்றவை, வாள் - ஒளி, நனி - மிகவும், மழுங்கிட - மழுங்கும்படி, மடங்கி - வளைந்து, வைகலும் - நாடோறும், சேண் - ஆகாயத்திற் செல்லுகின்ற, மதி - சந்திரன், தேய்வது - தேய்கின்றதாயிருக்கின்றது, (அவ்வாறுதேய்வது) அக்கொடிகள் - அந்தக்கொடிகள், தேய்க்கவே - தேய்ப்பதினாலேயாம்—எ-று.

131. பொன்றிணிமண்டப மல்லபூத்தொடர்
மன்றுகளல்லன மாடமாளிகை
குன்றுகளல்லன மணிசெய்குட்டிம
முன்றில்களல்லன முத்தின்பந்தரே

(இ-ள்.) பொன்திணி - பொன்னால் அழுத்திக்கட்டிய, மண்டபம் - மண்டபங்களுள்ளன, அல்லன - அல்லாத இடங்களில், பூத்தொடர் - பொலிவுபொருந்திய, மன்றுகள் - மன்றங்களுள்ளன, அல்லன - அல்லாத இடங்களில், மாடமாளிகை - மாடமாளிகைகளாகிய, குன்றுகள் - குன்றுகளுள்ளன, அல்லன - அல்லாத இடங்களில், மணிசெய் நவமணிகள்பதித்த, குட்டிமம்முன்றில்கள்-சமதளங்களாகிய முன்றில்களுள்ளன, அல்லன - அல்லாத இடங்களில், முத்தின்பந்தர்-முத்தின்பந்தருள்ளன—எ-று. (௩௧)

எனவே அந்நகரத்தில் வெற்றிடங்கிடையாதென்பது கருத்து.

மண்டபமுதலியவைகளை எழுவாயாகக்கொண்டு உள - என்னு மொருசொல் கூட்டி அதனைப்பயனிலையாகக் கொள்க.

மண்டபங்களல்ல - முத்தின்பந்தராம். மன்றுகளல்லன - முத்தின் பந்தராம், மாளிகைக்குன்றுகளல்லன - முத்தின்பந்தராம். முன்றில்களல்லன - முத்தின் பந்தராம். இவ்வாறு பொருள்கூறுவதுமொன்று. இவ்வாறு கூறுங்கால் மண்டப முதலியவை எழுவாயும், முத்தின்பந்தராம், என்பது-பயனிலையுமாகக்கொள்க.

மண்டபமுதலியவைதள் முத்துக்கோவைகளால் அலங்கரிக்கப்பட்டிருக்கின்றமையால் முத்துப்பந்தல்போ லிருக்கின்றனவென்பது கருத்து

132. மின்னெனவிளக்கென வெயிற்பிழம்பெனத்
துன்னியதமனியத் தொழிறழைத்தவக்
கன்னிநன்னகர்நிழல் கதுவலாலரோ
பொன்னுலகாயதப் புலவர்வானமே.

(இ-ள்.) மின் என - மின்னலைப்போலவும், விளக்கு என . விளக்கைப்போலவும், வெய்யிற்பிழம்பு என-வெய்யில்பிழம்பைப்போலவும், துன்னிய - ஒளிபொருந்திய, தமனியம் - பொன்னாற்செய்யப்பட்ட, தொழில் தழைத்த-தொழில்நிறைந்த, கன்னி - அழிவில்லாத, அ நல்கர் - (அயோத்தியாநகரமாகிய) அந்த நல்லநகரினுடைய, நிழல்-ஒளி, கதுவலால்-(சுவர்க்கத்தில்சென்று) தாக்குதலால், புலவர் - தேவர்களுறையும், வானம்-சுவர்க்கம், பொன் உலகு ஆயது-பொன் உலகம் ஆயிற்று.

பிழம்பு திரட்சி-அல்லது மிகுதி. அயோத்தியாநகரத்தினொளி சுவர்க்கத்தில் தாக்கலால் பொன்னுலகாயிற்று என்ப திதன்கருத்து.

133. எழுமிடத்தகன்றிடை யொன்றியெற்படு
பொழுதிடைபோதலிற் புரிசைப்பொன்மதில்
அழன்மணிதிருத்திய வயோத்தியாளுடை
நிழலெனப்பொலியுமா னேமிவான்சுடர்.

(எழுமிடத்து-சூரியன் உதயமாகும்போது, அகன்று - பேரொளி நீங்கி, இடையொன்றி-நடுப்பகலில் நிரம்பி, எற்படுபொழுது-பகற்காலம் நீங்கும்போது, இடைபோதலின்-நீங்கிப்போதலால், அழல்மணி-மாணிக்கமணிகள், திருத்திய - செவ்வையாகப்பதித்த, புரிசைப்பொன்மதில் - பொன்னாலாகிய மதில்சூழ்ந்த, அயோத்தியாளுடை - அயோத்தியாநகரமாகிய பெண்ணினுடைய, நிழலென - ஒளியையுடையதென்றுசொல்ல, பொலியும் - விளங்குகின்றது, நேமிவான்சுடர் - வட்டமாகிய சூரியன்—எ-று. (சுக)

(இ-ள்.) எழுமிடத்து-சூரியன் உதயமாகும்போது, அகன்று-ஒளியைநீங்கி, இடையொன்றி - அயோத்திவை யடுத்துவரும்போது ஒளியைப்பொருந்தி, எற்படுபொழுதிடை பகற்காலம் நீங்கும்போது, போதலின்-ஒளிவைநீங்கி விடுதலின், அயோத்தியினொளியென்று சொல்லும்படி பொலியும் என்றுரைப்பதுமொன்று. சூரியனிடத்து இயல்பாக ஒளியிருக்குமானால் உதயமாகும்போதே யொளியிருக்கவேண்டும், அவ்வாறின்மையால், அயோத்திநகரத்து ஒளியைக்கொண்டே சூரியன் விளங்குமென்பது கருத்து. புரிசைப்பொன்மதில் இருபெயரொட்டுப் பண்புத்தொகை.

134. ஆய்ந்தமேகலையவ ரம்பொன்மாளிகை
வேய்ந்தகாரகிற்புகை யுண்டமேகம்போய்த்
தோய்ந்தமாகடனறுந் தூபநாறுமேல்
பாய்ந்ததாரையினிலை பகரல்வேண்டுமோ.

(இ-ள்) ஆய்ந்த-திருத்தமாகச் செய்யப்பட்ட, மேகலையவர்-மேகலையினையணிந்தமாதர், அம்-அழகிய, பொன் - பொன்னாற்செய்த, மாளிகை - மாளிகைகளிடத்து, வேய்ந்த - (அளகத்திற்கு ஊட்டவும் பூசிக்கொண்ட களபம்புலரவும்) அமைத்த, கார்-கருமையாகிய, அகிற்புகை அகிற்புகையை, உண்ட-பொருந்திய, மேகம்-மேகங்கள், போய்-நீருண்ணச்சென்று, தோய்ந்த-படிந்த, மாகடல்-பெரியகடலானது, நறுமணத்தையுடைய. தூபம்-அப்புகைவாசனையே,நாறுமேல்-மணக்குமானால், பாய்ந்த-அம்மேகங்களினின்று கீழேவிழுந்த, தாரையினிலை - மழையினுடைய தன்மையை, பகரல்வேண்டுமோ-சொல்லவேண்டுமோ—எ-று. (சுஉ)

அம்மேகங்கள் பொழிந்தநீரும் மணக்குமென்ப திதன்கருத்து.

135. குழலிசைமடந்தையர் குதலைகோதையர்
மழலையங்குழலிசை மகரயாழிசை
எழிலிசைமடந்தைய ரின்சொலின்னிசை
பழையர்தஞ்சேரியிற் பொருநர்பாட்டிசை.

(இ-ள்.) குழலிசை - கடையொத்துவருகின்ற அளகத்தையுடைய, மடந்தையர்-பெண்களின், குதலை - குதலைச்சொற்கள், அம்-அழகிய, குழலிசை - வேய்ங்குழலினிசைபோலாம், கோதையர் - கடைகூடிய அளகத்தையுடைய பெண்களின், மழலை - மழலைச்சொற்கள், மகரயாழிசை - மகரயாழிசைபோலாம், எழிலிசை - எல்லா அழகும் நிரம்பப்பெற்ற, மடந்தையர் - மாதர்களுடைய, இன் - இனிய,

சொல் இன் இசை - சொல்லாகிய இனிய இசையானது, பழையர்தம் - கள்விலைஞருடைய, சேரியில் - சேரியிலிருக்கும், பொருநர் - கூத்தருடைய, பாட்டிசை-பாட்டிசை போலாம்—எ-று. (௩௩)

போலாமென்னுஞ்சொல் வருவித்துரைக்கப்பட்டது. மழலையாவது, எழுத்து வடிவுபெற்றுத் தோற்றுமிளையவர் வார்த்தை ஆயினு மிம்மழலைப்பேரிளம் பெண் வரையிலும் கூறத்தகும்.

குதலை - எழுத்து வடிவும்கூடாத புன்சொல். குழலிசை மடந்தையர் வேய்ங் குழலிசையானது எழிலிசைமடந்தைய ரின்சொலின்னிசையை யொக்குமென்றும் டிதலைக் கோதையர் மகரயாழியை பொருநகர் பாட்டிசையை யொக்கு மென்றும் பொருள்கூறினும், அன்றியும், வேய்ங்குழலிசையும் மகரயாழிசையும் இன்சொலின் னிசையும் பாட்டிசையும் அந்நகரத்தின்கண் விளங்குமெனப் பொருள்கூறினும் அமையும்.

136. கண்ணிடைக்கனல்சொரி களிறுகால்கொடு
மண்ணிடைவெட்டுவ வேட்குமைந்தர்கள்
பண்ணைகள்பயிலிடங் குழிபடைப்பன
சுண்ணமைக்குழிகளைத் தொடர்ந்துதூர்ப்பன.

(இ-ள்.) கண்ணிடை - கண்களினிடமாக, கனல் - தீப்பொறிகளை, சொரி - சொரிகின்ற, களிறு - யானைகள், கால்கொடு - கால்களால், மண்ணிடை - பூமியினிடத்து, வெட்டுவ-வெட்டுவன (அதனால்) வேட்குமைந்தர்கள் - கண்டோர் விரும்பத்தகும் மைந்தர்களது, பண்ணைகள் - கூட்டங்கள், பயில் இடம் - விளையாடுமிடங்கள், குழிபடைப்பன - குழிகளைப் பெறுவன, சுண்ணம் - அவர்களணிந்துகொண்டிருக்கு நறும்பொடிகளே, தொடர்ந்து-தொடர்ந்து வீழ்ந்து, அக்குழிகளைத் தூர்ப்பன - அந்தக்குழிகளைத் தூர்ப்பனவாம்—எ-று. (௩௪)

137. பந்துகண்மடந்தையர் பயிற்றுவாரிடை
சிந்துவமுத்தின மவைதிரட்டுவார்
அந்தமில்சிலதிய ராற்றகுப்பைகள்
சந்திரனொளிகெடத் தழைப்பதண்ணிலா.

(இ-ள்) பந்துகள் - பந்துகளை, பயிற்றுவார் - ஆடுகின்றவர்களாகிய, மடந்தையர் இடை - மாதர்களிடத்தினின்றும், முத்து இனம் - முத்தினங்கள், சிந்துவ - சிந்துவன, அவை - அம்முத்தினங்களை, அந்தம் இல் - அளவில்லாத, சிலதியர் - தாதிகள், திரட்டுவார் - ஓரிடத்தில் சேர்ப்பார்கள், ஆற்ற - அவ்வாறு சேர்த்த, குப்பைகள்-குவியல்கள், சந்திரன் - சந்திரனுடைய, ஒளி - பிரகாசமானது, கெட - மழுங்கும்படி, தண்-குளிர்ச்சி பொருந்திய, நிலாதழைப்ப-நிலாதழைப்பன—எ-று. (௩௫)

ஆற்றின என்னும் பெயரெச்சத்தில் இன் இடைநிலை தொகுத்தலாயிற்று.

138. அரங்கிடைமடந்தைய ராடுவாரவர்
கருங்கடைக்கண்ணயில் காமர்நெஞ்சினை
உருங்குவமற்றவ ருயிர்களன்னவர்
மருங்குல்போற்றேய்வன வளர்வதாசையே.

(இ-ள்.) மடந்தையர் - மாதர்கள், அரங்கு இடை - நாடகசாலையில், ஆடுவார் - ஆடுகின்றார்கள், அவர் - அவர்களுடைய, கரு - கருமையாகிய, கடைக்கண் -கடைக்கண்களாகிய, அயில் - வேல்கள், காமர் - காமுகருடைய, நெஞ்சினை - மனத்தை,

உருங்குவ - உருகச்செய்வன, (அதனால்) மற்றவர் - அக்காமுகருடைய, உயிர்கள்- உயிர்களானவை, அன்னவர் - அம்மாதர்களுடைய, மருங்குல் போல் - இடைகள் போல, தேய்வன - மெலிகின்றன, ஆசை - அக்காமுகருக்குண்டாகு மாசையோ வெனில், வளர்வது-மெலிவின்றி மேலுமேலும் விர்த்தியாகின்றது—எ-று. (சகூ)

உருக்கு எனற்பாலது - உருங்குவஎன மெலித்தல் விகாரமாயிற்று. மருங்குல் போற்றேய்வன என்றமையின் அம்மாதர்தனம்போல ஆசைவளர்வன எனக்கூறி னும் அமையும். கடைக்கண்-கண்ணினது கடையென ஆறும்வேற்றுமைத் தொகை யாகக்கொள்க.

139. பொழிவனசோலைகள் புதியதேன்சில
விழைவனதென்றலு மிஞிறுமெல்லென
நுழைவனவன்னவை நுழையநோவொடு
குழைவனபிரிந்தவர் கொதிக்குங்கொங்கையே.

(இ-ள்.) சோலைகள்-சோலைகளானவை, புதியதேன் - புதுத்தேனை, சில - சிறு துளிகளாக, பொழிவன - துளிப்பன, விழைவன - விரும்புகின்றவைகளாகிய, மிஞி றும் - (துணையோடுபிரியாத) வண்டுகளும், தென்றலும் - தென்றற்காற்றும், மெல் லென - மந்தகதியாக, நுழைவன - நுழைகின்றன, அன்னவை - அவ்விரண்டும், நுழைய - (அவ்வாறு) நுழைவதினால், பிரிந்தவர் - பிரிந்திருக்கு மடவாருடைய, கொதிக்கும் - வெதும்புகின்ற, கொங்கை-தனங்கள், நோவொடு - வருத்தத்தோடு, குழைவன-மெலிகின்றன—எ-று. (சஎ)

நுழைய - காரணப் பொருட்டு. சில என்னும் குறிப்புப்பெயரெச்சம் சிறுமை யின் மேலது; சின்னீர், சில்லோதி என்பனபோல. பிரிந்தவர் கொங்கைகள் நோ வொடு கொதிப்பதற்குக் காரணம் துணையோடு பிரியாமை ஆதலால் வருவித்துரைக் கப்பட்டது.

140. இறங்குவமகரயா ழெடுத்தவின்னிசை
நிறங்கிளர்பாடலா னிமிர்வவவ்வழி
கறங்குவவள்விசி கருவிகண்முகிழ்த்
துறங்குவமகளிரோ டோதுங்கிள்ளையே.

(இ-ள்.) மகரயாழ் - மகரயாழினிடத்து. எடுத்த - (விரலாலே) கவர்ந்தெடுத்த, இன்னிசை - இனிய இசையானவை, நிறங்கிளர் - வண்ணம் விளங்குகின்ற, பாட லால் - (மிடற்றோசையினது) பாட்டொடு, இறங்குவ - நலிந்தொலிப்பன, நிமிர்வ- எடுத்தொலிப்பன, அவ்வழி - அம்முறையே, வள்விசி - வார்கட்டிய, கருவி-முழவங் கள், கறங்குவ-ஒலிப்பன, (அவ்விசையைக்கேட்டு) மகளிரோடு-மடவாரோடு, ஓதும்- பேசும், கிள்ளை - கிள்ளைகள், கண்முகிழ்த்து - கண்களை மூடிக்கொண்டு, உறங்குவ- துயில்வனவாம்—எ-று. (சஅ)

இறங்குவ நிமிர்வ மகரயாழ் என்பதற்கு - அவரோகண ஆரோகண கிரமமுள்ள யாழெனப் பொருள் கூறினும் அமையும். இதுவுமன்றி-எடுத்த இன்னிசை - விரல் கவர்ந்தெடுத்த கீதம் என உரைக்கலாம். இதனை காந்திருவதத்தை யாரிலம்பகத் தில் காண்க. பாடலால்-வேற்றுமை மயக்கம்.

மகரயாழ் - கக-நரம்புகளையுடையது. கிள்ளையே யிவ்வாறுயின், நாகணவாய்ப் புள், மயில், அன்னம் முதலிய பறவைகளின் தன்மையும் ஏனையோர் தன்மையும் எடுத்துக் கூறவேண்டுவதில்லையாயிற்று.

141. குதைவரிச்சிலைநுதற் கொவ்வைவாய்ச்சியர்
பதயுகத்தொழில்கொடு பழிப்பிலாதன
ததைமலர்த்தாமரை யன்னதாளினால்
உதைபடச்செவப்பன வுரவுத்தோள்களே.

(இ-ள்.) குதை - குதையுடைய, வரி - கட்டமைந்த, சிலை - வளைந்தவில்போன்ற, நுதல் - நெற்றியினையும், கொவ்வை - கோவைக்கனிபோலும், வாய்ச்சியர் - வாயினையுமுடைய மடவார்களுடைய. பதயுகம் - இரண்டு அடிகளுக்குமுரிய, தொழில்கொடு -(செம்பஞ்சியூட்டல் சிலம்புமுதலியன அணிதல் முதலிய) தொழில்களைப்பெற்று, பழிப்பு இலதான - பழிப்பில்லாதனவாகிய, ததை - இதழ்கள் நெருங்கிய, மலர்த்தாமரையன்ன - செந்தாமரைமலரையொத்த, தாளினால் - பாதங்களால், உதைபட - (உடலில்) உதைபடுதலினாலே உரவுத்தோள்கள் - ஆடவர்களுடைய வலியதோள்கள், செவப்பன - செம்மைநிறம்படைப்பன—எ-று. (௪௧)

இது மனைவியினுடைய ஊடலை நீக்கத் தொடங்கியகாலத்தில் நிகழ்ந்த செய்கை, அக்காலத்து உதைத்தலால் மகளிருக்குக் குற்றமில்லையென்றது அறநூற்றுணிபு. தலைமகனுந் தலைமகளுமோரமளிக்கட் கூடியிருந்துழி அவன் மாட்டுப்புலத்தற் காரணமில்லையாகவும், காதல் கைம்மிகுதியலானுண்ணியதோர் காரணமுளதாக வுட்கொண்டதனை யவன்மேலேற்றி யவள் ஊடுதல். பதயுகத்தொழில்கொடு என்பதற்கு, பாதத்துக்குரிய இருவகை நடனத்தைப் பயின்றுளன உரைத்தலுமாம். கூத்திருவகை யென்பதனை, "சாந்திகக்கூத்தே விநோதக்கூத்தென்றாய்ந் துறவகுத்தன னகத்தியன்றனே" என்னுஞ் சூத்திரத்தினுலுணர்க. இதனை விரித்துரைப்பிற் பெருகும். காந்திருவதத்தையாரிலம்பகம் - ௱அ௰-வது செய்யுளுரையில் கண்டுகொள்க.

142. பொழுதுணர்வரியவப் பொருவின்மாநகர்த்
தொழுதகைமடந்தையர் சுடர்விளக்கெனப்
பழுதறுமேனியைப் பார்க்குமாசைகொல்
எழுதுசித்திரங்களு மிமைப்பிலாதவே.

(இ-ள்.) பொழுது உணர்வு அரிய -(பொன்மணியொளிகளின் மிகுதியால்) பகற்பொழுதும் இராப்பொழுதும் அறிதற்கரிய, பொருவில் - ஒப்பில்லாத, அம்மாநகர் - பெரிய அந்நகரிடத்திராநின்ற, தொழுதகை-(கற்பினால்) தொழத்தக்க தன்மையினையுடைய, மடந்தையர்-மாதருடைய, சுடற் - ஒளிபொருந்திய, விளக்கென - விளக்கைப்போல, பழுது அறு - குற்றமற்ற, மேனியை - சரீரத்தை, பார்க்கும் - பார்க்கவேண்டுமென்கிற, ஆசைகொல் - ஆசையினாலோ, எழுது - மாளிகைகளில் எழுதிய, சித்திரங்களும் - ஓவியங்களும், இமைப்பு இலாத - இமைப்பில்லாத தன்மையை யுடையன—எ-று. (௫௦)

மணியொளி - வெயிலொளியையும், நிலவொளியையு மழுக்குதலினால் பொழுதுணர்வரியவென்றார். "நல்லாரணிகலம் பகலைச்செய்ய" என்னுஞ் சிந்தாமணிச் செய்யுளானு முணர்க.

143. தணிமலர்த்திருமக டயங்குமாளிகை
இணைரொளிபரப்பிநின் றிருமேரப்பன
திணிசுடர்நெய்யுடைத் தீவிளக்கமோ
மணிவிளக்கல்லன மகளிர்மேனியே.

(இ-ள்.) தணி - செழுமையாகிய, மலர் - மலரின்கண்வாழும், திருமகள் - திருமகளானவள், தயங்கும்-விளங்காநிற்கும், மாளிகை - மாளிகைகளானவை, இணர் - கற்றையாகிய, ஒளி - ஒளிகளை, பரப்பிநின்று-விரித்துநின்று, இருள் - இருளை, துரப்பன - நீக்குகின்றன, திணி - திணிகடந்த, சுடர்-சுடர்பொருந்திய, நெய்யுடை-நெய்யையுடைய, தீவிளக்கமோ - தீவிளக்கங்களோ, மணிவிளக்கு - மாணிக்கத்தீபங்கள், அல்லன - இவ்விரண்டு மல்லாதவை, மகளிர்மேனியே - மாதர்களுடைய இயல்பான மேனிகளே—எ-று. (ருக)

மாளிகையினின்றும் ஒளிபரந்து இருளைத் துரக்காநின்றன. அவ்வொளி தீவிளக்கொளியோ மணிவிளக்கொளியோ-அல்ல' மாதர் மேனியொளியேயென்பது கருத்து.

மாதர்கள் மேனியினொளி இருவகையொளியினுஞ் சிறந்ததென்பதாயிற்று.

144. பதங்களிற்றண்ணுமை பாணிபண்ணுற
விதங்களின்விதிமுறை சதிமிதிப்பவர்
மதங்கியரச்சதி வகுத்துக்காட்டுவ
சதங்கைகளல்லன புரவித்தார்களே.

(இ-ள்,) பதங்களின் - அடிகளால், தண்ணுமை-முழவமும், பாணி -(தோரியமடந்தையர் பாடும்) இசைப்பாட்டும், பண் - யாழ்நரம்பினிசையும், உற-ஒத்து ஒலிக்க, விதங்களின்-(அபிநய) விதங்களுடன், விதிமுறை -(பரதசாஸ்திர) முறைமைப்படி, சதிமிதிப்பவர் - சதிமிதிப்பவர்கள், மதங்கியர் - பதினாறுவயதுள்ள பெண்களாம், அ சதி - அவர்களாடும் அந்தச்சதியை, வகுத்துக்காட்டுவ - வகைப்படுத்திக்காட்டுமவை, சதங்கைகள் - அவ்வடியில் அணிந்த சதங்கைகளே, அல்லன - அவையல்லாதவை, புரவித்தார்களே -(மேற்சொல்லிய முறைமைப்படி ஆடும்) குதிரைகளின் (கழுத்துகளில் அணியப்பட்டிருக்கும்) கிங்கிணிமாலைகளே—எ-று. (ருஉ)

வலத்தாள்முன்மிதித்து அரங்கிலேறிக் கைத்தலங்காட்டி ஆடுதல் மரபாதலால், சதிமிதிப்பவரென்றார். இதற்குக் கமலவர்த்தனை யென்றுபெயர். மிதித்தலென்னுங்காரணம் கூத்தாகியகாரியத்தைக் காட்டிநின்றது. தோரியமடந்தையர் - ஒத்துப்பாடுகின்றவள். அபிநயமாவது - சுதைதழுவாது பாட்டுகளின் பொருள் தோன்றக் கைகாட்டி அபிநயிப்பது - இது அந்நகரத்தினிகழும் பரதத்தின் சிறப்புக் கூறியது. இதனால் பரதசாத்திரவிதிப்படி நடிக்கும் பெண்களது சிறப்புக் கூறப்பட்டது.

145. முளைப்பனமுறுவலும் முறுவல்வெந்துயர்
விளைப்பனவன்றியு மெலிந்துநாடோறும்
இளைப்பன நுண்ணிடை யிளைப்பமென்முலை
திளைப்பனமுத்தொடு செம்பொனாரமே.

(இ-ள்.) முறுவல் - (அம்மதங்கியர் முகத்தினிடத்துப்) புன்னகைகள், முளைப்பன - தோன்றுவன, அம்முறுவல் - அப்புன்னகைகள், (காமுகர்க்கு) வெந்துயர்-வெந்துயரத்தை, விளைப்பன - உண்டாக்குவன, அன்றியும், அதுவன்றியும், நுண்இடை -(அம்மதங்கியருடைய) நுண்ணியஇடைகள், நாள்தோறும் - நாளுக்குநாள் (சிறியவாக), மெலிந்து-வருந்தி, இளைப்பன-சுருங்குவன, இளைப்ப-அவைகள் சுருங்கும்படி, மென்முலை- அம்மடவாருடைய மெத்தென்ற தனங்களினிடத்து. முத்து ஒடு-முத்துவடமும், செம்பொன் - செம்பொன்னாலாகிய, ஆரமும் - பதக்கங்களும், திளைப்பன - பொருந்துவனவாம்—எ-று. (ருரு)

மாதர்கள் முறுவலைக்கண்டு ஆடவரிளைப்பதுமன்றி, அவர்கள் இடையினைக் கண்டும் மெலிகின்றார்களென்பது இதன்கருத்து. இதனைக் "சோம்பிக்கொதுங்கி மேயாமஞ்ஞை"யென்னுந் திருச்சிற்றம்பலக்கோவைச் செய்யுளாலும் உணர்க.

146. இடையிடையெங்கணுங் களியறாதன
நடையிளவன்னங்க ணளினநீர்க்கயல்
பெடையிளவண்டுகள் பிரசமாந்திடும்
கடகரியல்லன மகளிர்கண்களே.

(இ-ள்.) நளினநீர்-தாமரைமலர்களையுடைய தடாகங்களில், இடை இடை யெங்கணும்-எல்லா இடங்களிலும் எப்போதும், களியறாதன-களிப்புநீங்காதன வாயிருப்பவை, நடைஇள-மென்மையாகிய நடையையுடைய, அன்னங்கள் - அன்னங்களும், கயல்-சேல்மீன்களும், பெடை - பெட்டை (வண்டுகளும்,) இளவண்டுகள் - இளமையாகிய (ஆண்) வண்டுகளும், பிரசம்-தேனினை, மாந்திடும் - உண்ணுகின்ற, கடகரி-மதச்சுவட்டினையுடைய யானைகளும், அல்லன்-அல்லாத இடங்களில், மகளிர்-மாதர்களுடைய, கண்களே-கண்களேயாம்—எ-று.

மேற்கூறியவைகளெல்லாம் வயல்களினிடத்தும் வாவிகளிடத்தும், பொழில்களினிடத்தும், களிப்புடன் சஞ்சரிக்குமென்பது இதன் கருத்து.

நளினம் இடை யெங்கணும் தாமரைமலர்களித்தெங்கும் களிப்புநீங்காம லிருக்கின்றவை நடையிள அன்னங்கள். நீர் இடையெங்கணுங் களிப்பு நீங்காமலிருக்கின்றவை சேல்மீன்கள். பெடையிளவண்டுகள் அந்தத்தாமரை மலர்களில் பிரசமாந்திடும். கடகரி-நீர்மாந்திடும். மாதர்கண்களோவென்றால் களியறாமலிருக்கும் என்றுரைப்பினும் அமையும்.

147. தழல்விழியாளியுந் துணையுந்தாழ்வரை
முழைவிழைகிரிநகர் களிற்றின்மும்முத
மழைவிழும்விழுந்தொறு மண்ணுங்கீழுறக்
குழைவிழுமவில்விழுங் கொடித்திண்டேர்களே.

(இ-ள்.) தழல்-தீப் (பொறியைக் கக்குகின்ற,) விழி-விழியையுடைய, ஆளியும்-சிங்கமும், துணையும் - அதன்பேடையும், முழைவிழை - விரும்புகின்ற குகைகள் (பொருந்திய,) தாழ்வரை-தாழ்வரையினையுடைய, கிரிநகர்-மலையையொத்த, களிற்றின்-யானையினுடைய, மும்மதம் - மும்மதநீரும், மழைவிழும் - மழைபோலவிழும், விழுந்தொறும் - அம்மதம் விழுந்தோறும், மண்ணும் - பூமியும், கீழ் உற - ஆழமுற, குழைவிழும்-சேறுவிழும், அவில்-அசசேருகளில், கொடி - கொடிகளையுடைய, திண்தேர்-வலியதேர்கள், விழும்-புதையும்—எ-று. (௫௫)

மழையுங்குழையுந் தேர்விழுதற்குக் காரணமாகநின்றன. அவில் - அவ்வென்னுஞ் சுட்டுப்பெயர் இல்லென்னுஞ் ஏழனுருபேற்றபொது இடையில் அற்றுச்சாரியை தொகுத்தலாயிற்று.

148. ஆடுவார்புரவியின் குரத்தையார்ப்பன
சூடுவாரிகழ்ந்தவத் தொங்கன்மாலைகள்
ஓடுவாரிழுக்குவ வூடலூடுறக்
கூடுவார்வனமுலை யொழித்தசாந்தமே.

(இ-ள்.) சூடுவார் - அலங்கரிக்கும் வண்ணமாதர்கள், இகழ்ந்த - அவமதித் தெறிந்த, அத்தொங்கல்மாலைகள் - அத்தொங்கலாகிய மாலைகள், ஆடு - ஆடுகின்ற, வார்-நீண்டவடிவுள்ள, புரவியின்-குதிரைகளின், குரங்கை - குளம்புகளை, ஆர்ப்பன- கட்டுவன, ஊடல்-ஊடலானது, ஊடுஉற - ஊடலையடையும்படி, கூடுவார்-கூடுதற் குரிய ஆடவர், வனம்-அழகிய, முலை தனங்களினின்றும், கொழித்த-வழித்தெறிந்த, சாந்தம் சந்தனங்களை, ஓடுவார்-(வீதியில்) ஓடுகின்றவர்களை, இழுக்குவ - (ஓடவொட் டாமல்) வழுக்குவன—எ-று. (ருசு)

தொங்கல் மாலை-இருபெயரொட்டுப் பண்புத்தொகை. தொங்கல்-நீண்டமாலை. ஊடலை ஊடு உற என்றது-ஊடல் தணிதல். கூடுமுயற்சி யுடையாராதலின் ஆடவர் அம்மாதர்க்கு இதம் புரியும்படி வனமுலையில் அப்பியசந்தனம் அழகுசெய்ய வல்ல தென்றெண வழித்தெறிவாராயினர்.

149. இளைப்பருங்குரங்களா லிவுளிபாரினைக்
கிளைப்பனவவ்வழி கிளர்ந்ததூளியின்
ஒளிப்பனமணியவை யொளிரமீதுதேன்
துளிப்பனகுமரர்தந் தோளின்மாலையே.

(இ-ள்.) இளைப்பு அரு இளைப்பில்லாத, குரங்களால்-குளம்புகளினாலே, இவுளி- குதிரைகளானவை, பாரினை - பூமியை, கிளப்பன - கிளைக்கின்றன, அவ்வழி - அவ் விடத்து, கிளர்ந்த மேலெழுந்த, தூளியின்-தூளியினாலே, குமரர்தம்- (அக்குதிரைக் கண்ணேறிவரு) மைந்தர்கள் (அணிந்துகொண்டிருக்கும்,) மணி - மணிகள், ஒளிப் பன-மறைக்கப்படுவனவாம், அவை - அம்மணிகள், ஒளிர் - விளங்கும்படி, தோளின் மாலை-(அக்குமரர்கள்) தோளிலணிந்திராநின்ற பூமாலைகள், மீது - (அம்மணிகளின்) மேல், தேன்-தேனை, துளிப்பன-சிந்துவனவாம்—எ-று. (ருஎ)

150. விலக்கருங்கரிமதம் வேங்கைநாறுவ
குலக்கொடிமாதர்வாய் குமுதநாறுவ
கலக்கடைகணிப்பருங் கதிர்களுறுவ
மலர்க்கடிநாறுவ மகளிர்கூந்தலே.

(இ-ள்.) விலக்கு அரு - தடைசெய்தற்கரிய, கரி - யானைகளினுடைய, மதம்- மதநீர்கள், வேங்கை-வேங்கைப்பூப்போல, நாறுவ-நாறுவனவாம், கொடி-பூங்கொடி போன்ற, குலமாதர்-குலமகளிருடைய, வாய் - வாய்கள், குமுதம் - செவ்வல்லிமலர் பொல, நாறுவ-தோன்றுவனவாம், கலம் கடை (அவர்களணிந்திருக்கும்) ஆபரணங் களின் கடைப்பூட்டுகள், கணிப்பு அரு - அளவிடுதற்கு அரிய, கதிர்கள் - ஒளிகள், நாறுவ-தோன்றுவனவாம், மலர்க்கடி-மலர்மணம், நாறுவ-கமழ்வன, மகளிர்கூந்தல்- அம்மகளிர் கூந்தல்கள்—எ-று. (ருஅ)

குமுதம் நாறுவ என்பது மணப்பனவென்றுங் கூறப்படும். விழுந்த இடப்ப ன்மைநோக்கி மதம் பலவாயின.

151. கோவையிந்நகரொடெண் குறிக்கலாதவத்
தேவர்தந்நகரியைச் செப்புகின்றதென்
யாவையும்வழங்கிடத் திகலியிந்நகர்
ஆவணங்கண்டபி னளகைதோற்றதே

(இ-ள்.) இந்நகரொடு - இவ்வயோத்தியாநகரத்தோடு (சேர்த்து,) கோவை - புண்ணியபுரிகள் எழென்னும் வரிசையில், எண் குறிக்கலாத - (முன்னமே முனிவர்களால்) குறித்து எண்ணப்படாத, அத்தேவர்தம் நகரியை - தேவர்களுடைய நகரமாகிய அந்த அமராவதியை, செப்புகின்றது என் - ஒப்பாகாதென்று யாம் எடுத்துக் கழிப்பதினால் என்னபயன், இந்நகர் ஆவணம் - இவ்வயோத்தியின் கடைவீதியை, யாவையும் - எல்லாப் பொருள்களையும், வழங்கிடத்து - வழங்குகையில், இகலி - (அதனோடு உள்ளே) பகைத்து, கண்டபின் - (வந்து அதன்வளத்தைக்) கண்டபின்பு, அளகை - அளகையானது, தோற்றது - தோல்வியடைந்தது—எ-று. (ருக)

முனிவர்கள் தொகைசெய்த நகரம் எழாவன. அயோத்தி, மதுரை, மாயை, காசி, காஞ்சி, அவந்திகை, துவாரகை என்பன. இந்நகரத்தின் ஆவணத்தைக் கண்டு அளகாபுரிதோற்றதென்றால், பரமவைதிகமுனிவர் இந்நகரத்தோடு ஒன்றாக எடுத்து எண்ணாமல் விடுத்த தேவருலகத்தை யாமெடுத்துக் கழிப்பதினால் யாது பயன்? ஆவணவீதி, எல்லாப்பொருளும் நிறைந்திருப்பதென்பது.

152. அதிர்கழலொலிப்பன வயிலிமைப்பன
கதிர்மணியணிவெயில் கால்வமான்மதம்
முதிர்வுறக்கமழ்வன முத்தமின்னுவ
மதுகரமிசைப்பன மைந்தரீட்டமே.

(இ-ள்.) மைந்தரீட்டம் - (அந்நகரின் வீதிகளில் ஆங்காங்கு நிற்கும்) மைந்தரது கூட்டங்களில், அதிர்கழல் - அதிரும் வீரகண்டைகள், ஒலிப்பன - சத்திப்பன, அயில் - வேலாயுதங்கள், இமைப்பன - பிரகாசிப்பன, கதிர்-கிரணங்கள் விடுகின்ற, மணி - மணிகளாலியன்ற, அணி - ஆபரணங்கள், வெயில் - ஒளியை, கால்வ - எறிப்பன, முதிர்வுற - மிகுதியாக, மான்மதம்-கஸ்தூரிகள், கமழ்வ - மணப்பன, முத்தம்-முத்துமாலைகள், மின்னுவ - பிரகாசிப்பன, மதுகரம் - வண்டுகள், இசைப்பன - இசைபாடுவன—எ-று. (௬0)

மார்பு முதலிய அவயவப் பன்மையால் கமழ்வன மான்மதமென்றார்.

153. வளையொலிவயிரொலி மகரவீணையின்
கிளையொலிமுழவொலி கின்னரத்தொலி
தொளையொலிபல்லியந் துவைக்குஞ்சும்மையின்
விளையொலிகடலொலி மெலியவிம்முமே.

(இ-ள்.) வளை ஒலி - சங்கின் ஓசையும், வயிர்ஒலி - ஊதுகொம்பின் ஓசையும், மகரவீணையின் கிளை ஒலி - மகரயாழிற்கட்டிய தந்தியின் ஓசையும், முழவு ஒலி - மத்தளத்தின் ஓசையும், கின்னரத்து ஒலி-கின்னரத்தின் ஓசையும், தொளை ஒலி-தாரைசின்னமுதலிய தொளைக்கருவிகளின் ஓசையும், பல் இயம் -(இவைகளேயன்றிப்) பல வாத்தியங்களும், துவைக்கும் - சத்திக்கும், சும்மையின் - ஆரவாரத்தால், விளை - உண்டாகும், ஒலி - ஓசையும், கடலொலி - கடலோசையானது, மெலிய - கீழ்ப்பட, விம்மும்-அந்நகரின்கண் மேற்படும்—எ-று. (௬க)

154. மன்னவர்தருதிறை யளக்குமண்டபம்
அன்னமென்னடையவ ராடுமண்டபம்
உன்னருமருமறை யோதுமண்டபம்
பன்னருங்கலைதெரி பட்டிமண்டபம்.

(இ-ள்.) மன்னவர் - (மறுதேயத்) தரசர்கள், தரு - கொண்டுவருகின்ற, திறை யளக்கும் - திறைப்பொருளையளக்கும், மண்டபம் - மண்டபங்களும், அன்னம் - அன்னநடைபோலும், மெல் - மெத்தென்னும், நடையவர் - நடையையுடைய மடவார், ஆடும் மண்டபம்-ஆடுகின்ற நிருத்த மண்டபங்களும், உன் அரு - (இவ்வளவின வென) நினைத்தற்கு அரிய, மறை - வேதங்கள், ஓது மண்டபம் - ஓது மண்டபங்களும், பன் - சொல்லுதல், அருங்கலைதெரி - அரிய கலைகளை ஆராய்ச்சி செய்கின்ற, பட்டிமண்டபம் - கல்வி மண்டபங்களுமுள்ளன—எ-று. (சுஉ)

கலைகளாவன-வியாகரணம், போர்நூல், மனுநூல், கணிதநூல் இதிகாசம் முதலியவை.

155. இரவியிற்சுடர்மணி யிமைக்குந்தோரணத்
தெருவினிற்சிறியன திசைகள்சேண்விளங்
கருவியிற்பெரியன வானைத்தானங்கள்
பரவையிற்பெரியன புரவிப்பந்தியே.

(இ-ள்.) சுடர்மணி - ஒளியுள்ளமணிகள், இரவியின்-சூரியனைப்போல, இமைக்கும்-பிரகாசித்துக்கொண்டிருக்கின்ற, தோரணம் - தோரணங்களையுடைய, தெருவினின் - தெருவினும், திசைகள் - திக்குகள், சிறியன-சிறியனவாம், சேண்-தூரத்தினின்றும், விளங்கும் - விளங்கிஓடும், அருவியின் - மலையருவியினும், ஆனை - ஆனைகளின், தானங்கள் - மதநீர்கள், பெரியன - பெரியனவாம், பரவையின் - கடலினும், புரவிப்பந்தி - குதிரைப்பந்திகள், பெரியன - பெரியனவாம்—எ-று. (சுரு)

156. சூளிகைமழைமுகில் தொடக்குந்தோரண
மாளிகைமலர்வன மகளிர்வாண்முகம்
வாளிகளன்னவை மலர்வமற்றவை
ஆளிகளன்னவர் நிறத்தினாழ்பவே.

(இ-ள்.) சூளிகை - சிகரத்தினால், மழை - குளிர்ச்சி பொருந்திய, முகில் - மேகத்தை, தொடக்கும் - அளாவுகின்ற, தோரணம்-தோரணங்கள் கட்டிய, மாளிகை-மாளிகையின் சாளரங்கள், மகளிர் - மகளிர்களுடைய, வாள் - ஒளி பொருந்திய, முகம் - முகங்களை, மலர்வன, அன்னவை - அம்முகங்கள், வாளிகள் - அம்புகளை, மலர்வ - மலர்வன, அவை - அவ்வம்புகள், ஆளிகள் - சிங்கங்களை, அன்னவர் - ஒத்த ஆடவர்கள், நிறத்தில் - மார்பில், ஆழ்ப-தைப்பனவாம்—எ-று. (சுசு)

சாளரங்களினிடமாக மாதர் முகங்கள் தோன்ற, அம் முகங்களிற்றோன்றிய கண்கள் ஆடவர் மார்பிற்பொருந்துமென்க. மாளிகை ஆகுபெயர். மாதர்கண்கள் ஆடவர் வருந்துதற்கேதுவா யிருக்கின்றனவென்பது கருத்து.

157. மன்னவர்கழலொடு மாறுகொள்வன
பொன்னணித்தேரொலி புரவித்தாரொலி
இன்னகையவர்சிலம் பேங்கவேங்குவ
கன்னியர்குடைதுறைக் கமலவன்னமே.

(இ-ள்.) பொன்-பொன்னால், அணி - அலங்காரஞ் செய்யப்பட்ட, தேர் ஒலி - தேரொலியும், புரவி - குதிரைகளுடைய, தார் ஒலி - கிங்கிணி ஒலியும், மன்னவர் - அரசர்களுடைய, கழலொடு - வீரக்கழலொலியோடு, மாறுகொள்வன-மாறுகொண்டொலிப்பன, இன் - இனிதாகிய, நகையவர் - நகையையுடைய மாதர் (அணி

ந்திருக்கும்,) சிலம்பு - சிலம்புகள், எங்க - ஒலித்தலால், (அதுதங்களினத்தின் குர லெனவுட்கொண்டு) கன்னியர் - அக்கன்னியர், குடைதுறை - நீராடுந்துறையிலிருக் கும், கமலம் - தாமரைமலரில்வாழும், அன்னம் - அன்னப்பறவைகள், எங்குவ - ஒலிப்பன—எ-று. (கூகு)

158. ஊடவுங்கூடவு முயிரினின்னிசை
பாடவும்விறலியர் பாடல்கேட்கவும்
ஆடவுமகன்புன லாடியம்மலர்
சூடவும்பொழுதுபோஞ் சிலர்க்கத்தொன்னகர்.

(இ-ள்.) அத்தொன்னர் - அப்பழமையாகிய நகரின்கண், சிலர்க்கு - சிலமட வார்க்கு, ஊடவும்-தத்தங்கணதரோடேவும், கூடவும் - அவ்வூடல் தீர்ந்து கூடவும், உயிரின்-உயிர்போன்ற, இன் இசை - இனிய இராகங்களை, பாடவும் - தாம்பாடவும், விறலியர்-பாண்மகளிருடைய, பாடல் - இசைப்பாடல்களை, கேட்கவும் - கேட்கவும், அகல் - விரியாகிய, புனல் - புனலையுடைய தடத்தின்கண், ஆடவும் - குடைந்து விளையாடவும், ஆடி - அவ்வாறு விளையாடி, அம் - அழகிய, மலர்-மலர்களை,சூடவும்- எடுத்துச்சூடவுமாக, பொழுதுபோம் - பொழுதுபோகும்—எ-று. (கூகூ)

ஊடிக்கூடுதல் காமத்துக்கின்பமாதலால் ஊடலைமுதலிற் கூறினர்.

159. முழங்குதிண்கடகரி முன்பினூரவும்
எழுங்குரத்திவுளியோ டிரதமேறவும்
பழங்கணோடிரந்தவர் பரிவுதீர்தர
வழங்கவும்பொழுதுபோஞ் சிலர்க்கம்மாநகர்.

(இ-ள்.) அம்மாநகர் - அப்பெரிய நகரினிடத்து, சிலர்க்கு - சிலஆடவர்க்கு, முழங்கு-சத்திக்கும், திண் - வலியையும், கடம் - மதத்தையுமுடைய, கரி-யானைகளை, முன்பின் - முன்னும்பின்னுமாக, ஊரவும்-எறிநடத்தவும், எழுங்குரத்து - மேலெழு கின்றகுளம்பினையுடைய, இவுளியோடு - குதிரைகளிலும், இரதம் - இரதங்களிலும், ஏறவும் - ஏறவும், பழங்கணோடு - மெலிவுடன்வந்து, இரந்தவர் - இரந்தவருடைய, பரிவுதீர்தர-வருத்தந்தீர, வழங்கவும் - கொடுக்கவுமாக, பொழுதுபோம் - பொழுது போகும்—எ-று. (கூஎ)

160. கரியொடுகரியெதிர் பொருத்துகைப்படை
வரிசிலைமுதலிய வழங்கிவாலுளைப்
புரவியிற்பொருவில்செண் டாடிப்போர்க்கலை
தெரிதலிற்பொழுபோஞ் சிலர்க்கச் சேணகர்.

(இ-ள்.) அச்சேண்நகர் - விசாலமாகிய அந்நகரினிடத்து, சிலர்க்கு - சிலவீரர் க்கு, கரியொடுகரி - யானைகளோடுயானைகளை, எதிர் - எதிரெதிராக, பொருத்தி - பொருந்துவித்தும், கைப்படை - கைவிடாப் படைகளாகிய சத்திரங்களையும், வரி சிலைமுதலிய - கட்டமைந்த வில்லால் எய்தற்குரிய அத்திரமுதலியவற்றையும், வழங்கி - வழங்கியும், வால்-வெண்மையாகிய, உளை - கழுத்துமயிர்களையுடைய, புர வியில் - குதிரையின் மேலேறிக்கொண்டு, பொருஇல் - ஒப்பற்ற, செண்டாடி - வை யாளிவீதியில் விளையாடியும், போர்க்கலை - தனுர்வேதங்களை, தெரிதலின்-ஆராய்ச்சி செய்தலால், பொழுதுபோம் - பொழுதுகழியும்—எ-று. (கூஅ)

எய்வன, குத்துவன, எறிவன, எல்லாவற்றிற்கும் பொருந்தும்படி வழங்கி என்றார்

161. நந்தனவனத்தலர் கொய்துநவ்விபோல்
வந்திளையவரொடு வாவியாடிவாய்ச்
செந்துவரழிதரத் தேறன்மாந்திச்சூ
துந்தலிற்பொழுதுபோஞ் சிலர்க்கவ்வொண்ணகர்.

(இ-ள்.) அவ்வொண்ணகர் - ஒளிபொருந்திய அந்நகரினிடத்து, சிலர்க்கு - சில மகளிர்க்கு- நந்தனவனத்து-நந்தனவனத்தினிடத்துச்சென்று, அலர்கொய்து-மலர்களைக்கொய்தும், நவ்விபோல்வந்து - மான்கள்போல்வந்து, இளையவரொடு - தத்தங்கணவரோடு, வாவியாடி - தடாகங்களில் விளையாடியும், வாய்-இதழினிடத்துப் பொருந்திய, செந்துவர்-செம்மைநிறமானது, அழிதர - அழியும்படி, தேறல் - மதுவை, மாந்தி-அருந்தியும், சூது உந்தலில் - சூது விளையாடலால், பொழுதுபோம் - பொழுதுபோகும்—எ-று. (௬௯)

வேறு.

162. நானாவிதமா நளிமாதிர வீதியோடி
மீனாறுவேலைப் புனல்வெண்முகி லுண்ணுமாபோல்
ஆனாதமாடத் திடையாடிகொ டிக்கண்மீப்போய்
வானாறுநண்ணிப் புனல்வற்றிட நக்குமன்றே.

(இ-ள்.) நானாவிதமா - பலபலவிதமாக, நளி - பெரிய, மாதிரம் - ஆகாயத்தின், வீதியோடி - வழியிற்சென்று, மீனாறு - மீன்கள் மிகுதியும்விளங்குகின்ற, வேலைப்புனல்-கடற்புனலை, வெள்-வெண்மையாகிய, முகில் - மேகங்கள், உண்ணுமாபோல் - பருகுமாறுபோல, ஆனாத - அழிவில்லாத, மாடத்திடையாடு - மாடங்களின்மேலாடுகின்ற, கொடி - கொடிகளினது, கண் - மூங்கில்கள், மீப்போய் - மேலேசென்று, வானாறு-ஆகாயகங்கையை, நண்ணி-பொருந்தி, புனல்-அதன்நீரானது, வற்றிட - வற்றும்படியாக, நக்கும்-உண்ணும்—எ - று. (௭௰)

கண் சினையாகுபெயர். வேலையும் அது, வெயிலால் உண்டாகிய வெப்பந், தாம்தணிவதன்பொருட்டு, ஆகாயகெங்கைநீரை, கொடியச்சீலையாகிய நாவினால், கொடித்தம்பங்கள் நக்குதல்போலும் காற்றால் கொடிச்சீலை அசைதல்.

163. வன்றோரணங்கள் புணர்வாயிலும் வானினும்பர
சென்றோங்கிமேலோ ரிடமில்லெனச் செம்பொனிஞ்சி
குன்றோங்குதோளார் குணங்கூட்டிசைக் குப்பையென்ன
ஒன்றோடிரண்டு முயர்ந்தோங்கின உம்பர்நாண.

(இ-ள்.) வல்தோரணங்கள் - வன்மையாகிய தோரணங்கள், புணர்வாயிலும் - நீங்காமலுள்ள கோபுரவாயிலும், வானின் உம்பர் - சுவர்க்கத்துக் கப்புறத்தில், சென்று ஓங்கி - போயுயர்ந்து, மேல்-இனி, ஓர் இடம் இல் என-சிறிதிடமும் இல்லையென்னும்படி, செம்பொன் இஞ்சி - செம்பொன்னாற் கட்டியமதில்களும், குன்று ஓங்கு-மலைபோல உயர்ந்த, தோளார் - தோள்களையுடைய (சூரியகுலத்தரசர்களுடைய,) குணம்கூட்டு - குணங்களினால்சேர்ந்த, இசைக்குப்பை என் - கீர்த்தியின் குவியலென்னும், அ ஒன்றோடு - அவ்வொன்றுடனே, இரண்டும் - கோபுரமுமதிலும், உம்பர்நாண - கண்டதேவர்கள் நாணும்படி, உயர்ந்தோங்கின - உயர்ந்துள்ளன—எ-று. (௭௧)

வாயிலும், இஞ்சியும், இரண்டுமெனா இயைக்க. அகநகர் புறநகர் இரண்டுக்கும் கொள்க. குணங்கூட்டிசைக்குப்பையென்ன, ஒன்றோடிரண்டு மெனப்பாடங்கூறி, முக்குணங்களினால் சேர்க்கின்ற கீர்த்திகளினது குவியல்களைப்போலக் கோபுரவாயிலாகிய ஒன்றுடனே, கோபுரவாயிலுக்கு வலப்புற இடப்புறமதில்களிரண்டும் உயர்ந்தோங்கின என உரைப்பாருமுளர். சத்துவகுணத்தின் காரியமாகிய கீர்த்திபோல்வது கோபுரம், இராசத தாமத குணங்களின் காரியமாகிய கீர்த்திகளைப்போல்வன, கோபுரத்தின் வலப்புற இடப்புறங்களில் நின்ற மதில்களெனக் கொள்க. செம்பொனிஞ்சி என்பதனீற்றில் எண்ணும்மை தொகுத்தலாயிற்று. என் - இடைச்சொலடியாகப் பிறந்த வினைத்தொகை.

164. காடும்புனமுங் கடலன்ன கிடங்குமாதர்
ஆடுங்குளனும் மருவிச்சுனைக் குன்றுமும்பர்
வீடும்விரவும் மணிப்பந்தரும் வீணைவண்டு
பாடும்பொழிலும் மலர்ப்பல்லவப் பள்ளிமன்னோ.

(இ-ள்.) காடும் - அந்நகர்சூழ்ந்த வனங்களிலும், புனமும் - விளைபுனங்களிலும், கடல் அன்ன-கடல்போன்ற, கிடங்கும்-அகழிகளும், மாதர்-மடவார், ஆடுங்குளனும்-நீராடுதற்குரிய குளங்களிலும், அருவி - அருவிகளையும், சுனை - சுனைகளையுமுடைய, குன்றும்-மலைகளிலும், உம்பர்வீடும் - மேல்நிலைவீடுகளிலும், விரவும் - புரையில்லாமல் கலந்துள்ள, மணிப்பந்தரும்-முத்துப் பந்தல்களிலும், வீணை-வீணைபோலும், வண்டு-வண்டுகள், பாடும்பொழிலும் - இசைபாடும் சோலைகளிலும், மலர்ப்பல்லவம்பள்ளி-மலர்களாலும் தளிர்களாலும் சமைத்த சயனங்களுள்ளன—எ-று. (எஉ)

காடுமுதலிய இடங்கள் சுத்தமாயிருத்தலேயன்றித் தண்ணென்றிருத்தலால் மலர்ப்பல்லவ சயனங்கள் செய்துகொள்வாராயினர்.

165. தெள்வார்மழையுந் திரையாழியு முட்கநாளும்
வள்வார்முரசம் மதிர்மாநகர் வாழுமாக்கள்
கள்வாரிலாமைப் பொருள்காவலு மில்லையாதும்
கொள்வாரிலாமைக் கொடுப்பார்களுமில்லைமாதோ.

(இ-ள்.) தெள்-தெளிவாகிய, வார்-நீரையுடைய, மழையும் - மேகங்களும், அலை-அலைகளையெறிகின்ற, ஆழியும் - கடல்களும், உட்க-அஞ்சும்படி, நாளும் - நாள்தோறும், வள்வார்-தோல்வாரற்கட்டிய, முரசம் - பேரிகைகள், அதிர் - முழங்குகின்ற, மாநகர்வாழும்-பெரிய அவ்வயோத்திமாநகரின்கண்வாழும், மாக்கள் - மாந்தர்களில், கள்வார் இலாமை - களவுசெய்வாரின்மையால், பொருள் - ஈட்டியபொருட்கு, காவலும் இல்லை - காவல்செய்வதுமில்லை, யாதும் - யாதொருபொருளையுங், கொள்வார் இல்லாமை-வறுமையாலிரப்பாரின்மையால், கொடுப்பார்களுமில்லை - கொடுப்பவர்களுமில்லை—எ-று. (எ௩)

166. கல்லாதுநிற்பார் பிறரின்மையிற் கல்விமுற்ற
வல்லாருமில்லை யவைவல்ல ரல்லாருமில்லை
எல்லாருமெல்லாப் பெருஞ்செல்வமு மெய்தலாலே
இல்லாருமில்லை யுடையார்களு மில்லைமாதோ.

(இ-ள்.) கல்லாது - கல்விகள்கற்காமல், நிற்பார் - வீணாகநிற்பவர்களாகிய, பிறர் இன்மையின்-பிறரில்லாமையால், கல்வி-அக்கல்விகளில், முற்ற-முழுவதும், வல்ல

ரும் இல்லை - கற்றுவல்லவர்களுமில்லை, அவை - கற்றவர்கூடிய சபையில், வல்ல ரல்லாருமில்லை-வல்லவரல்லாதவர்களுமில்லை, எல்லாரும் - அந்நகாத்தி லிருப்பவர்க ளெல்லாரும், எல்லாப் பெருஞ்செல்வமும் - கல்விச்செல்வமும் பொருட்செல்வமும் ஆகிய எவ்வகைப் பெருஞ்செல்வங்களையும்,எய்தலாலே-நிரம்பப்பெற்றிருத்தலாலே, இல்லாரும் இல்லை-வறியவர்களுமில்லை, உடையார்களும் இல்லை-செல்வமுடையவர் களுமில்லை—எ-று, (எச)

வல்லார் - வல்லரல்லார்-இல்லார் - உடையார் - என்னுமிவைகளைத் தனித்தனி எழுவாயாகக்கொண்டு இல்லையென்பவைகளையும் அவ்வாறே பயனிலையாகக்கொள்க.

167. ஏகம்முதற்கல்வி முளைத்தெழுந் தெண்ணில்கேள்வி
ஆகம்முதற் றிண்பணைபோக்கி யருந்தவத்தின்
சாகந்தழைத் தன்பரும்பித் தருமம்மலர்ந்து
போகங்கனி யொன்றுபழுத்தது போலுமன்றே.

(இ-ள்.) (அயோத்தியானது) கல்வி-கல்வியென்னும், ஏகம்முதல் - ஒருமுதலா னது, முளைத்துஎழுந்து - முளைத்துமேலெழுந்து, எண் இல் கேள்வியாகு-பல நூற் கேள்விகளாகிய, முதல்திண்-முதன்மையும் வன்மையுமுள்ள, அப்பணை-அப்பெருங் கவடுகளை, போக்கி-மேலோங்கவிடுத்து, அரு-அரிய, தவத்தின் - தவமாகிய, சாகம் தழைத்து-இலைகள் தழைத்து, அன்பு தயையாகிய அரும்புகள், அரும்பி-முகைத்து, தருமம் - தருமமாகிய மலர்கள், மலர்ந்து - மலர்ந்து, போகம் - போகமாகிய, கனி யொன்று பழித்ததுபோலும்-ஒருபழமானது பழுத்ததுபோலு மிருக்கின்றது-எ-று.

ச-வது. நகரப்படலம் முற்றிற்று.

---

# ரு-வது அரசியற்படலம்.

அரசனது குணங்களைக் கூறுகின்றபடலம்.

168. அம்மாணகருக் கரசன்னர சர்க்கரசன்
செம்மாண்டனிக் கோனுலகேழினுஞ் செல்லநின்றான்
இம்மாண்கதைக்கோ ரிறையாய விராமனென்னும்
மொய்ம்மாண்கழ லோற்றருநல்லற மூர்த்தியன்னான்.

(இ-ள்.) அ-அந்த, மாண்-மாட்சிமைபெற்ற, நகருக்கு-அயோத்தியாநகரத்துக்கு, அரசன்-அரசனாவான், (யாவனெனின்) அரசர்க்கு அரசன் - அரசர்களுக்கு அரசன், மாண்-பெருமைபொருந்திய, தனி-ஒப்பற்ற, செங்கோல் - தனதுசெங்கோலானது, உலகு எழினும்செல்ல - ஏழுலோகங்களினும் செல்லும்படி, நின்றான் - நின்றவனும், இ-இந்த, மாண்கதைக்கு - பெருமையாகிய சரித்திரத்துக்கு, இறை - தலைவனாகிய, இராமன் என்னும்-இராமபிரானென்று சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற, மொய் மாண் கழலோன்தரும்-பலமுள்ள பெருமையையுடைய வீரகண்டையை யணிந்தவ ரைப்பெற்ற, நல்-நலத்தையேதருகின்ற, அறம் மூர்த்தி அன்னான் - தருமமூர்த்தியை யொத்தவனுமாம்—எ-று, (க)

இராமமூர்த்தியைப் பெற்றவன் அந்நகரத்துக்கு அரசன் எனமுடிக்க. அரசர்க்கரசனுதலால் செம்மாண்தணிக்கோல் உலகேழினுஞ்செல்ல நின்முன் என்றூர். நகருக்குமாண்பு, தனக்குஒப்பதும் உயர்வதுமாகிய நகரமொன்றின்மை. செங்கோலுக்கு மாண்பு, நீதியிற்கோடாமை. இக்கதைக்குமாண்பு தன்னைப்படித்தல்முதலிய செய்தோர்க்கு அறம், பொருள், இன்பம், விடுபேருகிய உறுதிப்பொருள்களை யருளுதல். கழலுக்குமாண்பு, பகையரசர்வந்து வணங்கும்படி வீரத்திற்குன்றூதிருத்தல். செங்கோலாவது, நீதி. அதுசெவ்விய கொல்போன்றிருத்தலின் செங்கோலெனப்பட்டது.

169. ஆதிம்மயும் மருளும்மறனும் மமைவும்
ஏதின்மிடல் வீரமுமீகையு மெண்ணில்யாவும்
நீதிந்நிலையும் மிவைநேமியி னோர்க்குநின்ற
பாதிம்முழுதும் மிவற்கேபணி கேட்பமன்றே.

(இ-ள்.) ஆதி - முதன்மையாகிய, மதியும் - அறிவும், அருளும் - அதற்கு இன்றியமையாத உறுப்பாகியகருணையும், அறனும் - அதன் காரியமாகிய தர்மமும், அமைவும் - அத்தருமச்செய்கையினுல் உண்டாகியநிறைவும், ஏதம் இதில் - குற்றமில்லாத, மிடல்-பலத்தோடும்கூடிய, வீரமும்-வீரத்தன்மையும், ஈகையும்-கொடையும், எண் இல்யாவும் - அளவற்ற மற்றையராஜகுணங்களெல்லாமும், நீதிநிலையும் - நீதியில்கலங்காது நிற்றலும், இவை - ஆகிய இத்தன்மைகள், நேமியினோர்க்கு - முன்னுள்ள சக்ரவர்த்திகளுக்கு, நின்ற - நிலைத்திருந்தன, பாதி - அரைப்பாகங்காகிய குணங்களே, (அவ்வாறின்றி) முழுதும் - முழுக்குணக்களும், இவற்கே - இச்சக்ரவர்த்திக்கே, பணிகேட்ப - ஏவல்கேட்பனவாம்—எ-று. (உ)

மேற்கூறிய குணங்கள், மற்றை யரசரிடத்தும் சக்கிரவர்த்திகளிடத்தும் முழுக்குணங்களாக இருத்தலில்லை; இவனிடத்து எல்லாநற்குணங்களும் பூரணமாயிருக்கும் என்பது கருத்து. அன்றே-வியப்புப்பொருளைத்தரும் இடைச்சொல்.

170. மொய்யார்கலிசூழ் முதுபாரின் மூகந்துதானக்
கையார்புனலா னனையாதன கையுமில்லை
மெய்யாயவேதத் துறைவேந்தருக் கேய்ந்தயாரும்
செய்யாதயாக மிவன்செய்து மறந்தமாதோ.

(இ-ள்.) மொய் -(அலைகள்) வலியமைந்த, ஆர்கலிசூழ் - சமுத்திரஞ்சூழ்ந்த, முதுபாரில் - பழமையாகிய பூலோகத்தில், முகந்து - மொண்டு, தானக்கை ஆர் - தானங்கொடுக்குக்குங் கையினிடத்துப் பொருந்திய, புனலால் - தாரைவார்க்கும் நீரால், நனையாதன - ஈரம்படாதனவாகிய, கையும்இல்லை - கைகளுமில்லை, மெய் ஆகிய - உண்மையாகிய, வேதத்துறை - வேதங்களில் சொல்லிய வழிகளில் ஒழுகும், வேந்தருக்குஎய்ந்த - வேந்தருக்குரியன வாய் அமைந்திருப்பன, யாரும்செய்யாத - எவ்வரசராலும் செய்துமுடிக்காதனவாகிய, யாகம் - யாகங்கள், இவன் செய்துமறந்த - இவன்செய்து மறந்துவிட்டனவே—எ-று. (ந)

இவ்விடத்தில், கை என்றது வேதியருடையகைகளை. தானங்கொடுக்கும் போது, தானமாகக்கொடுக்கப்பட்டபொருளை மருபடியும் வாங்கிக்கொள்ளோம் என்று அறிவித்தற்குக் குறியாகக் கொடுப்போரால் நீர்விடப்படுக்கை முறைமையாதலால், இவ்வாறுகூறினர். தானம் எனப் பொதுப்படக்கூறினமையால், எல்லாத்தானங்களையுங்கொள்க. இதனுல், இவனிடத்தில் தானம்வாங்காத அந்தணரும் இவனுல் செய்யப்படாத யாகங்களும் இல்லையென்பது கூறப்பட்டது.

171. தாயொக்குமன்பிற் றவமொக்கு நலம்பயப்பின்
சேயொக்குமுன்னின் றொருசெல்கதி யுய்க்குநீரால்
நோயொக்குமென்னின் மருந்தொக்கு நுணங்குகேள்வி
ஆயப்புகுங்கா லறிவொக்குமெவர்க்கு மன்னன்.

(இ-ள்.) அன்னான் - அத்தன்மையாகிய அரசன், எவர்க்கும் - யாவர்க்கும், அன்பின்-அன்பினால், தாய்ஒக்கும்-தாயையொத்திருப்பான், நலம்பயப்பின்-நன்மையைக் கொடுத்தலில், தவம்ஒக்கும்-முன்னைத்தவத்தை யொத்திருப்பான், முன்நின்று-முன்னிலையாயிருந்து, ஒரு-ஒப்பற்ற, செல்கதி - செல்லுதற்குரிய நற்கதிகளில், உய்க்கும் நீரால் - செலுத்துந்தன்மையால், சேய்ஒக்கும் - புத்திரனை யொத்திருப்பான், நோய் ஒக்கும் என்னின்-வியாதிபோலப் பிறரைநலிவானாயின் அவனுக்கு, மருந்து ஒக்கும்-மருந்தாய்நின்று தண்டிப்பான், நுணங்குகேள்வி - நுட்பமாகிய நூற்கேள்விகளை, ஆயப்புகுங்கால் - ஆராய்ச்சிசெய்யப் புகுமிடத்தில், அறிவு ஒக்கும் - (அவ்வாராய்ச்சி செய்வோர்க்குச் சந்தேகமுதலியவையின்றித் தெளிவடையச் செய்யுந்தன்மையால்) அறிவினையொத்திருப்பான்—எ-று. (அ)

அன்பினால் தாயையொப்பவர் அரியராதலால் முதலில் தாயொக்கு மன்பின் என்றும், எல்லாநன்மைகளையுங் கொடுத்தலின் ஒருவன் செய்த தவத்தை யொப்பது இல்லாமையால் தவமொக்கு நலம் பயப்பின் என்றும், புத்திரனில்லாதார்க்கு நற்கதிப் பேறில்லை யென்பவாதலால் சேயொக்கு செல்கதியுய்க்கு நீரால் என்றும் கூறினர். எவர்க்கு மென்பது கடைநிலைத்தீவகமாதலால், தாய்முதலியவற்றோடுங் கூட்டி உரைக்க.

172. ஈய்ந்தேகடந்தா னிரப்போர்கட லெண்ணிணுண்ணூல்
ஆய்ந்தேகடந்தானறிவென்னு மளக்கர் வாளால்
காய்ந்தேகடந்தான் பகைவேலை கருத்துமுற்றத்
தோய்ந்தேகடந்தான் றிருவிற்றொடர் போகபௌவம்.

(இ-ள்.) (அவ்வரசன்) இரப்போர்கடல் - யாசகர்களாகிய சமுத்திரத்தை, ஈய்ந்தே கடந்தான் - அவர்கள்விரும்பிய பொருள்களைக் கொடுத்தேதாண்டினான், அறிவு என்னும்அளக்கர்-அறிவாகிய சமுத்திரத்தை, எண்இல் - கணக்கில்லாத, நுண்நூல்-நுட்பமாகிய சாஸ்திரங்களை, ஆய்ந்தேகடந்தான் - ஆராய்ந்தேதாண்டினான், பகைவேலை-பகைவராகிய சமுத்திரத்தை, வாளால்-வாளாயுதத்தால், காய்ந்தே - கோபித்தே, கடந்தான்-தாண்டினான், திருவின்தொடர்-செல்வத்தினால்தொடர்ந்த, போகம் பௌவம்-போகச்சமுத்திரத்தை, கருத்துமுற்ற-கருத்துநிரம்ப, தோய்ந்தே - அநுபவித்தே, கடந்தான்-தாண்டினான்—எ-று. (க)

இரப்போர்கடலை ஈந்து கடத்தலாவது, அவர்கள் மீட்டும் வேறொருவரிடத்துச் செல்லாதமையும் வண்ணம்கொடுத்தல். அறிவென்னுமளக்கரை நூலாய்ந்து கடத்தலாவது, அளவற்ற நுண்ணியநூல்களை ஆராய்ந்து ஞானக்கரையைக்காணல். பகைவேலையை வாளாற்காய்ந்து கடத்தலாவது, அவர்களைவாளினால் வெட்டிச் செயித்தல். போகபௌவத்தைத்தோய்ந்து கடத்தலாவது, மனம் நிறைவையடையும்படி அனுபவித்துத்தீருதல். பகை பண்பாகுபெயர்,

வே று.

173. வெள்ளமும் பறவையும் விலங்கும் வேசியர்
உள்ளமு மொருவழிநில்லா நின்றவன்

தள்ளரும் பெரும்புகழ்த் தயரதப் பெயர்
வள்ளல்வள் ளுறையயின் மன்னர் மன்னனே.

(இ-ள்.) வெள்ளமும் - ஆற்றுவெள்ளமும், பறவையும், பறவைகளும், விலங்கும் - மிருகங்களும், வேசியர் உள்ளமும் - விலைமாதருடைய மனமும், ஒருவழிஓட - ஒருவழியிற்செல்லும்படி, நின்றவன் - நிலைபெற்று அரசுசெய்தவன், தள் அரு-நீக்குதற்கரிய, பெரும்புகழ் - பெருங் கீர்த்தியையுடைய, தயரதப்பெயர் - தயரதனென்னும் பெயரையும், வள்ளல் - வள்ளன்மையையும், வள் - தோலாற்செய்த, உறை - உறையில் தங்கிய, அயில் - வேலாயுதத்தையுமுடைய, மன்னர் மன்னன் - அரசர்க்கரசன்—எ-று. (சு)

வெள்ளமுதலிய மூன்றும் ஒருவழியோட நின்றவன் தயரதனென்னும்பெயரையுடைய அரசர்க்கரசன் எனக்கூட்டுக. அரசர்க்கரசன் நீதிகோடாது செங்கோல் செலுத்துதலால் பெருமழையும் ,மழையின்மையுமாகிய குற்றமின்றி மாதம் மும்மாரி பெய்தலால் வெள்ளம் ஒருவழி யோடுவதாயிற்று. பறவையும் விலங்கும் ஒருவழியோடலாவது வெள்ளம் ஒருவழியோடவே தானியவகை விளையுளும், புல் புதல்களும் முதலியவைகள் ஆங்காங்குக் குறைவின்றிச் செழுத்தலால் சென்ற இடத்துக்கே செல்வன ஆயின. கொள்ளக்குறைபடாக் கூழுடை வியனகரும், கோனிகர் குடிகடங்கொள்ளை சான்றதும் அயோத்தியாதலால், தமக்குக்கிடைத்த நாயகன் பெரும்பொருளும் ஈகைக்குணமு முடையா னுதல்பற்றி வேசியர் உள்ளம் ஒருவழியோடுவதாயிற்று.

174. நேமிமால் வரைமதி லாக நீள்புறப்
பாமமா கடைகிடங் காகப் பன்மணி
வாமமா ளிகைமலை யாக மன்னற்குப்
பூமியு மயோத்திமா நகரம் போலுமே.

(இ-ள்.) மால்-பெரிய, நேருவரை-சக்ரவாளகிரியானது, மதில் - ஆக - மதிலாகவும், நீள் - நீண்ட, பாமம்-பரவுதலுடைய, மா புறக்கடல் - பெரும்புறக்கடலானது, கிடங்கு ஆக-அகழியாகவும், மலை-இடையிலுள்ள மலைகள், பல்மணி - பலவகையான ரத்நங்கள்பதித்த, வாமம்-அழகாகிய, மாளிகை ஆக-மாளிகைகளாகவும், மன்னற்கு-தசரத மஹா ராஜனுக்கு, பூமியும் - இந்தப்பூமியும், அயோத்திமா நகரம்போலும் - அயோத்யையென்னும் பெரிய நகரத்தையொத்திருக்கும்—எ-று. (எ)
உலகமெல்லாம் அவ்வரசன் வழிப்பட்டு நிற்குமென்பதாம்.

175. ஆவரும் வன்மைநே ரறிந்து தீட்டலான்
மேவருங் கையடை வேலுந் தேயுமால்
கோவுடை நெடுமணி மகுட கோடியால்
சேவடி யடைந்தபொற் கழலுந் தேயுமால்.

(இ-ள்.) ஆவர் வன்மையும்-எல்லாரருடைய திண்மையையும், நேர் அறிந்து - சரியாக உணர்ந்து, தீட்டலால்-தீட்டுதலால், மேவு அரு - பிறர் அடைதலரிய, கை அடைவேலும் - தசரத மஹாராஜனது கையைவிட்டுப் பிரிதலில்லாத வேலும், தேயும்-தேயாநிற்கும், கோ உடை - வந்து பணிகின்ற வேற்றரசர்களுடைய, நெடுமணி-பெருமைபொருந்திய நவரத்ந கசிதமான, மகுடகோடியால் - கிரீடங்களின் முனையுறுப்பினால், சேவடி அடைந்த - அவனுடைய பாதத்தைச் சேர்ந்திருக்கிற, பொன் கழலும்-பொன்னாற்செய்த வீரகண்டையும், தேயும் - தேயாநிற்கும்—எ-று. (அ)

எவருடைய வன்மையையும் உள்ளபடி உணர்ந்து தன் கைவேலை இவனுக்கு ஒருமுறை நீட்டுதல்போதும், இவன் அவனிலும் வலியனாதலின் இரண்டுமுறை நீட்டினால் போதுமென்று கருதித் நீட்டுதலால் கைவேல் தேய்வதாயிற்று சக்ரவர்த்தி கைவேலைத் நீட்டுஞ் செய்தியைக் கேள்வியுற்றுப் போர் முயற்சியைவிட்டுப் பின்னிடுவரென்பது. பகையரசர் வந்து விழுந்தோறும் அவர்களணிந்த முடியின் முனை யுறுப்புகள்படுதலால் சேவடியில்கட்டிய வீரக்கழல் தேய்வதாயிற்றென்பது. யாவர், ஆவர் என மரிஇயது. ஆவருமென்னும் உம்மையை வன்மையோடுகூட்டுக; இவ் வும்மை முற்றுப்பொருளதாதலால், யா-எஞ்சாமைப்பொருளது.

176. மண்ணிடை யுயிர்தொறும் வளர்ந்து தேய்வின்றி
தண்ணிழல் பரப்பவு மிருளைத் தள்ளவும்
அண்ணறன் குடைமதி யமையு மாதலால்
விண்ணிடை மதியினை மிகையி தென்னவே.

(இ-ள்.) மண்ணிடை - பூலோகத்திலுள்ள, உயிர்தொறும் வளர்ந்து - உயிர்க டோறும் வ்யாபித்து, தேய்வு இன்றி-குறைவில்லாமல், தண்நிழல் பரப்பவும் - குளிர்ச்சியாகிய இன்பமென்கிற நிழலை விரிக்கவும், இருளை தள்ளவும் - (பாபமாகிய) இருளை நீக்கவும், அண்ணல்தன் குடை - தசரத மஹாராஜனது முத்துக்குடையாகிய, மதி-சந்திரன், அமையும்-போதும், ஆதலால் - ஆகையால், விண்ணிடை மதியினை-ஆகாயத்தில் தோன்றுகின்ற சந்திரனை, இது - இந்தச்சந்திரன், மிகை என்ன (தோன்றுவது) அதிகமென்று பெரியோர்கள் சொல்லும்—எ-று. (௬)

சக்ரவர்த்தி குடை இருளைத்தள்ளுதல். பகைவர்கள் முதலியோரால் உண்டாம் பயத்தை ஒழித்தல். விண்மதி புறவிருளை நீக்குவதன்றி இதுபோலப் பயவிருளை நீக்காமையாலும், களங்கத்தையுடையதாதலாலும், விண்ணிடத்தன்றி இது போல எவ்விடத்தும் பிரகாசியாமையாலும் இதற்குமுன் அது தோன்றுவதில் பயனில்லை என்பதாயிற்று. மிகையிதென்பதை ஒரு மொழியெனக் கொள்ளினும் பொருந்தும். என்ன - அகரவீற்று வியங்கோள்.

177. வயிரவான் பூணணி மடங்கன் மொய்ம்பினான்
உயிரெலாந் தன்னுயி ரொப்ப வோம்பலால்
செயிரிலா வுலகினிற் சென்று நின்றுவாழ்
உயிரெலா முறைவதோ ருடம்பு மாயினான்.

(இ-ள்.) வயிரம் - வயிரம்முதலிய மணிகளாற்செய்த, வான்பூண் - சிறந்த ஆபரணங்களை, அணி - தரித்த, மடங்கல் - சிங்கம்போன்ற, மொய்ம்பினான் - பலத்தையுடைய தசரதமஹாராஜன், உயிர் எலாம் - உலகத்துயிர்களையெல்லாம், தன் உயிர் ஒப்ப-தன்னுயிருக்குச் சமானமாக (பாலித்து) ஓம்பலால் - பாதுகாத்தலால், செயிர் இலா-குற்றமில்லாத, உலகினில் - இவ்வுலகத்தில், சென்று நின்றுவாழ் - சஞ்சரித்தும் சஞ்சரியாமைநின்றும் வாழ்கின்ற, உயிர் எலாம் - சராசர ஜீவராசிகளெல்லாம், உறைவது-தங்கி யிருப்பதாகிய, ஓர்-ஒப்பற்ற, உடம்பும் ஆயினான் - உடம்பையும் ஒத்திருந்தான்—எ-று. (௭)

தலைமைபற்றி வயிரம் என்றாராயினும் இனம்பற்றி ஏனையமணிகளும் கொள்ளப்பட்டன. உலகுக்குச் செயிரில்லாமை இவனது தைவநிர்மிதமான ஆஜ்ஞாசக்ரத்துக்கு அஞ்சி தீத்தொழில் புரியாதிருத்தல். ஒரு உடம்புக்குள் ஒரு உயிர் வா

ழ்தல் இயற்கையாயிருக்க, இவன் உலகத்துயிர்கட்கெல்லாம் உறைவிடமாய் இருக்கின்றனுதலால் ஓர் உடம்பும் ஆயினன் என்றார். உயிர்கள்மீது அன்புடையனென்பது கருத்து.

178. குன்றென வுயரிய குவவுத் தோளினன்
வென்றியந் திகிரிவெம் பரிதி யாமென
ஒன்றென வுலகிடை யுலாவி மீமிசை
நின்றுநின் றுயிர்தொறு நெடிது காக்குமே.

(இ-ள்.) குன்று என உரிய - மலைபோல வுயர்ந்த, குவவுதோளினன் - திரட்சியாகிய புஜங்களையுடைய தசரதமஹாராஜனது, வென்றி அம்திகிரி - வெற்றியைத் தருகின்ற அழகாகிய ஆஜ்ஞாசக்ரமானது, வெம்பரி ஆம் என - வெவ்வியசூரியன் போல, ஒன்றுஎன - ஒப்பற்றதா யிருக்கிறதென்று சொல்லும்படி, உலகு இடை உலாவி - உலகத்தில் முற்றும் உலாவியும், மீமிசைநின்று நின்று - எல்லா அரசர்களுடைய ஆளுகைக்கும் மேலிடத்தில் நின்றுநின்றும், உயிர்தொறும் - எல்லாவுயிர்களையும், நெடிது காக்கும்-மிகவும் பாதுகாவாநிற்கும்—எ-று. (கக)

வென்றி அம் திகிரி என்பதற்கு வெற்றியாகிய அழகைக் கொண்டிருக்கிற சக்ரம் எனவும் பொருள்கூறலாம். கிரணத்தின் வெம்மையைப் பரிதி மேலேற்றி வெம்பரிதி என்றார். மெய்பரிதியாமென, ஒன்று என என்பவற்றிற்கு வெவ்விய சூரியன் என்று சொல்லும்படியாகவும், ஆயினும் வெற்றியாகிய அழகின்மையால் ஒப்பற்றதென்று சொல்லும்படியாகவும் எனப் பொருள்கூறினும் பொருந்தும். உலகிடை உலாவி எனவும், மீமிசை நின்று நின்று எனவும் கூறினமையால் அவனது ஆஞ்ஞாசக்ரம் நிலைபெற்றிருப்பது ஆகாசத்தில் என்றதாயிற்று. அடுக்கு இடைவிடாமைப் பொருளது.

179. எய்யென வெழுபகை யெங்கு மின்மையால்
மொய்பொரு தினவுறு முழவுத் தோளினன்
வையக முழுவதும் வறிஞ னோம்புமோர்
செய்யெனக் காத்தினி தரசு செய்கின்றான்.

(இ-ள்:) எய் என - எய் என்று ஆரவாரித்துக்கொண்டு, எழுபகை - தன்மேல் வரும்பகைவர், எங்கும் இன்மையால் . எவ்விடத்து மில்லாமையால், மொய் - பலம் பொருந்திய, பொருதினவு உறு - போர்செய்தற்குண்டாகுந் தினவுபொருந்திய, முழவு தோளினன் - ம்ருதங்கம்போன்ற தோள்களையுடைய தசரதமகாராஜன், வையகம் முழுவதும் - உலகமுழுவதையும், வறிஞன் தரித்திரன், ஒப்பும் - பாதுகாக்கின்ற, ஓர்செய்என - சிறிய வயல்போல, இனிதுகாத்து - சாக்கிரதையாகப் பாதுகாத்து, அரசுசெய்கின்றான் - அரசாட்சிசெய்கின்றான்—எ-று. (கஉ)

வறிஞனவன் தன் பயிரை பட்டிமாடுமுதலியவை மேயாவண்ணங் காப்பதுபோல, இவ்வரசன் தன்னாலும் தன்பரிசனத்தாராலுமேயன்றிக் கள்வர் பகைவர் முதலியவர்களாலும் வருத்தம் நேரிடாவண்ணம் உயிர்களைக் காக்கின்றானென்பது கருத்து.

ரு-வது, அரசியற்படலம் முற்றும்.

# ரு - வது. திருவவதாரப்படலம்.

ஸ்ரீராமபிரானது திருவவதாரத்தைக்குறித்துக் கூறுகின்றபடலம்.

மற்றைப் பரதர், லக்ஷ்மணர், சத்துருக்கர் இம்மூவருடைய திருவவதாரம் இப்படலத்தில் கூறப்படுமாயினும், ஸ்ரீராமபிரான் பாட்டுடைத் தலைவனாதலாலும், மூவரினும் முத்தோனாதலாலும் அப்பெருமானது திருவவதாரமென்றும்.

180. ஆயவ னொருபக லயனை யேநிகர்
தூயமா முனிவரற் றொழுதுதோல்குலத்
தாயருந் தந்தையுந் தவமு மன்பினால்
மேயவான் கடவுளும் பிறவும் வேறுநீ.

(இ-ள்.) ஆயவன் - அத்தன்மையனாகிய தசரதமஹாராஜன், ஒருபகல் - ஒரு நாள், அயனையேநிகர் - ப்ரஹ்மதேவனையேயொத்த, தூய - பரிசுத்தமாகிய, மா - பெருமைபொருந்திய, முனிவரன் - முனிசிரேஷ்டனாகிய வஸிஷ்டபகவானை, தொழுது - வணங்கி, தொல் - பழமையான - குலம் - எனகுலத்திற்பிறந்த, தாயரும் - தாய்மாரும், தந்தையும் - தகப்பனும், தபமும் - தவசும், அன்பினால்மேய - பக்தியோகத்தினால் எமக்கு அமைந்த, வான் கடவுளும் - முதற்பெருங்கடவுளும், பிறவும் - மற்றவையாகிய ஹிதமான பொருள்களும், வேறு நீ - விசேஷமாகிய நீயே—எ-று. (க)

தாயார் என்பது உயர்வுபற்றிவந்த ஒருமை குறித்தசொல். தாயினும் அன்பிற் சிறந்தவர் ஒருவருமில்லையாதலால் அச்சிறப்புப்பற்றி முதலிலும், புருஷார்த்தசித்திக்குக் கருவியாகிய சாரீர உற்பத்திக்கு தாயோடுகூடி துணைக்காரணமாய் நிற்றலால் அடுத்து தந்தையும் எனவும், தாய்தந்தையரது தவப்பெருமையால் தவச்செய்கையுண்டாக வேண்டுமாதலால் அடுத்து தவமும் எனவும், தவத்தை மேற்கொண்டு வழுவாதுசெய்யின் மேலான கடவுள் அன்போடு ப்ரத்யக்ஷமாவாராதலால் அதனை அடுத்து அன்பினால் மேய வான்கடவுளும் எனவும் கூறினார்.

இவ்விடத்துக்கேற்ப பிறவும் என்றதற்கு ஹிதமான பொருள்களென்று பொருளுரைத்ததாம். அயமஹாராஜனுடைய தேவியார் பலராயினும், பெற்றதாயாகவே மற்றையோரையும் பாவிக்குங் கருத்துடையானாதலின் தாயாரென்றான். தாயார் முதல் பிறவும் என்ற தொகைக்கிடந்த பொருள்கள் தனித்தனி வெவ்வேறாயிருக்கும். அவையெல்லாம் ஓருருப்பெற்று லொத்ததாயாதலால், அவற்றிற்கும் நினக்கும் வேற்றுமையுண்டென்பான் வேறு நீ என்றான்

181. எங்குலத் தலைவர்க ளிரவி தன்னினும்
தங்குலம் விளங்குறத் தரணி தாங்கினார்
மங்குன ரில்லென வரம்பில் வையகம்
இங்குன தருளினா லினிதி னேம்பினேன்.

(இ-ள்.) எம்குலத்தலைவர்கள் - எமது குலமுதல்வர்கள், இரவிதன்னினும் - சூரியனைப்பார்க்கிலும் (அதிகமாக), தம்குலம் விளங்குற - தமது குலம் விளக்கத்தை யடைய, தரணிதாங்கினார் - உலகத்தைப் பாதுகாத்தார்கள், (அவர்களுள்) மங்

குனர் இல்-விளக்கங் குறைந்தவர்களில்லை, என-என்று யாவரும் புகழும்படி, வரம்பு இல்-எல்லையில்லாத, வையகம்-உலகத்தை, இங்கு உனது அருளினல்-இக்காலத்தும் தேவரீருடைய க்ருபையினல், இனிதின்-செவ்வையாக, ஓம்பினேன் - அடியேனும் பாதுகாத்தேன்—எ-று. (உ)

இல்-என்பது குறிப்புவினைமுற்று. உனது அருளினல் ஓம்பினேன் எனறமை யால் பத்துத்திக்கினும் தன்னிரதம் செலுத்தும் ஆற்றல் முதலியவற்ருல் அன்றென அம்முனிவனது தவமஹிமையும், இங்கு என்றமையால் எங்குலத்தலைவர்கள் அரசு செய்த அக்காலத்தும் என அவனது குலகுருவாந் தன்மையும் விளங்குகின்றன.

182. அறுபதி னுயிர மாண்டு மாண்டுற
உறுபகை யொடுக்கியிவ் வுலகை யோம்பினேன்
பிறிதொரு குறையிலை யெற்பின் வையகம்
மறுகுறு மென்பதோர் மறுக்க முண்டரோ.

(இ-ள்.) அறுபதினுயிரம் ஆண்டும்-அறுபதினுயிரவருஷங்களும், மாண்டுற-கழியும்படி, உறுபகை-மிகுந்தபகைவரை, ஒடுக்கி-அடக்கி, இ உலகை-இந்த வுலகத்தை, ஓம்பினேன்-பாதுகாத்தேன், பிறிது ஒருகுறை இல்லை-வேறொரு குறையுமில்லை, எற்பின்-எனக்குப் பிற்காலத்தில், வையகம்-இவ்வுலகமானது, மறுகு உறும்என்பது-கலங்குதலை அடையும் என்பதாகிய, ஓர் மறுக்கம் - ஒரு கலக்கம், உண்டு - என்மனத்தில் உளது—எ-று. (ங)

183. அருந்தவ முனிவரு மந்த ணளரும்
வருந்துத லின்றியே வாழ்வின் வைகினர்
இருந்துய ருழக்குந ரெற்பி னென்பதோர்
அருந்துயர் வருத்துமென் னகத்தை யென்றனன்.

(இ-ள்.) அரு-செய்தற்கரிய, தவம்-தபசையுடைய, முனிவரும் - முநிவர்களும், அந்தணளரும் - ப்ராஹ்மணர்களும், வருந்துதல் இன்றியே - துன்பப்படுதலில்லாமலே, வாழ்வின்வைகினர் - சுகவாழ்க்கையிற் றங்கியிருந்தார்கள், (அப்படியிருந்தவர்கள்) எற்பின்-எனக்கும் பிற்காலத்தில், இருதுயர்-பெருந்துயரத்தினல், உழக்குநர்- கலக்கப்படுவார், என்பது ஓர் அருதுயர் - என்னப்படுதாகிய, ஒப்பற்ற சகித்தற்கரிய துன்பமானது, என் அகத்தை - என்மனத்தை, வருத்தும் - வருத்துகின்றது, என்றனன்-என்றுசொன்னன்—எ-று. (ச)

184. முரசறை செழுங்கடை முத்த மாமுடி
அரசர்தங் கோமக னனைய கூறலும்
விரைசெறி கமலமென் பொகுட்டு மேவிய
வரசரோ ருகன்மகன் மனத்தி னெண்ணினன்.

(இ-ள்.) முரசு அறை - பேரிகையொலிக்கின்ற, செழுகடை - செழுமையாகிய முற்றத்தையுடைய, முத்தம் - முத்துமுதலிய ரத்நங்கள்பதித்த, மா - பெருமை பொருந்திய, முடி கிரீடத்தைத்தாங்கிய அரசர்தம்கோமகன்-அரசர்க்கரசனகிய தசரத சக்ரவர்த்தி, அனைய கூறலும் - அச்சொற்களைச் சொல்லுதலும், விரைசெறி-மணம்மிகுந்த, கமலம்-தாமரையினது, மெல்பொகுட்டு - மென்மையாகிய பொகுட்டில், மேவிய-தங்கிய, வரம்-மேலான, சரோருகன்மகன்-ப்ரஹ்மதேவனுடைய புத்ர

ளுகிய வஸிஷ்ட்டமுநிவன், மனத்தின் எண்ணினுன் தன்மனத்தில் நினைத்தான்—எ-று. (ஓ)

எண்ணினு னென்பதற்குச் செய்பொருள் கீழ்வரும் திருவிருத்தத்தில் வாய்மையை என்பது.

185. அலைகட னடுவணோ ரநந்தன் மீமிசை
மலையென விழிதுயில் வளரு மாமுகில்
கொலைதொழி லரக்கர்தங் கொடுமை தீர்ப்பெனென்
றுலைவுறு மமரருக் குரைத்த வாய்மையை.

(இ-ள்.) அலை - அலையுமியல்புள்ள, கடல்-திருப்பாற்கடலின், நடுவண்-நடுப்பிரதேசத்தில், ஓர்-ஒப்பற்ற, அநந்தன்மீமிசை - ஆதிசேஷன்மேல், மலை என - நீலமலை போல, விழிதுயில்வளரும் - அறிதுயிலமர்ந்த, மா - பெருமைபொருந்திய, முகில்-மேகத்தையொத்த திருமால், கொலைதொழில் - சாதுக்களை வருத்துந் தொழிலையுடைய, அரக்கர்தம்கொடுமை - ராக்ஷஸர்களுடைய தீமையை, தீர்ப்பென் என்று-நீக்குகிறேனென்று, உலைவு உறும்-வருந்துகின்ற, அமரருக்கு உரைத்த-விதிசிவாதிதேவர்களுக்குச் சொல்லிய, வாய்மையை-வார்த்தையை—எ-று. (சு)

186. சுடுதொழி லரக்கராற் றொலைந்து வானுளோர்
கடுவமர் களனடி கலந்து கூறலும்
படுபொரு ளுணர்ந்தவப் பரமன் யாமினி
அடுவதில் லெனமறுத் தவரொ டேகினுன்.

(இ-ள்.) சுடு - பிறரைவருத்துகின்ற, தொழில்-தொழிலையுடைய, அரக்கரால்-ராவணன் முதலான ராக்ஷஸர்களால், வானுளோர்-இந்திரன் முதலான தேவர்கள், தொலைந்து - தோல்வியடைந்து, கடு அமர்களன் - விஷம்பொருந்திய கண்டத்தையுடைய சிவனது, அடி-திருவடியை, கலந்து - அடைந்து, கூறலும்-தமது துன்பத்தைச்சொல்லுதலும், படுபொருள் உணர்ந்த - முன்நிகழ்ந்த செய்தியை அறிந்த, அப்பரமன் - அந்த மேலானவன், இனி - இனிமேல், யாம் அடுவது இல்என - நாம் அவர்களைக் கொல்லுவதில்லையென்று கூறி, மறுத்து-தடுத்துச்சொல்லி, அவரொடு ஏகினுன்-அவர்களுடன் சென்றுன்—எ-று. (எ)

முன் நிகழ்ந்த செய்தியாவது தன்னைச் சேவிக்கவந்த துருவாசமுநிவரைத் தடுத்ததைப்பற்றித் தனி முதல்வன் அருளிச்செய்தது.

187. வடவரைக் குடுமியி னடுவண் மாசறு
சுடர்மணி மண்டபந் துன்னி நான்முகக்
கடவுளை யடிதொழு தமரகண்டகர்
இடிநிகர் வினையம தியம்பி னுனரோ.

(இ-ள்.) (அப்படிப்போன தேவர்கள்) வடவரை - மேருபர்வதத்தின், குடுமியின் நடுவண்-சிகரத்தினடுவிலுள்ள, மாசு அறு - களங்கமற்ற, சுடர் - பிரகாசத்தையுடைய, மணிமண்டபம் - ரத்நமண்டபத்தை, துன்னி-சேர்ந்து, நான்முகக்கடவுளை-ப்ரஹ்மதேவனை, அடிதொழுது-அடிவணங்கி, அமரகண்டகர்-தேவவிரோதிகளான ராக்ஷஸர்களுடைய, இடிநிகர்-இடியையொத்த, வினையமது-குரூரமான செய்கையை, இயம்பினுன்-உமாநாயகன்சொன்னுன்—எ-று. (அ)

188. பாகசா தனன்றனைப் பாசத் தார்தடல்
மேகநா தன்புகுந் திலங்கை மேயநாள்
போகம மலருறை புனிதன் மீட்டமை
தோகைபா கற்குறச் சொல்லி னனரோ

(இ-ள்.) அடல் மேகநாதன் - வெற்றிபொருந்திய இந்த்ரஜித்து, பாகசாதனன்றனை-இந்த்ரனை, பாசித்து ஆர்த்து - பாசத்தாற்கட்டி, இலங்கைபுகுந்து மேயநாள்-இலங்கையிற்சென்றிருந்தநாளில், மீட்டமை - தான்போய் மீட்டுக்கொண்டு வந்ததை, தோகைபாகற்கு-உமாதேவிபாகனாகிய சிவனுக்கு, போகம் ஆம்-போகமான, மலர் உறைபுனிதன்-தாமரைப்பூவில் வாசஞ்செய்கிற ப்ரஹ்மதேவன், உறசொல்லினன்-மிகுதியாகச் சொன்னான்—எ-று. (க)

அரோ-அசை, பிறப்புக்காலத்தில் மேககர்ஜனைபோல் ஒலித்தமையால் இந்த்ரஜித்துக்கு மேகநாதன் என்னும் பெயர் உண்டாயிற்று. இந்த்ரனை வென்றமையால் இந்த்ரஜித்து என்னும்பெயர் உண்டாயிற்று. இந்த்ரனை இந்த்ரஜித்தின் வசத்தில்நின்று மீட்டதைப் பெருங்காரியமாக நினைத்தவனாதலால் தோகைபாகற்கு உறச்சொல்லினனென்றார்.

189. இருபது கரந்தலை யீரைந் தென்னுமத்
திருவிலி வலிக்கொரு செயலின் றெங்களால்
கருமுகி லெனவளர் கருணை யங்கடல்
பொருதிடர் தணிக்கினுண் டெனும் புணர்ப்பினர்.

(இ-ள்.) இருபதுகரம் இருபதுகைகள், ஈரைந்துதலை-பத்துத்தலைகள், என்னும்-இவனுக்குளவாயிருக்கின்றனவென்று சொல்லத்தக்க, அ-அந்த, திருஇலி - மெய்ஞ்ஞானச்செல்வமில்லாதவனாகிய ராவணனது, வலிக்கு - பலத்தைமறுப்பதற்கு, எங்களால் ஒருசெயல் இன்று - எம்மிருவராலும் செய்யத்தக்க ஒருசெய்கையுமில்லை, கருமுகில் என-கரியமேகம்போல, வளர்-கண்வளர்கின்ற, கருணையங்கடல்-கருணைக்கடலாகிய எம்பெருமான், பொருது - அவனுடன் போர்செய்து, இடர் - நமது துன்பத்தை, தணிக்கின் - தணிப்பானாயின், உண்டு - சுகம் உளது, எனும் - என்கின்ற, புணர்ப்பினர்-எண்ணத்தையுடையவர்களாய்—எ-று. (உ)

190. திரைகெழு பயோததி துயிலுந் தெய்வவான்
மரகத மலையினை வழுத்தி நெஞ்சினால்
கரகமலங்குவித் திருந்த காலையில்
பரகதி யுணர்ந்தவர்க் குதவு பண்ணவன்.

(இ-ள்:) திரைகெழு-அலைகள் எறிகின்ற, பயோததி - திருப்பாற்கடலில், துயிலும்-அறிதுயிலமர்ந்த, தெய்வம் - தெய்வத்தன்மையுள்ள, வான் - பெரிய, மரகத மலையினை-மரகதமலைபோன்ற ஸ்ரீமந்நாராயணனை, நெஞ்சினால் வழுத்தி - மனத்தினால் தியானித்து, கரகமலம்குவித்து - தாமரைமலர்போன்ற கைகளைக் கூப்பி, இருந்தகாலையில் - இருந்தகாலத்தில், உணர்ந்தவர்க்கு - தன்னையுள்ளவாறுணர்ந்த அடியருக்கு பரகதி - பரமபதத்தை, உதவு-அருள்செய்கின்ற, பண்ணவன் - தேவனாகிய ஸ்ரீமந்நாராயணன்—எ-று. (கக)

நெஞ்சினால் வழுத்தி என்பது இலக்கணையாதலால் அதற்கு மனத்தினால் தியானித்தென்றாம்.

பரகதி புணர்ந்தவர்க்குதவு பண்ணவனென்றது, பெருவாழ்வைத் தருபவ னிடத்து இகழ்வாகிய அற்பத்தைவிரும்பினர் விதிசிவாதிய அமரரென்று அவ ரது பேதமைக்கிரங்குதலை யுணர்த்திநின்றது.

191. கருமுகி றாமரைக் காடுபூத்துநீ
டிருசுட ரிருபுறத் தேந்தி யேடவிழ்
திருவொடும் பொலியவோர் செம்பொற் குன்றின்மேல்
வருவபோற் கலுழன்மேல் வந்துதோன்றினன்.

(இ-ள்.) கருமுகில்-நீலமேகமானது, தாமரைக்காடுபூத்து - செந்தாமரைமலர்க் காடுமலர்ந்து, நீடு இருசுடர் - பெரிய சூரியசந்திரர்களாகிய இரண்டுசுடர்களை, இரு புறத்து ஏந்தி - இருபுறத்திலுமேந்தியும் ஏடு அவிழ் - இதழ்கள் விரிந்த தாமரை மலரிலுள்ள, திருவோடும்-பெரியபிராட்டியாரோடும், பொலிய - விளங்க, ஓர் செம் பொற் குன்றின்மேல்-ஒரு செம்பொன்மலையின்மேல், வருவபோல் - வருதல்போல, கலுழன்மேல்வந்து - பெரியதிருவடிமேல் ஊர்ந்துவந்து, தோன்றினன் - அவர்க ளுக்குப் பிரத்தியக்ஷமானான்—எ-று. (கஉ)

திருமாலானவர் நீலநிறமுள்ளவரும் திருமுகம் திருவாய் திருநேத்திரங்கள் திருக்கரங்கள் திருவடிகள் செம்மைநிறமுள்ளவருமாதலால் கருமுகில் தாமரைக் காடுபூத்தென்றும், கருடன் செம்பொன் நிறமுடையானதலால் செம்பொன்மலை போலென்றும், மிகுதிபற்றித் தாமரைக்காடென்றும் கூறினர். சங்கு சந்திரனும், சக்கரம் சூரியனுமாகக்கொள்க. வருவது எனற்பாலது விகாரவகையாற்றுவ்விகுதி குன்றிநின்றது- பெரியதிருவடி -கருடன்.

192. எழுந்தனர் கறைமிடற் றிறையுந் தாமரைச்
செழுந்தவி சுகந்தவத் தேவுஞ் சென்றெதிர்.
விழுந்தன ரடிமிசை விண்ணு ளோரொடும்
தொழுந்தொறுந் தொழுந்தொறுங் களி துலங்குவார்.

(இ-ள்.) (இறைவன் எழுந்தருளினவளவில்) கறைமிடற்று இறையும-விஷகண் டத்தையுடைய சிவனும், தாமரை-தாமரைமலராகிய, செழுதவிசு உகந்த-செழுமை யான ஆசனத்தை விரும்பிக்கொண்ட, அ தேவும் - அந்தப் பிரமதேவனும், எழுந் தனர்-எழுந்து, எதிர்சென்று - எதிரேபோய், விண்ணுளோரோடும் - தேவர்களோ டும், அடிமிசை - எம்பெருமானுடைய திருவடிகளின்மேல், விழுந்தனர் - தண்ட னிட்டுவிழுந்து, தொழுந்தொறும் தொழுந்தொறும் - பலகால் வணங்குந்தோறும் களிதுளங்குவார்-மகிழ்ச்சியினால் அசைவார்கள்—எ-று. (கந)

193. ஆடினர் பாடின ரங்கு மிங்குமா
ஓடின ருவகைமா நறவுண் டோர்கிலார்
வீடின ரரக்கரென் றுவக்கும் விம்மலால்
சூடினர் முறைமுறை துளவத் தாண்மலர்.

(இ-ள்.) (முதற்பெருந்தேவை) அரக்கர்வீடினர் என்று - அரக்கர் நசித்தார்க ளென்று, உவக்கும் சந்தோஷிக்கின்ற, விம்மலால் - பூரிப்பினால், உவகை ஆம் - பெருமகிழ்ச்சியாகிய, நறவு உண்டு - மதுவையுண்டு, ஓர்கிலார் - தாம்செய்யுங்கா ரிய மின்னதென்றறியாதவர்களாய், ஆடினர் - ஆடினார்கள், பாடினர்-பாடினார்கள், அங்கும் இங்குமாஓடினர்-பல இடங்களில் ஓடினார்கள், (அன்றியும்) முறைமுறை- பெரியர்சிறியரென்ற முறைப்படி, துளவம் - திருத்துழாய்மாலையை யணிந்த

தாள் - திருவடிகளாகிய, மலர் - செந்தாமரைமலர்களை, சூடினர் - (தமது சிரத்தில்) அணிந்துகொண்டார்கள்—எ-று. (கஈ)

வீடுவர் எனற்பாலதை வீடினர் என்றார் துணிவினால்' இது காலவழுவமைதி.

194. பொன்வரை யிழிவதோர் புயலின் பொற்புற
என்னையா ளுடையவன் றோளி னெம்பிரான்
சென்னிவான் றடவுமண் டபத்துச் சேர்ந்தரி
துன்னுபொற் பீடமேற் பொலிந்து தோன்றினான்.

(இ-ள்.) (தேவர்கள் செய்கை யிவ்வாறிருக்க) எம்பிரான் - எம்பெருமானாகிய ஸ்ரீமந்நாராயணன், பொன்வரை-பொன்மலைமேனின்றும், இழிவது-இறங்குவதாகிய, ஓர்-ஒப்பற்ற, புயலின்-மேகத்தின், பொற்பு உற-அழகுபொருந்த, என்னை ஆளுடையவன்-என்னை யாளாகவுடையவனாகிய பெரியதிருவடியின், தோள்நின்று-பிடரின் மேனின்றும் (இழிந்து), சென்னி-சிகரமானது, வான் தடவும் - பரமபதத்தையளாவுகின்ற, மண்டபத்து-மா மண்டபத்தில்- சேர்ந்து-எழுந்தருளி, அரிதுன்னு - சிங்கத்தின் பிடர்மேற் பொருந்திய,பொன்பீடம் மேல் - பொற்றவிசின் மேலிடம், பொலிந்துதோன்றினான்-நன்குவிளங்கும்படி வீற்றிருந்தான்—எ-று (கசு)

தோள் என்பதற்கு இவ்விடத்திற்கேற்ப, பிடர் எனப் பொருள் கூறப்பட்டது. அரி - முதலாகுபெயர். பொற்பீடம் - பொன்னாற்செய்யப்பட்ட பீடம். அரிதுன்னு பொற்பீடம் என்பதற்கு, சிங்காசநமென்பது திரண்டபொருள்.

195. விதியொடு முனிவரும் விண்ணு ளோர்களும்
மதிவளர் சடைமுடி மழுவ லாளனும்
அதிசய முடனுவந் தய லிருந்துழி
கொதிகொள்வே லரக்கர்தங் கொடுமை கூறினார்.

(இ-ள்.) விதியொடு - பிரமதேவனுடன், முனிவரும் - முனிவர்களும், விண்ணுளோர்களும் - தேவர்களும், மதிவளர் சடைமுடி - சந்திரன்தங்கி சடைமுடியயை யுடைய, மழுவலாளனும் - சிவனும், அதிசயமுடன் - ஆச்சர்யத்தோடு, உவந்து - சந்தோஷித்து, அயல் இருந்துழி - அருகிலிருந்தபோது, கொதிகொள் - சினங்கொண்டிருக்கிற, வேல் - வேலாயுதத்தையுடைய, அரக்கர்-அரக்கரது, கொடுமை - கொடிய செய்கையை, கூறினார்-முறையே சொன்னார்கள்—எ-று. (கசு)

பிரமதேவனை முன்னிட்டுக்கொண்டு சென்றமையால் அவனேற்றம் விளங்குதற்கு விதியொடு என ஒடுக்கொடுத்துப் பிரித்தார்.

196. ஐயிரு தலையினோ னனுச ராதியாம்
மெய்வலி யரக்கரால் விண்ணு மண்ணுமே
செய்தவ மிழந்தன திருவி னாயக
உய்திற மில்லையென் றுயிர்ப்பு வீங்கினார்.

(இ-ள்,) திருவின்நாயக - உபயவிபூதிநாயகனே. ஐயிருதலையினோன் - பத்துத் தலைகளையுடைய ராவணனும், அனுசர் - அவன் தம்பிமாரும், ஆதி ஆம் - முதலாகிய மெய்வலி-தேகபலமுள்ள, அரக்கரால்-ராக்ஷஸரால், விண்ணும்-ஸ்வர்க்கலோகமும், மண்ணும்-பூலோகமும், செய்தவம்-செய்யவேண்டிய தவங்களை, இழந்தன-இழந்துவிட்டன, (ஆகையால்) உய்திறம் - இனி நாங்கள் உஜ்ஜீவிக்கும்வழி, இல்லைஎன்று- எங்களால் இல்லையென்று விண்ணப்பம்பண்ணி, உயிர்ப்பு வீங்கினார் - பெருமூச்சு விட்டார்கள்—எ-று. (கஎ)

ராவணன்-எவரையும் அழிவிப்பவன் அனுசர் என்றது விபீஷணனொழிவான் ஒழிய நின்ற மற்றைத் தம்பிமாரை.

197. எங்கணீள் வரங்களா லரக்க ரென்றுளார்
பொங்குமூ வுலகையும் புடைத் தழித்தனர்
செங்கணு யகவினித் தீர்த்த லில்லையேல்
நுங்குவ ருலகையோர் நொடியி னென்றனர்.

(இ-ள்.) செங்கண் - செந்தாமரைக்கண்களையுடைய, நாயக - எம்மிறைவனே, எங்கள்-எங்களால் கொடுக்கப்பட்ட, நீள்வரங்களால் - பெரியவரபலத்தால், அரக்க ரென்று சொல்லப்பட்டுள்ளவர்கள், பொங்கு - விருத்தியடையாநிற்கிற, மூவுலகையும்-மூன்றுலகங்களையும், புடைத்து - அடித்து, அழித்தனர் - அழித்துவிட்டார்கள், இனி-இனிமேல், தீர்த்தல் இல்லையேல் - தேவரீர் அவர்களையழித்தொழித்தலில்லையானால், உலகை - உலகங்களை, ஓர் நொடியின்-ஒரு நொடிப்பொழுதில், நுங்குவர்-, விழுங்கிவிடுவார்கள், என்றனர்-என்று விண்ணப்பஞ்செய்தார்கள்—எ-று. (கஎ)

இப்படிச்செய்வார்களென்று உணராமல் நாங்களேகொடுத்த வரபலம்கொண்டு அவர்களெங்களை நலிய வருந்துகின்றேமெனத் தம்மினிவரவு கூறினாராயிற்று. நாயகனாதலால் தேவரீரே அவர்களை யழித்தொழித்தல் வேண்டும், அங்ஙனஞ் செய்யாவிடின் அவர்களைத்தடுக்கும் ஆற்றல் எம்மிடத்து எம்போலியரிடத்து மில்லாமையால் உலகங்களை யோர் நொடியில் விழுங்குவார்களென்பது கருத்து.

198. என்றன ரிடருழந் திறைஞ்சி யேத்தலும்
மன்றலர் துளவினன் வருந்தல் வஞ்சகர்
தந்தலை யறுத்திடர் தணிப்பென் றரணிக்
கொன்றுநீர் கேண்மென வுரைத்தன் மேயினன்.

(இ-ள்.) என்றனர் - என்று விண்ணப்பம்பண்ணி, இடருழந்து - துக்கித்து, இறைஞ்சி-வணங்கி. எத்தலும்-துதித்தமாத்திரத்தில், மன்று அலர்-வாசனைபடர்ந்த, துளவினன் - திருத்துழாய்மாலையையணிந்த பகவான்; (அத்தேவர்களைநோக்கி) வஞ்சகர் தலை அறுத்து - வஞ்சகர்களாகிய ராக்ஷஸருடைய தலைகளைச்சேதித்து, தாரணிக்கு - உலகத்திலுள்ளார்க்கு, இடர் - (அவர்களாலுண்டான) துன்பத்தை, தணிப்பன்-தணிக்கிறேன், வருந்தல்-வருத்தப்படாதிருங்கள், (அவ்வாறு நான்செய்வதாயிருப்பினும்) ஒன்று - நீங்கள் செய்யவேண்டியதாகிய வொருகாரியத்தை, நீர்-நீங்கள், கேண்மென-கேளுங்கோளென்று, உரைத்தல் மேயினன் - சொல்லுதலைப் பொருந்தினன்—எ-று. (கஅ)

மன்றல் என்பது இயற்றிலுள்ள அல் குறைந்து மன்று என நின்றது. வருந்தல் என்பது பன்மையி லொருமைவந்த வழுவமைதி. அன்றி தேவர்கள் எல்லாரும் பிரமதேவனை முன்னிட்டுக்கொண்டு வந்தனராதலால், இறைவன் அவனைநோக்கி வருந்தல் என ஒருமையாற் கூறினன் எனினும் அமையும். இடருழத்தல் ஒருசொல், இவ்வாறு கொள்ளாமல், இடர் இழத்தல் எனப் பிரித்துத் துன்பத்தை யநுபவித்தல் எனப் பொருள் கூறுவாருமுளர். கேளும் என்பது கேணம் என நின்றது. இது மகரக்குறுக்கம்.

199. வானுளோ ரனைவரும் வான ரங்களா
கானினும் வரையினுங் கடி தடத்தினும்
சேனையோ டவதரித் திடுமின் சென்றென
ஆனன மலர்ந்தன னருளி னாழியான்.

(இ-ள்.) வானுளோர்-அனைவரும்-விண்ணுலகத்திலுள்ளவர்களாகிய நீங்களனைவரும், வானரங்கள் ஆ - வாநரங்களாக, கானினும் - காட்டிலும், வரையினும் - மலைகளிலும், கடி - வாசனைபொருந்திய, தடத்தினும் - மலைப்பக்கங்களிலும், சேனையோடு-உங்கள் சேனைகளோடு, சென்று அவதரித்திடுமின்-போய் அவதரியுங்கோள், என் - என்று, அருளின் ஆழியான் - கிருபைக்கடலாகிய பகவான், ஆனனம் மலர்ந்தனன்-திருவாய்மலர்ந்தருளினன்—எ-று. (உ0)

முன்னிலையாரை நோக்கிக் கூறுகின்றமையால் வான் உளீர் அனைவிரும் என்றிருத்தல்வேண்டும். அது இவ்விடத்து வானுளோர் அனைவரும் எனப்படர்க்கையாய்க் கூறப்பட்டிருக்கின்றது. இது இடவழுவமைதி, அன்றி வானுளீர் அனைவிரும் எனப் பாடமோதினும் அமையும். ஆனனம் என்பது இவ்விடத்து வாயினை உணர்த்திற்று. அருளின் ஆழியான் என்பது அருளினால் கடலையொத்தவன் எனினும் பொருந்தும்.

200. மசரத மனையவர் வரமும் வாழ்வுமோர்
நிசரதக கணைகளா னீறுசெய்ய யாம்
கசரத துரகமாக் கடல்கொள் காவலன்
தசரதன் மதலையா வருதுந் தாரணி.

(இ-ள்.) மசரதம்-பேய்த்தேரையொத்த, அனையவர்வரமும் வாழ்வும்-அவ்வரக்கர்பெற்ற வரங்களையும் அவற்றாற்செருக்கி வாழ்கின்ற வாழ்க்கையையும், ஓர் - ஒப்பற்ற, நிசம் - சத்தியமாகிய, ரதம் - சாரமமைந்த, கணைகளால் - பாணங்களால், நீறு செய்ய - நீறாக்க, யாம்-நாம், கசம் - ரதம் துரகம் - யானை தேர் குதிரை என்கிற, மா கடல்கொள் - பெரியகடலைத் தன் ஸ்வாதீநத்திற் கொண்டிருக்கிற, காவலன் - சக்ரவர்த்தியாகிய, தசரதன் மதலை ஆ - தசரதமஹாராஜனுக்குப் புதல்வனாக, தாரணி-பூலோகத்தில், வருதும்-வந்து அவதரிப்போம்—எ-று. (உக)

சத்திய இரதமாவது இலக்குப்பிழையாது சென்று பகைவரையும் வென்று மீள்கையும். கசரததுரகம் என்றாயினும் இனமாகிய காலாட்களையுங்கொள்க. கசரத துரக மாட்கடல் என்னும் பாடத்துக்கு இந்தச் சமாதானம் வேண்டுவதில்லை. காத்தற்றொழிலில் வல்லவனாதலால் காவலன் என்றார்.

201. வளையொடு திகிரியும் வடவை தீதர
விளைதரு கடுவுடை விரிகொள் பாயலும்
இளைஞர்க ளெனவடி பரவ வேகிநாம்
வளைமதி லயோத்தியில் வருது மென்றனன்

(இ-ள்.) வளையொடுதிகிரியும்-சங்குசக்ரங்களும், வடவைதீதர - வடவைத்தீயும் தீயும்படி, விளைதரு-விளைகின்ற, கடு உடை-விஷத்தைக்கொண்ட, விரிகொள்- விரிவைக்கொண்ட, பாயலும் - ஆதிசேஷனாகிய பாயலும், இளைஞர்கள் என - தம்பிமாரென்று கண்டோர் சொல்லும்படி, அடிபரவ - அடியைத்துதிக்க, நாம் ஏகி - நாம் போய், வளைமதில் - வளைந்தமதிலையுடைய, அயோத்தியில் - அயோத்யாநகரத்தில்

வருதும்-அவதரிப்போம், என்றனன்-என்று திருவாய்மலர்ந்தருளினன்—எ-று. கடுவின் கொடுமையை விசேடித்தற்கு வடவைதீதர என்றார்.

202. என்றவ னுரைத்தபோ தெழுந்து துள்ளினார்
நன்றிகொண் மங்கல நாதம் பாடினார்
மன்றலர் செழுந்துள வணியு மாயனார்
இன்றெமை யளித்தன ரென்னு மேம்பலால்.

(இ-ள்.) என்று அவன் உரைத்தபோது - என்று அந்தப்பகவான் சொல்லிய போது, மன்று அலர்-வாசனைவிரிந்த, செழுதுளவு அணியும்-செழுமையாகிய துளசி மாலையையணிந்த, மாயனார் - விசித்ரசக்தியையுடைய பெருமானார், இன்று- இப்பொழுது, எமை அளித்தனர் என்னும் - எங்களை ரக்ஷித்தாரென்கிற, எம்பலால்-சந்தோஷத்தினால், எழுந்து துள்ளினார் - எழுந்துதுள்ளி, நன்றிகொள் - நற்பொருளைக் கொண்ட, மங்கலநாதம்பாடினார்-மங்களகீதங்களைப் பாடினார்கள். (உஉ)

203. போயதெம் பொருமலென்று விந்திர னுவகைபூத்தான்
தூயமா மலருளோனுஞ் சுடர்மதி சூடினோனும்
சேயுயர் விசும்புளோருந் தீர்ந்ததெஞ் சிறுமையென்றார்
மாயிரு ஞாலமுண்டோன் கலுழன்மேற் சரணம்வைத்தான்.

(இ-ள்.) (அப்போது) இந்திரன் - இந்திரனானவன், எம்பொருமல் போயது என்று-எமது துன்பம் போய்விட்டதென்று, உவகைபூத்தான் - மகிழ்வடைந்தான், தூய-பரிசுத்தமாகிய, மா - பெருமையொருந்திய, மலருளோனும் - தாமரைமலரில் வீற்றிருக்கும் பிரமதேவனும், சுடர்மதி - பிரகாசிக்கிற சந்திரனை, சூடினோனும்-அணிந்த சிவனும், சேய் உயர் - மிகவுமுயர்ந்த விசும்பு உளோரும் - விண்ணுலகத்திலுள்ள தேவர்களும், எம்சிறுமை-எங்கள் சிறுமையானது, தீர்ந்தது என்றார்-நீங்கிற்றென்று-சொன்னார்கள், மா இரு - மிகவும் பெரிதான, ஞாலம் - உலகங்களை, உண்டோன்-உண்டருளின ஸ்ரீமந்நாராயணன், கலுழன்மேல் - பெரியதிருவடிமேல், சரணம்வைத்தான்-திருவடிகளைவைத்தருளினான்—எ-று. (உச)

சரணம்வைத்தான் என்பது ஏறியருளினான் என்னும் பொருளது. போகங்களை அநுபவிப்பதற்குரியது இந்திரலோகமே ஆதலால், போர்க்குவரும் அரக்கர்கள் சுவர்க்கத்தை நோக்கியே வருகின்றமைபற்றி விண்முழுதாளியாகிய இந்திரன் தேவர்களில் முதலில் உவகைபூத்தானாயினான், துணிவுபற்றி போயது, தீர்ந்தது என எதிர்காலம் இறந்தகாலமாயது. ஞாலம் உபலக்கணையால் அண்டங்கள் யாவற்றையும் உணர்த்தியது.

204. என்னையா ளுடையவையன் கலுழன்மீதெழுந்துபோய
பின்னர்வா னவரைநோக்கிப் பிதாமகன் பேசுகின்றான்
முன்னரே யெண்கின்வேந்தன் யானென மொழிகின்றான்மற்
றன்னவா றெவருநீர்போ யவதரித் திடுமினென்றான்.

(இ-ள்.) என்னை ஆள் உடைய- என்னை யடிமையாகவுடைய, ஐயன்- பகவான், கலுழன்மீது - பெரியதிருவடிமேல், எழுந்து - எழுந்தருளி, போயபின்னர்-போன பிறகு, பிதாமகன் - பிரமதேவன், வானவரைநோக்கி - தேவர்களைப்பார்த்து, பேசு

கின்றான் - சொல்கின்றான், (என்னெனின்) முன்னரே - முன்னமே, எண்கின்வேந்தன் - கரடிகட்கரசனாகிய ஜாம்பவந்தனாகப் பிறந்தவன், யான் என - நான் என்று, மொழிகின்றான் - சொல்லுகின்றவனாய், அன்னவாறு-அந்தப்பிரகாரம், நீரும்போய்- நீங்களெல்லீரும்போய், அவதரித்திடுமின் - அவதரித்திடுங்கோள், என்றான் - என்றுசொன்னான்—எ - று. (உ௩)

எண்கு - கரடி. முதற்கடவுள் போயருளியயின் அங்குள்ள தேவர்களுக்குள் தான் பெரியானாதலால் பிதாமகன் பேசுவானாயினான்

205. தருவுடைக் கடவுள்வேந்தன் சாற்றுவா னெனதுகூறு
மருவலர்க் கசனியன்ன வாலியு மகனுமென்ன
அரவிமற் றெனதுகூறங் கவற்கிளை யவனெனேரத
அரியுமற் றெனதுகூறு நீலனென் றறைந்திட்டானால்.

(இ-ள்.) தரு உடை - கற்பகவிருக்ஷங்களையுடைய, கடவுள்வேந்தன் - தேவேந்திரன், மருவலர்க்கு - பகைவராகிய மலைகளுக்கு, அசனி அன்ன-இடியையொத்த, வாலியும் - வாலியும், மகனும் - அவன் மகனாகிய அங்கதனும், எனதுகூறு என்ன - என்னுடைய அமிசம் என்று, சாற்றுவான் - சொல்வானாயினான், இரவி - சூரியன், எனதுகூறு - என்னுடைய அம்சம், அங்கு - அவ்விடத்திற்குறித்த, அவற்கு இளையவன் - அந்தவாலிக்கு இளையவனாகிய சுக்ரீவன், என்றுஓத-என்றுசொல்ல, அரியும்- அக்கினிதேவனும், எனது கூறு என்னுடைய அமிசம், நீலன் என்று - நீலனென்று, அறைந்திட்டான்-சொல்லினான்—எ-று. (உ௪)

ஆல்-அசை. மற்றும் இரண்டும் பிறிது-என்னும் பொருள்படகின்றன. வாலியை அசனி என்றமையால் மருவலரை மலையென்றுரைத்தோம், இது ஏகதேச ரூபகம். இடிவீழ்ந்தமலை இருகூறாகப் பிளக்கப்படுவதுபோல வாலியை யெதிர்ந்த பகைவரது வலியும் இருகூறாகப் பிளக்கப்படுத லியற்கையாதலால், இவ்வாறு கூறினர்.

206. வாயுமற் றெனதுகூறு மாருதி யெனலுமற்றோர்
காயுமற் கடங்களாகிக் காசினி யதனின்மீது
போயிடத் துணிந்தோமென்றார் புராரிமற் றியானேவாத
சேயெனப் புகன்றான்மற்றைத் திசையுளோர்க் கவதியுண்டோ.

(இ-ள்.) வாயு - வாயுதேவன், எனது கூறு - என்னுடைய அமிசம், மாருதி - அநுமான், எனலும் - என்றுசொல்லுதலும், மற்றோர் - மற்றதேவர்கள், (நாங்கள்) காயும்-கோபியாநின்ற, மற்கடங்கள் ஆகி - வாநரங்களாகி, காசினியின்மீது - பூமியின்மேல், போயிட-போக, துணிந்தோம் - நிச்சயித்தோம், என்றார் -என்று சொன்னார்கள், புராரி - சிவன், வாதசேய்-வாயுபுத்திரன், யானே என-நானேயென்று, புகன்றான் - சொல்லினான், மற்றைத்திசையுளோர்க்கு - மற்றதிக்கிலுள்ளவர்களுக்கு, அவதி உண்டோ - அளவுண்டோ—எ-று. (உ௫)

"வாயுமற்றெனது கூறுமாருதி" என்றும், "புராரிமற்றியானே வாதசேய்" என்றும் கூறினமையால், வாயுவின் அமிசமும், சிவனது அமிசமுங்கூடி அநுமான் ஆயினன் என்பது விளங்குகின்றது. மற்று இரண்டும் அசைகள். காசினியதனின் என்பதில் து-பகுதிப்பொருள் விகுதி, அ, அன்-சாரியை. புரம் அரி-திரிபுரத்தார்க்குப் பகைவன். மற்றதேவர்கள் ஒருவரே இருவர் முதலிய பலராகப் பிறந்தமையால் அவதியுண்டோ என்றார்.

207. அருடரு கமலக்கண்ண னருண்முறை யலருளோனும்
இருடரு மிடற்றினோனு மமரரு மினையராகி
மருடரு வனத்தின்மண்ணின் வானர ராகிவந்தார்
பொருடரு மிறைவர்தத்த முறைவிடஞ் சென்றுபுக்கார்.

(இ-ள்.) அருள் தரு - கிருபையைத்தருகின்ற, கமலக்கண்ணன் - தாமரைமலர் போன்ற திருக்கண்களையுடைய ஸ்ரீமந்நாராயணன், அருள் - அருளிச்செய்த, முறை-கிரமப்படி, அலர் உளோனும் - தாமரைமலரில் வீற்றிருக்கும் பிரமதேவனும், இருள் தருமிடற்றினோனும் - கருநிறம்பொருந்திய கண்டத்தையுடைய சிவனும், அமரரும்-மற்றதேவர்களும், இனையர் ஆகி - இத்தன்மையராகிய, மருள் தரு - மயக்கத்தைத் தருகின்ற, வனத்தில் காட்டிலும், மண்ணின் - பூமியிலும், வானரர் ஆகி வந்தார் - வாநரவுருவங்கொண்டு வந்தார்கள், பொருள் - தம்மையடைந்தவர்கள் விரும்பும்பொருள்களை, தரும்-தருகின்ற, இறைவர்-தலைவர்களாகிய ப்ரஹ்மருத்ரேந்த்ராதியர், தத்தம் - தங்கள் தங்களுடைய, உறைவிடம் - வாஸஸ்த்தானத்தில், சென்றுபுக்கார் - போய்ப் பிரவேசித்தார்கள்—எ-று. (உஅ)

208. ஈதுமுன் னிகழ்ந்தவண்ண மெனமுனி யிதயத்தெண்ணி
மாதிரம் பொருததிண்டோன் மன்னநீ வருந்தலேழ்
பூதல முழுதுங்காக்கும் புதல்வரை யளிக்கும்வேள்வி
தீதற முயலினைய சிந்தைநோய் தீருமென்றான்.

இ-ள்,) ஈது-இது, முன் - முன்னே, நிகழ்ந்த - நடந்த, வண்ணம் - பிரகாரம், என-என்று, முனி-வஸிஷ்ட்டமுநிவன், இதயத்து எண்ணி - இருதயத்தில் நினைத்து, மாதிரம் - மலையை, பொருத - தாக்கிய, திண்தோள் - திண்ணியபுஜங்களையுடைய, மன்ன - அரசனே, நீவருந்தல் - நீவருத்தப்படாதை, ஏழ் - எழுச்சியையுடைய, ஏழ் - ஏழென்னுந் தொகையையுடைய, பூதலம் முழுதும் - பூமியையெல்லாம், காக்கும் - ரக்ஷித்தற்குரிய, புதல்வரை-புத்திரரை, அளிக்கும்-கொடுக்கவல்ல, வேள்வி - (புத்ரகாமேஷ்டி) யாகத்தை, தீது அற முயலின் - குற்றமின்றி முயன்று முடித்தால், ஐய - ஐயனே, சிந்தைநோய் - உன்மனவருத்தம், தீரும் - நீங்கிவிடும், என்றான்-என்று சொல்லினான்—எ-று. (உக)

மாதிரம் திக்கு என்பாருமுளர். ஏழேழ் பூதலம்என்பதற்குப்பதினான்குலோகங்கள் எனினுமாம். பூதலம் என்பது பூமியையுணர்த்துஞ் சொல்லாயினும் இவ்விடத்தில் பொதுவாக உலகத்தை யுணர்த்தினதாகக்கொள்க. குற்றமறுகையாவது - இடையூன்றின்மை. முயன்றும் நிறைவேற்றாவிடின் பயனின்றாய் சிந்தைநோயுந் தீராதாதலால், முயலின் என்பதற்கு முயன்று முடித்தால் எனப்பொருள் கூறப்பட்டது.

209. என்னமா முனிவன்கூற வெழுந்தபே ருவகைபொங்க
மன்னவர் மன்னனந்த மாமுனி சரணஞ்சூடி
உன்னையே புகல்புக்கேனுக் குறுகண்வந் தடைவதுண்டோ
அன்னதற் கடியேன்செய்யும் பணியினி தளித்தியென்றான்.

(இ-ள்,) என்ன-என்று மாமுனிவன் - பெருமையடைந்த வஸிஷ்டமுநிவன், கூற - சொல்ல, (கேட்ட) மன்னவர் மன்னன் - அரசர்க்கரசனாகிய தசரதமஹாராஜன், எழுந்த - மேலெழுந்த, பேருவகை பொங்க - பெரியசந்தோஷம் மிக, அந்த மாமுனிசரணம் - அந்த முநிசிரேஷ்ட்டனுடைய திருவடிகளை, சூடி - சிரசில்சூடி

உன்னையே - நின்னையே, புகல் புக்கேனுக்கு - சரணமடைந்த அடியேனுக்கு, உறுகண் - துன்பமானது, வந்து அடைவது உண்டோ - வந்து அடைதல் உளதோ, (இல்லையாகையால்) அன்னதற்கு - அத்தன்மையதான யாகத்தின்பொருட்டு, அடியேன் செய்யும்பணி - அடியேன் செய்யவேண்டிய காரியத்தை, இனிது அளித்தி என்றான் - இனிதாக கட்டளையிட்டருள்வாய் என்று வினவினான்—எ-று. (கூ௯)

கலைக்கோட்டுமுனியின் வரலாறு.

210. மாசறு சுரர்களோடு மற்றுளோர் தமையுமீன்ற
காசிப னருளுமைந்தன் விபாண்டகன் கங்கைசூடும்
ஈசனும் புகழ்தற்கொத்தோ னிருங்கலை பிறவுமெண்ணில்
தேசுடைத் தந்தையொப்பான் றிருவருள் புனைந்தமைந்தன்.

(இ-ள்.) மாசு அறு-குற்றமுற்ற, சுரர்களோடு-தேவர்களுடன், மற்றுளோர்தமையும் - மற்றவர்களையும், ஈன்ற - பெற்ற, காசிபன்-காசிபரிஷி, அருளும் - ஈன்ற, மைந்தன்-புத்திரனும், விபாண்டகன் - விபாண்டகன் என்னும் பெயருள்ளவனும், கங்கைசூடும் - கங்கையைச் சிரசிற்றரித்த, ஈசனும் - சிவனும், புகழ்தற்கு ஒத்தோன் - புகழத்தகுந்தவனும், இருகலை - பெருமையாகிய வேதம்முதலான சாஸ்திரங்களிலும், பிறவும்-மற்றையவற்றிலும், எண்ணின் - எண்ணிப்பார்த்தால், தேசு உடை - ஒளியையுடைய, தந்தைஒப்பான் - தன்பிதாவையொத்தவனும், திருவருள் புனைந்தமைந்தன்-பகவத்க்ருபையைப் பெற்றதனால் சக்தியடைந்திருப்பவனும். ()

பிறப்பின் எழுமையில் தேவப்பிறப்பு உயர்ந்ததாதலால் மாசு அறு சுரர்கள் என்றார். ஈசனும் என்னு மும்மை உயர்வுசிறப்பு. ஈசனுக்குச் சிறப்பாவாது சர்வேசுவரனுடைய ஸ்ரீபாத தீர்த்த தாரண ராஹாத்ம்யம். இதனானே ஈசன் என்னும் பெயரும் உண்டாயிற்றென்று குறிப்பித்தற்கு "கங்கைசூடும்ஈசன்" என்றார். ஈசன் என்பதற்கு ஐசுவர்ய யுக்தன் என்பது பொருள்.

211. வருகலை பிறவுநீதி மனுநெறி வரம்பில்வாய்மை
தருகலை மறையுமென்னிற் சதுமுகற்குவமைசான்றோன்
திருகலை யுடையவிந்தச் செகத்துளோர் தன்மைதேரா
ஒருகலை முகச்சிருங்க முயர்தவன் வருதல்வேண்டும்.

(இ-ள்.) வருகலைபிறவும் - வழங்கிவருகிற பிறகலைகள் பிறவற்றிலும், நீதி - நீதியிலும், மனுநெறி-மநுநூல்வழி யொழுகுதலிலும், வரம்பு இல் வாய்மைதரு - அளவில்லா உண்மைப்பொருளைக் சொல்லுகின்ற. கலை - பிரிவுகளையுடைய, மறையும் - வேதங்களிலும், எண்ணின் - ஆலோசித்துப்பார்க்குமிடத்தில், சதுமுகன் கு உவமை சான்றோன் - நான்குமுகங்களையுடைய பிரமனுக்கு முழுது மொப்பாயிருப்பவனும், திருகு ஆலை உடைய - மாறுபாடியற்கையுள்ள அலைகளையுடைய, இந்தச் செகத்து உள்ளோர்தன்மை - இந்த நிலவுலகத்தில்வாழ்வோருடைய சுபாவத்தை தேரா - அறியாத, ஒருகலை முகம் சிருங்கம் - ஒருகொம்புள்ள முகத்தை யுடையானுமாகிய, உயர்தவன் - மேலான தவமகிமையுள்ளவன், வருதல்வேண்டும் - வரல்வேண்டும்—எ-று. (௬௨)

சிருங்கம்-கொம்பு, கலைமுகமும் கொம்புமுடையானாதலால் இவர்க்குக் கலைக்கோட்டுமுநிவர் என்னும் பெயர் வழங்கி வருகின்றது. சேகத்துளோர்தன்மை. ஆண் பெண் என்னும் பகுப்பு.

212. பாந்தளின் மகுடகோடி பரித்தபா ரதனில்வைகும்
மாந்தர்கள் விலங்கென் றுன்னு மனத்தன்மா தவத்தனெண்ணில்
பூந்தவி சுகந்துளோனும் புராரியும் புகழ்தற்கொத்த
சாந்தனால் வேள்விமுற்றிற் றனையர்க ளுளராமென்றான்.

(இ-ள்.) பாந்தளின் -(ஆதிசேஷன் என்னும்) பாம்பினது, மகுடகோடி - முடி வரிசைகளின் முனையுறுப்பால், பரித்த - சுமக்கப்பட்ட, பாரில்வைகும் - பூலோகத்தில் வாழ்கின்ற, மாந்தர்கள்-மனிதர்களை, விலங்கு என்று உன்னும் - மிருகங்களென்று நினைக்கின்ற, மனத்தன் - மனத்தையுடையானும், மாதவத்தன் - பெரிய தவத்தையுடையாம், எண்ணின் - எண்ணுமிடத்து, பூதவிசு உகந்துளோனும்- தாமரைப்பூவாகிய ஆசனத்தை யுடையவனாகிய பிரமதேவனும், புராரியும் - சிவனும் புகழ்தற்கு ஒத்த - புகழத்தகுந்த, - சாந்தனால்;- சாந்தசீலனுமானவனால், வேள்வி முற்றின் - யாகத்தைமுடித்தால், தனையர்கள் உளர் ஆம் - புத்திரர்கள் உளராவர், என்றான் - என்று சொன்னான்—எ-று. (உஉ)

213. ஆங்குரை யினையகூறு மருந்தவர்க் கரசன்செய்ய
பூங்கழற் றொழுதுவாழ்த்திப் பூதல மன்னர்மன்னன்
தீங்கறு குணத்தான்மிக்க செழுந்தவன் யாண்டையுள்ளான்
ஈங்கியான் புரியுந்தன்மை யருளுதி யிறைவவென்றான்.

(இ-ள்.) ஆங்கு - அப்போது, இனைய உரை கூறும் - இத்தன்மையவான வார்த்தைகளைச் சொல்லாநின்ற, அருதவர்க்கு அரசன் - அருமையான தவத்தினர்க்கரசனாகிய வஸிஷ்டமுநிவனுடைய, பூகழல் - செந்தாமரை மலர்போன்ற திருவடிகளை, பூதலம் மன்னர்மன்னன் - பூலோகத்தரசர்க்கரசனாகிய தசரகமஹாராஜன், தொழுதுவாழ்த்தி - வணங்கிப்புகழ்ந்து, தீங்கு அறு - குற்றமற்ற, குணத்தால்மிக்க - நற்குணத்தாற்சிறந்த, செழுதவன் - நற்றவத்தோனாகிய அந்தக் கலைக்கோட்டுமுனிவன், யாண்டுஉளான் - எவ்விடத்திலிருக்கின்றான், ஈங்கு - இவ்விடத்து, யான் புரியும் தன்மை - நான் செய்யப்படுவதாகிய காரியத்தை, இறைவ - ஸ்வாமி, அருளுதி - நியமித்தருள்வாய், என்றான்-என்று வினவினான். (உச)

யாண்டைஎன்பதிலுள்ள ஐ - சாரியை. தீங்கு - காமாதிகள். தீங்கறுகுணத்தான்மிக்க செழுந்தவன் என்றமையால், காமாதிகளற்றவர்கே தவம் பலிக்கு மென்பதாயிற்று.

வேறு.

214. புத்தானகொடுவினையோ டருந்துயரம் போயொளிப்பப் புவனந்தாங்கும்
சத்தானகுணமுடையோன் றயையினொடுந் தண்ணளியின் சாலைபோல்வான்
எத்தானும்வெலற்கரியான் மனுகுலத்தேவந்துதித்தோனிலங்குமௌலி
உத்தானபாதனருள் ரோமபதனென்றுளனிவ் வுலகையாள்வான்.

(இ-ள்.) (அப்போது வஸிஷ்டமுனிவன் சொல்லலுற்றான்) புவனம்தாங்கும்- உலகத்தைரக்ஷிக்கிற, சத்தானகுணம் உடையோன் - உண்மைக்குணத்தையுடையவனும், தயையினொடும் தண்ணளியின் - தயைக்கும் அன்புக்கும், சாலைபோல்வான் - உறைவிடம்போல்பவனும், எத்தானும் வேலற்கு அரியான் - பகையர்சர் செய்யும் எந்தவுபாயத்தாலும் வெல்லக்கூடாதவனும், மனுகுலத்துவந்து உதித்தோன் - மநுகுலத்தில் வந்து பிறந்தவனும் ஆகிய, இலங்கும் - பிரகாசிக்கிற, மௌலி - கிரீடத்தையணிந்த, உத்தானபாதன் - உத்தாநபாதனென்னு மரசன்,

புத்தானகொடுவினையோடு - (மறுமையில்) புத் என்னும் கொடியநரகத்துடன், அரு துயரம்-(இம்மையில்) சகித்தற்கரியதுன்பங்கள், போய் ஒளிப்ப - நீங்கியொளித்துக் கொள்ளும்படி, அருள் - பெற்ற, ரோமபதன், என்ற - ரோமபதனென்று சொல்லப் பட்ட, இவ்வுலகையாள்வான் - இந்த லோகத்துள்ளநகரத்தை யாளுமரசனொருவன், உளன்-இருக்கிறான்—எ-று. (௩௫)

புத்தானகொடுவினையோ டருந்துயரம்போயொளிப்ப அருள் என வியையும். புத்தான கொடுவினை எனக் காரியத்தைக் காரணமாக உபசரித்தார். ஒளிப்ப-காரணப்பொருட்டு. புத் என்பது ஓர் நரகவிசேடம். த்ர - என்பது இல்லாமற்செய்ப வன்என்னும் பொருளது. ஆதலால் புத்ரன் என்பதற்கு திரண்டபொருள் புத் என்னும் நரகத்திற் செல்லுதலை யொழிப்பவனென்பது. வினைப்பயன் துய்க்கு மிடத்தை வினையென்றார்.

வெல்லுதற்குக் கருவி உபாயமாதலால், எத்தானும் வெலற்கு என்பதற்கு எந்த வுபாயத்தாலும் என்று பொருளுரைக்கப்பட்டது. அவ்வுபாயம் சாமம், பேதம், தானம், தண்டம் என நான்குவகைப்படும்.

215. அன்னவன்றான் புரந்தளிக்குந் திருநாட்டினெடுங்கால மளவதாக
மின்னியெழுமுகிலின்றி வெந்துயரம்பெருகுதலும் வேதநன்னூல்
மன்னுமுனிவரையழைத்து மாதானங் கொடுக்கினும்வான் வழங்காதாகப்
பின்னுமுனிவரர்க்கேட்பக் கலைக்கோட்டுமுனிவரின் வான்பிலிற்றுமென்றார்.

(இ-ள்.) அன்னவன் - அவ்வரசன், புரந்து அளிக்கும் - காத்துரக்ஷிக்கிற, திரு நாட்டில் - அழகியதேசத்தில், நெடுங்காலம் அளவதாக - வெகுகாலம்வரைக்கும், மின்னிஎழும்-மின்னிக்கொண்டெழுகின்ற, முகில் இன்றி - மேகங்கள் வருதலில்லா மல், வெம்துயரம்பெருகுதலும் - கொடியதுன்பம்மிகுதலும், வேதம் நல்நூல் மன்னும் - வேதங்களும் நல்லநூல்களுமாகிய இவற்றினுணர்ச்சியுள்ள, முனிவரை-முனிவர்களை, அழைத்து-வருவித்து, மாதானம் கொடுக்கினும் - பெரிய தானங்களைக் கொடுத்தும், வான்வழங்காதாக - மேகம்மழைபொழியாததாக, பின்னும் - மேலும், முனிவரர்க்கேட்ப - முனிசிரேஷ்டரைக்கேட்க, (அவர்கள்) கலைக்கோட்டுமுனி வரின் - கலைக்கோட்டு முனிவன்வந்தால், வான்பிலிற்றும் என்றார் - மேகம் மழை பொழியுமென்றார்கள்—எ-று. (௩௬)

பிலிற்றல்-துளித்தல்.

216. ஓதநெடுங்கடலாடை யுலகினில்வாழ்மனிதர்விலங் கெனவேயுன்னும்
கோதில்குணத்தருந்தவனைக் கொணரும்வகையாவதெனக் குணிக்கும்வேலை
சோதிநுதற்கருநெடுங்கட்டுவரிதழ்வாய்த் தரளநகைத்துணைமென்கொங்கை
மாதரெழுந்தியாமேகி யருந்தவனைக்கொணர்துமென வணக்கஞ்செய்தார்.

(இ-ள்.) (முனிவர்கள் இவ்வாறுசொல்ல) ஓதம் - அலைகளையுடைய, நெடுகடல்-நீண்டகடலாகிய, ஆடை - வஸ்திரத்தைச் சூழக்கொண்ட, உலகினில் - பூமியில், வாழ் - வாழ்கின்ற, மனிதர் - மனிதர்கள், விலங்கு எனவே உன்னும் - மிருகங்க ளென்றே நினைக்கின்ற, கோது இல் குணத்து - குற்றமில்லாத குணத்தையுடைய, அருதவனை-அருமையான தவத்தையுடையவனாகிய கலக்கோட்டுமுனிவனை, கொண ரும்வகை - கொண்டுவரும்வகை, யாவது என - எதுவென்று, குணக்கும் வேலை-ஆலோசிக்கும் சமயத்தில், சோதிநுதல் - ஒளிபொருந்திய நெற்றியையும், கருநெடு கண்-கருநெடுங்கண்களையும், துவர் இதழ்வாய்-பவளம்போன்ற அதரத்தோடுகூடிய

வாயையும், தாளநகை-முத்தையொத்த பற்களையும், துணை - தமக்குத்தாமே யொப்பனவாகிய, மெல்கொங்கை-மிருதுவான ஸ்தநங்களையுமுடைய, மாதர்-விலைமகளிர், எழுந்து-எழுந்து நின்று, யாம் ஏகி-நாங்கள்போய், அருதவனை - அருமையானதவத்தையுடைய முநிவனை, கொணர்ந்தும் என - கொண்டுவருமோமென்று, வணக்கம் செய்தார்-வணங்கினார்கள்—எ-று. (௨௭)

அவைக்களத்தில் மாதர் எழுந்து என்றமையால் மாதர் வேசையர் மேலது.

217. ஆங்கவரம்மொழியுரைப்ப வரசன்மகிழ்ந்தவர்க்கணிதூ சாதியாய [தோள்
பாங்குளமற்றவையருளிப் பனிப்பிறையைப்பழித்தநுதற் பணைத்தவேய்த்
எங்குமிடைதடித்தமுலை யிருண்டகுழன்மருண்டவிழியிலவச்செவ்வாய்
பூங்கொடியீரேகுமெனத் தொழுதிறைஞ்சியிரதமிசைப் போயினரே.

(இ-ள்.) ஆங்கு - அப்படி, அவர் - அக்கணிகைமாதர், அம்மொழி உரைப்ப-அந்தவார்த்தையைக் சொல்லியதனால், அரசன் ரோமபதன் என்கிற அரசன் மகிழ்ந்து-சந்தோஷித்து, அணி-ஆபரணங்களும், தூசு ஆதி ஆய - ஆடையும் முதலாகிய, பாங்கு உள-நன்மையுள்ளனவான, மற்றவை - பிறவற்றையும், அருளி - கொடுத்து, பனிப்பிறையை-குளிர்ச்சியான அஷ்டமீசந்திரனை, பழித்த-இகழ்ந்த, நுதல் - நெற்றியையும், பணைத்த-பருத்த, வேய் மூங்கில்போன்ற, தோள்-தோள்களையும், எங்குல் இடை - தேய்ந்து வருந்தும் இடையினையும், தடித்தமுலை - பூரித்த ஸ்தநங்களையும், இருண்டகுழல் - கறுத்தகூந்தலையும், மருண்டவிழி - மருண்டகண்களையும், இலவம் செவ்வாய் - இலவம்பூப்போலச் செவந்தவாயையுமுடைய, பூங்கொடியீர்-பூங்கொடி போல்கின்ற பெண்களே, ஏகும் என-போங்கோளென்று விடைகொடுக்க, தொழுது இறைஞ்சி - தொழுது வணங்கி, இரதமிசைபோயினர் -(அவ்வரசன் கொடுத்த பதர் மேல் ஏறிக்கொண்டுபோனார்கள்—எ-று. (௨௮)

வேறு.

218. ஓசனை பலகடந் தினியொ ரோசனை
ஏசறு தவனுறை யிடமி தென்றுழி
பாசிழை மடந்தையர் பன்ன சாலைசெய்
தாசறு மருந்தவத தவரின் வைகினார்.

(இ-ள்.) ஓசனைபலகடந்து-பலயோசனைவழியைக்கடந்து, ஏசுஅறு-பழிப்பற்ற, தவன்-தவமுநிவன், உறை-வசிக்கின்ற, இடம் இது - இடமாகிய இது என்றுசுட்டி, இனி ஓர் ஓசனை என்றுழி - இனியொரு யோசனைதூரமென்றவிடத்தில், பாசிழை மடந்தையர்-பசும்பொன்னாலாகிய ஆபரணமணிந்த அக்கணிகைமாதர், பன்னசாலை செய்து - தழைக்குடில் செய்துகொண்டு, ஆசு அறும் - குற்றமறுகைக் கேதுவான, அரு-அரிய, தவத்தவரின் - தவஞ்செய்வாரைப்போல, வைகினார் - தங்கியிருந்தார்கள்—எ-று. (௨௯)

பன்னம-இலை.

219. அருந்தவன் றந்தையை யற்ற நோக்கியே
கருந்தடங் கண்ணியர் கலைவ லாளனிற்
பொருந்தினர் பொருந்துபு விலங்கெனப் புரிந்
திருந்தவ ரிவரென வினைய செய்தனன்.

(இ-ள்.) கருந்தடம் கண்ணியர் - கரிய பெரியகண்களையுடைய அக்கணிகை மாதர், அருதவன் தந்தையை அற்றம்நோக்கி - அருமையான தவத்தையுடைய

கலைக்கோட்டுமுநிவனுக்குத் தந்தையாகிய விபாண்டகனது (இல்லாத) சமயம் பார்த்து, கலைவலாளனில் - கலாவல்லவனாகிய கலைக்கோட்டு முநிவனிடத்தில், பொருந்தினர் - சேர்ந்தார்கள், பொருந்துபு - சேர்ந்து இருக்க, (உலகத்தாரை) விலங்கு என - மிருகங்களென்று உருவத்தாற்காணப்பட்டு, புரிந்து இருந்தவர் இவர் - நம்மைப்போல எண்ணியிருந்தவர் இவர், என - என்றுட்கொண்டு, இனைய செய்தனன் - இக்கடன்களைச்செய்தான்—எ-று. (௪0)

இதில் - ஆசிரமம் எனினும் பொருந்தும்.

220. அருக்கிய முதலினோ டாசனங் கொடுத்
திருக்கென விருந்தபின் னினிய கூறலும்
முருக்கிதழ் மடந்தையர் முனிவனைத் தொழாப்
பொருக்கென வெழுந்துபோய்ப் புரையுட் புக்கனர்.

(இ-ள்.) அருக்கியம் முதலினோடு - அர்க்யமுதலானவைகளுடன், ஆசனம் கொடுத்து - ஆசநத்தையுங் கொடுத்து, இருக்க என - இருக்கக்கடவீரென்று சொல்ல, இருந்தபின் - அவர்களவ்வாறே யிருந்தபின்பு, இனிய கூறலும் - குசலப் ரசிநமுதலான இன்சொற்களைச் சொல்லுதலும், முருக்கு இதழ் - முருக்கம்பூப் போன்ற அதரத்தையுடைய, மடந்தையர் - அம்மாதர், முனிவனை - அந்தமுநிவனை, தொழா - வணங்கி, பொருக்கென - விரைவாக. எழுந்துபோய் - எழுந்துசென்று, புரையுள் புக்கனர் - தங்கள் பன்னசாலையில் பிரவேசித்தார்கள்—எ-று. (௪௧)

அருக்கியமுதலினோடு என்றமையால், அருக்கியம், பாத்யம், ஆசமநம் என்னும் மூன்றுங்கொள்ளப்படும். அருக்கியம் தலையில் தெளித்துக்கொள்ளுதற்குரியநீர். பாத்யம் - கால்கழுவுதற்குரியநீர். ஆசமனம் - உட்கொள்ளுதற்குரியநீர். இருக்கென- இருக்க என.

221. திருந்திழை யவர்சில தினங்க டீர்ந்துழி
மருந்தினு மினியன வருக்கை வாழைமாத்
தருந்தருங் கனியொடு தாழையின் பலம்
அருந்தவ வருந்தென வருளி னாரரோ.

(இ-ள்.) திருந்து இழையவர் - தொழில்குற்றமற அமைந்த ஆபரணங்களை யணிந்த அந்தமாதர்கள், சிலதினங்கள் தீர்ந்துழி - சிலநாட்கள் கழிந்தபிறகு, மருந்தினும் - தேவாமிர்தத்தினும், இனியன - இனியவைகைளாகிய, வருக்கை-பலாமரங் களும், வாழை-வாழை மரங்களும், மா-மாமரங்களும் ஆகிய, தரு - மரங்கள், தரு- கொடுக்கின்ற, கனியொடு - பழங்களோடு, தாழையின்பலம் - தேங்காய்களையும், அருதவ - அரியதவத்தையுடைய முநிவனே, அருந்து என - உண்ணென்று, அருளி னார் - தயையொடு கொடுத்தார்கள்—எ-று. (௪௨)

தாழை - தெங்கு. பலம் - பழம். அது உலகவழக்குப்பற்றிய காய் என்று கூறப்பட்டது.

222. இன்னன பல்பக லிறந்த பின்றிரு
நன்னுதன் மடந்தையர் நவையின் மாதவன்
தன்னையெம் மிடத்தினுஞ் சார்தல் வேண்டுமென்
றன்னவர் தொழுதலு மவரோ டேகினன்.

(இ-ள்.) இன்னனபலபகல் - இத்தன்மையவாகிய பலநாள்கள், இறந்தபின் - கழிந்தபிறகு, திரு - திருமகளையொத்த, நல்நுதல்மடந்தையர் - அழகிய நெற்றியை

புடையவர்களாகிய, அன்னவர் - அந்தமாதர்கள், நவை இல் - குற்றமில்லாத, மாதவன் தன்னை - பெரியதவத்தையுடைய முநிவனை (நோக்கி), எம் இடத்திலும் - எங்களாச்சிரமத்துக்கும், சார்தல்வேண்டும் என்று - வரவேண்டுமென்று, தொழுதலும் - வணங்குதலும், (அந்தமுநிவன்) அவரோடு ஏகினன் - அவர்களுடன் சென்றான்—எ-று. (உஉ)

நாங்கள் உம்முடைய ஆச்சிரமத்துக்கு வருதல்போல நீர் எங்களுடைய ஆச்சிரமத்துக்கும் வருதல்வேண்டு மென்னும் பொருள்பட நின்றமையால் எம்மிடத்திலும் என்னும் உம்மை இறந்தது தழீஇயது.

223. விம்முறு முவகையர் வியர்ந்த நெஞ்சினர்
அம்மவி திதுவென வகலு நீணெறி
செம்மையின் முனிவரன் றொடரச் சென்றனர்
தம்மன மெனமருட் டையலார்களே.

(இ-ள்.) தம்மனம் என - தமதுமன மருளுதல்போல, மருள்தையலார்கள் - மருட்சியையுடைய அந்தமாதர்கள், விம்முறும் உவகையர் - மிகுகின்ற சந்தோஷமுடையவர்களாயும், வியந்தநெஞ்சினர் -(முநிவனது வருகைக்கு) அதிசயித்த மனமுடையவர்களாயும், இது இது என -(எங்களாச்சிரமம்) இதுதான் இதுதான் என்று சுட்டிக்காட்டிக்கொண்டு, அகலும் போகின்ற, நீள்நெறி - நெடுவழியில், முனிவரன் - முநிவரிர்சிறந்த அக்கலைக்கோட்டு மஹாரிஷியானவன், செம்மையின் தொடர - வஞ்சகமுணராத்தன்மையில் தொடர்ந்துவர, சென்றனர் - போனார்கள்.

செம்மையின் என்பவத முனிவரன் என்பதற்கு விசேடணமாக்கி, செவ்விய வொழுக்கத்தையுடைய முனிவரன் எனினும் பொருந்தும். அம்ம - வியங்கோளசைச்சொலாயினும் இங்குமுன்னிலையில் வந்தது. மனமென மருளுதலாவது நம்முடைய செயலை வஜ்சகமென இம்முனிவரன் உணர்ந்தால் யாதாகச்சபிப்பனோ என மன மருளுதல்போலப் புறத்திலும் கை கால் முதலிய உறுப்புகள் நடுங்குவாராதல். மருட்டையலார் என்பதில் மருள் - முதனிலைத் தொழிற்பெயர்.

224. வளனகர் முனிவரன் வருமுன் வானவன்
களனமர் கடுவெனக் கருகி வான்மிசை
சளசள வெனமழைத் தாரை கான்றன
குளனொடு நதிகடங் குறைகடீரவே.

(இ-ள்.) முனிவரன் - அந்த முநிசிரேஷ்டன், வளகர் -(ரோமபதனுடைய) வளமான நகரத்தில், வருமுன் - வருவதன் முன்னமே, வான் மிசை - ஆகாயத்தில், (சென்று கடல்நீரைப்பருகி மீண்டு,) வானவன் களன் அமர் - சிவனதுகண்டத்திற் றங்கியிருக்கிற, கடு என - விஷம்போல, கருகி - கறுத்து, குளனொடுநதிகள்தம் குறைகள்தீர - குளங்களோடு நதிகளும் நீரில்லாதிருந்த தம்முடைய தாழ்வுகளொழியும்படி, சளசள என - சளசள வென்று, மழை - மேகங்கள், தாரை கான்றன - மழைத்தாரைகளைப்பொழிந்தன—எ-று. (உரு)

களனமர் கடுவெனப் பின்வருகையால் வானவன் என்பது சிவனையுணர்த்திற்று. சளசள - ஒலிக்குறிப்பு; இது இரட்டைக்கிளவி. குளம் குளன் என்பது போலி தம்சாரியை யெனினுமொக்கும்

225. பெரும்புன னதிகளுங் குளனும் பெட்பற
கரும்பொடு செந்நெலுங் கவின்கொண் டோங்கிட

இரும்புயல் ககனமீ திடைவிடா தெழுந்
தரும்புனல் சொரிந்தபோ தரசுணர்ந் தனன்.

(இ-ள்.) பெரும்புனல் நதிகளும் குளனும் - மிகுந்தநீரைக் கொள்ளு மியல்புள்ள ஆறுகளும் குளங்களும், பெட்புஅற - நீர்வேட்கையை நீங்கவும், கரும்பொடு செந்நெலும் - கருப்பஞ்சோலைகளும் செந்நெற்பயிர்களும் கவின் கெண்டு ஓங்கிட - அழகுகொண்டுயரவும், இருபுயல் - பெரியமேகங்கள், ககனமீது எழுந்து - ஆகாயத்திலெழும்பி, இடைவிடாது - இடைவிடாமல், அருபுனல் - உலகத்திற்கு இன்றி யமையாதநீரை, சொரிந்தபோது - பெய்தபோது, அரசு - ரோமபத மஹாராஜன், உணர்ந்தனன் - ஆலோசிக்கின்றான்—எ-று. (சகு)

அருமை - இன்றி யமையாமை மேலது.

226. காமமும் வெகுளியுங் களிப்புங் கைத்தெழு
கோமுனி யிவணடைந் தனன்கொல் கொவ்வைவாய்த்
தாமரை மலர்முகத் தளா வாணகைத்
தூமமென் குழலியர் புணர்த்த சூழ்ச்சியால்.

(இ-ள்.) காமமும் வெகுளியும் களிப்பும் - காமத்தையும் கோபத்தையும் மயக்கத்தையும், கைத்து எழு - வெறுத்துயர்ந்த, கோமுனி - பெரிய முனிவன், கொவ்வையாய் - கொவ்வைக்கனிபோலும் அதரத்தையும், தாமரைமலர்முகம் - செந்தாமரைமலர்போலு முகத்தையும், தாளம்வாள்நகை - முத்துப்போலும் ஒளியுள்ள பற்களையும், தூமம் - பரிமளப்புகை யூட்டப்பெற்ற, மெல்குழலியர் - மிருதுவான கூந்தலையுமுடைய அம்மாதர்கள், புணர்த்த சூழ்ச்சியால் - செய்தவுபாயத்தால், இவண் அடைந்தனன் கொல் - நமதுநகரத்தை அடைந்தனனோ—எ-று. (சஎ)

227. என்றெழுந் தருமறை முனிவர் யாரொடும்
சென்றிரண் டியோசனை சேனை சூழ்தர
மன்றலங் குழலியர் நடுவண் மாதவக்
குன்றினை யெதிர்ந்தனன் குவவுத் தோளினன்.

(இ-ள்.) குருவதோளினன் - திரட்சியாகிய தோள்களை யுடையவனாகிய ரோமபதன், என்று எழுந்து - என்று சொல்லிக்கொண்டேயெழுந்து, அருமறை - அரிய வேதங்களையுணர்ந்த, முனிவர் யாரொடும் - முனிவர்களெல்லாருடனும், சேனை சூழ்தர - சேனைகள்சூழ்ந்துவர, இரண்டுயோசனைசென்று - இரண்டுயோசனை தூரம் போய், மன்றல் அம்குழலியர்நடுவண் - வாசனைபொருந்திய அழகான கூந்தலையுடைய அம்மாதர்நடுவில், மாதவக்குன்றினை பெரிய தவமலையை, எதிர்ந்தனன் - சந்தித்தான்—எ-று. (சஅ)

கலங்காமை பற்றித் தவக்குன்றென்றார்.

228. வீழ்ந்தன னடிமிசை விழிக ணீர்தர
வாழ்ந்தன மினியென மகிழுஞ் சிந்தையான்
தாழ்ந்தெழு மாதரார் தம்மை நோக்கிநீர்
போழ்ந்தனி ரெனதிடர் புணர்ப்பி னாலென்றான்.

(இ-ள்.) (அப்படி சந்தித்தவளவில்) இனிவாழ்ந்தனம் என - இனிவாழ்ந்தேனென்று, மகிழும் - களிக்கின்ற, சிந்தையான் - மனத்தையுடையவன் ஆகி, விழிகள் நீர்தர - கண்கள் ஆநந்தபாஷ்பத்தைச்சொரிய, அடிமிசை வீழ்ந்தனன் - அந்த

முனிவனுடைய திருவடிகளின்மேல் விழுந்தவனாய், தாழ்ந்துஎழும் - தன்னைவணங்கியெழுந்த, மாதரார்தம்மைநோக்கி - அந்தக்கன்னிகைமாதரைப்பார்த்து, புணர்ப்பினால் - உங்களுடைய வுபாயத்தால், எனதுஇடர் - என்துன்பத்தை, போழ்ந்தனிர் - நீக்கினீர்கள், என்றான் - என்று புகழ்ந்துசொன்னான்—எ-று. (௭௧)

போழ்தல் - பிளத்தல்.

229. அரசரு முனிவரு மடைந்த வாயிடை
வரமுனி வஞ்சமென் றுணர்ந்த மாலைவாய்
வெருவினர் விண்ணவர் வேந்தன் வேண்டலால்
கரையெறி யாதலை கடலும் போன்றனன்.

(இ-ள்.) அரசரும்-அரசர்களும், முனிவரும் - முனிவர்களும், அடைந்த ஆயிடை-வந்த அக்காலத்தில், வரம் - சிரேஷ்ட்டமான, முனி - கலைக்கோட்டுமுனிவன் வஞ்சம் என்று - இது வஞ்சனையென்று, உணர்ந்தமாலைவாய் - அறிந்தகாலத்தில், விண்ணவர்-தேவர்களும், வெருவினர் - பயந்தார்கள், வேந்தன்-அந்தரோமபத ராஜன், வேண்டலால் - வேண்டிக் கொள்ளுதலால், (அந்தமுனிவன்) கரை எறியாத - கரையை யுடைத்து மேல்வராத, அலைகடலும் - அசையுமியல்புள்ள சமுத்திரத்தையும், போன்றனன்-ஒத்துக் கோவங்கொள்ளாமலிருந்தான்—எ-று, (௭௦)

மாலை சிறப்புப்பெயராகாது பொதுப்பெயராயிற்று. அலையெறியாத என்பதில் அகரந்தொகுத்தல்.

230. வள்ளுறு வயிரவாண் மன்னன் பன்முறை
எள்ளரு முனிவனை யிறைஞ்சி யாரினும்
தள்ளருந் துயரமுஞ் சமைவுஞ் சாற்றலும்
உள்ளுறு வெகுளிபோ யொளித்த தாமரோ.

(இ-ள்,) வள் உறு - உறையில்தங்கிய, வயிரவாள் - வஜ்ராயுதம்போன்ற வாளையுடைய, மன்னன்-அவ்வரசன், எள் அரு - பழிப்பற்ற, முனிவனை - கலைக்கோட்டுமுனியை, இறைஞ்சி-வணங்கி, யாரினும் - எவராலும், தள்அரு - நீக்குதலரிய, துயரமும்-(மழைபெய்யாமையால் உண்டாயிருந்த) துன்பத்தையும், சமைவும் - (தற்காலம் மழைபெய்த) அமைவினையும், சாற்றிலும் - சொல்லுதலும், உள்அறு -(அந்தமுனிவனது) மனதில் மிகுந்த, வெகுளி - கோபமானது, போய் ஒளித்தது - போய், மறைந்தது—எ-று. (௭௧)

ஆம் அரோ, இரண்டும் அசைகள். வள் உறைக்குக் கருவியாகுபெயர்.

231. அருள்சுரந் தரசனுக் காசியுங் கொடுத்
துருட்டரு தேரின்மீ தொல்லை யேறினன்
பொருடரு முனிவருந் தொடரப் போயினன்
மருளொழி யுணர்வுடை வரத மாதவன்.

(இ-ள்.) மருள்ஒழி - மயக்கம் நீங்குவதற்குக் காரணமாகிய, உணர்வுஉடை-ஞானத்தையுடைய, வரதமாதவன் - வரங்கொடுக்கத்தக்க பெருந்தத்தை யுடைய முனிவன், அருள் சுரந்து - கிருபை உளற்றெடுத்து, அரசனுக்கு - அவ்வேந்தனுக்கு, ஆசியும்கொடுத்து - ஆசீர்வாதமும் செய்து, உருள்தரு - சக்கரங்களினால் உருண்டு செல்லுகின்ற, தேரின்மீது -(அவ்வரசனது) தேரின் மேல், ஒல்லை - விரைவாக ஏறினன் - ஏறினவனாய், பொருள் தரும் - அடைந்தவர்க்கு வேண்டியவற்றை

உபகரிக்கின்ற, முனிவரும் - முநிவர்களும், தொடர - தொடர்ந்துவர, போயினன்- சென்றான்—எ-று. (நுஉ)

உருள் தரு என்பதற்கு உருளைபூண்ட ஊர்தியினும் பொருந்தும்,

232 அடைந்தனன் வளநக ரலங்கரித் தெதிர்
மிடைந்திட முனியொடு வேந்தன் கோயில்புக்
கொடுங்கலில் பொற்குழாத் துறையு ளெய்தியோர்
மடங்கலா தனத்திடை முனியை வைத்தனன்.

(இ-ள்.) வேந்தன்-அரசன், வளம் - வளமான, நகர் - நகரத்தை, அலங்கரித்து- அலங்காரஞ்செய்து, எதிர் மிடைந்திட - (அந்நகரத்தார்) எதிர்கொண்டுவர, முனி யொடு-அம்முநிவனோடு, அடைந்தனன்-போய், கோயில் புக்கு-தன் அரண்மனையிற் புகுந்து, ஒடுங்கல் இல்-குறைவில்லாத, பொன் குழாத்து - பொற்றிரளால் செய்யப் பட்டதாகிய, உறையுள்-சபாமண்டபத்தில், எய்தி-சேர்ந்து, ஓர்-ஒப்பற்ற, மடங்கல் ஆதனத்திடை - சிங்காசனத்தில், முனியை - அம்முநிவனை, வைத்தனன் - இருத்தி னான்—எ-று. (நுந)

233. அருக்கிய முதலிய கடன்க ளாற்றிவே
றுரைக்குவ திலதென வுவந்து தானருள்
முருக்கித ழிளமுலை முகந லாடனை
இருக்கொடு விதிமுறை யினிதி னீந்தனன்.

(இ-ள்.) (அப்படி யிருந்தபோது) வேறு உரைக்குவது இலது என - செய்யா தொழிந்தன வேறுளது என்று சொல்லுதல் இல்லை யென்னும்படி, அருக்கியம் முதலிய கடன்கள், ஆற்றி - அருக்கிய முதலாகிய உபசார முறைமைகளைச்செய்து, உவந்து - மகிழ்ந்து, தான் அருள் - தான்பெற்ற, முருக்கு இதழ் - முருக்கம்பூவை யொத்த அதரத்தையும், இளமுலை - இளமையான தனங்களையும், முகம் நல்லாள் தனை-அழகானமுகத்தையுமுடைய பெண்ணை, இருக்கொடு விதிமுறை - வேதமந்த ரங்களோடு விவாஹ விதிப்ரகாரம், இனிதின் ஈந்தனன்-அன்போடு மணஞ்செய்து கொடுத்தான்—எ-று. (நுச)

முகநலாள் என்பது அப்பெண்ணின் பெயரெனக் கூறுவாருமுளர்.

234. வறுமைநோய் தணிதர வான் வழங்கவே
உறுதுயர் தணிந்ததவ் வுலகம் வேந்தருள்
செறிகுழல் போற்றிடத் திருந்து மாதவத்
தறிஞனாண் டிருக்குன னரச வென்றனன்.

(இ - ள்.) வறுமைநோய்தணிதர - (நெடுங்காலம் மழையில்லாமையாலுண்டா யிருந்த) தரித்ரவியாதியானது தீரும்படி வான்வழங்கவே - மேகங்கள் மழையைப் பொழிந்தவளவில், அவ்வுலகம் - அந்தரோமபதராஜனுடைய நாடானது, உறுதுயர் தணிந்தது - மிக்கதுன்பத்தில் நின்றும் நீங்கிற்று, (மேல்) வேந்து - அவ்வரசன், அருள்-பெற்ற, செறிகுழல் - பெண்ணானவள், போற்றிட-உபசரிக்க, திருந்து-திருந் திய, மாதவத்து - பெருந்தவத்தையுடைய, அறிஞன் - ஞானவானான அம்முநிவன், ஆண்டு-அந்நகரத்தில், இருக்குனன் - இருக்கின்றான், அரச-தசரதமஹாராஜனே, என்றனன்-என்றுவவிஷ்டமுநிவன் சொன்னான்—எ-று. (நுரு)

வேந்து-பண்பாகு பெயர். செறிகுழல்-வினைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.

வேறு.

235. என்றலுமேமுனிவரன்றனடியிறைஞ்சியீண்டேகிக் கொணர்வெனென்று
துன்றுகழன்முடிவேந்தரடிபோற்றச் சுமந்திரனேமுதல்வராய
வன்றிறல்சேரமைச்சரொடுமாமணித்தேரேறுதலும்வானோர்வாழ்த்தி
இன்றெமதுவினைமுடிந்ததெனச்சொரிந்தார் மலர்மாரியிடைவிடாமல்.

(இ-ள்.) என்றலுமே-என்று சொல்லுதலும், (தசரத மஹாராஜன்) முனிவரன் அடி இறைஞ்சி - முனிசிரேஷ்டனாகிய விவிஷ்ட முனிவனது பாதத்தைவணங்கி, ஈண்டுஏகி-இப்போதேபோய், கொணர்வென்என்று - அழைத்து வருவேனென்று, கழல்துன்று - வீரக்கழலையுடைய, முடிவேந்தர் - முடிமன்னர்கள், அடிபோற்ற-தன்னடியைவணங்க, சுமந்திரனே முதல்வராய - சுமந்திரன் முதலோரான, வல்திறல் சேர் - மிக்க அறிவின்பலமுள்ள, அமைச்சரொடு - மந்திரிகளுடன், மாமணித்தேர்-பெரிய ரத்நகசிதமான தேரில், ஏறுதலும் - ஏறினவுடன், வானோர் - தேவர்கள், வாழ்த்தி - ஆசீர்வதித்து, இன்று எமது வினைமுடிந்ததுஎன - இப்போது எங்கள் குறை முடிவுற்றதுஎன்று கொண்டாடி, இடைவிடாமல் - இடையறாமல், மலர் மாரி சொரிந்தார்-பூமழைபொழிந்தார்கள்—எ-று. (ருரு)

தன்-சாரியை.

236. காகளமும்பல்லியமுங் கனைகடலின்மேன்முழங்கக் கானம்பாட
மாகதர்களருமறைநூல் வேதியர்கள் வாழ்த்தெடுப்ப மதுரச்செவ்வாய்த்
தோகையர்பல்லாண்டிசைப்பக் கடற்றானைபுடைசூழச் சுடரோனென்ன
ஏகியருநெறிநீங்கி ரோமபதன்றிருநாட்டை யெதிர்ந்தானன்றே.

(இ-ள்.) காகளமும் - சிறுசின்னமும், பல்இயமும் - வேறு பல வாத்யங்களும், கனை-ஒலிக்கின்ற, கடலின்மேல் - கடலுக்கதிகமாக, முழங்க - முழங்கவும், கானம் பாட-(பாடகர்) சங்கீதம்பாடவும், மாகதர்கள் - மாகதர்களும், அருமறைநூல் வேதியர்கள் - அருமையான வேதசாஸ்திரங்களை யுணர்ந்த அந்தணர்களும், வாழ்த்தெடுப்ப - வாழ்த்தவும், மதுரம் - இனிமையான, செவ்வாய் - செவந்த அதரத்தையுடைய, தோகையர்-மாதர்கள், பல்லாண்டு இசைப்ப - பல்லாண்டுபாடவும், கடல்-கடலையொத்த, தானை - சேனை, புடைசூழ - பக்கத்திற் சூழ்ந்துவரவும், சுடரோன் என்னஏகி-சூரியன்போலச் சென்று, அருநெறிநீங்கி - கடத்தற்கரிய மார்க்கங்களைக் கடந்து, ரோமபதன்-ரோமபத மஹாராஜனது, திருநாட்டை-திருநாட்டினை, எதிர்ந்தான்-கண்டான்—எ-று. (ருஎ)

அன்று ஏ இரண்டும் அசைகள். மாகதர் - அரசமாதுக்கும், வைசியனுக்கும் பிறந்து, ஒருவரது வீரம்முதலியவற்றைப்புகழ்ந்து உயிர் வாழ்வோர். கடல் பரப்பினாலும், முழக்கம் முதலியவற்றாலும் சேனைக் குவமை யாயிற்று. சுடரோன் என்ன ஏகி என்றது அதிவேகமாகச் சென்றான் என்பது தோன்றிநின்றது.

237. கொழுந்தோடிப்படர்கீர்த்திக்கோ வேந்தனடைந்தமைசென்றொற்றர்கூற
கழுந்தோடும் வரிசிலைக்கைக்கடற்றானைபுடைசூழக் கழற்கால்வேந்தன் [க்
செழுந்தோடும்பல்கலனும் வில்வீசமாகதர்கள் திரண்டுபாட
எழுந்தோடுமுவகையுடன் யோசனைசென்றானரசையெதிர்கொளெண்ணி.

(இ-ள்.) கொழுந்து ஓடி படர் கீர்த்தி-கொழுந்தோடிப் படர்கின்ற கீர்த்தியையுடைய, கோவேந்தன் அடைந்தமை - தசரத சக்ரவர்த்தி வந்ததை, ஒற்றர் சென்று கூற-ஒற்றர்கள்போய் சொல்ல, (கேட்ட) கழல்கால்வேந்தன் - வீரக்கழலையணிந்த பாதத்தையுடைய ரோமபதமஹாராஜன், கழுந்து ஓடும் - தேய்வு தங்கிய, வரி-கட்

டமைந்த, சிலை-வில்லைத்தரித்த, கை-கையையுடைய, கடல்தானை - கடல்போன்ற சேனை, புடைசூழ-பக்கத்திற் சூழ்ந்துவரவும், செழுதோடும் - செழியகாதணிகளும், பல்கலனும்-மற்றபல ஆபரணங்களும், வில்வீச-ஒளியைவீசவும், மாகதர்கள் திரண்டு பாட-மாகதர்கள் கூட்டமாகக்கூடிப் பாடவும், எழுந்து ஓடும் உவகையுடன்-எழுந்து தன்னின் முற்பட்டோடுகின்ற, களிப்புடன், அரசை - சக்ரவர்த்தியை, எதிர்கோள் எண்ணி-எதிர்கொள்ளுதலை நினைத்து, யோசனை சென்றான் - யோசனைதூரம்போயி னன்—எ-று. (ருஅ)

கொழுந்தோடிப் படர்தல் - மேன்மேலும் விருத்தியடைதல். கோவேந்தன் - ராஜாதிராஜன். ரோமபதனுக்கும் அரசனாதலால் சக்ரவர்த்தியை வாளா அரசென் றார். அரசு பண்பாகுபெயர்.

238. எதிர்கொள்வான்வருகின்ற வயவேந்தன்றனைக்கண்ணுற் றெழிலிநாண
அதிர்கின்றபொலந்தேர்நின் றரசர்பிரானிழிந்துச்சென் றடியின்வீழ
முதிர்கின்றபெருங்காதறழைத்தோங்கவெடுத்திறுகமுயங்கலோடும் [கான்
கதிர்கொண்டசுடர் வேலான்றனைநோக்கி யிவையுரைத்தான் களிப்பின்மிக்

(இ-ள்.) எதிர்கொள்வான் வருகின்ற-எதிர்கொள்ளவருகிற, வயவேந்தன்தனை கண்ணுற்று-வெற்றியையுடைய ரோமபத மஹாராஜனைப் பார்த்து, அரசர்பிரான்-சக்ரவர்த்தியாகிய தசரதன், எழிலிநாண அதிர்கின்ற - மேகம் நாணும்படி ஒலிக் கின்ற, பொலம்தேர் நின்று - பொன்னினாற் செய்யப்பட்ட தேரில்நின்றும், இழிந் துழி - இறங்கினபோது, சென்றுஅடியின்வீழ - (ரோமபதன்) போய் பாதங்களில் விழுந்து வணங்க, முதிர்கின்ற பேருங்காதல் - அதிகப்படுகிற பேராசையானது, தழைத்துஓங்க-செழித்தோங்க, எடுத்து - அவனை யெடுத்து, இறுகமுயங்கலோடும்- (சக்ரவர்த்தி) இறுகத்தழுவினவளவில், கதிர்கொண்ட - ஒளியைக்கொண்ட, சுடர்- சூரியனையொத்த, வேலான்தனை நோக்கி-வேலாயுதத்தை யுடைய சக்ரவர்த்தியைப் பார்த்து, களிப்பின் மிக்கான் - சந்தோஷத்தில் மிகுந்தவனாகிய ரோமபதமஹா ராஜன், இவை உரைத்தான்-இவற்றைச்சொல்லினன்—எ-று. (ருக)

239. யான்செய்தமாதவமோ விவ்வுலகஞ்செய்தவமோ யாதோவிங்கண்
வான்செய்தசுடர்வேலோ யடைந்ததெனமனமகிழ மணித்தேரேற்றித்
தேன்செய்ததார் மௌலித்தேர்வேந்தைச் செழுநகரிற்கொணர்ந்தான்தெ
ஊன்செய்தசுடர்வடிவேல்ரோமபதனென்றுரைக்குமுரவுத்தோளான் [வ்வர்

(இ-ள்.) தெவ்வர்-பகைவரை, ஊன்செய்த - குறைவுசெய்த, சுடர் - பிரகாசிக் கிற, வடிவேல் - வடித்த வேலாயுதத்தையுடைய, ரோமபதன் என்று உரைக்கும்- ரோமபதனென்று சொல்லப்படுகிற, உரவுதோளான் - வலியமைந்ததோள்களையு டைய அரசன், வான்செய்த சுடர்வேலோய் - தேவலோகத்தை நிலைபெறச்செய்த பிரகாசமான வேலாயுதத்தையுடைய சக்ரவர்த்தியே, இங்கண் - என்னிடத்தில், அடைந்தது - நீர் அடைந்ததற்குக்காரணம், யான்செய்தமாதவமோ நான்செய்த பெ ருந்தவமோ இவ்வுலகஞ்செய்ததவமோ இந்தத்தேசஞ்செய்த தவமோ "யாதோ-வே றெதுவோ, என - என்று (கொண்டாடி), மனம்மகிழ-அவன் மனமகிழும்படி, மணி தேர் ஏற்றி-நவரத்நகசிதமான ரதத்திலேற்றி, தேன் செய்ததார்-தேன்பொருந்திய மலர்மாலையை யணிந்த, மௌலி-கிரீடத்தைத்தரித்த, தேர்வேந்தை-தேரையுடைய தசரதசக்ரவர்த்தியை, செழுநகரில்கொணர்ந்தான்-தனதுசெழுமையான நகரத்திற் கொண்டுவந்தான்—எ-று. (சு0)

சம்பராசுரன் முதலானாரை வென்று பொன்னாட்டை இந்திரனுக்குத் தந்த மையால், வான்செய்த சுடர்வேலோய் என்றான். வான்செய்த சுடர்வேல் என்பு

தற்கு, ஆகாயத்தில்விளங்குகின்ற சூரியனையொத்த வேல் என்றும் மேலான கா. தியையுடைய வேல் என்றும் பொருளுரைத்தலுமாம்.

240, ஆடகப்பொற்சுடரிமைக்குமணிமாடத்திடை யொருமண்டபத்தையண்மிப்
பாடகச்செம்பதுமமலர்ப் பாவையர்பல்லாண்டிசைப்பப்பைம்பொற்பீடத்
தேடுதுற்றவடிவேலோன் றனையிருத்திக்கடன்முறைகள் யாவுமீய்ந்து
தோடுதுற்றமலர்த்தாரான் விருந்தளிப்பவினிதுகந்தான்சுரர்நாடீய்ந்தான்.

(இ-ள்.) ஆடகம்பொன்சுடர் இமைக்கும் - ஆடகம் என்னும் பொன்னனது சூரியன்போலவிளங்குகின்ற, அணி - அழகையுடைய, மாடத்திடை - மாளிகையினிடத்து, ஒருமண்டபத்தை அண்மி - ஒருமண்டபத்திற்சேர்ந்து, பாடகம் - பாடகமணிந்த, செம்பதுமமலர்-செந்தாமரைமலர்போன்ற பாதங்களையுடைய, பாவையர்-பிரதிமைபோன்ற மாதர்கள், பல்லாண்டு இசைப்ப-பல்லாண்டு பாட, பைம்பொன் பீடத்து - பசும்பொற்பீடத்தின்மேல், ஏடுதுற்ற - பூவினிதழ்மாலை அடர்ந்த, வடி-கூர்மையாகிய, வேலோன்தனை-வேலாயுதத்தையுடைய சக்ரவர்த்தியைர், இருத்தி-வீற்றிருக்கச்செய்து, கடன்முறைகள்யாவும் ஈய்ந்து - செய்யவேண்டிய கடன்மையாகிய உபசாரங்களெல்லாவற்றையும்செய்து, தோடுதுற்ற - இதழ்கள்நெருங்கிய, மலர்தாரான்-பூமாலையையணிந்த ரோமபதமஹாராஜன், விருந்து அளிப்ப-விருந்து செய்ய, சுரர்நாடு ஈய்ந்தான்-தேவலோகத்தை மீட்டுக்கொடுத்தவனாகியசக்ரவர்த்தி, இனிது உகந்தான்-இன்பமாய் உண்டான்—எ-று. (கூக)

ஆடகம்என்பது நால்வகைப்பொன்னி. லொன்று.

நால்வகைப்பொன்-ஆடகம், கிளிச்சிறை, சாதரூபம், சாம்பூநதம் என்பன.

சுரர்நாடீந்தவன் தேவாமிர்தத்தை உண்ணத்தக்கவன் பூமியில் ஓரரசன் இட்ட விருந்தையும் உண்டானென்பது, சக்ரவர்த்தியினுடைய பெருந்தகைமையை விளக்கியது.

241. செவ்விநறுஞ்சாந்தளித்துத் தேர்வேந்தன்றனைநோக்கி யிவணீசேர்ந்த
கவ்வையுரைத்தருள்கவென நிகழ்ந்தபரிசரசர்பிரான் கழறலோடும்
அவ்வியநீத்துயர்ந்தமனத் தருந்தவனைக்கொணர்ந்தாங்கண் விடுப்பெனுன்ற
செவ்விமுடியோயெனலுந்தேரேறிச் சேனையொடயோத்திசேர்ந்தான்.

(இ-ள்.) செவ்வி நறுசாந்து அளித்து - அழகும் வாசனையுமுள்ள சந்தனமும் ஈந்து, தேர்வேந்தன்தனை நோக்கி - சக்ரவர்த்தியைப் பார்த்து, இவண் நீசேர்ந்த கவ்வை-என்னிடத்தில் நீயடைந்த செய்தியை, உரைத்தருள்க என-சொல்லியருளவேண்டுமென்று (பணிவாகக்கேட்க), அரசர்பிரான் - சக்ரவர்த்தி, நிகழ்ந்த பரிசு-நடந்தசெய்தியை, கழறலோடும் - சொல்லுதலும், (ரோமபதன்)ஆன்ற செவ்விமுடியோய் - தொழில் நிறைந்தகிரீடத்தையணிந்த சக்ரவர்த்தியே, அவ்வியமும் நீத்து -பொறாமையைவிட்டு,உயர்ந்தமனத்து-உயர்ந்தமனத்தையுடைய, அருதவனை-அரிய தவத்தையுடைய கலைக்கோட்டுமுநிவனை, ஆங்கண்-அவ்வயோத்தியில், கொணர்ந்து விடுப்பன்-கொண்டுவந்துவிடுவேன், எனலும் - என்றுசொல்லுதலும், (சக்ரவர்த்தி) தேர் எறி-இரதத்திலேறி, சேனையொடு - தன்சேனையுடன், அயோத்திசேர்ந்தான்-அயோத்தியாநகரத்தைச் சேர்ந்தான்—எ-று, (கூ௨)

உரைத்தருள்க என்னும் வியங்கோளில், அருளென்பது உரோமபதனுடைய பணிவை யுணர்த்தியது.

242. மன்னர்பிரானகன்றதற்பின்வயவேந்தனருமறைநூல்வடிவங்கொண்ட
தன்னமுனிவரனுறையு டனையணுகியிணையடித்தா மரைகளம்பொன்

மன்னுமணிமுடியணிந்து வரன்முறைசெய் திடவிவணீ வருதற்கொத்த
தென்னேயெனவடியேற்கோர் வரமருளுமடிகளென யாவதென்முன்.

(இ-ள்.) மன்னர்பிரான் - அரசர்க்கரசனுகிய சக்ரவர்த்தி, அகன்றதற்பின் - போயினபிறகு, வயவேந்தன் - வெற்றியையுடைய ரோமபத மஹாராஜன், அரு- அருமையாகிய, மறைநூல் - வேத சாஸ்திரங்கள், வடிவம்கொண்டது அன்ன - உருக்கொண்டதை யொத்த, முனிவரன் - முநிசிரேஷ்டனுகிய கலைக்கோட்டு மஹா ரிஷியினுடைய, உறையுள்தனை அணுகி - இருப்பிடத்தைச் சேர்ந்து, இணை அடி தாமரைகள் - அவரது இரண்டுபாத தாமரைகளை, அம்பொன்மன்னும் - சிறந்த பொன்னுற் செய்யப்பட்டிருக்கிற, மணிமுடி அணிந்து-ரத்நகிரீடத்தின்மேல தாங்கி, வரன்முறை செய்திட - வந்தனை வழிபாடுகளைக் கிரமமாய்ச் செய்ய, (அவர் அவ் வரசனைநோக்கி) இவண் - என்னிடத்திற்கு, நீ வருதற்கு ஒத்தது என்னே - நீ வருதலுக்கு நேரிட்ட காரியமென்ன, என - என்று கேட்க, அடியேற்கு-அடியேனுக்கு, அடிகள் - சுவாமிகள், ஓர்வரம் அருளும் என - ஒரு வரத்தை யருள்செய்யவேண்டு மென்று பிரார்த்திக்க, யாவது என்முன் - அவ்வரம் எதுவென்று (கலைக்கோட்டு முநிவன்) கேட்டான்—எ-று. (சுங)

243. புறவொன்றின் பொருட்டாகத் துலைபுக்க பெருந்தகைதன் புகழிற்பூத்த
அறனென்று திருமனத்தானமரர்களுக் கிடரிழைக்கு மவுணராயோர்
திறலுண்ட வடிவேலான் றசரதனென் றுயர்கீர்த்திச் செங்கோல்வேந்தன்
விறல்கொண்ட மணிமாடயோத்திநக ரடைந்திவணீ டீடலென்முன்.

(இ-ள்.) புறவொன்றின் பொருட்டாக - ஒரு புருவின் நிமித்தமாக, துலைபுக்க- தராசுத்தட்டிலேறிய, பெருந்தகைதன் புகழின்பூத்த - பெருங் குணத்தையுடைய (சிபிச்சக்ரவர்த்தியின்) புகழ்கொண்ட மரபில் உண்டாகிய, அறன் ஒன்று திருமனத்தான் - தருமத்தோடு ஒற்றுமைக்கொண்ட நல்ல மனமுள்ளவன், அமரர்களுக்கு - தேவர்களுக்கு, இடர் இழைக்கும் - துன்பத்தைச் செய்கின்ற, அவுணர் ஆயோர் - அசுரர்களுடைய, திறல் - வெற்றியை, உண்ட - முற்றுமழித்த, வடிவேலான்-கூரிய வேலாயுதத்தையுடையவன், தசரதனென்று - தசரதனென்று சொல்லப்பட்டு, உயர் கீர்த்தி-உயர்வான புகழையும், செங்கோல் - செங்கோலையுமுடைய, வேந்தன் - சக்ர வர்த்தி, விறல் கொண்ட - வெற்றியைக்கொண்ட, மணிமாடம் - ரத்நகசிதமாகிய மாளிகைகளையுடைய, அயோத்திநகர் அடைந்து - அயோத்யா நகரத்தைச் சேர்ந்து, இவண் - இவ்விடத்திற்கு, நீடீடல்-நீ மீண்டுவருதல் அவ்வரமாகும், என்முன்-என்று சொன்னுன்—எ-று. (சுச)

பெருந்தகை பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப் பெயர்.

244. அவ்வரந்தந்தனமினித்தேர் கொணிர்தியென வருந்தவத்தோ னறைதலோடும்
வெவ்வரந்தின்றயில்படைக்குஞ் சுடர்வேலோனடியிறைஞ்சி வேந்தர்வேந்தன்
கவ்வையொழிந்துயர்ந்தனனென் றதிர்குரற்றேர்கொணர்ந்ததனிற் கலைவலானைச்
செவ்விநுதறறிருவினெடும் போந்தேறுகெனவேறிச் சிறந்தான்மன்னே.

(இ-ள்.) அவ்வரம் - நீகேட்டவரத்தை, தந்தனம் - யாம் தந்தோம், இனி - இனி, தேர்கொணர்தி என - தேரைக்கொண்டுவா என்று, அருதவத்தோன்-அரிய தபசையுடைய (கலைக்கோட்டு முநிவன்,) அறைதலோடும் - சொல்லுதலும், வெவ் அரம் தின்று-வெவ்விய அரத்தால் அராவப்பட்டு, அயில் படைக்கும் - கூர்மையைப்

படைத்த, சுடர்வேலோன் - ஒளியமைந்த வேலாயுதத்தையுடைய (ரோமபத மஹா ராஜன்), அடி - (அம்முனிவனுடைய) பாதங்களை, இறைஞ்சி - வணங்கி, வேந்தர் வேந்தன்-சக்ரவர்த்தியினுடைய, கவ்வை ஒழித்து - காரியத்தை முடித்து, உயர்ந்தனன் என்று - உயர்வையடைந்தானென் றுட்கொண்டு, அதிர்குரல் - ஒலிக்கின்ற ஓசையையுடைய, தேர் - இரதத்தை, கொணர்ந்து - கொண்டுவந்து, அதனில்-அந்த இரதத்தில், செவ்வி - அழகான, நுதல் - நெற்றியையுடைய, திருவினொடும் - திருமகள் போல்பவளாகிய உமது தேவியாருடன், போந்து ஏறுக என - வந்து ஏறியருள்கவென்று விண்ணப்பஞ் செய்ய, கலைவலாளன் - கலைகளிற் சமர்த்தனாகிய (கலைக்கோட்டு முனிவன்,) ஏறி - அவ்விரதத்திலேறி, சிறந்தான் - சிறப்புற்றான். ()

மன், ஓ இவ்விரண்டும் அசைகள்.

வேறு.

245. குனிசிலை வயவனுங் கரங்கள் கூப்பிடத்
துனியறு முனிவரர் தொடர்ந்து சூழ்வர
வனிதையு மருமறை வடிவு போன்றொளிர்
முனிவனும் பொறிமிசை நெறியை முன்னினார்.

(இ-ள்.) குனி - வளைந்த, சிலை - வில்லினால், வயவனும் - வெற்றியையுடைய ரோமபத அரசனும், கரங்கள் கூப்பிட - கைகளைக் குவித்து வணங்கிவரவும், துனி அறு - (பிறவி) யச்சம் நீங்கிய, முனிவரர் - முனிசிரேஷ்டர்கள், தொடர்ந்து சூழ்வர- தொடர்ந்து சூழ்ந்து வரவும், வனிதையும் - தேவியும், அருமறை வடிவுபோன்று - அரியவேத உருவத்தையொத்து, ஒளிர்-விளங்குகின்ற, முனிவனும் - கலைக்கோட்டு முனிவனும், பொறிமிசை-தேர்மேலேறி, நெறியைமுன்னினார் - வழியை முற்பட்டுச் சென்றார்கள்—எ-று. (௯௯)

246. அந்தர துந்துபி முழக்கி யாய்மலர்
சிந்தினர் களித்தன ரறமுந் தேவரும்
வெந்தெழு கொடுவினை வீழ்க்கு மெய்ம்முதல்
வந்தெழ வருடரு வானென் றெண்ணியே.

(இ-ள்.) (அம்முனிவன் தேரேறி வழிக்கொண்ட மாத்திரத்தில்) அறமும் - தர்ம தேவதையும், தேவரும் - தேவர்களும், வெந்து எழு-நெருப்பைப்போல் எரிந்தெழுகின்ற, கொடுவினை - கொடிய வினைகளை, வீழ்க்கும் - தலையெடுக்காமல் விழச்செய்யும், மெய் - உண்மையாகிய, முதல் - முதற்கடவுள், வந்து எழ-(இவ்வுலகில்) வந்து திருவவதரிக்கும்படி, அருள் தருவான் என்று-(இம்முனிவன்) நமக்கு அருள்செய்வானென்று, எண்ணி - நினைத்து, (அந்தக்களிப்பினால்) அந்தரதுந்துமி முழக்கி - அந்தரதுந்துமிகளை முழக்கி, ஆய் - குற்றமற்ற, மலர் - புஷ்பங்களை, சிந்தினர் - சொரிந்து, களித்தனர் - மகிழ்ந்தார்கள்—எ-று. (௯௭)

சிறப்பினால் அறமுமென்னும் அஃறிணையும் களித்தனரென்னும் உயர்திணை முடிபேற்றது.

247. தூதுவ ரவ்வழி யயோத்தி துன்னினர்
மாதிரம் பொருத்தோண் மன்னர் மன்னன்முன்
ஓதினர் முனிவர வோத வேந்தனும்
காதலென் றளவறு கடலு ளாழ்ந்தனன்.

(இ-ள்.) அவ்வழி - அப்போது, தூதுவர் - தூதர்கள், அயோத்திதுன்னினூர்- அயோத்தியாநகரத்தைச் சேர்ந்து, மாதிரம் பொருததோள் - (எமக்கு ஒப்பாகீ ரென்று) மலைகளைத்தாக்கிய தோள்களையுடைய, மன்னர்மன்னன்முன் - சக்ரவர்த்திக்கு எதிர்சென்று, முனிவரவு-கலைக்கோட்டுமுனிவனது வரவை, ஓதினர்-சொல்லினூர்கள், ஓத-சொன்னவளவில், வேந்தனும் - சக்ரவர்த்தியும், அளவு அறு-அளவற்ற, காதல் எனநகடலுள்-ஆசையென்கிற சமுத்திரத்தில், ஆழ்ந்தனன் - முழுகினூன்— எ-று. (சுஅ)

248. எழுந்தனன் பொருக்கென விரத மேறினன்
பொழிந்தன மலர்மழை யாசி பூத்தன
மொழிந்தன பல்லிய முரச மார்த்தன
விழுந்தன தீவினை வேரி னேடுமே.

(இ-ள்.) (அப்படிமுழுகின சக்ரவர்த்தி) பொருக்கென எழுந்தனன்-விரைவாக எழுந்து, இரதம் ஏறினன் - தேரிலேறினூன், (அதைக்கண்ட தேவர்களால்) மலர் மழைபொழிந்தன-புஷ்பமாரி சொரியப்பட்டன, ஆசி பூத்தன-முனிவர் முதலானவர்களுடைய ஆசீர்வாதங்கள் மிகுந்தன, பல் இயம் மொழிந்தன - பலவாத்தியங்கள் ஒலித்தன, முரசம் ஆர்த்தன - பேரிகைகள் அதிர்ந்தன, தீவினை - பாபங்கள், வேரினேடும்-வேருடன், விழுந்தன-சாய்ந்தன—எ-று. (சுக)

249. பிதிர்ந்ததெம் மனத்துயர்ப் பிறங்க லென்றுகொண்
டதிர்ந்தெழு முரசுடை தரசர் கோமகன்
முதிர்ந்தமா தவமுடை முனியைக் கண்களால்
எதிர்ந்தனன் யோசனை யிரண்டோ டொன்றினே.

(இ-ள்.) அதிர்ந்து எழு - அதிர்ந்து ஒலிமிகுகின்ற, முரசு உடை - முரசவாத்யத்தையுடைய, அரசர் கோமகன் - சக்ரவர்த்தி, எம்-எமது, மனம்-மனத்திலுண்டாகிய, துயர்பிறங்கல் - துன்பமாகியமலை, பிதிர்ந்தது என்றுகொண்டு - பொடி பட்டதென்றுட்கொண்டு, முதிர்ந்த-முற்றின, மாதவம் உடை - பெருந்தவத்தையுடைய, முனியை - கலைக்கோட்டுமுனிவனை, யோசனை இரண்டொடு ஒன்றின் - மூன்று யோசனைதூரத்திற்சென்று, கண்களால் எதிர்ந்தனன்-தன்கண்களால் கண்டான்— எ-று. (எ0)

செய்மையிலும் தோன்றுதலுடையதென்னும் பொருளில் பிறங்கல் தொழிலாகுபெயர்.

250. நற்றவ மனைத்துமோர் நவையிலா வுருப்
பெற்றிவ ணடைந்தெனப் பிறங்கு வான்றனைச்
சுற்றிய சீரையு முழையின் றேற்றமும்
முற்றுறப் பொலிதரு மூர்த்தி யான்றனை

(இ-ள்.) நல்தவம் அனைத்தும் - நல்லதவங்களெல்லாம், ஓர் - ஒரு, நவைஇலா- குற்றமிலாத, உருபெற்று - உருவத்தைப்பெற்று, இவண் அடைந்தென-இவ்வுலகத்தில்வந்தாற்போல, பிறங்குவான்தனை - விளங்குபவனை, சுற்றிய சீரையும்-அரையிற் சுற்றிய சீரையும், உழையின்தோற்றமும்-மான்முகக் காட்சியும், முற்று உற-நிறைய, பொலிதரும்-தோன்றுகின்ற, மூர்த்தியான் தனை-உருவத்தையுடைய கலைக்கோட்டு முனிவனை—எ-று. (எக)

251. அண்டர்க டுயரமு மரக்க ராற்றலும்
விண்டிடப் பொலிதரும் வினைய லாளனைக்
குண்டிகை குடையொடு குலவு நூன்முறைத்
தண்டொடு பொலிதரு தடக்கை யான்றனை.

(இ-ள்.) அண்டர்கள் துயரமும் - தேவர்களுடைய துன்பமும், அரக்கர் ஆற்றலும் - இராக்கதர்களுடைய வல்லமையும், விண்டிட - நீங்க, பொலிதரும் - விளங்குகின்ற-வினை-தவத்தொழிலில், வலாளனை - சமர்த்தனை, குண்டிகை - கமண்டலமும், குடை-குடையும், குலவு-விளங்காநின்ற, நூல்முறை - நூல்களிற்கூறிய முறைமைப்படி, தண்டு-திரிதண்டமும், பொலிதரு-விளங்குகின்ற, தடம் கையான்தனை-பெரிய கைகளையுடைய கலைக்கோட்டுமுநிவனை—எ-று. (எஉ)

ஒடு. இரண்டும் இசைநிறை

252. இழிந்துபோ யிரதமாண் டிணைகொ டாண்மலர்
விழுந்தனன் வேந்தர்தம் வேந்தன் மெய்ம்மையான்
மொழிந்தன னசிகண் முதிய நான்மறைக்
கொழுந்துமேற் படர்தரக் கொள்கொம் பாயினான்.

(இ-ள்) (கண்டவளவில்) ஆண்டு - அவ்விடத்தில், இரதம் இழிந்துபோய்-தேரினின்றும் இறங்கிச் சென்று, வேந்தர்தம் வேந்தன்-சக்ரவர்த்தி, இணைகொள்-இரண்டாகிய, தாள்மலர்-அம்முநிவனது பாததாமரைகளில், விழுந்தனன்-வீழ்ந்து வணங்கினான், (அவ்வாறு வணங்கினவளவில்) முதிய-பழைமையான, நால்மறைகொழுந்து நான்குவேதமுடிவுகளும், மேல்படர்தர - மேலேறிப்படரும்படி, கொள்கொம்பு ஆயினான் - கொள்கொம்புபோன்றவனாகிய அக்கலைக்கோட்டுமுநிவன், மெய்ம்மையான்- பொருள் நிறைந்த மொழிகளால், ஆசிகள் மொழிந்தனன் - ஆசீர்வாதங்களைக் கூறினான்—எ-று. (எ௩)

கொடி, கொள்கொம்பைப்பற்றிப்படர்ந்து யாவர்க்கும் பயன்படுதல்போல, வேதக்கொழுந்து இம்முநிவனாகிய கொள்கொம்பைப் பற்றிப் படர்ந்து யாவர்க்கும் பயன்படும் என்பதாம்.

253. அயல்வரு முனிவரு மாசி கூறிட
புயல்பொழி தடக்கையாற் றொழுது பொங்குநீர்க்
கயல்பொரு விழியொடு கலைவ லாளனை
இயல்பொடு கொணர்ந்தன னிரத மேற்றியே.

(இ-ள்.) அயல்வரும்-அருகில் வருகின்ற, முனிவரும்-முநிவர்களும், ஆசிகூறிட-ஆசீர்வசனஞ் சொல்ல, புயல் - மேகம்போல, பொழி-பொருளைச்சொரிகின்ற, தடம் கையால்-பெரியகைகளால், தொழுது - அஞ்சலித்து, பொங்கும் நீர் - மிகுதியாகிய நீரிலுள்ள, கயல் - சேல்மீனை, பொரு-ஒத்த, விழியொடு - கண்களையுடைய தேவியோடு, கலைவலாளனை - நூலாராய்ச்சியில் வல்லவனாகிய கலைக்கோட்டு முநிவனை, இரதம் ஏற்றி-தேரின்மேலேற்றிக்கொண்டு, இயல்பொடு-முறைமைப்படி, கொணர்ந்தனன்-தன்னகரத்திற்குக் கொண்டுவந்தான்—எ-று. (எச)

கயல்பொருவிழி, வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர்.

254. அடிகுரன் முரசதி ரயோத்தி மாநகர்
முடியுடை வேந்தனம் முனிவ னோடுமோர்
கடிகையி னடைந்தனன் கமல வாண்முக
வடிவுடை மடந்தையர் வாழ்த் தெடுப்பவே.

(இ-ள்.) முடிஉடைவேந்தன் - முடியரசனாகிய சக்ரவர்த்தி, கமலம் - செந்தாமரைமலர்போன்ற, வாள் - ஒளியோடு கூடிய, முகம் - முகத்தையும், வடிவு உடை மடந்தையர் - அழகையுமுடைய மாதர்கள், வாழ்த்தெடுப்ப - வாழ்த்துதல் செய்ய, அடி - அடிக்கப்படுகின்ற, குரல் - ஓசையையுடைய; முரசு - பேரிகை, அதிர் - முழங்குகின்ற, அயோத்திமாநகர் - அயோத்திமா நகரத்தில், அம்முனிவனோடும் - அந்தக்கலைக்கோட்டு முநிவனுடன், ஓர்கடிகையின் அடைந்தனன் - ஒருநாழிகையிற் சேர்ந்தான்—எ-று. (எ௫)

கமலவான் முகம் என்பதனை வாள் கமலமுகம் என நிறுத்தி ஒலிபொருந்திய தாமரைமலர்போன்ற முகமெனப் பொருள்கூறினும் பொருந்தும்

255. கசட்டுறு வினைத்தொழிற் கள்வரா யுழல்
அசட்டர்க ளைவரை யறுவ ராக்கிய
வசிட்டனு மருமறை வடிவுபோன் றொளிர்
விசிட்டனும் வேந்தவை பொலிய மேவினார்.

(இ-ள்.) (அவ்வாறு அயோத்தியை அடைந்த சக்ரவர்த்தி) கசடு உறு - குற்றத்தில் மிக்க, வினைத்தொழில் - பாபத்துக்கேதுவாகிய செய்கையையுடைய. கள்வராய் உழல் - திருடர்கள்போலத் திரிகின்ற, அசட்டர்கள் ஐவரை - நீசர்களாகிய ஐவரை, அருவர் ஆக்கிய - அற்றவராகச்செய்த, வசிட்டனும் - வசிட்டமகாரிஷியும், அரு - அருமையாகிய, மறை - வேதத்தின், வடிவு - உருவத்தை, போன்று-ஒத்து, ஒளிர் - விளங்குகின்ற, விசிட்டனும் - மேன்மையையுடைய (கலைக்கோட்டுமுநிவனும்,) வேந்து அவைபொலிய - ராஜசபை விளங்கும்படி, மேவினார் - சேர்ந்தார்கள்—எ-று. (எசு)

ஐவர் என்றது பஞ்சேந்திரியங்களை. இவை ஆன்மாவை யபகரித்தலால் கள்வர் என்றார். "இங்கிப்பாலெனைத்திருடுங் கள்ளனைக் கண்டேன் கண்டேன்'' என்றார் பிறரும்.

256. மாமணி மண்டப மன்னி மாசறு
தூமணித் தவிசிடைத் சுருதியே நிகர்
கோமுனிக் கரசனை யிருத்திக் கொள்கடன்
ஏமுறத் திருத்திவே றினைய செப்பினான்.

(இ-ள்.) (சக்ரவர்த்தி) மாமணி - விலையுயர்ந்த ரத்தினங்களா லலங்கரிக்கப்பட்ட, மண்டபம் - மண்டபத்தை, மன்னி - சேர்ந்து, மாசு அறு - குற்றமற்ற, தூ - பரிசுத்தமாகிய, மணி தவிசு இடை - இரத்திநாசனத்தில், சுருதியேநிகர் - வேதமே ஒப்பாகின்ற, கோ - மேன்மைபெருந்திய, முனிக்கு அரசனை - ருஷிசிரேஷ்டனாகிய கலைக்கோட்டுமுனிவனை, இருத்தி வீற்றிருக்கச்செய்து, கொள் கடன் - அம்முனிவன் ஏற்றுக்கொள்ளுதற்குரிய கடன்களை, ஏம் உற திருத்தி - மகிழ்ச்சிமிகும்படி நிறைவேற்றி, வேறு - வேறாக, இனைய - இவற்றை, செப்பினான் - சொல்லினான்—எ-று. (எள)

ஏமம் என்பது ஏம் எனத் தொகுத்தல் பெற்றது.

257. சான்றவர் சான்றவ தருமமாதவம்
போன்றொளிர் புனிதநின் னருளிற் பூத்தவென்
ஆன்றதொல் குலமினி யரசின் வைகுமால்
யான்றவ முடைமையு மிழப்பின் றாமரோ.

(இ-ள்·) சான்றவர்சான்றவ - மேலோர்களுக்குள் மேலானவனே, மருமம் - தருமமும், மாதவம் - பெரியதவமும், போன்று - ஒப்பாக, ஒளிர் - விளங்குகின்ற, பரிசுத்தனே, நின் அருளில்பூத்த - உனது கிருபையினால் உண்டாகிய, ஆன்ற - பரம்பிய, என்தொல்குலம் - எனது பரம்பரையாகவந்த வமிசமானது, இனி - இனி மேல், அரசின்வைகும் - அரசாட்சியில் தங்கும், யான் - நான், தவம் உடைமையும் - தவத்தையுடையனுந் தன்மையும், இழப்பு இன்று ஆம் - இழத்தலில்லையாகும்.

இதுவரையில் எனக்குப் புத்திரரில்லாமையால் இனி அரசாட்சி என்வமிசத்தில் இல்லையென்றும், நான் செய்த தவம் வீணாயிற்றென்றும் துயரமடைந்திருந்தேன்; இப்போது தேவரீர் எழுந்தருளினபடியால், புத்திரருண்டாகி என்வமிசம் அரசாட்சியோடு கூடிவாழும் என்பது கருத்து.

258. என்னலு முனிவர னினிது நோக்குறா
மன்னவர் மன்னகேள் வசிட்ட னென்றெனும்
நன்னெடுந் தவன்றுணை நவையில் செய்கைநீ
நின்னையிவ் வுலகினி னிருபர் நேர்வரோ.

(இ-ள்.) என்னலும் - என்று சக்ரவர்த்திசொல்லுதலும், முனிவரன் - முனிகளுள் சிறந்தவனாகிய (கலைக்கோட்டு) முனிவன், இனிதுநோக்குறா - இனிதாகப் பார்த்து, மன்னவர்மன்னன் - சக்ரவர்த்தியே, கேள் - கேட்பாய், வசிட்டன் என்று என்னும் - வசிட்டனென்று சொல்லப்படுகின்ற, நல் - நன்மையாகிய, நெடுதவன் துணை - பெரிதாதவத்தையுடையவன் அளவில், நவை இல்-குற்றமில்லாத, செய்கை- செய்கையையுடையாய், நீ-நீ, நின்னை - உன்னை, இ உலகினில் நிருபர் - இவ்வுலகத்திலுள்ள அரசர்கள், நேர்வரோ - ஒப்பாவரோ (ஆகார்)—எ-று.

ஓகாரம் - எதிர்மறை. என்றெனும் - ஒருபொருட்பன்மொழி. செய்கையை என்னும் முன்னிலைக்குறிப்புவினையின் விகுதி தொகுக்கப்பட்டது. பிரமபுத்திரனு முனிவர்களில் தன்முமைபெற்றவனுமாதலால் அம்முனிவன்பால் குற்றம் வாராமல் நடப்பவராதலால் அவ்வொழுக்கம் எம்போலியர்பாலு நடந்தோதொடாக்கு மென்பான், நன்னெடுந்தவன்றுணை நவையில் செய்கை என்றான்.

259. என்றன பற்பல வினிமை கூறிநற்
குன்றுறழ் வரிசிலைக் குவவுத் தோளினாய்
நன்றிகொ ளரிமக நடத்த வெண்ணியே
இன்றெனை யழைத்ததிங் கியம்புவா யென்றான்.

(இ-ள்.) என்றன - என்று சொல்லப்பட்டவைகளாகிய, பற்பல - மிகப்பலவான, இனிமை - இன்சொற்களை, கூறி - சொல்லி, நல் - அழகான, குன்று உறழ் - மலையையொத்த, வரி - கட்டமைந்த, சிலை - வில்லையேந்திய, குவவு - திரட்சியாகிய, தோளினாய் - தோள்களையுடைய சக்ரவர்த்தியே, நன்றிகொள் - நன்மைபொருந்திய, அரிமகம் - அசுவமேதயாகத்தை, நடத்த - நடத்துதற்கு, எண்ணியோ - நினைத்தோ, இன்று எனை அழைத்தது - இப்பொழுது என்னை

வருவித்தது, இங்கு இயம்புவாய் - இவ்விடத்திற் சொல்லுவாய், என்றான் - என்று சொன்னான்—எ-று. (அ0)

அரி - குதிரை. இனிமை - பண்பாகுபெயர்.

260. உலப்பில் பல்லாண்டெலா முறுக ணின்றியே
தலப்பொறை யாற்றினென் றநயர் வந்திலர்
அலப்புநீ ருடுத்தபா ரளிக்கு மைந்தரை
நலப்புகழ் பெறவினி நல்கல் வேண்டுமால்.

(இ-ள்.) உலப்பு இல் - தொலைதவில்லாத, பல் ஆண்டு எலாம் - அநேகவருஷங்களெல்லாம், உறுகண் இன்றி - துன்பமில்லாமல், தலப்பொறை ஆற்றினேன் - பூபாரந்தாங்கினேன், (இதுவரையில்) தநயர் வந்திலர் - புத்திரர் உண்டாயினரில்லை, அலப்புநீர் - அலம்புதலையுடைய நீரையுடைய கடலை, உடுத்த - உடுத்திராநின்ற, பார் - பூமியை, அளிக்கும் - காக்கின்ற, மைந்தரை - புத்திரர்களை, நலப்புகழ் பெற - நன்மையாகிய கீர்த்தியை அடையும்படி, இனி நல்கல் வேண்டும் - இனி கிருபைசெய்யவேண்டும்—எ-று. (அக)

அலப்பு - முதனிலை திரிந்த தொழிற்பெயர்

261. என்றலு மரசநீ யிரங்க லிவ்வுல
கொன்றுமோ வுலகமீ ரேழு மோம்பிடும்
வன்றிறன் மைந்தரை யளிக்கு மாமகம்
இன்றுநீ யியற்றுதற் கெழுக வீண்டென்றான்.

(இ-ள்.) என்றலும் - என்று சக்ரவர்த்தி சொல்லுதலும், (வசிஷ்டமுனிவன்) அரச - அரசனே, நீ இரங்கல் - 2 துன்பப்படாதை, இ உலகு ஒன்றுமோ - இந்த வுலகமொன்றைத்தானோ, ஈரேழ் உலகமும் - பதினான்குலோகங்களையும், ஓம்பிடும் - காத்தற்குரிய, வல்திறல் மைந்தரை - மிக்க வல்லமையுள்ள புத்திரரை, அளிக்கும் - கொடுக்கின்ற, மாமகம் - பெரியயாகத்தை, இன்று - இப்போது, நீ இயற்றுதற்கு - நீ செய்வதற்கு, ஈண்டு எழுக என்றான் - இப்போதே பிரயத்தினம் பண்ணு என்று சொல்லினான்—எ-று, (அஉ)

'மைந்தரை அளிக்கும் மாமகம்' என்றதனால் புத்ரகாமேஷ்டி யென்றதாயிற்று.

262. ஆயதற் குரியன கலப்பை யாவையும்
ஏயெனக் கொணர்ந்தனர் நிருபர்க் கேந்தலும்
தூயநற் புனல்படீஇச் சுருதி நூன்முறை
சாய்வறத் திருத்திய சாலை புக்கனன்.

(இ-ள்.) ஆயதற்கு உரியன - அந்த யாகத்திற்குரியனவாகிய, கலப்பையாவையும் - கலப்பைமுதலான கருவிகளெல்லாவற்றையும், ஏ என கொணர்ந்தனர் - விரைவில் கொண்டுவந்தார்கள், நிருபர்க்கு ஏந்தலும் - (அதைக்கண்ட) சக்ரவர்த்தியும், தூய - சுத்தமாகிய, நல் - நன்மையைத்தருகின்ற, புனல் - சரயூநதியில், படீஇ - முழுகி, சுருதிநூல்முறை - வேதசாஸ்திர முறைமைப்படி, சாய்வு அற - குற்றமற, திருத்திய - செய்யப்பட்டிருக்கிற, சாலை - யாகசாலையில், புக்கனன் - புகுந்தான்—எ-று. (அ௩)

263. முழங்கழன் மும்மையு முடுகி யாகுதி
வழங்கியே யீரறு திங்கள் வாய்த்தபின்
வழங்கின துந்துமி தாவில் வானகம்
விழுங்கினர் விண்ணவர் வெளியின் றென்னவே

(இ-ள்.) முழங்கு அழல் மும்மையும்-ஒலித்தெழுகின்ற முத்தீயையும், முடுகி - விரைந்து வளர்த்து, ஆகுதிவழங்கி - ஆகுதியுங்கொடுத்து, ஈரறுதிங்கள் வாய்த்த பின் - பன்னிரண்டுமாதஞ் சென்றபிறகு, துந்துமிமுழங்கின - தேவபேரிகை முழங்கின, விண்ணவர் - தேவர்கள், வெளி இன்று என்ன - வெற்றிடமில்லையென்று சொல்லும்படி, தாஇல்வானகம் - கெடுதலில்லாத ஆகாயத்தை, விழுங்கினர் - மறையும்படி மொய்த்துக்கொண்டார்கள்—எ-று. (அச)

முத்தீ - ஆகவநீயம், தக்ஷிணாக்கினி, காருகபத்தியம் என்பன. தீ மந்திரவகையால் மூவகையாயிற்று. விண்ணவர் விழுங்கினர் என்றதனால், ஆகுதிகொடுக்கும் சமயத்தில் தேவர்களெல்லாரும் வந்து நிறைந்தார்கள் என்பது கருத்து.

264. முகமல ரொளிதர மொய்த்து வானுளோர்
அகவிரை நறுமலர் தூவி யார்த்தெழ
தகவுடை முனியுமத் தழலி னாப்பணே
மகவரு ளாகுதி வழங்கினா னரோ.

(இ-ள்,) தகவு உடை முனியும் - தகுதியையுடைய (கலைக்கோட்டு) முனிவனும், வான் உளோர் - சுவர்க்கலோகத்தி லிருப்பவர்களாகிய தேவர்கள், மலர் முகம் ஒளிதர - தாமரைமலர்போன்ற முகங்கள் பிரகாசிக்க, மொய்த்து - நெருங்கி, அகம் - உள்ளே, விரை - வாசனைபொருந்திய, நறுமலர் - நல்ல கற்பகமலர்களை, தூவி - பொழிந்து, ஆர்த்து எழ - ஆரவாரித்தெழும்படி, அ தழலின் நாப்பண் - அந்த ஹோமாக்கினியின் நடுவில், மகவு அருள் ஆகுதி - புத்திரனைக்கொடுத்தற்குரிய ஆகுதியை, வழங்கினான்-கொடுத்தான்—எ-று. (அரு)

அரோ - அசை. தகவு - முனிவன் என்று சொல்லப்படுதற்குரிய மனனசீலத்துவம் முதலாயின,

265. ஆயிடைக் கனலினின் றம்பொற் றட்டமீ
தூயநற் சுதைநிகர் பிண்ட மொன்றுசூழ்
தீயெரிப் பங்கியுஞ் செவந்த கண்ணுமாய்
ஏயெனப் பூதமொன் றெழுந்த தேந்தியே.

(இ-ள்.) ஆயிடை - அந்தச்சமயத்தில், கனலினின்று - ஹோமாக்கினியில் நின்றும், அம்பொன்தட்டம்மீ - அழகாகிய பொற்றட்டின்மேல் தூய - சுத்தமாகிய, நல் - நல்ல, சுதைநிகர் - அமிர்தத்தையொத்த, பிண்டம் ஒன்று - ஒருபிண்டத்தை, ஏந்தி - ஏந்திக்கொண்டு, சூழ - சூழ்ந்து, தீ எரி - நெருப்பைப்போல் விளங்குதலையுடைய, பங்கியும் - சிகையையும், சிவந்தகண்ணுமாய் - செவந்தகண்களையுமுடையதாய், பூதம் ஒன்று - ஒரு பூதமானது, ஏ என எழுந்தது - ஏ என்னும் ஓசையுடனெழுந்துவந்தது—எ-று. (அகா)

தீ எரி என்பதற்கு தன்னிடத்து அகப்பட்டபொருள்களைத் தீங்குறுவியல்பையுடைய நெருப்பையொத்த எனவும் பொருளுரைக்கலாம்,

266. வைத்தது தரைமிசை மறித்து மவ்வழி
தைத்தது பூதமத் தவனும் வேந்தனை
உய்த்தநல் லமிர்தினை யுரிய மாதர்கட்
கத்தகு மரபினு லளித்தியா லென்றான்.

(இ-ள்.) பூதம் - அந்தப் பூதமானது, (தான் கொண்டுவந்த அமிர்தத்தட்டை) தரைமிசை வைத்தது - நிலத்தில் வைத்து, மறித்தும் - மறுபடியும், அவ்வழிதைத்தது - அந்த ஹோமாக்நியின் வழியாகவே புகுந்து மறைந்துவிட்டது, அ தவனும் - அந்த முனிவனும், வேந்தனை - சக்ரவர்த்தியை நோக்கி, உய்த்த - பூதத்தால் கொண்டுவரப்பட்ட, நல் அமிர்தினை-நன்மையான அமிர்தத்தை, உரியமாதர்கட்கு-உனக்குரியராகிய மனைவியர்க்கு, அ தகுமரபினுல் - அந்த தகுதியாகிய முறைப்படி, அளித்தி - கொடுப்பாய், என்றான் - என்று சொல்லினான்—எ-று.

தகுமரபினுல் என்றது மூத்தாள் இளையாளென்னு முறைமையால் என்றபடி.

267. மாமுனி யருள்வழி மன்னர் மன்னவன்
தாமமென் கரிகுழற் றொண்டைத் தூயவாய்க்
காமரொண் கௌசலை கரத்தி னோர்பகிர்
தாமுற வளித்தனன் சங்க மார்த்தெழ.

(இ-ள்.) மாமுனி அருள்வழி - பெருமையமைந்த முனிவன் கட்டளையின்படியே, மன்னர் மன்னவன் - சக்ரவர்த்தி, தாமம் - அகிற்புகை யூட்டப்பெற்ற, மெல் - மிருதுவாகிய, கரிகுழல் - சுரிந்த குழலையும், தூய - சுத்தமான, தொண்டை வாய்- கோவைக் கனிபோன்ற வாயினையும், காமர் - அழகிய, ஒள் - ஒட்பத்தையுமுடைய, கௌசலை கரத்தின் உற - கௌசலையின் கையில் பொருந்த, ஓர் பகிர் - அவ்வமுதத்தில் ஒரு பாகத்தை, சங்கம் ஆர்த்து எழ - சங்க வாத்தியங்கள் முழங்க, அளித்தனன் - கொடுத்தான்—எ-று. (அஅ)

தாம் - அசை.

268. கைகயன் றநயைதன் கரத்து மம்முறைச்
செய்கையி னளித்தனன் றேவ ரார்த்தெழப்
பொய்கையு நதிகளும் பொழிலு மோதிமம்
வைகுறு கோசலை மன்னர் மன்னனே.

(இ-ள்.) (இப்படி கொடுத்த பிறகு) பொய்கையும் - பொய்கைகளிலும், நதிகளும்-நதிகளிலும், பொழிலும்-சோலைகளிலும், ஓதிமம் வைகுறு-அன்னங்கள் தங்குகின்ற, கோசலம் - கோசல நாட்டினது, மன்னர் மன்னன் - சக்ரவர்த்தியானவன், அம்முறைச் செய்கையின் - (முன்கொடுத்த) அந்தக் கிரமமாகிய செய்கைப்படி, தேவர் ஆர்த்து எழ-தேவர்கள் ஆரவாரித்து எழும்படி, கைகயன் தநயை கரத்தும்- கைகேசியின் கையிலும், அளித்தனன்-கொடுத்தான்—எ-று. (அக)

கைகயன் தநயை - கேகயதேசத் தரசன் மகள்.

269. நமித்திரர் நடுக்குறு நலங்கொண் மொய்ம்புடை
நிமித்திரு மரபுளான் முன்னர் நீர்மையில்
சுமித்திரைக் களித்தனன் சுரர்க்கு வேந்தினி
சமித்ததென் பகையெனத் தமரொ டார்ப்பவே,

(இ-ள்.) நமித்திரர் நடுக்கு உற-பகைவர் நடுக்கமடைய, நலம்கொள் மொய்ம்பு உடை - போரினீதியைக்கொண்ட பலத்தையுடைய, சிபி-சிபியென்னும் அரசனது, திருமரபு உளான் - அழகாகிய வமிசத்திற் பிறந்தவனாகிய சக்ரவர்த்தி, சுரர்க்கு வேந்து - தேவேந்திரன், இனி-இனி, என்பகை சமித்தது என - என்பகையானது அழிந்ததென்று, தமரொடு ஆர்ப்ப - தன்னினத்தாருடன்கூடி யாரவாரிக்க, முன்னர் நீர்மையின் - முன்பு அவ்விருவர்க்குங் கொடுத்த கிரமப்படி, சுமித்திரைக்கு அளித்தனன் - சுமித்திரைக்குக் கொடுத்தான்—எ-று. (௬௦)

நமித்திரர் - மித்திரரல்லாதவர்.

270. பின்னுமப் பெருந்தகை பிதிர்ந்து வீழ்ந்தவை
தம்மையுஞ் சுமித்திரை தனக்கு நல்கினன்
ஒன்னலர்க் கிடமும்வே றாகி னோங்கிய
மன்னுயிர் தமக்குநீள் வலமுந் துள்ளவே.

(இ-ள்.) பின்னும் - மறுபடியும், அ பெருந்தகை - அந்தச் சக்ரவர்த்தி, சுமித்திரை தனக்கு - சுமித்திராதேவிக்கு, பிதிர்ந்து வீழ்ந்தவை தம்மையும் - சிதறி விழுந்தவற்றையும், ஒன்னலர்க்கு - பகைவருக்கு, இடமும் - இடப்புறமும், வேறு - வேறாகி, உலகின் ஓங்கிய மன் உயிர் தமக்கு - உலகத்தில் மிகுத்திருக்கிற நிலைபேறுடைய வுயிர்களுக்கு, நீள்வலமும் - பெரிய வலப்புறமும், துள்ள - துடிக்க, நல்கினன் - கொடுத்தான்—எ-று. (௬௧)

உலகின் மன்னுயிர் என்றது, மக்களை, ஒன்னலர்க்கிடமும், உலகின் ஓங்கிய மன்னுயிர்தமக்கு நீள்வலமும், துள்ள என்றது பகைவர்க் கிடப்புறமும், மற்றையோர்க்கு வலப்புறமும் துடித்தால் பகைவர்க்கழிவும், பரமவைதிக வொழுக்கமுடையோர்க்குச் சுகமும், உண்டாமென்னுந் துடிநூல்விதியைப்பற்றி.

271. வாம்பரி வேள்வியு மகவை நல்குவ
தாம்புரை யாகுதி பிறவு மந்தணன்
ஓம்பிட முடிந்தபி னுலகு காவலன்
ஏம்பலொ டெழுந்தனன் யாரு மேத்தவே.

(இ-ள்.) வாம்-தாவுகின்ற, பரிவேள்வியும் - அசுவமேதமும், மகவை நல்குவது ஆம் - புத்திரரைக்கொடுப்பதற் கேதுவான, புரை - இடமாகிய, ஆகுதி பிறவும் - உயர்வாகிய புத்ரகாமேஷ்டி முதலாகிய ஆகுதியும் மற்றெல்லாவற்றையும், அந்தணன் ஓம்பிட முடிந்தபின் - கலைக்கோட்டுமுனிவன்செய்து முடிவுற்றபிறகு, உலகு காவலன் - சக்ரவர்த்தி, யாரும் ஏத்த - எல்லாரும் துதிக்கும்படி, ஏம்பலோடு - கிகிழ்ச்சியோடு, எழுந்தனன்-எழுந்திருந்தான்—எ-று. (௬௨)

வாவும் எனற்பாலது வாம் என விகாரமாயிற்று. ஓம்புதல் - குறிக்கொண்டு காத்தல். அதிகாரானுகுணமாக அந்தணன் என்பதற்குக் கலைக்கோட்டு முனியெனப் பொருள் கூறப்பட்டது.

272. முருடுரு பல்லிய முழங்கி யார்த்தன
இருடரு முலகமு மிடரு நீங்கின
தெருடரு வேள்வியின் கடன்க டேர்ந்தழி
அருடரு மனைபின்வந் தரச னெய்தினன்.

(இ-ள்.) முருடுருபல்லியம் - முருடென்னும் வாச்சியமும் மற்ற பல வாச்சியமும், முழங்கி ஆர்த்தன - முழங்கி ஆரவாரித்தன, இருள்தரும் உலகமும் - பேதை

மையைத்தருகின்ற உலகத்துயிர்களுமே, இடரும் நீங்கின-துன்பத்தையும் ஒழிந்தன, தெருள்தரு - வேதங்களால் தெளிவிக்கப்பட்ட, வேள்வியின் - யாகங்களின், கடன்கள்தீர்ந்துழி-யாகமுறைகள் நிறைவேறினபிறகு, அருள்தரும்-யாவர்க்கும் அருளைக் கொடுக்கத்தக்க, அவையின்-சபையில், அரசன் - சக்ரவர்த்தியானவன், வந்து எய்தினன்-வந்துசேர்ந்தான்—எ-று. (கங.)

பேதைமை, பெருகுதற்கு இடமாதலால் இருள் தரும் உலகமென்றார், உலகமும் என்னுமும்மை இழிவு சிறப்பு. இருளாகிய காரணம் நீங்கவே அதன் காரியமாகவே இடர் நீங்கினவென்பார் இருள்தரு முலகமு மிடரு நீங்கினவென்றார். யாகங்கள் வேதங்களால் நிச்சயித்துச் சொல்லப்படுதலால், தெருடருவேள்வியென்பதற்கு வேதங்களால் தெளிவிக்கப்பட்ட என்றனம்.
உயிரெலாம் உறைவதோ ருடம்பாயினு னாதலால் அவன் தங்கும் இடத்தை அருள்தருமவை யென்றார்

273. செய்ம்முறை கடன்முறை திறம்ப லின்றியே
மெய்ம்முறை கடவுளுக் கீய்ந்து விண்ணுளோர்க்
கம்முறை யளித்துநீ டந்த ணாளர்க்கும்
கைம்முறை வழங்கினன் கனக மாரியே.

(இ-ள்.) (இவ்வாறு சக்ரவர்த்தி சபையில்வந்து சேர்ந்தபிறகு) செய்முறை கடன்முறை - யாகத்தின்பொருட்டுச் செய்யவேண்டிய முறைமைகளையும் நித்திய கடன்களையும், திறம்பல் இன்றி தவறுதலில்லாமல், மெய்முறை - உண்மையாகிய முறையையுடைய, கடவுளுக்கு-ஆயிரமௌலிப்பெருமானுக்கு, ஈந்து-செய்து, விண் உளோர்க்கு-சுவர்க்கலோகத்திலுள்ள மற்றைத் தேவர்களுக்கு, அம்முறையளித்து-அவ்வாறேகொடுத்து, நீடு அந்தணாளர்க்கும் - பெரியவேதியர்களுக்கும், கை-கைகளால், முறை-அவரவர்கட்குத் தகுந்த முறைப்படி, கனகமாரி வழங்கினன்-பொன் மழைபொழிந்தான்— எ-று. (கச)

274. வேந்தர்கட் கரசொடு வெறுக்கை தேர்பரி
வாய்ந்தநற் றுகிலொடு வரிசைக் கேற்பன
ஈந்தனன் பல்லியந் துவைப்ப வேகிநீர்
தோய்ந்தனன் சரயுநற் றுறைக்க ணெய்தியே.

(இ-ள்.) வேந்தர்கட்கு-அரசர்களுக்கு, அரசொடு-அரசாட்சியுடன், வெறுக்கை-திரவியத்தையும், தேர்-தேர்களையும், பரி - குதிரைகளையும், வாய்ந்தநல்துகிலொடு-அவரவர்க்குத் தகுந்த நல்ல ஆடையுடன், வரிசைக்கு ஏற்பன-அவரவர் தரத்துக்குத் தகுந்தவற்றை, ஈய்ந்தனன் - கொடுத்து, பல் இயம்துவைப்ப - பலவாத்தியங்கள் முழங்க, ஏகி-போய், சரயு-சரயூநதியின், நல்துறைக்கண் எய்தி - குற்றமற்ற துறையிற்சேர்ந்து, நீர்தோய்ந்தனன்-நீர்படிந்தான்—எ-று. (கரு)

ஒடு இரண்டும் எண்ணுப்பொருளன ஆதலால் பின்னின்ற பெயர்களோடுங் கூட்டி உரைக்க.

275. முரசினங் கறங்கிட முத்த வெண்குடை
விரசிடு நிழறர வேந்தர் சூழ்தர
அரசவை யடைந்துழி யவனு நாணுற
உரைசெறி முனிவர்தாள் வணங்கி யோங்கினன்

(இ-ள்.) முரச இனம் கறங்கிட - பேரிகைத்தொகுதி யொலிக்கவும், முத்தம் வெண்குடை - முத்துக்களாற்செய்யப்பட்ட வெள்ளைக்குடை, விரசிடுநிழல்தர-பொருந்திய நிழலைக்கொடுக்கவும், வேந்தர்சூழ்தர-அரசர்கள் சூழ்ந்துவரவும், அரசு அவை அடைந்துழி-ராஜசபையில் சேர்ந்தபோது, அயனும் நாணுற-பிரமதேவனும் நாணமடைய, உரைசெறி-வேதவாக்யங்கள் நிறைந்த, முனிவர்-முனிவர்களுடைய, தாள்-பாதங்களை, வணங்கி ஓங்கினன்-தொழுது பூரித்தான்—எ-று. (கசு)

உரைசெறி என்பதற்கு புகழ் மிகுந்த எனவும், மொழிகளில் (சாபாநுக்ரஹங்களாகிய பயன்) நிறைந்த எனவும் பொருள் கூறலாம். ஓங்கினன் என்பதற்கு உயர்வையடைந்தான் எனினும் பொருந்தும்.

276. அரியநற் றவமுடை வசிட்ட னாணையால்
இரலைநற் சிருங்கமா விறைவன் றடொழா
உரியபற் பலவுரை பயிற்றி யுய்ந்தனன்
பெரியநற் றவவினிப் பெறுவ தியாதென்றான்.

(இ-ள்.) அரிய - செய்தற்கரியவான, நல்தவம் உடை - நல்லதவத்தையுடைய, வசிட்டன் ஆணையால்-வசிஷ்ட்டமுநிவனது கட்டளையினால், நல்-அழகாகிய, இரலை சிருங்கம்-கலைக்கொம்பினையுடைய, மா இறைவன்தாள்-பெருமைபொருந்திய முனிவன் பாதங்களை, தொழா-வணங்கி, உரியபற்பல உரைபயிற்றி - தகுதியான அநேக இன்மொழிகளைக்கூறி, உய்ந்தனன் - (அடியேன்) உஜ்ஜீவித்தேன், பெரியநல்தவ-பெரிய நல்லதவத்தையுடையவனே, இனிபெறுவது-இனி (அடியேன் பெறுதற்குரியது, யாது என்றான்-என்ன இருக்கின்றது என்றுவினவினான். (கஎ)

277. எந்தைநின் னருளினா லிடரி னீங்கியே
உய்ந்தன னடியனே னென்ன வொண்டவன்
சிந்தையுண் மகிழ்ச்சியால் வாழ்த்தித் தேர்மிசை
வந்தமா தவரொடும் வழிக்கொண் டேகினன்.

(இ-ள்.) எந்தை - எமது தந்தையே, நின் அருளினால் - தேவரீருடைய கிருபையினால், அடியேன்-அடியேன், இடரின் நீங்கி உய்ந்தனன் - துன்பத்தினின்றும் நீங்கிப் பிழைத்தேன், என்ன-என்று (சக்ரவர்த்தி) சொல்ல, ஒள்தவன் - நற்றவத்தையுடையவனாகிய (கலைக்கோட்டு) முநிவன், சிந்தையுள்மகிழ்ச்சியால் - மனத்திலுள்ள களிப்பினால், வாழ்த்தி-ஆசீர்வதித்து, தேர்மிசை - தேர்மேலேறி, வந்தமாதவரொடும்-முன்னே தன்னோடுவந்த முனிவர்களுடன்கூடி, வழிக்கொண்டு ஏகினன்-வழிக்கொண்டு சென்றான்—எ-று. (கஅ)

278. வாங்கிய துயருடை மன்னன் பின்னரும்
பாங்குடை முனிவர்தாள் பழிச்சி யேத்தல்கொண்
டோங்கிய வுவகைய ராசி யோடெழா
நீங்கின ரிருந்தன னேமி வேந்தனே.

(இ-ள்,) வாங்கியதுயர் உடை - துன்பம் நீங்கின, மன்னன் - சக்ரவர்த்தியானவன், பின்னரும்-பின்னும், பாங்குடைமுனிவர்தாள் பழிச்சி-நல்ல தவவொழுக்கத்தையுடைய முனிவர்களுடைய பாதங்களைவாழ்த்தி, ஏத்தல்கொண்டு - துதித்தலைக் கொண்டு, ஓங்கிய உவகையர் - மிகுந்த சந்தோஷமுள்ளவர்களாய், ஆசியோடு எழா - ஆசீர்வதித்துக்கொண்டேயெழுந்து, நீங்கினர் - (சபையைவிட்டு) நீங்கி

ஞர்கள், நேமிவேந்தன் - சக்ரவர்த்தியானவன், இருந்தனன் - அவ்விடத்திலேயே யிருந்துவிட்டான்—எ-று. (கக)

279. தெரிவையர் மூவருஞ் சிறிதுநாட்செலீஇ
மருவிய வயாவொடு வருத்தந் துய்த்தலாற்
பொருவரு திருமுக மன்றிப் பொற்புநீ
டுருவமு மதியமொ டொப்பத் தோன்றினர்.

(இ-ள்.) தெரிவையர் மூவரும்-சக்ரவர்த்தியின் பட்டமஹிஷிகளாகிய மூன்று பேரும், சிறிதுநாள் செலீஇ - சிலநாள்சென்று, மருவியவயாவொடு வருத்தம் துய்த்தலால் - அடைந்த கருப்பத்தையும் கருப்பத்தாலுண்டாம் நோவையு மநுபவித்தலால், பொருவு அரு திருமுகம் அன்றி - ஒப்பில்லாத திருமுகங்களேயல்லாமல், பொற்புநீடு உருவமும் - அழகு மிகுந்த மேனியும், மதியமோடு ஒப்ப - சந்திரனோடு ஒத்திருக்க, தோன்றினர் - காணப்பட்டார்கள்—எ-று. (௩0)

மதியமோ டொப்பத் தோன்றலாவது பசலைநிறமடைந்திருத்தல்.

280. ஆயிடைப் பருவம்வந் தடைந்த வெல்லையின்
மாயிரும் புவிமகண் மகிழ்வி னோங்கிட
வேய்புநர் பூசமும் விண்ணு ளோர்களும்
தூயமற் கடகமு மெழுந்து துள்ளவே.

(இ-ள்.) ஆயிடை-அந்தச் சமயத்தில், பருவம் வந்து அடைந்த எல்லையின்-பிரசவகாலம்வந்து பொருந்தினபோது, மாஇரு புவிமகள் - மிகுதியும் பெருமையுள்ள பூமிதேவியானவள், மகிள்வின் ஓங்கிட-மகிழ்ச்சியினாலோங்கவும், வேய் - அலங்கரிக்கப்பட்ட, புநர்பூசமும் - புநர்பூச நக்ஷத்திரமும், விண்ணுளோர்களும் - தேவர்களும், தூய - பரிசுத்தமான, கற்கடகமும் - கற்கடகராசியும், எழுந்துதுள்ள-எழுந்து துள்ளவும்— எ-று. (௩க)

வேய் பெயர்ச்சொல்லாகக்கொண்டு, வேயாகிய புநர்பூசமென இருபெயரொட்டுப் பண்புத்தொகை நிலையாக்கி, சந்திப்பொருட்டு வந்தபகரம் தொகுத்தலாயிற்றெனினும் பொருந்தும்.

281. சித்தரு மியக்கருந் தெரிவை மார்களும்
வித்தக முனிவரும் விண்ணு ளோர்களும்
நித்தரு முறைமுறை நெருங்கி யார்ப்புறத்
தத்துற லொழிந்துநீ டருமமோங்கவே.

(இ-ள்.) சித்தரும் - சித்தர்களும், இயக்கரும் - யக்ஷர்களும், தெரிவைமார்களும் - அவர்களுடைய மனைவிமாரும், வித்தகம் முனிவரும் - ஞானத்தையுடைய முனிவர்களும், விண்ணுளோர்களும் - தேவர்களும், நித்தரும் - நித்தியசூரிகளும், முறைமுறை நெருங்கி - வரிசைவரிசையாக நெருங்கி, ஆர்ப்பு உற-ஆரவாரிக்கவும், தத்துறல் ஒழிந்து - தடுமாற்றத்தை நீங்கி, நீள்தருமம் ஓங்க -நிலையான தருமமோங்கவும்—எ-று. (௩உ)

கௌசலாதேவிக்கு இராமாவதாரம் எனக் குறிக்கிறது.

282. ஒருபக லுலகெலா முதரத் துட்பொதிந்
தருமறைக் குணர்வரு மவனை யஞ்சனக்

கருமுகிற் கொழுந்தெழில் காட்டுஞ் சோதியைத்
திருவுறப் பயந்தன டிறங்கொள் கோசலை.

(இ-ள்.) ஒருபகல் - ஒருபகலில், உலகு எலாம்-அண்டங்களையெல்லாம், உதரத்துள் பொதிந்து - தன் திருவயிற்றிலடக்கி, அருமறைக்கு - அருமையாகிய வேதங்களுக்கும், உணர்வருமவனை-அறிதற்கரியவனும், அஞ்சனம்-அஞ்சனத்தையொத்த, கருமுகிற்கொழுந்து - கரிய மேகக்கொழுந்தின், எழில் - அழகை, காட்டும்-காட்டுகிற, சோதியை - சோதி வடிவுள்ளவனுமாகிய திருமாலை, திறம்கொள் கோசலை - கற்புக்கூறு பாட்டைக்கொண்ட கௌசலை, திரு உற - (உலகத்திலுள்ள யாவர்க்கும்) இகபரசெல்வங்கள் மிக, பயந்தனள்-பெற்றாள்—எ-று. (ருஉ)

கைகேசிக்குப் பரதன் அவதாரம் எனக் குறிக்கிறது.

283. ஆசையும் விசும்புநின் றமர ரார்த்தெழ
வாசவன் முதலினர் வணங்கி வாழ்த்துறப்
பூசமு மீனமும் பொலிய நல்கினாள்
மாசறு கேகயன் மாது மைந்தனை.

(இ-ள்.) அமரர்-தேவர்கள், ஆசையும் விசும்பும் நின்று-திசைகளிலும் ஆகாயத்திலும் நின்று, ஆர்த்து எழ - ஆரவாரித்தெழவும், வாசவன் முதலினர் - இந்திரன் முதலானவர்கள், வணங்கி-தொழுது, வாழ்த்துற - வாழ்த்தவும், பூசமும்-பூசநக்ஷத்திரமும், மீனமும் - மீனராசியும், பொலிய - பிரகாசிக்கவும், மாசு அறு-குற்றமற்ற, கேகயன்மாது - கேகயதேசத்தரசன்மகளாகிய கைகேசி, மைந்தனை நல்கினாள் - புத்திரனைப் பெற்றாள்—எ-று. (ருச)

சுமித்திராதேவிக்கு இளையபெருமாள் அவதாரம் எனக் குறிக்கிறது.

284. தளையவிழ் தருவுடைச் சயில கோபனும்
கிளையுமந் தரமிசை கெழுமி யார்ப்புற
அளைபுகு மரவினோ டலவன் வாழ்வுற
இளையவற் பயந்தன ளிளைய மென்கொடி.

(இ-ள்.) தளை அவிழ் - (மலர்கள்) முறுக்கவிழ்கின்ற, தருவுடை - கற்பகமரங்களையுடைய, சயிலகோபனும் - தேவேந்திரனும், கிளையும் - அவன் சுற்றமாகிய தேவர்களும், அந்தரமிசைகெழுமி - ஆகாயத்தின்மேல் பொருந்தி, ஆர்ப்புற-ஆரவாரிக்கவும், அளைபுகும் அரவினோடு - புற்றில் நுழைகின்ற சர்ப்பத்துடன், அலவன்-நண்டு, வாழ்வுற - வாழ்வையடையவும், இளையமென்கொடி - இளையவளாகிய சுமித்திராதேவி, இளையவன் பயந்தனள் - இளையபெருமாளை யீன்றாள்—எ-று. (ருரு)

பூருவத்தில் மலைகளைக் கோவித்துச் சிறகுகளை வெட்டினவனாதலால் இந்திரனுக்குச் சயிலகோபனென்று பெயர் வழங்கி வருகின்றது. சயிலம்-மலை. கோபன்-கோவித்தவன். அரவு-ஆயிலிய நக்ஷத்திரம். அலவன் - கற்கடகராசி.

ஷை தேவிக்கு சத்துருக்கின ஆழ்வான் அவதாரம் எனக் குறிக்கிறது.

285. படங்கிளர் பஃறலைப் பாந்த ளேந்துபார்
நடங்கிளர் தாமறை நவில நாடகம்
மடங்கலு மகமுமே வாழ்வி னோங்கிட
விடங்கிளர் விழியினாண் மீட்டு மீன்றனள்.

(இ-ள்.) படம்கிளர் - படங்கள் விளங்குகின்ற, பல்தலை - பலதலைகளையுடைய, பாந்தள் - பாம்பாகிய ஆதிசேஷன். ஏந்து - ஏந்துகின்ற, பார் - பூமிதேவியான வள், நடம்கிளர்தர - நடனஞ்செய்யும், மறைநாடகம்நவில் - வேதங்கள் கூத்தாடவும், மடங்களும் - சிங்கராசியும், மகமும் - மகநக்ஷத்திரமும், வாழ்வின் ஓங்கிட - வாழ்விலோங்கவும், விடம்கிளர் விழியினள் - விஷம்போலக் கருமையாய் விளங்குகின்ற கண்களையுடையவளாகிய சுமித்திராதேவி, மீட்டும் ஈன்றனள் - மறுபடியும் ஒருபுத்திரனைப் பெற்றாள்—எ-று. (௱சு)

286. ஆடின ரரம்பைய ரமுத வேழிசை
பாடினர் கின்னரர் துவைத்த பல்லியம்
வீடின ரரக்கரென் றுவக்கும் விம்மலாம்
ஓடின ருலவின ரும்பர் முற்றுமே.

(இ-ள்.) அரம்பையர் - அரம்பைப்பெண்கள், ஆடினர் - ஆடினார்கள், கின்னரர்-கின்னரர்கள், அமுதம் - செவியமிழ்துபோன்ற, ஏழ் இசைபாடினர் - ஸப்தஸ்வரங்களைப் பாடினார்கள், பல் இயம் துவைத்த - பலவாத்யங்கள் முழக்கப்பட்டன, உம்பர்முற்றும் - தேவர்களெல்லாரும், அரக்கர்வீட்டினர் என்று - அரக்கர்கள் நசித்தார்களென்று, உவக்கும் உம்மலால் - சந்தோஷிக்கிற பூரிப்பினால், ஓடினர் உலவினர்-ஓடியுலாவினார்கள்—எ-று. (௱எ)

உம்பர் முற்றும் என்பதற்குச் சுவர்க்கலோகமுழுமை என வுரைக்கலுமாம்

ஏழிசையாவன - குரல், துத்தம், கைக்கிளை. உழை, இளி, விளரி, தாரம். முறையே மிடறு, நா, அண்ணம், சிரம், நெற்றி, நெஞ்சு, மூக்கு, இங்ஙனம் தனித்தனி பிறக்கும். இவையே ஏழ்சுரம் எனவும். வீணையில் ஏழ்நரம்பு எனவும் படும், இவற்றிற்கு சுவையுவமை பால், தேன், கிழான், நெய், ஏலம், வாழை, மாதுளம் கனி, முறையே மாத்திரை ச-ச-உ-ரு-ச-ரு-உ.

287. ஓடின ரரசமட் டுவகை கூரநின்
றாடினர் சிலதிய ரந்த ணாளர்கள்
கூடினர் நாளொடு கோளு நின்றமை
நாடின ருலகினி நவையின் றென்றனர்.

(இ-ள்.) சிலதியர் - தோழிமார்கள், அரசன்மாட்டு ஓடினர் - அரசனிடத்திலோடி, உவகைகூர - சந்தோஷமதிகப்படலால், நின்று ஆடினர் - நின்று கூத்தாடினார்கள், அந்தணாளர்கள் - ஜோதிஷப்பிராமணர்கள், கூடினர் - வந்துசேர்ந்து, நாளொடுகோளும் - நக்ஷத்திரங்களுடன் க்ரஹங்களும், நின்றமை - நின்ற நிலைகள், நாடினர் - ஆராய்ந்து, இனி - இனிமேல், உலகு-உலகம், நவை இன்று என்றனர் - தீமையிலதென்று சொன்னார்கள்—எ-று. (௱அ)

288. மேடமா மதிதிதி நவமி மீன்கழை
நீடுறு மாலைகற் கடக நீதிசேர்
ஓடைமா களிறனை னுதய ராசிகோள்
நாடினே காதசர் நால்வ ருச்சரே.

(இ-ள்.) நீதிசேர் - நீதிசேர்ந்த, ஓடை - நுதலணியையுடைய, மா - பெருமை பொருந்திய, களிறு-யானையை, அன்னான் - ஒத்தவனாகிய ஸ்ரீராமபிரானது அவதார காலத்தில், மா - பெருமைபொருந்திய, மதி - மாசமானது, மேடம் - மேஷமாயும், திதி - திதியானது, நவமி - நவமியாயும், மீன் - நக்ஷத்திரமானது, கழை-புநர்

பூசமாயும், கற்கடகம்-கடகமானது,உதயராசி-உதயமும் இராசிலக்கினமாகிய சந்திர லக்கினமுமாயும்,மால்-புதன்,ஐ-ராஜஸ்த்தானமாகிய பத்தாமிடத்திலும் கோள்-கேது விற்கு, நாடு-மிதுநமானது, இல்-வீடாயும்-ஏகாதசர் - பதினொன்றுக்கு உடையவர், நால்வர்-நான்குபேர், வச்சர்-உச்சஸ்த்தாநத்திலும், நீடுறும்-பலமாய்நிற்கும்—எ-று.

289. என்றனர் சாதக மீசற் கேனையர்
தன்றனக் குந்தகு முறையிற் றுன்றெரிந்
தொன்றிய தமனியத் தெழுதி யோதினார்
வன்றிறற் சுரர்குரு வாழ்த் தெடுப்பவே.

(இ-ள்,) (சோதிடர்கள்) வல்திறல் (சோதிஷத்தில்) மிகவும் வல்லமையுள்ள, சுரர்குரு-தேவகுருவாகிய பிருகற்பதி பகவானும்,வாழ்த்தெடுப்ப-வாழ்த்த, ஈசர்க்கு சர்வேசுவரனாகிய ஸ்ரீராமபிரானுக்கு, சாதகம் என்றனர் - சாதகம் இதுவென்று சொன்னார்கள், (அன்றியும்) ஏனையர் தன்தனக்கும்-மற்றையோராகிய மூவருக்கும், தகுமுறையில் தெரிந்து-தக்கமுறைமையால் ஆராய்ந்து, ஒன்றிய-பொருந்திய தம னியத்து-பொற்றகட்டில், எழுதி ஓதினார்-எழுதி முடித்தார்கள்—எ-று.. (கக0)

என்றனர் என்பதனை எச்சமாக்கினும் அமையும். ஏனையர் தன்தனக்கும் என் பது ஒருமை பன்மை மயக்கம் இவ்வாறன்றி தந்தமக்கு எனப் பாடமோதுவாரு முளர், சுரர்குரு என்பத னீற்றில் உயர்வு சிறப்பும்மை தொக்கது.

290 மாமுனி தன்னொடு மன்னர் மன்னவன்
ஏமுறப் புனல்படீஇ வித்தொ டின்பொருள்
தாமுற வழங்கிவெண் சங்க மார்ப்புறக்
கோமகர் திருமுகங் குறுகி நோக்கினான்

(இ-ள்.) மன்னர்மன்னவன் - (இவ்வாறு சாதகமெழுதிப்படிக்கக் கேட்டுக்களிப் படைந்த தசரதமகாராஜன்), மாமுனிதன்னொடும் - பெருமைபொருந்திய வஷிஷ்ட முனிவரோடும் சென்று, ஏமுற-சுகமுண்டாக, புனல்படீஇ-சரயுநதியின நீரில்முழுகி வித்தொடு - நெல்லுடன், இன்பொருள் - இனியபொருளை, உறவழங்கி - மிகுதியுங் கொடுத்து, வெண்சங்கம் ஆர்ப்புற - வெண்மையாகிய மங்கலச்சங்குகள் முழங்க, குறுகி-வந்து, கோமகர் திருமுகம் - ராஜகுமாரர்களுடைய திருமுகங்களை, நோக்கி னான்-பார்த்தான்—எ-று, (ககக)

ஏமம் என்பது ஏம் எனக் கடைக்குறையாயிற்று. படீஇ சொல்லிசை யளபெடை. தாம்-அசை.

291. இறைதவிர்ந் திடுகபார் யாண்டொ ரேழ்நிதி
நிறைதரு சாலைதா ணீக்கி யாவையும்
முறைகெட வறியவர் முகந்து கொள்கென
அறைபறை யென்றன னரசர் கோமகன்.

(இ-ள்.) பார்-தேசத்திலுள்ளார், யாண்டு ஓர் ஏழ்-ஓரேழுவருஷம் வரைக்கும், இறைதவிர்ந்திடுக - வரி நீங்குவாராக, நிதிநிறைதரு - திரவியம் நிறைந்திருக் கிற, சாலை - களஞ்சியத்தின், தாழ் நீக்கி - தாழ்திறந்து, யாவையும் - எல்லாப் பொருள்களையும், வறியவர் - எளியவர்கள், முறைகெட - அடைவுகெட, கொள்க-

கவர்ந்து கொள்வாராக, எனு - என்றுசொல்லி, பறை அறை என்றனன் - பறைய றைகவென்று கட்டளையிட்டான், (யாவனெனின்) அரசர்கோமகன்-சக்ரவர்த்தி.

கொள்க எனு என்பது கொள்கெனு என அகரம் தொகுத்தல்பெற்றது.

292. படையொழிந் திடுகதம் பதிகளே யினி
விடைபெறு குகமுடி வேந்தா வேதியர்
நடையுறு நியமமு நவையின் றுருக
கடவுளர் விழவொடு களிப்ப வெங்கணும்.

(இ-ள்) படை - போர்த்தொழில், ஒழிந்திடுக - ஒழியக்கடவர்கள், முடிவேந்தர் - கிரீடாதிபதிகளாகிய அரசர்கள், இனி-இனி, தம்பதிகளே-தம்முடைய தேசங் களுக்கே, விடைபெறுக - விடைபெற்றுப் போகக்கடவார்கள், வேதியர் - அந்தணருடைய, நடைபெரும் நியமமும் - ஒழுக்கத்தைப்பெற்ற நியமங்களும், நவை இன்று ஆகுக-பழுதின்றி நடக்கக்கடவனவாகுக, எங்கணும் - எவ்விடத்தும், கடவுளர் - தேவர்கள், விழவொடு - திருவிழாக்களோடுகூடி, களிக்க-மகிழ்க—எ-று (கம௩)

நியமம் - ஜபதபாதிகளாகிய செய்கடன்கள். முடிவேந்தர் சக்ரவர்த்தியினுடைய ஆணைக்குட்பட்ட அரசர்கள்.

293. ஆலயம் புதுக்குக வந்த ணாளர்தம்
சாலையுஞ் சதுக்கமுஞ் சமைக்க சந்தியும்
காலையு மாலையுங் கடவுளர்க்கணி
மாலையுந் தீபமும் வழங்கு கென்றனன்.

(இ-ள்.) ஆலயம் புதுக்குக - தேவாலயங்கள் புதுக்கப்படக்கடவன, அந்தணாளர்சாலையும் - வேதியர்களுடைய அறச்சாலைகளும், சதுக்கமும் - நாற்சந்திகளும், சமைக்க - சமைக்கப்படக்கடவன, சந்தியும் - உச்சிமுதலிய சந்தியாகாலங் களிலும், காலையும் - காலைப்பொழுதிலும், மாலையும் - மாலைப்பொழுதிலும், கடவுளர்க்கு - தேவர்களுக்கு, அணி - அணியப்படுகின்ற, மாலையும் - பூமாலையும், தீபமும் - தீபங்களும், வழங்குக - வழங்கப்படக்கடவன, என்றனன்-என்று கட்டளையிட்டான்—எ-று. (கம௪)

294. என்புழி வள்ளுவர் யானை மீமிசை
நன்பறை யறைந்தனர் நகர மாந்தரும்
மின்பிறழ் நுகப்பினர் தாமும் விம்மலால்
இன்பமென் றளக்கரு மளக்க ரெய்தினர்

(இ-ள்.) என்புழி - என்று சக்ரவர்த்தி கட்டளையிட்டபோது, வள்ளுவர் - வள்ளுவர்கள், யானைமீமிசை - யானைமேலேறிக்கொண்டு, நன்பறை அறைந்தனர் - மங்கலப்பறையை முழக்கினர்கள், (அதைக்கேட்ட) நகரமாந்தரும் - நகரத்திலுள்ள ஆடவரும், மின்பிறழ் நுகப்பினரும் - மின்னற்கொடிபோலத் துவள்கின்ற இடையையுடைய மாதர்களும், விம்மலால் - பூரிப்பினால், இன்பம்என்ற - ஆநந்தமென்று சொல்லப்பட்ட, அளக்க அரு - அளவிடுதற் கருமையாகிய, அளக்கர் - சமுத்திரத்தில், எய்தினர் - மூழ்கினர்கள்—எ-று. (கம௫)

மாந்தர் - பொதுச்சொல்லாயினும் மின்பிறழ் நுகப்பினர் என மேல் வருகின்றமையால் ஆடவர் எனப் பொருளுரைக்கப்பட்டது. மீமிசை - ஒருபொருட் பன்மொழி. தாம் - அசை. இன்பமென்ற அளக்கர் என்பது இன்பமென் றளக்கர்

என நிலைமொழியீற்று அகரந்தொகுத்தல் பெற்றது. அளக்க அரு என்பது அளக்கரு என நின்றதூஉமது.

295. ஆர்த்தனர் முறைமுறை யன்பினு லுடல்
போர்த்தன புளகம்வேர் பொடித்த நீணிதி
தூர்த்தன ரெதிரெதிர் சொல்லி ளுர்க்செலாம்
தீர்த்தனென் றறிந்ததோ வவர்தச் சிந்தையே.

(இ-ள்.) (இவ்வாறு ஆனந்தமடைந்தவர்கள்) முறைமுறை - வரிசை வரிசையாகநின்று, ஆர்த்தனர் - ஆரவாரித்தார்கள், அன்பினால் - அன்பின் மிகுதியால், உடல் - அவர்கள் சரீரங்கள், புளகம்போர்த்தன - புளகத்தால் மறைக்கப்பட்டன, வேர்பொடித்த - வேர்வை அரும்பின, எதிர்எதிர் - எதிரேஎதிரேவந்து, சொல்லிஞர்க்கு எலாம் - இந்த சந்தோஷசமாசாரத்தைச் சொல்லினவர்களுக்கெல்லாம், நீள்நிதிதூர்த்தனர் - மிகுந்த திரவியத்தைக் கொடுத்தாகள், (அவர்கள் இப்படி செய்தற்குக் காரணம்) அவர்சிந்தை-அவர்களுடைய மனம், தீர்த்தன் என்று அறிந்ததோ - (இப்போது திருவவதரித்தவன்) ஸ்ரீமந்நாராயணனே என்று தெரிந்துகொண்டமைதானே, (அறிகிலேம்)—எ-று. (கமிகூ)

தீர்த்தான் - பரிசுத்தன், அவனுக்குமேலான பரிசுத்தன் எக்காலத்தும் எவ்விடத்தும் ஒருவன் இலனாதலின் தீர்த்தனென்றதற்கு ஸ்ரீமந்நாராயணன் என்று பொருளுரைக்கப்பட்டது. ஆர்த்தனர் என்றமையால் வாக்கும், அனபினால் என்றமையால் மனமும், உடல் புளகம் போர்த்தனர், வேர்பொடித்த என்றமையால் காயமும் ஆக முக்கரணங்களும் களித்தனவென்பதாயிற்று.

296. பண்ணையு மாயமுந் திரளும் பாங்கரும்
கண்ணகன் றிருநகர் களிப்பு மைகமிகுந்
தெண்ணெயுங் களபமு மிழுது நானமும்
சுண்ணமும் தூவின வீதி தோறுமே.

(இ-ள்.) பண்ணையும் - மாதர்கூட்டமும், ஆயமும் தோழியர்கூட்டமும், திரளும் - ஆடவர்கூட்டமும், பாங்கரும் - தோழர்கூட்டமும் ஆக, கண் அகல் திருநகர் - இடம் விரிவாகிய அயோத்யாநகரமானது, களிப்பு கைமிகுந்து - சந்தோஷம் வரம்புகடந்து, எண்ணெயும் - எண்ணெயையும், களபமும் - சந்தனக் குழம்பையும், இழுதும் - நெய்யையும், நானமும் - கஸ்தூரியையும், சுண்ணமும் - பரிமளப்பொடியையும், வீதிதோறும் - வீதிகளிலெல்லாம், தூவினார் - தூவினார்கள்—எ-று.

வேறு.

297. இத்தகை மாநக ரீரறு நாளும்
சித்த முறுங்களி யோடு சிறந்தே
தத்தமை யொன்று முணர்ந்தில தாவா
மெய்த்தவ னுமம் விதிப்ப மதித்தான்,

(இ-ள்.) இத்தகை - இந்தப்படி, மா - பெருமைபொருந்திய, மாநகர் - பெரிய நகரத்தார், ஈரறுநாளும் - பன்னிரண்டுநாளளவும், சித்தம் - தமது மனம், உறும் - மிகுகின்ற, களியோடு - களிப்புடன், சிறந்து - மிகுந்து, தத்தமை - தங்கள் தங்களை, ஒன்றும் - சிறிதும், உணர்ந்தில - அறியாதவர்களா யிருந்தார்கள், (இப்படியிருக்க) தாவா - கெடாத, மெய்தவன் - உண்மையாகிய தவத்தையுடைய (வஸி

ஷ்டமுனிவன்,) நாமம்விதிப்ப - (அந்த ராஜகுமாரர்களுக்கு) நாமகரணம் செய்ய, மதித்தான் - எண்ணங்கொண்டான்—எ-று. (கமஅ)

இதுமுதல் நான்கு திருவிருத்தங்களால் நாமகரணம் சொல்லுகிறது.

298. கராமலை யத்தளர் கைக்கரி யெய்த்தே
அராவணை யிற்றுயில் வோயென வந்நாள்
விராவி யளித்தருண் மெய்ப்பொரு ளுக்கே
இராம னெனப்பெய ரீய்ந்தன னன்றே.

(இ-ள்.) கரா - முதலையானது, மலைய - போர்செய்தலால், தளர் - தளர்ச்சியடைந்த, கைக்கிரி - யானையானது, எய்த்து - இளைத்து, அரா அணையில் துயில்வோய் - சர்ப்பசயனத்தில் யோகநித்திரைசெய்பவனே, என என்றழைக்க, அ நாள் - அந்தக்காலத்தில், விராவி - அதனிடத்தில் வந்து, அளித்தருள் - காத்தருளின, மெய்ப்பொருளுக்கு - உண்மைப்பொருளாகிய ஸ்ரீமந்நாராயணனுக்கு, இராமன் என - ராமன் என்று, பெயர் ஈய்ந்தனன்-திருநாமஞ் சாத்தினன்—எ-று. ()

299. கரதல முற்றொளிர் நெல்லி கடுப்ப
விரத மறைப்பொருண் மெய்ந்நெறி கண்ட
வரத னுதித்திட மற்றைய வொளியை
பரத னெனப்பெயர் பன்னின னன்றே.

(இ-ள்.) கரதலம் உற்று - கையினிடத்துப் பொருந்தி, ஒளிர் - விளங்குகின்ற, நெல்லி - நெல்லிப்பழத்தை, கடுப்ப - ஒப்பாக, விரதம் - (உண்டி சுருக்கல் முதலிய) விரதாதிகளைப் பிரதிபாதிக்கிற, மறைப்பொருள் - வேதார்த்தமாகிய, மெய்நெறி - உண்மைநெறியினால், கண்ட - உணரப்பட்ட, வரதன் - வேண்டினார்க்கு வேண்டியவற்றைத்தருபவன், உதித்திட - திருவவதரித்தலால், மற்றை அ ஒளியை - அந்த மற்றொருசோதிக்கு, பரதன் என - பரதனென்று, பெயர்பன்னினன் - திருநாமங்கூறினான்—எ-று. (கஉ0)

300. உலக்குனர் வஞ்சக ரும்பரு முய்ந்தார்
நிலக்கொடி யுந்துயர் நீத்தன ளிந்த
விலக்கரு மொய்ம்பின் விளங்கொளி நாமம்
இலக்குவ னென்ன விசைத்தன னன்றே.

(இ-ள்.) வஞ்சகர் - வஞ்சககராகிய ராக்ஷஸர்கள், உலக்குநர் - இறக்கின்றார்கள், (அதுகாரணமாக) உம்பரும் - தேவர்களும், உய்ந்தார் - பிழைத்தார்கள், நிலக்கொடியும் - பூமிதேவியும், துயர் நீத்தனள் - துன்பம் நீங்கினாள், இந்த - இங்குக் காணப்படுகிற, விலக்கு அரு - ஒருவராலும் விலக்குதலரிய, மொய்ம்பின் - பலத்தையுடைய, விளங்கு - விளங்குகின்ற, ஒளி - சோதியின், நாமம் - திருநாமமானது, இலக்குவன் - இலக்குமணனாகும், என்ன-என்று, இசைத்தனன் - வசிட்டமுனிவன்சொன்னான்—எ-று. (கஉக)

துணிவுபற்றி எதிர்காலம் நிகழ்காலத்தாலும், உலக்குநரென உயர்ந்தனர், நீத்தனள் என இறந்தகாலத்தாலும் வந்தன. "அறம்வெல்லும் பாவந்தோற்கும்" என்னும் இயற்கைபற்றி எதிர்வு உலக்குனரென நிகழ்வாகவும், உய்ந்தார், நீத்தனளென இறப்பாகவும் வந்தன. தொல் - வினை, கு, "வாராக்காலத்து வினைச்சொற்

கிளவி, இறப்பினுநிகழ்வினுஞ் சிறப்பத்தோன்றும், 'இயற்கையுந் தெளிவுங் கிளக்குங்காலை.''

301. முத்துருக் கொண்டுசெம் முளரி யலர்ந்தால்
ஒத்திருக் கும்மெழி லுடையவிவ் வொளியால்
எத்திருக் குங்கெடு மென்பதை யெண்ணிச்
சத்துருக் கன்னெனச் சாத்தின னுமம்

(இ-ள்.) முத்து - முத்துகள், உருகொண்டு - மகன்வடிவுகொண்டு, செம்முளரி அலர்ந்தால் ஒத்து - செந்தாமரைமலர்களை மலர்ந்தாற்போன்று, இருக்கும் - இருக்கின்ற, எழில் உடைய - அழகையுடைய, இவ்வொளியால் - இந்தச்சோதியால், எத்திருக்கும் கெடும் என்பதை-எந்தக் குற்றங்களும் நசிக்கும் என்பதை, எண்ணி- ஆலோசித்து, சத்துருக்கன் என - சத்ருக்நன் என்று, நாமம் சாத்தினன் - திருநாமம் அமைத்தான்—எ-று. (௧௨௨)

சத்ருக்நன் வெண்ணிறமுள்ள பெருமானாதலால் முத்துருக்கொண்டு எனவும், முகம் - வாய் - கண் - கை-கால்கள் செந்தாமரைமலர்கள் போன்றவனாதலால் முளரி அலர்ந்தால் ஒத்துஎனவும் கூறினர்.

302. பொய்வழி யின்முனி புகறரு மறையால்
இவ்வழி பெயர்க ளிசைத்துழி யிறைவன்
கைவழி நிதியெனு நதிகலை மறையோர்
மெய்வழி யுவரி நிறைத்தன மேன்மேல்.

(இ-ள்.) பொய்வழி இல் - பொய்யான வழியில்லாத, முனி-(வசிஷ்டமுநிவன்,) புகல்தரு - முன்னமேசொல்லுகின்ற, மறையால் - வேதமுறைப்படி, இவ்வழி-இவ்வாறு, பெயர்கள் இசைத்துழி-(சக்ரவர்த்தி குமாரர்கள் நால்வருக்கும்) திருநாமங்களமைத்தபோது, இறைவன் - தசரதமஹாராஜன், கை-தனது கைகளினின்றும், வழி - பெருகுகின்ற, நிதிநதி-திரவியமாகிய நதிகளால், கலைமறையோர் - கலைவல்லோராகிய அந்தணரது, மெய்வழி - உண்மைச்சந்ததியாகிய, உவரி - கடலை, மேல்மேல் நிறைத்தனன்-அதிகமாக நிறைத்துவிட்டான்—எ-று. (௧௨௩)

கைவழியாகப் பொழிப்படுகிற தான நீருடன், நிதிகளைச் சமுத்திரம்போல மிகுதியாக வந்திருக்கிற பிராமணர்களுக்குத் தானங்கொடுத்தான் எனப்பொருள் கூறுவது மொன்று.

303. காவியு மொளிர்தரு கமலமு மெனவே
ஓவிய வெழிலுடை யொருவனை யலதோர்
ஆவியு முடலமு மிலதென வருளின்
மேவின னுலகுடை வேந்தர்தம் வேந்தன்.

(இ-ள்-) காவியும் - நீலோத்பலமலர்களும், ஒளிர்தரு - (அவற்றின் இடையிடையே) விளங்குகின்ற, கமலமும் - செந்தாமரைமலர்களும், என - கலந்திருப்பது என்று சொல்லும்படி, ஓவியம் - சித்திரித்தாற்போன்ற, எழில்உடை - அழகையுடைய, ஒருவனை அலது - ஒப்பற்றவனாகிய ஸ்ரீராமபிரானையல்லது, ஓர் ஆவியும் உடலமும் - ஒருயிரும் உடலும், இலதுஎன - இல்லையென்று சொல்லும்படி, உலகு உடை - உலகத்தைத் தனது வசத்திலுடைய, வேந்தர்தம்வேந்தன் - சக்ரவர்த்தி, அருளின் மேவினன்(அவனிடத்து) அன்போடு இருந்தான்—எ-று. (௧௨௪)

304. அமிர்துகு குதலேயொ டணிநடை பயிலா
திமிரம தறவரு தினகர னெனவும்
தமரம துடன்வளர் சதுமறை யெனவும்
குமரர்க ணிலமகள் குறைவற வளர்நாள்.

(இ-ள்.) குமரர்கள்-இந்த அரசிளங்குமரர்கள் நால்வரும், அமிர்து உகு-அமிர்தம் சிந்துகின்ற, குதலேயொடு - மழலைச்சொற்களோடு, அணிநடைபயிலா - அழகாகிய நடையைக்கற்று, திமிரமது அறவரு-இருள்நீங்கும்படி யுதிக்கின்ற, தினகரன் எனவும்-சூரியன்போலவும், தமரமதுடன்வளர்-ஸ்வரங்களின் ஒலியோடு விருத்தியடைகின்ற, சதுமறை எனவும் - நான்குவேதங்கள்போலவும், நிலமகள் பூமிதேவியினுடைய, குறைவு அற-குறைவுநீங்கும்படி, வளர்நாள்-வளர்கின்றநாளில்—எ-று. ()

பகை யிருளேயோட்டுதலில் ஒவ்வொருவரும் சூரியன்போல்வார் ஆதலின் திமிரம் அறவருதினகரன் என்றார். ஸ்வரம் என்பது உதாத்தம், அநுதாத்தம், ஸ்வரிதம், ப்ரசயம் என்னும் எடுத்தல் முதலாயின ஓசைவகை. நால்வர் ஆதலால் சதுமறையென உவமித்தார். நிலமகளுக்குக் குறைவாவது பூபாரம் நீக்குவார் இல்லை என்னும் மனக்குறைவு. தமரமது, திமிரமது என்பவற்றில், து பகுதிப்பொருள் விகுதி.

305. சவுளமொ டுபநயம் விதிமுறை தருகுற்
றிவளவ தெனவொரு கலைபிறி திலவா
உவள்தரு மறையினெ டொழிவறு கலேயும்
தவள்மதி புனேயர ணிகர்முனி தரவே.

(இ-ள்.) சவுளமொடு - சௌளச்சடங்கையும், உபநயம் - உபநயனச்சடங்கையும்-விதிமுறை-வேதவிதியின்முறையாக, தருகுற்று-செய்து, உவள் தருமறையினெடு விளங்குகின்ற வேதங்களுடன், ஒழிவு அறு-நீங்குதலில்லாத, கலேயும்-மற்றைக்கலைகளேயும், தவளம்மதிபுனே-வெண்மையாகிய சந்திரனேயணிந்த, அரன்-சிவனே, நிகர்-ஒத்த, முனி-வசிஷ்டமுநிவன், தர-கற்பித்தலால், இவ்வளவது என - இவ்வளவினேயுடையதென்று, ஒருகலேபிறிது இல - (அவர்களுடைய) வேதசாஸ்திரப்பயிற்சிக்கு வேறொருகலே இலதாயிற்று—எ-று. (௩௨௬)

சவுளம் - பிறவிமயிர்களேதல்; சௌளம் எனற்பாலது சவுளமென எழுத்துப்போலி பெற்றது. இது உபநயநத்திற்கு முன்னர்ச் செய்யப்படுவது. உபநயநம்-பூணூற்சடங்கு. தவளம் மதிஎன்பது, தவள்மதி என ஈற்றில் அம்குறைந்து நின்றது. தர என்னும் எச்சம் காரணப்பொருட்டு.

306. யானேயு மிரதமு மிவுளியு முதலா
ஏனேய பிறவுமவ் வியல்பினி னடையுற்
றானுறு படைபல சிலேயொடு பயிலா
வானவர் தனிமுதல் கிளேயொடு வளர.

(இ-ள்.) வானவர் - தேவர்களுக்கு, தனிமுதல்-ஒப்பற்ற முதல்வனுகிய ஸ்ரீராமபிரான், கிளேயொடு-தன்தம்பிமாரோடுகூடி, யானேயும் - யானே எற்றத்தையும், இரதமும்-தேரேற்றத்தையும், இவுளியும் - குதிரை யேற்றத்தையும், முதலா - முதன்மையாகக்கொண்டு, ஏனேயபிறவும் - மற்றைக்கலேகளேயும் ,அவ்வியல்பினின்-அவற்றிற்

குரிய முறைப்படி, அடையுற்று-பெற்று, ஊன் உறு-பகைவரது மாமிசம் பொருந்து தற்குரிய, பலபடை - அநேக ஆயுதக்கல்விகளை, சிலையொடு வில்வித்தையோடு, பயிலா-பழகி, வளர-வளர்ந்துகொண்டிருக்க—எ-று. (கஉஎ)

கிளை என்பது இவ்விடத்து தம்பிமார்களைக் குறித்துநின்றது. இது உவமை யாகுபெயர்.

307. அருமறை முனிவரு மமரரு மவனித்
திருவும நகருறை செனமுந மிடரோ
டிருவினை துணிதரு மிவரினி திவணின்
றொருபொழு தகல்கில முறையென வுறுவார்.

(இ-ள்.) அருமறை - பிறர் உணர்த லருமையாகிய வேதங்களையுணர்ந்த, முனி வரும்-முநிவர்களும், அமரரும்-தேவர்களும், அவனித்திருவும் - பூமிதேவியும் அ நகர் உறைசெனமும்-அந்த நகரத்தில் வாழ்கிற ஜநங்களும், இவரின்-இந்தராஜகுமாரர்க ளால், நம் இடரோடு-நமது துன்பத்துடன், இருவினை-அதற்குக் காரணமாகிய இரு வினைகளும், துணிதரும் ஒழியும், (ஆகையால்) இவண் நின்று-இவ்விடத்தினின்றும், ஒருபொழுது-ஒருமுகூர்த்தகாலமும், அகல்கிலம்-நீங்குவேமல்லேம், முறை-இதுவே நமக்கு முறைமையாவது, என-என்றுகருதி, உறுவார்-வந்து அடர்வார்கள்—எ-று.

308. ஐயனு மிளவலு மணிநில மகடன்
செய்தவ முடைமைக டெரிதர நதியும்
மைதவழ் பொழில்களும் வாவியு மருவி
நெய்குழ லுறுமிழை யெனநிலை திரிவார்.

(இ-ள்.) ஐயனும்-யாவர்க்குந்தந்தையாகிய ஸ்ரீராமபிரானும், இளவலும்-இளைய பெருமாளும், அணி-அழகையுடைய, நிலமகள் தன்-பூமிதேவியினுடைய, செய்தவம் உடைமைகள் - செய்தவப்பயன்களுடையாளாதல், தெரிதர-விளங்கும்படி, நதியும்-நதிகளிலும், மைதவழ்-மேகங்கள் தவழ்கின்ற, பொழில்களும்-சோலைகளிலும், வாவி யும்-தடாகங்களிலும், மருவி - சேர்ந்து, நெய் - நெய்கின்ற, குழல் உறும்-குழலோடு பொருந்திய, இழை என - நூலிழைபோல, நிலை-நிலைபெற்று, திரிவார்-சஞ்சரிப்பார் கள்—எ-று. (கஉஅ)

தன்-சாரியை. நிலமகள்செய்தவமுடைமைகள் என்றது அரசநீதி கோடாது செல்லுதலால், யாவரும் முறை வழாதுநடந்து இன்பந்துய்த்தல், திங்கள் மும்மாரி பெய்துவருதலால் வளங்கள் குறைவின்றியிருத்தல்.

309. பரதனு மிளவலு மொருநொடி பகிரா
திரதமு மிவுளியு மிவரினு மறைநூல்
உரைதரு பொழுதினு மொழிகில ரெனையாள்
வரதனு மிளவலு மெனமரு வினரே.

(இ-ள்.) பரதனும்-பரதனும், இளவலும்-தம்பியாகிய சத்ருக்நனும், ஒருநொடி-ஒருநொடிப்பொழுதாயினும், பகிராது-பிரியாமல், இரதமும் - தேரின்மீதும், இவுளி யும்-குதிரையின்மீதும், இவரினும் - ஏறினும், மறைநூல் - வேதசாஸ்த்ரங்களை, உரைதருபொழுதினும்-ஓதுங்காலத்திலும், ஒழிகிலர்-நீங்காதவர்களாய், எனையாள் -

என்னையாட்கொண்ட, வரதனும்-(ரக்ஷகனுகிய) ஸ்ரீராமபிரானும், இளவலும்-இளைய பெருமாளும், என-(பிரியாதிருப்பது) போல, மருவினர்-கூடியிருந்தார்கள்—எ-று.

310. வீரரு மிளைஞரும் வெறிபொழில் களின்வாய்
ஈரமொ டுறைதரு முனிவர ரிடைபோய்ச்
சோர்பொழு தணிநகர் துறுகுவ ரெதிர்வார்
கார்வர வலர்பயிர் பொருவுவர் களியால்.

(இ-ள்.) வீரரும் - பராக்கிரமசாலியாகிய ஸ்ரீராமபிரானும் பரதனும், இளைஞரும் - தம்பியாகிய இளையபெருமாளும் சத்துருக்நனும், வெறிபொழில்களின் வாய்- வாசனைவீசுகின்ற சோலைகளினிடத்து, ஈரமொடு உறைதரும்-அன்போடுவசிக்கிற, முனிவரர் இடைபோய் - முனிசிரேஷ்டர்களிடத்திற்சென்று, சோர்பொழுது- அஸ்தமிக்கும்போதில், அணிநகர்துறுகுவர்-அழகாகிய நகரத்திற் புகுவார்கள், எதிர் வார்-(அவ்வாறு வரும்போது) எதிர்ப்படுவோர், களியால் - (இவர்களைக்கண்டதனு லுண்டாகும்) களிப்பினுல், கார்வர-மேகங்கள்வர, அலர்-செழிக்கின்ற, பயிர்பொரு வுவர்-பயிரை யொப்பாவார்கள்—எ-று. (கக்க)

311. ஏழைய ரனைவரு மிவர்தட முலைதோய்
கேழ்கிளர் மதுகையர் கிளைகளு மினையார்
வாழிய வெனவவர் மனனுறு கடவுட்
டாழ்குவர் கவுசலை தயரத னெனவே.

(இ-ள்.) ஏழையரனைவரும்-அந்நகரத்திலிருக்கும் மாதர்களெல்லாரும், இவர்- இந்தமாதர்களுடைய, தடம்முலைதோய் - பெருமையாகிய ஸ்தநங்களிற்பொருந் துகின்ற, கேழ்கிளர்-ஒளியுடன்விளங்குகின்ற, மதுகையர்-பலசாலிகளாகிய ஆடவர் களும், கிளைகளும்-இவர்களுடைய சுற்றத்தாரும், இனையார் - இந்தராஜகுமாரர்கள், வாழிய என - வாழக்கடவரென்று, கவுசலைதயரதன் எனவே - கௌசலையும் தசரத னும்போலவே, அவர்மனன் உறு-அவர்கள்மனத்திற் பொருந்தியிருக்கிற, கடவுள்- தேவதைகளை, தாழ்குவர்-வணங்குவார்கள்—எ-று. (கக௨)

மனம் என்பது மனன்எனம் போலியாயிற்று.

312. கடல்கரு முகிலொளிர் கமலம தலரா
வடவரை யுடன்வரு செயலென மறையும்
தடவுத லறிவரு தனிமுத லவனும்
புடைவரு மிளவலு மெனநிகர் புகல்வார்.

(இ-ள்.) மறையும்-வேதங்களும், தடவுதல் அறிவுஅரு-தேடுதற்கரியாத, தனி- ஒப்பற்ற, முதல்வனும் - தலைவனுகிய ஸ்ரீராமபிரானும், புடைவரும்-அவர்க்குச் சமீ பத்தில்வருகின்ற, இளவலும் - இளையபெருமாளும், கடல்-கடல், கருமுகில்-கருமை யாகியமேகம், (இவைகள்) கமலம் அலரா-தாமரைமலர்தள் மலர்ந்துகொண்டு, வட வரையுடன்வரு- பொன்மலையோடுவருகிற, செயல் என-செய்கைபோல (இருக்கின் றது,) என-நின்று, நிகர்புகல்வார்-(கண்டோர்) ஒப்புச்சொல்லுவார்கள்—எ-று. ()

313. எதிர்வரு மவர்களை யெமையுடை யிறைவன்
முதிர்தரு கருணையின் முகமல ரொளிரா

எதுவினை யிடரிலை யினிதினு மனையும்
மதிதரு குமரரும் வலியர்கொ லெனவே

(இ-ள்.) எம்மைஉடை - எங்களை அடிமையாகவுடைய, இறையன்-தலைவனாகிய ஸ்ரீராமபிரான், எதிர்வருமவர்களை-எதிரில்வருகின்றவர்களை (நோக்கி,) கருணையின்- கிருபையுடன், முகமலர் ஒளிரா - முகத்தாமரைமலர்ந்து, எதுவினை - யாதுகாரியம், இடர் இல்லைகொல்-துன்பமில்லையன்றே, இனிதின்-இனிதாக, நும்மனையும்-உமது மனைவிமாரும், மதிதருகுமரரும் - அறிவுள்ள புத்திரர்களும், வலியர்கொல்-சுகமாக இருக்கிறார்களா, என-என்றுவினவ—எ-று. (கநச)

கொல் ஐயப்பொருட்டு. கொல்லென்பதை இடரிலை என்பதனோடுங் கூட்டுக.

314. அஃதய நினையெம தரசென வுடையேம்
இஃதொரு பொருளல வெமதுயி ருடனேழ்
மகிதல முழுதையு முறுகவி மலரோன்
உகுபக லளவென வுரைநனி புரிவார்.

(இ-ள்.) அஃது-திக்கற்றவர்களுக்கு, ஐய - தந்தையே, நின்னை-உன்னை, எமது அரசு என உடையேம் - எங்களரசனாக வுடையோமாயிருக்கின்றோம், (ஆகையால்) இஃது ஒருபொருள் அல்ல-இவ்வாறு நாங்கள் சுகமாக வாழ்ந்திருப்பது ஒருபொருளல்ல, எமது உயிருடன்-எங்களுயிரோடு, எழ்மகிதலம் முழுதையும் - ஏழுலகங்களையும், இமலரோன்-இந்தப்பிரமதேவன், உகுபகல் அளவு-இறக்குங்காலம் வரைக்கும், உறுக - நீர் கைக்கொண்டரசாட்சி செய்யக்கடவீர், என-என்று, உரைநனிபுரிவார்- (வினவப்பட்டார்) உபசாரவார்த்தைகளை மிகவுஞ்சொல்லுவார்கள்—எ-று. (கநரு)

அமதிஎன்னும் ஆரியமொழி அஃதி, எஃகவும், அஃதை எனவும் திரிந்து வழங்கும். அது ஈறுதொகுத்தல் பெற்றது.

வேறு.

315. இப்பரி சணிநக ருறையும் யாவரும்
மெய்ப்புகழ் புனைதர விளைய வீரர்கள்
தப்பற வடிநிழ றழுவி யேத்துற
முப்பரம் பொருளுக்கு முதல்வன் வைகுறும்.

(இ-ள்.) இப்பரிசு - இந்தப்பிரகாரமாக, அணிநகர்உறையும் யாவரும்-அழகான அந்த அயோத்யாநகரத்தில் வாழ்கின்ற எல்லாரும், மெய்ப்புகழ்புனைதர - உண்மையான புகழால் அலங்கரிக்கவும், இளையவீரர்கள் - இளையவீரர்களாகிய தம்பிமார்கள், தப்பு அற - பழுதில்லாமல், அடிநிழம்தழுவி-தன் திருவடிநிழலைச் சேர்ந்திருந்து, ஏத்துஉற - துதிக்கவும், முப்பரம் பொருளுக்கும் முதல்வன் - மேலான மும்மூர்த்திகளுக்குந் தலைவனாகிய ஸ்ரீராமபிரான், வைகுறும்-வீற்றிருக்கிறார்—எ-று. (கநகூ)

316. அரைசர்தம் பெருமக னகிலம் யாவையும்
விரைசுறு தனிக்குடை விளங்க வென்றிசேர்
முரைசொலி கறங்கிட முனிவ ரேத்துறக்
கரைசெய லரியதொர் களிப்பின் வைகுநாள்,

(இ-ள்.) அரைசர்தம்பெருமகன்-சக்கரவர்த்தி, அகிலம்யாவையும் - உலகமெங்கும், விரைசு உறுதனி குடை - பொருந்திய ஒப்பற்ற குடையானது, விளங்க - (நிழலைச்செய்து) பிரகாசிக்கவும், வென்றிசேர் - வெற்றிதங்கிய, முரைசு ஒலிகறங்கிட - பேரிகையோசை முழங்கவும், முனிவர்கள் ஏத்துற - முனிவர்கள் வாழ்த்தவும், கரைசெயல் அரியது - கரைகோலித் தடுத்தற்கரிதான, ஓர் - ஒப்பற்ற, களிப்பின்-ஆநந்தக்கடலில், வைகும் நாள்-மூழ்கியிருக்குங் காலத்தில்—எ-று. (கக௬எ)

௬-வது. திருவவதாரப்படலம் முற்றிற்று.



# எ-வது. கையடைப் படலம்.



சக்ரவர்த்தி தன் திருக்குமாரர்களாகிய ராம லக்ஷ்மணர்களை
விசுவாமித்திரமுனிவர் வசம் ஒப்புவித்தலை யுணர்த்தும் படலம்.



317. நனைவரு கற்பக நாட்டு நன்னகர்
அனைவரு மணைதர வயிர்க்குஞ் சிந்தையான்
நினையவு மரியது விசும்பி னீண்டதோர்
புனைமணி மண்டபம் பொலிய வெய்தினன்.

(இ-ள்.) நனைவரு-அரும்புகள் அரும்புகின்ற, கற்பகம்-கற்பகமரங்களையுடைய, நாட்டு - சுவர்க்கத்திலுள்ள, நல்நகர் - (அமராவதியென்கிற) நல்லநகரத்தில் வாழ்கின்ற, அனைவரும் - தேவர்களெல்லாரும், அணைதர - வந்துபொருந்த, அயிர்க்கும்- சந்தேகிக்கிற, சிந்தையால் - மனத்தினால், நினையவும் - நினைப்பதற்கும், அரியது - அரிதானதும், விசும்பின்நீண்டது - சுவர்க்கம்வரையி லுயர்ந்ததுமாகிய, ஓர் - ஒரு, புனைமண்டபம் - அலங்கரிக்கப்பட்ட ரத்நமண்டபமானது, பொலிய - பொலிவையடையும்படி, எய்தினன் – அதிற்சேர்ந்தான்—எ-று. (க)

அனைதர அயிர்த்தலாவது இந்திரனது கொலுமண்டபமோ வென்று சந்தேகித்தல். நினையவும் அரியதென்றது வேலைப்பாட்டின் நுண்மையை விளக்கி நின்றது. இவனால் மண்டபத்திற்குப் பொலிவுண்டாயிற்றெனவே இவனது பெருமை சொல்லவேண்டாதாயிற்று.

318. தூயமெல் லரியணைப் பொலிந்து தோன்றினன்
சேயிரு விசும்பிடைத் திரியுஞ் சாரணர்
நாயக னிவன்கொலன் றயிர்த்து நாட்டமோர்
ஆயிர மில்லையென் றைய நீங்கினர்.

(இ-ள்.) தூய - பரிசுத்தமாயுள்ள, மெல் - மென்மையாகிய, அரிஅணை - சிங்காதநத்தில், பொலிந்து தோன்றினன் - விளங்கி வீற்றிருந்தான், (அவ்வாறு வீற்றிருந்த சக்ரவர்த்தியை) சேயிருவிசும்பிடை - மிகவும்பெரிய ஆகாயவீதியில், திரியும் - சஞ்சரிக்கிற, சாரணர் – சாரணர்கள், (நோக்கி) நாயகன் இவன்கொல் என்று அயிர்த்து - நமக்குத் தலைவனாகிய இந்திரன் இவன்தானோ வென்று சந்தேகித்து, நாட்டம் ஓர் ஆயிரம் இல்லையென்று - கண்கள் ஓராயிரமில்லையென்றறிந்து, ஐயம் நீங்கினர் - (தாம்கொண்ட) சந்தேகத்தை யொழித்தார்கள்—எ-று. (உ)

சாரணர் தேவவொற்றர்.

விசுவாமித்திரர் வருதல்.

319. மடங்கல்போன் மொய்ம்பினன் முன்னர் மன்னுயிர்
அடங்கலு முலகும்வே றமைத்துத் தேவரோ
டிடங்கொணான் முகனையும் படைப்பெ னீண்டெனாத்
தொடங்கிய துணியுறு முனிவன் றோன்றினான்.

(இ-ள்.) மடங்கல்போல் மொய்ம்பினன் முன்னர் - (இவ்வாறு வீற்றிருக்கிற) சிங்கத்தையொத்த பலத்தையுடையவனாகிய சக்ரவர்த்திக்கெதிரில், மன் உயிர் அடங்கலும் - நிலைபெற்ற உயிர்களெல்லாவற்றையும், உலகும் - அவைகட்குறைவிடமானலோகங்களையும், வேறு அமைத்து - வேறாகப்படைத்து, தேவரொடு, தேவர்களுடனே, இடங்கொள் - விசாலமான, நான்முகனையும் - நான்குமுகங்களையுடைய பிரமதேவனையும், ஈண்டு படைப்பெனென்று - இப்பொழுதே படைப்பேனென்று, தொடங்கிய - தொடங்கின, துணி உறு - யாவரும் அஞ்சுதற்குரிய, முனிவன் - விசுவாமித்திரமுனிவன், தோன்றினான் - வந்தான்—எ-று. (ரு)

முனிவனென வாளாகூறினாராயினும், மன்னுயிர் அடங்கலும் எனத்தொடங்கிக் கூறும் விசேடணங்களால் விசுவாமித்திர முனிவனென அவன்மேலாயிற்று.

வேறு.

320. வந்துமுனி யெய்தலு மார்பினணி யாரம்
அந்தர தலத்திரவி யஞ்சவொளி விஞ்சக்
கந்தமல ரிற்கடவு ளன்வரவு காணும்
இந்திர னெனக்கடி தெழுந்தடி பணிந்தான்.

(இ-ள்) முனி - விசுவாமித்திரமுனிவன், வந்து எய்துதலும் - வந்துசேர்தலும், மார்பின் அணி ஆரம் - மார்பிலணிந்த ரத்நஹாரமானது, அந்தரதலத்து - ஆகாயத்தில் சஞ்சரிக்கின்ற, இரவு - சூரியன், அஞ்ச - அஞ்சும்படி, ஒளிவிஞ்ச-ஒளிமிக, கந்தம்-வாசனை தங்கிய, மலரில் - மூலதாமரைமலரில் வீற்றிருக்கிற, கடவுள் - பிரமதேவனது, வரவு - வருகையை, காணும் - நோக்கின, இந்திரன் என - இந்திரன்போல, கடிது எழுந்து - விரைவாயெழுந்திருந்து, அடிபணிந்தான் - அந்த முனிவனது திருவடியைச் சக்ரவர்த்தி வணங்கினான்—எ-று. (௬)

321. பணிந்துமணி செற்றுபு குயிற்றியவிர் பைம்பொன்
அணிந்ததவி சிட்டதி னருத்தியோ டிருத்தி
இணைந்தகம லச்சரண ருச்சனைசெய் தின்றே
துணிந்ததென் வினைத்தொடர் பெனத்தொழுது சொன்னான்.

(இ-ள்.) பணிந்து - (சக்கரவர்த்தி இவ்வாறு) பணிந்து, மணிசெற்றுபுகுயிற்றி-ரத்நங்களைநெருக்கிப் பதித்ததனால், அவிர்-விளங்காநின்ற, பைம்பொன் அணிந்த - பசும்பொன்னினால் அலங்கரித்துச் செய்யப்பட்ட, தவிசு இட்டு-ஆசநமிட்டு, அதின்-அந்த ஆசநத்தில், அருத்தியொடிருத்தி-(அம்முனிவனை) அன்போடிருக்கச்செய்து, இணைந்த-இரண்டாகிய, கமலச்சரண்-தாமரைமலரையொத்த (அம்முனிவனுடைய) பாதங்களை, அருச்சனைசெய்து-(மலர்களைக்கொண்) டர்ச்சனைபண்ணி, என்வினைத் தொடர்பு-என்வினையாகிய விலங்கு, இன்றேதுணிந்தது-இப்பொழுதே அற்றுப்போயிற்று, என-என்று, தொழுது சொன்னான்-வணங்கிச்சொல்லினான்—எ-று. (௭)

322. நிலஞ்செய்தவ மென்றுணரி னன்றுநெடி யோயென்
நலஞ்செய்வினை யுண்டெனினு மன்றுநகர் நீயான்
வலஞ்செய்து வணங்கவெளி வந்தவிது முந்தென்
குலஞ்செய்தவ மென்றினிது கூறமுனி கூறும்.

(இ-ள்.) (மறுபடியும்) நெடியோய் (தவத்தாற்) பெரியானே, நகர் - (இந்த) நகரின்கண், நீ - (முனிவர்களில்சிறந்த) நீ, யான்வலம்செய்துவணங்க - அடியேன் பிரதக்ஷிணம்பண்ணி வணங்கும்படி, எளிவந்தஇது - எளிதில்வந்த இதற்குக் காரணம், நிலம் செய்தவம்என்று உணரின்-இந்தத்தேசத்தார் பண்ணின தவமென்று யோசித்தால், அன்று-அதுவல்ல, என்-எனது, நலம்செய்வினை உண்டு எனினும் அன்று-நல்வினையாயிருக்குமென்று யோசித்தாலும் அதுவுமல்ல, (மற்றென்னெனின்) முந்து-முற்காலத்தில், என்குலம்-என்வமிசத்தார், செய்-செய்த, தவம் என்று - தவமேயென்று, இனிதுகூற-இனிதாகச்சொல்ல, முனிறுகூறும் - (கேட்டவிசுவாமித்திர) முனிவன் சொல்லுவான்—எ-று. (கூ)

என்தாதை மூதாதை முதலியோர்செய்த தவப்பயன் காரணமாவதன்றி என்னிலத்திலுள்ளார்செய்த தவப்பயனெனின், அதனில் அர்த்தபாகம் எனக்குரியதாதலால் அது அன்று, யானொருவன்செய்த தவப்பயனெனிலது எவ்வளவெனத் தன்னை இழித்துக்கூறினானாயிற்று.

வேறு.

323. என்னனையமுனிவரரு மிமையவரு மிடையூறொன் றுடையராஞல்
பன்னகமுநகுவெள்ளிப் பணிவரையும் பாற்கடலும் பதுமபீடத்
தன்னகருங்கற்பகநாட் டணிநகரு மணிமா டயோத்தியென்னும்
பொன்னகருமல்லாது புகலுண்டோ விகல்கடந்த புலவுவேலோய்.

(இ-ள்.) இகல்கடந்த - பகைவரைச்செயித்த, புலவுவேலோய் - மாமிசந்தங்கிய வேலாயுதத்தையுடைய சக்கரவர்த்தியே, என் அனையமுனிவரரும்-என்னையொத்த முனிசிரேஷ்டரும், இமையவரும்-தேவர்களும், இடையூறு ஒன்றுஉடையர் ஆனல்-துன்பமொன்றையடைவராயின், பன்னகமும்நகு - பலமலைகளையும் (அவமதித்துச்) சிரிக்கின்ற, பனி-குளிர்ச பொருந்திய, வெள்ளிவரையும்-வெள்ளிமலை (யாகிய கைலாயமும்,) பால்கடலும்-திருப்பாற்கடலும், பதுமபீடத் தன்நகரும்-தாமரை மலரையாசநமாகவுடையபிரமனது உலகமும், கற்பகநாட்டு அணிநகரும் - கற்பகமரங்களையுடைய ஸ்வர்க்கலோகத்திலுள்ள அழகான (அமராவதி) பட்டணமும், மணிமாடம்-ரத்நகசிதமான மாளிகைகள் சூழ்ந்த, அயோத்தி என்னும்-அயோத்தியென்று சிறப்பித்துச்சொல்லப்படுகிற, பொன்நகரம் - பொன்மயமான இந்தநகரமும், அல்லாது-(புகலிடங்களாவன) அன்றியும், புகல் உண்டோ-(வேறு) புகலிடமுளதோ(இல்லை.)

முனிவர்களுக்கும் தேவர்களுக்கும் ஒருதுன்பமுண்டாயின் அதைநீக்கிக்கொள்வதற்குக் கைலாயமுதலிய இடங்களில்போய்த் தங்குறைகளைச் சொல்லிக்கொள்வார்களென்பது கருத்து.

பன்னகமெனத்தொடங்கி மணிமாடயோத்தி யென்னும் பொன்னகரெனமுடித்தமையாற், கைலாயமுதலிய இடங்களிற்சென்றும் நீங்காத துன்பம் இந்நகரை யடைந்தால் நீங்குமென்றவாறாயிற்று - பல்நகமும் நகு என்பதற்குப் பலமலைகளிலும் நன்கு விளங்குகின்ற எனப்பொருள் கூறினும் பொருந்தும்.

321. இன்றளிர்க்கற்பகநறுந்தே னிடைதுளிக்கு நிழலிருக்கை யிழந்துபோதுந்
நின்றளிர்க்குந் தனிக்குடைக்கீழொதுங்கிக்குறையிரந்துநிற்பநோக்கிக்
குன்றளிக்குங்குலமணித்தோட்சம்பரனைக்குலத்தோடுந்தொலைத்துநீகொண்
டன்றளித்தவரசன்றே புரந்தரனின் றாள்கின்ற தரசவென்றான்

(இ-ள்.) இன்தளிர் - இனிய தளிர்களையுடைய, கற்பகம் - கற்பகமரங்கள், நறுந்தேன் - பரிமளமுள்ளதேனை, இடை - இடையில், துளிக்கும் - துளிக்கின்ற, நிழல் - நிழலில், இருக்கை - அரசுவீற்றிருத்தலை. இழந்துபோந்து - இழந்துவந்து, நின் - உனது, தளிர்க்கும் - செழிக்கின்ற, தனி-ஒப்பற்ற, குடைக்கீழொதுங்கி- குடைநிழலிற்சேர்ந்து, குறையிரந்துநிற்ப - குறைகூறி யாசித்துநிற்க, நோக்கி - பார்த்து, குன்று அளிக்கும் - மலைகளின் அழகைகொடுக்கும், குலம் - மேலான, மணி - அழகையுடைய, தோள் - புயங்களையுடைய, சம்பரனை - சம்பராசுரனை, குலத்தோடும் தொலைத்து - அவனது குலத்தாருடன் நாசம்பண்ணி, நீ கொண்டு - நீ உன்வசப்படுத்திக்கொண்டு, அன்று - அக்காலத்தில், அளித்த - நீதயையினால் கொடுத்த, அரசு அன்றே - அரசாட்சியல்லவோ, புரந்தரன் - இந்திரன், இன்று ஆள்கின்றது - இக்காலத்தும் ஆண்டுவருவது, அரச - சக்ரவர்த்தியே, என்றான் - என்று விசுவாமித்திரமுனிவன் சொன்னான்—எ-று. (அ)

325. உரைசெய்யுமளவினவன் முகநோக்கி யுள்ளத்தி னொருவராலும்
கரைசெய்யவரியதொரு பேருவகைக் கடல்பெருகக் கரங்கள்கூப்பி
அரைசெய்தியிருந்தபயனெய்தினமற்றினிச்செய்வ தருளுகென்று
முறைசெய்துகடைத்தலையான் முன்மொழியப்பின்மொழியு முனிவனாங்கே.

(இ-ள்.) உரைசெய்யுமளவின்-(முனிவன் இவ்வாறு) சொல்லுமளவில், அவன் முகம்நோக்கி - அவன் முகத்தைப்பார்த்து, உள்ளத்தின் - தன்மனத்தினிடத்து, கரைசெய்ய அரியது - ஒருவராலுங் கரைகோலித் தடுத்தற் கரியதாகிய, ஒரு - ஒப்பற்ற, பேருவகை - பெருமகிழ்ச்சியாகிய, கடல் - சமுத்திரமானது, பெருக - பொங்க, கரங்கள்கூப்பி - கைகளைக்குவித்து, அரைசெய்தி இருந்தபயன் - அரசாட்சியை யடைந்திருந்ததற்குப் பிரயோசநம், எய்தினன் - இன்றடைந்தேன், இனிசெய்வது - இனி அடியேன் செய்யவேண்டிய காரியத்தை, அருளுக என்று- அருள்செய்வாயென்று, முரைசெய்தி - பேரிகைகள் முழங்கிக்கொண்டிருக்கிற, கடைத்தலையான் - தலைவாயிலை யுடையவனாகிய சக்கரவர்த்தி, முன்மொழிய - முன்னேசொல்ல, ஆங்கு - அவ்விடத்து (அதைக்கேட்ட) முனிவன் - விசுவாமித்திர முனிவன், பின்மொழியும் - பின்னே சொல்லுவான்—எ-று- (௯)

326. தருவனத்துள் யானியற்றுந் தவவேள்விக்கிடையூறாத் தவஞ்செய்வோர்கள்
வெருவரச்சென்றடைகாம வெகுளியென நிருதரிடை விலக்காவண்ணம்
செருமுகத்துக்காத்தியென நின்சிறுவர் நால்வரினுங் கரியசெம்மல்
ஒருவனைத்தந்திடுதியென வுயிரிரங்குங்கொடுங்கூற்றி னுளையச் சொன்னான்.

(இ-ள்!) தரு - மரங்களடர்ந்த, வனத்துள் - காட்டில், யான் இயற்றும் - நான் செய்கிற, தவவேள்விக்கு - தவத்துக்கும் யாகத்துக்கும், இடையூறு ஆ - இடையூறாக (வந்து), நிருதர் - ராக்ஷஸர்கள், தவஞ்செய்வோர்கள் வெருவர - தவஞ்செய்வோர்கள் அஞ்சும்படி, சென்று அடை - அவர்களிடத்துப்போய் பொருந்துகின்ற, காமவெகுளிஎன - காமக்குரோதங்கள்போல, இடைவிலக்காவண்ணம் - நடுவில் தடைசெய்யாதவகை, செருமுகத்து - யுத்தமுகத்திற் சென்று நின்று, காத்திஎன - காக்கக்கடவாயென்று, நின்சிறுவர் நால்வரினும் - உன்புத்திரர் நால்

வர்களுக்குள்ளும், கரியசெம்மல் ஒருவனை-கரியநிறமுள்ள ஒப்பற்ற ஸ்ரீராமனை, தந்திடு என-தருவாயென்று, உயிர் இரக்கும் - ப்ராணனை யாசிக்கின்ற, கொடுகூற்றின்-இரக்கமில்லாத யமனைப்போல, உளைய-மனம் வருந்தும்படி, சொன்னான் - (விசுவாமித்திர முனிவன்) சொல்லினான்—எ-று. (கῦ)

ஸ்ரீராமனை முனிவன்கேட்டது, சக்கரவர்த்திக்கு, யமன்வந்து உன்னுயிரைக் கொடுவென்று கேட்டதுபோலிருந்ததென்பது கருத்து.

327. எண்ணிலாவருந்தவத்தோ னியம்பியசொன்மருமத்தி னெறிவேல்பாய்ந்த
புண்ணிலாம் பெரும்புழையிற் கனனுழைந்தாலெனச் செவியிற்புகுதலோடும்
உண்ணிலாவியதுயரம் பிடித்துந்தவாருயிர்நின் றூசலாடக்
கண்ணிலான்பெற்றிழந்தா னெனவுழந்தான் கடுந்துயரங் காலவேலான்.

(இ-ள்.) எண் இலா - அளவில்லாத, அருதவத்தோன் - அரிய தவத்தையுடைய விசுவாமித்திரமுனிவன், இயம்பியசொல்-சொன்னவார்த்தையானது, மருமத்தின்-மார்பில், எறிவேல்பாய்ந்த-பகைவனெறிந்தவேல்பாய்ந்ததனாலுண்டாகிய, புண்ணில் ஆம்-புண்ணிலுண்டாகிய, பெருபுழையில் - பெரியதுவாரத்தில், கனல்நுழைந்தால் என - நெருப்புப்புகுந்தாற்போல, செவியில்புகுதலோடும் - தன்செவிகளில் நுழைதலோடும், காலவேலான் - பகைவருக்குக்காலனையொத்த வேலாயுதத்தையுடைய சக்கரவர்த்தி, உள்நிலாவியதுயரம்-உள்ளத்திலுண்டாகிய துன்பமானது, பிடித்துஉந்த-பிடித்துத்தள்ளுதலால்-ஆர்உயிர்நின்று ஊசலாட - அரியஉயிரானது போவதும்வருவதுமாயிருக்கையில், கண்இலான் - பிறவிக்குருடன், பெற்று - (கண்ணைத்தெய்விகமாக) பெற்று, இழந்தான்என-மறுபடியும் இழந்தவன்போல, கடுதுயரம் உழந்தான்-கொடியதுன்பத்தை யநுபவிப்பானாயினான்—எ-று. (கக)

எண்நிலா எனப்பிரித்து, ஒருவரதுமனத்திலுரார்ய்ச்சியில் நில்லாத எனவும், எண்நிலாவு எனவைத்து, அறிஞரது எண்ணத்தின்கண்ணிலைத்த எனவும் பொருள் கூறலாம்.

328. தொடையூற்றுந்தேன்றுளிக்கு நறுந்தாரா னொருவண்ணந் துயரநீங்கிப்
படையூற்றமிலன்சிறியனிவன் பெரியோய்பணியிது வேற்பனிநீர்க்கங்கை
புடையூற்றுஞ்சடையானு நான்முகனும்புரந்தரனும் புகுந்துசெய்யும்
இடையூற்றுக்கிடையூறு யான்காப்பேன் பெருவேள்விக்கெழுகவென்றான்.

(இ-ள்.) தொடைஊற்றும்-இடையறுதொழுகுகின்ற, தேன்துளிக்கும்-தேனைத்துளிக்கின்ற, நறுதாரான்-பரிமளமானமலர்மாலையையணிந்த சக்கரவர்த்தி, ஒருவண்ணம்-ஒருவாறு, துயரம்நீங்கி-துன்பம்நீங்கி, (முனிவனைப்பார்த்து) பெரியோய்-தவத்தாற்பெரியோனே, இவன்-இந்தராமன், படைஊற்றம் இலன் - படைத்தொழிலில் மனம்பதிதல் இல்லாதவன், (அன்றியும்) சிறியன் - இளையவன், (ஆதலால் அவன் வேண்டாம்) இதுபணிஎல் - இதுகட்டளையாயின், பனி-குளிர்ச்சியாகிய, நீர் - நீரையுடைய, கங்கை-கங்காநதியானது, புடைஊற்றும்-ஒருபக்கத்தில்பாயவிடுத்த, சடையானும்-சடையையுடையசிவனும், புரந்தரனும்-இந்திரனும், நான்முகனும்-பிரமதேவனும், புகுந்துசெய்யும்-வந்துசெய்கிற, இடையூற்றுக்கு இடையூறாய்-இடையூற்றுக்கு இடையூறுண்டாகும்படி, யான்காப்பென் - நான்காக்கிறேன், பெருவேள்விக்கு-பெரியயாகத்தைச் செய்வதற்கு, எழுக என்றான்-எழுந்துவாராயென்றுசொன்னான்—எ-று. (கஉ)

329. என்றனனென்றலு முனிவோடெழுந்தனன் மண்படைத்தமுனியிறுதிக்காலம்
அன்றெனவாமெனவிமையோ ரயிர்த்தனர்மேல் வெயில்கரந்ததங்குமிங்கும்
நின்றனவுந்திரிந்தனமீ நிவந்தகொழுங் கடைப்புருவ நெற்றிமுற்றச் [லாம்.
சென்றனவந்தனநகையுஞ் செவந்தனகண்ணிருண்டனபோய்த்திசைகளெல்

(இ-ள்.) என்றனன் - (என்றிவ்வாறு சக்கரவர்த்தி), (சொன்னான்) என்றலும்-என்றுசொல்லுதலும், (கேட்டவிசுவாமித்திரமுனிவன்) முனிவோடு எழுந்தனன்-கோவத்துடனெழுந்திருந்தான், (அதைப்பார்த்து) இமையோர் - தேவர்கள், மண்படைத்தமுனி இறுதிக்காலம்-பிரமதேவனது முடிவுக்காலம், அன்றுஎன ஆம்என-இது அன்று ஆம்என்று, அயிர்த்தனர் - சந்தேகித்தார்கள், மேல் - ஆகாயத்திலுள்ள, வெயில்-சூரியன், கரந்தது-மறைந்துபோயினது, அங்குஇங்கும்-அவ்வுலகத்தும் இவ்வுலகத்தும், நின்றனவும் - அசரங்களும், திரிந்தன-சுழன்றன, மீநிவந்த-மேலேறிய, கொழு-செழுமையாகிய, கடைப்புருவம்-புருவக்கடைகள், நெற்றிமுற்றச்சென்றன-நெற்றிமுழுதும்வியாபித்தன, நகையும்வந்தன-சிரிப்புமுண்டாயின, கண்செவந்தன-கண்கள்செவந்தன, திசைகள்எல்லாம்-திக்குகளெல்லாம், இருண்டுபோயின-இரண்டுபோய்விட்டன—எ-று. (கங)

கோவத்தீயிலுண்டான புகையாலிருண்டனவெனக்கொள்க.

வேறு.

330. கறுத்த மாமுனி கருத்தை யுன்னிநீ
பொறுத்தி யென்றவற் புகன்று நின்மகற்
குறுத்த லாகலா வுறுதி யெய்துநாள்
மறுத்தி யோவென வசிட்டன் கூறினன்.

(இ-ள்.) (இவ்வாறு விசுவாமித்திரமுனிவன் கோபங்கொண்டபோது) வசிட்டன்-வசிட்டமுனிவன், கறுத்த-கோவங்கொண்ட, மாமுனி - பெருமையையுடைய விசுவாமித்திரமுனிவனது, கருத்தை உன்னி-கருத்தையறிந்து, நீபொறுத்திஎன்று-நீபொறுப்பாயென்று, அவன்புகன்று - அவனுக்குச்சொல்லிவிட்டு, (சக்கரவர்த்தியை நோக்கி) நின்மகற்கு - உன்புத்திரனுக்கு, உறுத்தல் ஆகலா - பிறராலடைவிக்கக்கூடாத, உறுதி-உறுதிப்பொருள்கள், எய்தும்நாள் - சித்திக்கிறகாலத்தில், மறுத்தியோஎன-தடுக்கின்றாயோவென்று, கூறினன்-சொன்னான்—எ-று. (கச)

331. பெய்யு மாரியாற் பெருகு வெள்ளம்போய்
மொய்கொள் வேலைவாய் முடுகு மாறுபோல்
ஐய நின்மகற் களவில் விஞ்சைவந்
தெய்து காலமின் றெதிர்ந்த தென்னவே.

(இ-ள்.) பெய்யுமாரியால்-பெய்கின்றமழையினால், பெருகு-பெருகாநின்ற, வெள்ளம்போய்-வெள்ளமானதுசென்று, மொய்கொள்-எல்லாநதிகள்பாயினும் தன்னிலடக்கிகொள்ளவல்ல, வேலைவாய்-கடலினிடத்து, முடுகுமாறுபோல்-விரைந்துசெல்லும்விதம்போல, ஐய-ஐயனே, நின்மகற்கு - உன்புத்திரனுக்கு, அளவு இல்-அளவில்லாத, விஞ்சை - வித்தைகள், வந்துஎய்துகாலம் - வந்துசேருங்காலம், இன்றுஎதிர்ந்தது-இன்றுநேரிட்டது, என்ன-என்றுசொல்ல—எ-று. (கரு)

மொய்கொள் என்பதற்கு அலைகளின் நெருக்கத்தைக்கொண்ட எனினும் பொருந்தும். ஞானனந்தவுருவனாதலின் ஸ்ரீராமபிரானை மொய்கொள் வேலையாகவும் முனிவன் கற்பிக்கிற மந்திரசாலங்களை வெள்ளங்களாகவும் கூறினார்.

332. குருவின் வாசகங் கொண்டு கொற்றவன்
திருவின் கேள்வனைக் கொணர்மின் சென்றென
வருக வென்றன னென்ற லோடும்வந்
தருகு சார்ந்தன னறிவி னும்பரான்.

(இ-ள்.) குருவின்வாசகம்கொண்டு-குருவாகிய வசிட்டமுனியினது வாக்கியத்தை ஏற்றுக்கொண்டு, கொற்றவன் - சக்கரவர்த்தி, (தூதர்களைநோக்கி) சென்று நீங்கள் போய், திருவின்கேள்வனை - திருமகள்கணவனாகிய ஸ்ரீராமனை, கொணர்மின் என- அழைத்துக்கொண்டு வாருங்கோளென்று கட்டளையிட்டதனால், (அவர்கள் அவ் வாறேசென்று) வருகஎன்றனன் - (சக்ரவர்த்தி) நின்னை வரச்சொன்னான், என்ற லோடும்-என்று சொல்லுதலும், அறிவின் உம்பரான்-வேதமுதலியவற்றின் அறிவுக் கும் மேலிருப்பவனாகிய ஸ்ரீராமபிரான், வந்து - அவர்களோடுவந்து, அருகுசார்ந்த னன்-தந்தையினருகிலடைந்தான்—எ-று. (கசு)

அறிவினும்பரான் அருகு சார்ந்தன னென்பது; மக்கட்பிறப்புக்குத் தகுதியாக ஒழுகுகின்றா னென்பதை உணர்த்தியது.

333. வந்த நம்பியைத் தம்பிதன்னொடு
முந்தை நான்மறை முனிக்குக் காட்டிநற்
றந்தை நீதனித் தாயு நீயிவர்க்
கெந்தை தந்தன னியைந்த செய்கென்றான்.

(இ-ள்.) வந்தநம்பியை-வந்தஸ்ரீராமபிரானை, தம்பி தன்னொடு-இளைய பெருமா னுடன், முந்தை-பழமையாகிய, நான்மறை-நான்குவேதங்களையுமுணர்ந்த,முனிக்கு- விசுவாமித்திரமுனிவனுக்கு, காட்டி - காண்பித்து, இவர்க்கு - இவர்களுக்கு, நல் தந்தைநீ - நல்தந்தையும்நீயே, தனிதாயும்நீ - ஒப்பற்ற தாயும்நீயே, எந்தை-எமது தந் தையே, தந்தனன் - (தேவரீர் கேட்டபிரகாரம் இவர்களையுமக்குக்) கொடுத்தேன், இயைந்த-(இவர்களைக்கொண்டு உமக்கு) வேண்டியகாரியங்களை, செய்க என்றான்- செய்துகொள்ளக்கடவீர் என்று (தசரதமகாராஜன்) சொன்னான்—எ-று. (கஎ)

334. கொடுத்த மைந்தரைக் கொண்டு சிந்தைமுந்
தெடுத்த சீற்றம்விட் டினிது வாழ்த்திமேல்
அடுத்த வேள்விபோய் முடித்து நாமென
நடத்தன் மேயினா னவைக்க ணீங்கினான்

(இ-ள்.) (இப்படி தசரதமஹாராஜன் சொன்னவளவில்) நவைக்கண் நீக்கி னான்-முக்குற்றங்களினின்றும் நீங்கின (விசுவாமித்திர முனிவன்,) கொடுத்த - (சக் கரவர்த்தியால்) கொடுக்கப்பட்ட, மைந்தரை - புத்திரர்களை, கொண்டு-பெற்றுக் கொண்டு, முந்து-(கொடுப்பதற்கு) முன்பு, எடுத்த-மனதில் உயர்ந்த, சீற்றம்விட்டு- கோவத்தைவிட்டு, இனிதுவாழ்த்தி - நன்றாக ஆசீர்வதித்து, மேல் - அதின்பிறகு, அடுத்த வேள்வி-நமக்குத்தகுந்த காரியமாகிய யாகத்தை, நாம்போய் முடித்துஎன- நாம்போய் முடிப்போமென்று, நடத்தல் மேயினான்-செல்லுதலைப்பொருந்தினான்.

முக்குற்றங்கள் - காம வெகுளி மயக்கங்கள். நவைகண் நீங்கினான் என்பது முன் அரசகுலத்தவனென்பதைக் குறிப்பிக்கின்றது. ஏழாவதை ஐந்தாவதாகத் திரிக்க.

335. வெள்றி வாள்புடை விசித்துமெய்ம்மைபோல்
என்றுந் தேய்வுறுத் தூணி யார்த்திரு
குன்றம் போன்றுயர் தோளிர் கொற்றவில்
ஒன்று தாங்கினு னுலகந் தாங்கினுன்.

(இ-ள்.) (அப்பொழுது) உலகம் தாங்கினுன்-சகல அண்டங்களையும் தன்வயிற்றில் ஒருபுடையே தாங்கவல்ல ஸ்ரீராமபிரான், வென்றிவாள்-வெற்றிவாளை, புடை விசித்து - இடப்புறத்திற்கட்டி, மெய்ம்மைபோல் - சத்தியத்தைப்போல், என்றும் தேய்வுறு-எக்காலத்துங் குறைபடாத, தூணி-அம்பறாத்தூணியை, ஆர்த்து-(இடப்புறத் தோட்பக்கத்திற்) கட்டி, இருகுன்றம்போன்று - இரண்டுமலைகள் போன்று, உயர்-உயர்ந்த, தோளில்-புயத்தில், கொற்றம்-வெற்றியைத்தருகின்ற, வில் ஒன்று-ஒரு வில்லையும், தாங்கினுன்-தாங்கிச் சென்றுன்—எ-று. (கக)

பிறரால் சுமக்க வல்லதன்றென்பார்; உலகந்தாங்கினுன் வில்லொன்று தாங்கினு னென்றுர்.

336. அன்ன தம்பியுந் தானு மையனும்
மன்ன னின்னுயிர் வழிக்கொண் டாலெனச்
சொன்ன மாதவற் றொடர்ந்த சாயைபோல்
பொன்னின் மாநகர்ப் புரிசை நீங்கினுன்.

(இ-ள்.) அன்ன - அப்படிப்பட்ட, தம்பியும் தானும்-தம்பியுந்தானுமாக, ஐயன் ஆம்மன்னன்-தந்தையாகிய சக்ரவர்த்தியின், இன் உயிர்-இனிய வுயிரானது, வழிக் கொண்டால்என-வழிக்கொண்டுநடந்தாற்போல, சொன்ன - மேற்சொல்லப்பட்ட, மாதவன்-பெருந்தவத்தினனுகிய விசுவாமித்திரமுனிவனை, தொடர்ந்த-தொடர்ந்து போகின்ற, சாயைபோல் - நிழலைப்போல, பொன்னின்மாநகர்-பொன்னினுற் செய்யப்பட்ட அந்த பெருமைபொருந்திய அயோத்தியா நகரத்தினது, புரிசை - மதிலை, நீங்கினுன்-கடந்தான்—எ-று. (உ0)

அன்னஎன்னும் குறிப்புப்பெயரெச்சம், வென்றிவாள் புடைவிசித்து, தூணி யார்த்து, கொற்றவில்லொன்று தாங்கிய எனப் பொருள்பட்டு நின்றது. தம்பியும் தானும் நீங்கினுனென்பது, தலைமைப்பொருள். ஸ்ரீராமபிரா னுதலால் தம்பியும் தானும் நீங்கினுனெனச் சிறப்பினுல் ஒருமுடிபேற்றபால் வழுவமைதி.

337. வரங்கண் மாசறத் தவஞ்செய் தோர்கள்வாழ்
புரங்க ணேரிலா நகரநீங்கிப்போய்
அரங்கி னுடுவார் சிலம்பி னன்னநின்
றிரங்கு வார்புனற் சரயு வெய்தினுர்

(இ-ள்.) (இவ்வாறு சென்ற ஸ்ரீராமபிரான் முதலாயினேர்) வரங்கள்மாசுஅற-பெறும்வரங்கள் குற்றமறும்படி, தவம்செய்தோர்கள்-தவம்செய்ததேவர்கள், வாழ்-வாழ்கின்ற, புறங்கள்-பதவிகள், நேர்இலா - ஒப்புதலில்லாத; நகரம் - அயோத்திமா நகரத்தை, நீங்கிபோய் - நீக்கிக்சென்று, அரங்கின் ஆடுவார் - நாட்டியசாலையில் நடிக்கின்ற கணிகையரணிந்திருக்கிற சிலம்பின் - சிலம்போசைபோல, அன்னம் நின்று இரங்கு - அன்னங்கள் நின்றொலிக்கின்ற, வார்புனல் - ஒழுகுகின்ற நீரையுடைய, சரயு-சரயு நதியை, எய்தினுர்-அடைந்தார்கள்—எ-று,

338. கரும்பு கால்பொரக் கமுகின் வார்ந்ததேன்
வரம்பை மீதிடு மருத வேலிவாய்
அரும்பு கொங்கையா ரம்மெலோதிபோற்
சுரும்பு வாழ்வதோர் சோலை நண்ணினர்.

(இ-ள்.) (அதின்பிறகு) கரும்பு - கரும்புகள், கால் - காற்றினால், பொர - மோதப்படுதலால், கமுகின் - கமுகமரங்களினின்றும், வார்ந்த - ஒழுகிய, தேன் - தேனானது, வரம்புமீதிடும் - வரம்புகளைக்கடந்து பாய்கின்ற, மருதவேலிவாய் - மருதநிலத்தில், அரும்புகொங்கையார் - அரும்புகின்ற ஸ்தனங்களையுடைய மங்கையர்களுடைய, அம்மெல் ஓதிபோல் - அழகிய மெல்லிய கூந்தலைப்போல்கின்ற, சுரும்பு - வண்டுகள், வாழ்வது - வாழ்தற்கிடமாகிய, ஓர்சோலை - ஒரு சோலையை, நண்ணினார் - சார்ந்தார்கள்—எ-று. (உஉ)

339. தாழு மாமழைதழுவு நெற்றியால்
சூழு யானைபோ றோன்று மால்வரைப்
பாழி மாமுகட் டுச்சி பச்சைமா
ஏழு மேறப்போ யாறு மேறினார்.

(இ-ள்.) தாழும் - வந்துதங்குகின்ற, மாமழை - பெரியமேகங்கள், தழுவும் - பொருந்திய, நெற்றியால் - மேலிடத்தையுடைமையால், சூழியானைபோல் - முகபடாத்தையணிந்த யானையைப்போல, தோன்றும் - காணப்படுகிற, மால்வரை - பெரிய அஸ்தமனகிரியின், பாழி - பலமுள்ள, மா - பெரிய, முகடுஉச்சி - சிகரத்துச்சியில், பச்சை - பச்சைநிறமுள்ள, மாஏழும்-(சூரியனுடைய) குதிரைகளேழும், ஏற - ஏறுகிற்க, போய்-(இவர்களும்) போய், யாறும்ஏறினார் - அந்தச்சரயுநதியின் அக்கரையிலேறினார்கள்—எ-று. (உ௩)

340. தேவு மாதவற் றொழுது தேவர்தம்
நாவு ளாகுதி நயக்கும் வேள்விவாய்
தாவு மாபுகை தழுவு சோலைகண்
டியாவதீதென்று னெவர்க்குமேனின்றான்.

(இ-ள்.) (அவ்வாறு கரையேறினவுடன்) எவர்க்கும் மேல்நின்றான் - தேவர்கள் அறிவுக்கும் எட்டாமல் நின்றவனாகிய ஸ்ரீராமபிரான், தேவர் - தேவர்கள், தம்நாவுள் - தமது நாவினிடத்து, ஆகுதிநயக்கும் - ஆகுதியை விரும்புதற்குரிய, வேள்விவாய் - யாகத்தில்நின்று முண்டாகி, தாவும் - மேலெழுகின்ற, மாபுகை - பெரியபுகையானது, தழுவு - சூழ்ந்த, சோலைகண்டு - ஒரு சோலையைப் பார்த்து, தேவுமாதவற்றொழுது - தெய்வத்தன்மையுள்ள பெருந்தவத்தினனாகிய விசுவாமித்திரமுனிவனைவணங்கி, ஈதுயாவது என்றான் - இந்தச்சோலையாதென்று வினவினான்—எ-று. (உச)

எ-வது கைப்படைப்படலம் முற்றிற்று.

# அ-வது தாடகைவதைப் படலம்.



தாடகையை வதைசெய்ததைக் குறித்துச் சொல்லிய படலம்

341. திங்கண்மே வுஞ்சடைத் தேவன்மேன் மாரவேள்
இங்குநின் றெய்யவும் மெரிதரும் நுதல்விழிப்
பொங்கு கோபஞ்சுடப் பூளைவீ யன்னதன்
அங்கம்வெந் தன்றுதொட் டனங்கனே யாயினன்.

(இ-ள்.) (அதற்குமுனிவன் சொல்லுகிறான்) திங்கள்மேவும் - சந்திரகண்டம் தங்கிய, சடை - சடையையுடைய, தேவன்மேல் - தேவனாகிய சிவன்மேல், மாரவேள் - மன்மதனானவன், இங்குநின்று - இவ்விடத்திலிருந்து, எய்யவும் - புஷ்ப பாணங்களை யேவுதலும், எரிதரும் - நெருப்பைச்சொரிகின்ற, நுதல்விழி - நெற்றிக்கண்ணி லுண்டான, பொங்கு - மிகுந்த, கோபம் - கோபாக்கினியானது, சுட - சுட்டெரிக்கியதனால், பூளைவீ அன்ன - பூளைப்பூப்போன்ற, தன் அங்கம் வெந்து - தன் சரீரம் வெந்துபோதலால், அன்றுதொட்டு - அன்றுதொடங்கி, அனங்கனே ஆயினன் - சரீரமில்லாதவனேயானான்—எ-று. (க)

மாரவேள் இருபெயரொட்டுப் பண்புத்தொகை நிலைத்தொடர்.

342. வாரணத் துரிவையான் மதனனைச் சினவுநாள்
ஈரமற் றங்கமிங் குகுதலா லிவணெலாம்
ஆரணத் துறையுளா யங்கநா டிதுவுமக்
காரணக் குறியுடைக் காமனாச் சிரமமே

(இ-ள்,) ஆரணத்துறை உளாய் - வேதமாகிய இருப்பிடத்தை யுடையானே, வாரணத்து உரிவையான் - யானைத்தோலையுடைய சிவன், மதனனை சினவும்நாள் - மன்மதனைக் கோவித்தநாளில், அங்கம் - அவனது சரீரமானது, ஈரம்அற்று - பசையற்று, இங்கு உகுதலால் - இவ்விடத்துச் சிந்துதலால், இவண் எலாம் - இவ்விடமெல்லாம், அங்கநாடு - அங்கநாடு என்று சொல்லப்படும், இதுவும் - இந்தச்சோலையும், அ காரணக்குறி உடை - அந்தக்காரணப்பெயரையுடைய, காமனாச்சிரமம் - காமாச்சிரமமென்று சொல்லப்படும்—எ-று. (உ)

ஆரணத்துறையுளாய், என்பதற்கு, வேதஒழுக்கத்தை யுடையவனே எனினும் பொருந்தும்.

343. பற்றவா வேரொடும் பசையறப் பிறவிபோய்
முற்றவா லுணர்வுமேன் முடுகினா ரறிவுசென்
றுற்றவா னவனிருந் தியோகுசெய் தனனெனிற்
சொற்றவா மளவதோ மற்றிதன் றூய்மையே.

(இ-ள்.) பற்று - இருவகைப்பற்றும், அவா - ஆசையும், வேரொடும் பசை அற - மூலத்தோடு பசையற்றுப்போகவும், பிறவிபோய்முற்ற - பிறவியற்று முடியவும், வால்உணர்வு - மெய்யறிவு, மேல்முடுகினர் - மேலிட்டவர்களாகிய ஞானிகளது, அறிவு - உணர்வில், சென்று உற்ற - சென்று விளங்குகிற, வானவன் - பரமசிவன், இருந்து - சுகாசநத்திலிருந்து, யோகுசெய்தனன் எனின் - யோகஞ்செய்தா

னென்றால், இதன் தூய்மை - இந்த ஆச்சிரமத்தின் தூயதன்மை, சொற்ற அளவதோ - ஒருவரால் சொல்லப்பட்ட அளவினையுடையதோ—எ-று. (ஙு)

ஆம் அசை. ஒ - எதிர்மறைப்பொருளில் வந்தது.

344. என்றவந் தணனியம்ப லும்வியந் தவ்வயிற்
சென்றுவந் தெதிரெழுஞ் செந்நெறிச செல்வரோ
டன்றுறைந் தலர்கதிர்ப் பரிதிமண் டிலமகன்
குன்றினின் றிவரவோர் சுடுசுரங் குறுகினார்,

(இ-ள்.) என்று அ அந்தணன் இயம்பலும் - என்று அந்த விசுவாமித்திர முனிவன் சொல்லுதலும், வியந்து - ஆச்சரியமுற்று, அவ்வயின்சென்று - அந்த இடத்திற்சென்று, எதிர் உவந்து எழும்-எதிற்கொண்டு மகிழ்ந்துவருகின்ற, செந்நெறிச் செல்வரோடு - தவவொழுக்கமாகிய செல்வத்தையுடைய முனிவர்களுடன், அன்று உறைந்து - அன்று தங்கி, (மறுநாள்) அலர் - பரந்த, கதிர் - கிரணமிகுதியையுடைய, பரிதிமண்டிலம் - சூரியனாகிய மண்டலத்துக்குரிய ஆடவன், அகல்-விசாலமாகிய, குன்றின்நின்று - உதயகிரியிலிருந்து, இவர - மேலேறுகையில், ஓர் - ஒரு, சுடு - வெதும்புகின்ற, சுரம் - பாலைநிலத்தை, குறுகினார் - அடைந்தார்கள்—எ-று. (ச)

அன்று உறைந்து என்றமையால் மறுநாளென வருவித்துரைக்கப்பட்டது. கதிர்ப்பரிதி என்புழி கதிர்சாதியடை அன்று; பிறிதினியைபு நீக்கிய விசேடணம். குன்றினின்று என்புழி நின்று என்னும் ஐந்தனுருபு நீக்கப் பொருளில்வந்தது. ஓர் என்பதற்கு ஒப்பற்றதெனினும் அமையும். அன்றி இவ்வாறுயசுடுசுரம் எவ்விடத்துள்ளது என்று ஆராய்தற்குரிய எனினும் பொருந்தும்.

இதுமுதல் ௰௨-திருவிருத்தம் பாலைநிலவர்ணனை

345. பருதிவா னவனிலம் பசையறப் பருகுவான்
விருதுமேற் கொண்டுலாம் வேனிலே யல்லதோர்
இருதுவே றின்மையா லெரிசுடர்க் கடவுளும்
கருதின்வே முள்ளமுங் காணில்வேம் நயனமும்.

(இ-ள்.) (அந்நிலத்தில்) பரிதிவானவன் - சூரியதேவன், நிலம் - நிலத்திலுள்ள, பசைஅற - ஈரம் அற்றுப்போக, பருகுவான்-பருக, விருதுமேற்கொண்டு - வெற்றிச்சின்னத்தை உயரப்பிடித்து, உலாம் - சஞ்சரிக்கின்ற, வேனிலே அல்லது - வேனிற்பருவமேயன்றி, வேறுஓர் இருது இன்மையால் - வேறொருபருவம் அந்நிலத்தில் இல்லாமையால், எரி -(தன்னையடையும் பொருள்களெல்லாம்) எரிகின்ற, சுடர்க்கடவுளும் - அக்கினிதேவனும், கருதின் - (அந்தப்பாலநிலத்தை) நினைப்பானாயின், உள்ளமும் வேம் - அவனதுநெஞ்சும் வெந்துபோம், காணில் - பார்ப்பானாயின், நயனமும்வேம் - கண்களும் வெந்துபோம்—எ-று. (ரு)

பசைஅறஎன்பதில் அற என்பது முற்றும் நீங்க என்னும் பொருளது. எரிசுடர்க் கடவுளும் என்னும் உம்மை உயர்வுசிறப்பு. நிலம் பசையறப்படுதல். "நானிலம்வாய்க்கொண்டு நன்னீரறமென்றுகோதுகொண்டு - வேனிலஞ்செல்வன் சுவைத்துமிழ்பாலை" என்பதனானும் உணர்க.

346. படியின்மேல் வெம்மையைப் பகரினும் பகருநா
முடியவே முடியமு டிருளும்வான் முகடும்வேம்

விடியுமேல் வெயிலும்வே மழைம்வே மின்னிேேனா
டிடியும்வே மென்னில்வே றியாவைவே வாதவே.

(இ-ள்.) படியின்மேல் - அப்பாலை நிலத்திலுள்ள, வெண்மையை - வெப்பத்தைக்குறித்து, பகரினும் - சொன்னாலும், பகரும் சொல்லுகின்ற, நாமுடிய - நாமுழுதும், வேம் - வெந்துபோம், முடிய - உலகுமுற்றும், மூடு - மூடிக்கொள்ளுகின்ற, இருளும் - அந்தகாரமும், வான்முகடும் - அண்டமுகடும், வேம் - வெந்துபோம், விடியுமேல் - இருளொழியுமாயின், வெயிலும் வேம் - சூரியனும் வெந்துபோவான், மழையும் - மேகங்களும், வேம் - வெந்து போம், மின்னிேேனாடு - மின்னலோடு, இடியும் - இடிகளும், வேம்-வெந்துபோகும், என்னின் - ஆயின், வேவாத - அந்தநிலவெப்பத்தினால் வேவாதவை, வேறியாவை - வேறெவையுண்டு—எ-று.

347. விஞ்சுவான் மழையின்மே லம்பும்வே லும்படச்
செஞ்செவே செருமுகத் தன்றியே திறனிலா
வஞ்சர்தீ வினைகளான் மானமா மணியிழந்
தஞ்சினார் நெஞ்சுபோ லென்றுமா றுதரோ

(இ-ள்.) விஞ்சு - மிகுகின்ற, வான்மழையின் மேல் - மேகத்தின் மழைத்தாரைகளுக்கதிகமாக, அம்பும்வேலும்பட - பாணங்களும் வேல்களும் வந்து தம்மேற் படுதலால், செஞ்சவே - மிகவுஞ் செவ்வையாக, செருமுகத்து அன்றியே - பகைவராது போர்முகத்தல்லாமல், திறன் இலா - போர்வகைகள் கற்றுணராத, வஞ்சர் தீவினைகளால் - வஞ்சகர்களுடைய கொடுஞ்செய்கைகளால், மானம்ஆம் மணிஇழந்து - மானமாகிய சிறந்த இரத்தினத்தை யிழந்து, அஞ்சினார் - அஞ்சினவர்களாகிய வீரர்களுடைய, நெஞ்சுபோல் - மனம்போல், என்றும் ஆறுது - எக்காலத்திலும் தணியாமற் கொதித்துக்கொண்டிருக்கும் (அந்தப்பாலைநிலம்)—எ-று.

மழையின்மேல் அம்பும்வேலும் என்றது அநேகமான பாணங்களும் வேல்களும் என்றபடி. வீரர்கள் போர்த்திறனறிந்த பகைவரிடத்துப் பொருது வெற்றி தோல்விகளி லொன்றை யடைதலியற்கையாக, அங்ஙனமன்றி வஞ்சகரது வயப்பட்டு மானமாமணியை யிழப்பின், அவர்களுடைய நெஞ்சுமிகுதியுங் கொதிக்குமாதலால், அதனை இந்தப்பாலைநிலக் கொதிப்புக் குவமைகூறினார்.

348. பேய்பிளந் தொக்கநின் றுலர்பெருங் கள்ளியின்
தாய்பிளந் துக்ககா ரகில்களுந் தழையிலா
வேய்பிளந் துக்கவெண் டரளமும் விடவரா
வாய்பிளந் துக்கசெம் மணியுமே வனமெலாம்

(இ-ள்.) பேய்பிளந்தொக்க - பேய்கள் பிளந்தாற்போல, நின்று உலர் - நின்றுலர்கின்ற- பெருங்கள்ளியின் - பெரியகள்ளிமரங்களின், தாய் - முதல்மரங்கள். பிளந்து - பிளக்கப்பட்டு, உக்க - சிந்திக்கிடக்கிற, கார் அகில்களும் - சேருபற்றிய அகிற்கட்டைகளும், தழை இலாவேய் - இலையில்லாதுலர்ந்த மூங்கில்கள், பிளந்து உக்க - பிளந்துசிந்தின, வெள்தரளமும் - வெண்மையான முத்துகளும், விடம் அரா - விஷத்தையுடைய சர்ப்பங்கள், வாய்பிளந்து உக்க - வாய்கள் பிளந்து சிந்திய, செம்மணியுமே - மாணிக்கங்களுமே, வனம் எலாம் அந்தப் பாலைநிலமெங்கும் (நிறைந்திருப்பன)—எ-று- (அ)

பேய்ப்பிளந்தொக்க - பேய்பிளந்தாலொக்க,

349. பாருமோ டாதுநீ டாதெனும் பாலதே
சூருமோ டாதுகூ டாதரோ சூரியன்
தேருமோ டாதுமா மாகமீ தேரினேர்
காருமோ டாதுநீள் காலுமோ டாதரோ.

(இ-ள்.) பாரும்-பூமியும், நீடாது எனும்பாலது-அப்புறப்படாதென்னும் தன்மையதாதலால், ஓடாது - அவ்வெப்பத்தைவிட்டோடாது, சூரும்-அந்த நிலத்துக்குரிய காளியாகியதேவதையும், ஓடாது கூடாது-ஓடாமல் நிலைத்திருக்கக்கூடாது, மாமாகம்மீ-பெரிய ஆகாயவீதியில், சூரியன்தேரும் ஓடாது-(இந்தநிலவெப்பத்தால் தகிக்கப்படுமென்பதனுல்) சூரியரதமும் அதற்குநேராகச் செல்லாது, தேரின் - ஆராயுமிடத்தில்,நேர்-அதற்குநேராக, காரும் ஓடாது-மேகமும் ஓடாது, நீள்காலும் ஓடாது-வீசுகின்ற காற்றும் ஓடாது—எ-று. (கூ)

வெப்பம் தணிவதற்குரிய காற்றுவீசுதலும், மேகக்கிரிகையும் வெப்பத்துக்கஞ்சி அங்கு இல்லையாயின என்க.

350. கண்கிழித் துமிழ்விடக் கனலரா வரசுகார்
விண்கிழி தொளிருமின் னனையபன் மணிவெயில்
மண்கிழித் திடவெழுஞ் சுடர்கண்மண் மகளுடற்
புண்கிழித் திடவெழுங் குருதியே போலுமே.

(இ-ள்.) கண்கிழித்து - கண்களைப்பிளந்துகொண்டு, உமிழ் - கக்குகின், விடக்கனல்-விஷாக்கினியையுடைய, அரா அரசு-நாகராஜனுடைய, கார்-பெருமையாகிய, விண்கிழித்து - மேகத்தைப்பிளந்துகொண்டு, ஒளிரும்-பிரகாசிக்கிற, மின் அனைய-மின்னலையொத்த, மண்கிழித்திட - அந்தநிலம்வெடிக்க, (அந்தவெடிப்பினின்றும்) எழும்-எழுகின்ற, மணிவெயில் - மாணிக்கங்களின் செஞ்சுடர்கள், (எவ்வாறிருக்குமெனின்) மண்மகள்-பூமிதேவியினுடைய, உடல்புண் - சரீரத்தின்மேலுள்ளபுண்ணனது, கிழித்திட-வெடிக்க, எழும்-அதினின்றும் எழுகின்ற, குருதியேபோலும்-உதிரத்தையே யொத்திருக்கும்—எ-று. (க0)

கண்கிழித்து என்பதற்கு, கண்பிதுங்கியெனினு மமையும். நிலவெடிப்பிலெழுந்து பிரகாசிக்கிற சிறந்த நாகரத்தினகாந்தியானது பூமிதேவியின் உடற்புண்ணினின்று மேல் எழுகின்ற உதிரத்தை யொத்திருந்ததென்பது கருத்து.

## வே று.

351. புழுங்குவெம் பசியொடு புரளும் போரரா
விழுங்கவந் ததிரெதிர் விரித்த வாயின்வாய்
முழங்குதிண் கரிபுகு முடுகி மீமிசை
வழங்குவெங் கதிர்சுட மறைவு தேடியே.

(இ-ள்.) மீமிசை-ஆகாயத்தில், வழங்கு-வீசுகின்ற, வெங்கதிர்-வெவ்விய சூரியகிரணங்கள், சுட-சுடுவதினுலே, மறைவுதேடி - (அந்தவெப்பத்துக்காற்றுமல்) நிழலைத்தேடி, முழங்கு - இரைந்து பிளிறுகின்ற, திண்கரி - வலியயானைகள், புழுங்கு-வெம்புகின்ற, வெம்பசியொடு-மிகுந்தபசியுடன், புரளும் - புரண்டுகொண்டிருக்கிற, போரரா - ஒன்றோடொன்று பொருந்துகின்றபாம்புகள், விழுங்கவந்து - அவ்விடத்துயிர்களை விழுங்கக்கருதிவந்து, எதிரெதிர் - (ஓடிவரும் உயிர்களுக்கு) எதிரெதிராக, விரித்த-விரித்துக்கொண்டிரும், வாயின்வாய்-வாயினிடத்தில், முடுகிப்புகும்-அவ்வுயிர்கள் விரைந்துசெல்லும்—எ-று. (கக)

அந்நிலவெப்பத்துக் காற்றுமல் யானைகள் நிழலைக்கருதி பாம்புகளின் வாயில் புகுமென்பதுகருத்து. மீமிசை என்பது ஒருபொருட்பன்மொழி.

352. ஏகவெங் கனலர சிருந்த காட்டினில்
காகமுங் கரிகளுங் கரிந்து சாம்பின
மாகவெங் கனலெனும் வடவைத் தீச்சுட
மேகமுங் கரிந்திடை வீழ்ந்த போலுமே.

(இ-ள்.) ஏகம்-ஒப்புவேறில்லாத, வெங்கனல்-வெம்மையுள்ள அக்கினிதேவன், அரசிருந்த - அரசுவீற்றிருக்கும், காட்டினுள் - அக்காட்டினுள்ளே, (எரிகின்ற வெப்பத்தினால்) காகமும்-காக்கைகளும், கரிகளும்-யானைகளும், கரிந்து-வெந்துகரிந்து, சாம்பின-ஒடுங்கிக்கிடக்கின்றவை, மாகம்-மேன்மையுள்ள, வெங்கனலெனும்-வெவ்விதான அக்கினியென்று சொல்லப்பட்ட, வடவைத்தீ - வடவாமுகாக்கினியானது, சுட - தகிப்பதினால், மேகமும் - மேகங்களும், கரிந்து-கரியாகி, இடை - அந்நிலத்தினிடத்தில், வீழ்ந்தபோலும்-வீழ்ந்தனபோலாகும்—எ-று. (கஉ)

353. கானகத் தியங்கிய கழுதின் றேர்க்குலம்
தானகத் தெழுதலாற் றலைக்கொண் டோடிப்போய்
மேனிமிர்ந் தெழுந்திடில் விசும்பும் வேமெனு
வானவர்க் கிரங்கிநீர் வளைந்த தொத்ததே.

(இ-ள்.) கானகத்து - அவ்வனத்தினிடத்தில், இயங்கிய-உலாவுகின்ற, கழுதின் தேர்க்குலம்-பேய்த்தேர்க்கூட்டமானது, அகத்து-அந்நிலத்து, எழுதலால்-(தீ) யுண்டாவதினால், தலைக்கொண்டு - அது அவ்விடமெங்கும்பரந்து, ஓடிப்போய் - ஓடிச்சென்று; மேல்நிமிர்ந்தெழுந்திடின் - மேலேயோங்கியெழுமானால், விசும்பும் - தேவலோகமும், வேமெனு - வெந்துபோமென்றுகருதி, வானவர்க்கு - தேவர்களுக்காக, இறங்கி-இரக்கமுற்று, நீர்-பலநீர்கள், வளைந்த-சூழ்ந்திருப்பன, ஒத்த-ஒத்திருக்கின்றன—எ-று. (கங)

தீ-அவாய்நிலையான்வந்தது. அந்நிலத்தில் ஆங்காங்கு எழுதலால் கழுதின்தேர்க்குலம் பலதோன்றுதலுடைமைபற்றி நீரும் பன்மையாயின.

354. எய்ந்தவக் கனலிடை யெழுந்த கானற்றேர்
காய்ந்தவக் கடுவனங் காக்கும் வேனிலின்
வேந்தனுக் கரசுவீற் றிருக்கச் செய்ததோர்
பாய்ந்தபொற் காலுடைப் பளிக்குப் பீடமே.

(இ-ள்.) எய்ந்த - நிறைந்த, அக்கனலிடை - அந்தத்தீயினிடத்து, எழுந்த-மேலெழுந்த, கானல்தேர் - கானலாகியபேய்த்தேரானது, காய்ந்த-வெந்த, அக்கடுவனம்-அந்தக்கொடியவனத்தை, காக்கும்-காவாநின்ற, வேனிலின்-கோடையாகிய, வேந்தனுக்கு - மன்னவனுக்கு, அரசுவீற்றிருக்க-அரசுவீற்றிருப்பதற்காக, செய்தது ஓர் - செய்ததாகிய ஒப்பற்ற, பாய்ந்தபொற்கால் உடை - தரையில் அழுந்திய பொற்காலினையுடைய, பளிக்குப்பீடம்-பளிங்காசனம்போலிருக்கின்றதென்க—எ-று. ()

அக்கினிக் கொழுந்தின்மேலெழுகின்ற கானற்றேரானது; பொற்காலுள்ள பளிங்குப் பீடம்போலிருக்கின்றதென்பது கருத்து.

355. தாவரு மிருவினை செற்றுத் தள்ளரு
மூவகைப் பகையரண் கடந்து முத்தியில்
போவது புரிபவர் மனமும் பொன்விலைப்
பாவையர் மனமும்போற் பசையு மற்றதே.

(இ - ள்.) (அந்நிலம்) தாவரும் - கெடுதற்கரிய, இருவினை - நல்வினை தீவினை யென்னு மிருவினைகளையும், செற்று - கெடுத்து, தள்ளரு - நீக்குதற்கரிய, மூவகை- மூன்றுவகையாகிய, பகையரண்-பகையரணை, கடந்து-தாண்டி, முத்தியில்-(நிரதிசய இன்பவீடாகிய) வைகுந்தத்தில், போவது - செல்வதற்கு, புரிபவர் - விரும்புகின்ற உத்தமர்களுடைய, மனமும் (போல்) மனம்போலவும், பொன்விலைப்பாவையர் மன மும்போல்-வேசையர்மனம்போலவும், பசையும் அற்றது-ஈரமுமற்றது—எ-று. ()

மூவகைப்பகை-காமம்- வெகுளி-மயக்கம் என்பன. போல் என்பதை புரிபவர் மனமும் என்பதற்கும் கூட்டுக.

356, பொரிபரற் படர்நிலம் பொடிந்து கீழுற
விரிதலிற் பெருவழி விளங்கித் தோன்றலால்
அரிமணிப் பணத்தரா வரசர் நாட்டினும்
எரிகதிர்க் கினிதுபுக் கியங்க லாயதே.

(இ-ள்.) பொரி-பொரிந்த, பரல்-பருக்கைக்கற்கள், படர்-பரந்த, நிலம்-அப்பூமி யானது, பொடிந்து-சாம்பராகி, கீழுறவிரிதலில் - கீழுலகவரைக்கும் விரிந்து, (வழி யாதலினால்.) அரிமணி - செம்மைநிறமுள்ள மாணிக்கங்கள்பொருந்திய, பணத்து- படத்தையுடைய, அராவரசர்நாட்டினும்-நாகராசர்களுடைய பாதாளலோகத்திலும், எரிகதிர்க்கு - விளங்குஞ்சூரியனுக்கு, இனிது - சுகமாக, புக்கு-சென்று, இயங்கலா யது-உலாவுதலாயிற்று—எ-று. (கசு)

357. எரிந்தெழு கொடுஞ்சுர மினைய தெய்தலும்
அருந்தவ னிவர்பெரி தளவி லாற்றலைப்
பொருந்தின ராயினும் பூவின் மெல்லியர்
வருந்துவர் சிறிதென மனத்தி னோக்கினான்.

(இ-ள்.) எரிந்துஎழு-பற்றியெழுகின்ற, இனையது-இத்தன்மையதான, கொடுஞ் சுரம் - கொடுமையானபாலைநிலத்தில், எய்தலும் - அடைதலும், அருந்தவன் - அரிய தவத்தையுடைய விசுவாமித்திரமுனிவன், இவர்-இச்சிறுவர்கள், பெரிது-பெரிதான, அளவு இல் ஆற்றலை-வரம்பில்லாத வல்லமையை, பொருந்தினர் ஆயினும்-அடைந்த வர்களேயானாலும், பூவின்மெல்லியர் - மலரினும் மெல்லிய இயற்கையுடையவர்கள், (ஆதலால்) சிறிது வருந்துவர் என-சிறிது வருந்துவார்களென்று, மனத்தில்நோக்கி னான்-மனத்தில் எண்ணினான்—எ-று. (கஎ)

358, நோக்கின னவர்முக நோக்க நோக்குடைக்
கோக்கும ரருமடி குழுக நான்முகன்
ஆக்கிய விஞ்சைக ளிரண்டு மவ்வழி
ஊக்கின னவையவ ருள்ளத் துள்ளினார்,

(இ-ள்.) (அவ்வாறு எண்ணி) அவர்முகம் நோக்கினன் - அவர்கள் முகத்தைப் பார்த்தான், நோக்க-(அப்படிப்) பார்க்க, நோக்கு உடை-பேரழகையுடைய, கோகு

மாரும்-சக்கரவர்த்தி திருக்குமாரர்களும், அடி குறுக - தன் பாதத்தை நெருங்கலும், நான்முகன் - பிரமதேவன், ஆக்கிய - தனக்குபதேசித்த, விஞ்சைகள் இரண்டும் - இரண்டுமந்திரங்களையும், அவ்வழி - அப்போது, ஊக்கினன்-அவர்களுக்குபதேசித்தான், அவை-அவற்றை, அவர் - அவர்கள் உள்ளத்து உள்ளினர் - மனத்தில் சிந்தித்தார்கள்—எ-று. (கஅ)

விஞ்சைகள் இரண்டாவன:—பலம், அதிபலம் என்பன.

359. உள்ளிய காலையி னூழித் தீயினை
எள்ளுறு கொழுங்கன லெஞ்சும் வெஞ்சுரம்
தெள்ளுதன் புனலிடைச் சேற லொத்தது
வள்ளலு முனிவனை வணங்கிக் கூறுவான்.

(இ-ள்.) உள்ளியகாலையின் - அம்மந்திரங்களைச் சிந்தித்தகாலத்தில், ஊழித்தீயினை-வடவாமுகாக்கினியை, எள்ளுறு-இகழத்தக்க, கொழுகனல்-செழுமையாகிய தீயும், எஞ்சும் - வலிகுறைகின்ற, வெம்சுரம் - வெவ்வியபாலைநிலமானது, தெள்ளு-தெளிந்த, தண்-குளிர்ச்சியாகிய, புனலிடை - நீரினிடத்து, சேறல் ஒத்தது-செல்லுதலையொத்துக் குளிர்ந்திருந்தது, வள்ளலும் - ஸ்ரீராமபிரானும், முனிவனைவணங்கி-விசுவாமித்ரமுநிவனைத்தொழுது, கூறுவான்-சொல்லுகின்றான்—எ-று. (கக)

360. சுழிபடு கங்கையந் தொங்கன் மௌலியான்
விழிபட வெந்ததோ வேறு தானுண்டோ
பழிபடா மன்னவன் படைத்த நாட்டினூங்
கழிவதென் காரண மறிஞ கூறென்றான்.

(இ-ள்.) சுழிபடு - சுழிகள் உண்டாகிற, கங்கை அம் - கங்காஜலத்தினையும், தொங்கல் - கொன்றைமாலையையும் அணிந்த, மௌலியான் - சடைமுடியையுடைய சிவனது, விழிபட - நெற்றிக்கண்ணின் பார்வைபடுதலால், வெந்ததோ - வெந்து போயிற்றோ, வேறு உண்டோ - வேறு காரணமுண்டோ, பழிபடா-நிந்தைஉண்டாகாத, மன்னவன் - சக்ரவர்த்தி, படைத்த - பெற்றுள்ள, நாட்டின் ஊங்கு-நாட்டில் அதிகமாக, அழிவது - இப்படியழிவதற்கு, என்காரணம் - என்னகாரணம், அறிஞ-அறிஞனே, கூறு என்றான்-சொல்வாயென்றுகேட்டான்—எ-று. (உ0)

361. என்றலு மிராமனைநோக்கி யின்னுயிர்
கொன்றுழல் வாழ்க்கையள் கூற்றின் றோற்றத்தள்
அன்றியு மையிரு நூறுமையன்மா
ஒன்றிய வலியின ளுறுதி கேளெனா.

(இ - ள்.) என்றலும் - என்றுவினவிய மாத்திரத்தில், (முனிவன்) இராமனை நோக்கி - ஸ்ரீராமபிரானைப் பார்த்து, இன்உயிர் - இனியஉயிர்களை, கொன்று - கொலைசெய்துண்டு - உழல் - திரிகின்ற, வாழ்க்கையள் - உயிர்வாழ்வையுடையவளும், கூற்றின்-யமனது, தோற்றத்தள் - தோற்றத்தையுடையவளும், அன்றியும்-அல்லாமலும், ஐயிருநூறு-ஆயிரமாகிய, மையல்மா - மதமயக்கமுள்ளயானைகள், ஒன்றிய-அடைந்திருக்கிற, வலியினள்-பலமுள்ளவளாகிய, (ஒரு அரக்கி இருக்கிறாள்) உறுதி-அவளதுவல்லமையை, கேள் எனா-கேளென்றுசொல்லி—எ-று. (உக)

362. மண்ணுருத் தெடுப்பினுங் கடலே வாரினும்
விண்ணுருத் திடிப்பினும் வேண்டிற் செய்கிற்பாள்
எண்ணுருத் தெரிவரும் பாவமீண்டியோர்
பெண்ணுருக் கொண்டெனத் தெரியும் பெற்றியாள்.

(இ-ள்.) (அவள்) மண் - பூமியை, உருத்துஎடுப்பினும் - கோபித்து எடுக்க வேண்டுமானாலும், கடலே - சமுத்திரநீரை, வாரினும் - வாரிப்பருகவேண்டுமானாலும், விண் - சுவர்க்கத்தை, உருத்துஇடிப்பினும் - கோபித்திடிக்கவேண்டுமானாலும், வேண்டின்செய்கிற்பாள் - தான் செய்யவேண்டுமென்று விரும்பினால் செய்யும் ஆற்றலுடையவளும், எண் - இவ்வளவிதென்னும் கணக்கும், உரு - உருவமும், தெரிவு அரு - தெரிதற்கரிய, பாவம் - பாவமானது, ஈண்டி - திரண்டு, ஓர் பெண் உருகொண்டென-ஒரு பெண்வடிவு கொண்டாற்போல, தெரியும் - காணப்படுகின்ற, பெற்றியாள் - தன்மையையுடையவளுமா யிருக்கிறாள்—எ-று. (உஉ)

363. பெருவரை யிரண்டொடும் பிறந்த நஞ்சொடும்
உருமுறழ் முழக்கொடு மூழித் தீயோடும்
இருபிறை செறிந்தெழு கடலுண் டாமெனின்
வெருவரு தோற்றத்தண் மேனி மானுமே.

(இ-ள்.) பெருவரை இரண்டொடும் - பெரியமலைகளிரண்டினும், பிறந்த - தன்னிடத்துண்டான, நஞ்சொடும் - விஷத்துடனும், உரும் உறழ் - இடியையொத்த, முழக்கொடும் - ஆரவாரத்துடனும், ஊழித்தீயோடும் - வடவைத்தீயுடனும், இருபிறைசெறிந்து - இரண்டுபிறைகளைப் பொருந்தி, எழு - எழுகின்ற, கடல் - ஒருகருங்கடல், உண்டாம் எனின் - உண்டாயிருக்குமாயின், வெருவரு - பார்ப்பவர்களுக்கு அச்சம் உண்டாதற் கேதுவான, தோற்றத்தள் - தோற்றத்தையுடையவளாகிய அவ்வரக்கியினது, மேனி - சரீரத்தை, மானும் - ஒத்திருக்கும்.

வரையிரண்டு என்றது தனங்களை, நஞ்சு என்றது இரண்டுகண்களை, ஊழித்தீ என்றது அவளது தலைமயிரை, இருபிறை என்றது இரண்டுகோர தந்தங்களை.

364. சூடக வரவுறழ் சூலக் கையினள்
காடுறை வாழ்க்கையள் கண்ணிற் காண்பரேல்
ஆடவர் பெண்மையை யவாவுந் தோளிணாய்
தாடகை யென்பதச் சழக்கி நாமமே.

(இ-ள்.) சூடகம் - கங்கணமாகிய, அரவு உறழ் - அரவாபரணம் தங்கிய, சூலம் - சூலத்தையேந்திய, கையினள் - கையையுடையவளும், காடு உறை - காட்டில்வாழ்கின்ற, வாழ்க்கையாள் - வாழ்க்கையையுடையவளுமா யிருக்கிறாள், கண்ணில் - கண்களால், காண்பரேல் - காண்பார்களாயின், ஆடவர் - ஆண்மக்கள், பெண்மையை - பெண்டன்மையை, அவாவும் - இச்சிக்கின்ற, தோளிணாய் - புயங்களையுடைய ஸ்ரீ ராமபிரானே, அ - அந்த, சழக்கி - தீயவளுடைய, நாமம் - பெயரானது, தாடகை என்பது - தாடகையென்று சொல்லப்படுவது—எ-று. (உச)

கண்ணினெனவேண்டாது கூறினார் காணுதற்கொழிலின் தவப்பேற்றைச் சிறப்பிக்க.

365. கன்னவி றோளிணாய் கமலத் தோனருள்
மன்னுயி ரனைத்தையும் வாரி வாய்ப்படுத்

தின்னுயிர் வளர்க்குமோ ரெரிகொள் கூற்றநேர்
அன்னவள் யாவளென் றறையக் கேட்டியால்.

(இ-ள்.) கல்நவில் - மலைக்கொப்பாகத் தோன்றுகின்ற, தோளிஞய் - புஜங்களையுடைய ஸ்ரீராமபிரானே, (அவள்) கமலத்தோன் அருள் - பிரமதேவன் கருணையிஞல்படைத்த, மன் உயிர் அனத்தையும் - நிலைபெற்ற உயிர்களெல்லாவற்றையும், வாரிவாய்ப்படுத்து - அள்ளி வயிற்போட்டுக்கொண்டு, இன் உயிர் - இனிதான தன்னுயிர் ஒன்றையுமே, வளர்க்கும் - வளர்க்கின்ற, ஓர்-ஒப்பற்ற, எரிகொள் கோபாக்கினியைக்கொண்ட, கூற்றம்நேர் - யமனையொத்த, அன்னவள் - அந்தத் தாடகையானவள், யாவள் என்று - எவளென்று, அறைய - நான்சொல்ல, கேட்டி- நீகேளாய்—எ-று. (உரு)

366. இயக்கர் தங்குலத்துளா னுலகை மெங்கணும்
வியக்குறு மொய்ம்பிஞ னெரியின் வெம்மையான்
மயக்கில்சற் சரனெனும் வலக்கி ஞனருள்
துயக்கிலன் சுகேதுவென் றுளனோர் தூய்மையான்.

(இ-ள்.) இயக்கர்குலத்துஉள்ளான் - இயக்கர்குலத்திலுள்ளவனும், உலகம் எங்கணும் - உலகத்திலெவ்விடத்துள்ளாரும், வியக்குறும் - ஆச்சரியப்படுகின்ற, மொய்ம்பிஞன் - வலியுள்ளவனும், எரியின் - நெருப்பைப்போல, வெம்மையான் - கோபமுள்ளவனுமாகிய, மயக்கு இல் - ஐயப்பாடில்லாத, சற்சரன் எனும் - சற்சரனென்று சொல்லப்படுகின்ற, வலத்திஞன் - வெற்றியாளன், அருள் - கருணையோடு பெற்ற, துயக்குஇலன் - தளர்ச்சியில்லாதவஞகிய, சுகேதுஎன்று - சுகேதுவென, ஓர்தூய்மையான் - ஒருபரிசுத்தன், உளன் - இருந்தான்—எ-று. (உசு)

367. அன்னவன் மகவிலா தயருஞ் சிந்தையான்
மன்னெடுந் தாமரை மலரின் வைகுறு
நன்னெடு முதல்வனை வழுத்தி நற்றவம்
பன்னெடும் பகலெலாம் பயின்ற பான்மையான்.

(இ-ள்.) அன்னவன் - அந்தச்சுகேதுவென்பவன், மகவுயிலாது - புத்திரனில்லாமல், அயரும் - சோர்வடைகின்ற, சிந்தையாளன்-மனமுள்ளவஞய், மன்-நிலைபேறுள்ள, நெடுதாமரைமலரின் - பெரியமூலதாமரைப் பூவின்மேல், வைகுறு - தங்குகின்ற, நல்நெடு - நன்மை சிறந்த, முதல்வனை - முதல்வஞகிய பிரமதேவனை, வழுத்தி-துதித்து, நல்தவம்-நல்லதவத்தை, பல்நெடுபகல் எலாம் - அநேகநாட்களெல்லாம், பயன்ற - (செய்து) பழகிய, பான்மையான் - முறைமையுடையவன். (உஎ)

368. முந்தின னருமறைக் கிழவன் முற்றுநின்
சிந்தனை யென்னெனச் சிறுவ ரின்மையான்
நொந்தன னருள்கென நுணங்கு கேள்வியாய்
மைந்தர்க ளிலையொரு மகளுண் டாமென்றான்.

(இ-ள்.) (இப்படி இவன் தவஞ்செய்கையில்) அருமறைகிழவன் - அருமையான வேதங்களுக் கதிகாரியான பிரமதேவன், முந்தினன் - பிரத்யக்ஷமாகி, (அவனைநோக்கி) நின்சிந்தனை முற்றும் - உன் எண்ணமுழுதும், என் என - என்னவென்று வினவ, (அவன் பிரமதேவனைநோக்கி) சிறுவர் இன்மையால் - புத்திரர்களில்லாமையிஞல், நொந்தனன் - வருந்தினேன், அருள் என - இனிமேலாயி

னும் புத்திரர்கள் உளராம்வண்ணம்) கிருபைசெய்ய வேண்டுமென்று பிரார்த்திக்க, (பிரமதேவன் அவனைநோக்கி) நுணங்குகேள்வியாய் - நுட்பமான நூற்கேள்விகளை யுடையவனே, மைந்தர்கள் இல்லை - உனக்குப் புத்திரர்களுண்டாவதில்லை, ஒருமகள் உண்டாம் என்றான் - ஒரு மகளுண்டாவளென்று சொன்னான்—எ-று. (உஅ)

நொந்தனன் என்பதில் அன்விகுதி புதியனபுகுதலால் தன்மை யொருமையில் வந்தது.

369. பூமட மயிலினைப் பொருவும் பொற்பொடும்
ஏமுறு மதமலை யீரைஞ் ஞூறுடைத்
தாமிகு வலியொடுந் தனைய டோன்றுநீ
போவென மலரயன் புகன்று போயினான்

(இ-ள்.) பூமடம்மயிலினை - தாமரைப்பூவில் வாழ்கின்ற விளமைபொருந்திய மயிற்சாயலையுடைய திருமகளை, பொருவும் - நிகர்க்கின்ற, பொற்பொடும் - அழகுடனும், ஏம் உறு - களிப்புமிக்க, மதம்மலை ஈரைஞ்ஞூறு உடை - மதயானைகள் ஆயிரத்துக்குள்ள, மிகுவலியோடும் - மிகுந்தபலத்துடனும், தனையள் - புத்திரி, தோன்றும் - உண்டாவாள், நீபோ என - நீ போவென்று, மலர் அயன் - தாமரைப் பூவில் வாழ்கிற பிரமதேவன், புகன்றுபோயினான் - சொல்லிப்போனான்—எ-று.

370. ஆயவ னருள்வழி யலர்ந்த தாமரைச்
சேயவ ளெனவளர் செவ்வி கண்டிவட்
காயவன் யார்கொலென் றாய்ந்து தன்கிளை
நாயகன் சுந்தனென் றவற்கு நல்கினான்.

(இ-ள்.) ஆயவன் - அப்படிச்சொல்லிய பிரமதேவனது, அருள்வழி - கட்டளையின்வழியாக, அலர்ந்த - மலர்ந்த, தாமரை - தாமரைப்பூவில் வாழ்கின்ற, சேயவள் என - திருமகள்போல, (பெண்பிறந்து) வளர் - வளர்கின்ற, செவ்விகண்டு - பருவத்தையறிந்து, இவட்கு - இவளுக்கு, ஆயவன் - தகுதியானகணவன், யார் என்று ஆய்ந்து - யாவனென்றாராய்ந்து, தன்கிளைநாயகன் - தன்சுற்றத்தார்க்குத் தலைவனாகிய, சுந்தன் என்றவற்கு - சுந்தனென்று சொல்லப்பட்டவனுக்கு, நல்கினான் - மணஞ்செய்துக்கொடுத்தான்—எ-று. (௩0)

கொல் - அசை.

371. காமனு மிரதியுங் கலந்த காட்சியி
தாமென வியக்கனு மணங்க னாளும்வே
றியாமமும் பகலுமோ ரீறின் றென்னலாய்த்
தாமுறு பெருங்களிச் சலதி மூழ்கினார்.

(இ-ள்.) (இவ்வாறு மணஞ்செய்துகொடுத்தபின்) காமனும் - மன்மதனும், இரதியும் - ரதீதேவியும், கலந்த - சேர்ந்த, காட்சி - தோற்றம், இது ஆம் என - இதுவாமென்றுசொல்லும்படி, இயக்கனும் - அந்தச் சுந்தனென்னும் மியக்கனும், அணங்கு அன்னாளும் - தெய்வப்பெண்ணை யொத்தவளாகிய தாடகையும், வேறு - வேறாக, யாமமும் பகலும் - இரவுக்கும் பகலுக்கும், ஓர் ஈறு இன்று - ஓர் முடிவில்லை, என்னல்ஆய் - என்றுசொல்லும்படி, உறுபெருகளி - மிகப்பெருங்களிப்பா சலதி - சமுத்திரத்தில், மூழ்கினார் - மூழ்கினார்கள்—எ-று. (௩க)

372. பற்பல நாட்செலீஇப் பதுமை போலிய
பொற்பினாள் வயிற்றிடைப் புவன மேங்கிட
வெற்பணி புயத்துமா ரீசனும் விறல்
மற்பொரு சுவாகுவும் வந்து தோன்றினார்.

(இ-ள்.) (இவ்வாறு இவர்கள் இன்பம் அனுபவித்துக்கொண்டிருக்க) பற்பல நாள் செலீஇ - அநேகநாள்கள்சென்று, பதுமைபோலிய - திருமகளையொத்த, பொற்பினால் - அழகையுடையவளது, வயிற்றிடை - வயிற்றினிடத்தில், புவனம் ஏங்கிட - உலகத்திலுள்ளவர் புலம்பும்படி, வெற்பு - அணிபுயத்து - மலையையொத்த புஜங்களையுடைய, மாரீசனும் - மாரீசனென்பவனும், விறல் - வெற்றியுள்ள, மல்பொரு - மற்போர்செய்கிற, சுவாகும் - சுவாகுவென்பவனும், வந்துதோன்றினார் - வந்துபிறந்தார்கள்—எ-று. (௩உ)

இந்த மாரீசசுவாகுக்கள் உலகத்துயிர்களை அடைவுகெட மிகவும் நலியுமியல்பினையுடையராதலால் புவனமேங்கிட என்றார்.

373. மாயமும் வஞ்சமும் வரம்பி லாற்றலும்
தாயினும் பழகினார் தமக்குந் தேர்வொணா
தாயவர் வளர்வுழி யவரை யீன்றவக்
காய்சினத் தியக்கனுங் களிப்பின் மேன்மையான்

(இ-ள்.) மாயமும் - மாயையும், வஞ்சமும் - வஞ்சனையும், வரம்பு இல் ஆற்றலும் - அளவில்லாத பலமும், தாயினும்பழகினார் - தாயைப்பார்க்கிலு மதிகமாக நிறைந்தவர்களும், தமக்கும் - தங்களுக்கும், தேர்வொணாது - தெளியக்கூடாமல், ஆயவர் - அவ்விருவரும், வளர் உழி - வளருங்காலத்தில், அவரை - அவர்களை, ஈன்ற - பெற்ற, அ - அந்த, காய்ச்சினத்து - பிறரைவருத்துகின்ற கோபத்தையுடைய, இயக்கனும் - யக்ஷனும், களிப்பின்மேன்மையான்-சந்தோஷ மிகுதியுடையானாயினான்—எ-று. (௩௩)

374. தீதுறு மவுணர்க டீமை தீர்தர
மோதுறு கடலெலா மொருகை மொண்டிடு
மாதவ னுறைவிட மதனின் வந்துநீள்
பாதவ மனைத்தையும் பறித்து வீசினான்.

(இ-ள்.) தீது உறும் - தீமைமிகுந்த, அவுணர்கள் - அசுரர்கள்செய்கிற, தீமை - தீங்கு, தீர்தர-ஒழிய, மோது உறு - அலைகள்மோதுகின்ற, கடல் எலாம்-கடல்முழுதும், ஒருகை - ஒருகையினால், மொண்டிடும் - முகந்து ஆசமநம்செய்த, மா - மகிமைபொருந்திய, தவன் - தவத்தையுடைய அகஸ்தியமுநிவன், உறைவிடமதனின் வந்து - ஆச்சிரமத்தையடைந்து, (அவ்விடத்திலுள்ள) நீள் - உயர்ந்த, பாதவம் அனைத்தையும் - மரங்களையெல்லாம், பறித்து-பிடுங்கி, வீசினான்-எறிந்தான் ()

'மோதுறு' என்பதற்கு கரைமேல்வந்து தாக்குகின்ற எனினும் பொருந்தும். கடல்முழுதையும் ஒரு கையினால் முகந்து ஆசமனஞ்செய்யும் ஆற்றல் தவத்தாலல்லது உளதாகாது என்பார் கடலெலாமொருகை மொண்டிடும் மாதவன் என்றார். மொண்டிடும் என்னும் பெயரெச்சம் மாதவம் என்னும் கருவிப்பெயர் கொண்டது.

375. விழைவுறு மாதவம் வெஃகி னோர்விரும்
புழைகலை யிரலையை யுயிருண் டோங்கிய

வழையொடு மரனெலா மடிப்ப மாறவன்
தழலெழ விழித்தனன் சாம்ப ராயினான்.

(இ-ள்.) விழைவு உறும் - யாவரும் விரும்புகின்ற, மாதவம் - பெரியதவத்தை, வெஃகினோர்-விரும்பிச்செய்பவர்களாகிய முனிவர்களால், விரும்பு-விரும்பப்பட்ட, உழையை - பெண்மான்களையும், கலையை - ஆண்மான்களையும், இரலையை கலைமான்களையும், உயிர் உண்டு - கொன்று, ஓங்கிய-உயர்ந்த, வழையொடு - சுரப்புன்னைமரங்களுடன், மரன்எலாம் - வேறுமரங்களெல்லாவற்றையும், மடிப்ப - அழித்ததனால், (கண்டு) மாதவன் - பெரியதவத்தையுடையவனாகிய அகஸ்தியமுனிவன், தழல் எழ-நெருப்புப்பொறிகளுண்டாக, விழித்தனன்-பார்த்தான், (பார்த்தலும்) சாம்பர் ஆயினான்-அந்தயக்ஷன் சாம்பலாய் விழுந்தான்—எ-று. (௩௫)

376. மற்றவன் விளிந்தமை மைந்தர் தம்மொடும்
பொற்றொடி கேட்டுவெங் கனலில் பொங்குறு
முற்றுற முடிக்குவென் முனியை யென்றெழா
நற்றவ னுறைவிட மதனை நண்ணினாள்.

(இ-ள்.) அவன் - அந்தயக்ஷன், விளிந்தமை - இறந்ததை, மைந்தர்தம்மொடும்-தன்புத்திரர்களோடு; பொற்றொடி-அவன்மனைவியானவள், கேட்டு-கேள்விப்பட்டு, வெம்கனலின்-கொடியநெருப்பைப்போல, பொங்குறு-பொங்கி, முனியை-(என்கணவனை இவ்வாறுமடித்த) முனிவனை, முற்று உற-இறுதியடையும்படி, முடிக்குவென்-மடிப்பேன், என்று எழா-என்று சொல்லிக்கொண்டேயெழுந்து, நல்தவன்-நன்மையாகிய தவத்தையுடைய அகஸ்தியமுனிவன், உறைவிடமதனை - வசிக்கின்ற ஆச்சிரமத்தை, நண்ணினாள்-சேர்ந்தாள்—எ-று. (௩௬)

377. இடியொடு மடங்கலும் வளியு மேங்கிடக்
கடிகெட வமரர்கள் கதிரு முட்குறத்
தடியுடை முகிற்குலஞ் சலிப்ப வண்டமும்
வெடிபட வதிர்த்தெதிர் விளித்து மண்டவே.

(இ-ள்.) (அப்படிவந்தவள்) இடியொடு - இடியுடன், மடங்கலும் - ஊழித்தீயும், வளியும் - ஊழிக்காற்றும், ஏங்கிட - ஏக்கங்கொள்ளவும், அமரர்கள்-தேவர்கள், கடிகெட-தம்காவல்குலைந்தோடவும், கதிரும் - இருகதிர்களும், உட்குஉற - அச்சத்தையடையவும், தடி உடை - மின்னலையுடைய, முகில் குலம் - மேகக்கூட்டம், சலிப்ப-நடுங்கவும், அண்டமும் வெடிபட- அண்டமும்பிளவுபடவும், அதிர்த்து-ஆரவாரித்து, எதிர்விளித்து-எதிரில் கூவிக்கொண்டு, மண்ட நெருங்கிவருதலும்—எ-று. (௩௭)

இருகதிர் என்றது சூரியசந்திரர்களை.

378. தமிழெனு மளப்பருஞ் சலதி தந்தவன்
உமிழ்கனல் விழிவழி யொழுக வுங்கரித்
தழிவன செய்தலா லரக்க ராகியே
இழிகென வுரைத்தன னசனி யெஞ்சவே.

(இ-ள்.) தமிழ் எனும் - தமிழென்கின்ற, அளப்பு அரு - அளத்தற்கரிய, சலதி-கடலை, தந்தவன் - வெளியிட்டவனாகிய அகஸ்த்யமுனிவன், உமிழ் - உமிழப்பட்ட, கனல்-நெருப்புப்பொறிகள், விழிவழி-கண்வழியாக, ஒழுக-சிந்தும்படி, உங்கரித்து-

(அவர்களைப்பார்த்து,) உங்காரஞ்செய்து, அழிவனசெய்தலால் - நகைத்தற்குரிய காரியங்களை நீங்கள் செய்கின்றமையால், அரக்கர் ஆகி - ராக்ஷஸர்களாகி, இழிக என - இழிவடையக்கடவீர்களென்று, அசனி அஞ்ச - இடியும்குறையும்படி, உரைத்தனன் - பெருந்தொனியோடுசொன்னான்—எ-று. (௩௨அ)

379. வெருக்கொள் வுலகையும் விண்ணு ளோரையும்
முருக்கியெவ் வுயிருமுண் டுழலு மூர்க்கராம்
அரக்கர்க ளாயின ரக்க ணத்தினில்
உருக்கிய செம்பென வுமிழ்கட் டீயினர்

(இ - ள்.) அ கணத்தினில் - (அப்படி யந்த அகஸ்த்யமுநிவன்சபித்த) அந்த க்ஷணமே, உருக்கியசெம்புஎன-உருக்கப்பட்ட செம்பைப்போல, உமிழ்கண்தீயினர்-உமிழாநின்ற கண்ணெருப்பையுடையவர்களாய், வெருகொள-அச்சத்தைக்கொள்ள, உலகையும் - உலகத்தாரையும், விண் உள்ளோரையும் - தேவர்களையும், முருக்கி-கொன்று, எ உயிரும் உண்டு - எல்லாஉயுர்களையும் பிடித்துண்டு, உழலும்-திரிகின்ற மூர்க்கர் ஆம்-மூர்க்கர்களாகிய, அரக்கர்கள் ஆயினர்-ராக்ஷஸர்களானார்கள்—எ-று.

380. ஆங்கவன் வெகுளியு மறைந்த சாபமும்
தாங்கின ரெதிர்செயுந் தருக் கிலாமையின்
நீங்கினர் சுமாலியை நேர்ந்து நிற்கியாம்
ஓங்கிய புதல்வரென் றுறவு கூர்ந்தனர்.

(இ-ள்.) (அப்படி அரக்கர்களான அவர்கள்) ஆங்கு - அவ்வாறு, அவன் - அந்த அகஸ்த்யமுநிவனது, வெகுளியும் - கோபத்தையும், அறைந்த-அந்தக்கோபங்காரணமாகச் சபித்த, சாபமும்-சாபத்தையும், தாங்கினர்-ஏற்றுக்கொண்டவர்களாய், எதிர்செயும் - அதற்கு மாறுசெய்வதற்குத் தகுதியான, தருக்கு இலாமையின் - வல்லமையில்லாமையினால்,நீங்கினர்-அவ்விடம்விட்டுநீங்கி, சுமாலியைநேர்ந்து-சுமாலியென்னுமரக்கனையடைந்து, நிற்கு-உனக்கு, யாம் - நாங்கள், ஓங்கிய புதல்வர் என்று-சிறந்த புத்திரர்களென்று, உறவுகூறினார்-உறவுகொண்டாடிச் சொன்னார்கள்—எ-று. ()

381. அவனொடும் பாதலத் தனேகநாட் செலீஇத்
தவனுறு தசமுகன் றனக்கு மாதுலர்
இவரெனப் புடைத்தழித் துலக மெங்கணும்
பவனனிற் றிரிகுநர் பதகி மைந்தர்கள்.

(இ-ள்.) அவனொடும் - அந்தச்சுமாலியுடன், பாதலத்து - பாதாளலோகத்தில், அநேகநாள்செலீஇ - அனேகநாள்கழித்து, (அதற்குமேல்) தவன் உறு - தவங்கள் மிகுந்த, தசமுகன்தனக்கு - ராவணனுக்கு, இவர் மாதுலர் என-இவர்கள் மாமன்மாரென்று சொல்லும்படி, பாதகிமைந்தர்கள் - அந்தப்பாதகியின் குமாரர்கள், உலகம் எங்கணும்-உலகங்களெல்லாவற்றையும், புடைத்து அழித்து-அடித்துநாசம்பண்ணி, பவனனின்-ஊழிக்காற்றைப்போல, திரிகுநர்-திரிகின்றார்கள்—எ-று. (௬௧)

382. மிகுந்திறன் மைந்தரை வேறு நீங்குறுத்
தகுந்தொழின் முனிவரன் சலத்தை யுன்னியே
வகுந்துவின் வசுவரி வதிந்த திவ்வனம்
புகுந்தன ளழலெனப் புழுங்கு நெஞ்சினள்.

(இ-ள்.) அழல் என - நெருப்புப்போல, புழுங்கும் - புழுங்குகின்ற, நெஞ்சினள் - மனத்தையுடைய அந்தத்தாடகை, மிகும்திறல்-மிகுந்தவல்லமையுள்ள, மைந்தரை - தன்புத்திரரை, வேறுநீங்குறு - வேறாகநீங்கி, தகும்தொழில் - தகுதியான தவத்தொழிலையுடைய, முனிவரன் - முனிசிரேஷ்டனாகிய அகத்தியனது, சலத்தை உன்னி-கோவத்தை நினைத்துக்கொண்டு, வகுந்துவின் - அவ்வழியால், வசுவரிவதிந்தது-ஊழித்தீக் குடிகொண்டிருப்பதாகிய, இவ்வனம்-இந்தவனத்தில், புகுந்தனள்-வந்து சஞ்சரித்துக்கொண்டிருக்கிறாள்—எ-று. (௩௨)

383. உளப்பரும் பிணிப்புறு வுலோப மொன்றுமே
அளப்பருங் குணங்களை யழிக்கு மாறுபோல்
கிளப்பருங் கொடுமைய வரக்கி கேடிலா
வளப்பரு மருதவைப் பழித்து மாற்றினாள்.

(இ-ள்.) உளப்பரும்பிணிப்பு உறூ-மனத்தில்பெரியபந்தத்தையடைந்து, உலோபம் ஒன்றுமே - உலோபகுணம் ஒன்றுமாத்திரமே, (ஒருவனுக் கிருக்குமாயின்) அளப்பு அரு - அளவுசெய்த லருமையாகிய, குணங்களை - நற்குணங்களை, அழிக்கும் ஆறுபோல்-அழிக்கும்விதம்போல, கிளப்புஅரு கொடுமைய-சொல்லுதலருமையாகிய கொடுஞ்செய்கைகளையுடைய, அரக்கி-அரக்கியானவள், கேடு இலா-கெடுதியில்லாத, வளப்பரு-வளத்தாற்பெரிய, மருதவைப்பு - மருதநிலத்தை, அழித்து-நாசஞ்செய்து, மாற்றினாள்-இப்படிமாற்றிவிட்டாள்—எ-று. (௩௩)

வேறு.

384. இலங்கைய ரசன்பணி யமைந்தொ ரிடையூறு
விலங்கல்வலி கொண்டெனது வேள்விநலி கின்றாள்
அலங்கன்முகி லேயவளிவ் வங்கநில மெங்கும்
குலங்களொ டடங்கநனி கொன்றுதிரி கின்றாள்.

(இ-ள்.) இலங்கை அரசன் பணி - இராவணனது ஏவலில், அமைந்து - உள் அடங்கி, ஓர் இடையூறு ஆ-எல்லார்க்கும் ஒரு இடையூறாக, விலங்கல் வலிகொண்டு-மலையினதுபலத்தை யுடையவளாய், எனதுவேள்விநலிகின்றாள் - என்யாகத்தைக் கெடுக்கிறாள், (அன்றியும்) அலங்கல்-பூமாலையணிந்த, முகிலே-மேகம்போல்வனாகிய ஸ்ரீராமா, அவள்-அவ்வரக்கி, இ அங்கநிலம் எங்கும்-இந்த அங்கநாட்டினெவ்விடத்து முள்ளவுயிர்களை, குலங்களொடு அடங்க - குலங்களோடு நசித்தடங்க, நனிகொன்று திரிகின்றாள்-மிகவுங்கொலைசெய்து திரிகின்றாள்—எ-று. (௩௪)

விலங்கல்வலி என்பதை விலங்கு அல்வலி எனப்பதம்பிரித்து ஒருவராலும் விலக்கல்கூடாத பலமென வுரைப்பினும் பொருந்தும்.

385. முன்னுல களித்துமுறை நின்றவுயி ரெல்லாம்
தன்னுயி ரெனக்கருது தன்மையவன் மைந்த
என்னினு யுணர்த்துவ தினிச்சிறிது நாளின்
மன்னுயி ரனைத்தையும் வயிற்றினிடு மென்றான்.

(இ-ள்.) முன்உலகு அளித்து-முற்பட்டவுலகத்தைக்காத்து, முறைநின்ற உயிர் எலாம் - முறைமைகெடாமல் நிலைபெற்றிருக்கிற ஜீவராசிகளையெல்லாம், தன்உயிர் எனகருது-தன்னுயிர்போலநினைக்கின்ற, தன்மையினன்-இயற்கையையுடைய சக்கரவர்த்திக்கு, மைந்த-புத்திரனே, இனி உணர்த்துவது என் - இனித்தெரிவிக்கவேண்

டியதென்ன இருக்கிறது, இனிசிறிதுநாளில்-இன்னம் சிலநாளில், மன்உயிர் அனைத்தையும் - உலகில்நிலைபெற்ற ஜீவராசிகளையெல்லாம், வயிற்றின் இடும் என்றான்-தன் வயிற்றில் அடக்கிக்கொள்ளுவாள் என்றுசொன்னான்—எ-று. (சரு)

தன்னுணவெனக்கருது தன்மையினள் என்றும் பாடம்.

386. அங்கிறைவ னப்பரி சுரைப்பவது கேளா
கொங்குறை நறைக்குல மலர்ச்சென்னி குலுக்கா
எங்குறை வதித்தொழி லியற்றுபவ ளென்றான்
சங்குறை கரத்தொரு தனிச்சிலை தரித்தான்.

(இ-ள்.) அங்கு-அவ்விடத்து, இறைவன்-தபோதநர்களில் தலைவனாகிய விசுவாமித்திரமுனிவன், அ பரிசு உரைப்ப- அந்தப்பிரகாரம் சொல்ல, அது - அந்தச்செய்தியை, சங்குஉறை-சங்குதங்குகிற, கரத்து-இடதுகையில், ஒரு தனிசிலைதரித்தான்-ஒரு ஒப்பில்லாதவில்லைத் தரித்தவனாகிய ஸ்ரீராமபிரான், கேளா - கேட்டு, கொங்கு உறை-வாசனைதங்கிய, நறை-தேன்பொருந்திய, குலம்மலர்-சிறந்த மலர்மாலைகளையணிந்த, சென்னி-சிரத்தை, குலுக்கா - அசைத்து, இ தொழில் இயற்றுபவள்-இந்தத்கையைச் செய்பவள், உறைவது - வாசம்பண்ணுவது, எங்கு என்றான்-எவ்விடத்திலென்று வினவினான்—எ-று. (சசு)

387. கைவரை யெனத்தகைய காளை யுரைகேளா
ஐயவரை யகத்திடை யடைத்தமுனி யைய
இவ்வரை யிருப்பதவ ளென்பதனின் முன்போர்
மைவரை நெருப்பெரிய வந்ததெனவந்தாள்.

(இ-ள்.) ஐவரை - ஐந்து புலங்களை, அகத்திடை அடைத்தமுனி - புறத்தில் செல்லவொட்டாமலடக்கிய விசுவாமித்திரன், கைவரை எனத்தகைய - யானையையொப்பானென்று சொல்லுந்தகுதியையுடைய, காளை - யவ்வநபருவத்தையுடைய ஸ்ரீராமபிரானது, உரை-வார்த்தையை, கேளா - கேட்டு, (ஸ்ரீராமனைநோக்கி) ஐய-ஐயனே, அவள்-அவ்வரக்கி, இவ்வரையிலிருப்பது-இந்தமலையிலிருக்கிறது, என்பதனின் முன்பு - என்று சொல்வதற்குமுன்னே, ஓர்மைவரை - ஒருகரியமலையானது, நெருப்புஎரியவந்தது என - நெருப்பெரியவந்தாற்போல, வந்தாள்-(அவ்வரக்கி) வந்தாள்—எ-று. (சஎ)

388. சிலம்புகள் சிலம்பிடை செறித்தகழ லோடு
நிலம்புக மிதித்தன ளெளித்தகுழி வேலைச்
சலம்புக வனற்றறுக ணந்தகனு மஞ்சிப்
பிலம்புக நிலக்கிரிகள் பின்றொடர வந்தாள்.

(இ-ள்.) சிலம்புகள்-மலைகளை, சிலம்பிடை - தன்காற்சிலம்பில், செறிந்த-பருக்கைக்கற்களாக நிறைத்த, கழலோடு - கால்களினால், நிலம்புக - நிலம் அழுந்தும்படி, மிதித்தனள்-மிதித்தாள், நெளித்தகுழி-அப்படி நிலம் நெளித்ததனாலுண்டாகிய குழிகளில், வேலைசலம்புக - கடல்நீர் பாயவும், அனல்-தீயைப்போல, தறுகண் - அஞ்சாமையையுடைய, அந்தகனும்-யமனும், அஞ்சி-பயந்து, பிலம்புக-பாதாளத்திற்செல்லவும், நிலக்கிரிகள்பின்தொடர - நிலத்திலுள்ளமலைகள் பின்தொடர்ந்துவரவும், வந்தாள்-அவ்விடத்திற்குவந்தாள்—எ-று. (சஅ)

389. இறைக்கடை துடித்தபுரு வத்தளெயி றென்னும்
பிறைக்கடை பிறக்கிட மடித்தபில வாயள்
மறைக்கடை யரக்கிவட வைக்கன லிரண்டாய்
நிறைக்கடன் முளைத்தென நெருப்பெழ விழித்தாள்.

(இ-ள்.) இறை-சிறிது, கடைதுடித்த-கடையில்துடிக்கின்ற, புருவத்தள் - புருவத்தையுடையவளும், எயிறு என்னும்-கோரதந்தங்களென்கிற, பிறை - பிறைகள், கடை-கடைவாயில், பிறக்கிட- விளங்க, மடித்த - மடிக்கப்பட்ட, பிலம் - குகையையொத்த, வாயள்-வாயையுடையவளுமாய், மறைக்கடை - வேதவொழுக்கத்துக்குப் புறம்பாகிய, அரக்கி-அரக்கியானவள், நிறைகடல்-நிறைவையுடைய கடலில்,வடவைகனல்-வடவைத்தீயானது, இரண்டாய்முளைத்தென-இருகூறாகி முளைத்தாற்போல, (தோன்றும்படி) நெருப்பு எழ-நெருப்புப்பொறிகள் பறக்க; விழித்தாள் - கண்களை விழித்துப்பார்த்தாள்—எ-று. (௪௯)

390. கடங்கலுழ் தடங்களிறு கையொடுகை தெற்று
வடங்கொள நுடங்குமிடை யாண்மறுகி வானோர்
இடங்களு நெடுந்திசையு மேழுலகு மெங்கும்
அடங்கலு நடுங்கவுரு மஞ்சநனியார்த்தாள்.

(இ-ள்.) கடம்கலுழ் - மதநீரொழுகப்பெற்ற, தடம்களிறு - பெரியயானைகளை, கையொடுகை தெற்று-துதிக்கைகளுடன் துதிக்கைகளை முடிந்து, வடம்கொள-வடமாயணிந்திருத்தலால், நுடங்கும் இடையாள்- துவள்கின்ற இடையையுடையவளாகிய தாடகையானவள், வானோர் இடங்களும் - தேவலோகங்களும், நெடுதிசையும்-நெடியதிக்குகளும், ஏழுலகும்-ஏழுலகங்களும் ஆகிய, எங்கும் அடங்கலும்- எவ்விடத்துமுள்ள வுயிர்கள்முழுதும், மறுகி நடுங்க-கலங்கிநடுங்கவும், உரும் அஞ்ச-இடியோசையஞ்சவும், நனி ஆர்த்தாள்-மிகவும் ஆரவாரித்தாள்—எ-று. (௫0)

391. ஆர்த்தவரை நோக்கிநகை செய்தெவரு மஞ்சக்
கூர்த்தநுதி முத்தலை யயிற்கொடிய கூற்றைப்
பார்த்தெயிறு தின்றுபகு வாய்முழை திறந்தோர்
வார்த்தையுரை செய்தன ளிடிக்குமழை யன்னாள்.

(இ-ள்.) ஆர்த்து-இப்படியாரவாரித்து, அவரைநோக்கி (விசுவாமித்திரன் முதலான) அவர்களைப்பார்த்து, நகைசெய்து-அவமதித்துச் சிரித்து, எவரும் அஞ்ச-யாவருமஞ்சும்படி, கூர்த்த நுதி - கூர்மையான நுனியையும், முத்தலை - முக்கவட்டையுமுடைய, அயில்-சூலமாகிய, கொடியகூற்றை - கொடியயமனை, பார்த்து.- நோக்கி, எயிறுதின்று-பல்லைக்கடித்து, பகுவாய்-பிளந்தவாயாகிய, முழைதிறந்து-குகையைத்திறந்து, ஓர்வார்த்தை உரைசெய்தனன்-ஒருவார்த்தையைச்சொன்னாள், (யாவளெனின்)இடிக்கும் மழைஅன்னாள்-இடிக்கின்ற மேகம் போன்றவளாகிய தாடகை எ-று.

392. கடக்கரும் வலத்தெனது காவலிதில் யாவும்
கெடக்கரி சறுத்தனெ னினிச்சிவை கிடக்கும்
விடக்கரி தெனக்கருதி யோவிதிகொ டுந்தப்
படக்கருதி யோபகர்மின் வந்தபரி சென்றே.

(இ-ள்.) கடக்க அரு - எவராலும் வெல்லுதற்கரிதான, வழத்து - பலத்தையுடைய, எனதுகாவல் - என்காவலிடமாகிய, இதில் - இந்தவனத்தில் உள்ள, யாவும் கெட - எல்லாவுயிர்களுமழிய, கரிசு அறுத்தனன் - பற்றறச்செய்தேன், (ஆதலால்) இனி - இனிமேல், சுவைகிடக்கும் விடக்கு - சுவைதங்கிய மாமிசமானது, அரிது என கருதியோ-(எனக்குக்கிடைத்தல்) அரிதென்று நினைத்தோ, என்நல்விதிகொடு உந்த-என் நல்விதிகொண்டு வந்து தள்ள, படகருதியோ-மாண்டுபோக நினைத்தோ, வந்தபரிசு-(நீங்கள்) வந்தபிரகாரம், பகர்மின் என்று-சொல்லுங்களென்றுசொல்லி.

393. மேகமவை யிற்றுக விழித்தனள் புழுங்கா
மாகவரை யற்றுக வுதைத்தனண் மதித்திண்
பாகமெனு முற்றெயி றதுக்கியயில் பற்று
ஆகமுற வுய்த்தெறிவ னென்றெதி ரழன்றாள்.

(இ-ள்.) மேகமவை - மேகங்கள், இற்று உக - பொடியாய்ச்சிந்த, விழித்தனள்-விழித்துப்பார்த்து, புழுங்கா-மனம்புழுங்கி, மாகம் - ஆகாயத்தையளாவும் படியான; வரை-மலைகள், அற்று உக-பொடிபட்டுச்சிந்த, உதைத்தனள்-உதைத்து, மதி-சந்திரனது, திண்பாகம் எனும்-திட்பமான கூறென்று சொல்லும்படியான, முற்று எயிறு அதுக்கி-கோரதந்தங்களை அதுக்கி, அயில்பற்று-சூலத்தைப்பற்றி, ஆகம் உற-ஸ்ரீராமமூர்த்தியின் மார்பில்பொருந்த, உய்த்து எறிவன் என்று- குறிபிழையாமலாராய்ந்தெறிகிறேனென்று, எதிர் அழன்றாள்-எதிரில் நின்று கோவித்தாள்—எ-று. (௯௩)

394. அண்ணன் முனிவற்கது கருத்தெனினு மாவி
உண்ணென வடிக்கணை தொடுக்கில னுயிர்க்கே
துண்ணெனும் வினைத்தொழி றொடங்கியுள ளேனும்
பெண்ணென மனத்திடை பெருந்தகை நினைந்தான்.

(இ-ள்.) அண்ணல்-பெருமையாகிய, முனிவற்கு-விசுவாமித்திர முனிவனுக்கு, அதுகருத்தெனினும்- அவளைக்கொல்வது கருத்தாயினும், பெருதகை - பெருந்தன்மையாகிய ஸ்ரீராமபிரான், ஆவி உண் என - உயிரை யுண்டுவிடென்று, வடிகணை-வடித்தலையுடைய பாணங்களை, தொடுக்கிலன் - ப்ரயோகிக்கிலன், (ஏனெனில்) உயிர்க்கே - தனதுயிர்க்கே, துண் என - நடுக்கமுண்டாக, வினைதொழில்- கொடுந்தொழிலை, தொடங்கி உளள் எனும் - தொடங்கியிருக்கின்றாளாயினும், பெண் என-பெண்ணென்று, மனத்திடை நினைந்தான்-திருவுளத்தில் நினைந்தான்—எ-று. (௯௪)

வே று.

395 வெறிந்த செம்மயிர் வெள்ளெயிற் றாளயில்
எறிந்து கொல்வெனென் றேற்கவும் பார்க்கிலாச்
செறிந்த தாரவன் சிந்தைக் கருத்தெலாம்
அறிந்து நான்மறை யந்தணன் கூறுவான்.

(இ-ள்.) வெறிந்தசெம்மயிர்-வெறித்திருக்கிற செம்மயிரையும், வெள் எயிற்றாள்-வெள்ளியபற்களையுமுடைய அவ்வரக்கி, அயில் எறிந்து-சூலத்தையெறிந்து, கொல்வென் என்று-கொல்லுகிறேனென்று, ஏற்கவும்-எதிர்க்கவும், பார்க்கிலா - அதைமதி

யாத, செறிந்த-இதழ்கள்நெருங்கிய, தாரவன்-பூமாலையையணிந்த ஸ்ரீராமபிரானது, சிந்தைகருத்து எலாம்-உள்ளக்கருத்தை யெல்லாம், நான்மறை அந்தணன் - நான்கு வேதங்களை யுணர்ந்தமுனிவன், அறிந்து-உணர்ந்துகொண்டு, கூறுவான் - சொல்லுவான்—எ-று. (கூரு)

396. தீதென் றுள்ளவை யாவையுஞ் செய்தெமைக்
கோதென் றுண்டி லளித்தினை யேகுறை
யாதென் றெண்ணுவ திக்கொடி யாளையும்
மாதென் றெண்ணுவ தோமணிப் பூணினாய்.

(இ-ள்.) மணிபூணினாய்-ரத்நாபரணங்களையணிந்த ஸ்ரீராமா, தீது என்றுஉள்ள யாவையும்செய்து-தீமையென்று சொல்லப்பட்டுள்ளன எல்லாவற்றையும் செய்து, எமை-எங்களை, கோது என்று-சாரமில்லாப் பொருள்களென்று, உண்டிலள் - உண்ணாது விடுத்தாள், இத்தனையேகுறை - இவ்வளவே குறையாயுள்ளது, யாது என்று எண்ணுவது-எந்தத்தீயபொருளென்று ஆலோசிக்கிறது, இகொடியாளையும் - இந்தக் கொடியவளையும், மாது என்று எண்ணுவதோ-பெண்ணென்று நினைப்பதோ-எ-று.

397. நாண்மையே யுடை யார்பிழைத் தார்நகு
வாண்மையே பெற் றவன்றிற லாடவர்
தோண்மை யேயிவள் பேர்சொலத் தோற்பரேல்
ஆண்மை யென்னும தாரிடை வைகுமே.

(இ-ள்.) நாண்மையே உடையார் - (இவளோடு போர்செய்ய) நாணமுள்ளவர்களே, பிழைத்தார்-உயிர் பிழைத்தார்கள், நகு-விளங்குகின்ற,வாண்மைபெற்ற-வாள் வல்லமையையே கொண்டிருக்கிற, வல்திறல்-வலியவெற்றியையுடைய, ஆடவர்-புருஷர்கள், இவள் பேர்சொல - இவள் பேர்சொன்னமாத்திரத்தில், தோண்மை தோற்பர் ஏல் - புயவலியைத்தோற்பாராயின், ஆண்மை என்னும் அது - ஆண்மையென்று சொல்லப்படுவது, ஆர் இடைவைகும்-யாவரிடத்துத்தங்கும்—எ-று. (கூஎ)

398. இந்திரன் னிடைந் தானுடைந் தோடினார்
தந்திரம் படத் தானவர் வானவர்
மந்தரம் மிவ ளோளெனின் மைந்தரோ
டந்த ரம்மினி யர்துகொ லாண்மையே.

(இ-ள்.) இந்திரன்-தேவேந்திரனானவன்,இடைந்தான்-இவளுக்குத்தோற்றான், தானவர்வானவர்-தானவரும் தேவர்களும், தந்திரம்பட - சேனைகள் அழிந்ததனால், உடைந்து ஓடினார்-தோற்றோடினார்கள், இவள்தோள்-இவளுடைய புயங்கள், மந்தரம் எனின்-மந்தரகிரியை நிகர்ப்பனவென்றால், ஆண்மை-ஆண்மைத்தன்மை, அந்தரம்-முடிவாக, மைந்தரோடு-ஆண்மக்களிடத்தில், இனி-இனிமேல், யாது-எது. ()

399. மன்னர் மன்னவன் காதல மற்றுமொன்
றின்னம் யானுரைக் கின்ற தியாதெனின்
முன்னோர் கால நிகழ்ந்த முறைமையீ
தென்ன வோதலுற் றான்றவத் தீறிலான்.

(இ-ள்.) மன்னர் மன்னவன் காதல-சக்கரவர்த்தித்திருமகனே, மற்றும் ஒன்று-வேறுமொருசெய்தி, இன்னம்-மேலும், யான் உரைக்கின்றது - நான் சொல்லவேண்டியதிருக்கின்றது, யாது எனின்-என்னையெனின், முன் ஓர்காலம்-முன்னொருகாலத்தில், நிகழ்ந்த-நடந்த, முறைமையீதென்ன-முறைமையிது வென்று, தவத்து ஈறு இலான்-தவத்தினால் முடிவில்லாதவனாகிய விசுவாமித்திர முனிவன், ஓதலுற்றான்-சொல்லத்தொடங்கினான்—எ-று. (கூக)

400. பிருகு வென்னும் பெருந்தவன் றன்மனை
வருகயற்கட் கியாதி வல்லா சுரர்க்
குருகு காத லுறவுற வாதலே
கருதி யாவி கவர்ந்தன னேமியான்.

(இ-ள்.) பிருகு என்னும் - பிருகு என்கிற, பெருதவன்மனை - பெருந்தவத்தை யுடையவனது மனைவியான, வரு-விருத்தியடைந்திருக்கிற, கயல்கண்-சேல்போன்ற கண்களையுடைய, கியாதி-கியாதியென்பவள், வல் ஆ சுரர்க்கு-வலிய அசுரர்களுக்கு, உருகு-மனமுருகுகின்ற, காதல் உற-ஆசைமிக, உறவு ஆதலே கருதி-உறவாதலையே நினைத்து, நேமியான்-சக்ரபாணியான ஸ்ரீமந்நாராயணன், ஆவிகவர்ந்தனன், அவளுயிரை வாங்கிவிட்டான்—எ-று. (கூ0)

அசுரர் என்பது ஆசுரர் என நீட்டல் பெற்றது.

401. வானகத்தினின் மண்ணினின் மன்னுயிர்
போனகந்தனக் கென்றெணும் புந்திய
தானவள் குமதிப்பெய ராடனை
ஊனொழித் தனன் வச்சிரத் தும்பர்கோன்.

(இ-ள்.) வானகந்தனின்- விண்ணுலகத்திலும், மண்ணினின் - மண்ணுலகத்திலும், மன்-நிலைபெற்றிருக்கிற, உயிர்-உயிர்களை, தனக்கு போனகம் என்று எணும்-தனக்கு ஆஹாரமென்று நினையாநிற்கிற, புந்திய-புத்தியையுடைய, தானவள்-அசுரச்சியாகிய, குமதிப்பெயராள் தனை - குமதியென்னும் பெயருடையவளை, வச்சிரத்து-வச்சிராயுதத்தினால், உம்பர்கோன்-தேவேந்திரன், ஊன் ஒழித்தனன்-உடலை (உயிரினின்றும்) வேறுபிரித்துவிட்டான்—எ-று. (கூக)

402. ஆதலா லரிக் காகண் டலன்றனக்
கோது கீர்த்தி யுடையவல் லாதிடை
ஏத மென்பன வெய்திய வோசொலாய்
தா தடர்ந்து தயங்கிய தாரினாய்.

(இ-ள்.) ஆதலால்-அச்செயல்செய்தமையினால், அரிக்கு-திருமாலுக்கும், ஆகண்டலன் தனக்கு-இந்திரனுக்கும், ஓது - யாவரும் எடுத்துச்சொல்லுதற்குரிய, கீர்த்தி உடை அல்லாது-கீர்த்திகள் அவர்களுடைமைகளாயின அல்லாமல், இடை - இடையில், ஏதம் என்பன எய்தியவோ- குற்றம் என்பன சம்பவித்தனவோ, சொலாய்-சொல்லாய், தாது அடர்ந்து - மகரந்தம்நெருங்கி, தயங்கிய - விளங்கிய, தாரினாய்-பூமாலையையுடைய ஸ்ரீராமா—எ-று. (கூஉ)

403. கறங்கிடத் திகி ரிப்படி காத்தவர்
பிறங்கடைப் பெரி யோய்பெரி யோரொடும்

மறங்கொ டித்தரை மன்னுயிர் மாய்த்துநின்
றறங் கெடுத்தவட் காண்மையும் வேண்டுமோ.

(இ-ள்.) திகிரிகறங்கிட - ஆஜ்ஞாசக்ரமானது எங்குந் திரியும்படி, படிகாத்தவர் - பூமியைக் காத்தவர்களாகிய சூரியகுல அரசரது, பிறங்கடைப் பெரியோய்- வமிசத்திற்றோன்றிய மஹானே, பெரியோரொடு மறம்கொடு - பெரியோரொடு பகைகொண்டு, இ தரை - இந்தப் பூமியிலுள்ள, மன் உயிர் மாய்த்து - நிலைபேறுடைய வுயிர்களைக் கொன்று, நின்று அறம்கெடுத்தவட்கு - அழியாமல் நிலைத்து வைதிக நிலைத்திருந்த அறத்தையழித்தவளுக்கு, ஆண்மையும் வேண்டுமோ - ஆண்மையும் வேண்டப்படுவதோ—எ-று. (சஙு)

404. சாற்றுநாளற்ற தெண்ணித் தருமம் பார்த்
தேற்றும் விண்ணென் பதன்றி யிவளைப்போல்
நாற்றங் கேட்டலுந் தின்ன நயப்பதோர்
கூற்றுண் டோசொலை கூற்றுறழ் வேலினாய்.

(இ-ள்.) சாற்றும் - விதிக்கப்பட்டிருக்கிற, நாள் - ஆயுள். அற்றது - முடிவுற்றதை, எண்ணி - ஆலோசித்து, தருமம்பார்த்து - அவ்வுயிர்கள்செய்த புண்ணியத்தைநோக்கி, விண் ஏற்றும் என்பது அன்றி - மேலுலகத்திற்கொண்டு செலுத்துமென்பதல்லாமல், இவளைப்போல் - இவ்வரக்கியைப்போல, நாற்றம் கேட்டலும் - நாற்றத்தையுணர்தலும், தின்ன நயப்பது - தின்னவிரும்புகிற, ஓர்கூற்று உண்டோ- ஒருயமனுண்டோ, சொலை - சொல்வாய், கூற்று உறழ்வேலினாய் - பகைவர்களுக்கு யமனையொத்த வேலாயுதத்தையுடைய ஸ்ரீராமா—எ-று. (சஙச)

மூக்குப்புலனாகிய நாற்றத்தைச் செவிப்புலனாகிய கேள்வியின்மேலேற்றிக் கூறினார், மற்றைப் புலன்களின் விருப்பினும் சுவைபல விருப்புமிகுதியு முடையாளென்ப துணர்த்தற்கு.

405. மன்னும் பல்லுயிர் வாரித்தன் வாய்ப்பெய்து
தின்னும் புன்மையிற் றீமைய தேயைய
பின்னுந் தாழ்குழற் பேதைமைப் பெண்ணிவள்
என்னுந் தன்மை யெளிமையின் பாலதே.

(இ-ள்.) மன்னும் - நிலைபேறுள்ள, பல் உயிர்-பல வுயிர்களையும், வாரி-அள்ளி, தன்வாய்பெய்து - தன் வாயிற்போட்டுக்கொண்டு, தின்னும் - மெல்லுகின்ற, புன்மையின் - கீழ்மையைப் பார்க்கினும், தீமையதே - தீமையாதே, ஐய - ஐயனே, இவள் - இவ்வரக்கி, பின்னும் - பின்னப்படுகிற, தாழ்குழல் - நீண்ட கூந்தலையும், பேதைமை - அறியாமையையுமுடைய, பெண் என்னும் தன்மை - பெண்ணென்று நினைக்கின்ற தன்மையானது, எளிமையின்பாலதே-அறியாமைப் பாற்பட்டதே. ()

406. ஈறி னல்லறம் பார்த்திசைத்தே னிவட்
சீறி நின்றிது செப்புகின்றே னலேன்
ஆறி நின்ற தறனன் றரக்கியைக்
கோறி யென்றெதி ரந்தணன் கூறினான்.

(இ-ள்.) ஈறு இல் - முடிவில்லாத, நல் அறம் பார்த்து-நல்ல தர்மத்தைநோக்கி, இசைத்தேன் - சொன்னேன், இவள் சீறிநின்று - இவளைக் கோவித்து நின்று, இது செப்புகின்றேனலேன் - இது சொல்லுகிறேனல்லேன், (ஆதலால் நீ) ஆறிநின்றது -

கோவம் தணிந்து நின்றது, அறன் அன்று - தருமமல்லதாகும், அரக்கியை - இவ் வரக்கியை, கோறியென்று - கொல்வாயென்று, எதிர் - ஸ்ரீராமபிரானுக் கெதிரில் நின்று, அந்தணன் கூறினன் - முனிவன் சொன்னான்—எ-று. (சுசு)

407. ஐய னங்கது கேட்டற னல்லவும்
எய்தி னலது செய்கவென் றேவினல்
மெய்ய நின்னுரை வேத மெனக்கொடு
செய்கையன் றோவறஞ் செய்யுமா றென்றான்.

(இ-ள்.) ஐயன் - ஸ்ரீராமபிரான், அங்கு அதுகேட்டு - அவ்விடத்து அந்தவார்த்தையைக்கேட்டு, அறன் அல்லவும் - தருமமல்லாதனவும், எய்தினல்-சம்பவித்தால், அது - அதனை, செய்க என்று - செய்யவேண்டுமென்று, ஏவினல் - தேவர் நியமித்தால், மெய்ய - மெய்யனே, நின் உரை - உமது வார்த்தையை, வேதம் என கொடு- வேதவாக்கியமாக மனத்திற்கொண்டு, செய்கை அன்றோ-அவ்வாறு செய்வதன்றோ. அறம் செய்யும் ஆறு - தருமஞ்செய்யு முறைமை, என்றான்-என்று சொன்னான் எ-று.

408. கங்கைத் தீம்புன ணாடன் கருத்தையும்
மங்கைத் தீயனை யாளும் மனக்கொளா
செங்கைச் சூலவெந் தீயினைத் தீயதன்
வெங்கட் டீயொடு மேற்செல வீசினள்.

(இ-ள்.) தீபுனல் - மதுரமாகிய நீரையுடைய, கங்கைநாடன் - கங்காநதிசூழ்ந்த கோசல நாட்டையுடைய ஸ்ரீராமபிரானது, கருத்தையும் - அபிப்பிராயத்தையும், மங்கைதீ அனையாளும் - பெண்ணுருக்கொண்ட நெருப்பையொத்த தாடகையும், மனம்கொளா - மனத்திற்கொண்டு, செங்கைசூலம் வெம்தீயினை-தன் செவந்தகையிலுள்ள சூலமாகிய கொடிய நெருப்பை, தீய - குரூரமான, தன் - தனது, வெம்கண் தீயொடு - வெவ்விய கண்களிலுண்டாகிய நெருப்புப் பொறியோடு, மேல்செல்ல - ஸ்ரீராமபிரான் மேற்சொல்லும்படி, வீசினள் - எறிந்தாள்—எ-று. (சுஅ)

409. புதிய கூற்றனை யாள்புகைந் தேவிய
கதிர்கொண் மூவிலைக் காலவெந் தீமுனி
விதியை மேற்கொண்டு நின்றவன் மேலுவா
மதியின் மேல்வருங் கோளென வந்ததே.

(இ-ள்.) புதியகூற்று அனையாள் - புதிய யமனை யொத்தவளாகிய தாடகை, புகைந்து ஏவிய - மனங்கொதித்தேவின, கதிர்கொள் - கிரணங்களைக் கொண்ட, மூவிலை - மூவிலைச் சூலமாகிய, காலவெம்தீ - வெவ்விய காலாக்கினியானது, முனி- விஸ்வாமித்திர முனிவனது, விதியை-நியமனத்தை, மேற்கொண்டு நின்றவன்மேல் மேற்கொண்டு நின்றவனாகிய ஸ்ரீராமபிரான்மீது, உவாமதியின் மேல்வரும் - முழுச் சந்திரன்மேல் வருகிற, கோள் என - இராகுவென்கிற கிரகம்போல, வந்தது - வந்தது—எ-று. (சுகூ)

410. மாலு மக்கணம் வாளியைத் தொட்டதும்
கோல விற்கால் குனித்ததுங் கண்டிலர்
சாலனைப் பறித்தக் கடியாள் விட்ட
சூல மற்றன துண்டங்கள் கண்டனர்,

(இ-ள்.) மாலும் - ஸ்ரீராமபிரானும், அ கணம் - அந்த க்ஷணத்தில், வாளியை தொட்டதும் - பாணத்தைத் தொட்டெடுத்ததையும், கோலம் - அழகையுடைய, வில் - வில்லினது, கால் குனித்ததும் - குதைகளை வளைத்ததையும், கண்டிலர்-யாவரும் கண்டாரில்லை, (ஆனால் மற்றதைக் கண்டார்களெனின்) காலனை பறித்து - காலனிடத்தினின்றும் பறித்து, அ கடியாள் - அந்தக்கொடியாள், விட்ட - எவிய, சூலம் அற்றன துண்டங்கள் - சூலம் சேதிக்கப்பட்டு விழுந்தனவாகிய துண்டுகளை, கண்டனர் - பார்த்தார்கள்—எ-று. (எ0)

411. அல்லின் மாரி யனைய நிறத்தவள்
சொல்லின் மாத்திரை யிற்கடல் தூர்ப்பன
கல்லின் மாரியைக் கைவகுத் தாளது
வில்லின் மாரியின் வீரன் விலக்கினான்.

(இ-ள்.) அல்லின் - இராக்காலத்தில், மாரி அனைய - மேகத்தையொத்த, நிறத்தவள் - நிறத்தையுடைய தாடகை, சொல்லின் மாத்திரையின் - ஒரு சொற் சொல்லும் அளவில், கடல் - கடல்களையும், தூர்ப்பன - தூர்த்துவிடுவனவாகிய, கல்லின் மாரியை - கல்மழையை, கைவகுத்தாள் - கையினாற் பெய்தாள், அது - அந்த மழையை, வீரன் - பராக்ரமசாலியாகிய ஸ்ரீராமபிரான், வில்லின் மாரியின் - வில் மழையால், விலக்கினான் - நீக்கிவிட்டான்—எ-று. (எக)

வேறு.

412. சொல்லொக்குங் கடியவேகச் சுடுசரங் கரியசெம்மல்
அல்லொக்கு நிறத்தினாண்மேல் விடுதலும் வயிரக்குன்றக்
கல்லொக்கு நெஞ்சிற்றங்கா தப்புறங் கழன்றுகல்லாப்
புல்லர்க்கு நல்லோர்சொன்ன பொருளெனப் போயிற்றன்றே.

(இ-ள்.) கரியசெம்மல் - கருநிறமுள்ள ஸ்ரீராமபிரான், சொல் ஒக்கும் - (முனிவரது) சாபாநுக்கிரகச் சொல்லையொத்த, கடியவேகம் - அதிகவேகத்தையுடைய, சுடு சரம் - ஒரு வெவ்வியபாணத்தை, அல் ஒக்கும் - இருளை நிகர்க்கின்ற, நிறத்தினாள் மேல் - நிறத்தையுடையவளாகிய தாடகையின்மீது, விடுதலும் - எய்தலும், (அது) வயிரக்குன்றம்-வைரமலையினது, கல் ஒக்கும் - மலையையொத்த, நெஞ்சில்-அவளது மார்பில், தங்காது - (தைத்து) தங்கியிராமல், அப்புறம் கழன்று - அப்புறம் உருவி, கல்லா - கல்லாத, புல்லர்க்கு - கீழ்மக்களுக்கு, நல்லோர் சொன்ன - மேலோர்கள் சொன்ன, பொருள் என - அர்த்தவிசேஷம்போல, போயிற்று - போய்விட்டது—எ-று. (எஉ)

சொல் என்றது பயன்நிறைந்த சொல். அது தன் பயனை விரைவில் கொடுப்பதுபோல, சுடுசரமும் தன் பயனை விரைவிற் கொடுத்தலால் "சொல்லொக்குங் கடியவேகச் சுடுசரம்" என்றார். இது "நிறைமொழி மாந்தர்" என்பதனானுமறிக. வயிரக்குன்றம் என்றது வன்மைக்கும், கல் என்பது பெருமைக்கும் உவமைப் பொருள்கள். மேலோர் மூடர்களுக்குச் சொன்ன மேலான அர்த்தமானது அவர்கள் மனத்தில் தங்காமல் உடனே நீங்குவதுபோல, ராம பாணமும் அவ்வரக்கியது நெஞ்சில் சிறிது நேரமாயினும் தங்காமல் முதுகின்புறத்துருவி யோடிற்று என்பது கருத்து.

413. பொன்னெடுங் குன்றமன்னான் புகர்முகப் பகழியென்னும்
மன்னெடுங் காலவன்காற் றடித்தலு மிடித்துவானில்

கன்னெடு மாரிபெய்யக் கடையுகத் தெழுந்தமேகம்
மின்னொடு மசனியோடும் வீழ்வதே போலவீழ்ந்தாள்.

(இ-ள்.) நெடு - பெரிய, பொன்குன்றம் அன்னான் - பொன்மலையை யொத்த ஸ்ரீராமபிரானது, புகர்முகப்பகழி என்னும் - கபிலநிறத்தைத் தன்னிடத்துள்ள பாணமென்கின்ற, நெடு - பெரிய, அ - அந்த, வெம் - வெவ்விய, காலக்காற்று - ஊழிக்காற்றானது, அடித்தலும் - வீசுதலும், வானில் - ஆகாசத்தில், கல் நெடுமாரி பெய்ய - பெரிய கல்மழையைப் பெய்வதற்காக, கடையுகத்து - யுகாந்த காலத்தில், இடித்து - இடித்துக்கொண்டு, எழுந்த - மேலெழுந்த, மேகம் - மேகமானது, மின்னொடும் - மின்னலோடும், அசனியோடும் - இடியோடும், வீழ்வதேபோல - விழுவது போலவே, வீழ்ந்தாள் (மடிந்து) விழுந்தாள்—எ-று. (எஙு)

மின்னலை அவளுடைய கோரதந்தங்களுக்கும், இடியை அவளது கதறலுக்கும் உவமையாகக் கொள்க.

414. பொடியுடைக் கானமெங்குங் குருதிநீர் பொங்கவீழ்ந்த
தடியுடை யெயிற்றுப்பேழ்வாய்த் தாடகை தலைகடோறும்
முடியுடை யரக்கற்கந்நாண் முந்தியுற் பாதமாகப்
படியிடை யற்றுவீழ்ந்த வெற்றியம் பதாகையொத்தாள்.

(இ-ள்.) பொடி உடை - புழுதியையுடைய, கானம் எங்கும் - அந்த வனமெல்லாம், குருதி நீர் பொங்க வீழ்ந்த - உதிர நீர் மிகுதியாகும்படி விழுந்த, தடி உடை - பிறவுயிர்களின் தசை பொருந்திய, எயிறு - பற்களையும், பேழ்வாய் - பெரிய வாயையும் உடைய, தாடகை - தாடகையானவள், தலைகள்தோறும் - தலைகளிலெல்லாம்; முடி உடை - மகுடத்தையுடைய, அரக்கற்கு - அரக்கனாகிய ராவணனுக்கு, அ நாள் முந்தி - அந்த மரணகாலத்துக்கு முற்பட்டு, உற்பாதம், ஆக - துர்நிமித்தமாக, படியிடை - பூமியின்மீது, அற்று வீழ்ந்த - அறுந்து வீழ்ந்த, வெற்றிபதாகை-வெற்றிக் கொடியை, ஒத்தாள் - ஒத்திருந்தாள்—எ-று. (எச)

415. கான்றிரிந் தாழியாகத் தாடகைக் கடினமார்பத்
தூன்றிய பகழிவாயூ டொழுகிய குருதிவெள்ளம்
ஆன்றவக் கானமெல்லா மாயின தந்திமாலைத்
தோன்றிய செக்கர்வானந் தொடக்கற்று வீழ்ந்ததொத்தே.

(இ-ள்.) கான் - வனமானது, திரிந்து - வேறாகி, ஆழி ஆக - கடலாகும்படி, தாடகை - தாடகையின், கடினம் - வன்மையான, மார்பத்து - மார்பினிடத்தில், ஊன்றிய - தைத்த, பகழிவாயூடு - பாணத்தின் வழியாக, ஒழுகிய - ஒழுகின, குருதி வெள்ளம் - ரக்தப்ரவாஹமானது, அந்திமாலை - அந்தியாகிய மாலைக் காலத்தில், தோன்றிய - உண்டாகிய, செக்கர்வானம் - செவ்வானமானது, தொடக்கு அற்று - தான் பற்றின ஆதாரமற்று, வீழ்ந்தது ஒத்து - விழுந்ததுபோன்று, ஆன்ற-அகன்ற, அ கானம் எல்லாம் - அந்த வனமுழுதும், ஆயினது - பரவியது—எ-று. (எடு)

416. வாசநாண் மலரோனன்ன மாமுனி பணிமறாத
காசுலாங் கனகப்பைம்பூட் காகுத்தன் கன்னிப்போரில்
கூசிவா ளரக்கர்தங்கள் குலத்துயிர் குடிக்கவஞ்சி
ஆசையா லுழலுங்கூற்றுஞ் சுவைசிறி தறிந்ததன்றே.

(இ-ள்.) வாசம் - மணமிகுந்த, நாள் - புதிய, மலரோன் - தாமரைமலரில் வீற்றிருக்கும் பிரமதேவனை, அன்ன - ஒத்த, மா - பெருமையுள்ள, முனி - விசுவாமித்திரமுநிவனது, பணி - கட்டளையை, மறுத - மறுக்காத, காசு உலாம் கனகம்பைம்பூண் - ரத்நங்களிழைத்தபசும்பொன்னாபரணக்களையணிந்த, காகுத்தன் - ஸ்ரீராமபிரானது, கன்னிப்போரில் முதற்போரில், வாள் அரக்கர் தங்கள் குலத்து - வாளைத்தாங்கிய அரக்கரது குலத்தாருடைய, உயிர் - உயிரை, குடிக்க - உண்ண, கூசி - கூசுதலடைந்து, அஞ்சி - பயந்து, ஆசையால் உழலும் - (உண்ண வேண்டுமென்கிற) விருப்பத்தால் திரிந்துகொண்டிருந்த, கூற்றும் - யமனும், சிறிது - கொஞ்சம், சுவை அறிந்தது (அரக்கருயிர்ச்சுவையை) அறிந்தான்—எ-று.

அன்று, ஏ, அசைகள். காகுத்தன் - காகுத்தன் மரபிற்பிறந்தவன், கன்னி- இளமை, இது இவ்விடத்தில் முதன்மையை ப்ணர்த்திநின்றது. கூற்று - சொல்லான் அஃறிணையும் பொருளான் உயர்திணையு மாய சொல்.

417. யாமுமிமெம் மிருக்கைபெற்றே முனக்கிடை யூறுமில்லை
கோமகற் கினியதெய்வப் படைக்கலங் கொடுத்தியென்று
மாமுனிக் குரைத்துப்பின்னர் விற்கொண்ட மழையனான்மேற்
பூமவழ பொழிந்துவாழ்த்தி விண்ணவர் போயினாரே.

(இ-ள்.) (பிறகு) விண்ணவர் - தேவர்கள், யாமும் - நாங்களும், எம் - எங்களுடைய, இருக்கை - இருப்பிடங்களை, பெற்றேம்-அடைந்தோம், உனக்கு - நினக்கு, இடையூறு இல்லை - இடையூறுகளுமினியுளவாகா, கோமகற்கு - சக்ரவர்த்தித் திருக்குமாரனாகிய ஸ்ரீராமபிரானுக்கு, இனிய - இனிமையான, தெய்வப்படைக்கலம் - கடவுட்டன்மையையுடைய ஆயுதங்களை, கொடுத்தி - கொடுப்பாய், என்று - என்று, மாமுனிக்கு உரைத்து - பெருமைபொருந்திய விசுவாமித்ரமுநிவனுக்குச் சொல்லி, பின்னர் - அதன்பிறகு, வில்கொண்ட - வில்லைத் தன்னிடத்துக் கொண்டிருக்கிற, மழை - மேகத்தை, அன்னான்மேல் - ஒத்திருப்பவனாகிய ஸ்ரீராமபிரான்மேல், பூமழைபொழிந்து - புஷ்பமாரிபொழிந்து, வாழ்த்தி - ஆசீர்வதித்து, போயினார் - தத்தமிடக்களைநோக்கிச் சொன்றார்கள்—எ-று. (எஎ)

வில் - வானவில்.

அ-வது. தாடகைவதைப் படலம்-முற்றிற்று.

## கூ-வது. வேள்விப் படலம்.



விசுவாமித்திரமுனியின் யாகத்தை யுணர்த்திய படலம்.



இந்நூலுக் குபகாரியின் பெயர் காண்க.

418. விண்ணவர் போயபின்றை விரிந்தபூ மழையினாலே
தண்ணெனுங் கானநீங்கித் தாங்கருந் தவத்தின்மிக்கோன்
மண்ணவர் வறுமைநோய்க்கு மருந்தன சடையன்வெண்ணெய்
அண்ணறல் சொல்லேயன்ன படைக்கல மருளினானே

(இ-ள்.) விண்ணவர். தேவர்கள், ஏபாயபின்றை - போனபிறகு, விரிந்த - பரவிய, பூமழையினுல் - புஷ்பவருஷத்தால், தண் எனும் - குளிர்ச்சியடைந்திருக்கிற, கானம் - அந்தவனத்தினின்று, நீங்கி - நீங்கி, தாங்கு அரு - பிறரால் தாங்குதற்கரிதான, தவத்தின் - தவத்தொழிலால், மிக்கோன் - மேலானவனுகிய விசுவாமித்ரமுநிவன், மண்ணவர் - மண்ணுலகத்தாருடைய, வறுமைநோய்க்கு - தரித்திர வியாதிக்கு, மருந்து அன்ன - மருந்துபோன்ற, சடையன் - சடையப்பனென்னுமியற்பெயருள்ளவனுகிய, வெண்ணெய் அண்ணல் - திருவெண்ணெய் நல்லூரிலுள்ளவள்ளலினது, சொல்லே அன்ன - சொல்லையேயொத்த, படைக்கலம் - படைக்கலங்களை, அருளினுன் - தயையோடுகொடுத்தான்—எ-று. (க)

மருந்தைக்கண்டால் வியாதி நில்லாதுபோல, சடையப்பமுதலியாரைக்கண்டால் வறுமைநில்லாதென்பது கருத்து. அவனது சொல்தவறுமைபோல, 'படைக்கலங்களும் தத்தம் தொழில்களில் தவறுதென்பார் வெண்ணெயண்ணறன்சொல்லேயன்ன படைக்கலம் என்றார், படைக்கலம்-அஸ்திரங்கள்.

419. ஆறிய வறிஞன் கூறி யளித்தலு மண்ணறன்பால்
ஊறிய வுவகையோடு முமபர்தம் படைகளெல்லாம்
தேறிய மனத்தான்செய்த நலவினைப் பயன்களெல்லாம்
மாறிய பிறபிற்றேடி வருவபோல் வந்தவன்றே.

(இ-ள்.) ஆறிய - காமவெகுளி மயக்கங்கள் தணிந்த, அறிஞன் - விசுவாமித்ரமுநிவன், கூறி - (அவ்வற்றுக்குரிய மந்திரங்களை) யுபதேசித்து, அளித்தலும் - கொடுத்தலும், உம்பர் படைகள் எல்லாம் - தேவாஸ்த்ரங்களெல்லாம், தேறிய மனத்தான் - ஐயப்பாடில்லாத மனத்தையுடையவொருவன், செய்த - பண்ணின, நல்வினை - சற்கருமங்களின், பயன்கள் எல்லாம் - பிரயோசனங்களெல்லாம், மாறியபிறப்பின் - மறுபிறப்பில், தேடிவருவபோல் - அவனைத் தேடிக்கொண்டு வருவனபோல், அண்ணல்பால் - ஸ்ரீராமபிரானிடத்தில், ஊறிய - சுரந்த, உவகையோடும் - சந்தோஷத்துடன், வந்த - வந்தன—எ-று. (உ)

ஒருவன்செய்த நல்வினைப்பயன்கள் மறுபிறப்பில் அவனைத்தேடி வருவதுபோல, தேவாஸ்திரங்களெல்லாம் ஆயுத ராஜமாகிய சுதரிசனத்தை யுடைய ஸ்ரீ ராமபிரானைத் தேடிவந்தடைந்தன வென்பது கருத்து.

420. மேவினம் பிரிதலாற்றேம் வீரநீ விதியினெம்மை
ஏவின செய்துநிற்று மிளையவன் போலவென்று
தேவர்தம் படைகள் செப்பச் செவ்விதன் றவனும்நேரப்
பூவைபோ னிறத்தினுற்குப் புறத்தொழில் புரிந்தவன்றே.

(இ-ள்.) தேவர்படைகள் - (அவ்வாறுவந்த) தேவாஸ்திரங்கள், (ஸ்ரீராமபிரானைநோக்கி) வீர - பராக்கிரமசாலியே, மேவினம் - உன்னைவந்தடைந்தோம், பிரிதல் ஆற்றேம் - (இனியுன்னைவிட்டுப்) பிரியமாட்டோம், விதியின் - முறைமையாக, எம்மை - எங்களை, ஏவின - ஏவின தொழில்களை, இளையவன்போல - இளையபெருமாள் தவறுது நிற்றல் போல, செய்து நிற்றும் என்று - செய்து நிற்போமென்று, செப்ப - சொல்ல, அவனும் - அந்த ஸ்ரீராமபிரானும், செவ்விதென்றுநேர - நல்லதென்று சம்மதிக்க, (அந்த அஸ்திரங்கள் அன்றுமுதல்) பூவைபோல் நிறத்தினுற்கு - காயாமலர்போன்ற நிறத்தையுடையவனுகிய ஸ்ரீராமபிரானுக்கு, புறத்தொழில்புரிந்த - புறத்திலுள்ள திருப்பணிகளைச் செய்துகொண்டிருந்தன—எ-று. (ஈ)

421. இனையன நிகழ்ந்தபின்னர்க் காவத மிரண்டுசென்றார்
அனையவர் காணவாண்டோ ரரவம்வந் தணுகித்தோன்ற
முனைவன் தியாவதென்று முன்னவன் வினவப்பின்னர்
வினையற நோற்றுநின்ற மேலவன் விளம்பலுற்றான்.

(இ-ள்.) இனையன - இத்தன்மையவான காரியங்கள், நிகழ்ந்தபின்னர் - நடந்தபிறகு, காவதம் இரண்டுசென்றார் - இரண்டுகாதவழி போயினார்கள், அனையவர்காண - அவர்கள்காணும்படி, ஆண்டு - அவ்விடத்தில், ஓர் அரவம்வந்து அணுகித்தோன்ற - ஒரு ஒலியானது உண்டாகி நெருங்கிக்கேட்கப்பட, முன்னவன் - யாவர்க்கு முதல்வனாகிய ஸ்ரீராமபிரான், (முனிவனைநோக்கி) முனைவ - முனிவனே, ஈது - இந்தவோசையானது, யாவது - எதனாலுண்டாகிறது, என்று வினவ - என்று - கேட்க, (அதைகேட்ட) வினை அற - இருவினைகளும் அறும்படி, நோற்று நின்ற - தவஞ்செய்து நிலைத்த, மேலவன் - மேன்மையையுடைய விசுவாமித்ரமுனிவன், விளம்பல் உற்றான் - சொல்லலுற்றான்—எ-று. (ச)

422. மானச மடுவிற்றோன்றி வருதலாற் சரயுவென்றே
மேன்முறை யமரர்போற்றும் விழுநதி யதனினோடும்
ஆனகோ மதிவந்தெய்து மரவம தென்னவப்பாற்
போனபின் பவங்கடீர்க்கும் புனிதமா நதியையுற்றார்.

(இ-ள்.) மானசமடுவில்தோன்றி - மாநஸ ஸரஸ்ஸில் உற்பத்தியாகி, வருதலால் - வருகையால், சரயு என்று - சரயு என்று சொல்லப்பட்டு, மேல்முறை - மேலானநூலின்படி, அமரர்போற்றும் - தேவர்கள்போற்றுகின்ற, விழுநதி யதனினோடும் - பெருமைபொருந்திய நதியுடன், ஆன - முன்னொருகாரணத்தால் உண்டாகிய, கோமதி - கோமதியென்னும் நதியானது, வந்து எய்தும் - வந்துசேர்தலாலுண்டாகிற, அரவம் என்ன - ஓசையென்றுசொல்ல, அப்பால் போனபின் - அப்புறஞ்சென்றபிறகு, பவங்கள்தீர்க்கும் - தன்னிடத்தில் மூழ்குவோருடைய பிறவிகளையொழிக்கின்ற, புனிதம் ஆம் - பரிசுத்தமான, நதியை - அந்தநதியை, உற்றார்-அடைந்தார்கள்—எ-று. (ரு)

அரவமது என்பதில் அ சாரியை, து பகுதிப்பொருள்விகுதி, மேல்முறை என்பதற்கு மேலான முறைமையையுடைய எனினுமாம். விழுமம் எனற்பாலது விழும் என அம்முக்குறைந்து நின்றது.

423. சுரர்தொழு திறைஞ்சற்கொத்த தூநதி யாவதென்று
வரமுனி தன்னையண்ணல் வினவுற மலருள்வைகும்
பிரமனன் றளித்தவென்றிப் பெருந்தகை குசனென்றோதும்
அரசர்கோன் மனைவிதன்பா லளித்தவர் நாலவராகும்.

(இ-ள்.) (இவ்வாறு அந்தநதியருகே சென்றவுடன்) அண்ணல் - ஸ்ரீராமபிரான், வரமுனிதன்னை - மேலானமுனிவனை (நோக்கி) சுரர் - தேவர்களும், தொழுது இறைஞ்சற்கு ஒத்த - தொழுது வணங்குதற்கரிய, தூநதி - பரிசுத்தமான இந்தநதி, யாவது என்று வினவுற - எத்தன்மையதென்றுகேட்க, (முனிவன்சொல்லுகிறான்) மலருள்வைகும் - தாமரைப்பூவில் தங்குகிற, பிரமன் - பிரமதேவன், அன்று அளித்த - அக்காலத்தில் பெற்ற, வென்றி - வெற்றியையும், பெருந்தகை - பேராற்றலையுமுடைய, குசன் என்று ஓதும் - குசன் என்று சொல்லப்படுகிற, அர

சர்கோன் மனைவி தன்பால்-அரசர்க்கு அரசன் தன் பத்தினியினிடமாக, அளித்தவர்-தந்தபுத்திரர், நால்வர் - நால்வர் ஆவார்—எ-று. (சு)

ஆகும் என்பது ஆமென்பதுபோலும் அசை.

424. குசன்குச நாபன்கோதில் குணத்தின தூர்த்தன்கொற்றத்
திசைகெழு வசுவென்றோது மிவர்பெய ரிவர்கடம்மில்
குசன்கவு சாம்பிநாபன் குளிர்மகோ தயமதூர்த்தன்
வசையில்தன் மதனமற்றை வசுகிரி விரசம்வாழ்ந்தார்.

(இ-ள்.) குசன் - குசனும், குசநாபன் - குசநாபனும், கோது இல் - குற்றமில்லாத, குணத்தின் - குணத்தையுடைய, அ தூர்த்தன் - அ தூர்த்தனும், கொற்றத்து - வெற்றினால், இசைகெழு - கீர்த்திபொருந்திய, வசு - வசுவும், என்று ஓதும் - என்றுசொல்லப்பட்ட, இவர் - இவர்களுடைய, பெயர் - பெயர்களாம், இவர்கள்தம்மில் - இவர்களுக்குள், குசன் - குசனென்பவன், கவுசாம்பி - கௌசாம்பிநகரத்திலும், நாபன் - குசநாபனென்பவன், குளிர் - குளிர்ந்த, மகோதயம் - மகோதய நகரத்திலும், அ தூர்த்தனன் - அ தூர்த்தனென்பவன், வசை இல் தன்மவனம் - குற்றமில்லாத தர்மவநமென்னும் நகரத்திலும், மற்றைவசு - மற்றையோனாகிய வசுவென்பவன், கிரிவிரசம் - கிரிவிரசநகரத்திலும், வாழ்ந்தார் - அரசுபுரிந்துக்கொண்டிருந்தார்கள்—எ-று. (எ)

425. அவர்களிற் குசநாபற்கே யையிரு பதின்மரஞ்சொல்
துவரிதழ்த் தெரிவைநல்லார் தொன்றினர் வளருநாளில்
இவர்பொழிற் றலைக்கணாயத் தெய்துழி வாயுவெய்தி
கவர்மனத் தினனாயந்தக் கின்னியர் தம்மைநோக்கி.

(இ-ள்.) அவர்களில் - அவர்களுக்குள், குசநாபற்கு - குசநாபனென்பவனுக்கு, அம்சொல் - அழகியசொல்லைப்பேசுகின்ற, துவர் இதழ் - பவளத்தையொத்த அதரத்தையுடைய, தெரிவைநல்லார் - பெண்கள், ஐயிருபதின்மர் - நூறுபேர், தோன்றினர் - பிறந்து, வளரும்நாளில் - வளர்கின்ற காலத்தில், இவர் - இந்தப் பெண்கள், பொழில் தலைக்கண் - ஒரு சோலையின்கண், ஆய்த்து - தோழியர் கூட்டத்தோடு, எய்துழி - சேர்ந்தபோது, வாயு - வாயுபகவான், எய்தி அவ்விடத்துக்குவந்து, கவர் - அந்தப்பெண்களை யபகரிக்கவேண்டுமென்கிற, மனத்தினனாய் - எண்ணமுள்ளவனாய், அந்த கன்னியர் தம்மைநோக்கி - அந்தக்கன்னியர்களைப்பார்த்து—எ-று. (அ)

426. கொடித்தனி மகரங்கொண்டான் குனிசிலைச்சரத்தா னொந்தேன்
வடித்தடங் கண்ணீரென்னை மணத்திரென் னுரைப்பவெந்தை
அடித்தலத் துரைத்துநீரோ டளித்திடி னிணைதுமென்ன
ஒடித்தனன் வெரிகைவீழ்ந்தா ரொளிவளை மகளிரெல்லாம்.

(இ-ள்.) தனி ஒப்பற்ற, மகரம் - மகரமீனை, கொடிகொண்டான் - கொடியாகக் கொண்டவனாகிய மன்மதனது, குனி - வளைக்கப்பட்ட, சிலை-கருப்புவில்லிற் கோத்தெய்த, சரத்தால் - புஷ்பபாணங்களால், நொந்தேன் - வருந்தினேன், (ஆகையால்) வடி - மாவடு வகிர்போன்ற, தடம்-பெரிய, கண்ணீர் - கண்களையுடையவர்களே, என்னை மணத்திர - என்னைப்புணருங்கோள், என்று உறைப்ப - என்று சொல்ல, எந்தை - எமது தந்தையினது, அடித்தலத்து - திருவடிகளில், உரைத்தும் - விண்ணப்பஞ் சொய்வோம், (அவர் அதற்கிசைந்து) நீரோடு அளித்திடின் -

நீருடன்கொடுத்தால், அணைதும்-உன்னைச்சேருவோம், என்ன-என்று அந்தப்பெண்கள்சொல்ல, (அதைக்கேட்ட வாயுபகவான்) வெரிநை - (அவர்களுடைய) முதுகுகளை, ஒடித்தனன்-ஒடித்துவிட்டான், (உடனே) ஒளி-பிரகாசமுள்ள, வளை-வளையலையணிந்த, மகளிர் எல்லாம் - அந்தக்கன்னியர்களெல்லாரும், வீழ்ந்தார் - கீழேவிழுந்தார்கள்—எ-று. (கூ)

427. சமீரண னகன்றபின்னர்த் தையலார் தவழ்ந்துசென்றே
அமிர்துகு குதலைமாழ்கி யரசன்மாட் டுரைப்பவன்னோன்
நிமிர்குழன் மடவார்த்தேற்றி நிறைதவன் சூளிநல்கும்
திமிரறு பிரமதத்தற் களித்தனன் றிருவனாரை.

(இ-ள்.) சமீரணன் - (இப்படிச்செய்த) வாயுபகவான், அகன்றபின்னர்-நீங்கினபிறகு, தையலார் - அந்தப்பெண்கள், தவழ்ந்து சென்று - தவழ்ந்துபோய், அமிர்து உகு - அமிர்தம்போலச்சிந்துகின்ற, குதலை - மழலைச்சொற்களால், மாழ்கி - குழறிக்கொண்டு, அரசன்மாட்டு அரசனிடத்தில், உரைப்ப-சொல்ல, அன்னோன்-அவ்வரசன், நிமிர்குழல்-நீண்டகூந்தலையுடைய, மடவார்த்தேற்றி-அந்தப்பெண்களைத் தேறுதல் செய்து, திரு அன்னாரை-திருமகளை யொத்தவளாகிய அந்தப்பெண்களை, நிறைவன்-முற்றுப்பெற்ற தவத்தையுடையவனாகிய, சூளி - சூளியென்னும் முனிவன், நல்கும்-பெற்ற, திமிர் அறு-அஞ்ஞான அந்தகாரம்நீங்கிய, பிரமதத்தற்கு-பிரமதத்தனென்னு முனிவனுக்கு, அளித்தனன்-மணஞ்செய்துகொடுத்தான்—எ-று. (ய)

திமிரம் எனற் பாலது திமிர் என அம்முக்குறைந்து நின்றது.

428. அவன்மலர்க் கைகடீண்டக் கூனிமிர்ந் தழகுவாய்த்தார்
புவனமுற் றுடையகோவும் புதல்வரில் லாமைவேள்வி
தவர்களிற் புரிதலோடுந் தகையுறத் தழலினாப்பண்
கவனயவ கத்துரங்கக் காதிவந் துதயஞ்செய்தான்.

(இ-ள்.) அவன்-அந்தப்பிரமதத்தமுனிவன், மலர்கைகள்-தாமரைமலர்போன்ற (அந்தப்பெண்களுடைய) கைகளை, தீண்ட - தொடுதலும், கூன் நிமிர்ந்து-அவர்கள் தமது கூன்நிமிரப்பெற்று, அழகு வாய்த்தார் - அழகு பெற்றார்கள், புவனம்முற்று உடைய-உலகமுழுதும் தனது ஆளுகையிலுடைய, கோவும்-அந்தக்குசநாபனென்னு மரசனும், புதல்வர் இல்லாமை - தனக்குப்புத்திரரில்லாமையால், வேள்வி - புத்ரகாமேஷ்டியை, தவர்களின் - முனிவர்களைக்கொண்டு, புரிதலோடும் - செய்தலோடும், தகை உற - அழகுபொருந்த, தழலின் நாப்பண் - அந்தயாகாக்நிமத்தியில், கவன வேகம் - வேகமான நடையையுடைய, துரங்கம் குதிரைகளோடுகூடிய, காதி - காதியென்பவன், வந்து உதயம்செய்தான்-வந்துபிறந்தான்—எ-று. (கக)

429. அன்னவன் றனக்குவேந்த னரசொடு முடியுமீந்து
பொன்னக ரடைந்தபின்னர்ப் புகழ்மகோ தயத்தில்வாழும்
மன்னவன் காதிக்கியானுங் கவுசிகை யென்னுமாதும்
முன்னர்வந் துதிப்பவந்த முடியுடை வேந்தர்வேந்தன்.

(இ-ள்.) அன்னவன்தனக்கு - அந்தக்காதி யென்பவனுக்கு, வேந்தன்-குசநாபனென்னுமரசன், அரசொடு - அரசாட்சியோடு, முடியும் - கிரீடத்தையும், ஈந்து-கொடுத்து, பொன் நகர் அடைந்தபின்னர் - சுவர்க்கலோகத்தைச் சேர்ந்தபிறகு,

புகல்-சொல்லப்பட்ட, மகோதயத்தில் - மகோதயநகரத்தில், வாழும் - வாழ்கின்ற, மன்னவன்-அரசனாகிய, காதிக்கு - காதியென்பவனுக்கு, யானும் - நானும், கவுசிகை என்னும்மாதும் - கௌசிகையென்கிறபெண்ணும், முன்னர் - பூர்வத்தில், வந்து உதிப்ப-வந்துபிறக்க, அந்தமுடி உடைவேந்தர்வேந்தன்-அந்த மகுடத்தையணிந்த அரசர்கரசனாகிய காதியென்பவன்—எ-று. (கஉ)

430. பிருகுவின் மதலையாய பெருந்தகைப் பிதாவுமொவ்வா
இருசிக னென்பவற்கு மெல்லிய லாளையீந்தான்
அருமறை யவனுஞ்சின்னா ளறம்பொரு ளின்பமுற்ற
விரிமலர்த் தவிசோன் றன்பால் விழுத்தவம் புரிந்துமீண்டான்.

(இ-ள்.) (அவ்வாறு நாங்கள் பிறந்து வளருநாளில் எங்கள் பிதாவாகிய காதி மஹாராஜன்) பிறகுவின் மதலை ஆய-பிருகுமஹரிஷிக்குப் புத்திரனாகிய, பெருதகை பிதாவும் ஒவ்வா - பெருந்தன்மையையுடைய தன்தந்தையும் தவவொழுக்கத்தாலொப்பாகாத, இருசிகன் என்பவற்கு - இருசிகனென்று சொல்லப்பட்ட ரிஷிக்கு, மெல்லியலாளை-மெல்லிய தன்மையையுடையவளாகிய என்சஹோதரியை, ஈந்தான்-கொடுத்தான், அருமறையவனும் - அருமையாகிய வேதங்களையுணர்ந்த அந்த முனிவனும், சிலநாள் - சிலகாலம், அறம் பொருள் இன்பம்முற்றி - தர்மார்த்தகாமங்களை முடித்து, விழுதவம்புரிந்து - (பிறகு) மேலானதவத்தைச்செய்து, விரிமலர் - தவிசோன்பால் மீண்டான்-மலர்ந்த தாமரைப்பூவாகிய ஆசனத்தையுடையவனாகிய பிரமனிடத்திற்சென்றான்—எ-று. (கங)

தன்சாரியை.

431. காதலன் சேணினீங்கக் கவுசிகை தரிக்கலாற்றாள்
மீதுறப் படரலுற்றாள் விழுநதி வடிவமாகி
மாதவர்க் கரசுநோக்கி மாநிலத் துறுகணீக்கப்
போதுக நதியாயென்னாப் பூமக னுலகுபுக்கான்

(இ-ள்.) காதலன் - தன் கணவன், சேணில் நீங்க - விண்ணுலகிற்செல்ல, கவுசிகை-கௌசிகையானவள், தரிக்கலாற்றாள் - பிரிவைபொறுக்காதவளாய், விழுநதி வடிவம் ஆகி - ஒருமேலான நதியுருக்கொண்டு, மீது உற படரல் உற்றாள் - (கணவனுடன்) விண்ணிற் செல்லத்தொடங்கினாள், மாதவர்க்கரசு - பெரிய தவத்தோர்க்கரசனாகிய இருசிகமஹர்ஷி, நோக்கி - (அவளப்படிவருதலைப்) பார்த்து, மாநிலத்து, மாநிலத்து - பெரியநிலவுலகத்திலிருப்பவரது, உறுகண் நீக்க - துன்பத்தை நீக்குதற்காக, நதிஆய் - இந்த நதியுருவாகவே, போதுக என்னா - (பூலோகத்திற்) செல்லக்கடவா யென்றுசொல்லி, பூமகன் உலகுபுக்கான்-பிரமனுலகினுழைந்தான்—எ-று.

432. எம்முனா ணங்கையிந்த விருநதி யாயினாளென்
றம்முனி புகலக்கேளா வதிசய மிகவுந்தோன்றச்
செம்மலு மிளையகோவுஞ் சிறிதிடந் தீர்ந்தபின்னர்
மைம்மலி பொழில் யாதென்ன மாதவன்கூறலுற்றான்.

(இ-ள்.) எம்முனாள் நங்கை - எமக்குமூத்தவளாகிய கௌசிகையென்னும் பெண், இந்த இருநதி ஆயினாள் என்று - இந்தப்பெருமையாகிய நதியுருவாயினாளென்று, அ முனிபுகலகேளா - அந்த விசுவாமித்திரமுனிவன் சொல்லக்கேட்டு, அதிசயம் மிகவும் தோன்ற-மிகவு மாச்சரியமுண்டாக, செம்மலும்-ஸ்ரீராமபிரானும், இளையகோவும் - இளையபெருமாளும், சிறிது இடம் தீர்ந்தபின்னர் - கொஞ்சதூரங்

கடந்தபிறகு, (அவ்விடத்திற்காணப்பட்ட வொருசோலையைக்கண்டு) மைமலிபொழில்-மேகங்கள்படிகின்ற விந்தச்சோலையானது, யாது என்ன - யாதொன்றுவினவ, மாதவன் கூறல் உற்றான்-முனிவன் சொல்லத்தொடங்கினான்.

மைமலி என்பதற்கு இருள்மிகுந்த எனினும் பொருந்தும்.

433. தங்கணா யகரிற்றெய்வந் தவம்பிறி திலவென்றெண்ணும்
மங்கைமார் சிந்தைபோலத் தூயது மற்றுங்கேளாய்
எங்கணான் மறைக்குந்தேவ ரறிவிற்கும் பிறர்க்குமெட்டாச்
செங்கண்மா லிருந்துமேனாட் செய்தவஞ் செய்ததன்றே.

(இ-ள்.) (இந்தச்சோலை) தங்கள் நாயகரின் - தங்கள் கணவரைப்பார்க்கிலும், தெய்வமும், தவமும், பிறிது இல-வேறில்லன, என்று எண்ணும் - என்று நினைக்கிற, மங்கைமார் - (கற்புள்ள) மாதர்களுடைய, சிந்தைபோல-மனம்போல, தூயது - பரிசுத்தமாயிருப்பது, மற்றும்கேளாய் - (இதன்பெருமையை) இன்னுஞ்சொல்லக்கேளாய், எங்கள் நான்மறைக்கும்-எங்களுக்குரிய நான்கு வேதங்களுக்கும், எட்டா-எட்டாத, செங்கண்மால்-செந்தாமரை மலர்போன்ற கண்களையுடைய திருமாலானவர், மேல்நாள் இருந்து - முற்காலத்திற்றங்கி, செய்தவம் செய்தது - செய்யத்தக்க தவத்தைச் செய்யப்பெற்ற இடம்—எ-று. (கசு)

அன்று, ஏ, இரண்டும் அசைகள். எங்கள் என்பதனை 'செங்கண்மால்' என்பதனோடு மிசைத்துரைப்பினு மமையும். 'தங்கணாயகரிற்றெய்வந்தவம் பிறிதிலவென்றெண்ணும்' என்னும் விசேடணத்தால் 'மங்கைமார்' என்பதற்கு 'கற்புள்ள மாதர்கள்' என்று பொருள் கூறப்பட்டது; அல்வாறெண்ணுதற் குரியரவராதலின்.

434. பாரின்பால் விசும்பின்பாலும் பற்றறப் படிப்பதன்னான்
பேரென்பானவன்செய்மாயப் பெரும்பிணக் கொருங்குதேர்வார்
ஆரென்பா னமலமூர்த்தி கருதிய தறிதறேற்றும்
ஈரைம்பா னூழிகால மிருந்தவ மியற்றியிட்டான்.

(இ-ள்.) பாரின்பால் - பூலோகத்திலும், விசும்பின்பாலும் - தேவலோகத்திலும் (உள்ளவர்கள்) பற்று அற - தமது பற்றற்றுய்வதற்கு, படிப்பது - படனஞ்செய்வது, அன்னான்-அவனது, பேர்-திருநாமமாம், அவன் செய்-அவன் செய்கின்ற மாயம் பெரு பிணக்கு - மாயமாகிய பெரியமாறுபாட்டை, ஒருங்குதேர்வார் ஆர்-முழுதுந்தெரிய வல்லவர்களியாவருளர், (ஒருவருமிலர்) அமலமூர்த்தி - பரிசுத்தமான திருவுருவமுள்ளவன், (அப்பகவான்) கருதியது-நினைத்ததை, அறிதல்தேற்றும் - அறிகிலேம், (அவன்) ஈரைம்பான் ஊழிகாலம் - நூறூழிக்கால (மிவ்விடத்திற்றங்கி,), இருதவம் இயற்றியிட்டான்-பெரியதவத்தைச்செய்து முடித்தான்—எ-று. (கஎ)

என்பான் இரண்டும் அசைகள்

மாவலியின்கதை.

வேறு.

435. ஆனவ னிங்குறை கின்றவ னாள்வாய்
ஊனமின் ஞால மொடுங்கு மெயிற்றான்

ஏன மெனுந்திறன் மாவலி யென்பான்
வானமும் வையமும் வவ்வுதல் செய்தான்.

(இ-ள்.) ஆனகன்-அத்தன்மையனான பகவான், இங்கு உரைகின்ற அ நாள்வாய் இவ்விடத்திற் றவஞ்செய்கின்ற வந்தக்காலத்தில், ஊனம் இல் ஞாலம் - குறைவில் லாத விவ்வுலகம், ஒடுங்கும்-அடங்கிய, எயிறு-தந்தத்தையுடைய, ஆண் ஏனம் எனும் ஆண்பன்றியாகிய ஆதிவராஹமென்று சொல்லத்தக்க, திறல் - வல்லமையுள்ள, மாவலி என்பான்-மாவலியென்று சொல்லப்படுவோன், வானமும் வையமும் - விண் ணுலகத்தையும் மண்ணுலகத்தையும், வவ்வுதல்செய்தான் - தவத்தினால் கவர்ந்து கொண்டான்—எ-று. (கஅ)

436. செய்தவர் வானவ ருஞ்செய லாற்று
நெய்தவழ் வேள்வியை முற்றிட நின்றான்
ஐயமில் சிந்தைய னந்தணர் தம்பால்
வையமும் யாவும் வழங்க வலித்தான்

(இ-ள்.) செய்தவர் - செய்துமுடிக்குந் தவத்தையுடைய முனிவர்களும், வான வரும்-தேவர்களும், செயல் ஆற்று - செய்தல்கூடாத, நெய்தவழ் - நெய்யைச்சொரி கின்ற, வேள்வியை - ஒருயாகத்தை, முற்றிட-முடிக்க, நின்றான் - யத்னித்துநின்று, ஐயம் இல் சிந்தையன் - வேள்விப்பயனில் ஐயமில்லாத மனமுள்ளவனாய், அந்தணர் தம்பால்-பிராமணர்களுக்கு, வையமும் - பூமியையும், யாவும் மற்றெல்லாப் பொருள் களையும், வழங்க-தானஞ்செய்ய, வலித்தான்-துணிவுகொண்டான்—எ-று. (கக)

437. ஆய தறிந்தனர் வானவ ரந்நாள்
மாயனை வந்து வணங்கி யிரந்தார்
தீயவன் வெந்தொழில் தீரென நின்றார்
நாயக னும்மது செய்ய நயந்தான்.

(இ-ள்.) ஆயது-அந்தச்செய்தியை, வானவர் - தேவர்கள், அறிந்தனர்-அறிந்து, அ நாள்-அந்தக்காலத்தில், வந்து-இவ்விடத்துக்கு வந்து, மாயனைவணங்கி-விசித்திர ஆற்றலையுடைய பெருமானைத்தொழுது, இரந்தார்-குறையிரந்து, தீயவன்-கொடியோ னாகிய வந்தமாவலியின், வெம்தொழில் - கொடுஞ்செய்கையை, தீர் என-தீர்த்தரு ளென்று, நின்றார்-துதித்து நின்றார்கள், நாயகனும்-இறைவனும்-அதுசெய்ய-அந்தக் காரியத்தைச்செய்ய, நயந்தான்-விரும்பினான்—எ-று. (உ0)

மாபாலிசெய்கிற வேள்வி இந்திரப்பட்டத்தைப் பெறும்பொருட்டாதலால், அவனைத் தீயவனென்றும், அவன்செய்யும் நற்கருமத்தை வெந்தொழிலென்றும் அசுரரிடத்துப் பகைமைபாராட்டும் தேவர் கூறுவாராயினர்.

வாமனாவதாரம்.

438. கால னுனித்துணர் காசிப னென்னும்
வாலறி வற்கதி திக்கொரு மகவாய்
நீல நிறத்து நெடுந்தகை வந்தோர்
ஆலமர் வித்தி னருங்குற ளானான்.

(இ-ள்.) (இப்படிவிரும்பிய) நீலம் நிறத்து நெடுதகை-நீல நிறத்தையுடைய நெடு மால், காலம் - முக்காலங்களையும், நுனித்து உணர் - நுட்பமாயறியத்தக்க ,

காசிபன் என்னும்-காசிபனென்று சொல்லப்படுகிற, வால் அறிவற்கு-மெய்யுணர்வை யுடையவனுக்கும், அதிதிக்கு - அவன் மனைவியாகிய அதிதிக்கும், ஒரு மகவாய் வந்து - ஒரு புத்திரனாக திருவவதரித்து, ஓர் ஆல் அமர்வித்தின் - ஒரு ஆலமரமடங்கிய விதையைப்போல், அருகுறள் ஆனான் - அரிய வாமனரூபமானான். (உக)

முக்காலம் இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்பன.

439. முப்புரி நூலினன் முஞ்சியன் விஞ்சை
கற்பதோ ரோர் நாவ னனற்படு கையன்
அற்புத னற்புத ரேயறி யுந்தன்
சிற்பத மொப்பதோர் மெய்க்கொடு சென்றான்.

(இ-ள்.) முப்புரி நூலினன் - மூன்று முறுக்காயிருக்கிற பூணூலை யுடையவனும், முஞ்சியன் - முஞ்சிப்புல்லாற் செய்த அரைஞாணை யரையில் தரித்திருப்பவனும், விஞ்சைகற்பது - வேத முதலாகிய வித்தைகளைக் கற்பதாகிய, ஓர் - ஒப்பற்ற, நாவன் - நாவையுடையவனும், அனல் படுகையன்-அக்கி ஹோத்ரத்தைப் பொருந்தியிருக்குங் கையையுடையவனும், அற்புதன் - ஞானமே திருமேனியாக உடையவனுமாகிய அந்தவாமனன், அற்புதரே அறியும் - ஞானவான்களே யறிகின்ற, தன்-தனது, சிற்பதம் ஒப்பது - ஞானபதத்தை யொப்பதாகிய, ஓர் மெய்கொடு - ஒப்பற்ற திருவுருக்கொண்டு, சென்றான்-வந்தான்—எ-று. (உஉ)

முஞ்சி பூணூலிற்கட்டும் புல், எனினும் பொருந்தும், 'அற்புதரேயறியும் என்றமையால்' பிறர் அறியாமை விளங்குகின்றது.

440. அன்றவன் வந்த தறிந்துல கெல்லாம்
வென்றவன் முந்தி வியந்தெதிர் கொண்டான்
நின்றனி னந்தண ரில்லை நிறைந்தோய்
என்றனி னுய்ந்தவர் யாரினி யென்றான்.

(இ-ள்.) அன்று - அந்நாளில், அவன்-அந்தவாமனன், வந்தது-தன்னிடம் எழுந்தருளியதை, உலகு எல்லாம் வென்றவன் - உலகங்களை யெல்லாம் வென்றவனாகிய, (மாவலியானவன்) அறிந்து - உணர்ந்து, முந்திவியந்து - முற்பட்டு ஆச்சரியப்பட்டு, எதிர்கொண்டான்-எதிர்கொண்டு, நிறைந்தோய் - தவம் நிறைந்தவனே, நின்றனின்- உன்னைப் பார்க்கிலும், அந்தணர் இல்லை - சிறந்த பிராமணர்களில்லை, (உன்னைத் தரிசிக்கப் பெற்றேனாகையால்) என்றனின் - என்னைப்போல, உய்ந்தவர் - உஜ்ஜீவித்தவர்கள், இனியாவர் என்றான் - இனியாவரிருக்கிறார்கள் என்று சொன்னான்— எ-று. (உங)

ஐந்த னுருபிரண்டனுள்ளும் முன்னது உறழ்பொருளிலும் பின்னது ஒப்புப் பொருளிலும் வந்தது. யாவர் என்பதன் மரூஉவாகிய யார் என்னும் வினா ஒருவருமில்லை யென்பதுபட நின்றது.

441. ஆண்டகை யவ்வழி கூற வறிந்தோன்
வேண்டினர் வேட்கையின் மேற்பட வீசி
நீண்ட கையாயினி நின்னுழை வந்தோர்
மாண்டவ ரல்லவர் மாண்பில ரென்றான்.

(இ-ள்.) ஆண்தகை அவ்வகைகூற - மாவலி அவ்வாறுசொல்ல, அறிந்தோன் - எல்லாவற்றையு முணர்ந்தவனாகிய வாமநன், (மாவலியை நோக்கி) வேண்டினர் - விரும்பி வந்தவர்களுடைய, வேட்கையின் மேற்பட - விருப்பத்தினளவுக்கதிகமாக, வீசி - கொடுத்து, நீண்டகையாய் - (அதனால்) நீண்டிருக்கிற கையையுடையவனே, இனி - இனிமேலும், நின் உழைவந்தோர் - உன்னிடத்தில் வந்தவர்கள், மாண்டவர் - மாட்சிமைப்பட்டவர்கள், அல்லவர் - அவ்லாதவர்கள், மாண்பு இலர் - மாட்சிமையில்லாதவர்கள், என்றான் - என்று சொன்னான்—எ-று. (உச)

442. சிந்தையுவந் தெதி ரென்செய வென்றான்
அந்தணன் மூவடி மண்ணரு ளுண்டேல்
வெந்திறலாயிது வேண்டு மெனா முன்
தந்தன னென்றனன் வெள்ளி தடுத்தான்.

(இ-ள்.) (வாமநன் இவ்வாறு சொல்லக்கேட்ட மாவலியானவன்) சிந்தை உவந்து - (வாமநன் புகழ்ந்துரைக்கு) மனமகிழ்ந்து, எதிர் - அவன் வார்த்தைக்குப் பிரதியாக, என் செய என்றான் - அடியேன் என்ன செய்யவேண்டுமென்று கேட்டான், அந்தணன் - வாமநன், (மாவலியைநோக்கி) உண்டேல் மூவடிமண் அருள் - உளதாயின் மூன்றடி நிலத்தைக்கொடு, வெந்திறலாய் - வெவ்விய பலத்தை யுடையவனே, அது வேண்டும் - அதுதான் எனக்கு வேண்டியது, எனாமுன் - என்றுசொல்லுவதற்கு முன்னே, தந்தனன் என்றனன் - கொடுத்தேனென்று மாவலி சொன்னான், வெள்ளி தடுத்தான்-அப்படிச் சொன்னதை (அருகில் கேட்டுக்கொண்டிருந்த) சுக்கிரன் தடுத்தான்—எ-று. (உரு)

தந்தனன் துணிவுபற்றி எதிர்வு இறப்பாக வந்தகால வழுவமைதி.

443. கண்ட திறத்திது கைதவ மைய
கொண்ட னிறக்குற ளென்பது கொள்ளேல்
அண்டமு முற்று மகண்டமு மேனாள்
உண்டவ னாமி துணர்ந்துகொ ளென்றான்.

(இ-ள்.) ஐய - தலைவனே, கண்ட - நம்மால் அறியப்பட்ட, திறத்து - தன்மையால், இது - இந்த உருவம், கைதவம்-வஞ்சனையுருவம், கொண்டல் நிறம்-(இவன்) மேகநிறத்தையுடைய, குறள் என்பது - வாமநன் என்பதை, கொள்ளேல் - உட்கொள்ளவேண்டா, (இவன் யாவனெனின்) அண்டமும் - அண்டங்களையும், முற்றும் - அவற்றிலுள்ள எல்லாப் பொருள்களையும், அகண்டமும் - அகண்டத்தையும், மேல் நாள் - முன்னாள், உண்டவன் ஆம், உண்டவனாகிய இறைவனாவான், இது-இந்தச்செய்தியை, உணர்ந்துகொள் - அறிந்துகொள், என்றான்-என்று சொன்னான். ()

444. நினிக்கிலை யென்கை நிமிர்ந்திட வந்து
தனக்கிய லாவகை தாழ்வது தாழ்வில்
கனக்கரி யானது கைத்தல மென்னின்
எனக்கிதன் மேனலம் யாதுகொ லென்றான்.

(இ-ள்.) (அதைக்கேட்ட மாவலியானவன்) என்கை நிமிர்ந்திட - என் கைமேலாக, தாழ்வு இல் - கல்யாணகுண நிறைவுள்ள, கனம்கரி யானதுகைத்தலம்-மேகம் போலக் கருநிறத்தை யுடையவனாகிய ஸ்ரீமந் நாராயணனுடைய கை, தனக்கியலாவகை - தன் தகுதிக் கேலாதவகையாக, வந்து தாழ்வது என்னின் - வந்து கீழா

யிருப்பது என்றால், எனக்கு - எனக்கு, இதின்மேல் நலம் - இதனினும் மேற்பட்ட நன்மை, யாது - என்னே, என்றான் - என்று சொன்னான்—எ-று. (உஎ)

445. துன்னினர் துன்னல ரென்பது சொல்லார் 986
முன்னிய நன்னெறி நூலவர் முன்வந்
துன்னிய தான முயர்ந்தவர் கொள்க
என்னி னிவன்றுணை யாவ ருயர்ந்தார்.

(இ-ள்.) முன்னிய - (அறிஞரால்) மதிக்கப்பட்ட, நல்நெறி - நல்ல மார்க்கத்தைச் சொல்லுகிற, நூலவர்-நூலாராய்ச்சியை யுடையார்கள் (தானங்கொள்வோரை நோக்கி) துன்னினர் - வந்து அடைந்தவர், துன்னலர் - இவர் பகைவர், என்பது - என்னுஞ்சொல்லை, சொல்லார் - சொல்ல மாட்டார்கள், முன்வந்து - முற்படவந்து, உன்னிய தானம் - தாங்கள் நினைத்துவந்த தானத்தை, உயர்ந்தவர் கொள்க - மேலோர் கொள்ளக்கடவர், என்னின் - என்னின் - என்று சொல்வார்களாயின், இவன் துணை - இவனுக்குச் சமானமாக, உயர்ந்தார் - உயர்ந்தவர்கள், யாவர்-யாவருளர் (ஒருவருமிலர்)—எ-று. (உஅ)

துன்னினர் துன்னலர் எழுவேற்றுமை பயனிலை கொண்டதென்க, துன்னினர் என இரண்டாவதை விரிக்கவேண்டின் இடையில் தகரமெய்த் தொகுத்தலென்க.

446. வெள்ளியை யாதல் விளம்பினை மேலோர்
வள்ளிய ராக வழங்குவ தல்லால்
எள்ளுத வென்சில வின்னுயி ரேனும்
கொள்ளுதல் தீது கொடுப்பது நன்றால்.

(இ-ள்.) வெள்ளியை ஆதல் - வெள்ளியென்னும் பெயரையுடையை யாதலால்-விளம்பினை-இவ்வாறு சொன்னாய், மேலோர் - உயர்ந்தோர்கள், வள்ளியர் ஆக - வள்ளியோராகும்பொருட்டு, வழங்குவது அல்லால் - கொடுத்தலேயன்றி, எள்ளுவ-அவர்களா லிகழப்படுவனவாகிய, சில - சிலபொருள்கள், என்-யாவை, இன் உயிரேனும் - ஒருவன் றனதினிய வுயிரையாயினும், கொள்ளுதல் - யாசித்துப் பெற்றுக்கொள்ளுதல், தீது - தீமையைத் தருவதாம், கொடுப்பது - (தன்னுயிரையாயினு மிரப்பவர்களுக்குக்) கொடுப்பது, நன்று - நன்மையைத்தருவதாம். (உக)

'வெள்ளியை' என்பது 'வெள்ளியென்னும் பெயரையுடையை' எனவும், வெள்ளறிவையுடைய எனவு மிருபொருள்படநின்றது. நேரே ஆசிரியனாதலின் இலேசாகக் கூறினான்.

447. மாய்ந்தவர் மாய்ந்தவ ரல்லர்தண் மாயா
தேந்திய கைகொ டிரந்தவ ரெந்தாய்
வீய்ந்தவ ரென்பவர் வீய்ந்தவ ரேனும்
ஈய்ந்தவ ரல்ல திருந்தவர் யாரே.

(இ-ள்.) எந்தாய் - எமது தந்தையே, மாய்ந்தவர் - இறந்தவர்தள், மாய்த்தவர் அல்லர் - இறந்தவரல்லர், (இறந்தவர் யாவரெனின்) கண்மாயாது - கண்ணொளி கெடாமல், (உலகத்தில்) ஏந்திய கைகொடு - ஏந்தின கைகளைக்கொண்டு, இரந்தவர் - யாசித்தவர்களே, வீந்தவர் என்பவர் - இறந்தவர்களென்று சொல்லப்படுவோர்கள், வீந்தவரேனும் - இறந்தவர்களேயானாலும், ஈந்தவர் - கொடுத்தவர்கள், இருந்

தவர் அல்லது - உலகத்திலிருப்பவர்களே யல்லாமல், யார் - வேறு யாவரென்று நினைக்கப்படுவார்—எ-று. (ருo)

இரந்து உயிர்வாழ்வார் இயிரோடிருப்பினும் இறந்தவரேயோ, கொடுப்பவர் இறந்தவர்களானாலும் உயிரோடிருப்பவர்களே யென்பது கருத்து.

448. அடுப்ப வரும்பழி செய்ஞரு மல்லர்
கொடுப்பவர் முன்பு கொடேலென நின்று
தடுப்பவரே பகை தம்மையு மன்னர்
கெடுப்பவ ரன்னதொர் கேடில யென்றான்.

(இ-ள்.) அடுப்ப - அடுக்கும்படி, அருப்பழி செய்ஞரும் அல்லர் - (ஒருவனுக்கு) அரிய பழியை யுண்டாக்குவோரும் (அவனுக்கு) பகைவரல்லர், (மற்றியாவர் பகைவரெனின்) கொடுப்பவர் முன்பு - (இரப்போர்க்குக்) கொடுப்பவர்களுக் கெதிரில், நின்று - நின்று, கொடேல் என தடுப்பவர் - கொடாதியென்று தடுக்கின்றவரே, பகை - பகைவராவார், அன்னர் - அவர், (கொடுப்பவரைமாத்திரமேயன்றி) தம்மையும் கெடுப்பவர்-தம்மையுங் கெடுத்துக்கொள்வோரே யாவர், (ஆகையால்) அன்னது-அத்தன்மையதாகிய, ஓர் கேடு - ஒரு கெடுதியைத்தருவது, இல்லையென்றான்-இல்லை யென்று சொன்னான்—எ-று. (ருக)

ஒருவர்க்கொருவர் கொடுப்பதைத் தடுப்பவர், கொடுப்போரைத் தடுத்து அவர்களைப் பாவத்துக்கிலக்காக்குவதுமன்றித், தாமும் அந்தப் பாவமேலிட்டாற் கெடுவரென்பது கருத்து. செய்தவனையும் பிறரையுங் கெடுத்தல்பற்றி, அன்னதோர் கேடில்லை என்றார்.

449. கட்டுரை யிற்றம கைத்துள போழ்தே
இட்டிசை கொண்டற னெய்த முயன்றோர்
உட்டெறு வெம்பகை யாயது லோபம்
விட்டிட லென்று விலக்கினர் தாமே.

(இ-ள்.) கட்டு உரையின் - பெரியோருடைய பெருமொழியின்படி, தமகைத்துளபோழ்தே - தமதுபொருள் தங்கள் வசத்திலிருக்கும்போதே, இட்டு - (இரப்போர்க்குக்) கொடுத்து, இசைகொண்டு - (இம்மையில்) புகழைப்பெற்று, அறன் எய்த - (மறுமையில்) அறப்பயனைப்பெற, முயன்றோர் - முயன்றவர்கள், உள்-உள்ளிருந்து, தெறு - கெடுக்கின்ற, வெம்பகையாவது - கொடிய பகையாவது, உலோபம் - உலோபகுணம், (ஆதலால் அந்தக்குணத்தை) விட்டிடலென்று - விட்டுவிடக்கடவமென்று, விலக்கினர்-(அவர்கள் அதை) விலக்கி யிருக்கிறார்கள். (ருஉ)

கட்டுரையில் - கடுமைமிகுதிப்பொருள்தரும் உரிச்சொல். கடுமையாகிய உரை என விரியும்.

வேறு.

450. எடுத்தொரு வருக்கொருவ ரீவதனின் முன்னே
தடுப்பது நினக்கிதழ கோதகவில் வெள்ளி
கொடுப்பது விலக்குகொடி யோயுனது சுற்றம்
உடுப்பதுவு முண்பதுவு மின்றிவிடு கின்றாய்.

(இ-ள்.) ஒருவர் - (கொடுப்பவராகிய) ஒருவர், எடுத்து - (இரப்போர் விரும்பின ஒரு பொருளை) எடுத்து, ஒருவருக்கு - (இரக்கின்றவராகிய) ஒருவருக்கு, ஈவ

தனின்முன் - கொடுப்பதற்குமுன்பு, தடுப்பது - தடுப்பது, நினக்கு - ஆசிரியனாகிய உனக்கு, அழகிதோ-அழகுடையதாகுமோ, தகவு இல்-நடுவுநிலையில்லாத, வெள்ளி-சுக்கிரனே, கொடுப்பது-(ஒருவர்க்கொருவர்) கொடுப்பதை, விலக்கு - தடுக்குநியல்புள்ள, கொடியோய்-தீயவனே, உனது சுற்றம்-உன்சுற்றத்தார், உடுப்பதுவும் உண்பதுவும் இன்றி - உடுக்கப்படு பொருளாகிய ஆடையும் உண்ணப்படுபொருளாகிய வுணவுமில்லாது வருந்த, விடுகின்றாய்-(அவர்களை நிராதாரமாக) விடமுயல்கின்றாய்.

நினக்கு என்றது ஆசாரியத்துவம் வகித்த வுனக்கென்றபடி அழகிதோ என்னு மோகாரம் எதிர்மறை. வெள்ளி அண்மைவிளியாதலால் இயல்பாயிற்று. உனது சுற்றம் உடுப்பதுவு முண்பதுவுமின்றி, என்றமையான், நீகெடுதல் என்பது சொல்ல வேண்டாதாயிற்று. பிறரும் "கொடுப்பதழுக்கறுப்பான் சுற்றமுடுப்பதூஉம், உண்பதூஉமின்றிக் கெடும்" என்று கூறியிருக்கின்றனர்.

வே று.

451. முடியவிம் மொழியெலா மொழிந்து மந்திரி
கொடியனென் றுரைத்தசொ லொன்றுங் கொண்டிலன்
அடியொரு மூன்றுநீ யளந்து கொள்கென
நெடியவன் குறியகை நீரி னீட்டினான்.

(இ-ள்.) இ மொழியெலாம்-இப்படிப்பட்ட வார்த்தைகளை யெல்லாம், முடிய மொழிந்து- முற்றுஞ்சொல்லி, மந்திரிகொடியன் என்று - நமதுமந்திரி கொடியவனென்று, உரைத்தசொல்-அவன்சொன்னசொற்களில், ஒன்றும்கொண்டிலன் - ஒரு சொல்லையும் ஏற்றுக்கொள்ளாமல், அடி ஒரு மூன்று-மூன்றடிநிலத்தை, நீ அளந்து கொள்க என-நீயே யளந்துகொள்வாயென்றுசொல்ல, நெடியவன் - பெரியானாகிய வாமனன், குறியகை-குறுமையான கையை, நீரின் நீட்டினான்-தானநீரில் நீட்டினான்.

அடி-நீட்டலளவையாகுபெயர். இரப்போரை அவர்கள் விருப்பப்படி கொள்ள விடுப்பதுமிக்க உதாரமாதலாலும், அவர்களுக்கும் அதுமிகவும் திருப்தியாதலாலும் நீயளந்துகொள்க என்றான். குறுங்கையனா யெதிர்நிற்பினும், அவன் சந்நிதி விசேடத்தால் இனிமேல் நிகழப்போகிற த்ரிவிக்ரமப்ரஸ்தாபம் இவர்மனத்தில் சாக்ஷாத்கரித்ததுபோலும். இரப்போர்க்கு ஒரு பொருளைக்கொடுப்பவன் அப்பொருளை மீட்டும் தான் பெறுதிருத்தற்கு அறிகுறியாக நீரோடுகொடுத்தல் தானமுறையாதலால் நீரின்நீட்டினான் என்றார்.

452. கயந்தரு நறும்புனல் கையிற் றீண்டலும்
பயந்தவர் களுமிகழ் குறளன் பார்த்தெதிர்
வியந்தவர் வெருக்கொள விசும்பி னோங்கினான்
உயர்ந்தவர்க் குதவிய வுதவி யொப்பவே.

(இ-ள்.) கயம்தரும்நறும்புனல்-தடாகங்களிலுண்டாகிய நல்ல நீரை, கையில் தீண்டலும்-கையில்படுதலும்,பயந்தவர்களும்-பெற்றவர்களும், இகழ-இகழ்தற்குரிய, குறளன்-வாமநன், எதிர்-எதிரில், பார்த்து-கண்டு, வியந்தனர் - அதிசயித்தவர்கள், வெருக்கொள-அச்சத்தையடைய, உயர்ந்தவர்க்கு உதவிய - பெரியோர்க்குதவிய, உதவிய ஒப்ப-உதவிப்பயன்போல, விசும்பின் ஓங்கினான் - ஆகாயம்வரையில் உயர்ந்தான்—எ-று. (நடு)

எத்தன்மைத்தான கோரரூபமாயிருப்பினும் மக்களை ஈன்றவ ரிகழாரென்பது பட, பயந்தவர்களு மிகழ்குறளன் என்றார். உதவி ஒப்ப என்றது உதவிப்பயனை யொப்ப என்றபடி. உதவிகருவியாகுபெயர். உயர்ந்தவர் என்றது கல்வியறிவொழுக் கங்களான் மனந்தூயரை. இது. "உதவிவரைத்தன் றுதவியுதவி - செயப்பட்டார் சால்மின்வரைத்து" என்ப பிறர்கூற்றுலுமுணர்க.

453. நின்றகான் மண்ணெலா நிரப்பி யப்புறம்
சென்று பாவிற்றிலை சிறிது பாரென
ஒன்றவானக மெலா மொடுக்கி யும்பரை
வென்றகான் மீண்டது வெளி பெருமையே.

(இ-ள்.) நின்றகால்-நின்றபாதமானது, மண் எல்லாம் நிரப்பி-பூமியையெல்லாம் நிரம்பச்செய்து, பார்சிறிது எனு-பூமி சிறியதென்று, அப்புறம்சென்று பாவற்றிலை-அப்பால் போய்ப் பரவிற்றில்லை, ஒன்ற-தன்னில் பொருந்த, வானகமெல்லாம்-ஆகா யத்தை யெல்லாம், ஒடுக்கி-தன்னுள்ளடக்கி, உம்பரைவென்றகால்- விண்ணுலகைக் கடந்த பாதமானது, வெளிபெருமை-(மேலும் செல்ல) வெற்றிடம் பெருமையால், மீண்டது-திரும்பி விட்டது—எ-று. (நடரு)

454. உலகெலா முள்ளடி யடக்கி யோரடிக்
கலகிலா தவ்வடிக் கன்பன் மெய்யதாம்
இலைகுலாந் துழாய்முடி யேக நாயகன்
சிலைகுலாந் தோளினுய் சிறியன் சாலவே.

(இ-ள்.) சிலைகுலாம் தோளினுய் - கோதண்டம் விளங்கப்பெற்ற புஜத்தை யுடைய ஸ்ரீராமா, உலகு எல்லாம் - மண்ணுலகையும் விண்ணுலகையும், உள்ளடி யடக்கி-உள்ளடியி லடங்கச்செய்து, ஓரடிக்கு- மற்றோரடிக்கு, அலகு இலாது - அள வான நிலத்தைப் பெறுதலில்லாமல், அவ்வடிக்கு-அத்திருவடிக்கு, (அளவிடம்) அன் பன்-அன்புள்ளவனுகிய மாவலியின், மெய்ஆம் - சரீரமேயாகும், இலைகுலாம் துழாய் முடி-இலைகளோடுகூடிய துளசிமாலையையணிந்த திருமுடியையுடைய, ஏகநாயகன்- ஒப்பற்ற இறைவனே, சாலசிறியன்-மிகவுஞ்சிறியவன்—எ-று.

ஒருதிருவடியால் பூமியையும் மற்றொன்றால் விண்ணையும் அளந்து, மூன்றாம டிக்கு அளவிடம் காட்டென்ன, அடியேன் முடிதான் இருக்கிறதென்று மாவலி சொல்ல, அதில் பாதத்தை வைத்தழுத்திப் பாதாளத்தில் செலுத்தினு ரென்பது கதை. உள்ளடியடக்கியென்றார் அளக்குங்கால் அகப்பட்டவுயிர்களுக்கு ஒரு அபாய மும் நேரிடாவண்ணம் குறிக்கொள்ளலால்.

455. உரியதிந் திரற்கிதென் றுலகமீய்ந்து போய்
விரிதிரைப் பாற்கடற் பள்ளி மேவினன்
கரியவ னுலகெலாங் கடந்த தாளிணை
திருமகள் கரந்தொடச் செவந்து காட்டவே.

(இ-ள்.) இந்திரற்கு உரியது இது என்று-இந்திரனுக்கு இது வுரியதாமென்று, உலகம்-அளந்த உலகத்தை, ஈய்ந்துபோய் - கொடுத்துப்போய், கரியவன் - நீலநிற முள்ள ஸ்ரீமந்நாராயணன், உலகு எல்லாம் கடந்ததாள் இணை-உலகங்களையெல்லாம் கடந்த தன்னிரண்டு திருவடிகளையும், திருமகள்-பெரியபிராட்டியார், கரம்தொட- வருடுதற்காகக் கையால்தொட, (அவைகள்) செவந்துகாட்ட - சிவந்துகாட்டும்படி,

விரிதிரை-விரிந்த அலைகளையுடைய,பாற்கடல்-திருப்பாற்கடலில்,பள்ளிமேவினன்-சர்ப்பசயநத்தில் சயனித்தான்—எ-று. (௩அ)

உலகெலாம்கடந்த தாளிணை திருமகள் கரம்தொட என்ற சொற்றொடரால், மண் முதலியவற்றை யளந்ததனு லுண்டான வருத்தந்தீரப் பெரியபிராட்டியார் கரம்தொட்டு வருடினுளென்பதாயிற்று. புஷ்பாஸனையான திருமகளது மிருதுவான திருக்கரம் தொடுதலால்சிவந்துகாட்டுந் திருவடிகள் மண்முதலியவற்றை யளத்தலால் வருந்துதல் சொல்லவேண்டாதாயிற்று.

456. ஆதலா லருவினை யறுக்கு மாரிய
காதலாற் கண்டவர் பிறவி காண்குறுர்
வேதநூன் முறைமையால் வேள்வி முற்றுவேற்
கீதலா தில்லைவே றிருக்கற் பாலதே.

(இ-ள்.) அருவினை அறுக்கும் ஆரிய-பிறரால் சேதித்தற்கரிய வினைக்கட்டை யறுத்தருளும் ஸ்ரீராமா, ஆதலால்- ( இந்தச்சோலையின் வரலாறு இது ) ஆகையால், காதலால்கண்டவர்-விருப்பத்துடன் இதைப்பார்த்தவர்கள், பிறவிகாண்குறுர்-பிறவியைப்பார்க்கமாட்டார்கள், வேதநூல் முறைமையால் - வேதசாஸ்திர முறைப்படி, வேள்விமுற்றுவேற்கு-யாகஞ்செய்கிற எனக்கு, இருக்கற்பாலது - இருக்கற்பாலதாகிய இடம், ஈது அலாதுவேறு இல்லை-இதுவல்லது வேறொன்றுமில்லை—எ-று. ()

457. ஈண்டிருந் தியற்றுவென் யாகம் யானென
நீண்டபூம் பழுவத்து நெறியி னெய்திப்பின்
வேண்டுவ கொண்டுதன் வேள்வி மேவினன்
காண்டகு குமரரைக் காவ லேவியே.

(இ-ள்.) (அப்படிசொன்ன விசுவாமித்திரமுனிவன் ஸ்ரீராம பிரானைநோக்கி) யான் ஈண்டு இருந்து-நான் இவ்விடத்திலிருந்து கொண்டு, யாகம் இயற்றுவென் என-யாகம் செய்கிறேனென்று சொல்லி, நீண்டபூம்பழுவத்து நெறியின் எய்தி - பெரிதாகிய மலர்முதலியவைகளையுடைய அந்தவனத்தின் வழியிற்சென்று, பின்-பிறகு, வேண்டுவகொண்டு - (வேள்விக்கு) வேண்டுவனவாகிய பொருள்களைச் சேகரித்துக் கொண்டு, காண்தகுகுமரரை-யாவருங்கண்டு மகிழ்தற்குரிய அழகரானசக்ரவர்த்தித் திருக்குமாரரை, காவல் ஏவி-காவலாக நியமித்துவைத்து விட்டு, தன்வேள்வி மேவினன்-தனது யாககாரியத்திற் பிரவேசித்தான்—எ-று.

458. எண்ணுதற் காக்கரி திரண்டுமூன்றுநாள்
விண்ணவர்க் காக்கிய முனிவன் வேள்வியை
மண்ணினைக் காக்கின்ற மன்னன் மைந்தர்கள்
கண்ணினைக் காக்கின்ற விமையிற் காத்தனர்.

(இ-ள்.) மண்ணினைக்காக்கின்ற-பூலோகத்தைத் தீங்குவராமற் காக்கின்ற, மன்னன் மைந்தர்கள்-சக்ரவர்த்தித்திருக்குமாரர்கள், எண்ணுதற்கு ஆக்க அரிது-நினைக்கவும் செய்யவுமருமையாக, இரண்டுமூன்றுநாள் - ஐந்துநாண்மீன்களை, விண்ணவர்க்கு ஆக்கிய-தன்கட்டளையை அவமதித்ததேவர்கள்பொருட்டுப் படைத்த, முனிவன்வேள்வியை-முனிவனது யாகத்தை, கண்ணினை-கண்களை, காக்கின்ற-ஒருதீங்

கும் நேரிடா வண்ணம் காப்பாற்றுகிற, இமையின் - இமைகளைப்போல, காத்தனர்- காப்பாற்றினார்கள்—எ-று. (சுக)

நாள் என்பதற்கு நாண்மீன் பொருளாதலை "ஐந்துநாள்தென்பால் வந்துன் புரைவிளக்கிடுக" என்பதனாலுமுணர்க.

மண்ணினைக்காக்கின்ற மன்னன் மைந்தர்கள் வேள்வியைக் காத்தனர் என இயையும். இவர்களுக்குக் காத்தற்றொழிலியல்பாதலிச்சொற்றொடரால்போதரும். இமை, கண்ணைக்காத்தலாவது-புழுதிமுதலியவை வந்துவிழாமற் றடுத்தல். மன்னன் மைந்தர்கள் வேள்வியைக் காத்தலாவது-ராக்ஷஸபாதை முதலியன வுளவாகாமல் குறிக்கொண்டுகாத்தல்.

கண்ணினைக்காக்கின்ற விமையிற்காத்தனர் - மேலிமை கீழிமை என்னும் கண்ணிமை இரண்டில் மேலிமை பெரியது, கீழிமை சிறியது, அன்றியும் மேலிமை அசைந்துகொண்டிருப்பது, கீழிமை அசையாது நிற்பது, மேலிமைபோலப் பெரியவனாகிய இராமன் நிலைபெயர்ந்து கௌசிகமுனி ஆச்சிரமத்தின் நாற்றிசையிலும் இராக்கதர்கள்வந்து உபத்திரவஞ் செய்யாமலிருக்கும்பொருட்டுச் சக்கரம் சுற்றுவதுபோலக் சுற்றித் திரிந்து காவல்செய்தான். கீழிமைபோல இளையவனாகிய இலக்குவன் உள்ளே ஒருவரும் பிரவேசியா திருக்கும்பொருட்டு ஆச்சிரமத்தின் வாசலில் அசையாது நின்றபடி காவல்செய்தான். இவ்விதமாகக் காவல்செய்யும்அவ்விருவரில் இராமன் ஆச்சிரமத்தின் புறத்திற் சுற்றிவரும்போதெல்லாம் மேலிமை கீழிமையை இமைத்திமைத்துத் தீண்டுவதுபோல வாசலிலிருக்கிற இலக்குவனைக் கையினால் அடிக்கடி தட்டித்தட்டி லட்சுமணுசாக்கிரதையென்று எச்சரித்துக்கொண்டேவந்தானென்றும் பொருள்சிறந்திருத்தலைக்காண்க.

459. காத்தனர் திரிகின்ற காளை வீரரில்
மூத்தவன் முழுதுணர் முனியை முன்னிநீ
தீத்தொழி லியற்றுவ ரென்ற தீயவர்
ஏத்தருங் குணத்தினாய் வருவதென் றென்றான்.

(இ-ள்.) காத்தனர் திரிகின்ற - (இவ்வாறு) யாகத்தைக்காத்துலா விவருகிற, காளைவீரரில்-யவ்வநபருவமுள்ள வீரர் இருவரில், மூத்தவன்-மூத்தவனாகிய ஸ்ரீராமபிரான், முழுது உணர்முனியை முன்னி- முற்றுமுணர்ந்த முனிவனை யெதிர்ந்து நோக்கி, ஏத்த-யாவருந் துதித்தற்கு, அரு-அருமையாகிய, குணத்தினாய் மங்கள குணங்களையுடையவரே, நீ-தேவரீர், தீதொழில் இயற்றுவர் என்ற - கொடுந்தொழிலைச்செய்வார்களென்று சொன்ன, தீயவர்-கொடியவர்கள், என்று வருவது என்றான்- என்றுவருவதென்று வினவினான்—எ-று. (சுஉ)

ஆர்க என்னும் வினையெச்சம் இறுதொகுக்கப்பட்டது. காளைவீரர் என்பதற்கு, இடபம்போன்றவீரர்எனினும் பொருந்தும், தீயவர் வருவது என்று என்றமையான், தாம்வந்தது தீயவரையழித்து நல்லவரை யளித்தற்பொருட்டாதலால் அந்தக்காரியத்தில். த்ருடாத்யவஸாயமுண்மை தோன்றுகின்றது.

460. வார்த்தைமா றுரைத்திலன் முனிவன் மௌனியாய்
போர்த்தொழிற் குமரனுந் தொழுது போந்தபின்
பார்த்தனன் விசும்பினைப் பருவ மேகம்போல்
ஆர்த்தன ரிடித்தன ரசனி யஞ்சவே.

(இ-ள்.) (அவ்வாறுவினவினதற்கு) முனிவன்-முனியானவன், மாறுவார்த்தை உரைத்திலன் - மறுமொழி சொல்லாமல், மௌனி ஆய் - மௌனியாயிருக்க, போர்த்தொழில்குமரனும் - போர்த்தொழிலில் சிறந்த ஸ்ரீராமபிரானும், தொழுது போந்தபின் - வணங்கிப்புறத்தில் வந்தபிறகு, விசும்பினைபார்த்தனன் - ஆகாயத்தைப் பார்த்தான், (பார்த்தபோது அந்த ஆகாயத்தில்) பருவமேகம்போல் - கார்காலமேகம்போல, ஆர்த்தனர் - (அரக்கர்கள்) ஆரவாரித்தார்கள், அசனி அஞ்ச - இடியும் அஞ்சும்படி, இடித்தனர் - அதட்டினார்கள்—எ-று, (சக)

461. எய்தன ரெறிந்தன ரெரியு நீருமாப்
பெய்தனர் பெருவரை பிடுங்கி வீசினர்
வைதனர் தெழுத்தனர் மழுக்கொண் டோச்சினர்
செய்தன ரொன்றல தீய மாயமே.

(இ-ள்.) (அவ்வரக்கர்கள்) எய்னர் - பாணமெய்தார்கள், எறிந்தனர் - வேல் முதலியவற்றை யெறிந்தார்கள், எரியும் நீரும் ஆ பெய்தனர் - நெருப்பும் நீருமாகப் பொழிந்தார்கள், பெருவரை பிடுங்கி வீசினர் - பெரியமலைகளைப்பறித்து எறிந்தார்கள், வைதனர் - வைத்தார்கள், தெழித்தனர் - அதட்டினார்கள், மழுக்கொண்டு ஓச்சினர் - மழுவாயுதத்தைக் செலுத்தினார்கள், ஒன்று அல்ல தீயமாயம் செய்தனர் - ஒன்றல்லனவாகிய பல தீயமாயங்கள் செய்தார்கள்—எ-று. (சச)

462. ஊனகு படைக்கல முருத்து வீசின
கானக மறைத்தன காலமாரி போல்
மீனகு திரைக்கடல் விசும்பு போர்த்தென
வானக மறைத்தன வளைந்த சேனையே.

(இ-ள்.) ஊன்நகு - பகைவரது மாம்சத்துடன் விளங்குகின்ற, படைக்கலம் - ஆயுதங்கள், உருத்துவீசின - கோவங்கொண்டெறியப்பட்டன, (அவ்வாயுதங்கள்) காலமாரிபோல் - கார்காலமழைபோல், கானகம்மறைத்தன - அந்தவனத்தை மறைத்துவிட்டன, மீன்நகு - மீன்கள்களிக்கின்ற, திரைக்கடல்-அலைகடலையுடைய கடலானது, விசும்புபோர்த்தென - ஆகாயத்தை மறைத்தாற்போல, வளைந்த சேனை - (அவ்வரக்கருடன்வந்து) வளைந்தசேனைகள், வானகம்மறைத்தன - ஆகாயத்தினிடத்தை யெல்லாம்மறைத்துவிட்டன—எ-று. (சரு)

வீசின எனவும் பாடம். இந்தப்பாடத்தில், உருத்துவீசின ஊன் நகு படைக்கலம் கானமறைத்தன என அந்வயித்து, கோவித்தெரியப்பட்ட படைக்கலங்கள் அவ்வனத்தைமறைத்தன எனப் பொருளுரைத்துக்கொள்க. சேனை - நிறத்தாலும் பரப்பாலும் கடலுக்குவமையாயிற்று.

463. வில்லொடு பகழிவாண் மிடைந்துலாவிடப்
பல்லியங் கடிப்பினி னிடிக்கும் பல்படை
ஒல்லென வுரறிய வூழிப் பேர்ச்சியுள்
வல்லைவந் தெழுந்ததோர்மழையும் போன்றவே.

(இ-ள்.) வில்லொடு - வில்லுடன், பகழி - பாணங்களும், வாள் - வாட்களும், மிடைந்து உலாவிட - நெருக்கித்திரியவும், பல் இயம் - பலவாத்தியங்களும், கடிப்பினின் இடிக்கும் - குறுந்தடியாலடிக்கப் படுகின்ற, பல்படை - பலசேனைகள், ஒல்என உரறிய - ஒல்லென் றொலித்த வொலிகளினால், ஊழிப்பேர்ச்சியுள் - ஊழி

யின் நிலைபெயருங்காலத்தில், வல்லை - விரைவாக, வந்து எழுந்தது - உண்டாகி மேலெழுந்ததாகிய, ஓர்மழையும்போன்ற - ஒப்பற்ற மேகத்தின் முழக்கத்தையும் ஒத்திருந்தன—எ-று. (சுசு).

மேகம் மின்னலோடும் இடிகளோடும் வருவதுபோல சேனைகள் வாள் - வில் - பாணம் முதலியவற்றோடும் வந்தன என்பது கருத்து.

464. கவருடை யெயிற்றினர் கடித்த வாயினர்
துவர்நிறப் பங்கியர் சுழல்கட் டீயினர்
பவர்சடை யந்தணன் பணிந்த தீயவர்
இவரென விலக்குவற் கிராமன் காட்டினன்.

(இ-ள்.) கவர் உடை எயிற்றினர் - பிளத்தலையுடைய பற்களை யுடையார்களும், கடித்தவாயினர் - கடித்த உதட்டையுடையார்களும், துவர்நிறப்பங்கியர் - செந்நிறச் சிகையையுடையார்களும், சுழல்கண்தீயினர் - சுழல்கின்றகண்களில் நெருப்பை யுடையார்களும், பவர்சடை அந்தணன் - நெருங்கிய சடையையுடைய விசுவாமித்திரமுனிவன், பணிந்த - சொல்லிய, தீயவர் - தீயோர்கள், இவர் என - இவர்களென்று, இராமன் - ஸ்ரீராமபிரானுர், இலக்குவற்குக் காட்டினன் - இளைய பெருமாளுக்குக் காட்டினுர்—எ-று- (சுஎ)

465. கண்டவக் குமரனுங் கடைக்கணூ டயுக
விண்டனை நோக்கித் தன்வில்லை நோக்கினன்
அண்டர்நா யகமினிக் காண்டி யீண்டவர்
துண்டம்வீழ் வனவெனத் தொழுது சொல்லினன்.

(இ-ள்.) கண்ட - அவ்வரக்கர் சேனையைப்பார்த்த, அ குமரனும் - அந்த இளையபெருமாளும், கடைக்கண் - கடைக்கண்களில், தீ உக - நெருப்புப்பொறி சிதற, விண்தனைநோக்கி - ஆகாயத்தைப்பார்த்து, தன்வில்லைநோக்கினன் - தன் வில்லையும்பார்த்து, (ஸ்ரீராமபிரானைநோக்கி) அண்டர்நாயக - தேவநாயகனே, ஈண்டு - இவ்விடத்தில், அவர் துண்டம் - அவர்களுடைய சரீரகண்டங்கள், வீழ்வன - விழுவனவற்றை, இனிகாண்டி - இனிக்காண்பாய், என - என்று, தொழுது சொல்லினன் - வணங்கிச்சொன்னன்—எ-று. (சுஅ)

விண்தனைநோக்கித் தன்வில்லை நோக்கினன் என்றமையான், ஆகாயத்தில் வந்து நிறைந்திருக்கிற அரக்கர்சேனைகள் முழுதும் ஒருநொடிப்பொழுதில் அதமாக்கும் ஆற்றலையுடையதென அவ்வில்லின் பெருமைவிளங்குகின்றது.

466. தூமவே லரக்கர்தந் நிணமுஞ் சோரியும்
ஓமவெங் கனலிடை யுகுமென் றுன்னியத்
தாமரைக் கண்ணனுஞ் சரங்களேகொடு
கோமுனி யிருக்கையோர் கூட மாக்கினன்.

(இ-ள்.) தூமம்வேல் அரக்கர் - புகையையுடைய வேலாயுதத்தை யேந்திய அரக்கரது, நிணமும் - கொழுப்பும், சொரியும் - உதிரமும், ஓமவெங்கனலிடை உகும் என்று உன்னி - வேவ்விய ஓமத்தீயில் விழுமென்றுயோசித்து, அ - அந்த, தாமரைக்கண்ணனும் - தாமரைக்கண்ணனாகிய ஸ்ரீ ராமபிரானும், சரங்களே கொடு - பாணங்களைக்கொண்டே, கோமுனி இருக்கை - சிறந்தமுனிவனுடைய இருப்பிடத்துக்கு ஓர் கூடம் ஆக்கினன் - ஒரு கூடமாகச்செய்தான்—எ-று. ()

467. நஞ்சட வெழுதலு நடுங்கி நாண்மதிச்
செஞ்சடைக் கடவுளை யடையுந் தேவர்போல்
வஞ்சனை யரக்கரை வெருவி மாதவர்
அஞ்சன வண்ணநின் னபயம்யா மென்றார்.

(இ-ள்.) நஞ்சு - பாற்கடலிலுண்டாகிய ஆலகாலவிஷமானது, அட எழுது லும் - கொல்லமேல்வருதலும், நடுங்கி - நடுக்கமடைந்து, நாள்மதி - புதியசந்திரனை யணிந்த, செஞ்சடை - செஞ்சடையையுடைய, கடவுளை - தேவனாகிய சிவனை, அடையும் - (அடைக்கலமாக) அடைந்த, தேவர்போல் - தேவர்கள்போல, மாத வர் - (அவ்விடத்திலிருந்த) தபோதநரெல்லாம், வஞ்சனை - வஞ்சனையுள்ள, அரக் கரை வெருவி - அரக்கருக்குப் பயந்து, (ஸ்ரீராமபிரானைநோக்கி) அஞ்சன வண்ண- நீலநிறமுள்ளவனே, யாம் - நாங்கள், நின் - அபயம் என்றார் - உன்னடைக்கல மென்று சொல்லினார்கள்—எ-று. (௫௦)

அஞ்சனவண்ண என்னுங் குறிப்பு தீயோரைக் கொலைசெய்வதற்பொருட் டென்பதைக் குறிப்பிக்கின்றது.

468. கவித்தனன் கரதலங் கலங்க னீரெனச்
செவித்தல நிறுத்தினன் சிலையின் தெய்வநாண்
புவித்தலங் குருதியின் புணரி யாக்கினன்
குவித்தன னரக்கர்தஞ் சிரத்தின் குன்றமே.

(இ-ள்.) (அப்போது ஸ்ரீராமபிரான் அம்முநிவரைநோக்கி) நீர்கலங்கல் என, நீங்கள் மனங்கலங்கவேண்டாவென்று, கரதலங்கவித்தனன் - கையமைத்து, சிலை யின் - தனது கோதண்டத்தின், தெய்வநாண் - தெய்வத்தன்மையுள்ள நாணை செவித்தலம் நிறுத்தினன் - (இழுத்து) செவியினிடத்தில் நிறுத்தி, (பாணமெய்து புவித்தலம் - பூமியை, குருதியின் புணரியாக்கினன் - உதிரக்கடலாக்கி, அரக்கர் சிரக்குன்றம்குவித்தனன் - அரக்கருடைய தலைமலைகளைக்குவித்தான்—எ-று. ()

நீர்கலங்கல்மின் எனற்பாலது நீர்கலங்கல்என பன்மையிலொருமைவந்த பால் வழுவமைதி. இவ்வாறன்றி, கலங்கவீர் எனப்பாடமோதி, கலங்கற்பாலீரல்லீர் எனப்பொருளுரைப்பினும் பொருந்தும்.

469. திருமக ளுயகன் தெய்வ வாளிதான்
வெருவரு தாடகை பயந்த வீரர்கள்
இருவரி னொருவனைக் கடலி னிட்டதங்
கொருவனை யந்தக புரத்தி னுய்த்ததே.

(இ-ள்.) திருமகள்நாயகன் - லக்ஷ்மீநாதனது, தெய்வவாளி - தெய்விகமுள்ள பாணமானது, வெருவரு - (கண்டோர்க்கு) அச்சமுண்டாகத்தக்க, தாடகை பயந்த - தாடகையானவள் பெற்ற, வீரர்கள் !இருவரின் - இரண்டுவீரர்களுக்குள், ஒருவனை - ஒருவனாகிய மாரீசனை, கடலின் இட்டது - கடலிற்போட்டு, அங்கு - அவ்வாறே, ஒருவனை - ஒருவனாகிய சுபாகுவை, அந்தக புரத்தின் உய்த்தது - யம புரத்திற் செலுத்திவிட்டது—எ-று. (௫௨)

காந்தர்வாஸ்திரம், ஆக்நேயாஸ்திரம், வாயவ்யாஸ்திரம் என்பவற்றை, முறை யே மாரீசன் சுபாகு மற்ற அரக்கர் ஆகிய இவர்கள்மேலெய்தானென்ன வுணர்க. வெருவு அரு எனப்பிரித்து, பிறர்க்குத்தான் வெருவுதலில்லாத எனினும் பொரு ந்தும்.

470. துணர்த்தபூந் தொடையலான் பகழி தூவினன்
கணத்திடை விசும்பினைக் கவித்துத் தூர்த்தலால்
பிணத்திடை நடந்திவர் பிடிப்ப ரீண்டென
உணர்த்தின ரொருவர்மு னொருவ ரோடினர்.

(இ-ள்.) துணர்த்த - மலர்களாற்சமைத்த, பூதொடையலான் - பொலிவாகிய மாலையையணிந்த ஸ்ரீராமபிரான், பகழிதூவினன் - பாணங்களையேவி, கணத்திடை - கணப்பொழுதில், விசும்பினை-ஆகாயத்தை, கவித்துதூர்த்தலால் - மறைத்துத்தூர்த்துவிட்டதனால், (இனி) இவர் - இவர்கள், ஈண்டு பிணத்திடை நடந்து - நெருங்கிய பிணங்களின்மேல் நடந்துவந்து, பிடிப்பர் என - நம்மைப்பிடிப்பார்களென்று, உணர்த்தினர் - தெரிவித்தவராகி, ஒருவர்முன் ஒருவர் - ஒருவர்முன்னொருவராக, ஓடினர் - ஓடினார்கள்—எ-று, (௩௩)

471. ஓடின வரக்கரை யுருமின் வெங்கணை
கூடின குறைத்தலை மிறைத்துக் கூத்துநின்
றாடின வலகையு மையன் கீர்த்தியைப்
பாடின பரந்தன பறவைப் பந்தரே.

(இ-ள்.) ஓடின - (இவ்வாறு) ஓடயத்தனித்த, அரக்கரை - ராக்ஷஸர்களை, உருமின்வெங்கணை - இடியைப்போல வெம்மையாகிய பாணங்கள், கூடின - விடாதுதொடர்ந்தன, குறைத்தலை-கவந்தங்கள், மிறைத்துநின்று கூத்தாடின - குதித்துநின்று கூத்தாடின, அலகையும் - பிசாசங்களும், ஐயன்கீர்த்தியைபாடின - ஸ்ரீராமபிரானுடைய கீர்த்தியைப் புகழ்ந்துபாடின, பறவைபந்தர்பரந்தன - கழுகுமுதலியபக்ஷிகளாகிய பந்தல்கள்பரவின—எ-று, (௩௪)

472. பந்தரைக் கிழித்தன பரந்த பூமழை
அந்தர துந்துமி முகிலி னார்த்தன
இந்திரன் முதலிய வமர ரீண்டினர்
சுந்தர வில்லியைத் தொழுது வாழ்த்தினர்.

(இ-ள்.) பரந்த - (தேவர்களால் பொழியப்பட்டுப்) பரவின, பூமழை - பூமழைகள், பந்தரைகிழித்தன - பறவைப்பந்தலைக்கிழித்தன, அந்தரதுந்துமி-தேவதுந்துமிகள், முகிலின் ஆர்த்தன - மேகம்போல முழங்கின, இந்திரன் முதலிய அமரர் - இந்திரன்முதலாகிய தேவர்கள், ஈண்டினர் - (ஆகாயத்தில்) நெருங்கிநின்று, சுந்தரவில்லியை - அழகான கோதண்டபாணியை, தொழுதுவாழ்த்தினர் - வணங்கி மங்களாசாஸநம் பண்ணினார்கள்—எ-று. (௩௫)

வேறு.

473. புனிதமாதவ ராசியின் பூமழை பொழிந்தார்
அனையகானத்து மரங்களு மலர்மழை சொரிந்த
முனியுமவ்வழி வேள்வியை முறைமையின் முற்றி
இனியசிந்தைய னிராமனிக் கினையன விசைந்தான்.

(இ-ள்.) புனிதமாதவர் - பரிசுத்தமான பெரியதபோதனர்கள், ஆசியின் பூமழைபொழிந்தார் - ஆசீர்வாதமாகிய மலர்மாரியைப் பொழிந்தார்கள், அனைய - அத்தன்மையான, கானத்து - காட்டிலுள்ள, மரங்களும் - விருக்ஷங்களும், மலர் மழை பொழிந்த - பூமாரியைச் சொரிந்தன, முனியும் - விசுவாமித்திர முனிவ

னும், அவ்வழி-அப்போது, வேள்வியை-யாகத்தை, முறைமையின்முற்றி-கிரமமாக நிறைவேற்றி, இனியசிந்தையன்-சந்தோஷசித்தத்தை யுடையவனாய், இராமனுக்கு-ஸ்ரீராமபிரானுக்கு, இனையன-இந்த உபசாரவார்த்தைகளை, உரைத்தான் - சொன்னான்—எ-று. (௬௬)

474. பாக்கியம்மெனக் குளதென நினைவுறும் பான்மை
போக்கிநிற்கிது பொருளென வுணர்கிலென் புவனம்
ஆக்கிமற்றவை யகிலமு மணிவயிற் றடக்கிக்
காக்குநீயொரு வேள்விகாத்தனை யெனுங் கருத்தே.

(இ-ள்.) (ஸ்ரீராமா) எனக்கு - எனக்கு, பாக்கியம் உளது என - வரற்பாலதாகிய நன்மை உண்டாமென்று, நினைவுறும் பான்மைபோக்கி - நினைக்கின்றதன்மையை விட்டு, நிற்கு-உனக்கு, இது பொருள் என-இது ஒருபொருளென்று, உணர்கிலென்-நினைக்கின்றிலேன், (ஏனெனின்) புவனம்-அண்டங்களை, ஆக்கி-சிருஷ்டித்து, அவை அகிலமும்-அவைகளையெல்லாம், அணிவயிற்றடக்கி - திருவயிற்றின்கண் ணடக்கி, காக்கும்-ரக்ஷிக்கிற, நீ-நீ, ஒருவேள்வி - ஒருயாகத்தை, காத்தனை என்னும் கருத்து-இடையூறுவராமற் காத்தாயென்கிற கருத்துளத்தாகுமா—எ-று. (௬௭)

போக்கி என்பதற்கு அன்றி எனவும் பொருள் கூறலாம், உலகங்களை யெல்லாம் படைத்தளித்தழிக்கு மாற்றலுள்ள வுனக்கு இந்தயாகத்தைக்காத்தல் அருமையாக நினைக்கின்றிலேன் என்பது கருத்து. மற்று அசை, மணிவயிறு எனவும் பதம் பிரிக்கலாம். பொருள் வேறுபாடின்று வயிற்றுக்குத் தன்னிடத்துச்சென்ற பொருள்கள் சீரணிக்கப்பண்ணுதலியற்கையாக, ப்ரளயாபத்துக் கொதுங்கக்கொடுத்து, அவ்வுலகங்களுக் கொருகுறையும் நேரிடாமற் குறிக்கொண்டு காத்து, மீட்டும் வெளிநாடு காணவுமிழ்தலால் அணிவயிறு என்றார்.

475. என்றுகூறிய பின்னரவ் வெழின்மலர்க் கானத்
தன்றுதானுறைந் தருந்தவ முனிவரோ டிருந்த
குன்றுபோற்குணத் தானெதிர் கோசலைக் குருசில்
இன்றியான்செயும் பணியென்கொல் பணியெ னிசைத்தான்.

(இ-ள்.) என்று கூறியபின்னர்-என்று விசுவாமித்திரமுனிவன் சொன்னபிறகு, அ-அந்த, எழில்-அழகையுடைய, மலர்க்கானத்து - புஷ்பங்கள் நிறைந்தவனத்தில், அன்று உறைந்து-அன்று தங்கி, அருந்தவம் - அரியதவத்தையுடைய, முனிவரோடு இருந்த - முனிவருடன் கூடியிருந்த, குன்றுபோல் குணத்தான் எதிர் - மலையையொத்த நற்குணத்தையுடைய விசுவாமித்திர முனிவனுக்கெதிரில், கோசலைக்குருசில்-கோசலநாட்டரசனாகிய ஸ்ரீராமபிரான், (நின்று முனிவனைநோக்கி) இன்று-இப்பொழுது, யான் செயும் பணி என் - நான்செய்வேண்டிய காரியமென்னையோ, பணி என இசைத்தான்-கட்டளையிடுமென்று சொன்னான்—எ-று. (௬௮)

குணம் அசையாமைபற்றிக் குன்றுபோற் குணத்தான் என்றார். "குணமென்னுங்குன்றெனப் பிறர் கூறலாலும் உணர்க," நற்குணங்கள்-துறவு, மெய்யுணர்வு, அவாவின்மை முதலியன.

476. அரியயான் சொலினைய நிற்கரிய தொன்றில்லை
பெரியகாரிய முளவவை முடிப்பது பின்னர்

விரியும்வார்புனன் மருதஞ்சூழ் மிதிலையர் கோமான்
புரியும்வேள்வியுங் காண்டுநா மெழுகென்று போனார்.

(இ-ள்.) யான் அரிய - நான் அருமையானவையாக நினைத்து, சொலின் - சில காரியங்களைச் சொன்னாலும், ஐய-ஐயனே, நிற்கு அரியது ஒன்று இல்லை - உனக்கு செய்தற்கருமையான காரியம் ஒன்றுமில்லை, (ஆனால்) பெரியகாரியம் உள - பெரிய காரியங்களும் உள்ளன, அவை முடிப்பது பின்னர் - அவற்றைமுடிப்பது பிறகு, (அதிருக்கட்டும் இப்போது) விரியும் வார்புனல் - பரந்து ஒழுகுகின்ற நீர்வளமுள்ள, மருதம் சூழ்-மருதநிலத்தாற் சூழப்பட்ட, மிதிலையர் கோமான் - மிதிலாதிபனாகிய ஜநகமஹாராஜன், புரியும்-செய்கின்ற, வேள்வியும்-யாகத்தையும்,நாம் காண்டும்-நாம் பார்ப்போம், எழுக என்று-எழுந்திரு என்றுசொல்லி, போனான்-சென்றான்—எ-று.

கூ-வது வேள்விப்படலம் முற்றும்.



# ய-வது அகலிகைப் படலம்.

அகலிகையின் சாபவிமோசநாதி வரலாறுகளைக் கூறுகின்றபடலம்.

477. அலம்புமாமணி யாரத்தோ டகிலளை புளின
நலம்பெய் பூண்முலை நாகிளவஞ்சியா மருங்குற்
புலம்புமேகலைப் புதுமலர்ப் புனையறற் கூந்தற்
சிலம்பு சூழுங்காற் சோணமாந் தெரிவையைச் சேர்ந்தார்.

(இ-ள்.) அலம்பு - அசைகின்ற, மாமணி-பெரியரத்நங்களுடனும், ஆரத்தோடு-சந்தனத்துடனும், அகில் அளை-அகிற்கட்டைகள் பொருந்திய, புளினம்-மணற்குன்றாகிய, நலம்பெய்-இன்பத்தைத்தருகின்ற,பூண்ட-ஆபரணங்களையணிந்த, முலை-ஸ்தநங்களையும், நாகு இளவஞ்சி ஆம்-மிகவுமிளமைபொருந்திய பூங்கொடியாகிய,மருங்கு-இடையினையும், புலம்பும்-சப்திக்கின்ற, மேகலை - (அலையாகிய) மேகலாபரணத்தையும், புதுமலர்-புதுமலர்களால், புனை - அலங்கரிக்கப்பட்ட, அறல் - கருமணலாகிய, கூந்தல் - கூந்தலையும்,சிலம்பு சூழும்கால் - சிலம்பு சூழ்ந்தகாலையுமுடைய, சோணம் ஆம்-சோணநதியாகிய, தெரிவையை-பெண்ணை, சேர்ந்தார்-அடைந்தார்—எ-று. (க)

நதியைக்குறிக்குமிடத்தில் சிலம்பு சூழுங்கால் என்றதனை மலையைச் சூழுங்கால் என்றும், பெண்ணைக்குறிக்குமிடத்து சிலம்பாகிய அணிபொருந்திய கால் என்றும் பொருள் கொள்க.

478. நதிக்குவந்தவ ரெய்தலு மருணன்ற னயனக்
கதிக்குமுந்துறு கலினமான் றேரொடுங் கதிரோன்
உதிக்குங்காலையிற் றண்மைசெய் வான்றன துருவில்
கொதிக்கும் வெம்மையை யாற்றுவான்போற்கடற் குளித்தான்.

(இ-ள்.) அவர்-அவர்கள், வந்து-வந்து, நதிக்கு எய்தலும் - நதியையடைதலும், அருணன்தன்-அருணனென்னுஞ் சாரதியினுடைய, நயனக்கதிக்கு - நேத்திரவேகத்

துக்கு, முந்து உறு-முற்படுகின்ற, கலினம்மா-கடிவாளத்தையுடைய குதிரைகட்டிய, தேரொடும்-ரதத்தோடும், கதிரோன்-சூரியன், உதிக்கும்காலையில்-உதிக்குங் காலத்தில், தண்மை செய்வான்-குளிர்ச்சிசெய்யும்பொருட்டு, தனது உருவில்-தன்வடிவத்தில், கொதிக்கும் வெம்மையை - கொதிக்கின்ற வெப்பத்தை, ஆற்றுவான்போல்-தணிக்கின்றவன்போல, கடல்குளித்தான்-மேற்கடலில் முழுகினான்—எ-று. (உ)

குளித்தான் என்றமையால் மேற்கடல் என்றனம்.

479. கறங்குதண்புனற் கடிநெடுந் தாளுடைக் கமலத்
தறச்கொளுண்மலர்க் கோயில்க ளிதழ்க்கத வடைப்பப்
பிறங்குதாமரை வனம்விட்டுப் பெடையொடு களிவண்
டுறங்குகின்றதோர் நறுமலர்ச்சோலைபுக் குறைந்தார்.

(இ-ள்.) கறங்குதண்புனல்-ஒளிக்கின்ற குளிர்ச்சியாகிய நீர்நிலைகளிலுள்ள, கடி-வாசனைபொருந்திய, நெடுநாள் உடை-நீண்டநாளத்தையுடைய, கமலத்து-தாமரைகளின், அறம்கொள் - (தேனை உபகரித்தலாகிய) அறத்தைக்கொண்ட, நாள்மலர் கோயில்கள்-புதியமலர்களாகிய கோயில்கள், இதழ் கதவு அடைப்ப-இதழ்களாகிய கதவுகளை மூடியதனால், பிறங்கு - விளங்குகின்ற, தாமரைவனம்விட்டு - தாமரைக்காட்டைவிட்டு, களிவண்டு - களிக்கின்ற ஆண்வண்டுகள், பெடையோடு - பெண் வண்டுகளோடு, உறங்குகின்றது-உறங்குதற்கிடமாகிய, ஓர்நறுமலர்சோலை-ஒருநல்ல பூஞ்சோலையில், புக்கு உறைந்தார்-போய் (அன்றிரவு) தங்கினார்கள்—எ-று. (ஙு)

பெடையொடு என்றதனால், களிவண்டென்பதற்கு, களிக்கின்ற ஆண்வண்டு என்று பொருளுரைக்கப் பட்டது.

480. இனையசோலைமற் றியாதெனை விராகவன் வினவ
வினையெலாமற நோற்றவன் விளம்புவான் மேனாள்
தனையரானவர்க் கிரங்கியே காசிபன் றனது
மனையுளாள்தவம் புரிந்தன ளிவணென வலித்தான்.

(இ-ள்.) இனியசோலை-இந்தச்சோலையானது, யாது என-யாவதென்று, இராகவன் வினவ-ஸ்ரீராமபிரான் வினவ, வினை எலாம்- வினைகளெல்லாம், அற-ஒழியும்படி, நோற்றவன்-தவஞ்செய்தவனாகிய விசுவாமித்ரமுநிவன், விளம்புவான்-சொல்லுவான், (எவ்வாறெனின்) மேல்நாள் - முற்காலத்தில், தனையர் ஆனவர்க்கு-புத்திரர்களுக்காக, இரங்கி-சோகித்து, காசிபன்தனது மனைஉளாள்-காசிபரிஷியின் மனைவியாயுள்ள திதியென்பவள், இவண்-இவ்விடத்தில், தவம்புரிந்தனள்-தவஞ்செய்தாள், என வலித்தான்-என்று துணிந்து சொல்லினான்—எ-று. (சு)

481 அண்டகோளகைக் கப்புறத் தென்னையா ளுடைய
கொண்டனீள்பதத் தெய்தியோர் விஞ்சையர் கோதை
புண்டரீகமென் பதத்தியைப் புகழ்ந்தனள் புகழ
வண்டறுமது மாலைகைக் கொடுத்தனண் மகிழ்ந்து.

(இ-ள்.) அண்டகோளகைக்கு-அண்டகோளத்துக்கு, அப்புறத்து-அப்பாலுள்ள, என்னை ஆள் உடைய-என்னையடிமையாகவுடைய, கொண்டல் - மேகவண்ணனது, நீள்பதத்து - சாசுவதமான வைகுந்தத்தில், ஓர் விஞ்ஞையர்கோதை-ஒரு வித்தியா

தரஸ்த்ரீ, எய்தி-அடைந்து, புண்டரீகம் - தாமரைமலர்போன்ற, மெல்-மெதுவான, பதத்தியை - திருவடிகளையுடைய பெரியபிராட்டியை, புகழ்ந்தனள் - புகழ்ந்தாள், புகழ-புகழ்தலும், மகிழ்ந்து - சந்தோஷித்து, வண்டு அறு-வண்டுகள் நீங்காத, மது-தேன் நிறைந்த, மாலை-பூமாலையை, கைகொடுத்தனள்-அவள்கையிற்கொடுத்தாள்— எ-று. (௫)

கொண்டல் - உருவகம். புண்டரீகமென்பதத்தியை என்பதை புண்டரீகம் என் பதத்தியை எனப்பிரித்து தாமரைமலர் என்று சொல்லுதற்குரிய திருவடியை யுடையவளை எனினும் பொருந்தும். வண்டு அறுமது மாலை என்பதற்கு வண்டுகள் மொய்க்கின்ற நீங்காத தேனையுடைய மாலை எனினும் அமையும்.

மாலையைப்பெற்று அயனுலகம்வந்தானை துர்வாசமுனிகண்டு
வணங்கினுனென்பதுணர்த்துகிறது,

482. அன்னமாலையை யாழிடைப் பிணித்தய னுலகம்
கன்னிமீடலுங் கசட்டுறு முனியெதிர் காணு
என்னையாளுடை நாயகிக் கிசையெடுப் பவளெண்
றன்னள்தாளிணை வணங்கிநின் றேத்தலு மனையாள்

(இ-ள்.) அன்னமாலையை-அத்தன்மையதாகியமாலையை, யாழ் இடைபிணித்து-தன்யாழின் தலையில்கட்டி, கன்னி - வித்யாதரஸ்திரீ, அயன் உலகம் - பிரமலோகத்துக்கு, மீடலும் - மீளுதலும், கசடு உறு-களங்கமிருந்த, முனி - துர்வாஸமுநிவன், எதிர்காணு - எதிரில்கண்டு, என்னை ஆள் உடை நாயகிக்கு - என்னையடிமையாகவுடைய பெரியபிராட்டிக்கு, இசை எடுப்பவள் என்று - கீதம்பாடுகின்றவளென்று நினைத்து, அன்னள்தாள் இணை-அவளுடைய இரண்டுபாதங்களை, வணங்கிநின்று ஏத்தலும்-தொழுதுநின்று துதித்தலும்,அனையாள்-அந்தவித்யாதர ஸ்த்ரீயானவள்— எ-று. (௬)

கசடு என்றது இவ்விடத்துக் கோபத்தை எனக்கொள்க-தவத்தைச் சிதைத்தற்கு இதின் மிக்ககுற்றம் இன்மையின், இதனை கசடு என்றார்.

483. உலகம்யாவையும் படைத்தளித் துண்டுமி ழொருவன்
இலகமார்பகத் திருந்துயிர் யாவையு மீன்ற
திலகவாணுதல் சென்னியிற் சூடிய தெரியல்
அலகின்மாமுனி பெறுகென வளித்தன ளளியால்.

(இ-ள்.) உலகம் யாவையும் - அண்டங்களெல்லாவற்றையும், படைத்து-சிருஷ்டித்து, அளித்து-ரக்ஷித்து, உண்டு-விழுங்கி, உமிழ்-உமிழ்கின்ற, ஒருவன்-ஒப்பற்றவனாகிய இறைவனது, இலகு-பிரகாசிக்கின்ற, அ மார்பகத்து-அந்தத்திருமார்பினிடத்தில், இருந்து - தங்கியிருந்து, உயிர்யாவையும் ஈன்ற - உயிர்களெல்லாவற்றையும் பெற்ற, திலகம்வாள் நுதல்-திலகத்தையணிந்த ஒளிபொருந்திய நெற்றியையுடைய பெரியபிராட்டியின், சென்னியிசூடிய - கூந்தலிலணிந்த, தெரியல் - மாலையாகிய, இதனை, அலகு இல் மாமுனி - (தவப்பெருமைக்கு ஓர்) அளவில்லாத முனிசிரேஷ்டனே, பெறுக என-பெற்றுக்கொள்ளுவாயென்று, அளியால்-கிருபையினால், அளித்தனள்-கொடுத்தருளினாள்—எ-று. (௭)

இலகுமார்பகத்து என்றும்பாடம். திலகவாணுதல்-அன்மொழித்தொகை அலகில் மாதவ என்றும்பாடம்,

484. தெய்வநாயகி சென்னியிற் சூடிய தெரியல்
அய்யயான்பெறப் புரிந்ததெத் தவமென வாடி
வெய்யமாமுனி சென்னியிற் சூடியே வினைபோய்
உய்யுமாறிதென் றுவந்துவந் தும்பர்நா டடைந்தான்.

(இ-ள்.) வெய்யமாமுனி - (அப்படி அந்தமாலையைக்கொடுக்கப் பெற்றுக் கொண்ட) கொடுங்கோபியாகிய துர்வாசமுனிவன், தெய்வநாயகி- பெரியபிராட்டியானவள், சென்னியில்சூடிய-தனது திருமுடியில்தரித்த, தேரியல்-மாலையை, அய்ய யான்பெற-ஆச்சரியம் நான்பெறுதற்கு, புரிந்தது-செய்தது, எத்தவம் என ஆடி-எந் தத்தவமென்றுகூத்தாடி, சென்னியில்சூடி-சிரசிலணிந்து, வினைபோய் உய்யும் ஆறு இது என்று- வினைகளொழிந்து உஜ்ஜீவிக்கும்வழி இதுவென்று, உவந்து வந்து-பல கால் சந்தோஷித்து, உம்பர்நாடு அடைந்தான்-தேவலோகத்தைச் சேர்ந்தான்-எ-று

துர்வாசமுனிவன் கோபியென்பது ப்ரஸித்தமாதலால், 'வெய்யமாமுனி' என் பதற்குக் கொடுங்கோபியாகிய துர்வாசமுனிவன் என்று பொருள் கூறப்பட்டது. 'உவந்து உவந்து' என்பதற்கு மிகுதியுஞ் சந்தோஷித்து எனவும், உவந்து வந்து எனப்பிரித்து, சந்தோஷித்து வந்து எனவும் பொருள்கூறினும் அமையும், ஐய-வியப்பு. (அ)

இதுமுதல் நான்கு திருவிருத்தங்களால் இந்திரன்
பவனிச் சிறப்பைக் கூறுகின்றார்.

485. பெய்யுமாமுகில் வெள்ளியம் பிறங்கன்மீப் பிறழும்
செய்யதாமரை யாயிர மலர்ந்துசெங் கதிரின்
மொய்யசோதியை மிலைச்சிய முறைமைபோன் றொளிரும்
மெய்யினோடயி ராவதக் களிற்றின்மேல் விளங்க.

(இ-ள்.) பெய்யும்-மழை பெய்கிற, மாமுகில் - பெருமையாகிய மேகமானது, அம்-அழகிய, வெள்ளி பிறங்கல்மீ - வெள்ளிமலையின்மேல், பிறழும் - பிறழ்கின்ற, செய்யதாமரை ஆயிரம்மலர்ந்து - செந்தாமரைமலர்க ளோராயிரம்பூத்து, செங்கதிரின்-சூரியனது, மொய்யசோதியை - நெருங்கிய கிரணங்களை, மிலைச்சிய - சூடின, முறைமைபோன்று-முறைமையையொத்து, ஒளிரும்-விளங்குகின்ற, மெய்யினோடு-சரீரத்துடன், அயிராவதக்களிற்றின்மேல் விளங்க-ஐராவதமென்கிறவெள்ளையானையின்மீது பொலியவும்—எ-று. (கூ)

மேகம்மலர்ந்து-மிலைச்சியமுறைமைபோன்று எனக்கூட்டுக. வெள்ளிமலை ஐராவதத்துக்கும், மேகம் இந்திரனுக்கும், தாமரைமலர்கள் அவன்கண்களுக்கும் சூரிய கிரணங்கள் அவனணிந்திருக்கு மாபரணங்களுக்கும் உவமை.

486. அரம்பை மேநகை திலோத்தமை யுருப்பசியனங்கன்
சரம்பெய்தூணியிற் றளிரடி நூபுரந் தழைப்பக்
கரும்பையுஞ் சுவை கைப்பித்த குதலையர்விளரி
நிரம்புபாடலோ டாடினர் வீதிக ணெருங்க.

(இ-ள்.) அரம்மை மேநகை திலோத்தமை உருப்பசி - அரம்பை முதலான நால்வரும், அனங்கன் சரம்பெய்தூணியின்-மன்மதபாணங்களை வைத்தற்குரிய அம்பறாத்தூணிபோன்ற கணைக்காலோடு கூடிய, தளிர் அடி-தளிர்போன்ற பாதங்களி

லணிந்த, நூபுரம்-பாதஜாலங்கள், தழைப்ப - தழைக்கவும், கரும்பையும் - கருப்பஞ் சாற்றையும், சுவை-சுவையினால், கைப்பித்த-வெறுக்கச்செய்த, குதலையர் - மழலைச் சொற்களை யுடையராய், விளரிநிரம்பு பாடலோடு-விளரிநிறைந்த பாடலுடன், ஆடினர்-ஆடிக்கொண்டு, வீதிகள்நெருங்க-வீதிகளில்நெருங்கிவரவும்—எ-று. (கo)

487. நீலமால்வரை தவழ்தரு கதிர்நிலாக் கற்றை
போலவேயிரு புடையினுஞ் சாமரைபுரள
கோலமாமதி குறைவற நிறைந்தொளி குலாவ
மேல்நிவர்ந்தென வெள்ளியந் தனிக்குடை விளங்க.

(இ-ள்.) நீலமால்வரை - பெரியநீலமலையின், (இருபுறத்தும்) தவழ்தரு - தவழ்கின்ற, கதிர்-கிரணரூபமாகிய, நிலாகற்றைபோலவே - சந்திரிகைத் தொகுதியைப் போலவே, இருபுடையினும்-இருபுறத்தும், சாமரைபுரள- சாமரைபுரளவும், கோலம் மாமதி-அழகானபெரியசந்திரன், குறைவு அறநிறைந்து-குறைவறநிரம்பி,ஒளிகுலாவ-ஒளிவிளங்க, மேல்நிவர்ந்தென - மேலோங்கி யிருந்தாற்பொல, வெள்ளி அம்தனி குடைவிளங்க-வெள்ளிய அழகான ஒப்பற்றகுடைவிளங்கவும்—எ-று. (கக)

488. தழங்குபேரியுங் குறட்டொடு பாண்டிலுஞ் சங்கும்
வழங்குகம்பலை மங்கல கீதத்தை மறைப்ப
முழங்குநான்மறை மூரிநீர் முழக்கென வுலகை
விழுங்குமாவரும் விழாவணி கண்டுளம் வியந்தான்.

(இ-ள்.) தழங்குபேரியும்-ஒலிக்கின்றபேரிகையும், குறட்டொடு - குறட்டுடன், பாண்டிலும்-தாளமும், சங்கும்-சங்கமும், வழங்கு - கொடுக்கின்ற, கம்பலை - ஓசையானது, மங்கலகீதத்தை மறைப்ப-மங்கலகீதங்களைமறைக்கவும், முழங்கும்-கோஷிக்கிற, நால்மறை-நான்குவெதங்களினோசையானது, மூரி நீர்முழக்கு என-சமுத்திர நீரின் முழக்கத்தைப்போல, உலகை விழுங்கு மாவரும் - உலகத்தைவிழுங்குமாறு வருகின்ற, விழா அணி-திருவிழாவின்சிறப்பை, கண்டு-பார்த்து, உளம்வியந்தான்-மனங்களித்தான்—எ-று. (கஉ)

489. தனையொவாதவன் மகிழ்ச்சியால் வாசவன் றன்கை
வனையுமாலையை நீட்டலுந் தோட்டியால் வாங்கித்
துனைவலத்தயி ராவதத் தெருத்திடைத் தொடுத்தான்
பனைசெய்கையினாற் பறித்தடிப் படுத்ததப் பகடு.

(இ-ள்.) தனை ஒவ்வாதவன்-தனக்குச்சமானமில்லாத முனிவன், மகிழ்சசியால்-களிப்பினால், வனையும்மாலையை-தான்தரித்திருந்தமாலையை,வாசவன்கை நீட்டலும்-இந்திரன்கையிற்கொடுத்தலும், (அவன்) தோட்டியால்வாங்கி-(அந்தமாலையை) அங்குசத்தால்வாங்கி, துனை-விரைகின்ற, வலத்து - பலத்தையடைய, அயிராவதத்து-ஐராவதத்தின், எருத்திடை-பிடர்மேல், தொடுத்தான்-மாட்டினான், (உடனே) அபகடு-அந்தயானை, பனைசெய்கையினால்பறித்து - பனையையொத்த துதிக்கையினால் பறித்து, அடிப்படுத்தது-தன்காலிலிட்டது—எ-று. (கங)

பனைசெய் என்பதில் செய் உவமைவுருபு, அன்றிப்பனையினழகைச் செய்கின்ற எனினுமாம்,

490. கண்டமாமுனி விழிவழி யொழுகுவெங் கனலால்
அண்டகூடமுஞ் சாம்பரா யொழியுமென் றழியா
விண்டுநீங்கினர் விண்ணவ ரிருசுடர் மீண்ட
எண்டிசாமுக மிருண்டது சுழன்றதெவ் வுலகும்.

(இ-ள்.) கண்ட-அதைப்பார்த்த, மாமுனி - பெருமைபொருந்தியமுனிவனது, விழிவழி-கண்வழியாக, ஒழுகு-சிந்துகிற, வெம்கனலால்-வெவ்வியதீப்பொறிகளால், அண்டகூடமும்-அண்டமுகடும், சாம்பர் ஆய் ஒழியும் என்று-சாம்பலாயொழியுமென்றுகருதி, விண்ணவர்-தேவர்கள், அழியா-மனமழிந்து, விண்டுநீங்கினர்- தத்தம்பதங்களை விட்டுநீங்கினார்கள், இருசுடர்மீண்ட-சூரியசந்திரர்திசைமாறினர், எண்டிசாமுகம் இருண்டது-அஷ்டதிக்குகளி னிடமெங்கும் இருண்டது,எவ்வுலகும் சுழன்றது-எந்தலோகமும் சுழன்றது—எ-று.

491. புகையெழுந்தன வுயிர்தொறு மெயில்பொடித் தவனில்
நகையெழுந்தன நிவந்தன புருவநன் னுதலில்
சிகையெழுஞ்சுடர் விழியின னசனியுந் திகைப்ப
மிகையெழுந்திடு சதமக கேளென வெகுண்டான்.

(இ-ள்.) உயிர்தொறும்- அந்த முனிவன் உயிர்க்குந்தோறும், புகை எழுந்தன - புகையெழும்பின, எயில்பொடித்தவனில்-முப்புரங்களை நீறாக்கின ருத்ரனுக்கு வந்த நகையைப்போல, நகை எழுந்தன-(துர்வாசமுனிக்கு) சிரிப்பு உண்டாயின, நல்நுதலில்-நல்லநெற்றியில், புருவம்நிவந்தன-புருவங்களேறின, சிகை எழும்- ஜ்வாலைகளுண்டாகிற, சுடர்-நெருப்புப்போன்ற, விழியினன்-கண்களையுடையவனாய், அசனியும்திகைப்ப-இடியும் திகைக்கும்படி, மிகை எழுந்திடுசதமக-மிகுதியான ஆடம்பரத்துடன்வருகிற இந்திரனே, கேள் என - கேட்பாயென்று, வெகுண்டான் - கோபித்துச்சொல்வான்—எ-று. (கஇ)

மிகை-குற்றம் எனினும்பொருந்தும்.

492. பூதநாயகன் புவிமக ணாயகன் பொருவில்
வேதநாயகன் மார்பகத் தினிது வீற்றிருக்கும்
ஆதிநாயகி விருப்புற தெரியல் கொண்டணைந்த
மாதரான்வயிற் பெற்றனென் முயன்றமா தவத்தால்.

(இ-ள்.) பூதநாயகன்-ஐம்பெரும் பூதங்களுக்குத் தலைவனும், புவிமகள் நாயகன்-பூதேவிக்குக் கொழுநனும், பொருவு இல்-சமானமில்லாத, வேதநாயகன்-வேதமுதல்வனுமாகிய ஸ்ரீமந்நாராயணனது, மார்பகத்து-திருமார்பில், இனிது வீற்றிருக்கும்-இன்பமாக வீற்றிருக்கிற, ஆதிநாயகி-பெரியபிராட்டியார்,விருப்பு உறு-விருப்புமிக்க, தெரியல் கொண்டு அணைந்த - பூமாலையைப்பெற்றுவந்த, மாதரான்வயின்-(ஒருவித்தியாதர) ஸ்த்ரீயினிடத்தில், முயன்ற மாதவத்தால்-நான் முயன்றுசெய்த பெரிய தபோமஹிமையால், பெற்றனென்-(இதனைப்)பெற்றேன்—எ-று. (கச)

493. இன்றுநின்பெருஞ் செல்விகண் டுவகையி னீந்த
மன்றலந்தொடை யிகழ்ந்தனை நினதுமா நிதியும்
ஒன்றலாதபல் வளங்களு மூவரிபுக் கொளிப்பக்
குன்றிநீதுய ருறுகென வுரைத்தனன் கொடியோன்.

(இ-ள்.) இன்று-இப்போது, நின்பெருசெல்விகண்டு - உன்னுடைய உலா வருதலின் பேரழகைப்பார்த்து, உவகையின் (இந்தப்பூமாலை உனக்குரியதென்று கருதின) சந்தோஷமனத்தினோடு, ஈந்த-(என்னால்) கொடுக்கப்பட்ட, மன்றல் அம்தொடை-பரிமளமுள்ள அழகியமாலையை, இகழ்ந்தனை-அவமதித்தாய், (ஆதலால்) நினது-உனது, மாநிதியும்-பெருமை பொருந்திய சங்கநிதி பதுமநிதிகளும், ஒன்று அல்லாத - ஒன்றல்லாத. பல்வளங்களும் - அநேகமான செல்வங்களும், உவரி - கடலில், புக்கு ஒளிப்ப-போய்மறைய, நீகுன்றி-நீ பெருமைகுறைந்து, துயர் உறுக என-துன்பமடையக்கடவாயென்று, கொடியோன்-கொடியவனாகிய துர்வாசமுனிவன், உரைத்தனன்-சொன்னான்—எ-று. (௧௭)

தவத்தோர்க்கு அடாதென நூல்களானும் ஆன்றோரானும் விலக்கப்பட்ட கோவத்தைமிகுதியுமுடையோனாதல்பற்றிக் கொடியோன் என்றார்.

494. அரமடந்தையர் கற்பக நவநிதி யமிர்தம்
சுரபிவாம்பரி மதமலை முதலிய தொடக்கற்
றொருபெரும்பொரு ளின்றியே யுவரிபுக் கொளிப்ப
வெருவியோடின வெண்ணெய்வாழ் கண்ணன்மே வாரின்.

(இ-ள்.) அரமடந்தையர்-தெய்வப்பெண்கள், கற்பகம்-கற்பகவிருக்ஷம், நவநிதி-நவநிதி, அமிர்தம்-அம்ருதம், சுரபி-காமதேநு, வாவும்பரி - தாவுகின்ற குதிரை, மதமலை-யானை, முதலிய - முதலானவை, தொடக்கு அற்று-தொடர்பு நீங்கி, ஒருபெரு பொருளின்றி - ஒரு பெரிய பொருளாயினும் இல்லாமல், உவரி புக்கு ஒளிப்ப - கடலிற்போய் மறையும்பொருட்டு, வெண்ணெய்-திருவெண்ணெய் நல்லூரில், வாழ் வாழ்கின்ற, கண்ணன்-கண்ணனென்னும்வள்ளலை, மேவாரின்-அடைந்து சீவியாத (அவரது) பகைவர்போல, வெருவி ஓடின-பயந்தோடின—எ-று. (௧அ)

கண்ணனெனும் வள்ளல் சடையனெனும் வள்ளலாருடைய தம்பியரில் மூத்தோர், இவரில் இளையார் சரராமனென்னும் வள்ளலார்.

495. வெய்யமாமுனி வெகுளியால் விண்ணக முதலாம்
வையம்யாவையும் வறுமைநோய் நலிதர வானோர்
தையல்பாகனுஞ் சதுமுகக் கடவுளுங் கூடிச்
செய்யதாமரைத் திருமறு மார்பனைச் சேர்ந்தார்

(இ-ள்.) வெய்ய-கொடுமைகளில், மா-பெருமையைக்கொண்ட, முனி-துர்வாசமுனிவனது, வெகுளியால்-சாபத்தால், விண்ணகம் முதல் ஆம்-விண்ணுலகமுதலாகிய,வையம்யாவையும்-உலகமெல்லாம், வறுமைநோய் நலிதர - வறுமைநோயானது நலிய, (அதைக்கண்ட) வானோர்-தேவர்களுக்கும், தையல்பாகனும் - சிவனும், சதுமுகக்கடவுளும்-பிரமதேவனும், கூடி - ஒருங்குசேர்ந்து, செய்யதாமரை - செந்தாமரை மலரில் வீற்றிருக்கிற, திரு-பெரியபிராட்டியையும், மறு - மறுவையும் கொண்டிருக்கிற, மார்பனை - திருமார்பையுடைய ஸ்ரீமந்நாராயணனை, சேர்ந்தார் - அடைந்தார்கள்—எ-று. (௧௯)

மறு-இறைவனது திருமார்பில் உள்ள உத்தமலக்ஷணக்குறி. இது ஸ்ரீவத்ஸம் எனப்படும்.

496. வெஞ்சொன்மாமுனி வெகுளியால் விளைந்தமை விளம்பிக்
கஞ்சநாண்மலர்க் கிழவனுங் கடவுளர் பிறரும்
தஞ்சமில்லைநின் சரணமே சரணெனச் சலியா
தஞ்சலஞ்சலென் றுரைத்தன னுலகெலா மளந்தோன்.

(இ-ள்.) (அடைந்து) வெம்சொல் - வெவ்விய சொல்லையுடைய, மா - பெரிய, முனி - முனிவனது, வெகுளியால்-கோவத்தால், விளைந்தமை-(இவ்வாறு) விளைந்த காரியத்தை, விளம்பி - சொல்லி, நாள்கஞ்சமலர் கிழவனும் - புதிய தாமரைமலருக் குரியவனாகிய பிரமதேவனும், கடவுளர் பிறரும் - மற்றைச் சிவன்முதலிய தேவர் களும், தஞ்சம் இல்லை - (எங்களுக்கு வேறு) ஆதாரமில்லை, நின் சரணமே சரண் - என - உன் திருவடிகளே எங்களுக்குப் புகலிடம் என்று விண்ணப்பஞ் செய்ய, (அதைக்கேட்டு) உலகு எல்லாம் அளந்தோன் - எல்லா வுலகங்களையும் திருவடியால் அளந்த ஸ்ரீமந் நாராயணன், சலியாது-சலிக்காமல், அஞ்சல் அஞ்சல் என்று உரைத் தனன்-பயப்படவேண்டாம் பயப்படவேண்டாமென்று திருவாய் மலர்ந்தருளினான் எ-று. (௨0)

அடுக்குப்பன்மைப்பொருளது, அஞ்சல்பன்மையி னொருமைவந்த வழுவமைதி.

497. மத்துமந்தரம் வாசுகி கடைகயி றடைதூண்
மெத்துசந்திரன் சுராசுரர் வேறுவே றுள்ள
கொத்திரண்டுபோல் வலிப்பவ ரோடதி கொடுத்து
கத்துவாரிதி மறுகுற வமிழ்தெழக் கடைமின்.

(இ-ள்.) (என்று சொல்லி மேலும்) மந்தரம் - மந்தரமலையை, மத்து - மத்தாக வும், வாசுகி - வாசுகியை, கடைகயிறு - கடை கயிறாகவும், மெத்து சந்திரன் - மெல் லிய தன்மையையுடைய சந்திரனை, அடைதூண் - அடைதூணாகவும், சுராசுரர்-சுரா சுரர்களுடைய, வேறுவேறு உள்ள கொத்து - வேறுவேறாயுள்ள கூட்டங்கள், இர ண்டுபோல் - இருபுறத்தும் நின்று, வலிப்பவர் - (கடைகயிற்றைப்பற்றி) இழுத்துக் கடைபவராகவும் கொண்டு, ஓடதி கொடுத்து - ஔஷதிபெய்து, கத்து - ஒலிக்கின்ற, வாரிதி - கடலானது, மறுகு உற - கலங்கவும், அமிழ்து எழ - அம்ருத முண்டாக வும், கடைமின் - கடையுங்கள்—எ-று. (௨க)

ஓடதி - அம்ருதவல்லியென்கிற காட்டுக்கொடி, அன்றி ஒருசாற் காய்த்துப் படு மரம் என்பாருமுளர்.

498. யாமுமவ்வயின் வருதுநீர் கதுமென வெழுந்து
போமினென்றருள் புரிதலு மிறைஞ்சினர் புகழ்ந்தார்
நாமமின்றெனக் குனித்தனர் நல்குர வொழிந்த
தாமெனும்பெருங் களிதுளக் குறுதலா லமரர்.

(இ-ள்.) யாமும் - நாமும், அவ்வயின் - அவ்விடத்துக்கு, வருதும் - வருவோம், நீர்-நீங்கள், கதுமென - விரைவாக, எழுந்துபோமின் என்று - எழுந்து போங்கோ ளென்று, அருள்புரிதலும் - அருள் செய்தலும், அமரர் - பிரமன்முதலிய தேவர்கள், இறைஞ்சினர் புகழ்ந்தார் - (இறைவனை) வணங்கித் துதித்து, நாமம் இன்று என- (இனிநமக்கு) பயமில்லையென்று கருதி, நல்குரவு - (நமது) வறுமையானது, ஒழிந் தது எனும் - நீங்கிற்றென்கிற, பெருங்களி - பெரிய சந்தோஷமானது, துளக்கு உறுதலால் - அசைவித்தலால், குனித்தனர்-கூத்தாடினார்கள்—எ-று. (௨௨)

தேவர்கள் இறைவனருளால் தமக்குண்டான பேருவகை ஆட்டுதலால் ஆடினார்களென்பது கருத்து.

499. மலைபிடுங்கினர் வாசுகி பிணித்தனர் மதியம்
நிலைபெறும்படி நட்டன ரோடதி நிறைத்தார்
அலைபெறும்படி பயோததி கடைந்தன ரவனி
நிலைதளர்ந்திட வனந்தனுங் கீழுற நெளித்தான்.

(இ-ள்.) (பிறகு அந்தத் தேவர்கள் ஸ்ரீமந்நாராயணன் திருவாய்மலர்ந்தருளினபடியே) மலை பிடுங்கினர் - மந்தரமலையைப்பேர்த்து, வாசுகிபிணித்தனர் - வாசுகியால் கட்டி, மதியம் நிலைபெறும்படி நட்டனர் - சந்திரனைத் தூணாக நிலைபெறும்படி நட்டு, ஓடதிநிரைத்தார் - ஓஷதிகளைப் பரப்பி, அலைபெறும்படி - மிகுதியும் அலைகளுண்டாம்படி, 'பயோததி - திருப்பாற்கடலை, கடைந்தனர்-கடைந்தார்கள், அவனி-பூமியானது, நிலைதளர்ந்திட - நிலைகெடும்படி, அனந்தனும் - ஆதிசேஷனும், கீழ் - பாதாளத்தில், உற-மிகவும், நெளித்தான் - உடல் நெளித்தான்—எ-று.

பயம்-பால், உததி-கடல், இவ்விரண்டும் வடசொற்களாதலால், பயோததி எனப் புணர்ந்த தத்ஸமம், தேவாசுரர் எல்லாரும் ஓரிடத்துக்கூடி நின்று கடைதலால் பாரம் சுமக்கமாட்டாமல் ஆதிசேஷனும் வருந்தினுன் என்பது கருத்து.

500. திறல்கொளாமையாய் முதுகினின் மந்தரந் திரிய
விறல்கொளாயிரந் தடக்கைகள் பரப்பி மீவலிப்ப
மறனிலாமுனி வெகுளியின் மடிந்தன வரவே
அறனிலாமனத் தடையலா நெடுந்தகை யமைத்தான.

(இ-ள்.) அறன் இல்லாமனத்து - தருமநெறியில்லாத மனத்தில், அடையலா-சேராத, நெடுந்தகை - பெருந்தகையாகிய ஸ்ரீமந் நாராயணன், திறல்கொள்-பேராற்றலைக் கொண்ட, ஆமையாய் - கூர்மாவதாரங்கொண்டு, முதுகினில் - தன் முதுகின் மேல், மந்தரம் திரிய - மந்தரமலைசுழல, விறல்கொள் - வெற்றியைக்கொண்ட, ஆயிரம்தடம் கைகள்பரப்பி - ஆயிரம் பெரிய கைகளைப் பரப்பி, மீவலிப்ப - மேலே யிழுக்க, மறன் இல்லா - பாவமில்லாத, முனிவெகுளியின் - துர்வாச முனிவனது சாபத்தினுல், மடிந்தன - நீங்கின பொருள்கள், வர-மறுபடியும் உண்டாக, அமைத்தான் - வகைப்பட வைத்தனன்—எ-று. (உச)

மேலெல்லாம் "கொடியோன்" "வெய்யமாமுனி" எனப் பலகாற்கூறி, இவ்விடத்து "மறனிலாமுனி" என்றது, தவத்தோர்க்கடாத கோவமொன்றுடையராதலேயன்றி மற்றத் தீக்குணங்க ளொன்றுமிலரென்பதை யறிவித்தற்கு எம்பெருமான் தேவாசுரர்களுடைய வலிபோதாமையால் தனது ஆயிரந்தோள்களினுல் மந்தரத்தைச் சுழற்றி விடுத்தனன்.

501. இறந்து நீங்கின யாவையு மெம்பிரா னருளால்
பிறந்த வவ்வயிற் சுராசுரர் தங்களிற் பிணங்கச்
சிறந்தமோகினி மடந்தையா லவுணர்தஞ் செய்கை
துறந்து மாண்டன ராரமிர்தமரர்கள் துய்த்தார்.

(இ-ள்.) இறந்து நீங்கின யாவையும் - முன்கடலிற்போய் மறைந்தொழிந்த பொருள்களெல்லாம், எம்பிரான் அருளால் பிறந்த - எம்மிறைவனது திருவருளால் உண்டாயின, அவ்வயின் - அப்போது, சுராசுரர்தங்களில் பிணங்க - தேவாசுரர்,

தங்களில் மாறுகொள்ள, (அதைக்கண்ட இறைவன்கொண்ட) சிறந்த - மேலான, மோகினி மடந்தையால் - மோகினி என்கிற பெண்ணுருவத்தால், அவுணர் - அசுரர்கள், தம்செய்கை துறந்து - (அமுதத்துக்காகப் பிணங்கிய) தமது செய்கையையொழிந்து, மாண்டனர் - மடிந்தார்கள், ஆர் அமிர்து - அரிய அமிர்தத்தை, அமரர்கள் துய்த்தார் - தேவர்கள் உண்டார்கள்—எ-று. (உ௰)

502. வெருவுமாலமும் பிறையும் வெவ்விடையவற் கீந்து
தருவும்வேறுள தகைமையுஞ் சதமகற் கருளி
மருவுதொல்பெரு வளங்களும் வேறுற வழங்கித்
திருவுமாரமு மணிந்தனன் சீதர மூர்த்தி.

(இ-ள்.) வெருவும் ஆலமும்-கண்டோர் அஞ்சும்படியான விஷத்தையும், பிறையும் - பிறைச்சந்திரனையும், வெவ்விடையவற்கு ஈந்து - வெவ்விய ரிஷபவாகநத்தையுடைய சிவனுக்குக் கொடுத்து, தருவும் - கற்பகத்தருவையும், வேறு உள்ள தகைமையும் - வேறுயுள்ள பெரும்பொருள்களையும், சதமகற்கு அருளி - இந்திரனுக்குக் கொடுத்து, மருவு - திரண்டுள்ள, தொல் - பழமையான, பெருவளங்களும் - பெரிய வளங்களையும், வேறு உற வழங்கி - குபேரன் முதலான வேறு தேவர்களுக்குக் கொடுத்து, சீதரமூர்த்தி - திருமகள் நாயகனாகிய இறைவன், திருவும் - திருமகளையும், ஆரமும் - கௌஸ்துப ரத்நஹாரத்தையும், அணிந்தனன் - தரித்துக் கொண்டான்—எ-று. (உக)

சதமகன் - நூறுயாகஞ் செய்தவன்.

503. அந்தவேலையிற் றிதிபெருந் துயருழந் தழிவாள்
வந்துகாசிபன் மலரடி வணங்கியென் மைந்தர்
இந்திராதியர் புணர்ப்பினு லிறந்தன ரெனக்கோர்
மைந்தனீயரு ளவர்தமை மடித்தலுக் கென்றாள்.

(இ-ள்.) அந்தவேலையில் - அந்தச் சமயத்தில், திதி - (அசுரர்களுக்குத் தாயாகிய) திதியென்பவள், துயர் உழந்து அழிவாள் - துன்பப்பட்டு மனமழிந்தவளாய், வந்து - போய், காசிபன் மலர் அடி வணங்கி-காசிபரிஷியின் தாமரை மலர்போன்ற பாதங்களைத் தொழுது, என்மைந்தர் - என் புத்திரர், இந்திராதியர் புணர்ப்பினால் - இந்திரன் முதலான தேவர்களுடைய சூதினால், இறந்தனர் - இறந்தார்கள், (ஆகையால்) அவரை மடித்தலுக்கு - அவர்களைக் கொல்லுதற்கு, எனக்கு ஓர் மைந்தன் - எனக்கு ஒரு புத்திரனை, நீ அருள் என்றாள்-நீ கிருபைசெய்வா யென்றாள்—எ-று. ()

504. என்றுகூறலு மகவுனக் களித்தன மினிநீ
சென்றுபாரிடைப் பருவமொ ராயிரந் தீர
நின்றுமாதவம் புரிதியே னினைவுமுற் றுதியென்
றன்றுகூறிடப் புரிந்தன ளருந்தவ மனையாள்.

(இ-ள்.) என்று கூறலும்-என்று திதியானவள் சொல்லுதலும், (அதைக்கேட்ட காசிபரிஷியானவர் அவளை நோக்கி), உனக்கு மகவு அளித்தனம் - உனக்குப் புத்திரனைக் கொடுத்தோம், இனி - இனிமேல், நீ பார் இடைசென்று - நீ பூமியிற்போய், பருவம் ஓராயிரம் தீர நின்று - ஆயிரம் வருடங்கள்கழிய நின்று, மாதவம்புரிதி எல்-பெரிய தவத்தைச் செய்தாயாயின், நினைவுமுற்றுதி என்று - உன் எண்ணம் நிறைவேறப் பெறுவாயென்று, அன்று கூறிட - அப்போது சொல்ல, அனையாள் - அந்தத் திதியானவள், அருதவம் புரிந்தனள் - அரிய தவத்தைச் செய்தாள்—எ-று. (உ௩)

505. கேட்டவாசவ னன்னவட் கடிமையிற் கிடைத்து
வாட்டமாதவத் துணர்ந்தவள் வயிற்றுறு மகவை
வீட்டியே யெழு கூறுசெய்திடுதலும் விம்மி
நாட்டநீர்தர மருத்தெனு நாமமு நவின்றான்.

(இ-ள்.) கேட்ட - (அதை) கேள்வியுற்ற, வாசவன் - இந்திரன், (வேற்றுருக்கொண்டு) அன்னவள்கு - அந்தத்திதிக்கு, அடிமையின்கிடைத்து - அடிமைபோல அவளிடஞ்சேர்ந்து, மாதவத்து - (அவள் செய்கின்ற) பெரிய தவத்தில், வாட்டம் உணர்ந்து - சோர்வறிந்து, அவள் வயிற்று - அவளது வயிற்றில், உறும்மகவை-பொருந்திய சிசுவை, வீட்டி - கொன்று, எழுகூறு செய்திடுதலும் - எழு கூறாக்குதலும், விம்மி - அழுது, நாட்டம் நீர்தர - கண்கள் நீர்பொழிய, மருத்து என்னும் நாமமும்-மருத்து என்கிற பெயரையும், நவின்றான் - (அக்கூறுகட்கு) இட்டான்—எ-று.(உக)

506. ஆயதிவ்விட மவ்விட மவிர்மதி யணிந்த
தூயவன்றனக் கரிவையிற் றோன்றிய தொல்லை
வாயுவும்புனற் கங்கையும் பொறுக்கலா வலத்த
சேய்வளர்ந்தருள் சரவண மென்பதுந் தெரித்தான்.

(இ-ள்.) ஆயது இவ்விடம் - அப்படிப்பட்டது இவ்விடம், அ இடம் - அந்த இடம், அவிர் - பிரகாசிக்கிற, மதி அணிந்த - சந்திரனையணிந்த, தூயவன் தனக்கு-பரிசுத்தனாகிய சிவனுக்கு, அரிவையில் தோன்றிய-உமாதேவியினிடத்திற் பிறந்த, தொல்லை வாயுவும் - பழமையான வாயுவினாலும், புனல் கங்கையும் - நீரையுடைய கங்கையினாலும், பொறுக்கலா - சகிக்கக்கூடாத, வலத்த-பலத்தையுடைய, சேய்-முருகன், வளர்ந்தருள் - வளர்ந்தருளிய, சரவணம் - சரவணப்பொய்கை, என்பதும்-என்பதையும், தெரித்தான் - அறிவித்தான்—எ-று. (௩௦)

அரிவையில் தோன்றிய சேய் என் இயைத்துரைக்க.

507. காலன்மேனியிற் கருகிருள் கடிந்துல களிப்பான்
நீலவார்கலித் தேரொடு நிறைகதிர்க் கடவுள்
மாலின்மாமணி யுந்தியி னயனொடு வந்த
மூலதாமரை முழுமலர் முளைத்தென முளைத்தான்.

(இ-ள்.) காலன் மேனியின்-யமனது நிறம்போல, கருகு இருள்-கறுத்த இருளை, கடிந்து - ஓட்டி, உலகு அளிப்பான் - உலகத்தைக் காப்பாற்றும்பொருட்டு, நீல ஆர் கலி - நீலநிறமுள்ள கடலில், தேரொடு - தேருடன், நிறைகதிர்க் கடவுள் - நிறைந்த கிரணங்களையுடைய (சூரிய) பகவான், மாலின் - திருமாலின், மாமணி உந்தியின் - கௌத்துவமாலை படிந்த திருநாபியில், அயனொடு - பிரமதேவனுடன், வந்த மூல தாமரை முழுமலர் முளைத்தென - வந்த முதன்மையாகிய முழுமலர் முளைத்தாற்போல, முளைத்தான் - தோன்றினான்—எ-று. (௩௧)

ஆர்கலி முளைத்தான் என விசையும்.

508. அங்குநின்றெழுந் தயன்முதன் மூவரு மனையார்
செங்கணேற்றவன் செறிசடைப் பழுவத்தி னிறைதேன்
பொங்குகொன்றையீர்த் தொழுகலாற் பொன்னியைப்பொருவும்
கங்கையென்னுமக் கரைபொரு திருநதி கண்டார்,

(இ-ள்.) அங்குநின்று-அவ்விடத்திலிருந்து, எழுந்து - புறப்பட்டு, அயன் முதல் மூவரும் அனையார் - பிரமன்முதலாகிய மும்மூர்த்திகளையும் ஒத்தவர்களாகிய இந்த மூவரும், செங்கண் ஏற்றவன் - செவந்தகண்களையுடைய ரிஷபவாஹநனாகிய சிவனது, செறி-நெருங்கிய, சடைப்பழுவத்தின் - சடைக்காட்டிலுள்ள, நிறைதேன் பொங்கு-நிறைந்த தேனினால் விளங்குகிற, கொன்றை - கொன்றை மாலை, ஈர்த்து-இழுத்துக்கொண்டு, ஒழுகலால்-செல்லுதலால், பொன்னியை பொருவும்-காவிரியை நிகர்க்கின்ற, கங்கையென்னும் - கங்கையென்றுசொல்லப்படுகின்ற, அ-அந்த, கரை பொரு-கரையில்மோதுகிற, திருநதி-அழகியநதியை, கண்டார்-பார்த்தார்கள்-எ-று.

கங்கை என்னும் நதிஎனக் கூட்டுக.

509. இந்தமாநதிக் குற்றுள தகைமைய யாவும்
எந்தைகூறுகென் றிராகவன் வினவுற வெனையாள்
மைந்தநின்றிரு மரபுளா னயோத்திமா நகர்வாழ்
விந்தைசேர்புயன் சகரனிம் மேதினி புரந்தோன்.

(இ-ள்.) இந்தமாநதிக்கு-இந்தப்பெரியநதிக்கு, உற்றுள்ள தகைமையயாவும்-அடைந்துள்ள பெருமைச்சரித்திரங்களையெல்லாம், எந்தை - எமதுபிதாவே, கூறுக என்று-சொல்வாயென்று, இராகவன்வினவுற-ஸ்ரீராமபிரான் வினவ, (முனிசொல்லுகிறான்) எனை ஆள் மைந்த - என்னை அடிமைகொண்டமைந்தனே, நின்திருமரபு உளான்-உனது திருமரபில் வந்தவனும், அயோத்திமாநகர்வாழ்-அயோத்திமாநகரத்தில் வாழ்கின்ற, விந்தைசேர்புயன்-விஜயலக்ஷ்மி பொருந்திய தோள்களையுடையவனும் ஆகிய, சகரன்-சகரன் என்பவன், இமேதினிபுரந்தோன் - இந்த லோகத்தை யாண்டவன்—எ-று. (௫௫)

மைந்த என்பதற்கு பலசாலியே எனப்பொருள் கூறினும் பொருந்தும். உண்மையுணரவல்ல ஞானமுடையானாதலால் என்னையாள் மைந்த எனச் சீராமபிரானை விளித்தான்.

510. விறல்கொள்வேந்தனுக் குரியவ ரிருவரில் விதர்ப்பை
பொறையினல்கிய போசண னென்றொரு புதல்வன்
பறவைவேந்தனுக் கிளையமென் சுமதிமுற் பயந்த
அறனின்மைந்தரா றயுதர்மற் றஞ்சுமா னவன்சேய்.

(இ-ள்.) விறல்கொள்-வெற்றியைக்கொண்ட, வேந்தனுக்கு-அந்த அரசனுக்கு, உரியவர் இருவரில்-உரியமனைவியர் இருவரில், விதர்ப்பை - விதர்ப்பையென்பவள், பொறையின் நல்கிய-கர்ப்பங்கொண்டு பெற்ற, போசணன் என்ற ஒருபுதல்வன்-போசணன் என்கிற ஒருபுத்திரனிருந்தான், பறவைவேந்தனுக்கு இளைய-கருடனுக்கிளையவளாகிய, மெல் சுமதி - மெல்லிய சுமதியென்பவள், முன்பயந்த - முன்னே பெற்ற, அறன் இன்மைந்தர் - தர்மநெறி யொழுக்கமியைந்த புத்திரர்கள், ஆறு அயுதர்-அறுபதினாயிரம் பேர் உளர், அவன் சேய் - அந்தப் போசணனுக்குப் புத்திரன், அஞ்சுமான்-அஞ்சுமான் என்பவன்—எ-று. (௫௬)

அயுதம்-பதினாயிரம், அறனின் என்றதில் இன் சாரியை.

511. திண்டிறற்புனை சகரனுந் தனையர்சே வகந்தான்
கண்டுமுற்றிய வயமகம் புரிதலுங் கனன்று

வண்டுதுற்றதார் வாசவற் குணர்த்தினர் வானோர்
ஒண்டிறற்பரி கபிலனை திடையினி லொளித்தான்.

(இ-ள்.) திண்திறல்புனை - மிக்கவெற்றிபொருந்திய, சகரனும் - சகரமஹாராஜனும், தநயர்சேவகம்கண்டு - தன்புத்திரர்களுடைய பராக்ரமத்தைப்பார்த்து, முற்றிய-நிரம்பும்படி, அயமகம்புரிதலும்-அசுவமேதயாகம் செய்தலும், வானோர்- தேவர்கள், கனன்று-கோவித்து, வண்டுதுற்ற-வண்டுகள் நெருங்கி மொய்த்த, தார்- மாலையையணிந்த, வாசவன்கு-தேவேந்திரனுக்கு, உணர்த்தினர்-தெரிவித்தார்கள், (அந்தத்தேவேந்திரன்) ஒள்திறல்பரி - ஒள்ளியவலிமையுள்ள குதிரையை, கபிலனது இடையினில்-கபிலமுனிவனுடைய ஆச்சிரமத்தில், ஒளித்தான் - (கொண்டுபோய்) மறைத்துவைத்தான்—எ-று. (௫௫)

அயம் குதிரை. மேதம்-கொலை.

512. வாவுவாசிபின் சென்றன னஞ்சுமான் மறுகிப்
பூவினோரிட மின்றியே நாடினன் புகுந்து
தேவர்கோமகன் கரந்தமை யறிந்திலன் திகைத்து
மேவுதாதைதன் றாதைபா லுரைத்தனன் மீண்டு.

(இ-ள்.) வாவு-தாவுகின்ற, வாசிபின்-குதிரையின்பின்னே, சென்றனன் அஞ்சுமான்-போனவனாகிய அஞ்சுமான், மறுகி- கலங்கி, பூவின் - பூமியில், ஓர் இடம் இன்றியேநாடினன்-(தேடிப்பாராதது)ஒரு இடமில்லை யென்னும்படியே தேடி, புகுந்து-வந்து, தேவர்கோமகன் - தேவேந்திரன், கரந்தமை - ஒளித்து வைத்ததை, அறிந்திலன்-அறியாதவனாய், திகைத்து-மனமயங்கி, மீண்டு-திரும்பிவந்து, மேவு - விரும்பிய, தாதைதன் தாதைபால்-தனக்குப்பாட்டனாகிய சகரனிடத்தில், உரைத்தனன்-இந்தச்செய்தியைச்சொன்னான்—எ-று. (௫௬)

513. கேட்டவேந்தனு மதலையர்க் கம்மொழி கிளத்த
வாட்டமீக்கொளச் சகரர்கள் வடவையின் மறுகி
நாட்டம்வெங்கனல் பொழிதர நானிலந் தடவித்
தோட்டுநுங்கினர் புவியினைப் பாதலந் தோன்ற.

(இ-ள்.) (அஞ்சுமான்சொன்னதை) கேட்டவேந்தனும்-கேட்ட சகரமஹாராஜனும், மதலையர்க்கு- தன்புத்திரர்களுக்கு, அம்மொழிகிளத்த - அந்தவார்த்தையைச் சொல்ல, வாட்டம்மீகொள-சோர்வு அதிகப்பட, சகரர்கள் - சகரபுத்ரர்கள், வடவையின்மறுகி-வடவைத்தீப்போலச்சினந்து, நாட்டம் - கண்கள், வெங்கனல்பொழிதர-வெவ்வியநெருப்பைச்சொரிய, நானிலம்தடவி-பூமியிலாராய்ந்துபார்த்து, (காணாமையால்) பாதலம் தோன்ற-பாதாளலோகம் தெரியும்படி, புவியினை-பூமியை, தோட்டுநுங்கினர்-தோண்டியுண்டுவிட்டார்கள்—எ-று. (௫௭)

514. நூறுயோசனை யகலமு மாழமு நுடங்கக்
கூறுசெய்தன ரென்பரால் வடகுண திசையின்
ஏறுமாதவக் கபிலனி லவுளிகண் டெரியில்
சீறிவைதனர் செருக்கினர் நெருக்கினர் செறுத்தார்.

(இ-ள்.) நூறுயோசனை அகலமும் ஆழமும் - நூறுயோசனை அகலமும் ஆழமுமாக, நுடங்க-பூமிதேவியும்சலிக்கும்படி, கூறுசெய்தனர் என்பர் - தோண்டினார்கள் என்று அறிஞர்சொல்வார்கள், (அப்படி தோண்டினபிறகு) வடகுணதிசையின்-வட

கீழ்த்திசையில், எறும்மாதவம் - மிக்கபெரியதவத்தையுடைய, கபிலன் இல் - கபில முனிவனது ஆச்சிரமத்தில், இவுளிகண்டு - குதிரையைப்பார்த்து, எரியின் - நெருப் பைப்போல, சீறிவைதனர் - சீறிவைதார்கள், செருக்கினர் - செருக்கையுடையவர் களாய், நெருக்கினர்-அடர்த்து, செறுத்தார்-கோபித்தார்கள்—எ-று. (௩அ)

ஆல்-அசை.

515. மூளும்வெஞ்சினத் தருந்தவன் முனிந்தெரி விழிப்பப்
பூளைசூடிதன் னகையினி லெயில்பொடித் தனபோல்
ஆளுமைந்தரா றயுதருஞ் சாம்பரா யவிந்தார்
வேள்விகண்டநல் வேந்தனுக் குரைத்தனர் வேகர்.

(இ-ள்.) மூளும் வெஞ்சினத்து - பெருகுகின்ற வெவ்வியகோவத்தையுடைய, அருந்தவன்-அருமையான தவத்தைச்செய்கின்ற கபிலமுனிவன், முனிந்து - கோவி த்து, எரிவிழிப்ப - நெருப்புப்போலப் பார்த்தவளவில், பூளைசூடிதன் நகையினில்- பூளைமலர்மாலையைத் தரித்த சிவன் சிரித்தகாலையில், எயில்பொடித்தனபோல்-மும் மதில்கள்நீறாயினவாறுபோல், ஆளும்மைந்தர் ஆறு அயுதரும்-உலகையாளுதற்குரிய குமாரர்கள் அறுபதினாயிரம்பேரும், சாம்பர் ஆய் அவிந்தார் - சாம்பலாகி எரிந்தார் கள், வேகர்-(இந்தச்செய்தியை) விரைந்தோடும் தூதர்கள், வேள்விகண்ட - யாகஞ் செய்த, நல்-நல்ல, வேந்தனுக்கு-சகரராஜனுக்கு, உரைத்தனர்-சொன்னார்கள்-எ-று.

சாம்பல் சாம்பர் எனப்போலியாயிற்று.

516. உடைத்துவெந்துயர்க் கூறுகாண் கிலனுணர் வொழியா
தழைத்துமைந்தனன் மைந்தனை யவர்கழிந் தனரேல்
இழைத்தவேள்வியின் றிழப்பதோ வெனவவ னெழுந்து
தழைத்தமாதவக் கபிலன்வாழ் பாதலஞ் சார்ந்தான்.

(இ-ள்.) (அதைக்கேள்விப்பட்டசகரராஜன்)உழைத்து-வருந்தி,வெந்துயர்க்கு கொடுந்துயர்க்கு, உளறுகாண்கிலன் - தடுக்கும் வகைகாணாதவனாய், உணர்வு ஒழி யாது-உணர்வுநீங்காமல், மைந்தன் நன்மைந்தனை அழைத்து - பேரனாகிய அஞ்சு மானையழைத்து, அவர்கழிந்தனரேல்-அவர் இறந்தாராயின், இழைத்தவேள்வி-செய் தயாகத்தை, இன்று இழப்பதோ - இப்போதுசெய்யாமல் விடுவதோ, என - என்று கேட்க, அவன் எழுந்து-அந்த அஞ்சுமானெழுந்து, தழைத்தமாதவம் - மிகுந்தமாத வத்தையுடைய, கபிலன்வாழ்-கபிலமுனிவன் வாழ்கின்ற,பாதளம்- பாதாளலோகத் தை, சார்ந்தான்-அடைந்தான்—எ-று. (௪0)

517. விண்டுநீங்கின ருடலுகு பிறங்கல் வெண்ணீறு
கண்டுதுண்ணெனு மனத்தினன் கபிலமா முனிதன்
புண்டரீகமென் றாடொழு தெழுந்தனன் புகலக்
கொண்டுபோகநின் னிவுளியென் றுற்றதுங் குறித்தான்.

(இ-ள்.) விண்டு நீங்கினர் - தேகத்தைவிட்டு நீங்கினவர்களுடைய, உடல் உகு- சரீரங்கள்சிந்தின, பிறங்கல் வெண்ணீறுகண்டு-மலைபோன்றவெண்ணிறச்சாம்பரைப் பார்த்து, துண்ணெனும் மனத்தினன்-அச்சப்பட்டமனமுடையவனாய்,கபிலமாமுனி வன்- கபிலமாமுனிவனது, புண்டரீகம்மெல்தாள் - தாமரைமலர்போன்ற மெல்லிய பாதங்களை, தொழுது-வணங்கி, எழுந்தனன் - எழுந்து, புகல - தான் வந்தவரலாற்

றைச்சொல்ல, (முனிவன்) நின் இவுளி-உன்குதிரையை, கொண்டுபோக - கொண்டு போகக்கடவாய், என்று-என்றுசொல்லி, உற்றதும்குறித்தான்-நடந்தசெய்தியையும் சொன்னான்—எ-று (௬௧)

518. பழுதிலாதவ னுரைத்தசொற் கேட்டலும் பரிவால்
தொழுதுவாம்பரி கொணர்ந்தவி சுரர்களுக் கீயா
முழுதும்வேள்வியை முற்றுவித் தரசனு முடிந்தான்
எழுதுகீர்த்தியாய் மைந்தனுக் கரசிய லீய்ந்து.

(இ-ள்.) பழுது இலாதவன் - குற்றமில்லாதவனாகியமுனிவன், உரைத்தசொல்- சொன்னவார்த்தையை, கேட்டலும் - (அஞ்சுமான்) கேட்டமாத்திரத்தில், பரிவால் தொழுது - அன்போடுவணங்கி, வாம்பரிகொணர்ந்து - தாவுகின்ற குதிரையைக் கொண்டுவந்து, சுரர்களுக்கு-தேவர்களுக்கு, அவி ஈயா - அவிர்ப்பாகங்கொடுத்து, வேள்வியைமுழுதும் முற்றுவித்து-யாகத்தை முழுதும்பூர்த்திசெய்து, மைந்தனுக்கு அரசியல் ஈந்து-புத்திரனுக்கு அரசாட்சியைக்கொடுத்து, அரசனும்முடிந்தான்-சகர ராஜனும் சுவர்க்கலோகத்தையடைந்தான், எழுதுகீர்த்தியாய் - அறிஞர் அழுத்தத் தகுந்த கீர்த்தியையுடைய ஸ்ரீராமா—எ-று. (௬௨)

பகீரதன் வரலாறு.

519. சகரர்தொட்டலாற் சாகரமெனப்பெயர் தழைப்ப
மகரவாரிதி சிறந்தது மகிதல முழுதும்
நிகரின்மைந்தனே புரந்தன னிவனெடு மரபில்
பகிரதன்னெனும் பார்த்திபன் வந்தனன் பரிவால்.

(இ-ள்.) சகரர்தொட்டலால்-சகரர்தோண்டினமையால், சாகரம் எனப்பெயர் தழைப்ப-சாகரமென்று சொல்லும்பெயர்விளங்க, மகரம்வாரிதி - மகரக்கடலானது, சிறந்தது-சிறப்படைந்தது, மகிதலம் முழுதும்-பூதலமுழுதும், நிகர் இல்-நிகரில்லாத, மைந்தனே-(போசணன் என்கிற) புத்திரனே, புரந்தனன் - அரசாண்டான், இவன் நெடுமரபில்-இவனது பெரியவசமித்தில், பகிரதன் எனும் பார்த்திபன் - பகிரதன் என்கிற அரசன், பரிவால்-அன்போடு, வந்தனன்-தோன்றினான்—எ-று. (௬௩)

சகரன்மக்கள் சகரர், அவர்களால் தோண்டப்பட்டமையால், சாகரமெனக் கடலுக்குக் காரணப்பெயராயிற்று.

520. உலகம் யாவையும் பொதுவறத் திகிரியை யுருட்டி
இலகுமன்னவ னிருந்துழி யிறந்தமை வினவ
அலகிறேன்முனி யுரைத்திடக் கேட்டன னரசன்
திலகமண்ணுற வணங்கிநின் றொருமொழி செப்பும்.

(இ-ள்.) உலகம்யாவையும் - எல்லாவுலகங்களையும், பொது அற - பொது நீங்க, திகிரியை உருட்டி-ஆணைச்சக்கரத்தை நடத்தி, இலகும்மன்னவன் - விளங்குகின்ற அந்தப்பகிரதமஹாராஜன், இருந்துழி- இருந்தபோது, இறந்தமை - சகரர்கள் இறந்ததை, வினவ-கேட்க, அழகு இல்-தவத்திற்கு எல்லையில்லாத, தொல்-பழமையான முனி-வசிட்டமுனிவன், உரைத்திட-சொல்ல, கேட்டனன்-கேட்டு, அரசன் - அவ் வரசன், திலகம்-நெற்றியிலணிந்த ஊர்த்துவவடையாளம், மண் உற வணங்கி நின்று-மண்ணிற்படும்படி தொழுதுநின்று, ஒருமொழிசெப்பும்-ஒருவார்த்தை சொல் லுகின்றான்—எ-று. (௬௪)

பொது அற என்றது - எல்லா அரசர்க்கும் பொதுவாயிராமல் தன்னொருவனுக்கே யுரித்தாயிருத்தலே. திகிரியாதலால் உருட்டியென்றார். இலகுதல்-பொதுவறத்திகிரியுருட்டி உலகம் யாவையு மாளுதலால் விளங்குதல்.

521. கொடியமாமுனி வெகுளியின் மடிந்தவெங் குரவர்
முடியநீணிர யத்தினி லழுந்திடு முறைமை
கடியுமாறெனக் கருந்தவ மதற்குறு கருமம்
அடிகளசொற்றுக வென்றலு மந்தண னறைவான்.

(இ-ள்.) கொடியமாமுனி - கொடிய பெரிய முனிவனது, வெகுளியின்-கோபத்தால், மடிந்த-மாண்ட, எம்குரவர் - எம் முன்னோர்கள், முடிய - முழுதும், நீள் நிரயத்தினில் - பெரிய நரகத்தில், அழுந்திடும் முறைமை - அழுந்துகின்ற தன்மையை, கடியும் ஆறு - நீக்கும் வழி, எனக்கு அருந்தவம் - எனக்கு அரியதவமாகும், அதற்கு உறுகருமம் - அதற்கிசைந்த காரியத்தை, அடிகள் - சுவாமிகள், சொற்றுக என்றலும் - சொல்லவேண்டுமென்று ப்ரார்த்தித்தலும், அந்தணன் அறைவான்-முனிவன் சொல்லுகின்றான்—எ-று. (சரு)

எம்முன்னோர்கள் அநுபவிக்கும் நிரயத்துன்பத்தை நீக்குதலே எனக்குத் தவமென்று சொன்னானென்பது கருத்து.

522. வையமாளுடை மன்னவர் மன்னவ மடிந்தோர்
உய்யநீடவ மொழிவறு பகலெல்லா மொருங்கே
செய்யநாண்மலர்க் கிழவனை நோக்கிநீ செய்தி
நையலென்றினி துரைத்தன னவையறு முனிவன்.

(இ-ள்.) வையம் - உலகத்தை, ஆள் உடை - ஆளுதற்றொழிலையுடைய, மன்னவர் மன்னவ - அரசர்க்கரசனே, மடிந்தோர் உய்ய - மாண்டவர்கள் பிழைக்கும்படி, நீள்தவம் - பெருந்தவத்தை, ஒழிவு அறு பகல் எலாம் - அநேகநாள்கள், செய்யநாள் மலர் கிழவனைநோக்கி - செவந்த புதிய தாமரைப்பூவை யாசநமாகவுடைய பிரமதேவனை நோக்கி, நீ செய்தி - நீ செய்வாய், நையல் - துன்பப்படவேண்டாம், என்று-என்று, நவை அறுமுனிவன் - குற்றமற்ற முனிவன், இனிது உரைத்தனன் - இனிதாகச் சொன்னான்—எ-று. (சசு)

523. ஞாலம்யாவையுஞ் சுமந்திரன் றன்வயி னல்கி
கோலுமாதவத் திமகிரி மருங்கினிற் குறுகிக்
காலமோர்பதி னாயிர மருந்தவங் கழிப்ப
மூலதாமரை முழுமுதற் கிழவன்முன் தினனே.

(இ-ள்.) (அப்படி வசிட்டர் சொல்லுதலும் கேட்ட பகிரதமஹாராஜன்) ஞாலம் யாவையும் - உலகமுழுதும், சுமந்திரன் தன்வயின்நல்கி - சுமந்திரனிடத்தி லொப்புவித்து, கோலும் மாதவத்து - பெருந்தவத்தைச் செய்தற்குரிய, இமகிரிமருங்கினில் குறுகி - இமயமலைக்கருகிற்போய், ஓர்பதினாயிரம் காலம்-ஒரு பதினாயிரம் வருஷம், அருந்தவம் கழிப்ப - அரிய தவம்செய்துக்கொண்டு கழிக்க, மூலதாமரை - மூலதாமரையிற் றோன்றின, முழுமுதல்கிழவன் - பிரமதேவன், முந்தினன் - ப்ரத்யக்ஷமானான்—எ-று. (சஎ)

524. நின்பெருந்தவம் வியந்தனம் நினதுநீள் குரவர்
முன்பிறந்தன ரருந்தவன் முனிவி னாதலினால்

மன்பெரும்புவி யதனில்வா னதிகடி தணுகி
என்புதோயுமே லிருங்கதி பெறுவரென் றிசைத்தான்.

(இ-ள்.) நின்பெருந்தவம் வியந்தனம்-உனது பெரிய தவத்துக்கு மகிழ்ந்தோம், நினதுநீள்குரவர் - உன் முன்னோர்கள், அருந்தவன் முனிவின் - முனி சாபத்தினால், முன்பு இறந்தனர் ஆதலினால் - முன்பு இறந்தார்களாகையால், மன் - நிலைபெற்ற பெரும்புவியதனில் - பெரிய வுலகத்தில், வான்நதி - ஆகாய கங்கையானது, கடிது அணுகி - வேகமாய்வந்து, என்பு - அவர்களுடைய எலும்பில், தோயுமேல் - படியுமானால், இருகதி பெறுவர் - மேலான கதியையடைவார்கள், என்று இசைத்தான் - என்று சொன்னான்—எ-று. (௬அ)

525\. மாகநன்னதி புவியிடை வருகின்மற் றவள்தன்
வேகமாற்றுதல் கண்ணுதற் கன்றிவே றரிதால்
தோகைபாகனை நோக்கிநீ யருந்தவந் தொடங்கென்
றேகினானுல கனைத்துமெவ் வுயிர்களு மீய்ந்தான்.

(இ-ள்.) உலகு அனைத்தும் - எல்லா வுலகங்களையும், எவ்வுயிர்களும் - எல்லாச் சீவராசிகளையும், ஈய்ந்தான் - படைத்தவனாகிய பிரமதேவன், (பகிரதனை நோக்கி) மாகம் நல்நதி - ஆகாயத்திலுள்ள சிறந்த நதியுருவாகிய கங்கையானவள், புவி இடை வருகின் - பூமிக்கு வருவளாயின், அவள் வேகம் ஆற்றுதல் - அவள் வேகத்தைப் பொறுத்துத் தாங்கல், கண்ணுதல்கு அன்றி-சிவனுக்கெளிதா யிருப்பதன்றி, வேறு அரிது - மற்றையர்க்கு அருமையாகும், (ஆகையால்) தோகைபாகனை நோக்கி-உமா தேவிபங்கனாகிய சிவனைக் குறித்து, நீ அருதவம் தொடங்கு என்று - நீ அரிய தவஞ் செய்யத் தொடங்குவாய் என்று சொல்லி, ஏகினான் - சென்றான்—எ-று. (௬௧)

தன் - சாரியை.

526\. மங்கைபாகனை நோக்கிமுன் மொழிந்தன வருடம்
தங்குமாதவம் புரிதலுந் தழனிறக் கடவுள்
அங்குவந்துநின் கருத்தினை முடித்துமென் றகன்றான்
கங்கையைத்தொழக் காலமை யாயிரங் கழிததான்.

(இ-ள்.) மங்கைபாகனை நோக்கி - பார்வதி பாகனாகிய சிவனைக் குறித்து, முன் மொழிந்தன வருடம் - முன் சொல்லப்பட்ட பதினாயிரம்வருடம், தங்கும் - நிலைபேறுள்ள, மாதவம் புரிதலும் - பெரியதவத்தைச் செய்தலும், தழல்நிறம் கடவுள்-தீநிறக்கடவுளாகிய சிவன், அங்குவந்து - அவ்விடத்துக்கு வந்து, நின் கருத்தினை-உன் கருத்தை, முடித்தும் என்று - நிறைவேற்றுவோ மென்றுசொல்லி, அகன்றான் - போய்விட்டான், (அதன்பிறகு) கங்கையைதொழ - கங்கையைச் சேவிக்க, காலம் ஐயாயிரம் கழித்தான் - ஐயாயிரம் வருடங்கள் கழித்தான்—எ-று. (௬0)

ஈண்டுக்காலம் என்றது வருடத்தை.

527\. ஒருமடக்கொடி யாகிவந் துனதுமா தவமென்
பொருபுனற்கொடி வரினவள் வேகமார் பொறுப்பார்
அரனுரைத்தசொல் விநோதமற் றின்னும்நீ யறிந்து
பெருகுநற்றவம் புரியென வரநதி பெயர்ந்தாள்.

(இ-ள்.) வரநதி - மேலானநதியுருவாகிய கங்கையானவள், ஒரு மடக்கொடி ஆகி - ஒரு இளமையாகிய பெண்ணாகி, வந்து - அவன்முன்வந்து, உனது மாதவம்

என் - உன் பெருந்தவத்துக்குக் காரணம் யாது, பொரு - அலைகள் மோதுகின்ற புனல்கொடி - நீருருவாகிய கெங்கையானவள், வரின்-வந்தால், அவள்வேகம்-அவள் வேகத்தை, ஆர்பொறுப்பார் - யார்தாங்கவல்லவர், அரன் உரைத்தசொல் - சிவன் சொன்னவார்த்தை, விநோதம் - விநோதமாகும், (ஆதலால்) இன்னும் நீ அறிந்து - மீளவும் நீயுணர்ந்து, பெருகும் நல்தவம்புரி என-விருத்தியடைதற்குக் காரணமாகிய நல்ல தவத்தைச் செய்வாயென்று சொல்லிவிட்டு, பெயர்ந்தாள் - கங்கையானவள் சென்றாள்—எ-று. (ருக)

528. கரந்தைமத்தமோ டெருக்கலர் கூவிளை கடுக்கை
நிரந்தபொற்சடை நின்மலக் கொழுந்தினை நினையா
அரந்தையுற்றவ னிரண்டரை யாயிரம் ஆண்டு
புரிந்துநற்றவம் பொலிதர வரைமகள் புனிதன்.

(இ-ள்.) அரந்தை உற்றவன் - தன் மூதாதைகளைக் குழித்துத் துன்பத்தை யடைந்தவனாகிய பகிரதன், கரந்தை - கரந்தையும், மத்தமோடு - ஊமத்தையும், எருக்கு அலர் - எருக்கம்பூவும், கூவிளை-வில்வமும், கடுக்கை-கொன்றையும், நிரந்த-முறைப்பட அணிந்த, பொன்சடை - செம்பொனிறைச் சடையையுடைய, நின்மலக் கொழுந்தினை - பரமசிவனை, நினையா - நினைத்து, இரண்டரை ஆயிரம் ஆண்டு - இரண்டாயிரத் தைஞ்ஞூறு வருடம், நல்தவம் - நல்ல தவத்தை, பொலிதரபுரிந்து- விளங்கும்படி செய்தலால், (அதற்குச் சந்தோஷித்த) வரைமகள்புனிதன் - பார்வதியையுடைய பரிசுத்தனாகிய பரமசிவன்—எ-று. (ருஉ)

புரிந்து காரணப்பொருட்டாகிய வினையெச்சம், இது புரியவென்பதின் திரிபு.

529. எதிர்ந்துநின்னினை வென்னென விறைஞ்சி யெம்பெரும
அதிர்ந்துகங்கையீ தறைந்தன ளென்றலும் அஞ்சேல்
பிதிர்ந்திடாவகை காத்துமென் றேகிய பின்றை
முதிர்ந்தமாதவ மிரண்டரை யாயிர முடித்தான்.

(இ-ள்.) எதிர்ந்து - அவனுக்குப் பிரத்தியக்ஷமாகி, நின்நினைவு என் என - உன் எண்ணம் என்னவென்று கேட்க, இறைஞ்சி - அரசன் வணங்கி, எம்பெரும - எம் பெருமானே, கங்கை - கங்கையானவள், அதிர்ந்து - முழங்கிவந்து, ஈது அறைந்தனள் என்றலும் - இதைச்சொன்னாள் என்ற மாத்திரத்தில், (பரமசிவன் அவ்வரசனை நோக்கி) அஞ்சேல் - பயப்படாதே, பிதிர்ந்திடாவகை காத்தும் என்று - (நீர் சிறிதாயினும்) சிந்தாதபடி காக்கிறோம் என்று சொல்லி, ஏகியபின்றை - போனபிறகு, முதிர்ந்த மாதவம் - மிகவும் பெரிதானதவத்தை, இரண்டரை ஆயிரம் - இரண்டாயிரத் தைஞ்ஞூறு வருஷம், முடித்தான் - செய்துமுடித்தான்—எ-று. (ருங)

530. பெருகுநீரொடு பூதியும் வாயுவும் பிறங்கு
சருகும்வெங்கதி ரொளியையுந் துய்த்துமற் றதையும்
பருகலின்றியு முப்பதி னாயிரம் பருவம்
முருகுகாதலின் மன்னவ னருந்தவ முயன்றான்.

(இ-ள்.) மன்னவன் - பகிரதமஹாராஜன், பெருகும்நீர் - பெருகு மியல்புள்ள நீரையும், பூதியும் - சாம்பலையும், வாயுவும் - காற்றையும், பிறங்குசருகும் - விளங்குகின்ற சருகையும், வெங்கதிர் ஒளியையும் - வெவ்விய சூரிய கிரணத்தையும், துய்த்து - உண்டு, அதையும் - அவ்வுணவையும், பருகல் இன்றியும் - உண்ணுதலில்லாம

னும், முப்பதினுயிரம் பருவம் - முப்பதினுயிரம் வருஷம், முருகுகாதலின் - அப்போது தோன்றினாற்போன்ற ஆசையுடன், அருதவம் முயன்றான் - அருமையான தவத்தைச்செய்தான்—எ-று. (௫௪)

சிவன் கங்கையைத் தாங்கினனென்பது.

531. உந்தியும்புயத் துதித்தவ னுறைதரு முலகும்
இந்திராதிய ருலகமு நடுக்குற விரைத்து
வந்துதோன்றினள் வரநதி மலைமகள் கொழுநன்
சிந்திடாதொரு சடையினிற் கரந்தனன் சேர.

(இ-ள்.) (பகிரதன் இப்படி தவஞ்செய்தபோது) வரநதி - கங்கையானவள், உந்தி அம்புயத்து - ஸ்ரீமந்நாராயணனுடைய திருநாபீ கமலத்தில், உதித்தவன் - உற்பவித்தவனாகிய பிரமதேவன் உறைதரும் - வசிக்கிற, உலகும்-லோகமும், இந்திராதியர் உலகமும் - இந்திரன் முதலானவர்களுடைய லோகங்களும், நடுக்கு உற - சலநமடைய, இரைத்து - ஆரவாரித்து, வந்து தோன்றினள் - வந்து தோன்றினாள், (அதைக்கண்ட) மலைமகள் கொழுநன் - பார்வதி நாயகனாகிய சிவன், சிந்திடாது - அந்தக் கங்கைநீர் சிறிதும் சிந்தாமல், சேர-முழுதும், ஒரு சடையினில் கரந்தனன்- ஒரு சடையில் தங்க மறைத்தான்—எ-று. (௫௫)

532. புன்னுனித்தரு பனியென வரநதி புனிதன்
சென்னியிற்கரந் தொளிதர வணங்கினன் திகைத்து
மன்னனிற்றலும் வருந்தன னஞ்சடையள்வா னதியின்
றென்னவிட்டன னொருசிறி தவனிபோந் திழிந்தாள்.

(இ-ள்.) புல்நுனிதரு - புல்லினது நுனியிற்றங்கிய, பனி என - பனித்துளி போல், வரநதி - கங்கை, புனிதன் - சிவனது, சென்னியில் - சிரசில், கரந்து ஒளிதர - மறைந்தொளிக்க, (மன்னன்-(கண்ட) பகீரதமஹாராஜன், திகைத்து வணங்கினன் நிற்றலும் - திகைத்து வணங்கி நின்றவளவில், (சிவன் அரசனைநோக்கி) வருந்தல் - நீ வருந்தவேண்டா, வான் நதி - ஆகாயகங்கையானவள், இன்று - இப்போது நம்சடையள் - நமது சடையினிடத்திலிருக்கின்றாள், என்ன - என்று சொல்லி, ஒரு சிறிது - ஒரு சிறிதுநீரை, விட்டனன் - விட்டான், (அப்போது அந்தக் கங்கையானவள்) அவனி-பூமியில், போந்து இழிந்தாள் - வந்திறங்கினாள்—எ-று. (௫௬)

533. இழிந்த கங்கைமுன் மன்னமன் விரைவொடுமேகக்
கழிந்தமன்னவர் கதிபெற முடுகிய கதியால்
அழுந்துமாதவச் சன்னுவின்வேள்வியை யழிப்பக்
கொழுந்துவிட்டெரி வெகுளியன் குடங்கையிற் கொள்ளா.

(இ-ள்.) இழிந்த - இப்படி யிறங்கின, கங்கைமுன் - கங்கைக்கெதிரில், மன்னமன் - அரசன், விரைவொடும் ஏக - விரைவாய்ச் செல்ல, கழிந்த மன்னவர் - முன் னிறந்த சகரர்கள், கதிபெற - நற்கதியை யடையும்பொருட்டு, முடுகிய கதியால் - முடுகிச்செல்லுகின்ற வேகத்தினால், அழுந்துமாதவம்-முதிர்ந்த மாதவத்தையுடைய, சன்னுவின் வேள்வியை அழிப்ப - சந்ஹுமுனிவரது யாகத்தை அழிக்க, (அவர்) கொழுந்துவிட்டு எரி - கொழுந்துவிட்டெரிகின்ற, வெகுளியன் - கோவத் தீயை யுடையவனாய், குடங்கையில் கொள்ளா - (அந்தநீரை) அகங்கையிற்கொண்டு எ-று.

கொழுந்துவிட் டெரியென்ற விசேடணத்தால், வெகுளி என்பதற்குக் கோவத் தீயென்று பொருள் கூறப்பட்டது.

534. உண்டுவந்தனன் மறைமுனிக் கணங்கள்கண் டுவப்பக்
கண்டுவேந்தனும் வணங்கிமுன் னிகழ்ந்தன கழறக்
கொண்டுபோகெனச் செவிவழி கொடுத்தனன் குதித்து
விண்டுநீங்கின ருடலுகு பொடியின் மேவினளே

(இ-ள்.) (அதை) மறைமுனிகணங்கள் - வேதங்களையுணர்ந்த முனிக்கூட்டங்கள், கண்டு உவப்ப - கண்டு சந்தோஷிக்க, உண்டு உதந்தனன் - குடித்துக் களித்தான், வேந்தனும் கண்டு - அரசனும் அதைப்பார்த்து, வணங்கி - தொழுது, முன்னிகழ்ந்தன - முன்னே நடந்தவற்றை, கழற - சொல்ல, (கேட்டு ஜந்ஹு முனியானவன் அரசனைநோக்கி) கொண்டுபோக என - கொண்டுபோவாயென்று, செவிவழி கொடுத்தனன் - செவியின்வழியாக ஒழுகவிட்டான், (விட்டவளவில்) குதித்து - (கங்கையானவள்) செவியினின்று குதித்து, விண்டு நீங்கினர் உடல் - இறந்து போனவர்களுடைய சரீரங்களினின்றும், உகு - சிந்தின, பொடியில் - சாம்பலில், மேவினள் - படிந்தாள்—எ-று. (௫அ)

535. நிரையமுற்றிய சகரர்க ணெடுங்கதி செல்ல
விரைமலர்ப்பொழிந் தார்த்தன விண்ணவர் குழாங்கள்
முரைசமுற்றிய பல்லிய முறைமுறை முழங்க
அரைசனப்பொழு தணிமதி லயோத்திமீண் டடைத்தான்.

(இ-ள்.) (அவ்வாறு கங்கை அந்தச்சாம்பலிற் படிந்தவுடன்) நிரயம்முற்றிய - முன்னே நரகத்தில் நிரம்பிய, சகரர்கள் - சகரர்கள், நெடுகதிசெல்ல - அழியாத நற்கதியிற்சேர, (அதைக்கண்ட) விண்ணவர்குழாங்கள் - தேவர்கூட்டங்கள், விரை மலர்பொழிந்து - வாசனையுள்ள பூமாரிசொரிந்து, ஆர்த்தன - மங்களவொலி செய்தன, அப்பொழுது - அந்தக்காலத்தில், அரசன் - பகிரதராஜன், முரசம் - பேரிகையும், முற்றியபல் இயல்-நிறைந்த (வேறு) பலவாத்தியங்களும், முறைமுறை-வரிசை வரிசையாக, முழங்க - கோஷிக்க, அணிமதில் அழகியமதில் சூழ்ந்த அயோத்தி - திருவயோத்யையை, மீண்டு அடைந்தான் - மறுபடியும் வந்துசேர்ந்தான்—எ-று. (௫௯)

நெடுமைப்பண்பு இவ்விடத்து அழியாமைமேலது. சந்தவின்பப் பொருட்டு மலர்ப்பொழிந்துஎனப் பகரவொற்று மிக்கது.

536. அண்டகோளகைப் புறத்தது யகிலமன் றளந்த
புண்டரீக மென்பதத்திடைப் பிறந்து பூமகனார்
கொண்டதீர்த்தமா யான்கொளப் பகிரதன் கொணர
மண்டலத்துவந் தடைந்ததிம் மாநதி மைந்த.

(இ-ள்.) மைந்த - ஸ்ரீராமமூர்த்தியே, இ - இந்த, மாநதி - பெருமைபொருந்திய நதியானது, (முன்பு) அண்டகோளகைப்புறத்தது ஆய் - அண்டகோளத்துக்கப்பாலிருந்ததாய், அகிலம் - உலகத்தை, அன்று அளந்த - (மாவலிபால் மூன்று அடி நிலம்வேண்டியகாலத்து) அளந்தருளிய, புண்டரீகம் - தாமரைமலர்போன்ற, மெல் - மிருதுவான, பதத்திடை - (ஸ்ரீமந்நாராயணனது) திருவடியில், பிறந்து - உண்டாகி, பூமகனார் - பிரமதேவன், கொண்ட - தன்கமண்டலத்திற்கொண்ட, தீர்த்தமாய் - தீர்த்தமாகி, அரன்கொள்ள - சிவன்சடையி லேற்றுக்கொள்ள, பகிரதன்கொணர பகிரதன்கொண்டுவருதலால், மண்டலத்துவந்து அடைந்தது - பூமியில்வந்துசேர்ந்தது—எ-று. (௬0)

537. சகரர்தம்பொருட் டருந்தவம் பெரும்பகல் தள்ளிப்
பகிரதன்கொணர்ந் திடுதலாற் பகிரதி யாகி
மகிதலத்திடைச் சன்னுவின் செவிவழி வரலால்
நிகரில்சானவி யெனப்பெயர் படைத்ததிந் நீத்தம்.

(இ-ள்.) இ நீத்தம் - இந்தநதியானது, சகரர்தம்பொருட்டு - சகரர்கள் நிமித்தம், பெரும்பகல் - அநேகநாள்கள், அருதவம்தள்ளி - அரியதவத்தொழிலாற் கழித்து, பகிரதன் - பகிரதனுல், கொணர்ந்திடுதலால்-கொண்டுவரப்பட்டதனுல், பகிரதியாகி - பாகீரதியென்னும் பெயருள்ளதாகி, சன்னுவின்செவிவழி - சன்னு முனியின் காதுகளின்வழியாக, மகிதலத்திடைவரலால் - பூமிக்கு வந்ததனுல், நிகர் இல் - (தூய்மைமுதலிய குணங்களால்) ஒப்பில்லாத, சானவியென - சானவி யென்று யாவருஞ்சொல்லும்படி, பெயர்படைத்து - பெயர்பெற்றது—எ-று. ()

538. என்றுகூறலும் வியப்பினெ டுவந்தன ரிறைஞ்சச்
சென்றுதீர்ந்தனர் கங்கையை விசாலைவாழ் சிகரக்
குன்றுபோற்புயத் தரசன்வந் தடியிணை குறுக
நின்றுநல்லுரை விளம்பிமற் றவ்வயி னீங்கா.

(இ-ள்.) என்றுகூறலும்.- என்று விசுவாமித்திரமுனி சொல்லுதலும், (கேட்ட ராமலட்சுமணர்கள்) வியப்பினேடு உவந்தனர் - ஆச்சரியத்துடன் சந்தோஷித்து, இறைஞ்ச - வணங்க, (மூவருமாக) சென்று - போய், கங்கையை தீர்ந்தனர் - கங்கையைநீங்கினர்கள், (அவ்விடத்து) விசாலை - விசாலாநகரத்தில். வாழ் - வாழ்கின்ற, சிகரம் குன்றுபோல்-சிகரங்களையுடைய மலைகளைநிகர்த்த, புயத்து - தோள்களையுடைய, அரசன் - ஓரரசன், வந்து - எதிரில்வந்து, அடியிணைகுறுக - திருவடிகளைக்கிட்டிவணங்க, நின்று - அவ்விடத்துச் சிறிதுநேரம் நின்று, நல் உரை விளம்பி - இன்சொற்சொல்லி, அவ்வயின் நீங்கா - அவ்விடத்தை நீங்கி—எ-று. ()

539. பள்ளிநீங்கிய பங்கயப் பழனநன் னுரை
வெள்ளவான்களை களைவுறு கடைசியர் மிளிர்ந்த
கள்ளவாணெடுங் கண்ணிழல் கயலெனக் கருதா
அள்ளிநாணுறு மகன்பணை மிதிலைநா டடைந்தார்

(இ-ள்.) பள்ளிநீங்கிய - நித்திரைவிட்டெழுந்த, பங்கயம் பழனம் - தாமரை வயல்களிலுள்ள, நல்நாரை - அழகிய நாரைகள், வெள்ளம் நீரினிடத்துத் தோன்றுகின்ற, வான்களை - சிறந்தகளைகளை, களைவுறு - பறிக்கின்ற, கடைசியர் - மள்ள ஸ்த்ரீகளுடைய, மிளிர்ந்த - விளங்குகின்ற, கள்ளம் - கரவடமுள்ள, வாள் - ஒளி பொருந்திய, நெடு - நெடுமையாகிய, கண்நிழல்-கண்களின் சாயையை- கயல் என கருதா - சேல்மீன்களென்றுநினைத்து, அள்ளி மூக்கினுர்கொத்தி, நாணுறும் - (நினைத்தபடி மீனல்லாமையால்) நாணுதற்கிடமான, அகன்பணை - விசாலமான மருதநிலஞ்சூழ்ந்த, மிதிலை - மிதிலாநகரத்தைத் தன்னுட்கொண்ட நாடு-விதேக நாட்டை, அடைந்தார் - சேர்ந்தார்கள்—எ-று. (சுங)

வெள்ளம் கண்ணிழல் எனக் கூட்டுக. பள்ளிநீங்கிய நாரையாதலால் கண்ணிழலைக் கயலெனக் கருதின என்க. களைவு உறு - எனப்பிரித்து களைதற்றெழிலைப் பெருந்திய எனினும், வாள்என்பதற்கு வாள்போன்ற எனினும், நாண் உறும் எனப்பிரித்து நாணத்தையடைகின்ற எனினும் பொருந்தும். வான்களை யென்றது தாமரை குவளை முதலியவைகளை,

540. வரம்பில்வாள்சிறை மதகுகண் முழவொலி வழங்க
அரும்புநாண்மல ரசோகங்க ளலர்விளக் கெடுப்ப
நரம்பினன்றதேன் றாரைகோ ணறுமலர் யாழின்
சுரும்புபாண்செயத் தோகைநின் றாடுவ சோலை.

(இ-ள்.) வரம்பு இல் - அளவில்லாத, வான்சிறைமதகுகள் - பெரியகுளங்களின் மதகுகள், முழவொலி வழங்க - மத்தளவோசையைக் கொடுக்கவும், அரும்பும் - அரும்புகின்ற, நாள்மலர் - புதியமலர்களையுடைய, அசோகங்கள் - அசோகமரங்கள், அலர்விளக்கெடுப்ப - மலர்களாகிய விளக்குகளை யேந்தவும், நரம்பின் - நரம்பைப்போல, நான்ற - ஒழுகாநின்ற, தேன்தாரைகொள் - தேனிறொழுக்கைக் கொண்டிருக்கிற, நறுமலர் - நறியமலர்களில், யாழின் - யாழைப்போல், சுரும்பு - வண்டுகள், பாண்செய - இசைபாடவும், சோலை - சோலைகளில், தோகை - மயில்கள், நின்று ஆடுவ - நின்றுஆடுவன—எ-று. (சுச)

வழங்க எடுப்ப செய்ய ஆடுவ என வினைமுடிக்க, தோகை சினையாகுபெயர்.

541. பட்டவாணுதன் மடந்தையர் பார்ப்பெனுந் தூதால்
எட்டவாதரித் துழல்பவ ரிதயங்கள் வெறுப்ப
வட்டநாண்மரை மலரின்மேல் வயலிடை மள்ளர்
கட்டகாவியங் கட்கடை கழிப்பன கழனி

(இ-ள்.) பட்டம் - பொற்பட்டமணிந்த, வாள்நுதல் - ஒளிபொருந்திய நெற்றியையுடைய, மடந்தையர் - மாதரது, பார்ப்பு என்னும் - பார்வையென்கிற, தூதால் தூதினால், எட்ட - அவர்களையணைய, ஆதரித்து - விரும்பி, உழல்பவர் - திரிபவராகிய ஆடவர்களுடைய, இதயங்கள் வெருப்ப - இருதயங்கள் வெறுக்கும்படி, வட்டம் - வட்டவாகிய, மரை - தாமரையின், நாள்பலரின்மேல் - புதியமலர்களின்மேல், வயலிடைமள்ளர் - வயலிலுள்ள கடைஞர், கட்ட - பறித்தெறிந்த, காவி - குவளைமலர்கள், (படிந்து) கழனி - அந்தக்கழனிகளிலுள்ள, அம்கண் - (கடைசியர்களுடைய) அழகியகண்களினது, கடைகழிப்பன - கடைப்பார்வையை யழியாநின்றன—எ-று. (சுரு)

கடைஞர் பறித்தெறிந்த குவளைமலர்கள் தாமரைமலர்களின்மேற் படிந்து, கண்களைப்போலத் தோன்றலால் அயலவர் பார்க்கிறார்களெனக் கருதிக், கடைசியர் பார்த்தல் ஒழியவே ஆதரித்துழல்பவர் இதயங்கள் வெறுத்தலாயினவென்க. மரை முதற்குறை.

542. தூவியன்னந்த மினமென்று நடைகண்டு தொடரக்
கூவுமென்குயிற் குதலையர் குடைந்ததண் புனல்வாய்
ஓவில்குங்குமச் சுவடுற வொன்றொடொன் றூடி
பூவுறங்கினும் புள்ளுறங் காதன பொய்கை.

(இ-ள்.) கூவும் மெல்குயில்குதலையர் - கூவுகின்ற மென்மையாகிய குயிலோசைபோன்ற மழலைமொழிகளையுடைய மாதர்கள், தூவி அன்னம் - சிறையழகையுடைய அன்னப்புட்கள், நடைகண்டு - அம்மாதர்களுடைய நடையைப்பார்த்து, தம்இனம் என்றுதொடர - தங்களினமென்றெண்ணிப் பின்செல்லும்படி, (சென்று) குடைந்த - மூழ்கின, பொய்கைதண்புனல்வாய் - பொய்கையிலுள்ள தண்ணிய நீரினிடத்தில், ஓ இல் - நீக்கமில்லாத, குங்குமச்சுவடு உற - குங்குமக்குழம்பின் சுவடு தம்மேற்படுதலால், ஒன்றொடு ஒன்று ஊடி - ஒன்றேடொன்று பிணங்கி,

பூவுறங்கினும் - அந்நீரிலுள்ள தாமரைமலர்களுறங்கினும், புள் - அதிலுள்ள பறவைகள், உறங்காதன-உறங்காதிருப்பன—எ-று. (௬௬)

குங்குமக்குழம்பின் சுவடுபட்டுச்சிவந்தும், மணம் வீசுவதுமாய விளங்குகின்றது. சேவலும்பேடையுமாகிய பறவைகள் ஒன்றையொன்றுகண் டேடினவென்பது கருத்து. பூவுறங்குதல் - மலர்கள் குவிதல். தூவி - முதலாகுபெயர்.

543. முறையி னின்முது மேதியின்முலைவழி பாலும்
துறையி னின்றுயர் மாங்கனிதூங்கிய சாறும்
அறையு மென்கரும் பாடியவமுதமு மழிதேம்
நறையு மல்லது நளிர்புனல்பெருகலா நதிகள்.

(இ-ள்.) நதிகள் - நதிகளில், முறையினில் - ஒன்றன்பின் ஒன்றாக, முதுமேதியின் - முதிர்ந்த எருமைகளின், முலை - முலைகளினின்றும், வழி-ஒழுகுகிற, பாலும்-பாலும், துறையினின்று - கரைகளினின்று, உயர் - உயர்ந்த, மாங்கனி - மாமரக்கனிகளினின்றும், தூங்கிய - ஒழுகின, சாறும் - சாறும், அறையும் - ஆலையில் ஆட்டுகின்ற, மெல்கரும்பு - மெல்லியகரும்புகள், ஆடிய - ஆலையிலாடியதனாலுண்டான, அமிர்தமும் - சாறும், அழி - சிதைந்த, தேன் - தேன்கூட்டினின்று மொழுகின, நறையும் - தேனும், அல்லது-(பெருகுவனவே) அல்லாமல், நளிர்புனல் பெருகலா - குளிர்ச்சிபொருந்திய நீர்கள்பெருகா—எ-று. (௬௭)

நாடிகள் புனல்பெருகலா என்பது பால்வழுவமைதி

544. இழைக்கு நுண்ணிடை யிடைதரமுகடுயர் கொங்கை
மழைக்கண் மங்கைய ரரங்கினில்வயிரியர் முழவம்
முழக்கு மின்னிசை வெருவியமோட்டிள மூரி
உழக்க வாளைகள் பாளையிற்குதிப்பன வோடை.

(இ-ள்.) இழைக்கு - நூலிழையினும், நுண் இடை - நுட்பமாகிய இடையானது, இடைதர - தள்ளாடும்படி, முகடு உயர்கொங்கை - மலைபோலுயர்ந்த ஸ்தனங்களையும், மழைகண் - குளிர்ச்சியாகிய பார்வையையுமுடைய, மங்கையர் - நாட்டியப்பெண்கள், (நடிக்கின்ற) அரங்கினில் - நாடகசாலையில், வயிரியர் - கூத்தர்கள், முழவம் முழக்கும் - மத்தளங்கொட்டுவதினாலுண்டாகிற, இன் இசை - இனிதான வோசைக்கு, வெருவிய - அஞ்சின, மோடு இளமூரி - பெரிய இளமைபொருந்திய எருமைகள், ஓடை உழக்க-ஓடைகளில் விழுந்து கலக்க, (அதற்கஞ்சி) வாளைகள் - அவ்வோடைகளிலுள்ள வாளைகள், பாளையில் குதிப்பன - தெங்கு கமுகு முதலியவற்றின் பாளைகளின்மீது தாவுவன—எ-று. (௬௮)

மோட்டிள மேதி எனவும் பாடம்.

545. படைநெடுங்கண்வா ளுறைபுகப் படர்புனன் மூழ்கி
கடையமுன்கடற் செழுந்திரு வெழும்படி காட்டி
மிடையும்வெள்வளை புள்ளொடு மொலிப்பமெல் லியலார்
குடையவண்டினங் கடிமலர் குடைவன குளங்கள்.

(இ-ள்.) குளங்கள் - தடாகங்களில், மெல்லியலார் - மாதர்கள், படைநெடு கண்வாள் - வேல்போலும் நெடுங்கண்களாகிய வாள்கள், உறைபுக - (இமைகளாகிய) உறைகளிற்புகும்படி, படர்புனல்முழுகி-பரவிய நீரில்முழுகி, முன்கடைய - முற்காலத்தில்கடைய, கடல் - பாற்கடலில், செழு - செழிய, திரு - திருமகள்

எழும்படி-மேலெழுந்ததன்மையை, காட்டி - தோன்றுவித்து, மிடையும்-நெருங்கிய, வெள்வளை - வெண்மையாகிய வளையல்கள்; புள்ளொடும் ஒலிப்ப - அந்நீர்ப்பறவைகளுடன்கூடி யொலிக்கும்படி, குடைய - குடைந்துகொண்டிருக்க, வண்டினம்-வண்டுக்கூட்டங்கள், கடிமலர் - வாசனைபொருந்திய மலர்களை, குடைவன-குடையாநிற்பன—எ-று. (சுக)

நீரில் மூழ்கும்போது கண்மூடுத லியற்கையாதலால் கண்வாளுறைபுக என்றார். இம்மாதர்கள் நீரில் முழ்கியிருந்து எழுந்திருத்தல் பாற்கடலிலிருந்து திருமகள் எழுந்ததுபோலு மென்பதுகருத்து.

அகலிகையின் வரலாறு.

546. இனையநாட்டினை யினிதுசென் றிஞ்சிசூழ் மிதிலை
புனையுநீள்கொடிப் புரிசையின் புறத்துவந் திறுத்தார்
மனையின்மாட்சியை யழித்திழி மாதவப் பன்னி
கனையுமேட்டுயர் கருங்கலோர் வெள்ளிடைக் கண்டார்.

(இ - ள்.) இனையநாட்டினை - இத்தன்மையதான விதேஹநாட்டை, இனிது சென்று-இனிமையாகச்சென்று, இஞ்சிசூழ்-மதிலுறுப்புக்களால் சூழப்பட்டு, மிதிலை-மிதிலாநகரத்தை, புனையும்-அலங்கரியாநிற்கிற, நீள்கொடி-நீண்டகொடிகள்கட்டின, புரிசையின்புறத்து-மதிற்புறத்தில், வந்து இறுத்தார்-வந்து தங்கினவர்களாய், மனையின்மாட்சியை - (கற்புமுதலிய) மனைமாட்சியை,அழித்து - சிதைத்து, இழி - அதனுலிழிந்த, மாதவப்பன்னி - (மஹர்ஷிபத்நியாகிய) அகலிகையின் சாபரூபமாகி, கனையும்மேட்டு உயர் - பெரியமேடாக வுயர்ந்து தோன்றுகிற, கருங்கல்-கரியகல்லை, ஓர் வெள்ளிடை-ஒரு வெற்றிடத்தில், கண்டார்-பார்த்தார்கள்—எ-று. (எO)

மாதவப்பன்னி என்றது கௌதமரிஷியின் பத்நியை. பத்நியென்னும் வடமொழி பன்னியெனச் சிதைந்துகிடக்கிறது. மனைமாட்சியை யழித்திழிதலாவது வியபிசரித்துச் சபிக்கப்பட்டு கல்லாய்க்கிடத்தல்.

547. கண்டகன்மிசைக் காகுத்தன் கழற்றுகள் கதுவ
உண்டபேதைமை மயக்கற வேறுபட் டுருவம்
கொண்டுமெய்யுணர் பவன்கழல் கூடிய தொப்பப்
பண்டைவண்ணமாய் நின்றனண் மாமுனி பணிப்பான்.

(இ-ள்.) கண்டகல்மிசை-அப்படிப்பார்த்த கல்லின்மேல், காகுத்தன்-ஸ்ரீராமபிரானது, கழல்துகள்-ஸ்ரீபாதரேணு, கதுவ-படுதலால், உண்ட-உயிர்கள் தங்களைவிழுங்கிய, பேதைமைமயக்கு அற - அஞ்ஞானமயக்கம் நீங்க, உருவம் வேறுபட்டு - ரூபம் வேறாகி, மெய்யுணர்புகொண்டு - மெய்ஞ்ஞானத்தைக்கொண்டு, அவன்-அந்த ஸ்ரீமந்நாராயணனது, கழல்-திருவடியை, கூடியது ஒப்ப-அடைந்ததை நிகர்க்க, பண்டை வண்ணமாய் நின்றனள் - முன்னுருவாகிநின்றாள், (அதைக்கண்ட) மாமுனி-விசுவாமித்திரமஹரிஷி, பணிப்பான் - (ஸ்ரீராமபிரானைநோக்கி) சொல்லுகின்றார்—எ-று. (எக)

வேறுபட்டுருவங்கோடலாவது திவ்யதேஹிகளாதல். திவ்யதேஹிகள் நித்யசூரிகள்.

வேறு.

548. மாயிரு விசும்பிற்கங்கை மண்மிசை யிழித்தோன்மைந்த
மேயின வுவகையோடு மின்னெனவொதுங்கி நின்றாள்
தீவினை நயந்துசெய்த தேவர்கோன் றனக்குச்செங்கண்
ஆயிர மளித்தோன்பன்னி யகலிகை யாகுமென்றான்.

(இ-ள்.) மா இரு-மிகுந்தபெருமைவாய்ந்த, விசும்பிற்கங்கை-ஆகாயகங்கையை, மண்மிசை-பூமியின்மீது, இழித்தோன்-கொண்டுவந்தவனாகியபகிரதனது, மைந்த-வழித்தோன்றலே, மேயின உவகையோடு-அடைந்தசந்தோஷத்துடன், மின் என-மின்னற்கொடிபோல, ஒதுங்கிநின்றாள் - ஒதுங்கிநின்றவள், (யாரெனின்) தீவினை-தீச்செயலை, நயந்துசெய்த - விரும்பிச்செய்த, தேவர் கோன்தனக்கு - தேவேந்திரனுக்கு, செங்கண் ஆயிரம்-ஆயிரம்செவ்வியகண்களை, அளித்தோன்-கொடுத்தவனாகிய கௌதமரிஷியின், பன்னி - பத்நியாகிய, அகலிகை ஆகும் - அகலியையென்னும் பெயரையுடையவள், என்றான்-என்றுசொன்னான்—எ-று. (எ௨)

549. பொன்னையேய் சடையான்கூறக் கேட்டலும் பூமிகேள்வன்
என்னையே என்னையேயிவ் வுலகிய லிருந்தவண்ணம்
முன்னையூழ் வினையினாலோ நடுவொன்று முடிந்ததுண்டோ
அன்னையே யனையாட்கிவ்வா றடுத்தவா றருளுகென்றான்.

(இ-ள்.) பொன்னை ஏய் - பொன்னையொத்த, சடையான் - சடையையுடையவனாகிய விசுவாமித்ரமுனிவன், கூற-சொல்ல, கேட்டலும்-கேட்டமாத்திரத்தில், பூமிகேள்வன் -பூமிதேவிநாயகனாகிய ஸ்ரீராமபிரான், இஉலகு இயல்-இந்தவுலகவியற்கை, இருந்த வண்ணம்-இருந்தபிரகாரம், என்னை என்னை-எத்தன்மையது எத்தன்மையது, (என்று ஆச்சரியப்பட்டு) முன்னை-பழமையாகிய, ஊழ்வினையினாலோ-ஊழ்வினையினாலேயோ, நடு ஒன்று - இடையில் ஒருகாரணத்தால், முடிந்தது உண்டோ - நேர்ந்ததோ, அன்னையே அனையாட்கு-தாயையொத்தவளாகிய அகலிகைக்கு, இவ்வாறு-இந்தப்பிரகாரம், அடுத்த ஆறு-நேரிட்டவகையை, அருளுக என்றான்-கிருபைசெய்ய வேண்டுமென்று பிரார்த்தித்தான்—எ-று. (எ௩)

என்னையே என்னையே என ஆச்சரியப்பட்டது தான் ஏகபத்னிவிரதனாகலானும் தர்மபரிபாலனசீலனாகலானுமென்க.

550. அவ்வுரை யிராமன்கூற வறிஞனு மவனைநோக்கிச்
செவ்வியோய் கேட்டிமேனாள் செறிசுடர்க் குலிசத்தண்ணல்
அவ்விய மவித்தசிந்தை முனிவனை யற்றநோக்கி
நவ்விபோல் விழியினாடன் வனமுலை நணுகலுற்றான்.

(இ-ள்.) அ உரை-அந்தவார்த்தையை,இராமன் கூற-ஸ்ரீராமபிரான்சொல்ல, அறிஞனும்-முனிவனும், அவனைநோக்கி-அவனைப்பார்த்து, செவ்வியோய்-நல்லொழுக்கமுள்ளவனே, கேட்டி-கேட்பாய், மேல்நாள் - முற்காலத்தில், செறிசுடர்-மிக்க ஒளியையுடைய, குலிசத்து அண்ணல்-வஜ்ராயுதமேந்திய இந்திரன், அவ்வியம் அவித்த-பொறாமைமுதலிய துர்க்குணங்களைநீக்கிய, சிந்தை-மனத்தையுடைய, முனிவனை-கௌதமரிஷியின், அற்றம்நோக்கி-இல்லாதசமயம்பார்த்து, நவ்விபோல்விழியினாள் -

மானினது பார்வைபோன்ற பார்வையையுடையவளாகிய அகலிகையின், வனம் முலை-அழகியஸ்தநங்களை, நணுகல் உற்றான்-சேரவிரும்பினான்—எ-று. (எச)

அவ்வியம் மற்றைத்தீக்குணங்கட்கு முபலக்ஷணம். விழி முதலாகுபெயர். அவ்வியமவித்த சிந்தையையுடையவனுதல் முனிவனுதற்குக் கருவியென்றதாயிற்று. தன் சாரியை.

551. தையலா ணயனவேலு மன்மதன் சரமும்பாய
உய்யலா றுறுதிநாடி யுழல்பவ னொருநாளுற்ற
மையலா லறிவுநீங்கி மாமுனிக் கற்றஞ்செய்து
பொய்யிலா வுள்ளத்தான்ற னுருவமே கொண்டுபுக்கான்.

(இ-ள்.) தையலாள்நயனம்வேலும் - அகலிகையின்கண்களாகிய வேல்களும், மன்மதன்சரமும் - மன்மதபாணங்களும், பாய - தன்மேற்பாய்தலால், (உண்டாகிற வருத்தம் நீங்கி) உய்யலால் உறுதிநாடி - பிழைக்கும்படியான உறுதியையாராய்ந்து, உழல்பவன் - திரிபவனுகிய இந்திரன், ஒருநாள் - ஒருதினம், உற்ற-தானடைந்த, மையலால்-காமமயக்கத்தால், அறிவுநீங்கி-மதிகெட்டு, மாமுனிக்கு-பெருமைபொருந்திய கௌதமரிஷிக்கு, அற்றம்செய்து - பிரியும் சமயமுண்டாகி, பொய் இல்லா உள்ளத்தான்-பொய்யற்றமனத்தையுடைய ரிஷியினது, உருவமேகொண்டு-வடிவையே கொண்டு, புக்கான்-அகலிகையினிடத்திற் சென்றான்—எ-று. (எரு)

தன் - அசை.

552. புக்கவ ளோடுங்காமப் புதுமண மதுவின்றேறல்
ஒக்கவுண் டிருத்தலோடு முணர்ந்தன ளுணர்ந்தபின்னும்
தக்கதன் றென்னவோராள் தாழ்ந்தன ளிருப்பத்தாழா
முக்கண னனையவாற்றன் முனிவனு முடுகிவந்தான்.

(இ-ள்.) புக்கு-இப்படிப்போய், அவளோடும்-அந்த அகலிகையுடன், காமம்-காமமாகிய, புதுமணம்-புதியமணமாகிய, மதுவின்தேறல்-இனிமைமிகுந்த தேனை, ஒக்க உண்டு இருத்தலோடும் - சமமாக அநுபவித்துக்கொண்டிருக்கும்போது, உணர்ந்தனள்-(அகலிகையானவள் தன்கணவனல்லனென்று) அறிந்துகொண்டாள், உணர்ந்தபின்னும்-அறிந்தபிறகும், தக்கது அன்று என்ன - இது நமக்குத்தகுதியல்லவென்று, ஓராள் - உணர்ந்து அச்செய்கையையொழிக்காமல், தாழ்ந்தனள் இருப்ப - தாமதித்திருக்க, தாழா - தாழ்த்திராமல், முக்கணன் அனைய ஆற்றல் - திருநேத்திரங்களையுடையவனுகிய ருத்ரனையொத்த வல்லமையையுடைய, முனிவனும் - கௌதமரிஷியும், முடுகிவந்தான்-விரைந்துவந்தான்—எ-று. (எசு)

முடுகிவருவதற்குக் காரணம் ஞானவுணர்ச்சி.

553. சரந்தரு சாபமல்லாற் றடுப்பருஞ் சாபம்வல்ல
வரந்தரு முனிவனெய்த வருதலும் வெருவிமாயா
நிரந்தர முலகினிற்கு நெடும்பழி பூண்டாணின்றாள்
புரந்தர னடுங்கியாங்கோர் பூசையாய் போகலுற்றான்.

(இ-ள்.) சரம்தரு-பாணந்தொடுத்தெய்தற்குரிய, சாபம் அல்லால்-சாபத்திலல்லாமல், தடுப்பு அரு-தடுத்தற்கரிய, சாபம்வல்ல-சாபத்தில்வல்லவனுகிய, வரம்தருமுனிவன்-அநுக்ரஹமுஞ்செய்யத்தக்க ரிஷியானவன், எய்தவருதலும் - கிட்டிவருதலோடும், மாயா-கெடாமல், நிரந்தரம் - எக்காலத்தும், உலகில்நிற்கும் - உலகத்தில்நிலை

பெற்ற, நெடும்பழி-பெரும்பழியை, பூண்டாள் - பூண்டவளாகிய அகலிகையானவள், வெருவினின்றாள் - பயந்துநின்றாள், புரந்தரன் - இந்திரன், நடுங்கி நடுக்கமடைந்து, ஆங்கு-அவ்விடத்தினின்றும், ஓர்பூசை ஆய் - ஒருபூனைவடிவங்கொண்டு-போகல் உற்றான்-போகத்தொடங்கினான்—எ-று. (எஎ)

சாபமிரண்டனுள் முன்னதுவில் சபாநுக்ரஹமிரண்டினுஞ் சமர்த்தனென்பது தோன்ற, "சாபம்வலல வரந்தருமுனிவன்" என்றார், நடுங்குதற்குக் காரணம் செய்யாதனசெய்தது.

554. தீவிழி சிந்தநோக்கிச் செய்ததை யுணர்ந்துசெய்ய
தூயவ னவனை நின்கைச் சுடுசர மனையசொல்லால்
ஆயிர மாதர்க்குள்ள வறிகுறி யுனக்குண்டாகென்
றேயின னவையெலாம்வந் தியைந்தன விமைப்பின்முன்னம்.

(இ-ள்.) செய்யதூயவன் - நடுவுநிலைமையுள்ள பரிசுத்தனாகிய கௌதமரிஷி, (அப்போது) விழி தீசிந்தநோக்கி - கண்கள் நெருப்பையுமிழும்படிப்பார்த்து, செய்ததை உணர்ந்து-அவ்விருவருஞ் செய்தகாரியத்தை யறிந்து, அவனை-அந்தஇந்திரனை (நோக்கி), நின்கை-உன்கையிலுள்ள, சுடுசரம் அனைய-வெவ்வியபாணத்தையொத்த, சொல்லால் - வாக்கினால், உனக்கு உன்சரீரத்தில், மாதர்க்கு உள்ள - பெண்களுக்குண்டாயிருக்கிற, ஆயிரம் அறிகுறி - ஆயிரம்பெண்குறிகள், உண்டாக என்று-உண்டாகக்கடவனவென்று, ஏயினன்-சாபத்தையேவினான், (அவ்வாறே) அவையெலாம்-அவைகளெல்லாம், இமைப்பின் முன்னம்-இமைப்பொழுதுக்குள்ளே, வந்து இயைந்தன-வந்து அவனுடலிற்பொருந்தின—எ-று. (எஅ)

555. எல்லையி னாணமெய்தி யாவர்க்கு நகைவந்தெய்தப்
புல்லிய பழியினோடும் புரந்தரன் போயபின்றை
மெல்லிய லாளைநோக்கி விலைமக ளனையநீயும்
கல்லிய லாதியென்றான் கருங்கலாய் மருங்குவீழ்வாள.

(இ-ள்.) (அப்போது) புரந்தரன்-இந்திரனானவன், எல்லை இல்-எல்லையில்லாத, நாணம் எய்தி-நாணத்தையடைந்து, யாவர்க்கும்நகைவந்து எய்த-எல்லார்க்கும்சிரிப்புண்டாக, புல்லியபழியினோடும்-நேரிட்டபழியோடு, போயபின்றை - போனபிறகு, மெல்லியலாளைநோக்கி-அகலிகையைப்பார்த்து, விலைமகள் அனையநீயும்-விலைமகளையொத்தநீயும், கல் இயல் ஆதி-கல்லுருவாவாய், என்றான்-என்றுசபித்தான், (அப்படி சபித்தவளவில்) கருகல் ஆய் - கருங்கல்லுருக்கொண்டு, மருங்குவீழ்வாள் - அயலில் விழுகின்றவள்—எ-று. (எகூ)

நீயும் என்னும் உம்மை இறந்தது தழீஇயது.

556. பிழைத்தது பொறுத்தலென்றும் பெரியவர் கடனேயென்பார்
அழற்றருங் கடவுளன்னாய் முடிவிதற் கருளுகென்னத்
தழைத்துவண் டிமிருந்தண்டார்த் தசரத ராமனென்பான்
கழற்றுகள் கதுவவிந்தக் கல்லுருத் தவிர்தியென்றான்.

(இ-ள்.) (அந்தரிஷியைநோக்கி) அழல்தரும்கடவுள் அன்னாய் - தீநிறமுள்ள சிவனையொத்தவரே, என்றும்-எக்காலத்தும், பிழைத்ததுபொறுத்தல் - (சிறியோர்) பிழைசெய்ததைப் பொறுப்பது, பெரியவர் - பெரியோர்களுக்கு, கடனே என்பர் - கடன்மையேயுமாமென்றுசொல்லுவர் (அறிஞர்) ஆதலால், இதற்கு - இந்

தச்சாபத்துக்கு, முடிவு அருளுக என்ன - முடிவையருளிச் செய்யவேண்டுமென்று பிரார்த்திக்க, (அந்தக்கௌதமரிஷி அவளை நோக்கி) தழைத்து-செழித்து, வண்டு-வண்டுகள், இமிரும் - இசைபாடுதற்கிடமாகிய, தண்தார் - குளிர்ச்சியாகிய பூமாலையையணிந்த, தசரதராமன் என்பான் - தசரதராமனென்று சொல்லப்பட்டவனது, கழல்துகள் கதுவ - ஸ்ரீபாதரேணு உன்மேற்படிதலால், இந்தகல் உருதவிர்தி - இந்தக் கல்லுருவத்தை நீங்குவாய், என்றான்-என்று சொன்னான்—எ-று. (அ0)

பொறுத்தல் பெரியவர் கடன் என்றமையால், பிழைத்தது என்பது சிறியோர் மேலதாயிற்று.

557. அந்தவிந் திரனைக்கண்ட வமரர்கள் பிரமன்முன்னா
வந்துகோ தமனைவேண்ட மற்றவை தவிர்த்துமாறாச்
சிந்தையின் முனிவுதீர்ந்து சிறந்தவா யிரங்கண்ணாக்கத்
தந்தம துலகுபுக்கார் தையலுங் கிடந்தாள்கல்லாய்.

(இ-ள்.) அந்த இந்திரனைக்கண்ட அமரர்கள்-அந்த இந்திரனைப்பார்த்த தேவர்கள், பிரமன்முன் ஆவந்து - பிரமதேவனை முன்னிட்டுக்கொண்டுவந்து, கோதமனை வேண்ட - கௌதமரிஷியை வேண்டிக்கொள்ள, (அவர்) அவை தவிர்த்து-அவற்றை நீக்கி, சிந்தையின்மாறா - மனத்தினின்றும் நீங்காத, முனிவு - கோவமும், தீர்ந்து - நீங்கி, சிறந்த ஆயிரம்கண் ஆக்க - மேலான ஆயிரம் கண்களாகச்செய்ய, (கண்ட தேவர்கள்) தம் தமது உலகு - தத்தமுலகங்களில், புக்கார் - போய்ச்சேர்ந்தார்கள், தையலும் - அகலிகையும், கல் ஆய்க்கிடந்தாள்-கல்லுருக்கொண்டு கிடந்தாள் எ-று.

558. இவ்வண்ண நிகழ்ந்தவண்ண மினியிந்த வுலகுக்கெல்லாம்
உய்வண்ண மன்றிமற்றோர் துயர்வண்ண முறுவதுண்டோ
மைவண்ணத் தரக்கிபோரின் மழைவண்ணித் தண்ணலேயுன்
கைவண்ண மங்குக்கண்டேன் கால்வண்ண மிங்குக்கண்டேன்.

(இ-ள்.) நிகழ்ந்தவண்ணம் இவ்வண்ணம் - (முற்காலத்தில்) நடந்த முறைமை இந்த முறைமை, இனி - இனிமேல். இந்த வுலகுக்கெல்லாம் - இந்த லோகத்துக்கெல்லாம், உய்வண்ணம் அன்றி - உஜ்ஜீவநமுண்டாவதல்லாமல், மற்றோர் துயர் வண்ணம் - வேறொரு துன்பத்துக்குக் காரணம், உறுவது உண்டோ - உண்டாகுமோ, மழைவண்ணத்து அண்ணலே - மேகநிறமுள்ள ஸ்ரீராமா, அங்கு-அவ்விடத்தில், மைவண்ணத்து - கருநிறத்தையுடைய, அரக்கிபோரில்-அரக்கியாகிய தாடகை யுத்தத்தில், உன்கைவண்ணம் கண்டேன் - உன் கைத்திறனைக் கண்டேன் இங்கு-இவ்விடத்தில், கால்வண்ணம் கண்டேன் - காற்றிறனைக்கண்டேன். (அஉ)

அரக்கி போரில் கைவண்ணமும், இவ்விடத்தில் கால்வண்ணமுங் கண்டேன் என்றமையால், வில்வண்ணமுதலிய சிலவற்றை மேலுங்காண விரும்புகிறேனெனக் குறிப்பித்தாராயிற்று.

559. தீதிலா வுதவிசெய்த சேவடிக் கரியசெம்மல்
கோதிலாக் குணத்தான்சொன்ன பொருளெலா மனத்திற்கொண்டு
மாதவ னருளுண்டாகில் வழிபடர் படருறாதே
போதுநீ யன்னையென்று பொன்னடி வணங்கப்போனாள்.

(இ-ள்.) தீது இல்லா - குற்றமில்லாத, உதவிசெய்த - உபகாரம் பண்ணின, சேவடி - திருவடியையுடைய, கரிய செம்மல்-ஸ்ரீராமபிரான், கோது இல்லா குணத்தான் - களங்கமில்லாத குணங்களை யுடையவனாகிய (விசுவாமித்திர முனிவன்), சொன்னபொருள் எல்லாம் - சொன்ன செய்திகளையெல்லாம், மனத்தில் கொண்டு-திருவுளத்திற்கொண்டு, (அகலிகையை நோக்கி) அன்னை - தாயே, மாதவன் - கௌதமரிஷியின், அருள் உண்டாகில் - கட்டளையுண்டானால், வழிபடர் படர் உறாது - வழியேசெல் மிக்க துன்பப்படாமல், நீ போது என்று - நீவா வென்று, பொன்னடி வணங்க - அவனுடைய அழகிய பாதங்களை வணங்க, (அதற்கிசைந்து) போனால் - அவர்களுடன் சென்றாள்—எ-று. (அ௩)

தீதிலாவுதவியென்றது முன்னும் பின்னுமாகிய வுதவியை நோக்காது செய்யு முதவியை.

560. அருந்தவ னுறையுடன்னை யனையவ ரணுகலோடும்
விருந்தினர் தம்மைக்காணு மெய்ம்முனி வியந்தநெஞ்சன்
பரிந்தெதிர் கொண்டுபுக்குக் கடன்முறை பழுதுறாமல்
புரிந்தபின் காதிசெம்மல் புனிதமா தவனைநோக்கி.

(இ-ள்.) அருதவன் - அரிய தவத்தையுடைய (கௌதமரிஷியின்), உறையுள் தன்னை - ஆச்சிரமத்தை, அனையவர் - அவர்கள், அணுகலோடும் - அடைதலோடும், மெய்முனி - மெய்ஞ்ஞானத்தையுடைய (கௌதமமுனிவர்), விருந்தினர் தம்மை காணு - விருந்தினராகிய ஸ்ரீராமபிரான் முதலியோரைக் கண்டு, வியந்த நெஞ்சன் - அதிசயித்த மனத்தையுடையவராய், பரிந்து எதிர்கொண்டுபுக்கு - அன்புகொண்டு எதிர்வந்து அழைத்துப்போய், கடன்முறை - செய்யவேண்டிய வுபசார முறைமைகளையெல்லாம், பழுது உறாமல் - பிழைபடாமல், புரிந்தபின் - செய்தபிறகு, காதி செம்மல் - காதிபுத்திரனாகிய விசுவாமித்திரமுனிவர். புனிதம் - பரிசுத்தமான, மா-பெரிய, தவனை - தவத்தையுடைய (கௌதமரிஷியை), நோக்கி-பார்த்து. (அ௪)

காதி ஓரரசன், இவன் புதல்வனாகையால் விசுவாமித்திரரை ராஜரிஷியென்று கூறுவர்.

561. அஞ்சன வண்ணத்தான்றன் னடித்துகள் கதுவாமுன்னம்
வஞ்சிபோ லிடையாண்முன்னை வண்ணத்த ளாகிநின்றாள்
நெஞ்சினாற் பிழைப்பிலாளை நீயழைத் திடுகவென்னக்
கஞ்சமா முனிவனன்ன முனிவனுங் கருத்துட்கொண்டான்.

(இ-ள்.) அஞ்சனவண்ணத்தான் தன் - அஞ்சனம்போன்ற நிறத்தையுடைய ஸ்ரீராமனுடைய, அடிதுகள் - பாததூளி, கதுவாமுன்னம் - படுவதற்கு முன்னே, வஞ்சிபோல் இடையாள் - கொடிபோலும் இடையையுடையவளாகிய அகலிகை, முன்னை வண்ணத்தள் ஆகிநின்றாள் - முன்னை வடிவத்தை யுடையவளாகி நின்றாள், நெஞ்சினால் பிழைப்பு இலாளை-தன்மனத்தோடு பொருந்திய குற்றமில்லாத இவளை, நீ அழைத்திடுக என்ன - நீ அழைத்துக்கொள்ளவேண்டுமென்று சொல்ல, கஞ்சமா முனிவன் அன்ன-பிரமதேவனையொத்த, முனிவனும் - கௌதமரிஷியும், கருத்துள் கொண்டான் - (அவ்வார்த்தைகளை) மனத்திலேற்றுக்கொண்டான். (அ௫)

மனத்தோடுகூடின குற்றஞ்செய்யாதவளாதலால் இவளை நீ யேற்றுக்கொள்ள வேண்டுமென்பது கருத்து.

562. குணங்களா லுயர்ந்தவள்ளல் கோதமன் கமலத்தாள்கள்
வணங்கினன் வலங்கொண்டேத்தி மாசறு கற்பின்மிக்க
அணங்கினை யவன்கையீந்தான் டருந்தவ னோடும்வாச
மணங்கிளர் சோலைநீங்கி மணிமதிற் கிடக்கைகண்டார்.

(இ-ள்.) (அப்போது) குணங்களால் உயர்ந்தவள்ளல் - நற்குணங்களால் சிறந்த ஸ்ரீராமபிரான், கோதமன் - கௌதமரிஷியினுடைய, கமலம்தாள்கள்-தாமரை மலர் போன்ற திருவடிகளை, வணங்கினன் - தொழுது, வலம்கொண்டு - ப்ரதக்ஷிணம் செய்து, ஏத்தி - துதித்து, மாசு அறு - குற்றமற்ற, கற்பில்மிக்க - கற்பினாலுயர்ந்த, அணங்கினை - அகலிகையை, அவன்கை ஈந்து - அந்தக் கௌதமரிஷியின் கையிற் கொடுத்து, ஆண்டு - அவ்விடத்தினின்றும், அருந்தவனோடும் - விசுவாமித்திர முனிவனோடும், வாசம் மணம் கிளர் - மிக்க மணம்வீசுகிற, சோலை - சோலையை, நீங்கி - விட்டு, மணி - மணிகளிழைத்த, மதில் கிடக்கை - மிதிலையின் மதிலினது நிலையை, கண்டார் - பார்த்தார்கள்—எ-று. (அசு)

கo - வது, அகலிகைப்படலம் முற்றும்.

## கக-வது. மிதிலைக்காட்சிப் படலம்.



ஸ்ரீராமபிரானுர் மிதிலாநகரத்தைக் கண்ணுற்றுச் சென்ற
செய்தியைச் சொல்லுகிற படலம்.



கொடியின்காட்சி இப்படிப்பட்டதென்பது.

563. மையறு மலரினீங்கி யான்செய்மா தவத்தின்வந்து
செய்யவ ளிருந்தாளென்று செழுமணிக் கொடிகளென்னும்
கைகளை நீட்டியந்தக் கடிநகர் கமலச்செங்கண்
அய்யனை யொல்லைவாவென் றழைப்பது போன்றதம்மா.

(இ-ள்.) (அப்போது அந்த நகரத்தின் மதில்மீது தோற்றுகிற கொடிகளின் தோற்றமானது எப்படி யிருந்ததெனின்) அந்த கடிநகர்-அந்தக் காவலைக்கொண்ட மிதிலாநகரமாகிய பெண்ணானவள், மை அறு - குற்றமற்ற, மலரின் நீங்கி - தாமரை மலரினின்று நீங்கி, யான்செய் - நான்செய்த, மாதவத்தின் - பெரிய தவத்தினால், செய்யவள் - திருமகள், வந்து இருந்தாள் என்று - வந்து என்னிடத்திலிருக்கிறாள் என்று, செழுமணி - செழுமையான ரத்நங்களிழைத்துச் செய்யப்பட்ட, கொடிகள் என்னும் - கொடிகளென்கிற, கைகளைநீட்டி - கைகளை உயர எடுத்து, கமலம்செங் கண் - செந்தாமரை மலர்போன்ற கண்களையுடைய, அய்யனை - ஸ்ரீராமபிரானை, ஒல்லை - விரைவாக, வாவென்று அழைப்பது - வாவென்றழைத்தலை, போன்றது - ஒத்திருந்தது—எ-று. (க)

கொடியாடு தோற்றம், அந்த நகரமாகியபெண் என் தவப்பேற்றால் திருமகள் என்னிடத்தில் வந்திருக்கிறாள் ஆதலால் நீ விரைவில் வருவாயென்று, தன் கைகளை உயர எடுத்து ஸ்ரீராமபிரானை யழைப்பதை யொத்திருந்தது என்பது கருத்து.

கொடிகள் அரம்பாஸ்த்ரீகளைப்போல நடனஞ்செய்தனவென்பது.

564. நிரம்பிய மாடத்தும்பர் நிரைமணிக் கொடிகளெல்லாம்
தரம்பிற ரின்மையுன்னித் தருமமே தூதுசெல்ல
வரம்பில்பே ரழகினாளை மணஞ்செய்வான் வருகின்றானென்
றரம்பையர் விசும்பினாடு மாடலி னாடக்கண்டார்.

(இ-ள்.) தரம்பிறர் இன்மை உன்னி - தகுதியானவர்கள் வேறொருவருமில்லாமையை நினைத்து, தருமமே தூதுசெல்ல - தருமதேவதையே தூதுபோயழைக்க, வரம்பு இல் - அளவில்லாத, பேரழகினாளை - கட்டழகியாகிய சீதையை, மணஞ் செய்வான் - மணஞ் செய்துகொள்ளத் தகுதியான ஸ்ரீராமபிரான், வருகின்றான் என்று - வருகிறானென்று (மகிழ்ந்து) அரம்பையர் - ரம்பாஸ்த்ரீகள், விசும்பின் ஆடும் ஆடலின் - ஆகாயத்திலாடுகிற ஆடலைப்போல, நிரம்பியமாடத்து உம்பர் - தொழில்முற்றிய மாளிகைகளின்மேல், நிரை - வரிசையாயிராநின்ற, மணிகொடிகள் எல்லாம் - ரத்நகசிதமான கொடிகளெல்லாம், ஆட - ஆடுதலை, கண்டார் - பார்த்தார்கள்—எ-று. (உ)

ஆடக்கண்டார் என்பதற்கு, ஆட அவ்வாடலைப்பார்த்தார்கள் எனினும் பொருந்தும்.

யானைகள் போர்புரிவதைக் கண்டனரென்பது.

565. தயிருறு மத்திற்காம சரம்படத் தலைப்பட்டூடும்
உயிருறு காதலாரி னொன்றையொன் றொருவகில்லா
செயிருறு மனத்தவாகித் தீத்திரள் செங்கண்சிந்த
வயிரவான் மருப்பியானை மலையென மலைவகண்டார்.

(இ-ள்.) தயிர் உறும் - தயிரினிடத்துநின்ற, மத்தின் - மத்தைப்போல, காமன் சரம்பட - மன்மத பாணங்கள் வந்துபடுதலால், தலைப்பட்டு - அவற்றிலகப்பட்டு, ஊடும் - பிணங்குகிற, உயிர் உறுகாதலாரின் - உயிர்போன்ற ஸ்த்ரீபுருஷர்களைப்போல, வயிரம் - வயிரம்போன்ற, வால் - வெண்மையான, மருப்பு - கொம்புகளையுடைய, யானை - யானைகள், ஒன்றை ஒன்று ஒருவகில்லா - ஒன்றையொன்று நீங்காதனவும், செயிர் உறும்மனத்த - கோவமிருந்த மனத்தையுடையனவும், ஆகி - ஆகி, செங்கண் - செவந்த கண்களில், தீதிரள்சிந்த - நெருப்புத்திரள் சிந்தும்படி, மலையென - மலைகள் ஒன்றோடொன்று சண்டைசெய்தல்போல, மலைவ - சண்டைசெய்வனவற்றை, கண்டார் - பார்த்தார்கள்—எ-று. (ங)

தயிர் உறும் மத்தின் என்பதற்கு தயிரானது தன்னிடத்துப் பொருந்திக் கலக்குகிற மத்தினாலுடைபட்டுக் கலங்குதல்போல எனினும், வயிரவான் மருப்பு என்பதற்கு வயிரமேறிய முதிர்ந்தகொம்பு எனினும் பொருந்தும்.

கொடிகள் ஆடக்கண்டனரென்பது.

566, பகற்கதிர் மறையவானம் பாற்கடல் கடுப்பநீண்ட
துகிற்கொடி மிதிலைமாடத் தும்பரிற் றுவன்றிநின்ற
முகிற்குலந் தடவுந்தோறு நனைவன முகிலிற்சூழ்ந்த
அகிற்புகை கதுவுந்தோறும் புலர்வன வாடக்கண்டார்.

(இ-ள்.) பகல்கதிர்மறைய - சூரியகிரணங்கள் மறையவும், வானம் - ஆகாயமானது, பாற்கடல்கடுப்ப - பாற்கடலையொத்துத் தோன்றவும், மிதிலை - மிதிலா நகரத்திலுள்ள, மாடத்து உம்பரில் - மாளிகைகளின்மேல், துவன்றிநின்ற - நெருங்கி

திற்பனவாகிய, நீண்ட துகில்கொடி - நீண்ட வெண்கொடியாடைகள், முகில் குலம்- மேகக்கூட்டத்தை, தடவுந்தோறும் - தீண்டுந்தோறும், நனைவன - நனைந்தும், முகிலின்சூழ்ந்த - மேகம்போல வளர்ந்த, அகில்புகை - அகிற்புகையானது, கதுவுந்தோறும் - படுந்தோறும், புலர்வன - புலர்ந்தும், ஆடகண்டார் - ஆடுதலைப் பார்த்தார்கள்—எ-று. (ச)

பாற்கடல் கடுப்பவென்றதனால் கொடி யென்பதற்கு வெண்கொடியெனப் பொருள் கூறப்பட்டது.

மிதிலாநகரத்திற்குள் பிரவேசித்தனரென்பது.

567. ஆதரித் தமுதிற்கோல்தோய்த் தவய மமைக்குந்தன்மை
யாதெனத் திகைக்குமல்லான் மதனற்கு மெழுதவொண்ணாச்
சீதையைத் தருதலாலே திருமக ளிருந்தசெய்ய
போதெனப் பொலிந்துதோன்றும் பொன்மதின் மிதிலைபுக்கார்.

(இ-ள்.) ஆதரித்து - விரும்பி, அமுதில் - அமிர்தத்தில். கோல் தோய்த்து - எழுதுகோலைத் தோய்த்து, அவயவம் அமைக்கும் தன்மை - அவயவங்களைச் சித்திரிக்கும் வகை, யாது என - யாதென்று, திகைக்கும் அல்லால் - திகைப்பானேயன்றி, மதனற்கும் - (சிறந்த அழகுள்ள) மன்மதனாலும், எழுதவொண்ணா-சித்திரிக்கக்கூடாத, சீதையை - சீதாபிராட்டியை, தருதலாலே - கொடுத்தலாலே, திருமகள் இருந்த - திருமகள் வாசம்பண்ணுகிற, செய்யபோது என - செந்தாமரை மலர் போல, பொலிந்து தோன்றும் - பொலிந்து காணப்படுகிற, பொன்மதில் பொன் மதில்சூழ்ந்த, மிதிலை - மிதிலாநகரத்தில், புக்கார் - பிரவேசித்தார்கள். (இ)

திகைக்கும் என்பது உயர்திணை யாண்பாற்படர்க்கை யொருமை வினைமுற்றாகிய செய்யுமென்முற்று.

நெடியவீதியிற் சென்றனரென்பது.

568 சொற்கலை முனிவனுண்ட சுடர்மணிக் கடலுந்துன்னி
அற்கலந் திலங்குபன்மீ னரும்பிய வானும்போல
விற்கலை நுதலினாரு மைந்தரும் வெறுத்துநீத்த
பொற்கலன் கிடந்தமாட நெடுந்தெரு வதனிற்போனார்.

(இ-ள்.) சொல்-சொற்களாலாக்கப்பட்ட, கலை - கலைகளையுணர்ந்த, முனிவன்- அகஸ்தியமுனிவன், உண்ட - உண்ணப்பட்ட, சுடர் - பிரகாசிக்கிற, மணி - ரத்நங்களையுடைய, கடலும் - சமுத்திரத்தையும், துன்னி-நெருங்கி, அல்கலந்து இலங்கு- இராக்காலத்திற் பொருந்தி விளங்குகிற, பல்மீன் - பல நக்ஷத்திரங்கள், அரும்பிய- தோன்றிய, வானும் - ஆகாயத்தையும், போல - ஒத்திருக்க, வில்கலை - ஒளி பொருந்திய சந்திரகலைபோன்ற, நுதலினாரும் - நெற்றியையுடைய மாதரும், மைந்தரும் - ஆடவரும், வெறுத்துநீத்த-வெறுத்து நீக்கின, பொன்கலன் - பொன்னாபரணங்கள், கிடந்த - கிடந்த, மாடம் - மாளிகைகள் சூழ்ந்த, நெடுதெருவதனில் - நீண்ட வீதியில், போனார் - போனார்கள்—எ-று. (சு)

வில் கலை நுதலினாரும் என்பதற்கு வில்லின் தன்மையைக் கெடுக்கின்ற நுதலையுடையவரும் எனினும் பொருந்தும். நீர்வற்றினகாலம் என்பது தோன்ற, சுடர் மணிக்கடலென்றார், கொள்வாரில்லாமையால் கிடந்தவென்றார். இதனால் செல்வ மிகுதி கூறப்பட்டது.

அகஸ்தியர் கடலையுண்ட விவரம். தேவேந்திரனுக்கும் விருத்திராசுரனுக்கும் சண்டை நேர்ந்தபோது அவ்வசுரன் தோற்றோடிக் கடலிலொளித்துக்கொண்டான், அக்கடல் நீர்வற்றினாலன்றி அவனை வெல்லக்கூடாமலிருந்ததனால் அகத்தியரைப் பிரார்த்திக்க, அவர் கடல்நீரையெல்லாம் உழுந்தளவாக்கி யுட்கொண்டாரென்பது கதை.

569. தாறுமாய் தறுகட்குன்னத் தடமத வருவிதாழ்ப்ப
ஆறுமாய்க் கலினமாவி லாழியா லழிந்தோராறாய்ச்
சேறுமாய்த் தேர்களோடத் துகளுமா யொன்றேடொன்று
மாறுமா றாகிவாளாக் கிடக்கிலா மறுகிற்சென்றார்.

(இ-ள்.) தாறுமாய் - இருப்புமுள்ளை முறிக்கின்ற, தறுகண்குன்றம் - யானைகள், தடம் - பெரிய, மதம் - மதநீராலுண்டாகிய, அருவிதாழ்ப்ப - அருவிகளைப் பொழிவதனால், ஆறும் ஆய் - மதவாறுகளுமாகி, கலினம் - கடிவாளம்பூட்டிய, மா - குதிரைகளின், விலாழியால் - வாய்நுரையால், அழிந்து - (அவ்வாற்றின் தன்மை) கெட்டு, ஓர் ஆறாய் - வேறுவித ஆறுபோலாகி, சேறும் ஆய் - சேறுமாகி, தேர்கள் ஓட-தேர்களோடுதலால், துகளும் ஆய் - புழுதியுமாகி, ஒன்றோடு ஒன்று - (இவ்வாறு) ஒன்றுடனொன்று, மாறுமாறு ஆகி - மாறுபடுவதாகி, வாளாகிடக்கிலா - இருந்த இருப்பிலிராத, மறுகில் - வீதியில், சென்றார் - போனார்கள்—எ-று.

தாறுபாய் எனப் பாடமோதி தாற்றினால் குத்தப்பட்ட எனப் பொருளுரைப்பாருமுளர். "தாறுமாய் தறுகட்குன்றம்" என்றமையால் யானையென்றனம், தாறு மிகவும் மதங்கொண்ட யானை கவுளிலுள்ள சிறுதொளையில் சொருகும் இருப்புமுள்.

570. தண்டுத லின்றியொன்றித் தலைத்தலை சிறந்தகாதல்
உண்டபின் கலவிப்போரி னொசிந்தமென் மகளிரேபோல்
பண்டரு கிளவியார்தம் புலவியிற் பயுத்தகோதை
வண்டொடு கிடந்துதேன்சோர் மணிநெடுந் தெருவிற்சென்றார்.

(இ-ள்.) தண்டுதல் இன்றி - கெடுதலில்லாமல், ஒன்றி - ஒருமைப்பட்டு, தலைதலை - இருவரிடத்தும், சிறந்த காதல் - அதிகப்பட்ட காமசுகத்தை, உண்டபின் - அநுபவித்தபிறகு, கலவிப்போரின் - அந்தக் கலவிச்சண்டையால், ஒசிந்த-இளைத்த, மென்மகளிரேபோல் - மெல்லிய மாதரைப் போலவே, பண்தருகிளவியார் - பண்போன்ற மொழியையுடையபெண்கள், தம்புலவியில் - தமது உடலில், பரிந்த - நீக்கிவிட்ட, கோதை - பூமாலைகளும், வண்டொடுகிடந்து - வண்டுடன் கிடந்து, தேன்சோர் - தேனையொழுக்குகின்ற, மணி - அழகாகிய, நெடுநெருவில் - பெரிய வீதியில், சென்றார்-போனார்கள்—எ-று. (அ)

கோதை என்பத னிறுதியில் இறந்தது தழீஇய வெச்சவும்மை தொக்கது பண்தரு என்பதில் தரு உவமவுருபு. "வண்டொடு கிடந்து தேன்சோர்" என்றதனால், கோதை பூமாலை மேலதாயிற்று. கலவியி லிளைத்துக்கிடக்கிற மாதரைப் போலப் பூமாலைகள் வாடிக்கிடக்கின்றன வென்பது கருத்து.

நாட்டியப்பெண்களாடும் நாடகசாலைகளைக் கண்டாரென்பது.

571. நெய்திர ணரம்பிற்றந்த மழலையி னியன்றபாடல்
தைவரு மகரவீணை தண்ணுமை தழுவித்தூங்கக்

கைவழி நயனஞ்செல்லக் கண்வழி மனமுஞ்செல்ல
அய்யநுண் ணிடையாராடு மாடக வரங்குகண்டார்.

(இ-ள்.) நெய் - நெய்பூசப்பட்டு, திரள்-திரண்டிருக்கிற, நரம்பின்-நரம்போசை போல, தந்த-பேசப்பட்ட, மழலையி னியன்ற-மழலைச்சொல்லால் அமைந்த, பாடல்-பாடலானது, தைவரும் - விரலான் வருடப்படுகின்ற. மகரவீணை - மகரவீணையி னொலியுடனும், தண்ணுமை - முழவினொலியுடனும், தழுவி - இணங்கி, தூங்க-ஒத்திருக்கவும், கைவழி - (அபிநயிக்கிற) கையின்வழியே, நயனம்செல்ல-பார்வை செல்லவும், ஐயம் - (உண்டோ இன்றோவென்று) சந்தேகித்தற்குரிய, நுண் இடையார்-நுட்பமான இடையையுடைய நாட்டியப்பெண்கள், ஆடும் - ஆடுகின்ற, ஆடகம் - பொன்னாற் சமைக்கப்பட்ட, அரங்கு - நாடகசாலைகளை, கண்டார் - பார்த்தார்கள்.

மாதர்கள் ஊசலில் இருந்து ஆடக்கண்டனரென்பது.

572. பூசலி னெழுந்தவண்டு மருங்கினுக் கிரங்கிப்பொங்க
மாசுறு பிறவிபோல வருவது போவதாகிக்
காசறு பவளச்செங்காய் மரகதக் கமுகுபூண்ட
ஊசலின் மகளிர்மைந்தர் சிந்தையோ டுலவக்கண்டார்.

(இ-ள்.) பூசலின் - போருடன், எழுந்த - மேலெழுந்த, வண்டு - வண்டுகள் மருங்கினுக்கு - இடையின் மென்மையின்பொருட்டு, இரங்கிபொங்க - இரக்கமுற்று மிகவும் ஒலிக்கவும், மாசு உறு - குற்றமிகுந்த, பிறவிபோல - பிறப்புப்போல, வருவதுபோவது ஆகி - வருவதும் போவதுமாகி, காசு அறு - குற்றமற்ற, பவளம் - பவளத்தாற் செய்த, செங்காய் - செந்நிறமாகிய காய்களையுடைய, மரகதம் - மரகதமணியாற்செய்த, கமுகு - கமுகமரங்களில், பூண்ட - பூட்டப்பட்ட, ஊசலில் - ஊசல்களில், மகளிர் - மாதர்கள், மைந்தர் சிந்தையோடு-தானும் ஆடவர்களுடைய மனங்களுடன், உலவ - ஆடுதலை, கண்டார்-பார்த்தார்கள்—எ-று. (௰)

பிறவிபோல என்றது மேல்கீழாய் வருதலை. மைந்தர் என்றது தத்தங் கணவரை, அன்றி பாலியரையெனினும் பொருந்தும்.

கடைவீதியைக் கண்டனரென்பது.

573. வரப்பறு மணியும்பொன்னு மாரமுங் கவரிவாலும்
சுரத்திடை யகிலுமஞ்ஞைத் தோகையுந் தும்பிக்கொம்பும்
குரப்பணை நிரப்புமள்ளர் குவிப்புறக் கரைகடோறும்
பரப்பிய பொன்னியன்ன வாவணம் பலவுங்கண்டார்.

(இ-ள்.) வரப்பு அறுமணியும்-அளவற்ற இரத்தினங்களும், பொன்னும் - பொன்னும், ஆரமும் - முத்தும் கவரிவாலும் - கவரி மிருகத்தின்வாலும், சுரத்திடை அகிலும் - பாலைநிலத்திலுண்டாகிய அகிற்கட்டைகளும், மஞ்ஞை தோகையும் - மயிற்பீலியும், தும்பிகொம்பும் - யானைத்தந்தங்களும், (ஆகிய இவைகளை) குரப்பு அணை - செய்கரைகளாகிய அணைகளாக, நிரப்பும் - நிரம்பச்செய்யும், மள்ளர் - மள்ளர்கள் குவிப்புற-குவிக்க, கரைகள்தோறும் - கரைகளிலெல்லாம், பரப்பிய பரம்பச்செய்த, பொன்னி அன்ன - காவிரியையொத்த, ஆவணம்பலவும் - கடைகள் பலவற்றையும், கண்டார் - பார்த்தார்கள்—எ-று. (௧௧)

வரம்பு குரம்பு என்பன வரப்பு குரப்பு என வலித்தல்பெற்றன.

மாதர்கள் பாடும் பாடலாகிய தேனைச் செவிமடுத்துச் சென்றனரென்பது.

574. வள்ளுகிர்த் தளிர்க்கைநோவ மாடகம் பற்றிவார்ந்த
கள்ளென நரம்புவீக்கிக் கண்ணொடு மனமுங்கூட்டி
வெள்ளிய முறுவல்தோன்ற விருந்தென மகளிரீய்ந்த
தெள்விளிப் பாணித்தீந்தேன் செவிமடுத் தினிதுசென்றார்.

(இ-ள்.) வள் உகிர் - கூர்மையாகிய நகங்களையுடைய, தளிர்கை - தளிர்போன்ற விரல்கள், நோவ - நோகும்படி, மாடகம்பற்றி - முறுக்காணிகளைப்பற்றி, வார்ந்த- ஒழுகாநின்ற, கள் என - மதுவைப்போல, நரம்புவீக்கி - நரம்புகளை வலியுறுத்தி, கண்ணொடுமனமும் கூட்டி - கண்ணுடன் மனத்தையுஞ் சேர்த்து, வெள்ளிய முறுவல்தோன்ற - வெண்மையாகிய பற்கள் சிறிது தோன்றும்படி, விருந்து என-விருந்தினரென்று, மகளிர் ஈய்ந்த - மாதர்கள் கொடுத்த, தெள்விளி - தெளிந்த இசையோடுகூடிய, பாணி - பாடலாகிய, தீ தேன் - மதுரமாகிய தேனை, செவி மடுத்து- காதுகளாகிய வாய்களாலுண்டு, இனிது சென்றார் - இனிதாகப்போனார்கள்.

கைமுதலாகுபெயர், விருந்து பண்பாகுபெயர்.

குதிரைகள் சுழன்றோடுவதைக் கண்டனரென்பது.

575. கொட்புறு கலினப்பாய்மா குலான்மகன் முடுக்கிவிட்ட
மட்கலத் திகிரிபோல வாளியின் வருவமேலோர்
நட்பினி னிடையறுவாய் ஞானிக ளுணர்வினொன்றாய்க்
கட்புலத் திணையவென்று தெரிவில தெரியக்கண்டார்.

(இ-ள்.) கொட்டி உறு - சுழன்றோடுதல் மிகுந்த, கலினம் - கடிவாளம்பூட்டிய, பாய்மா-குதிரைகள், குலால்மகன் - குயவன், முடுக்கிவிட்ட - விரைவாகமுடுக்கின, மட்கலம் - மட்கலங்களைச் செய்தற்குரிய, திகிரிபோல - சக்கரம்போல, வாளியின் வருவ - வட்டமாயோடிவருவன, மேலோர் நட்பினின் - பெரியோர்களுடைய சிநேகம்போல, இடையறுவாய் - இடையில் நீங்காதனவாயும், ஞானிகள் உணர்வின் - ஞானவான்களுடைய அறிவைப்போல, ஒன்றாய் - ஒன்றாகியும், கண்புலத்து இணைய என்று தெரிவு இல் - கண்பார்வையால் இத்தன்மையன என்றுணரக் கூடாதவைகளாய், தெரிய - தோன்ற, கண்டார் - பார்த்தார்கள்—எ-று. (கரு)

தெரிவில பிறர்கண்ணுக்கு. இவர்கள் வாலறிவை யுடையார்களாதலால் தெரியக் காண்பாராயினர்.

மாளிகையின் சாளரந்தோறும் மாதர் இருக்கக் கண்டனரென்பது.

576. வாளரம் பொருதவேலு மன்மதன் சிலையும்வண்டின்
கேளொடு கிடந்தநீலச் சுருளுஞ்செங் கிடையுங்கொண்டு
நீளிருங் களங்கநீக்கி நிரைமணி மாடநெற்றிச்
சாளரந் தோறுந்தோன்றுஞ் சந்திர வுதயங்கண்டார்.

(இ-ள்.) வாள் - ஒளியுள்ள, அரம்பொருத - அரத்தினால் அராவப்பட்ட, வேலும் - வேலாயுதத்தையும், மன்மதன் சிலையும் - காமன் வில்லையும், வண்டின்கேளொடுகிடந்த - வண்டுக்கூட்டத்தோடு கிடந்த, நீலச்சுருளும் - நீலமணிச்சுருளையும், செங்கிடையும் - செங்கிடையையும், கொண்டு - தன்னிடத்துக்கொண்டு, நீள் இரு களங்கம் நீக்கி - மிகவும் பெரிய களங்கத்தை விலக்கி, நிரை - வரிசையாயிராநின்ற, மணி - ரத்நகசிதமான, மாடம் மாளிகைகளின், நெற்றி - உபரிபாகத்தி லிராநின்ற,

சாளரந்தோறும் - பல்கணிவாயில்கள்தோறும், தோன்றும் - காணப்படுகிற, சந்திர உதயம்-சந்திரோதயத்தை, கண்டார் - பார்த்தார்கள்—எ-று. (கச)

வேம் கண்களுக்கும், மன்மதன்சிலை; நெற்றிக்கும், நீலச்சுருள்; கூந்தலுக்கும், செங்கிடை; அதரத்துக்கும், சந்திரோதயம் முகவிகாசத்துக்கும் உவமை. செங்கிடை - செவந்தசடை.

ஊடியமாதரின் முகங்களைக் கண்டனரென்பது.

577. பளிக்குவள் ளத்துவார்த்த பசுநறுந் தேறன்மாந்தி
வெளிப்படு நகையவாகி வெறியன பிழற்றுகின்ற
ஒளிப்பினு மொளிக்கவொட்டா வூடலை யுணர்த்துமாபோல்
களிப்பினை யுணர்த்துஞ்செவ்விக் கமலங்கள் பலவுங்கண்டார்.

(இ-ள்.) பளிக்குவள்ளத்து - பளிங்குக்கிண்ணத்தில், வார்த்த - வார்க்கப்பட்ட, பசு - புதுமையான, நறு - நறிய, தேறல் - மதுவை, மாந்தி குடித்து, வெளிப்படும் - வெளியில்காணப்படுகின்ற, நகைய ஆகி - சிரிப்பையுடையனவாகி, வெறியெனபிழற்றுகின்ற - வெறிகொண்டவார்த்தைகளைப் பேசுகின்ற, ஒளிப்பினும் - ஒளித்தாலும், வொளிக்கவொட்டா-ஒளிக்கக்கூடாத, ஊடலை - பிணக்கத்தை, உணர்த்துமாபோல் - அறிவிக்குந்தன்மைபோல, களிப்பினை யுணர்த்தும் - களிப்பைத் தெரிவியாநின்ற, செவ்வி-அழகையுடைய, கமலங்கள்பலவும் - அநேகமான தாமரை மலர்களையும், கண்டார் - பார்த்தார்கள்— எ-று. (கரு)

கமலங்களென்றது மாதர்முகங்களை.

மாதர்மடந்தாடக் கண்டரென்பது.

578. மெய்வரு போகமொக்க வுடனுண்டு விலையுங்கொள்ளும்
பையர வல்குலார்த உள்ளமும் பளிங்கும்போல
மையரி நெடுங்கணோக்கம் படுதலுங் கருகிவந்து
கைபுகிற் செவந்துகாஸடுங் கந்துகம் பலவுங்கண்டார்.

(இ-ள்.) மெய்வரு - சரீரத்தால் வருகிற, போகம் - காமசுகத்தை, ஒக்க - சமமாக, உடன் உண்டு - ஆடவரொடு அநுபவித்து, விலையும்கொள்ளும் - மிகுதியாக விலையையும் வாங்கிக்கொள்ளுகிற, பை அரவு - பாம்பின்படத்தையொத்த, அல்குலார் - அல்குலையுடைய விலைமாதர்களுடைய, உள்ளமும் - மனத்தையும், பளிங்கும் - பளிங்குக்கல்லையும், போல - ஒப்ப, மை - அஞ்சனமெழுதிய, அரி - செவ்வரிபடர்ந்த, நெடுகண்நோக்கம் படுதலும் - நெடுமையாகிய கண்களின் பார்வைபடுதலோடும், கருகி - கறுத்து, வந்துகை புகின் - வந்துகையிற் பொருந்தின், செவந்துகாட்டும் - செவந்துகாட்டுகின்ற, கந்துகம்பலவும் - பலபந்துகளையும், கண்டார் - பார்த்தார்கள்—எ-று. (கசு)

கண்ணொளியால், கறுத்தும், கையொளியால், செவந்தும் காணப்படுகிற பந்துகளைக் கண்டார்களென்க. அல்குலார்தம் என்பதில் தம் - சாரியை.

மாதர்கள் சூதாடும் பலஇடங்களைக் கண்டன ரென்பது

579. கடகமுங் குழையும்பூணு மாரமுங் களிங்கநுண்ணூல்
வடகமு மகரயாழும் வட்டினி கொடுத்துவாசத்
தொடையலங் கோதைசோரப் பளிக்குநாய் செவப்பத்தொட்டுப்
படைநெடுங் கண்ணார்வட்டாட் டாடிடம் பலவுங்கண்டார்.

(இ-ள்,) கடகமும் - கைவளைகளும், குழையும் - காதணிகளும், பூணும் - வேறு பலபணிகளும், ஆரமும் - ரத்நஹாரங்களும், கலிங்கம் - வஸ்திரத்தாற் செய்த, நுண்நூல்வடகமும் - நுட்பமாகிய நூலாற்செய்த உத்தராசங்கமும், மகரயாழும் - மகரவீணைகளும், வட்டினிகொடுத்து - பந்தயமாகக்கொடுத்து, வாசம் - மணமுள்ள. தொடையல் - பூமாலையையணிந்த, அம் அழகிய, கோதை - அளகபாரம், சோர - அவிழும்படி, பளிக்குநாய் செவப்ப - பளிங்கினாற்செய்யப்பட்ட பாச்சிகை செவக்கும்படி, தொட்டு - பற்றியுருட்டி, படைநெடு கண்ணார் - வேற்படைபோன்ற நெடியகண்களையுடைய மாதர்கள், வட்டாட்டு ஆடு - சூதாட்டமாடுகிற, இடம்பலவும்-பல இடங்களையும், கண்டார் - பார்த்தார்கள்—எ-று. (௧௭)

மாதர் நீராடும் பலதடாகங்களைக் கண்டனரென்பது.

580. பங்கயங் குவளையம்பல் படர்கொடி வள்ளைநீலம்
செங்கிடை தரங்கங்கெண்டை சினைவரா லினைவரா லினையதேம்பத்
தங்கள்வே றுவமையில்லா வவயவந் தழுவிச்சாலும்
மங்கையர் விரும்பியாடும் வாவிகள் பலவுங்கண்டார்.

(இ-ள்.) பங்கயம் - தாமரைமலர்களும், குவளை - குவளைமலர்களும், ஆம்பல் - தெவ்வல்லிமலர்களும், படர்கொடிவள்ளை - படர்கிறவள்ளைக்கொடிகளும், நீலம் - நீலோற்பலமலர்களும், செங்கிடை - செங்கிடையும், தரங்கம் - அலைகளும், கெண்டை - சேல்மீன்களும், சினைவரால் - சினைவரால்மீன்களும், இனைய - இவைபோல்வன பிறவும், தேம்ப -(உவமையாகாமையால்வாட) வேறு உவமையில்லா - மற்றொருவமையில்லாத, தங்கள் அவயவம்தழுவி - தங்கள் அவயவங்களைத் தழுவிக்கொண்டு, சாலும் - நிறைந்த, மங்கையர் - மாதர்கள், விரும்பியாடும் - விரும்பி மூழ்குகின்ற, வாவிகள்பலவும் - பலதடாகங்களையும், கண்டார் - பார்த்தார்கள்—எ-று.

முகம், கண், வாய், காது, அதரம், வயிற்றின்வரை, கணைக்கால் ஆகிய இவ்வவயங்களுக்கு, மேற்கூறிய பங்கயம் முதலானவைகளை உவமானமாகக்கொள்க.

வாலிபர்கள் வாள் விளையாடுகின்ற பலஇடங்களைக் கண்டனரென்பது

581. இயங்குறு புலன்களங்கு மிங்குங்கொண் டேகவேகி
மயங்குபு திரிந்துநின்று மறுகுறு முணர்விதென்னப்
புயங்களிற் கலவைச்சாந்தும் புணர்முலைச் சுவடுநீங்காப்
பயங்கெழு குமரர்வாளாட் டாடிடம் பலவுங்கண்டார்.

(இ-ள்.) இயங்குறுபுலன்கள் - இயங்குகின்ற பஞ்சேந்திரியங்கள், அங்கும் இங்கும்கொண்டு ஏக - பலவிஷயங்களிற் கொண்டுசெல்ல, ஏகி - சென்று, மயங்குபுதிரிந்தும் - மயங்கித்திரிந்தும், நின்றும் - அவற்றில் நின்றும், மறுகுறும் - கலங்குகின்ற, உணர்வு இது என்ன - அறிவு இதுவென்றுசொல்லும்படி, புயங்களில் - தோள்களில், கலவைச்சாந்தும் - கலவைச்சந்தனமும், புணர் - நெருங்கிய, முலைச்சுவடும் - முலைத்தழும்பும், நீங்கா - நீங்காத, பயம்கெழு-வில்விகொடை முதலிய பயனோடுகூடிய, குமரர் - வாலிபர்கள், வாளாட்டு ஆடு - வாள்விளையாட்டாடுகிற, இடம்பலவும் - பல.இடங்களையும், கண்டார் - பார்த்தார்கள்—எ-று.

வயம்கெழு எனவும் பாடம், இதற்கு வெற்றிபொருந்திய என்பது பொருள்

பலகுணமுள்ள பாலியர்கள் கூட்டங்களைக் கண்டனரென்பது.

582. வெஞ்சின முருவிற்றென்னு மேனியர் வேண்டிற்றீயும்
நெஞ்சின ரீசன்கண்ணி னெருப்புறு வனங்கனன்னர்
செஞ்சிலைக் கரத்தர்மாதர் புலவிகள் திருத்திச்சேந்த
குஞ்சியர் சூழநின்ற மைந்தர்தங் குழாங்கள்கண்டார்.

(இ-ள்.) வெஞ்சினம் உருவு இற்று என்னும் - வெவ்வியகோவத்தினுருவம் இதுதானென்று சொல்லப்பட்ட, மேனியர் - சரீரமுள்ளவர்களும், வேண்டிற்று ஈயும்நெஞ்சினர் - (இரப்பவர்கள்) விரும்பினதைக் கொடுக்கின்ற இரக்கமுள்ளமனத்தை யுடையவர்களும், ஈசன்கண்ணின் நெருப்பு உறு அனங்கன் அன்னர் - சிவனது நெற்றிக்கண்ணின் தீப்பட்டு வேகாதமன்மதனையொத்தவர்களும், செஞ்சிலைக்கரத்தர் - செவ்விய வில்லேந்திய கையையுடையார்களும், மாதர்புலவிகள் - நாயகிமார்களுடைய ஊடல்களை, திருத்தி - நீக்குதலால், சேந்த - செவந்த, குஞ்சியர் - சிகையையுடையவர்களும், (ஆகி) சூழநின்ற - சூழ்ந்துநிற்கிற, மைந்தர்குழாங்கள் - பாலியர்களுடைய கூட்டங்களை, கண்டார் - பார்த்தார்கள்—எ-று. ()

மைந்தர் தம் என்பதில் தம் - சாரியை.

வேறு.

மாதர் மலர்கொய்துதிரியும் சோலைகளைக் கண்டனரென்பது.

583. பாக்கொக்குஞ்சொற் பைங்கிளியோடும் பலபேசி
மாகத்தும்பர் மங்கையர்நாண மலர்கொய்யும்
தோகைக்கொம்பி னன்னவர்க்கன்ன நடைதோற்றுப்
போகக்கண்டு வண்டினமார்க்கும் பொழில்கண்டார்.

(இ-ள்.) பாகு ஒக்கும்சொல் - சர்க்கரைப்பாகையொத்த (இனிய) சொற்களை, பைங்கிளியோடும் - பசியகிளிகளுடன், பலபேசி - பலபேசிக்கொண்டு, மாகத்து உம்பர் - சுவர்க்கலோகத்திலிருக்கிற, மங்கையர் - தெய்வப்பெண்கள், நாண - நாணும்படி, மலர்கொய்யும் - பூப்பறிக்கின்ற, தோகை - மயிற்சாயலையுடைய, கொம்பின் அன்னவர்க்கு - பூங்கொம்பு போல்பவராகியமாதர்க்கு, அன்னம் - (அங்குள்ள) அன்னப்பறவைகள், நடைதோற்றுபோகக்கண்டு - நடையால் தோற்றுதலைக்கண்டு, வண்டுஇனம்-வண்டுக்கூட்டங்கள், ஆர்க்கும் - (அவமதிப்பச்செய்து) ஆரவாரிக்கிற, பொழில்-சோலைகளை, கண்டார் - பார்த்தார்கள். (உக)

ஜநகமஹாராஜன் அரண்மனையைச்சூழ்ந்த மதிலின்புறத்து

வளைந்துள்ள அகழியைக் கண்டனரென்பது.

584. உம்பர்க்கேயும் மாளிகையோளி நிழல்பாய
இம்பர்த்தோன்றும் நாகர்தநாட்டி னெழில்காட்டிப்
பம்பிப்பொங்குங் கங்கையினாழ்ந்த படைமன்னன்
அம்பொற்கோயிற் பொன்மதிள்சுற்றும் மகழ்கண்டார்.

(இ-ள்.) உம்பர்க்கு - தேவர்களுக்கு, ஏயும் - தகுதியாகிய, மாளிகை ஒளி - மாளிகைவரிசையின், நிழல்பாய - சாயைபடிவதனால், இம்பர் - இவ்வுலகத்தில், தோன்றும் - காணப்படுகிற, நாகர்தம்நாட்டின் - தேவலோகத்தின், எழில்காட்டி - அழகைக்காட்டி, பம்பிபொங்கும் - அலைகள்நெருங்கிப் பொங்குகிற, கங்கையின் -

கங்கையைப்போல, ஆழ்ந்த - ஆழ்ந்திருக்கிற, படைமன்னன், சதுரங்கசேனையை யுடைய, (ஜநகமஹாராஜனது) அம் - அழகிய, பொன் - பொன்னினாற்சமைத்த, கோயில் - அரண்மனையின்புறத்து, பொன்மதிகள் சுற்றும் - பொன்மதிலைச் சூழ்ந்திருக்கிற, அகழ்கண்டார் - அகழியைப்பார்த்தார்கள்—எ-று. (உஉ)

பொன் மாளிகையின் சாயை நீரில்தோன்றுவது; பொன்னுலகின் சாயை தோன்றுவதுபோலு மென்பது கருத்து, ஆழ்ந்த என்னும் காரியப்பொருட்டாகிய இறந்தகாலப் பெயரெச்சம் அகழென்னும் செய்பவன் பெயர்கொண்டது.

கந்நிகாமாடத்தருகில் பெட்டை அன்னங்களுடன் ஆணன்னங்கூடி
விளையாடுகின்ற முன்றில்களைப்பார்த்து அங்குநின்றனரென்பது

585. பொன்னின்சோதி போதினுற்றம் பொலிவேபோல்
தென்னுண்டேனிற் றீஞ்சுவைசெஞ்சொற் கவியின்பம்
கன்னிம்மாடத் தும்பரின்மாடே கழிபேடோ
டன்னம்மாறு முன்றுறைகண்டங் கயனின்றார்.

(இ-ள்.) பொன்னின்சோதி பொலிவுபோல் - பொன்னினது பிரகாசப்பொலிவுபோலவும், பேதினில் நாற்றம் - (பொலிவுபோல்) மலரில் மணம்பொலிவுபோலவும், தென்உண் - அழகைக்கொண்ட, தேனின் தீஞ்சுவை (பொலிவுபோல்)- தேனினது அனியசுவைப் பொலிவுபோலவும், செஞ்சொல்கவியின்பம் - (பொலிவுபோல்) செஞ்சொற்க விரசத்தின் பொலிவுபோலவும், கன்னிமாடத்து உம்பரின் மாடு - கந்நிகாமாடத்தினருகில், கழி - அன்பின்மிக்க, பேடொடு - பெட்டையன்னங்களுடன், அன்னம் - ஆணன்னங்கள், ஆடும்-கூடிவிளையாடாநின்ற, முன்துறை- முன்றில்களை, கண்டு - பார்த்து, அங்கு அயல்நின்றார் - அவ்விடத்துச் சமீபமாய் நின்றார்கள்—எ-று. (உங)

இதுமுதல் சீதாபிராட்டி அங்குவந்ததையும் ஸ்ரீராமமூர்த்தி
அவளைக் கண்டதையுங் குறித்துச் சொல்லுகிறார்.

586. செப்புங்காலைச் செங்கமலத்தோன் முதல்யாரும்
எப்பெண்பாலுங் கொண்டுவமிப்போ ருவமிக்கும்
அப்பெண்டானே யாயினபோதிங் கயல்வேறோர்
ஒப்பெங்கேகொண் டெவ்வகைநாடி யுரைசெய்வோம்.

(இ-ள்.) செப்புங்காலை - சொல்லுமிடத்தில், செங்கமலத்தோன் முதல்யாரும் - பிரமதேவன்முதலான எல்லாரும், எ பெண்பாலும் கொண்டு - எந்திப்பெணபகுப்புக்கும் சிறப்பாகக்கொண்டு, உவமிப்போர் - உவமித்துச் சொல்லுவோர் உவமிக்கும் - உவமித்துச்சொல்லுகிற, அ பெண் - அந்தத்திருமகள், தானே ஆயினபோது - சீதாபிராட்டிதானேயாகி வந்திருக்கும்போது, இங்கு - இவ்விஷயத்தில், அயல் - அந்நியமாகிய, வேறு ஓர் ஒப்ப - வேறொருவமை, எங்குகொண்டு - எவ்வுலகத்தில் எடுத்து, எவ்வகைநாடி - எவ்வாறு நினைத்து, உரைசெய்வோம் - சொல்லுவோம்—எ-று. (உச)

எங்கே என்பதில் ஏ - அசை.

587. உமையாளொக்கும் மங்கையருச்சிக் கரம்வைக்கும்
கமையாண்மேனி கண்டவர்காட்சிக் கரைகாணார்

இமையாநாட்டம் பெற்றிலமென்றா ரிருகண்ணால்
அமையாதென்றா ரந்தரவானத் தவரெல்லாம்

(இ-ள்.) உமையாள் ஒக்கும்-பார்வதியும் அவளை ஒத்திருக்கும், மங்கைய-மாதர்களும், உச்சி-உச்சினால், கரம்வைக்கும் - கைகுவித்துத்தொழுதற்குரிய, பமையாள்-பொறுமையுடையவளாகிய சீதாபிராட்டியின், மேனி-திருமேனியழகை, கண்டவர்-பார்த்தவர்கள், காட்சி - அந்தக்காட்சியினது, கரை-எல்லையை, காணார் - காணாமல், (இவ்வுலகத்தார்) இமையாநாட்டம்-(இவ்வழகைப்பார்ப்பதற்கு) இமையாதகண்களை பெற்றிலம் என்றார் - பெற்றிலேம் நாமென்றார்கள், (இமையாநாட்டத்தையுடைய) அந்தரம் வானத்தவர் எல்லாம்-சுவர்க்கலோகத்தாராகிய தேவர்களெல்லாரும், இரு கண்ணால்-இரண்டுகண்களால், அமையாது-(இவ்வழகு) பார்த்துமுடியாது, என்றார்-என்றுசொன்னார்கள்—எ-று. (௨௫)

588. வென்றம்மானைத் தாரயில்வேலுங் கொலைவாளும்
பின்றம்மானப் பேர்கயலஞ்சப் பிறழ்கண்ணாள்
குன்றம்மாடக் கோவினளிக்குங் கடலன்றி
அன்றம்மாடத் தும்பரளிக்கும் மமுதன்னாள்.

(இ-ள்.) அம்-வலையிலகப்பட்ட, மானைவென்று - மான்பார்வையைச்செயித்து, தார்-வெற்றிமாலையைத்தரித்த, அயில்-கூர்மைபொருந்திய, வேலும்-வேலாயுதமும், கொலைவாளும் - கொலைத்தொழிலையுடைய வாளாயுதமும், பின்ற - பின்னிடவும், மானம்பேர்கயல் அஞ்ச - சிறந்த பெரிய சேல்மீன்கள் அஞ்சவும், பிறழ் - திரிகின்ற, கண்ணாள்-கண்களையுடையவளாகிய சீதாபிராட்டி, குன்றம்-மந்தரமலையானது, ஆட-சுழல, கோவின் அளிக்கும்-நாராயணனால் கொடுத்த, கடல் அன்றி - கடலல்லாமல், அன்று - அப்போது, அ மாடத்து உம்பர் - அந்தமாளிகையின்மேலிடம், அளிக்கும்-கொடுத்த, அமுது அன்னாள்-அமிர்தத்தையொத்தவள்—எ-று. (௨௬)

589. பெருந்தேரல்குற் பெண்ணிவளொப்பா ளொருபெண்ணை
தருந்தானென்றா னான்முகனின்னுந் தரலாமே
அருந்தாவந்தத் தேவரிரந்தா லமிர்தென்னும்
மருந்தேயல்லா தென்னினிநல்கும் மணியாழி.

(இ-ழ்.) பெருதேர்-பெரியதேர்த்தட்டினையொத்த, அல்குல்-அல்குலையுடைய, பெண்-பெண்ணாகிய, இவள் ஒப்பாள் - இவளையொப்பவளாகிய, ஒருபெண்ணை-ஒருபெண்ணினை, நான்முகன்தான்தரும் என்றால் - பிரமதேவன் சிருஷ்டிப்பானென்று எண்ணினால், இன்னும்தரல் ஆமே-இப்போதும் சிருஷ்டித்தல்கூடுமோ, மணி ஆழி-ரத்நாகரமாகிய திருப்பாற்கடலானது, ஆ தேவர்-அந்தத்தேவர்கள், அருந்தாவந்து-(முன்கிடைத்த அமிர்தத்தை) உண்டுவந்து, இரந்தால்-இரப்பார்களாயின், அமிர்து என்னும் - அமிர்தமென்றுசொல்லப்படுகிற, மருந்தேயல்லாது - மருந்தையேயன்றி, இனி என் நல்கும்-இனிவேறெத்தைக்கொடுக்கும்—எ-று. (௨௭)

திருமகள் தன்னிடத் திருந்தமையால் திருப்பாற்கடல் எல்லாச் செல்வங்களையுந்தந்தது, அவள் இங்குவந்துவிட்டதனால் இனி அமிர்தமொன்றையேயன்றி வேறெதையும் கொடாதென்பது கருத்து.

590. அனையாண்மேனி கண்டபினண்டத் தரசாளும்
வினையோர்மேவும் மேனகையாதி மிளிர்வேற்கண்
வினையோர்மேவும் மேனகையாதி மிளிர்வேற்கண்
பனிதோய்வானின் வெண்மதிக்கென் றும் பகலன்றே.

(இ-ள்.) அனையாள் - அந்தச் சீதாபிராட்டியின், மேனி-திருமேனியை, கண்ட பின்-பார்த்தபிறகு, (அந்தத்திருமேனியானது) அண்டத்தரசு ஆளும் - விண்ணுலகத்தை அரசாளுகின்ற, வினையோர் - தொழிலையுடைய இத்திரன்முதலான தேர்வகள், மேவும்-விரும்புகின்ற மேனகை ஆதி-மேனகைமுதலாகிய, மிளிர்வேலகண்-பிரகாசிக்கிற வேல்போன்ற கண்களையுடைய, இனையோர் - இத்தமாதர்களி உள்ளத்து இன்னலினேர்-மனோதுக்கத்தையுடையார்களாதலால், தம்முகமென்னும் - அவர்தம் முகங்களென்கிற, பனிதோய் - குளிர்ச்சிபொருந்திய, வானின்-வெண்மதிக்கு-ஆகாயத்திலுள்ள வெள்ளிய சந்திரனுக்கு, என்றும் - இரவிலும்பகலிலும், பகல் அன்றே-சூரியனைப்போன்றிருக்கிறதல்லவா—எ-று. (உஅ)

சூரியனைக் கண்டு சந்திரன் ஒளிமழுங்குதல்போல, சீதாபிராட்டியின் திருமேனியழகைக்கண்டு மேனகைமுதலாகிய தெய்வப்பெண்களுடைய முகங்கள் இடையறுமல் மழுங்கின என்பது கருத்து.

591. மலர்மேனின்றிம் மங்கையிவ்வையத் திடைவைகப்
பலகாலுந்தம் மெய்நனிவாடும் படிநோற்ருர்
அலகோவில்லா வந்தணரோநல் லறமேயோ
உலகோ வானே வும்பர்கொலோவீ துணரேமால்.

(இ-ள்.) மலர்மேல்நின்று - தாமரைமலரினின்றும், (இறங்கி) இ மங்கை-இந்தப் பிராட்டி, இ வையத்திடை-இவ்வுலகத்தில், வைக-தங்கியிருப்பதற்கு, பலகாலும்-அநேகநாள்களும்,தம்மெய்-தம்முடைய சரீரங்கள், நனிவாடும்படி-மிகவும்வாடும்படி நோற்ருர்-தவஞ்செய்தவர்கள், அலகு இல்லா - அளவற்ற, அந்தணரோ - அந்தணர்களோ, நல் அறமேயோ - நல்லதருமதேவதைதானே' உலகோ - இவ்வுலகமோ, வானே- விண்ணுலகோ, உம்பர்கொலோ - பிரமன் முதலானவர்களோ, ஈது உணரேம்-இதன்காரணத்தை யறிகிலேம்—எ-று. (உகூ)

அலகோ என்பதில் ஓ-அசை.

592. தன்னேரில்லா மங்கையர்செங்கைத் தளிர்மானே
அன்னேதேனே யாரமிர்தேயென் றடிபோற்ற
முன்னேமுன்னே மொய்ம்மலர்தூவி முறைசாலப்
பொன்னேசூடும் பூவினெதுங்கிப் பொலிகின்ருள்.

(இ-ள்.)தன் நேர் இல்லா - தனக்கிணையாகாத, மங்கையர் - மாதர்கள், செங்கை தளிர்மானே - செவந்தகைகளாகிய தளிர்களையுடையமானே, அன்னே - தாயே, தேனே - தேனே, ஆர் அமிர்தே - அரிய அமிர்தமே, என்று - என்றுபுகழ்ந்து, அடி போற்ற - அடிவணங்க, முன்னே முன்னே - எதிரிடங்களிலெல்லாம், மொய்-இதழ் நெருங்கிய, மலர்தூவி-மலர்களைச்சொரிந்து, முறைசால-முறைமையாக நிரம்பிநிற்க, பொன்சூழும் பூவின்-பொன்னிறமே நிரம்பிய பூவில்நடப்பதுபோல, ஒதுங்கிபொலிகின்ருள்-நடந்துவிளங்குகின்ருள்—எ-று. (௩௦)

593. பொன்சேர்மென்காற் கிண்கிணியாரம் புனையாரம்
கொன்சேரல்குன் மேகலைதாங்குங் கொடியன்னார்
தன்சேர்கோலத் தின்னெழில்காணச் சதகோடி
மின்சேவிக்க மின்னரசென்னும் படிநின்றாள்.

(இ-ள்.) பொன்சேர்-அழகுசேர்ந்த, மெல் -மெல்லிய, கால்-பாதங்களில், கிண்கிணி-கிங்கிணிகளையும், ஆரம் - முத்துவடங்களையும், புனை - அலங்கரிப்பதற்குரிய, ஆரம்-பதக்கங்களையும், கொன்சேர்-பெருமைபொருந்திய, அல்குல் - அல்குலினிடத்தில், மேகலை - மேகலாபரணத்தையும், தாங்கும் - தாங்கிய, கொடி அன்னார் - பூங்கொடியையொத்தமாதர்கள், தன்-தனது, சேர் - திரண்ட, கோலத்து இன் எழில்--அலங்காரசௌந்தரியத்தை, காண-பார்த்தற்காக, சதகோடிமின் - நூறுகோடிமின்னல்கள், சேவிக்க-சேவிக்கும்படி, மின் அரசு என்னும்படி-மின்னரசுநின்றதென்று சொல்லும்படி, நின்றாள்-நின்றனள்—எ-று. (௬௧)

594. சொல்லும்வேலுங் கூற்றமுமென்னும் மிவையெல்லாம்
வெல்லும்வெல்லும் மென்னமதர்க்கும் விழிகொண்டாள்
சொல்லுந்தன்மைத் தன்றதுகுன்றுஞ் சுவருந்திண்
கல்லும்புல்லுங் கண்டுருகப்பெண் கனிநின்றாள்.

(இ-ள்.) கொல்லும் வேலும் - கொல்லுகின்ற வேலும், கூற்றமும் - கூற்றும், என்னும்-என்றுசொல்லப்படுகிற, இவை எல்லாம்-இவைகளெல்லாவற்றையும், வெல்லும்வெல்லும்-ஜெயிக்கும்ஜெயிக்கும்,என்ன-என்றுசொல்லும்படி, மதராக்கும்-களிக்கின்ற, விழிகொண்டாள்-கட்பார்வையைக்கொண்டவள். அது-அவளதுநிலை, சொல்லும்தன்மைத்து அன்று - சொல்லப்படுந்தன்மையை யுடையதல்ல, (என்னெனின்) குன்றும்-மலைகளும், சுவரும்-சுவர்களும், திண்கல்லும்- திண்ணியகற்களும், புல்லும்-புல்லும், கண்டு உருக-பார்த்து உருகும்படி, பெண்கனி-பெண்ணுருக்கொண்டகனி போல்பவளாகிய சீதாபிராட்டி, நின்றாள்-நின்றனள்—எ-று. (௬௨)

அடுக்குத்துணிவுப்பொருளது.

வே று.

595. வெங்களி விழிக்கொரு விழவு மாயவர்
கண்களிற் காணவே களிப்பு நல்கலால்
மங்கையர்க் கினியதோர் மருந்து மாயவள்
எங்கணா யகற்கினி யாவ தாங்கொலோ.

(இ-ள்.) வெங்களிவிழிக்கு - விருப்பத்தைத்தருகின்ற மதர்ப்பையுடையமாதர்களுடைய கண்களுக்கு, ஒருவிழவும்-ஒருதிருவிழாவும் ஆயவர்கண்களில் காணவே-ஆகியமங்கையர்கள் கண்களால்பார்க்கவே, களிப்புநல்கலால் - களிப்பைத்தருவதனால், மங்கையர்க்கு - மாதர்களுக்கு, இனியது - இனிதாகிய, ஓர்-ஒப்பற்ற, மருந்தும் ஆயவள்-அமிர்தமுமானவள், இனி - இனிமேல், எங்கள்நாயகற்கு-எமதுதலைவனாகிய ஸ்ரீராமபிரானுக்கு, யாவது ஆம்கொல்-எந்தச்சிறந்தபொருளாவளோ—எ-று. (௬௩)

சீதாபிராட்டியின் அழகைக்கண்டு சிறந்த மாதர்களும் விரும்புகின்றார்களானால் ஆணிலக்கணஞ்சிறந்த ஸ்ரீராமபிரானுக்கு எத்தன்மையாகிய பொருளா என்பது கருத்து,

596. இழைகளுங் குழைகளு மின்ன முன்னமே
மழைபொரு கண்ணிணை மடந்தை மாரோடும்
பழகிய வெனினுமிப் பாவை தோன்றலால்
அழகெனு மணியுமோ ரழகு பெற்றவே.

(இ-ள்.) இழைகளும் - ஆபரணங்களும், குழைகளும் - காதணிகளும், இன்ன- ஆகிய இவைபோல்வன, முன்னமே - பிராட்டியார் அவதரிக்குமுன்பே, மழை- மழையை, பொரு-ஒக்கின்ற, கண்ணிணை-இரண்டுகண்களையுடைய, மடந்தைமாரொடும்-மாதர்களோடும், பழகிய எனினும் - பழகினவாயிருந்தாலும், இ பாவைதோன்றலால் - இந்தச் சீதாபிராட்டியார் அவதரித்தலால், அழகு என்னும் அணியும் - அழகென்றுசொல்லப்படுகிற அணிகளும், ஓர் அழகுபெற்ற-ஒருவிசேஷமான அழகைப் பெற்றன ஆயின—எ-று. (௩௪)

இழைகளும் குழைகளும் என்ன - எனவும்பாடம். அதற்கு இழைகளும் குழைகளும்போல என்பது பொருள். "அழகெனுமதுவும்" என்றும் பாடம். அதற்கு அழகென்கிற அந்தப்பொருளும் என்பது பொருள், அழகு பூர்வத்தில் இழைமுதலிய வடிவுகொண்டு மாதர்களாலணியப்பட்டு அவர்களுக் கழகுசெய்துவந்தன ஆயினும், இப்பொழுது பிராட்டி யவதரித்ததனால் இவளாலணியப்பட்டு, தாமும் ஒப்பற்றஅழகைப் பெற்றுக்கொண்டன என்பது கருத்து.

597. எண்ணரு நலத்தினா ளிணைய ணின்றுழி
கண்ணொடு கண்ணிணை கவ்வி யொன்றையொன்
றுண்ணவு நிலைபெறா துணர்வு மொன்றிட
அண்ணலு நோக்கினா னவளு நோக்கினாள்.

(இ-ள்.) எண் அரு-நினைத்தற்குமரிதான, நலத்தினாள்-அழகையுடையவளாகிய சீதாபிராட்டியார், இணையள்நின்றுழி-இத்தன்மையளாய்நின்றகாலத்தில், கண்ணொடு கண்ணிணை - ஒருவர்கண்களோடு மற்றொருவர்கண்ணிணை, கவ்வி - பற்றி, ஒன்றை- ஒன்று ஒன்றினை மற்றொன்று, உண்ணவும் - அநுபவித்துக்கொண்டிருக்கவும், நிலைபெறாது - தத்தமிடங்களில் நிலைபெற்றிராமல், உணர்வும் - இருவரறிவும், ஒன்றிட- ஒற்றுமைப்படும்படி, அண்ணலும்நோக்கினான்-ஸ்ரீராமபிரானும்நோக்கினர், அவளும் நோக்கினாள் சீதாபிராட்டியும் நோக்கினள்—எ-று. (௩௫)

பார்த்தற்கும் சொல்லுதற்குமே யன்றி நினைத்தற்குமரிய என்பது படநின்றமையின் எண்என்பதை னீற்றில் தொக்குநின்ற வும்மை இயந்தது தழீ இயது. எண் முதனிலைத் தொழிற்பெயர். இணைய நின்றுழி எனவும் பாடம். காமமேலீட்டையுடையராயினும் மாதர் ஆடவரை முன்புநோக்கலாகா தென்பதுதோன்ற அண்ணலும் நோக்கினா னவளும் நோக்கினாள் என்றார்· அண்ணலும் என்னுதும்மை உயர்வு சிறப்பு.

598. நோக்கிய நோக்கெனு நுதிகொள் வேலிணை
ஆக்கிய மதுகையான் றோளி னூந்தன
வீக்கிய கனைகழல் வீரன் செங்கணும்
தாக்கணங் கனையவள் தனத்திற் றைத்தவே.

(இ-ள்.) நோக்கிய நோக்கு என்னும் - (அவ்வாறு) பார்த்த (சீதாபிராட்டியின்) கண்களாகிய, நுதிகொள் - கூர்மையைக்கொண்ட, வேல் இணை - இரண்டு வேல்களும், ஆக்கியமதுகையான் - மிகுந்த புலசாலியாகிய ஸ்ரீராமபிரானுடைய,

தோளின்-புயங்களில், ஆழ்ந்தன-குளித்தன, வீக்கிய-கட்டப்பட்ட,கழைகழல்-ஒலிக்கின்ற வீரக்கழலையணிந்த, வீரன் - ரகுவீரனுடைய, செங்கண்ணும் - செந்தாமரை மலர்போன்றகண்களும், தாக்கணங்கு அனையவள் - திருமகளாகிய அந்தச் சீதாபிராட்டியின், தனத்தில்-தனங்களில், தைத்த-குளித்தன—எ-று.

இருவரும் ஓராவிற் கிருகோடு தோன்றினாற்போன்ற ஒத்த காமத்தினராயினர் என்பது கருத்து. தாக்கணங்கு அனையவள்-திருமகளையொத்தவளெனினுமாம்.

599. பருகிய நோக்கெனும் பாசத்தாற் பிணித்
தொருவரை யொருவர்தம் முள்ள மீர்த்தலால்
வரிசிலை யண்ணலும் வாட்க ணங்கையும்
இருவரு மாறிப்புக் கிதய மெய்தினர்.

(இ-ள்.) பருகிய-ஒருவரழகை யொருவரநுபவித்த, நோக்கு என்னும்-பார்வையென்கிற, பாசத்தால் பிணித்து-கயிற்றினாற்கட்டி, ஒருவரை-ஒருவரை, ஒருவர்-மற்றொருவருடைய, உள்ளம்-மனமானது, ஈர்த்தலால்-இழுத்தலால், வரி - கட்டமைந்த, சிலை - கோதண்டத்தையுடைய, அண்ணலும் - ஸ்ரீராமபிரானும், வாள் கண் - வாள்போன்ற கண்களையுடைய, நங்கையும் - சீதாபிராட்டியுமாகிய, இருவரும்-இருதிறத்தாரும், மாறிபுக்கு-மாறிப்புகுந்து, இதயம் எய்தினர், ஒருவரிதயத்தை யொருவரடைந்தார்கள்—எ-று. (௬௭)

அண்ணலுக்குச் சிலைபோல நங்கைக்கு வாள் எனச் சொன்னயங்காண்க.

600. மருங்கிலா நங்கையும் வசையி லையனும்
ஒருங்கிய விரண்டுடற் குயிரொன் றாயினர்
கருங்கடற் பள்ளியிற் கலவி நீங்கிப்போய்ப்
பிரிந்தவர் கூடினாற் பேசல் வேண்டுமோ.

(இ-ள்.) மருங்கு இல்லாநங்கையும் - இடைசிறியளாகிய சீதாபிராட்டியும்,வசை இல் ஐயனும்-குற்றமில்லாத ஸ்ரீராமபிரானும், ஒருங்கிய-ஒன்றுபட்ட, இரண்டு உடற்கு-இரண்டுசரீரங்களுக்கு, உயிர் ஒன்று ஆயினர் - ஒரு உயிரேயாயினர்கள், கருங்கடல்பள்ளியில்-பெரிய திருப்பாற்கடலில் சர்ப்பசயநத்தில், கலவி - கூடியிருத்தலை, நீங்கிப்பிரிந்துபோயவர்-நீங்கிப்பிரிந்து போனவர்கள், கூடினால்- மீட்டும் ஓரிடத்துக் கூடுவராயின், (அவர்களுக்குண்டாகும் விருப்பத்தை) பேசல் வேண்டுமோ - சொல்லுதல்வேண்டுமோ (சொல்லுதல்வேண்டா) (௬௮)

நங்கைக்கு மருங்கு இன்மையும் ஐயனுக்கு வசையின்மையும் ஒப்பென்பது சொன்னயமாயினும், நங்கைக்கு மருங்கு இன்மை சிறுமை மேலது. திருப்பாற்கடலாதலால் கருமை பெருமை மேலது. நீங்கிப்போய் பிரிந்தவர் என்பதை விகுதி முதலிய பிரித்துக் கூட்டிப் பொருள்கொள்க.

601. அந்தமி லழகனை யணைகி லாமையால்
பைந்தொடி யோவியப் பாவை போன்றனள்
சிந்தையு நிறையுமெய்ந் நலனும் பின்செல
மைந்தனு முனியொடு மறையப் போயினன்.

(இ-ள்.) அந்தம் இல் அழகினை-சொல்லி முடிவுகாணக்கூடாத அழகையுடைய ஸ்ரீராமபிரானை, அணைகிலாமையால் - அணையப்பெறாமையால், பைந்தொடி - பசிய

பொன்னினாற்செய்த வளையலையணிந்த சீதாபிராட்டியார், ஓவியப்பாவை போன்றனள்-சித்திரப்பாவைபோன் றசைவற்றிருந்தனர், மைந்தனும்- ஸ்ரீராமபிரானும், சிந்தையும்-பிராட்டியின்மனமும், நிறையும்-மனவுறுதியும், மெய்நலனும் - தேஹசௌந்தர்யமும், பின்செல- தன்னைப்பின்தொடர, முனியொடு - விசுவாமித்திரமுனிவனுடன், மறைய போயினன்-கண்மறையச் சென்றான்—எ-று. (௩௯)

நிறையாவது தனக்குள்ளே அடக்கத்தக்கவைகளை யடக்கியிருத்தல். ஆடூஉக்குண நான்கினொன்று. நான்காவன-அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி. மெய்நலனாவது-முகம், கண், கைமுதலிய அவயவங்களினழகு. சிந்தையும் நிறையும் பின்சேறலால் நாணத்தையும், மெய்நலன் பின்சேறலால் அழகின்பொலிவையும் இழந்தனளென்பது கருத்து.

602. பிறையெனு நுதலவள் பெண்மை யென்படும்
நறைகம ழலங்கலா னயன கோசரம்
மறைதலு மனமெனு மத்த யானையின்
நிறையெனு மங்குச நிமிர்ந்து போயதே.

(இ-ள்.) நறைகமழ்-வாசனைபரிமளிக்கிற, அலங்கலான் - பூமாலையை யணிந்த ஸ்ரீராமபிரான், நயநகோசரம் மறைதலும் - பிராட்டியின்கண்ணின் பார்வைக்குத் தோன்றுதல் மறைதலோடும், மனம் எனும்-அவளதுமனமென்கிற, மத்தயானையின் மதயானையினால், நிறை என்னும்- நிறையாகிய, அங்குசம்-தோட்டியானது, நிமிர்ந்து போயது-நிமிர்ந்து போயிற்று. (அவ்வாறானபோது) பிறைஎன்னும் நுதலவள்-பிறையென்று சொல்லுதற்குரிய நெற்றியையுடைய பிராட்டியின், பெண்மை-நாணம் முதலாகிய பெண்மைக்குணங்கள், என்படும்-என்னபாடுபடும்—எ-று. (௪0)

பெண்மைக்குணங்கள்-நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்பன, மதயானை நெறிகடந்து செல்லுங்கால், அதைத் தடுத்தற்பொருட்டு, பாகன் அதின்காதில் மாட்டியிழுத்தலால் அங்குசத்தின் வளைவுநிமிர்ந்து பயன்படாமற் போவதுபோல இவளது மனமாகிய மதயானையைத் தடுக்கப்புகுந்து நிறையென்னும் அங்குசம் நிமிர்ந்துபோயிற்றென்பது கருத்து.

603. மாலுற வருதலு மனமு மெய்யுந்தன்
நூலுறு மருங்குல்போ னுடங்கு வாணெடுங்
காலுறு கண்வழி புகுந்த காதனோய்
பாலுறு பிரையெனப் பரந்த தெங்குமே.

(இ-ள்.) மால்-ஆசையானது, உறவருதலும்-மிகுதியும் வந்தவுடன், தன்-தனது நூல் உறு-நூலிழைபோன்ற, மருங்குல்போல்-இடைமெலிவதுபோல, மனமும்-மனதும், மெய்யும்-சரீரமும், நுடங்குவாள்-மெலிகின்றவளாகிய சீதாபிராட்டியின்,நெடு-நெடிய, கால் உறு-வழியாயுள்ள, கண்வழி-கண்ணின்வழியாக, புகுந்த-உள்ளே பிரவேசித்த, காதல்நோய்-காமநோயாளது, பால் உறு-பாலிற்பொருந்திய, பிரை என-பிரையைப்போல, எங்கும்-மற்றப்பொறிகளிலும், பரந்தது-பரவிற்று—எ-று. (௪௧)

பிரை-குடத்திலுள்ள பாலையுறைவிக்கும் சிறுமோர்த்துளி.

604. நோமுறு நோய்நிலை நுவல கிற்றிலள்
ஊமரின் மனத்திடையுன்னி விம்முவாள்

காமனு மொருசரங் கருத்தி னெய்தனன்
வேமெரி யதனிடை விறகிட டென்னவே.

(இ-ள்.) நோம்-(அப்படிப்பரவினபினபு) வருந்துவாள், உறும் - ஒருகாலைக்கொருகால் மிகுகின்ற, நோய்-காமநோயின், நிலை-நிலையினை, நுவலகிற்றிலள்-ஒருவரோடும் சொல்ல வலியில்லாதவளாய், ஊமரின்-ஊமைகள்போல, மனத்திடை உன்னி-மனத்தில் நினைத்து, விம்முவாள்-அழாநின்றாள், (இவ்வாறிருக்கும்போது)வேம் எரிகிற, எரியதனிடை - நெருப்பில், விறகு இட்டென்ன - விறகிட்டாற்போல, காமனும்-மன்மதனும், ஒருசரம்-ஒரு தாமரைமலர்ப்பாணத்தை, கருத்தின் எய்தனன்-அவனது நெஞ்சில் பிரயோகித்தான்—எ-று. (சஉ)

பிராட்டி தன்னுள்ளே காமநோயுழந்தும் அதனை வாயினால் பிறர்க்குணர்தது மாற்ற லிலளாயினமையின், "ஊமரின்மனத்திடை யுன்னிவிம்முவாள்" என்றார். நினைப்பை மிகுவிக்கின்றமையானும், கருத்தின் எய்தனன் என்றமையானும், சரம் என்பதற்குத் தாமரைமலர்ப் பாணமென்று பொருள்கூறினோம்.

605. நிழலிடு குண்டல மதனி னெய்யிடா
அழலிடா மிளிர்ந்திடு மயில்கொள் கண்ணினாள்
சுழலிடு கூந்தலுந் துகிலுஞ் சோர்தரத்
தழலிடு வல்லியே போலச் சாம்பினாள்.

(இ-ள்.) நிழல் இடு-ஒளிவிடுகின்ற, குண்டலமதனின் - குழையின்மேற்சென்று, நெய் இடா-நெய்பூசாமலும், அழல் இடா-நெருப்பிலிட்டுக் காய்ச்சாமலும், மிளிர்ந்திடும்-ஒளிர்கின்ற, அயில்கொள்-வேல்போன்ற, கண்ணினாள்-கண்களையுடைய பிராட்டி, சுழலிடுகூந்தலும்-சுழித்தமுடித்த கூந்தலும், துகிலும்- வஸ்திரமும், சோர்தர-நெகிழ,தழல் இடு-நெருப்பிலிட்ட, வல்லியேபோல - பூங்கொடிவாடுதல்போலவே, சாம்பினாள்-வாடினாள்—எ-று. (சரு)

நெய்பூசாமலும் நெருப்பிலிட்டுக் காய்ச்சாமலும் ஒலிர்கன்ற வேலுளதாயின், அதை யொத்திருக்கிற கண்களை யுடையவளென்பது கருத்து. கொள் உவமவுருபு. அன்றி வெலின்றன்மையைத் தம்மிடத்துக் கொண்ட எனினும் பொருந்தும்.

606. தழங்கிய கலைகளு நிறையுஞ் சங்கமும்
மழுங்கிய வுள்ளமு மறிவு மாமையும்
இழந்தவ ளிமையவர் கடைய யாவையும்
வழங்கிய கடலென வறிய ளாயினாள்.

(இ-ள்.) தழங்கிய-ஒலியாநின்ற, கலைகளும்-மேகலைகளையும், நிறையும்-நிறையையும், சங்கமும்-கைவளைகளையும், மழுங்கிய உள்ளமும்-மழுங்கின மனத்தையும், அறிவும்-உணர்வையும், மாமையும்-இலாவண்ணியத்தையும், இழந்தவள்-இழந்து நிற்பவளாகிய பிராட்டி, இமையவர்கடைய-தேவர்கள் கடைந்திடுதலால், யாவையும்-(தன்னிடத்துள்ள) எல்லாப்பொருள்களையும், வழங்கிய - (அவர்களுக்குக்) கொடுத்த, கடல் என-திருப்பாற்கடல்போல, வறியள் ஆயினாள்-வறுமையுடையவளானாள். ()

நிறையும் என்பதனை சங்கமென்னும் பெயரைக்கொண்டு முடிவதாகிய பெயரெச்சமெனக் கொள்வாருமுளர்,

607. கலங்குழைந் துகநெடு நாணுங் கண்ணற
நலங்குழை தரநகின் முகத்தி னேவுண்டு
மலங்குழை யெனவுயிர் வருந்திச் சோர்தரப்
பொலங்குழை மயிலைக்கொண் டரிதிற் போயினர்.

(இ-ள்,) கலம்-ஆபரணங்கள், குழைந்து உக-நெகிழ்ந்துசிந்தவும், நெடுநாணும்-பெரிதாகிய நாணமும், கண் அற-தன்னிடம்பெயர்ந்தொழியவும், நலம் - நற்குணங்கள், குழைதர-நெகிழவும், நகில்முகத்தின்-ஸ்தநப்ரதேசத்தில், ஏ உண்டு- (மன்மதனது) சூதமலர்ப்பாணத்தினால் எய்யப்பெற்று, மலங்கு-(வேடன்கைப்பாணத்தினால்) வருந்துகிற, உழை என-மானைப்போல, வருந்தி சோர்தர - வருந்திவாட, (அதைக் கண்ட தோழிமார்கள்) பொலங்குழைமயிலை - பொற்குழையை யணிந்த மயிலொன்றுளதாயின் அதனை யொப்பவளாகிய சீதாபிராட்டியை, அரிதின்கொண்டு- அருமையாக அழைத்துக்கொண்டு, போயினர்-போனார்—எ-று. (சு௫)

கலம் குழைந்து உக என்பதற்கு ஆபரணங்கள் திருமேனி குழைந்து மெலிதலால் கழன்றுவிழ எனப்பொருள்கூறினு மமையும். இப்பொருட்குக் குழைந்து என்பதனைக் காரணப்பொருட்டாகிய செயவெனெச்சத் திரிபாகக்கொள்க. நகு இல் முகத்தின் எனப்பிரித்து, ஒளிர்தலில்லாத முகத்தினோடு எனப்பொருளுரைத்தலுமாம். நகில் முகத்தினென இடங்குறித்தமையான் ஏ என்பதற்குச் சூதமலர்ப்பாணமெனப் பொருள் கூறினோம்.

608. காதொடுங் குழைபொரு கயற்க ணங்கைதன்
பாதமுங் கரங்களு மனைய பல்லவத்
தாதொடுங் குழையொடு மடுத்த தண்பனிச்
சீதநுண் டுளிமல ரமளி சேர்த்தினர்.

(இ-ள்.) (இவ்வாறு அருமையாகக் கொண்டுபோனவர்கள்) காது-செவியினிடத்துள்ள, குழை-காதணியோடு, பொரு-போர்செய்கிற, கயல்கண்-சேல் மீன்போலுங் கண்களையுடைய, நங்கை-பிராட்டியின், பாதமும் - பாதங்களையும், கரங்களும் - கைகளையும், அனைய-ஒத்திராநின்ற, பல்லவத்தாதொடும்-மலர்த்தாதுகளுடனும், குழையொடும்-தளிர்களுடனும், அடுத்த - பொருந்திய, தண் - குளிர்ச்சியாகிய, பனிசீதம் நுண் துளி - பனியினது சீதளமும் நுட்பமுமமைந்த துளிகளைத் தெளித்த, மலர் அமளி-புஷ்பசயநத்தில், சேர்த்தினர்-சேர்த்தார்கள்-எ-று. (சுசு)

காதொடு மென்பதில் ஓடு இசைநிறை. தன் சாரியை.

609. நாளறு நறுமல ரமளி நண்ணினள்
பூளைவீப் புரைபனி புயற்குத் தேம்பிய
தாளதா மரைமலர் ததைந்த பொய்கையும்
வாளரா நுங்கிய மதியும் போலவே.

(இ-ள்.) பூளைவீபுரை-பூளைப்பூவையொத்த, பனிபுயல்கு-குளிர்ச்சியாகிய பனிக்கு, தேம்பிய-வாடிய, தாள-தண்டுகளின் கொடிகளை மேலுள்ள, தாமரை மலர்-தாமரைமலர்கள், ததைந்த-நெருங்கிய, பொய்கையும்-தடாகத்தையும், வாள்அரா நுங்கிய-ஒளிபொருந்திய இராகுப்பாம்பினால் விழுங்கப்பட்ட, மதியும்-சந்திரனையும், போல-

நிகர்க்க, நாள்-புதிய, அறுநறு-நீங்காதபரிமளத்தையுடைய, மலர் அமளி - புஷ்பசயநத்தை, நண்ணினாள்-அடைந்தாள்—எ-று. (சஎ)

தாமரைமலர் பனிக்கு வாடுத லியற்கையாதலால் "பனிபுயற்குத் தேம்பிய தாளதாமரைமலர் என்றார்."

610. மலைமிசைத் தடத்துகு மழைக்க ணாலிபோல்
முலைமுகட் டுதிர்ந்தன நெடுங்கண் முத்தினம்
சிலைநுதற் கடையுறை செறிந்த வேர்வுதன்
உலைமுகப் புகைநிமி ருயிர்ப்பின் மாய்ந்ததோ.

(இ-ள்.) மலைமிசைதடத்து-மலையினுச்சியில், உகும் - சிந்துகின்ற, மழைக்கண் ஆலிபோல்-மேகத்தினிடத்தவராகிய நீர்த்துளிகள்போல, முலைமுகட்டு-(சீதாபிராட்டியின்) முலைமுகட்டில், நெடுகண் - அவளுடைய நெடியகண்களினிடத் துண்டாகின்ற, முத்து இனம்-முத்துக்கூட்டங்கள், உதிர்ந்தன-சிந்தின, சிலை-வில்லையொத்த, நுதல்கடை - புருவத்தினது கடையில், உறை செறிந்த - மழைத்துளிகள்போல நெருங்கின, வேர்வு-வேர்வையானது, உலைமுகப்புகை - கொல்ல னுலைக்களத்தெழுகின்ற புகைபோல, நிமிர்-மிகுகின்ற, தன் உயிர்ப்பின்-தனது சுவாசத்தினால், மாய்ந்தது-வறண்டுபோயிற்று—எ-று. (சஅ)

மேகத்தினின்று முண்டாகின்ற நீர்த்துளிகள் மலையினுச்சியில் சிந்துவதுபோல சீதாபிராட்டியின் கண்களி லுண்டாகின்ற நீர்த்துளிகள், அவளது முலை முகட்டிற் சிந்தின, புருவக்கடையிலுண்டாகிற வேர்வையானது அவளது வெப்பமான சுவாசம் படுவதினால் வறண்டுபோயிற்று என்பது கருத்து. மழைக்கண் ஆலி என்பதற்கு, மேகத்தினது சிறுதொளையினின்றும் உதிர்கின்ற துளிகள் என உரைத்தலுமாம்.

611. கம்பமில் கொடுமனக் காம வேடன்கை
அம்பொடு சோர்வதோர் மயிலு மன்னவள்
வெம்புறு மனத்தனல் வெதுப்ப மென்மலர்க்
கொம்பென வமளியிற் குழைந்து சாய்ந்தனள்.

(இ-ள்.) கம்பல் இல் - சலநமில்லாத, கொடுமனம் - கடினமனத்தையுடைய, காமன்-மன்மதனாகிய, வேடன் - வேடனது, கை - கையாற் பிரயோகிக்கப்பட்ட, அம்பொடு-அம்பினால், சோர்வது - சோர்வதாகிய, ஓர் மயிலும் - ஒருமயில் விசேடத்தையும், அன்னவள் - ஒத்தவளாகிய பிராட்டி, வெம்பு உறு - கொதிக்கின்ற, மனத்து அனல்-மனத்திலுண்டாகிய காமாக்நியானது, வெதுப்ப - சுடுதலால், மெல்மலர் கொம்பு என-மென்மையாகிய பூங்கொம்பு - சாய்தல்போல, அமளியில் - சயநத்தில், குழைந்து சாய்ந்தனள்-வாடிச்சாய்ந்தாள்—எ-று. (சகூ)

மயிலும் என்னு மும்மை இறந்தது தழீஇயது. காமன் தன் கையம்புபட்டுத் துடிக்கு முயிர்கட்கிரங்காமை பற்றி கம்பம் இல் கொடுமனக்காமன் என்றார்.

612. சொரிந்தன நறுமலர் சுறுக்கொண் டேறின
பொரிந்தன கலவைகள் பொறியிற் சிந்தின
எரிந்தவெங் கனல்சுட விளைமையிற் கோத்ததால்
பரிந்தன கரிந்தன பல்ல வங்களே.

(இ-ள்.) சொரிந்தன-சயநத்தில் பரப்பினவாகிய, நறுமலர் - வாசனையுள்ள மலர்கள், சுறுக்கொண்டு ஏறின-சுறுக்கொண்டு உடம்பில்லைதத்தன, பொரிந்தன-பொரி

ந்தனவாகி, கலவைகள்-கலவைச்சந்தனங்கள், பொறியின் சிந்தின-நெருப்புப்பொறிகள் போலுதிர்ந்தன, எரிந்த - காய்ந்தெழுகின்ற, வெம்கனல்சுட-வெவ்விய காமத்தீச்சுடுதலால், இழையில் கோத்த நூல்-ஆபரணங்களில் கோத்திருக்கிறநூல்கள், பரிந்தன- அற்றுநீங்கின, பல்லவங்கள் - (சயநத்தில் பரப்பப்பட்டிருக்கிற) தளிர்கள், கரிந்தன-கரிந்துபோயின—எ-று. (௬௦)

613. தாதியர் செவிலியர் தாயர் தவ்வையர்
மாதுய ருழந்தனர் விழுந்து மாழ்கினர்
யாதுகொ லிதுவென வெண்ண றேற்றலர்
போதுட னயினிநீர் சுழற்றிப் போக்கினர்.

(இ-ள்.) தாதியர்-தாதிமார்களும், செவிலியர்-செவிலித்தாய்மார்களும், தாயர் - தாய்மார்களும், தவ்வையர்- தமக்கைமார்களும், மாதுயர்உழந்தனர் - பெருந்துயரத்திலுல்வருந்தி, விழுந்து - தரையில்விழுந்து, மாழ்கினர் - மயங்கினர்கள், இதுயாதுகொல் என-இது என்னையோவென்று, எண்ணல்தேற்றலர்-பிராட்டியின் கருத்தைத்துணியாதவர்களாய், போதுடன்-நாலுநிறமலர்களோடு கூடிய, அயினிநீர் - ஆராத்திநீரை, சுழற்றி-சுற்றி, போக்கினர்-கண்ணெச்சில் போக்கினர்கள்—எ-று. (௬௧)

பிராட்டியின் கருத்தறியாதவர்களாகையால் இவ்வாறு செய்தார்களென்பது கருத்து.

614. அருகினின் றசைக்கின்ற வால வட்டக்கால்
எரியினை மிகுத்திட விழையு மாலையும்
கரிகுவ தீகுவ கனல்வ காட்டலால்
உருகுபொற் பாவையு மொத்துத் தோன்றினள்.

(இ-ள்.) அருகில்நின்று-சமீபத்திலிருந்து, அசைக்கின்ற-தோழிமாராலசைக்கப்படுகிற, ஆலவட்டக்கால்-ஆலவட்டத்தாலுளதாகுங்காற்றானது, எரியினை-விரஹாக்கியை, மிகுத்திட-விருத்திசெய்ய, (அதனால்) இழையும்-ஆபரணங்களும், மாலையும் - பூமாலைகளும், கரிகுவ-கரிகின்றனவும், தீகுவ - தீகின்றனவும், கனல்வ - அழலுகின்றனவுமாக, காட்டலால்-தோற்றுவித்தலால், (பிராட்டி) உருகு - அழலிற்பட்டுருகாநிற்கிற, பொன்பாவையும் ஒத்து - பொற்பிரதிமையையும்போன்று, தோன்றினள்-காணப்பட்டாள்—எ-று. (௬௨)

615. அல்லினை வகுத்ததோ ரலங்கற் காடெனும்
வல்லெழு வல்லவோர் மரகதப் பெருங்
கல்லெனு மிருபுயங் கமலங் கண்ணெனும்
வில்லொடு மிழிந்ததோர் மேக மென்னுமால்

(இ-ள்.) (அந்த ஸ்ரீராமபிரானது தோளில்சாத்தியபூமாலை) அல்லினைவகுத்தது-இருளைப்பிரித்ததாகிய, ஓர் - ஒப்பற்ற, அலங்கல் - பூமாலையாகிய, காடு என்னும்-காடென்பாள், இருபுயம்-(அவருடைய) இரண்டுபுஜங்களும், வல் எழு அல்ல-வலிய தூண்களல்ல, பெரு-பெரிய, மரகதக்கல் - மரகதமலைகளே, என்னும் - என்பாள், கண் - கண்கள், கமலம்என்னும் - தாமரை மலர்களே என்பாள், வில்லொடும் - வில்லுடன், இழிந்தது-பூமியிலிறங்கினதாகிய, ஓர் மேகம் என்னும் - ஒருமேகந்தானென்பாள்—எ-று. (௬௩)

இழிந்தது என்றமையால் பூமியிலெனப்பட்டது,

616. நெருக்கியுட் புகுந்தரு நிறையும் பெண்மையும்
உருக்கியென் னுயிரொடு முண்டு போனவன்
பொருப்புறழ் தோள்புணர் புண்ணி யத்தது
கருப்புவில் லன்றவன் காம னல்லனே.

(இ-ள்.) நெருக்கி-நெருக்கி, உள்புகுந்து-என்மனத்தில்பிரவேசித்து, அருநிறையும்-அருமையாகிய நிறையையும், பெண்மையும்-பெண்டன்மையையும், உருக்கி-உருகப்பண்ணி, (அவற்றை) என் உயிரொடும் - என்பிராணனுடன், உண்டுபோனவன்-கிரத்துக்கொண்டுபோனவனது, பொருப்பு உறழ்-மலையொத்த,தோள்புணர்-தோள்களைச்சேர்தற்குரிய, புண்ணியத்தது-நல்வினைப் பயனநுபவிப்பது, கருப்புவில் அன்று-கரும்புவில் அன்று, (ஆதலால்) அவன்-அவனும், காமன் அல்லன் - மன்மதனல்லன்—எ-று. (௩௪)

அழகினால் மன்மதனோ வென்றெண்ணின பிராட்டி, அவன்தோளிலிருப்பது மூங்கில்வில்லே, கருப்புவில்லன்றென் றுணர்ந்து, அதனால் அவன் மன்மதனல்லனென்று தேறினாள் என்பதுகருத்து. மூங்கிலாற்செய்யப்பட்டவில் அவர்தோள்களைப் புணர்தற்குரிய புண்ணியஞ்செய்திருந்ததே, அதுவும் யாம்செய்திலமே யென்றிரங்கினாளென்பது குறிப்பு.

617. பெண்வழி நலனொடும் பிறந்த நாணொடும்
எண்வழி யுணர்வுநா னெங்குங் காண்கிலேன்
மண்வழி நடந்தடி வருந்தப் போனவன்
கண்வழி நுழையுமோர் கள்வ னேகொலாம்.

(இ-ள்.) பெண்வழி - பெண்பிறப்புக்குரிய, நலனொடும் - நற்குணங்களோடும், பிறந்த- கூடப்பிறந்த, நாணொடும் - நாணத்துடனும், எண்வழி - ஆராயுமிடத்தில், உணர்வும்-அறிவையும், நான் எங்கும் காண்கிலேன் - நானெப்பொறிகளிலும் கண்டிலேன், (ஆதலால்) மண்வழிநடந்து - மண்ணினிடத்து நடந்து, அடி - பாதங்கள், வருந்த - வருந்தும்படி, போனவன் - சென்றவன், கண்வழி - கண்வழியாக, நுழையும்-உள்ளே பிரவேசிக்க வல்லவனாகிய, ஓர்-ஒப்பற்ற, கள்வனேகொல் - கள்வன்தானோ—எ-று. (௩௫)

நலன்முதலியவை அவனைக் கண்டதுமுதல் காணப்படாமையால், அவன் கொண்டு போனானென வுட்கொண்டு இவ்வாறு கூறினாளென்பது கருத்து. மண்வழிநடந்து அடிவருந்த என்றமையான், அவனது அடிமண்வழிநடத்தற் குரியதன்றென்பதும், வேதமலர்வழியும் அன்பரது இதயமலர்வழியும் நடத்தற்குரிய தென்பதும் குறிப்பிக்கப்படுகின்றன.

618. இந்திர நீலமொத் திருண்ட குஞ்சியும்
சந்திர வதனமுந் தாழ்ந்த கைகளும்
சுந்தர மணிவரைத் தோளு மேயல
முந்தியென் னுயிரையம் முறுவ லுண்டதே.

(இ-ள்.) இந்திரநீலம் ஒத்து-இந்திரநீலரத்னத்தையொத்து,இருண்ட-கறுத்திருக்கிற, குஞ்சியும்-கேசமும், சந்திரவதனமும்-பூர்ண சந்திரனையொத்த முகமும், தாழ்ந்தகைகளும்-நீண்டகைகளும், சுந்தரம்-அழகையுடைய, மணிவரை-நீலமலைபோன்ற, தோளுமே அல்ல-புயங்களுமாகிய இவைகளே யல்ல, முந்தி - (இவைகளெல்லாவற்

றினு) முற்பட்டு, என் உயிரை உண்டது - என்னுயிரைக் கவர்ந்துகொண்டது, அம் முறுவலே-அழகுள்ள புன்னகையே—எ-று. (௬௬)

வதனம் என்றமையான் சந்திரன் என்பது பூர்ணசந்திரன் என்றனம். தாழ்ந் தகைகளென்றது முழந்தாளளவும் நீண்டு தொங்குங் கைகளை. அ முறுவல் எனப் பிரித்து அந்தப் புன்னகையெனக் கூறலுமாம்.

619. படர்ந்தொளி பரந்துயிர் பருகு மாகமும்
தடந்தரு தாமரைத் தாளுமே யல
கடந்தரு மதங்கலுழ் களிநல் யானைபோல்
நடந்தது கிடந்தன னுள்ள நண்ணியே.

(இ-ள்.) படர்ந்து-விசாலித்து, ஒளிபரந்து-ஒளிமிகுந்து, உயிர்பருகும் - என்னு யிரை யுண்ணுகின்ற, ஆகமும்-(அவருடைய) திருமார்பும், தடம்தரு - (மலர்களிற் சிறந்ததென் றுயர்த்துக் கூறப்படுகிற) பெருமையைக்கொண்டிருக்கிற, தாமரை-தாமரை மலர்போன்ற, தாளுமே-பாதங்களும் ஆகிய இவைகளே,அல்ல-(என்னுள்ள நண்ணிடக்கிடந்தன) அல்ல, (மற்றியாதெனின்) கடம்தருமதம்கலுழ் - கன்னமதம் ஒழுகப்பெற்ற, களி-மதச்செருக்கையுடைய, நல்-உத்தமலக்ஷணங்களமைந்த, யானை போல்-யானைநடந்தாற்போல, நடந்தது-(அவர்) நடந்த நடையானது, என்உள்ளம்-என்மனத்தில், நண்ணி-பொருந்தி, கிடந்தது-நீங்காதிராநின்றது—எ-று. (௬௭)

தடம் தரு என்பதற்கு, தடாகம் தந்த என்பாருமுளர். "பூவிற்குத்தாமரையே" என்பராதலால் யாம்கூறியதே சிறந்தபொருளாதலறிக.

620. உரைசெயிற் றேவர்தம் முலகுளா னலன்
விரைசெறி தாமரை யிமைக்கு மெய்ம்மையான்
வரிசிலைத் தடக்கையன் மார்பி னூலினன்
அரசிளங் குமரனே யாகல் வேண்டுமலால்.

(இ-ள்.) (இவன்) உரைசெயின்-சொல்லுமிடத்தில், தேவர் உலகு-தேவலோகத் தில், உள்ளான் அல்லன் - உள்ளவனாகிய ஒருதேவனல்லன், விரைசெறி - வாசனை மிகுந்த, தாமரை-தாமரைமலர்போன்ற கண்கள், இமைக்கும்-இமைக்கின்ற, மெய்ம் மையான்-உண்மையாலும், வரி - கட்டமைந்த, சிலை - வில்லேந்திய, தடம்கையன்-நீண்டகைகளை யுடையவனாயிருப்பதனாலும், மார்பில் நூலினன் - மார்பில் பூணூலை யுடையவனா யிருப்பதனானும், அரசிளங்குமரனே ஆகல் வேண்டும் - இளமைப்பருவ முள்ள ராஜகுமாரனே யாதல் தகுதியாகும்—எ-று. (௬௮)

தேவனென்று சந்தேகித்தவள் கண்ணிமைத்தல் முதலான குறிகளால் தேவ னல்லன்,மானுடரில் இராசகுமாரனே யென்று தெளிந்தாளென்பதுகருத்து.இமைக் கும் என மேல்வருதலின் தாமரை, என்பதற்குக் கண்ணெனப் பொருள் கொண்ட னம். தம்-சாரியை.

621. பிறந்துடை நலநிறை பிணித்த வெந்திரம்
கறங்குபு திரியுமென் கன்னி மாமதில்
எறிந்தவக் குமரனை யின்னுங் கண்ணிற்கண்
டறிந்துயி ரிழக்கவு மாகுமே கொலாம்.

(இ-ள்.) பிறந்து உடை - என்னோடுகூடப்பிறந்து, என்னைப்பிரியாத, நலம்- அழகும், நிறை - நிறையுமாகிய இவற்றால், பிணித்த - கட்டப்பட்ட, எந்திரம் - யந்திரமானது- கறங்குபுதிரியும் - சுழன்று திரியாநின்ற, இடமாகிய, என் கன்னிமா மதில் - எனது கன்னிப்பருவமாகிய பெரியமதிலை, எறிந்த - அழித்துப்போன, அ குமரனை - அந்த ராஜகுமாரனை, இன்னும் - இனிமேலும், கண்ணிற்கண்டு - (ஒரு கால்) கண்ணினாற் பார்த்து, அறிந்து - (அவனுடைய குணாதிசயங்களையெல்லாம்) நன்குணர்ந்து, (பிறகு) உயிர் இழக்கவும் ஆகுமே - என்னுயிரை யிழக்கவுங் கூடுமோ—எ-று. (இக)

யானிவ்வாறாயினபின் பிறத்தல் திண்ணமே யாயினும், இன்னு மொருகால் அவனைக் கண்ணுற்கண் டின்புற்றிறத்தல் வேண்டுமென்பது கருத்து.

622. என்றிவை யினையன விளம்பும் வந்தெதிர்
நின்றன னவனெனு நீங்கி னானெனும்
கன்றிய மனத்துறு காம வேட்கையால்
ஒன்றல பலநினைந் துருகுங் காலையே.

(இ-ள்) என்ற - என்று சொல்லப்பட்ட, இவை இனை யன - இவற்றையும் இவற்றையொத்தவைகளையும், விளம்பும் - சொல்லுவாள், அவன்வந்து எதிர் நின்றனன் என்னும் - அவன்வந்து எதிரில் நிற்கிறானென்று சொல்லுவாள், நீங்கினான் என்னும் - மீட்டும் நீங்கிப்போனானென்பாள், கன்றியமனத்து உறு - வெதும்பிய மனத்திற்பொருந்திய, காமவேட்கையால் - காமவிருப்பத்தினால், ஒன்று அல்ல - ஒன்றல்லவனாகிய, பல-பலவற்றை, நினைந்து-எண்ணி, உருகும் காலை - மனமுருகுங் காலத்தில்—எ-று, (கூய)

623. அன்னமென் னடையவட் கமைந்த காமத்தீ
தன்னையுஞ் சுடுவது தரிக்கிலா னென
நன்னெடுங் கரங்களை நடுக்கி யோடிப்போய்
முன்னைவெங் கதிரவன் கடலின் மூழ்கினான்.

(இ-ள்.) அன்னம் - அன்னநடைபோன்ற, மென்னடையவட்கு - மெல்லிய நடையை யுடையவளாகிய சீதாபிராட்டிக்கு, அமைந்த - பொருந்திய, காமத்தீ - காமநெருப்பானது, தன்னையும் - (வெப்பத்தான்மிக்க) தன்னையும், சுடுவது - சுடுவதை, தரிக்கிலான் என - சகிக்குமாற்றலிலனானான் என்று சொல்லும்படி, நல் நெடுகரங்களை - நல்ல நீண்டகைகளை, நடுக்கி-நசிக்கிக்கொண்டு, ஓடிப்போய்-விரைந்துபோய், முன்னைவெம்கதிரவன் - படைப்புத்தொடங்கியுள்ள வெப்பத்தையுடைய கதிர்களோடுகூடிய சூரியன், கடலில் மூழ்கினான் - மேற்கடலிற் குளித்தான்.

அனன்ம் என் நடையவட்கு எனப்பிரித்து அன்னநடையென்று சொல்லத் தக்க நடையையுடையவட்கு எனினும் பொருந்தும். தன்னையும் என்னு மும்மை உயர்வுசிறப்பு. மூழ்கினான் என்றமையால் கடல் என்பது 'மேற்கடலென்று கூறப்பட்டது. இக்காலத்துக்கு முன்னிருந்த மங்கையரடைந்த காமம் தன்னைச்சுட அறியானென்பார் முன்னைவெங்கதிரவ னென்றார்.

624. விரிமலர்த் தென்றலாம் வீசு பாசமும்
எரிநிறச் செக்கரு மிருளுங் காட்டலால்
அரியவட் கனல்தரு மந்தி மாலையாம்
கருநிறச் செம்மயிர்க் காலன் றோன்றினான்,

(இ-ள்.) விரிமலர் - மலர்ந்த மலர்களிற் படிந்துவருகிற, தென்றல் ஆம் - தென்றற்காற்றாகிய, வீசு - எரிதற்குரிய, பாசமும் - கயிற்றையும், எரிநிறம் செக்கரும் - தீ நிறத்தையுடைய செவ்வானத்தையும், இருளும் - இருளையும், காட்டலால் - தோற்றுவித்தலால், அரியவட்கு - அரியவளாகிய பிராட்டிக்கு, அனல்தரும்-வெப்பத்தைத்தருகிற அந்திமாலையாம் - அந்திமாலையாகிய, கருநிறம் - கரியநிறத்தையும், செ மயிர் - செவந்த மயிரையுடைய, காலன் தோன்றினான் - யமன்தோன்றினான்—எ-று. (சு௨)

625. மீதறை பறவையாம் பறையுங் கீழ்விளி
ஓதமென் சிலம்பொடு முதிரச் செக்கரும்
பாதக விருள்செய் கஞ்சுகமும் பற்றலால்
சாதக மென்னவுந் தழைத்த மாலையே.

(இ-ள்.) மீது - மேலே, அறை - ஒலியாநின்ற, பறவை ஆம் - பறவைகளென்கிற, பறையும் - பறையையும், கீழ் - கீழே, விளி - ஒலியாநின்ற, ஓதம் - கடலாகிய, மென்சிலம்பு ஒடும் - மிருதுவாகிய காற்சிலம்பையுங்கொண்டு, உதிரச்செக்கரும் - செவ்வானமாகிய ரக்தத்தையும், பாதகம் - பாபரூபமாகிய, இருள் செய் - இருட்டினாற்செய்யப்பட்ட, கஞ்சுகமும் - சட்டையையும், பற்றலால் - பெற்றிருப்பதனால், மாலை - அந்த மாலைக்காலமானது, சாதகம் என்னவும் - பூதமென்று சொல்லும்படியாயும், தழைத்தது - விருத்தியடைந்தது—எ-று. (சுங)

மாலைக்காலமானது; காலிற்சிலம்பணிந்து, கருஞ்சட்டைதரித்து, உதிரப்பாத்திரத்தோடு நின்று, பறைகொட்டும் பூதம்போலிருந்தது என்பது கருத்து.

வேறு.

626. கயங்களென்னுங் கனல்தோய்ந்து கடிநாண்மலரின் விடம்பூசி
இயங்குதென்றன் மன்மதவே ளெய்தபுண்ணி னிடைநுழைய
உயங்குமுணர் நன்னலமு முருகிச்சோர்வா ருயிருண்ண
வயங்குமாலை வானோக்கி யிதுவோகூற்றின் வடிவென்றாள்.

(இ-ள்.) கயங்கள் என்னும் - குளங்களென்கிற, கனல்தொய்ந்து - நெருப்பிற் படிந்தும், நாள்மலரின் கடிவிடம்பூசி - புதியமலர்களின் வாசனையாகிய நஞ்சைப் பூசியும், இயங்கு - உலாவுகின்ற, தென்றல் - தென்றற்காற்றானது, மன்மதவேள் - மன்மதன், எய்த - எய்த அம்பினாலுண்டாகிய, புண்ணிடை நுழைய - புண்ணில் நுழைவதனால், உயங்கும் - வருந்துகின்ற, உணர்வும் - அறிவும், நல்நலமும் - சிறந்தபெண்ணலமும், உருகி சோர்வார்கள் - அழிந்து சோர்கின்றவளாகிய பிராட்டி, உயிர் உண்ண - தன்னுயிரைக் கவர்வதனால், வயங்கும் - விளங்காநின்ற, மாலை வான்நோக்கி - அந்தவானத்தைப்பார்த்து, கூற்றின்வடிவு - யமனதுவடிவம், இதுவோ - இதுதானோ, என்றாள் - என்றுசொன்னாள்—எ-று. (சுச)

மன்மதவேள் இருபெயரொட்டுப் பண்புத்தொகை.

627. கடலோமழையோ முழுநீலக் கல்லோகாயா நறும்போதோ
படர்பூங்குவளை நாண்மலரோ நீலோற்பலமோ பானலோ
இடர்சேர்மடவா ருயிருண்ப தியாதோவென் தளர்வான்முன்
மடல்சேர்தாரா னிறம்போலு மந்திமாலை வந்ததுவே.

(இ-ள்.) கடலோ - கருங்கடலோ, மழையோ - கார்மேகமோ, முழுநீலக் கல்லோ - சிறந்த நீலமலையோ, காயாநறும்போதோ - காயாவின் நறியமலரோ,

படர் - பரந்த, பூ - பொலிவாகிய, குவளைநாள்மலரோ - கருங்குவளையின் புதிய மலரோ, நீலோற்பலமோ - நீலோற்பலமலரோ, பானலோ - கருநெய்தல்மலரோ, (இவைகளுள்) இடர்சேர் - துன்பமானது வந்தடைந்திருக்கிற, மடவார் - மாதர்களுடைய, உயிர் உண்பது - உயிரைக்கவர்வது, யாதோ-எதுவோ, என்று - என்று சொல்லி, தளர்வாள்முன் - தளர்கின்றவளாகிய பிராட்டிக்கெதிரில், மடல்சேர் தாரான் - பூமடல்கள்சேர்ந்த மாலையினையணிந்த ஸ்ரீராமபிரானது, நிறம்போலும்-நிறத்தைப்போல்கின்ற, அந்திமாலை - மாலைப்பொழுதானது, வந்தது - வந்து நிலைபெற்றது—எ-று. (சுகூ)

இவ்விடத்துக் கடல்முதலாக வெடுத்துக் கூறப்பட்டபொருள்கள் ஸ்ரீ ராமபிரானது திருமேனியின் நிறத்தை யுடையனவா யிருத்தலால், இவ்வாறு சொல்லியாற்றினளென்பது கருத்து. ஏ - அசை.

628. மைவானிறத்து மீனெயிற்று வாடையுயிர்ப்பின் வளர்செக்கர்ப்
பைவாயந்திப் படவரவே யென்னுவளைத்துப் பகைத்தியால்
எய்வானொருவன் கையோயா னுயிருமொன்றே யினியில்லை
உய்வானுறவிப் பழிபூண வுன்னோடெனக்குப் பகையுண்டோ.

(இ-ள்.) வான் - ஆகாசமாகிய, மைநிறத்து - கருநிறத்தையும், மீன் எயிற்று - வின் மீன்களாகிய பற்களையும், வாடை உயிர்ப்பின் - வாடைக்காற்றாகிய மூச்சையும், வளர் - பெருகாநிற்கிற, செக்கர் - செவ்வானமாகிய- பைவாய் - ஈரம்புலர்ந்த வாயுள்ள, அந்திபடம் அரவே - அந்திப்பொழுதாகிய படத்தையுமுடைய பாம்பே, (நீ) என் - என்னகாரணத்தால், நாவளைத்து பகைத்தி - நாவினால் லென்னை வளைத்துப்பற்றி வருத்துகிறாய், எய்வான் ஒருவன் - பாணப்பிரயோகம் பண்ணுகிறவனாகிய மன்மதன், கைஓயான் - கையோய்கிறானில்லை, உயிரும் ஒன்றே - எனக்குள்ளது ஒருயிரே, இனி வேறு இல்லை - இனி வேறோருயிரில்லை. உய்வான் உற-(அவனுக்குப் பிழைத்து உயிரோடு வாழ்ந்திருத்தற்கு வேண்டிய முயற்சிசெய்துகொண்டிருக்க) இ பழிபூண - நீ இந்தப்பெண்பழியைப் பூணுதற்கு, உன்னோடு எனக்குப் பகைஉண்டோ - உனக்குமெனக்கும் விரோதமுண்டோ, இல்லையே), ()

எனக்குள்ளது ஒருயிர், அதனைக் கவர்வதற்கு மன்மதன் தலையிட்டுக்கொண்டான், அப்படியிருக்க, நீ யெந்தவுயிரைக் கவர்தற்குத் தலைப்பட்டாய் என்பது கருத்து.

629. ஆலமுலகிற் பறந்ததுவோ வாழிகிளர்ந்த தோவவர்தம்
நீலநிறத்தை யெல்லோரு நினைக்கவதுவாய் நிரம்பியதோ
காலனிறத்தை யஞ்சனத்திற் கலந்துழைத்துக் காயத்தின்
மேலுநிலத்து மெழுகியதோ விளக்குமிருளாய் விளைந்ததுவே.

(இ-ள்.) ஆலம் - ஆலாவிருக்ஷமானது, உலகில் பரந்ததோ - உலகத்தில் பரவியதோ, ஆழிகிளந்ததோ - கருங்கடலானதுபொங்கி மேல்வந்ததோ, அவர் நீலநிறத்தை - அவரது நீலநிறத்தை, எல்லோரும் நினைக்க - எல்லாரும் நினைத்ததால், அது ஆய்நிரம்பியதோ - அந்த நிறமே யெங்கும் வியாபித்ததோ, காலன் நிறத்தை - யமனது நிறத்தை, அஞ்சனத்தில்கலந்து - மையோடுகலந்து, குழைத்து - குழம்பி, காயத்தின்மேலும் - ஆகாயத்தின் மீதும், நிலத்தும் - பூவியின்மீதும், மெழுகியதோ - மெழுகப்பட்டுள்ளதோ, இளைக்கும் - (தனித்துறைமகளிர்) மெலிதற்குக் காரணமாகிய, இருள்ஆய்-இருளுருவாகி, விளைந்தது - விருத்தியடைந்தது—எ-று. (சுஎ)

இருளானது ஆலம்முதலிய பொருள்கள் போலத் துன்பமுண்டாக்குதலால் இவ்வாறு கூறினள்-

630. வெளிநின்றவரோபோய்மறைந்தார்விலக்கவொருவர்தமைக்காணேன்
எளியல்பெண்ணென் றிரங்காதே யெல்லியாமத் திருளூடே
ஒளியம்பொய்யு மன்மதனு ருனக்கிம்மாய முரைத்தாரோ
அளியென்செய்த தீவினையே யன்றிலாகி வந்தாயோ.

(இ-ள்.) வெளிநின்றவரோ - வெளியில்நின்றவரோ, போய்மறைந்தார் - போய் மறைந்துவிட்டார், விலக்க -(அவ்வாறுபோகாமல்) தடுக்க, ஒருவர் தமைக் காணேன் - ஒருவரையுங்கண்டிலேன், எளியள்பெண் என்று இரங்காது - எளியளாகிய பெண்ணென்றிக் கழுருமல், எல்லி - இரவின் யாமத்து இருளூடு - நள்ளிருளில், ஒளி - ஒளித்திருந்து, அம்பு எய்யும் பாணங்களை யேவுகிற, மன்மதனுர் - மன்மத தேவர், உனக்கு இ மாயம் உரைத்தாரோ - உனக்கு இந்த மாயவித்தையை உபதேசித்தாரோ, அளியென்செய்த - எளியேன்பண்ணின, தீவினையே - பாவமே, அன்றில் ஆகிவந்தாயோ - அன்றிலுருவங்கொண்டுவந்தாயோ—எ-று. (சுஅ)

ஒளியென்பது வினையெச்சப் பொருள்படநின்றது. அன்றி நிறமெனினும் மமையும். ஏ-இரண்டும் அசை.

631. ஆண்டங்கனையா ளினையநினைந் தழுங்கும்வேலை யகல்வானம்
தீண்டநிமிர்ந்த பெருங்கோயிற் சீதமணியின் வேதிகைவாய்
நீண்டசோதி நெய்விளக்கம் வெய்யவென்றங் கவைநீக்கித்
தூண்டல்செய்யா மணிவிளக்கின் சுடராலிருளைப் பகல்செய்தார்.

(இ-ள்.) ஆண்டு - இவ்விடத்தில், அங்கனையாள் - பிராட்டியானவள். இனைய நினைந்து - இவைபோல்வனவற்றையெண்ணி, அழுங்கும்வேலை - வருந்துங்காலத்தில், அகல் - அகன்ற, வானம்தீண்ட - சுவர்க்கத்தைத்தொடும்படி, நிமிர்ந்த - உயர்ந்த, பெருகோயில் - பெரியமாளிகையில், சீதமணியின் - சந்திரகாந்தத்தினுல் செய்யப்பட்ட, வேதிகைவாய் - மேடைகளி லேற்றப்பட்டிருக்கிற, நீண்ட சோதி - மிகுந்த வெளியையுடைய, நெய்விளக்கம் - நெய்த்தீபங்கள், வெய்ய என்று - வெவ்வியனவென்று, அங்கு - அவ்விடத்து நின்றும், அவைநீங்கி - அவற்றை நீக்கிவிட்டு, தூண்டல்செய்யா - தூண்டல் செய்யப்படாத, மணிவிளக்கின் சுடரால் - மாணிக்கத்தீபகாந்தியால், இருளை இரவை, பகல்செய்தார்- பகலாக்கினுர்கள். எ-று.

அங்கு அனையாள் எனப் பிரித்து, அவ்வாறு அந்தப்பிராட்டியெனப் பொருள்கோடாலுமாம். அகல் வானம் என்ருர் ஏனைப்பூதங்களுன்கற்கு மிடங்கொடுத்த ேனாக்கி.

632. பெருந்திண்ணெடுமால்வரைநிறுவிப்பிணித்தபாம்பின்மணித்தாம்பின்
விரிந்ததிவலை யுதிர்ந்தமணி விசும்பின்மீனின் மேல்விளங்க
அருந்தவமரர் கலக்கியநா ளமுதநிறைந்த பொற்கலசம்
இருந்ததிடைவந் தெழுந்ததென வெழுந்ததாழி வெண்டிங்கள்.

(இ-ள்.) பெருதிண்ணெடுமால் - எல்லாப்பொருளினும் பெருய வலியமைதந்த இறைவன், வரைநிறுவி - (மந்தர) மலையை நிலமத்தாக நிறுத்தி, பிணித்த - அதிற்கட்டின, பாம்பின் - வாசுகியென்னும பாம்பாகிய, மணி தாம்பின் - மணிக்கயிற்

திலிருந்து, விரிந்த-பரந்த, திவலை-நீர்த்துளிகளோடு, உதிர்ந்தமணி - கடலினின்று சிந்தின மணிகள், விசும்பின் - ஆகாயத்தினுள்ள, மீனின்மேல்விளங்க - விண்மீன்களினு மேற்பட்டுவிளங்க, அருந்த-தாம் உண்ணுதற்காக; அமரர்-தேவர்கள், கலக்கிய நாள்-திருப்பாற்கடலைக் கலக்கியகாலத்தில், இருந்தது-அதிலிருந்ததாகிய, அமுதம் நிறைந்த-அமிர்தம் நிறைந்த, பொன்கலசம் - பொற்கலசமானது, இடைவந்து எழுந்தது என - அதனிடையே எழுந்ததுபோல, ஆழி - வட்டவடிவுள்ள, வெள்திங்கள்-வெள்ளிய சந்திரன், எழுந்து-உதயமாயிற்று—எ-று. (எ0)

பாம்பின் என்பது இன் அல்வழிச்சாரியை.

633. வண்டாயயனுன் மறைபாட மலர்ந்ததொருதா மரைப்போது
பண்டாலிலையின் மிசைக்கிடந்து பாருநீரும் பசித்தான்போல்
உண்டானுந்திக் கடல்பூத்த வோதக்கடலுந் தான்வேறோர்
வெண்டாமரையின் மலர்பூத்த தொத்ததாழி வெண்டிங்கள்.

(இ-ள்.) பண்டு-முற்காலத்தில், ஆல் இலையின்மிசை-ஆலிலையின்மீது, கிடந்து-பள்ளிகொண்டு, பசித்தான்போல்-பசித்தவன்போல, பாரு நீரும் உண்டான்-பூமியையும் ஜலத்தையுமுண்ட ஸ்ரீமந்நாராயணனுடைய, உந்தி கடல் - திருநாபியாகிய கடலானது, அயன்-பிரமன், வண்டுஆய்-வண்டுபோலாகி, நான்மறைபாட-நான்குவேதங்களாகிய இசையைப் பாடிக்கொண்டிருக்க, ஒருதாமரைப்போது-ஒரு செந்தாமரை மலரை, மலர்ந்தது-பூத்தது, (அதைக்கண்டு) பூத்த-(உந்திக்கடல்) பூத்த, ஓதம் கடலும்-அலைகளையுடைய உப்புநீர்க்கடலும், வேறு ஓர் - வேறொரு, வெண்டாமரையின் மலர் - வெண்டாமரைப்பூவை, பூத்தது - மலர்ந்ததை, ஆழிவெண்டிங்கள் - வட்டவடிவுள்ள வெள்ளிய சந்திரன், ஒத்தது-ஒத்திருந்தது—எ-று. (எக)

சந்திரனாகிய வெண்டாமரை மலருக்குக் களங்கத்தை வண்டாகக்கொள்க.

634. புள்ளிக்குறியிட் டெனவொண்மீன் பூத்தவானம் பொலிகங்குல்
நள்ளிற்சிறந்த விருட்பிழம்பை நக்கிநிமிரு நிலாக்கற்றை
கிள்ளைக்கிளவிக் கென்னுங்கொல் கீழ்பாற்றிசையின் மிசைவைத்த
வெள்ளிக்கும்பத் திளங்கமுகின் பாளைபோன்று விரிந்துளதால்.

(இ-ள்.) புள்ளிக்குறி இட்டென - புள்ளிக்குறியிட்டாற்போல, ஒள்-ஒட்பமான, மீன்பூத்த-விண்மீன்கள்பூத்த, வானம்-ஆகாயத்தில், பொலி-விளங்குகின்ற, கங்குல் நள்ளில்-நடுராத்திரியில், சிறந்த-மிகுந்த, இருள்பிழம்பை - இருட்கூட்டத்தை, நக்கி-உண்டு, நிமிரும்-உயர்கின்ற, நிலாகற்றை-நிலவின்கற்றையானது, கிள்ளைகிளவிக்கு-கிளிமொழியாளாகிய பிராட்டிக்கு, என் ஆம் கொல்-யாதாகுமோ, கீழ்பால் திசையின் மிசைவைத்த-கிழக்குத்திக்கில் வைக்கப்பட்டிருக்கிற, வெள்ளிக்கும்பத்து வெள்ளிக்குடத்தில், இளங்கமுகின் பாளைபோன்று-இளமையாகிய கமுகம்பாளையையொத்து, விரிந்துளது-பரந்திருக்கின்றது—எ-று. (எஉ)

என்னுங்கொல் என்றது துன்பத்தைச் செய்யுமென்பதுபட நின்றது. சந்திரனுக்கு வெள்ளிக்கும்பமும், நிலாக்கற்றைக்குக் கமுகம்பாளையும் உவமை.

635. விரைசெய்கமலப் பெரும்போது விரும்பிப்புகுந்த திருவினொடும்
குரைசெய்வண்டின் குழாமிரியக் கூம்பிச்சாம்பிக் குவிந்துளதால்

உரைசெய்திகிரி தனையுருட்டி யொருகோலோச்சி யுலகண்ட
அரைசனொதுங்கத் தலையெடுத்த குறும்புபோன்ற தரக்காம்பல்.

(இ-ள்.) (இவ்வாறு சந்த்ரோதயமானபோது) விரைசெய் - வாசனைவீசுகின்ற, கமலப்பெரும்போது - பெரியதாமரைப்பூவானது, விரும்பிபுகுந்த - விரும்பித் தன்னிடத்துவந்த, திருவினொடும் - திருமகளுடன், குரைசெய் - ஒலித்தலைச்செய்கின்ற வண்டின்குழாம்-வண்டுக்கூட்டம், இரிய - ஓடும்படி, கூம்பி-குவிந்து, சாம்பி-வாடி,, குவிந்துளது - முகிழ்த்துக்கொண்டது, அரக்கு ஆம்பல் - செவ்வல்லிப்பூவானது, உரைசெய்-சொல்லப்படுகிற, திகிரிதனை உருட்டி - (ஆஞ்ஞா) சக்கரத்தை யுருட்டி, ஒருகோல் ஓச்சி-ஒப்பற்ற செங்கோல்செலுத்தி, உலகு ஆண்ட - உலகத்தை யாண்டுகொண்டிருந்த, அரைசன் - சக்ரவர்த்தியானவன், ஒதுங்க - நீங்கினவளவில், தலையெடுத்த-தலைநிமிர்ந்த, குறும்புபோன்றது-குறுநிலமன்னனையொத்து மலர்ந்தது.

உரைசெய் திகிரிதனையுருட்டி யொருகோலோச்சி யுலகாண்ட அரைசனும், விரைசெய்கமலப்பெரும்போது, பூச்சக்ரவர்த்திகளாதலால் ஒப்பாராயினர்.

சடையப்பமுதலியார் புகழ் காண்க.

636. வண்ணமாலை கைபரப்பி யுலகைவளைந்த விருளெல்லாம்
உண்ணவெண்ணித் தண்மதியத் துதயத்தெழுந்த நிலாக்கற்றை
விண்ணுமண்ணுந் திசையனைத்தும் விழுங்கிக்கொண்ட விரிநன்னீர்ப்
பண்ணைவெண்ணெய்ச் சடையன்றன் புகழ்போலெங்கும் பரந்துளவால்.

(இ-ள்.) வண்ணம்-அழகான, மாலை-மாலைப்பொழுதாகிய, கை-கையை, பரப்பி-விரித்து, உலகைவளைந்த-உலகத்தை வளைத்துக்கொண்ட, இருள் எல்லாம்-இருளையெல்லாம், உண்ண எண்ணி-பருகநினைத்து, தண்மதியத்து உதயத்து-குளிர்ச்சியையுடைய சந்த்ரோதயத்தில், எழுந்த - உண்டாகிய, நிலாகற்றை - நிலவின்கற்றையானது, விரி-விரிந்த, நல்நீர்-நல்லநீரையுடைய, பண்ணை-வயல்சூழ்ந்த, வெண்ணெய் சடையன்-வெண்ணெய் நல்லூர்ச் சடையப்ப வள்ளலுடைய, விண்ணும்-விண்ணுலகத்தையும், மண்ணும்-மண்ணுலகத்தையும், திசை அனைத்தும் - திசைகளெல்லாவற்றையும், விழுங்கிக்கொண்ட-விழுங்கிவிட்ட, புகழ்போல்-கீர்த்தியைப்போல, எங்கும் பரந்துள-எவ்விடத்தும் பரவின—எ-று. (எசு)

சடையப்பமுதலியார் புகழ் எங்கும் பரந்துபோல நிலாக்கற்றை எங்கும் பரந்ததென்பதுகருத்து.

637. நீத்தமதனின் முளைத்தெழுந்த நெடுவெண்டிங்க ளெனுந்தச்சன்
மீத்தன்கரங்க ளவைபரப்பி மிகுவெண்ணிலவாம் வெண்சுதையால்
காத்தகண்ணன் மணியுந்திக் கமலநாளத் திடைப்பண்டு
பூத்தவண்டம் பழையதென்று புதுக்குவானிம் போன்றுளதால்.

(இ-ள்.) (இவ்வாறுநிலாக்கற்றை யெங்கும்பரந்தது எத்தன்மைத்தெனின்) நீத்தமதனில்-சமுத்திரத்தில், முளைத்து எழுந்த - உதயமாகி மேலெழுந்த, நெடுவெள் திங்கள் எனும்-மிகுந்த வெண்மைநிறமுள்ள சந்திரனாகிய, தச்சன் - தச்சனானவன், மீ - மேலே, தன்கரங்களவைபரப்பி - தன்கைகளைப்பரப்பி, மிகுவெள்நிலவு ஆம்-மிகுந்த வெள்ளியநிலவாகிய, வெண்சுதையால் - வெண்மையாகிய சுண்ணச்சாந்தினால், காத்த-உலகங்களைரக்ஷிக்கிற, கண்ணன்-சர்வசக்தனான ஸ்ரீமந்நாராயணனது,

மணி உந்திகமலம் - அழகியநாபீகமலத்தின், நாளத்து இடை - நாளத்தினிடமாக, பண்டு-முற்காலத்தில், பூத்த-உண்டாகிய,அண்டம்-உலகமானது, பழையது என்று-பழமையானதென்றுகருதி, புதுக்குவானும் - புதுக்குவோனையும், போன்று உளது-(அவ்வுதயம்) ஒத்திருந்தது—எ-று. (எ௫)

நீத்தம்-சினையாகுபெயர்.

638. நீங்காமாயை யவர்தமக்கு நிறமேதோற்றும் புறமேபோய்
ஏங்காக்கிடக்கு மெறிகடற்கு மெனக்குங்கொடியை யானுயே
ஓங்காநின்ற விருளாய்வந் துலகைவிழுங்கி மேன்மேலும்
வீங்காநின்ற கருநெருப்பி னிடையேயெழுந்த வெண்ணெருப்பே.

(இ-ள்.) ஓங்காநின்ற - விருத்தியடையாநின்ற, இருளாய்வந்து - இருளுருவாய் வந்து, உலகைவிழுங்கி - உலகத்தைமுற்றுமூடி, மேல்மேலும்வீங்காநின்ற - மேலு மேலும் அதிகப்படுகின்ற; கருநெருப்பினிடை - கருநெருப்பினிடத்தில், எழுந்த-உண்டான, வெண்ணெருப்பே-வெண்ணெருப்பே, நீங்காமையை-நீங்காதமாயையை யுடைய, அவர்தமக்கு - அவருக்கு, நிறம்தோற்று - நிறத்தினால் தோல்வியடைந்து, புறமேபோய்-உலகத்திற்குப் புறமாகப்போய், ஏங்காகிடக்கும் - ஒலித்துக்கொண்டு கிடக்கிற, எறிகடல்கு உம் - அலைகளைவீசுகின்றகடலுக்கும், எனக்கும் - எனக்கும், கொடியை ஆனுயே-கொடியையாயினையே—எ-று. (எ௬)

கருநெருப்பென்றது இருளை. வெண்ணெருப்பென்றது சந்திரனை.

வேறு

639. கொடியை யல்லைநீ யாரையுங் கொல்கிலாய்
மடிவி லின்னமு தத்தொடும் வந்தனை
பிடியின் மென்னடைப் பெண்ணொடென் றுலெனைச்
சுடுதி யோகடற் றோன்றிய திங்களே.

(இ-ள்.) கடல்தோன்றிய திங்களே - (தண்ணிய) கடலினிடத்துத்தோன்றிய சந்திரனே, மடிவு இல் - (உண்டோர்) மரணமில்லாதிருத்தற்குறிய, இன் அமுதத்தொடும்-இனிய அமிர்தத்தோடும், பிடியின்-பெண்யானையின், மெல்நடை-மெல்லிய நடையினையுடைய, பெண்ணொடு-திருமகளுடன், வந்தனையென்றால்-தோன்றினுயா யின், என்னைசுடுதியோ-என்னைச்சுடுவாயோ, நீகொடியை அல்லை-நீ கொடுமையுடை யாயல்லை, யாரையும் கொல்கிலாய்-யாவரையும் வருத்தமாட்டாய். (எஎ)

640. மீது மொய்த்தெழு வெண்ணில வின்கதிர்
மோது மத்தகை மென்முலை மேற்பட
ஓதிமப் பெடை வெங்கன லுற்றெனப்
போது மொய்த்தம ளிப்புரண் டாளரோ.

(இ-ள்.) மீது - மேலே, மொய்த்து எழு-நெருங்கியெழுகின்ற, வெண்ணிலவின் கதிர் - வெண்ணிலாக்கதிராகிய, மோதும்மத்திகை - மோதுகின்றசம்மட்டியானது, மென்முலைமேல்பட-மெல்லியதனங்களின்மேல்படுதலால், ஓதிமப்பெடை-பெட்டை யன்னமானது, வெங்கனல் உற்றென-வெவ்விய நெருப்பினிடத்துப் பொருந்தியது போல, போதுமொய்த்த-புஷ்பங்களால் நிறைக்கப்பட்டிருக்கிற, அமளி-சயநத்தின் மேல், புரண்டாள்-புரண்டனள்—எ-று. (எஅ)

அரோ-அசை.

641. நீக்க மின்றி நிமிர்ந்த நிலாக்கதிர்
தாக்க வெந்து தளர்ந்து சரிந்தனள்
சேக்கை யாகி மலர்ந்தசெந் தாமரைப்
பூக்கள் பட்டதப் பூவையும் பட்டனள்.

(இ-ள்,) நீக்கம் இன்றி-நீங்குதலில்லாமல், நிமிர்ந்த - எங்கும்பரந்திருக்கிற, நிலா கதிர்-சந்திரகிரணமானது, தாக்க-தாக்குதலால், வெந்து-உடல்வெதும்பி, தளர்ந்து மனந்தளர்ந்து, சரிந்தனள் - சாய்ந்தவளாய், சேக்கைஆகி-இருக்கையாகி, மலர்ந்த-விரிந்த, செந்தாமரைபூக்கள்-செந்தாமரைமலர்கள், பட்டது-அடைந்த தன்மையை, அப்பூவையும்-அந்தச்சானகியும், பட்டனள்-அடைந்தாள்—எ-று. (எக)

தாமரைமலர் அடைந்ததன்மையாவது "கூம்பிச்சாம்பிக்குவிந்துளது" என்-வது, திருவிருத்தத்திற் கூறப்பட்டதன்மை.

642. வாச மென்கல வைக்களி வாரிமேல்
பூசப் பூசப் புலர்ந்து புழுங்கினள்
வீச வீச வெதும்பினள் மென்முலை
ஆசை நோய்க்கு மருந்துமுண் டாங்கொலோ.

(இ-ள்.) வாசம்-பரிமளமுள்ள, மெல்-மெல்லிய, கலவைகளி - கலவைச்சந்தனக் குழம்பை, வாரி-அள்ளி, பூச பூச - (தோழிகள்) தன்திருமேனியில் பூசுந்தோறும், புலர்ந்தது-சீரம் வெதும்பி, புழுங்கினள்-மனம்புழுங்கினாள், வீச வீச கவரிமுதலிய வைகளைக்கொண்டு வீசுந்தோறும், மென்முலைவெதும்பினள் - மெல்லியதனங்கள் வெதும்பினாள், ஆசைநோய்க்கு - காமவியாதிக்கு, மருந்தும் உண்டாம் கொல்-ஔஷதமுளதோ—எ-று. (அ0)

தோழிகள்செய்யும் சைத்யோபசாரங்களெல்லாம் இவளது காமநோயை மிகு விக்கின்றமையால் "ஆசைநோய்க்கு மருந்துமுண்டாங்கொல்" என்றார், ஓ-அசை.

643. தாயரில் பரி சேடியர் தாதுகு
வீயரித் தளிர் மெல்லணை மேனியிற்
காயெரிக் கரி யக்கரி யக்கொணர்ந்
தா யிரத்தி னிரட்டி யடுக்கினார்.

(இ-ள்.) தாயரின்-தாய்மார்போல, பரி-அன்புபாராட்டுகின்ற, சேடியர்-தோழி மார்கள், தாது உகு-தாதுசிந்துகிற, வீ-மலர்களும், அரிதளிர்-பசுந்தளிர்களும், மெல் அணை-மெல்லியசயநத்தில், மேனியில்காய் எரி-பிராட்டியின் திருமேனியில் வெதும் புகின்ற விரகாக்கினியினால், கரியகரிய-கருகுந்தோறும், கொணர்ந்து-கொண்டுவந்து ஆயிரத்தின் இரட்டி-இரண்டாயிரந்தரம், அடுக்கினார்-(சயநத்தில்) பரப்பினார்கள்.

தாயரின் என்பதற்குத் தாய்மாரினும் எனினும் பொருந்தும். தாயரிற் பரி சேடியராதலால் ஆயிரத்தினிரட்டியடுக்கினார் என்றார்.

644. கன்னி நன்னக ரிற்கமழ் சேக்கையுள்
அன்ன மின்னனை மாயின ளாயவள்
மின்னின் மின்னிய மேனிகண் டானெனச்
சொன்ன வண்ணலுக் குற்றது சொல்லுவாம்.

(இ-ள்.) கன்னிநல்நகரில் - கன்னிகாமடத்திலிருக்கிற, கமழ் - (புஷ்பம் பரப்பியிருத்தலால்) பரிமளிக்கிற, சேக்கையுள் - புஷ்ப சயநத்தில், அன்னம் - பிராட்டி, இன்னணம் ஆயினள் - இவ்வண்ணமானாள், ஆயவள் - அவளது, மின்னின் மின்னிய - மின்னலைப்போல மின்னுகிற, மேனி - திருமேனியை, கண்டான் என சொன்ன - கண்டானென்று சொல்லப்பட்ட, அண்ணலுக்கு - ஸ்ரீராமபிரானுக்கு, உற்றதுசொல்லுவாம் - நேரிட்டதைச் சொல்லுவோம்—எ-று. (அஉ)

கமழ் சேக்கையென்றதனால் புஷ்பசயநமெனப் பொருளுரைக்கப்பட்டது.

645. ஏகி மன்னனைக் கண்டெதிர் கொண்டவன்
ஓகை யோடு மினிது கொண் டுய்த்திடப்
போக பூமியிற் பொன்னக ரன்னதோர்
மாக மாடத் தனையவர் வைகினார்.

(இ-ள்.) ஏகி - (அவ்விடம்விட்டுப்) போய், மன்னனைக்கண்டு - ஜநகமஹா ராஜனைப்பார்த்து, அவன் - அந்த ஜநகமஹாராஜன், எதிர்கொண்டு - எதிர் கொண்டு வந்து, ஓகையோடும் - சந்தோஷத்துடன், இனிதுகொண்டு உய்த்திட - இனிமையாய் அழைத்துக்கொண்டுபோய்ச் செல்லவிட, போகபூமியில் - போகபூமியிலிருக்கும், பொன் நகர் அன்னது-பொன்னகரையொத்ததாகிய, ஓர்-ஒரு, மாகம்மாடத்து-ஆகாயத்தையளாவுகின்ற மாளிகையில், அனையவர் - அந்த விசுவாமித்திர முனிவர் ஸ்ரீராமலக்ஷ்மணர் என்னுமிவர்கள், வைகினார்-தங்கியிருந்தார்கள். (அ௩)

போகபூமி - ஆதியரிவஞ்சம், நல்லரிவஞ்சம், ஏமதவஞ்சம், ஏமவஞ்சம், தேவ குருவம், உத்தரகுருவம் என்பன.

அகலிகையின் புத்திரராகிய சதாநந்தமுனிவர் எழுந்தருளினார்.

646. வைகு மவ்வுழி மாதவம் யாவுமோர்
செய்கை கொண்டு நடந்தெனத் தீதறு
மொய்கொள் வீரன் முளரியந் தாளினால்
மெய்கொண் மங்கை யருண்முனி மேவினான்.

(இ-ள்.) வைகும் அவ்வுழி - தங்கியிருந்த அவ்விடத்தில், மாதவம் யாவும் - பெருமைபொருந்திய தவங்களெல்லாம், ஓர் செய்கைகொண்டு நடந்தென - ஒரு வடிவுகொண்டு நடந்தாற்போல, தீது அறு - குற்றமற்ற, மொய்கொள் - பராக்ரமத்தைக்கொண்ட, வீரன் - ரகுவீரனது, முளரி அம்தாளினால் - தாமரை மலர்போன்ற திருவடிப்பொடியினால், மெய்கொள் - (சாபம்நீங்கி) தன்னுருவம்பெற்ற, மங்கை - அகலிகையானவள், அருள் - பெற்ற, முனி - சதாநந்தமுனிவன், மேவினான் - வந்தான்—எ-று. (அ௪)

நடந்தென முனிமேவினான் எனக் கூட்டுக.

647. வந் தெதிர்ந்த முனிவனை வள்ளலும்
சிந்தை யார வணங்கலுஞ் சென்றெதிர்
அந்த மில்குணத் தானெடி தாசிகள்
தந்து கோசிகன் றன்மருங் கெய்தலும்.

(இ-ள்.) வந்து எதிர்ந்த முனிவனை - இவ்வாறுவந்து தோன்றிய சதாநந்தமுனிவனை, வள்ளலும் - ஸ்ரீராமபிரானும், சிந்தை ஆரவணங்கலும் - மனதாரத்தொழுதலும், சென்று எதிர் - சென்றெதிர்ந்த, அந்தம் இல் - முடிவில்லாத, குணத்தான்-

நற்குணங்களையுடைய (சதாநந்தமுனிவன்,) நெடிது - மிகவும், ஆசிகள் தந்து - மங்களாசாசனம்பண்ணி, கோசிகன் மருங்கு - விசுவாமித்திர முனிவனருகில், எய்தலும் - அடைதலும்—எ-று. (அ௫)

வணங்கலும் எய்தலும் என்னும் வினையேச்சங்கள் விரைவுப்பொருளன.

648. கோத மன்றரு கோமுனி கோசிக
மாத வன்றனை மாமுக நோக்கியிப்
போது நீயிவட் போதவிப் பூதலம்
ஏது செய்த தவமென் றியம்பினன்.

(இ-ள்.) கோதமன்தரு - கௌதமமுனிவன்பெற்ற, கோமுனி - முனிசிரேஷ்டனாகிய (சதாநந்தமுனிவன்,) கோசிகமாதவன்தனை - விசுவாமித்திர முனிவனது, மாமுகம்நோக்கி - திருமுகத்தைப் பார்த்து, இப்போது - இப்பொழுது, நீ இவண் போத - நீ இவ்விடத்திற்கு வரும்படி, இப்பூதலம் - இந்த நகரமானது, செய்ததவம் ஏது - பண்ணினதவம் என்னை, என்று இயம்பினன்-என்று உபசார வார்த்தையைச் சொல்லினன்—எ-று. (அ௬)

பூதலம் என்றது இவ்விடத்து நகரத்தை யுணர்த்தினமையின் முதலாகுபெயர்.

649. பூந்தண் சேக்கைப் புனிதனை யேபொரு
வேய்ந்த கேண்மைச் சதானந்த னென்றெனும்
வாய்ந்த மாதவன் மாமுக நோக்கிநூல்
தோய்ந்த சிந்தைக் கௌசிகன் சொல்லுவான்.

(இ-ள்.) பூ-தாமரைப்பூவாகிய, தண்சேக்கை - தண்ணிய ஆசநத்தையுடைய, புனிதனையே-பரிசுத்தனாகிய பிரமதேவனையே, பொருவு ஏய்ந்த-ஒப்பாகப் பொருந்திய, கேண்மை - நட்புக்குணமுள்ள, சதாநந்தன் என்று எனும் - சதாநந்தனென்று சொல்லப்பட்ட, வாய்ந்த மாதவன் - மாதவம்பொருந்தினவரது, மாமுகம் - திருமுகத்தை நூல்தோய்ந்த சிந்தை-நூற்பொருள்களமைந்த மனத்தையுடைய, கௌசிகன் - விசுவாமித்திரமுனிவர், நோக்கி-பார்த்து, சொல்லுவான் - சொல்லுவா ராயினர்—எ-று. (அ௭)

நூல் என்றது நூற்பொருளையாதலால் கருவியாகுபெயர்.

650. வடித்த மர்தவ கேட்டியிவ் வள்ளல்தான்
இடித்த வெங்குரற் றாடகை யாக்கையும்
அடுத்தென் வேள்வியும் நின்னன்னை சாபமும்
முடித்தென் னெஞ்சத் திடர்முடித்தா னென்றான்.

(இ-ள்.) வடித்த - தெளிந்த, மாதவ - பெருந்தவனே, கேட்டி - கேட்பாய், இவ்வள்ளல் - இந்த ஸ்ரீராமன், இடித்த - இடிபோன்ற, வெம்குரல் - வெவ்விய குரலையுடைய, தாடகை - தாடகையின், யாக்கையும் - சரீரத்தையும், அடுத்தென் - அடுத்தவனாகிய எனது, வேள்வியும் - யாகத்தையும், நின் அன்னை சாபமும் - உன் தாயாகிய அகலிகையின் சாபத்தையும், முடித்து - முடிவுசெய்து, என் நெஞ்சத்து இடர் - என்மனத்துயரையும், முடித்தான் - களைந்தவன், என்றான்-என்றுசொன்னார். (அஅ)

முடித்து என்பதற்கு யாக்கையைச் சிதைத்தெனவும், வேள்வியை நிறைவேற்றியெனவும், சாபத்தை நீக்கியெனவும் பொருள்கொள்க.

651. என்று கோசிகன் கூறிட வீறிலா
வன்ற போதனன் மாதவ நின்னருள்
இன்று தானுள தேலரி தியாதிந்த
வென்றி வீரர்க் கெனவும் விளம்பிமேல்.

(இ-ள்.) என்று கோசிகன்கூறிட - என்று விசுவாமித்திர முனிவன் சொல்ல, ஈறு இல்லா - முடிவற்ற, வல்தபோதநன் - வலிய தவமாகிய செல்வத்தை யுடையானாகிய சதாநந்தன், (விசுவாமித்திரமுனிவனை நோக்கி) மாதவ - பெருந்தவனே, நின் அருள் - உமது கிருபை, இன்று உளதேல் - இப்போது இருக்குமாயின், இந்த வென்றிவீரர்க்கு - இந்த வெற்றிவீரர்களுக்கு, அரிது யாது - அரியபொருள் யாது. எனவும் விளம்பி - என்றும் சொல்லி, மேல் - மேலும்—எ-று. (அக)

யாது என்னும் வினாவடியாகப்பிறந்த குறிப்புமுற்று இன்மைகுறித்து நின்றது,

சதாநந்தர் ஸ்ரீராமபிரானை நோக்கி விசுவாமித்திரமுனிவன் வரலாறு இதுவெனச் சொல்லலுற்றனர்.

652. எள்ளில் பூவையு மிந்திர நீலமும்
அள்ளல் வேலையு மம்புத சாலமும்
விள்ளும் வீயுடைப் பானலு மேவுமெய்
வள்ளல் தன்னை மதிமுக நோக்கியே.

(இ-ள்.) எள் இல் - பழியில்லாத, பூவையும் - காயாமலரும், இந்திரநீலமும்-இந்திரநீலரத்நமும், அள்ளல் வேலையும் - சேறுள்ளகடலும், அம்புத சாலமும் - மேகக்கூட்டமும், விள்ளும் வீ உடைபானலும் - விரிகின்ற மலர்களையுடைய கருங்குவளையும், மேவும் - உவமையாகப் பொருந்துகின்ற, மெய் - திருமேனியையுடைய, வள்ளல் தன்னை - ஸ்ரீராமபிரானது, மதிமுகம் நோக்கி - பூர்ண சந்திரனையொத்த முகத்தைப்பார்த்து—எ-று. (கா0)

மேவும் என்பதற்கு உவமையாதற்காக விரும்பி வந்து பொருந்துகின்ற எனினுமமையும்.

653. நறுமலர்த் தொடை நாயக நானுனக்
கறிவுறுத்து வென் கேளிவ் வருந்தவன்
இறை யெனப்புவிக் கீறில்பல் லாண்டெலாம்
முறை யினிற்புரந் தேயருண் முற்றினன்.

(இ-ள்.) நறுமலர்தொடை - நறியமலர் மாலையையணிந்த, நாயக - இறைவனே, நான் உனக்கு அறிவுறுத்துவென் - நான் உனக்கு (ஒருசெய்தியை) தெரிவியாநின்றேன், கேள் - கேட்பாய், இ அருதவன் - இந்த அரிய தவத்தையுடைய விசுவாமித்திரன், புவிக்கு இறை என - உலகத்துக்கு அரசனென்று சொல்லப்பட்டு, ஈறு இல்-முடிவில்லாத, பல் ஆண்டு எல்லாம் - அநேக வருடங்களளவும், முறையினில்புரந்து-ராஜநீதியொழுங்கின்படி காத்து, அருள் முற்றினன் - அருள் முதிர்ந்தவனாகி எ-று.

654. அரைசின் வைகி யறனி னமைந்துழி
விரச கானிடைச் சென்றனன் வேட்டைமேல்

உரைசெய் மாதவத் தோங்கு வசிட்டனும்
பரக வானவன் பாலணைந் தானரோ.

(இ-ள்.) அரசின்வைகி - அரசாட்சியில் தங்கி, அறனின் அமைந்துழி - தரும மார்க்கத்தி லமைந்திருந்தபோது, வேட்டைமேல் - வேட்டையின்மீது விருப்புக் கொண்டு, விரசுகான் இடை - நெருங்கிய காட்டில், சென்றனன் - போய், உரை செய் - யாவரும் புகழ்ந்து சொல்லுதற்குரிய, மாதவத்து - பெரிய தவத்தினால், ஓங்கு - உயர்ந்த, வசிட்டன் ஆம் - வசிட்டனாகிய, பரசுவானவன்பால் - மழுவை யுடைய தேவனாகிய சிவனிடத்தில், அணைந்தான் - கிட்டினான்—எ-று. (கஉ)

அரோ - அசை. வசிட்டர் பரமசிவனது அமிசம், தவமகிமையும் உடையாராத லால் பரசுவானவன் என்றார்.

வேறு.

655. அருந்ததி கணவன் வேந்தற் கருங்கடன் முறையி னாற்றி
இருந்தருள் தருதி யென்ன விருந்துழி யினிது நிற்கு
விருந்தினி யமைப்பெ னென்னாக் சுரபியை விளித்து நீயே
சுரந்தரு ளமிர்த மென்ன வருண்முறை சுரந்த தன்றே.

(அருந்ததிகணவன் - அருந்ததிக்கு நாயகனாகிய வசிட்டன், வேந்தற்கு-விசுவா மித்திரனுக்கு, அருகடன் - அருமையாகிய செய்கடன்களை, முறையின் ஆற்றி - கிரம மாகச்செய்து, இருந்து அருள்தருதி யென்ன - வீற்றிருந்து தயைசெய்யென்று சொல்ல, இருந்துழி - அவ்வாறே யிருந்தபொழுதில், இனிது - இனிதாக, நிற்கு- உனக்கு, விருந்து - விருந்தை, இனி அமைப்பென் என்னா-இனியமைப்பேனென்று, சுரபியைவிளித்து - காமதேநுவை யழைத்து, நீயே - நீதானே, அமிர்தம் - அமிர் தத்தை, சுரந்தருள் என்ன - சுரந்தருளவேண்டுமென்று நியமிக்க, அருள் முறை - (அம்முனிவன்) கட்டளைசெய்த முறையின்படி, சுரந்தது - சுரந்தது—எ-று. (கங)

அன்று ஏ - அசைகள்.

656. அறுசுவைத் தாய வுண்டி யரசநின் னனிகத் தோடும்
பெறுகென வளித்து வேந்தோ டியாவருந் துய்த்த பின்னர்
நறுமலர்த் தாரும் வாசக் கலவையும் நல்க லோடும்
உறுதுயர் தணிந்து மன்ன னுய்த்துணர்ந் துரைக்க லுற்றான்.

(இ-ள்.) (பிறகு வசிட்டர் விசுவாமித்திரரைநோக்கி) அரச - அரசனே, (காம தேநுசுரந்த) அறுசுவைத்து ஆய உண்டி - அறுசுவைகளையுடைய வுணவுகளை, நின் அனிகத்தோடும்-உன் சேனைகளோடும், பெறுக என-பெற்றுண்ணக்கடவாயென்று, அளித்து - கருணையால் கொடுத்து, வேந்தோடு யாவரும் துய்த்தபின்னர் - அரச னோடு எல்லாருமுண்டபிறகு, நறுமலர்தாரும் - நறிய மலர்களாலாகிய மாலைகளையும், வாசக்கலவையும் - பரிமளமுள்ள கலவைச் சந்தனத்தையும், நல்கலோடும்-கொடுத்த லோடும், மன்னன் - அரசன், உறுதுயர்தணிந்து - மிக்க வருத்தந்தணிந்து, உய்த் துணர்ந்து - ஆலோசித்தறிந்து, உரைக்கல் உற்றான் - சொல்லத் தொடங்கினான். ()

அறுசுவை - கைப்பு, தித்திப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கார்ப்பு என்பன உறுதுயர் - நடையாலும் பசியாலும் மிக்கதுயர்,

657. மாதவ வெழுந் திலாய்நீ வயப்புடைப் படைகட் கெல்லாம்
கோதறு மமிர்த மிக்கோ வுதவிய கொள்கை தன்னால்
தீதறு குணத்தான் மிக்க செழுமறை தெரிந்த நூலோர்
மேதகு பொருள்கள் யாவும் வேந்தருக் கென்கை தன்னால்.

(இ-ள்.) மாதவ - பெருந்தவத்தை யுடையவனே, நீ எழுந்திலாய் - நீ எழுந்தா யில்லை, (அப்படியிருக்க) இ கோ - இந்தப்பசுவே, புடை - என் பக்கத்திற் சூழ்ந்திருக்கிற, வயப்படைகட்கு எல்லாம் - வெற்றியை யுடைய சேனைகளுக்கெல்லாம், கோது அறும் - குற்றமற்ற, அமிர்தம - நல்ல வுணவு முதலியவற்றை, உதவிய கொள்கைதன்னால் - கொடுத்த தன்மையால், தீதறு குணத்தான்மிக்க - குற்றமற்ற நற்குணத்தாலுயர்ந்த, செழுமறைதெரிந்த - மேன்மையாகிய வேதங்களை யுணர்ந்த, நூலோர் - அறிஞர்கள், மேதகுபொருள்கள்யாவும் - மேன்மை பொருந்திய எல்லாப் பொருள்களும், வேந்தருக்கு என்கைதன்னால் - அரசருக்கேயுரியவென்று சொல்லுதலால்—எ-று. (௬௫)

செழுமறை யென்றது நாற்பொருட் பயத்ததென்றற்கு.

658. நிற்கிது தகுவ தன்று நீடருஞ் சுரபி தன்னை
எற்கரு ளென்ற லோடு மியம்பலன் யாதும் பின்னர்
வற்கலை யுடையென் யானோ வழங்க லென் வருவதாகில்
கொற் கொள்வே லுழவநீயே கொண்ட கல் கென்றுகூற.

(இ-ள்.) நிற்கு - உனக்கு, இதுதகுவது அன்று - இது உரியதன்று, (ஆதலால்) நீடு அருசுரபிதன்னை - மிகவுமருமையான இந்தப்பசுவை, எற்கு அருள் - எனக்கருள்வாய், என்றலோடும் - என்று சொன்னவளவில், (வசிட்டமுனிவன்) யாதும் இயம்பலன் - ஒன்றும் பேசாதவனாகி, பின்னர் - பிறகு, (விசுவாமித்திரனை நோக்கி) வற்கலை உடையென்-மரவுரியையுடையவனாகிய, யானோ-நானோ, வழங்கலென்-இதைக் கொடுக்குமாற்றலிலேன், வருவது ஆகில் - அது வருவதாயின், கொன்கொள்-பகைவர்க் கச்சத்தைச் செய்கிற, வேல் உழவ - வேலாயுதத்தையுடைய அரசனே, நீயே கொண்டு அகல் - நீயே யழைத்துக்கொண்டுபோ, என்று கூற-என்றுசொல்ல எ-று.

வற்கலை உடையென் என்பதற்கு, மரவுரியாகிய வுடையை யுடையவனாகிய எனப் பொருள் கோடலுமாம், கொற்கொள் என்பதனை கொல்கொள் எனப்பிரித்து, கொலைத்தொழிலைக்கொண்ட எனினும் அமையும், வற்கலையுடையென் யானோ என்னும் ஓ இழிவு சிறப்பு.

659. பணித்தது புரிவெ னென்னாப் பார்த்திப னெழுந்து பொங்கிப்
பிணித்தனன் சுரபி தன்னைப் பெயர்வுழிப் பிணியை வீட்டி
மணித்தடந் தோளி னாற்குக் கொடுத்தியோ மறைகள் யாவும்
கணித்தவெம் பெரும வென்னக் கலைமறை முனிவன் சொல்வான்.

(இ-ள்.) (அதைக்கேட்ட) பார்த்திபன் - அரசன், பணித்தது - சொன்னதை, புரிவென் என்னா - செய்வேனென்று, எழுந்து பொங்கி - எழுந்துகளித்து, சுரபி தன்னை - பசுவை, பிணித்தனன் - கட்டிக்கொண்டு, பெயர்வுழி - புறப்படும்போது, (அந்தப்பசுவானது) பிணியைவீட்டி - கட்டை யறுத்துக்கொண்டு, (வசிட்டனை நோக்கி) மறைகள்யாவும் கணித்த - வேதங்களெல்லாவற்றையும் மதித்தறிந்த, எம் பெரும - எம்பெருமானே, மணி - அழகையுடைய, தடம்தோளினாற்கு-விசாலமான

தோள்களையுடைய விசுவாமித்திரனுக்கோ, கொடுத்தி - என்னைக் கொடுக்கிறாய், என்ன - என்றுகேட்க, கலைமறைமுனிவன் - கலைகளையும் வேதங்களையுமுணர்ந்த வசிட்டமுனிவன், சொல்வான் - (பசுவைநோக்கி) சொல்லுகின்றான்.

கலைகள் அக்கரவிலக்கணம் முதலாக அவத்தைப் பிரயோக மீறாகச் சொல்லப் படுவன. வேதங்களை முற்றுமுணர்ந்த நீநூறு அசுவமேதம் செய்த பலனுடை யானுக் குரிமைப்பொருளாகத் தக்க என்னை ஓரசுவமேதமும் செய்யாதவனுக்குத் தருகிறாயென்றமையால் ஓ இழிவு சிறப்பு.

660. கொடுத்திலென் யானே மற்றைக் குடைகெழு வேந்தன் றானே
பிடித்தகல் வுற்ற தென்னப் பெருஞ்சினங் கதுவு நெஞ்சோ
டிடித்தெழு முரச வேந்தன் சேனையை யானே யின்று
முடிக்குவென் காண்டி யென்று மொய்ம்மயிர் சிலிர்த்த தன்றே.

(இ-ள்.) யானே கொடுத்திலென் - யானே கொடுத்தேனல்லேன், குடைகெழு வேந்தன்தானே - வெற்றிக்குடையையுடைய அரசன் தானே, பிடித்து அகல்வுற்றது என்ன - உன்னைப் பிடித்துக்கொண்டுபோகத் தொடங்கியதென்று சொல்ல, (கேட்ட அப்பசு) பெருசினம் கதுவும்நெஞ்சோடு - பெருங்கோவங்கொண்ட மனத் துடன், இடித்து எழுமுரசம் - இடித்தெழுகின்ற பேரியையுடைய, வேந்தன் - அரச னது, சேனையை - படைகளை, யானே இன்று முடிக்குவென் - நானே இப்போது முடித்துவிடுகிறேன், காண்டி என்று - பார்ப்பாயென்று( முனிவனுடன் சொல்லி விட்டு), மொய் - நெருங்கிய, மயிர் சிலிர்த்தது - தன்னுடம்பின் மயிரைச் சிலிர்த் தது—எ-று. (௧அ)

யானே என்றது வேறோர் உதவியின்றி என்றபடி.

661. பப்பர ரெயினர் சீனர் சோனகர் முதல பல்லோர்
கைப்படை யதனி னோடுங் கபிலைமாட் டுதித்து வேந்தன்
துப்புடைச் சேனை யாவுந் தொலைவுறத் துணித்த லோடும்
வெப்புடைக் கொடிய மன்னன் றனையர்கள் வெகுண்டு மிக்கார்.

(இ-ள்.) (அவ்வாறு அந்தப் பசு மயிர் சிலிர்த்தவுடனே) பப்பரர் - பப்பரரும், எயினர் - மறவரும், சீனர் - சீனரும், சோனகர் - சோனகரும், முதல - முதலான, பல்லோர் - பல மிலேச்சகணங்களும், கைப்படையதனினோடும் - தத்தமது கைப் படையுடனே, கபிலைமாட்டு உதித்து - அந்தப் பசுவினிடத்துத்தோன்றி, வேந்தன்- அரசனது, துப்பு உடை - பலம்பொருந்திய, சேனையாவும் - சேனைகளெல்லாவற் றையும், தொலைவு உற துணித்தலோடும் - மாளும்படி கொன்றைவளவில், வெப்பு உடை - கோவமுள்ள, கொடிய மன்னன் - கொடிய அரசனாகிய விசுவாமித்திர னுடைய, தனையர்கள் - புத்திரர்கள், வெகுண்டுமிக்கார் - கோபித்து மேல் விழுந் தார்கள்—எ-று. (௧௯)

662. சுரபிதன் வலி யிதன்றால் சுருதிநூ லுணர வல்ல
வரமுனி வஞ்ச மென்று மற்றவன் சிரத்தை யின்னே
அரிகுது மென்னப் பொங்கி யடர்த்தன ரடர வன்னான்
எரியெழ விழித்த லோடு மிறந்தனர் குமர ரெல்லாம்.

(இ-ள்.) இது சுரபிதன் வலி அன்று - இது காமதேநுவின் பலமன்று, சுருதி நூல் உணரவல்ல - சுருதிநூற்பொருளை யறியவல்ல, வரம்முனி - மேன்மைபொருந்

திய வசிட்டமுனிவனது, வஞ்சம் என்னு - கபடமென்று, அவன் சிரத்தை - அவன் தலையை, இன்னே - இப்பொழுதே, அரிகுதும் என்ன-அறுப்போமென்று, பொங்கி-கோவமிகுந்து, அடர்த்தனர் - எதிர்த்தார்கள், அடர - எதிர்க்க, அன்னோன் - அந்த வசிட்டமுனிவன், எரி எழ விழித்தலோடும் - நெருப்பெழும்படி விழித்தலோடும், குமரர் எல்லாம் - (அந்த விசுவாமித்திரனுடைய) புத்திரரெல்லாரும், இறந்தனர் - மரணமடைந்தார்கள்—எ-று. (கoo)

விழித்துப் பார்த்தலோடு மென்னாது விழித்தலோடு மிறந்தனர் என்றது. அவரது தவப்பெருமை விளக்குதற்கு.

663. ஐயிரு பதின்மர் மைந்த ரவிந்தமை யரசன் காணு
நெய்பொழி கனலிற் பொங்கி நெடுங் கொடித் தேர்கடாவிக்
கைதொடர் கணையி னோடுங் கார்முகம் வளைய வாங்கி
எய்தனன் முனியுந் தன்கைத் தண்டினை யெதிர்க வென்றான்.

(இ-ள்.) ஐயிருபதின்மர் மைந்தர் - நூறு புத்திரரும், அவிந்தமை - இறந்ததை, அரசன்காணு - அரசன்கண்டு, நெய்பொழி - நெய்சொரிந்த, கனலின் - நெருப்பினும் அதிகமாக, பொங்கி - கோவித்து, நெடுங்கொடிதேர் - நெடிய கொடிகள் கட்டிய ரதத்தை, கடாவி - நடத்தி, கை - கையினிடத்து, தொடர் - வரிசையாய்த் தொடர்ந்த, கணையினோடும் - பாணங்களையுடையானாகி, கார்முகம் - வில்லை, வளைய வாங்கி - வளையவளைத்து, எய்தனன் - பிரயோகித்தான், முனியும் - வசிட்ட முனிவனும், தன் கைத்தண்டினை - தமது கையிலிருந்த யோகதண்டத்தை, (நோக்கி) எதிர்க என்றான் - நீ எதிர்த்திடுக என்று ஏவினான்—எ-று. (கoக)

664. கடவுளர் படைக ளீறாக் கற்றன படைகள் யாவும்
விடவிட முனிவன் றண்டம் விழுங்கிமேல் விளங்கல் காணாத்
தடவரை வில்லி தன்னை வணங்கினன் வழுத்த லோடும்
அடலுறு படையொன் றீயா வன்னவ னகன்றா னன்றே.

(இ-ள்.) கடவுளர் படைகள் ஈறு - தேவாஸ்திரங்கள் இறுதியாக, கற்றன படைகள் யாவும் - தான் பழகின அஸ்திரங்களெல்லாவற்றையும், விடவிட - பிரயோகிக்குந்தோறும், முனிவன் தண்டம் - வசிட்டமுனிவனது தண்டமானது, விழுங்கி - அவைகளையெல்லாமுண்டு, மேல் - மேன்மையாக, விளங்கல்காணு - பிரகாசித்தலை (விசுவாமித்திரன்) பார்த்து, வடவரைவில்லிதன்னை - மேருவில்லியாகிய சிவனை, வணங்கினன் வழுத்தலோடும் - வணங்கித் துதித்தவுடனே, அன்னவன் - அந்தச் சிவன், அடல் உறு - பலம்பொருந்திய, படை ஒன்று - ஒருபடையை, ஈயா- கொடுத்து, அகன்றான் - போய்விட்டான்—எ-று. (கoஉ)

காணு என்பதற்கு வினைமுதல் அதிகாரத்தால் வருவிக்கப்பட்டது. வடதிசையி லுள்ளனவெல்லாம் வடவரையேயாயினும் வில்லியென்னுங் குறிப்பால் மேருவெனப்பட்டது.

665. விட்டனன் படையை வேந்தன் விண்ணுளோ ருலகை யெல்லாம்
சுட்டன னென்ன வஞ்சித் துளங்கினர் முனியுந் தோன்றிக்
கிட்டிய படையை யுண்டு கிளர்ந்தனன் கிளரு மேனி
முட்டவெம் பொறிகள் சிந்தப் பொருபடை முரண திற்றே.

(இ-ள்.) படையை - (அந்த) படையை, வேந்தன் - விசுவாமித்திரன், விட்டனன் - பிரயோகித்தான், விண்ணுளோர் - அதைக்கண்ட தேவர்கள், உலகையெல்

ல்ாம் - எல்லா வுலகங்களையும், சுட்டனன் என்ன - (விசுவாமித்திரன்) நிர்மூலமாக்கினன் என்று, அஞ்சி - பயந்து, துளங்கினர் - நடுங்கினார்கள், முனியும் - (வசிட்ட) முனிவரும், தோன்றி - எதிரில் வந்து, கிட்டிய படையை-நெருங்கி வந்தபடையை, உண்டு - விழுங்கி, கிளர்ந்தனன் - விளங்கினான், கிளரும் - விளங்குகின்ற, மேனி - சரீரத்தினின்றும், முட்டவெம்பொறிகள் சிந்த - ஒன்றோடொன்று தாக்கும்படி வெவ்விய நெருப்புப்பொறிகள் சிதறுதலால், பொருபடை முரண் இற்று - பொருதற்குரிய அந்தப்படையானது வலியழிய—எ-று. (௬0௫)

இற்று செயவெனெச்சத்திரிபு முனியும் தோன்றி பொருபடை முரண் இற்று கிளருமேனி முட்டதெம்பொறிகள் சிந்த, கிட்டியபடையை உண்டு கிளர்ந்தனன் என இசைத்துரைக்க.

666. கண்டன னரசன் காணாக் கலைமறை முனிவர்க் கல்லால்
திண்டிறல் வலியுந் தேசு முளவெனல் சீரி தம்மா
மண்டல முழுதுங் காக்கு மொய்ம்பொரு வலியன் றென்னா
ஒண்டவம் புரிய வெண்ணி யும்பர்கோன் றிசையை யுற்றான்.

(இ-ள்.) அரசன் - விசுவாமித்திரன், கண்டனன்-(அதைக்) கண்டான், காணா-(அவ்வாறு) கண்டு, கலைமறை - கலைகளையும் வேதங்களையுமறிந்த, முனிவர்க்கு அல்லால் - முனிவர்களுக்கேயல்லது, திண்திறல்வலியும் - திண்ணிய வெற்றியைக் கொண்ட பலமும், தேசும் - தேஜஸும், உள எனல்-உளவென்று கருதுதல், சீரிது- அழகிது, அம்மா - ஆச்சரியம், மண்டலம் முழுதும் - பூமிமுழுதையும், காக்கும் - ஆளுகின்ற, மொய்ம்பு - பலமானது, ஒருவலி அன்று என்னா - ஒருபலமல்லவென்று தீர்மானித்து, ஒண்தவம் புரிய எண்ணி - ஒட்பமான தவத்தைச் செய்யக்கருதி, உம்பர்கோன் திசையை உற்றான் - இந்திரதிக்காகிய கீழ்த்திசையை அடைந்தான் எ-று.

ராஜபலத்தினும் தபோபலம் சிறந்ததென்று நிச்சயித்துத் தவஞ்செய்யச் சென்றனனென்பது கருத்து.

667. மாண்டமா தவத்தோன் செய்த வலியையே மனத்தி னெண்ணிப்
பூண்டமா தவத்த னாகி யரசர்கோன் பொலியு நீர்மை
காண்டலு மமரர் வேந்தன் றுணுக்குறு கருத்தி னோடும்
தூண்டின னரம்பை மாருட் டிலோத்தமை யெனுஞ்சொன் மானை.

(இ-ள்.) அரசர்கோன் - அரசர்க்கரசனாகிய விசுவாமித்திரன், மாண்ட - மாட்சிமையடைந்த, மாதவத்தோன்-பெரிய தவத்தையுடைய வசிட்டமுனிவன், செய்த- பண்ணின, வலியையே - வெற்றிச்செயலையே, மனத்தின் எண்ணி - மனத்தினால் நினைத்து, பூண்ட மாதவத்தன் ஆகி - தவத்தொழிலை மேற்கொண்டவனாகி, பொலியும் நீர்மை - பொலிகின்ற தன்மையை, அமரர்வேந்தன் காண்டலும் - இந்திரன் பார்த்தவோடும், துணுக்கு உறு - அச்சம்மிகுந்த, கருத்தினோடும் - மனத்துடன், அரம்பைமாருள் - தெய்வப்பெண்களுக்குள், திலோத்தமை யென்னும் - திலோத்தமையென்று சொல்லப்படுகிற, சொல் மானை-புகழமைந்த மான்போன்ற பெண்ணை, தூண்டினன் - (அவனுடைய தவத்தைக்கெடுத்தற்காக) ஏவினான்—எ-று. (௬0௭)

சொல்மான் - பேசுகிற மானெனினுமாம். எல்லாரும் நிற்க, இந்திரன் அவ்வாறு செய்வதற்குக் காரணமென்னெனின், தவம்செய்து முடித்தவர்களுக்குத் தன்னுலக வின்பங்களைக் கொடுத்துத் தான் நீங்கவேண்டி வருமென்பது.

668. அன்னவள் மேனி காணு வனங்கவேள் சரங்கள் பாயத்
தன்னுணர் வழிந்து காதற் சலதியி னழுந்தி வேந்தன்
பன்னரும் பகல்தீர் வுற்றுப் பரிணதர் தெரிந்த நூலின்
நன்னய முணர்ந்தோ னாகி நஞ்செனக் கனன்று நக்கான்.

(இ-ள்.) அன்னவள் - அந்தத்திலோத்தமையின், மேனிகாணு - மேனியைக் கண்டு, (அதனால்) அநங்கவேள் - மன்மதனுடைய, சரங்கள்பாய - பாணங்கள் பாய்தலால், தன் உணர்வு அழிந்து - தன்னறிவுகெட்டு, காதல் சலதியில் - ஆசையாகிய கடலில், அழுந்தி - அமிழ்ந்து போய், வேந்தன் - விசுவாமித்திரன், பன் அரு - சொல்லுதற்கரிய, பகல் - நாள்கள், தீர்வுற்று - கழிந்து, பருணிதர் - அறிஞர்கள், தெரிந்த - தெரிந்து சொன்ன, நூலின் - நூல்களின், நல்நயம் உணர்ந்தோன் ஆகி - நல்லபொருளை யறிந்தவனாகி, நஞ்சு என - விஷம்போல, கனன்று - கோவித்து, நக்கான் - சிரித்தான்—எ-று. (கo௬)

நூலின் நன்னயமுணர்தலாவது மாதர்பால் மனங்கலங்காதிருத்தல். நகை புரந்துடைக்க சிவனது நகைபோன்றநகை.

669. விண்முழு தாளி செய்த வினையென வெகுண்டு நீபோய்
மண்மக ளாதி யென்று மடவரல் தன்னை யேவிக்
கண்மலர் செவப்ப வுள்ளங் கறுப்புறக் கடிதி னேகி
எண்மரின் வலியனாய யமன்றிசை தன்னை யுற்றான்.

(இ-ள்.) விண் முழுதாளி - இந்திரன், செய்த - பண்ணின, வினை என-தொழிலிதுவென்றுணர்ந்து, வெகுண்டு கோவித்து 'கண்மலர் செவப்ப - கண்மலர் செவக்கவும், உள்ளம் கறுப்பு உற - மனங்கறுக்கவும், நீபோய் - நீசென்று, மண்மகள் ஆதி என்று - பூலோகத்துப் பெண்ணாவாயென்று, மடவரல்தன்னை - திலோத்தமையை, ஏவி - அனுப்பிவிட்டு, கடிதின் ஏகி-விரைவாகப்போய், எண்மரின் வலியனாய - திக்குப்பாலகர் எண்மருள்ளும் திண்ணியோனாகிய, யமன் - யமனது, திசை தன்னை - திசையை, உற்றான் - அடைந்தான்—எ-று. (கoஎ)

யமன்திசைதென்றிசை. யமன்திசையென்றமையான், எண்மர் திக்குபாலகரெனப்பட்டது.

670. தென்றிசை யதனை நண்ணிச் செய்தவஞ் செய்யுஞ் செவ்வி
வன்றிற லயோத்தி வாழு மன்னவன் றிரிசங் கென்பான்
தன்றுணைக் குருவை நண்ணித் தனுவொடுந் துறக்கமெய்த
இன்றெனக் கருளு கென்ன வாண்டிறந் தெய்து கென்றான்.

(இ-ள்.) தென்திசையதனை நண்ணி - தென்றிசையையடைந்து, செய்தவம் - செய்தற்குரியதவத்தை, செய்யும் செவ்வி - செய்யும் சமயத்தில், வன்திறல் - மிக்க வெற்றியையுடைய, அயோத்திவாழும் - அயோத்யையில் வசிக்கிற, மன்னவன் - அரசனாகிய, திரிசங்கு என்பான் - திரிசங்கு என்று சொல்லப்படுவோன், தன் துணை - தனது துணையாகிய, குருவைநண்ணி - ஆசாரியனாகிய வசிட்டனையடுத்து, தனுவோடும் - சரீரத்துடன், துறக்கம்எய்த - சுவர்க்கத்தையடைய, இன்று - இப்போது, எனக்கு அருளுக என்ன - எனக்கு அருள்செய்க என்று பிரார்த்திக்க, (அந்தமுனிவர்) ஆண்டு இறந்து - ஆயுள்கழிந்து, எய்துக என்றான் - அடைவாயென்றுசொன்னார்—எ-று. (கoஅ)

"இல்வாழ்வானென்பான்" என்புழிப்போல, "திரிசங்கு என்பான்" என்ப தில் என்பான் என்னுஞ் செயப்படு பொருள்வினை மூதல்போலக் கூறப்பட்டது, எனப் படுவானெனற்பாலது; செயப்பாட்டு வினைப்பொருளுணாத்தும் படுவிகுதி தொக்கு என்பான் என நின்றதெனினும் அமையும். ஆண்டு - அவ்விடத்து, இறந்து எய்துக - எனவும்பாடம். அதற்கு இறந்தபிறகுசேர்க, எனக்கூறுக.

தம்பூர்வாசாரியனைவிட்டு வேறொ ராசாரியனைத் தேடக்கூடாது

என்பதற்கு மேற்கொள் காண்க.

671. நினக்கொலா தாகி னைய நீணிலத் தியாவ ரேனும்
மனக்கினி யாரைநாடி வகுப்பல்யான் வேள்வியென்னச்
சினக்கொடுந் திறலோய் முன்னர்த் தேசிகற் பிழைத்து வேறோர்
நினைக்கித னாடி நின்றாய் நீசனாய் விடுதி யென்றான்.

(இ-ள்.) அதைக்கேட்டதிரிசங்கு) ஐய - ஐயனே, நினக்கு - உனக்கு, ஒல்லாது ஆகின் - இயையாதாயின், நீள்நிலத்து - பெரிய உலகத்தில், யாவர் ஏனும் - யாவராயினும், மனக்கு இனியாரைநாடி - மனத்துக்கு இனியரானவர்களைத்தேடி, யான்வேள்வி வகுப்பல் என்ன - நான் (அதைக்குறித்து) யாகஞ்செய்வேனென்று சொல்ல, (அதைக்கேட்டவசிட்டர் திரிசங்குவைப்பார்த்து) சினக்கொடுந்திறலோய் - கோவத்தையும் வலியையுமுடைய அரசனே, முன்னர்த்தேசிகற் பிழைத்து - பூர்வாசாரியனைவிட்டு, வேறு ஓர் - வேறொருரு, நினக்கு இதன் - உனக்கிணக்கமானவனை, நாடிநின்றாய் - தேடிநின்றாய், (ஆதலால்) நீசன் ஆய்விடுதி - நீபுலையனாவாய், என்றான் - என்று சபித்தான்—எ-று. (கO௯)

மனக்கு அத்துச்சாரியைதொகுல்.

672. மலருளோான் மைந்தன் மைந்த வழங்கிய சாபந்தன்னால்
அலரியோன் றானும் நாணும் வடிவிழந் தரசர் கோமான்
புலரியங் கமலம் போலும் பொலிவொரீஇ வதனம்பூவில்
பலருமாங் கிகழ்தற் கொத்த படிவம்வந் துற்ற தன்றே.

(இ-ள்.) மைந்த - ஸ்ரீராமா, மலருளோன்மைந்தன - பிரமபுத்திரனாகிய வசிட்டன், வழங்கிய - இட்ட, சாபத்தினால் - சாபந்தன்னால், அரசர் கோமான்-அரசர்க்கரசனாகிய திரிசங்கு, அலரியோன்தானும் நாணும் - சூரியனும் (ஒளியால்) நாணுதற்குரிய, வடிவு இழந்து - ஒளியையிழக்கவும், வதனம் - முகமானது, புலரி அருணோதயத்தில் மலர்கின்ற, அம்கமலம்போலும் - அழகிய தாமரைமலர்போன்ற, பொலிவு ஒரீஇ - பொலிவையிழக்கவும், பூவில் - பூமியிலுள்ள, பலரும் - எல்லாரும், ஆங்கு - அப்பொழுதே, இகழ்தற்கு ஒத்த - இகழ்தற்குரிய, படிவம் - உருவம், வந்து உற்றது - வந்துபொருந்திற்று—எ-று. (ககO)

இழந்து ஒரீஇ என்பன செயவெனெனச்சத் திரிபுகள். பலருமாங்கிகழ்தற் கொத்த படிவமடையவிரும்பானாதலின் வந்துற்றது என்றார்.

673. காசொடு முடியும் பூணுக் கரியதாங் கனகம் போன்று
தூசொடு மணியு முந்நூல் தோற்றருந் தோற்றம் போன்று
மாசொடு கருகி மேனி வனப்பழிந் திடவூர் தந்தான்
சீசியென் றியாரு மெள்ளத் திகைப்பொடு பழுவஞ் சேர்ந்தான்

இ-ள்.) காசொடு - ரத்நஹாரங்களோடும், முடியும் - கிரீடமும், பூணும் - ஆபரணங்களும், கரியது ஆம்கனகம்போன்று - இரும்பையொத்துக் கறுத்துத்தோன்றவும், தூசொடும் - ஆடையுடன், அணியும் - தரித்த, முந்நூல் - முப்புரிநூலும், தோல்தரும் தோற்றம்போன்று - தோலையொத்துத் தோன்றவும், மேனி - சரீரமானது, மாசொடுகெருகி - அழுக்குடன்கறுத்து, வனப்பு அழிந்திட - அழகுகெடவும், ஊர்வந்தான் - ஊருக்குவந்தவனாய், யாரும் - எல்லாரும், சீசி என்று எள்ள - சீசீயென்றிகழ்தலால், (மறுபடியும்) திகைப்பொடு - திகைப்புடன், பழுவம்சேர்ந்தான் - காட்டைச்சேர்ந்தான்—எ-று, (கக௧)

போன்று இரண்டும் செயவெனச்சத்திரிபுகள்

674. கானிடைச் சிறிது வைகல் கழித்தொர் நாட்கௌசிகப்பேர்க்
கோனினி துறையுஞ் சோலை குறுகினன் குறுக வன்னான்
ஈனனீ யாவ னென்னை நேர்ந்ததிவ் விடையி னென்ன
மேனிகழ் பொருள்க ளெல்லாம் விளம்பினன் வணங்கி வேந்தன்.

(இ-ள்.) கான் இடை - காட்டினிடத்தில், சிறிதுவைகல்கழித்து - சிலநாள்கழித்துவருகையில், ஓர்நாள் - ஒருநாள், கௌசிகப்பேர்கோன் - கௌசிகனென்கிற பெரையுடைய அரசன், இனிது உறையும் சோலை - இனிதாக வசிக்கின்ற சோலையை, குறுகினன் - நெருங்கினான், குறுக - நெருங்கின அளவில், அன்னான் - அந்தக்கௌசிகன், ஈனன் நீயாவன் - நீசனாகிய நீயாவன், இவ்விடையின் சேர்ந்தது என்னை - இவ்விடத்தில் உனக்குச்சம்பவித்ததுயாது, என்ன - என்றுகேட்க, வேந்தன் - அரசனாகிய திரிசங்கு, வணங்கி - அந்த விசுவாமித்திரனைவணங்கி, மேல் நிகழ்பொருள்கள் எல்லாம் - மேல்நடந்தசெய்திகளெல்லாவற்றையும், விளம்பினன் - சொன்னான்—எ-று. (கக௨)

675. இற்றதோ வெனநக் கன்னான் யானிரு வேள்வி முற்றி
மற்றுல களிப்பெ னென்னு மாதவர் தம்மைக் கூவச்
சுற்றுறு முனிவர் யாருந் தொக்கனர் வசிட்டன் மைந்தர்
கற்றில மரசன் வேள்வி கனற்றுறை புலையற் கீவான்.

(இ-ள்.) அன்னான் - (அதைக்கேட்ட அந்தவிசுவாமித்திரன்) இற்றதோ எனநக்கு - உனக்கு நேர்ந்தது இவ்வளவுதானாவென்று சிரித்து, (அரசனை நோக்கி) யான் - நான், இருவேள்விமுற்றி - பெரியயாகத்தைமுடித்து, மற்று உலகு அளிப்பென் என்னு - பரலோகத்தைக் கொடுப்பேனென்றுசொல்லி, (யாகஞ்செய்தற்பொருட்டு) மாதவர்தம்மைக்கூவ - முனிவரையழைக்க, சுற்று உறும் முனிவர்யாரும் - சுற்றிலுமுள்ள முனிவரெல்லாரும், தொக்கனர் - கூடினார்கள், வசிட்டன் மைந்தர் - வசிட்டபுத்திரர், அரசன் - அரசனானவன்செய்கிற, வேள்வி - யாகத்தையும், கனல்துறை - அக்கினிகாரியத்தின் வகையையும், புலையற்கு ஈவான் - சண்டாளனுக்குக்கொடுக்க, கற்றிலம் - நாங்கள் கற்றோமில்லை—எ-று. (கக௩)

நக்கு, தொக்கனர், என்பன பகுதியிரட்டிக் காலங்காட்டின. அரசன் யாகத் தலைவனாதலும், புலையன் வேள்வி கனற்றுறைகட்குரியனாதலும் நாங்கள் கண்டிலலம் என்பது கருத்து.

676. என்றுரைத் தியாங்க ளொல்லோ மென்றன ரென்னப் பொங்கிப்
புன்றொழிற் கிராத ராகிப் போகெனப் புகற லோடும்

அன்றவ ரெயின ராகி யடவிக டோறுஞ் சென்றார்
நின்றுவேள் வியையு முற்றி நிராசனர் வருக வென்றான்.

(இ-ள்.) என்று உரைத்து - என்று சொல்லி, யாங்கள் ஒல்லோம் என்றனர் - நாங்கள் (இந்தக்காரியத்துக்) கிசையோம் என்றார்கள், என்ன - என்றுசொன்ன வளவில், பொங்கி - கோவித்து, (அவர்களைநோக்கி) புல்தொழில் - இழிதொழிலைச் செய்கிற, கிராதர்ஆகி - வனசரராகி, போக எனா - போவீர்களாகவென்று, புகறலோடும் - சொல்லுதலோடும், அன்று-அப்பொழுதே, அவர் - அந்தவசிட்டபுத்திரர், எயினர் ஆகி - கிராதராகி, அடவிகள்தோறும் சென்றார் - காடுகள்தோறும் போனார்கள், (பிறகு அந்தவிசுவாமித்திரர்) நின்று - (யாகநாரியத்தில்சலியாது) நின்று, வேள்வியையும்முற்றி-யாகத்தையுமுடித்து, நிராசனர் - தேவர்களே, வருக என்றான் - வரக்கடவீரென்றழைத்தான்—எ-று. (கசச)

677. அரைசனிப் புலையற் கென்னே யனற்றுறை முற்றி யெம்மை
விரசுக வல்லை யென்பான் விழுமிதென் றிகழ்ந்து நக்கார்
புரசைமா களிற்று வேந்தைப் போகநீ துறக்கம்யானே.
உரைசெய்தேன் றவத்தி னென்ன வோங்கினன் விமானத் தும்பர்.

(இ-ள்.) (அப்படியழைக்கப்பட்ட தேவர்கள்) அரசன் - அரசனானவன், இப்புலையற்கு - இந்தப்புலையன் பொருட்டு, அனல்துறைமுற்றி - அக்நிகாரியத்தை முடித்து, எம்மை எங்களைநோக்கி, வல்லை - விரைவாக, விரசுக என்பான் - வரக்கடவீரென்று அழைக்கின்றவனானான், என் - இது என்னவிபரீதம், விழுமிது - இது மேன்மையான காரியந்தான், என்று இகழ்ந்து - என்றுபரிஹஸித்து, நக்கார் - சிரித்தார்கள், (அதைக்கண்டமுனிவன்) புரசை - புரசையையணிந்த, மா - பெரிய, களிற்றுவேந்தை - யானைகளையுடைய திரிசங்குமன்னனைநோக்கி, நீதுறக்கம்போக - நீசுவர்க்கலோக மடையக்கடவாய், தவத்தின் - தவவலியால், யானே உரை செய்தேன் - நானேசொன்னேன், என்ன - என்றுசொல்ல, (அந்த அரசன்) விமானத்து உம்பர் ஓங்கினன் - விமானத்தின்மேலேறி உயர்ந்தான்—எ-று. (ககரு)

புரசை என்பது யானைக்கழுத்தணிகயிறு. அரசருக்கின்றியமையாத அங்கம் நான்குள்ளும் தேரும்யானையும், சிறந்தனவாதலால் ஆசிரியர் பலவிடங்களினும் தேர்வேந்து, களிற்றுவேந்து எனக் கூறுவாராயினர். வடநூலாரும் ரதகஜ துரக பதாதிகள் என்று முன்னர்த்தேரையும் களிற்றையும் வைத்து, அவற்றின் பின்னர்த் துரகத்தையும் பதாதிகளையும் வைத்துரைப்பதற்குக் காரணமுமிது.

678. ஆங்கவன் றுறக்க மெய்த வமரர்கள் வெகுண்டு நீசன்
ஈங்குவந் திடுவ தென்னே யிருநிலத் திழிக வென்னத்
தாங்கலில் கவிழ்வான் மற்றுத் தாபத சரண மென்ன
ஓங்கின னின்னி லென்ன வுரைத்துரு மொக்க நக்கான்.

(இ-ள்.) ஆங்கு - அவ்வாறு, அவன் - அந்த அரசன், துறக்கம் எய்த - சுவர்க்கத்தையடையச்செல்ல, (கண்டு) அமரர்கள் - தேவர்கள், வெகுண்டு - கோவித்து, நீசன் - சண்டாளனாகிய நீ, ஈங்கு - இவ்விடத்திற்கு, வந்திடுவது - வருவதற்குக் காரணம், என் - யாது; இருநிலத்து - பெரிய நிலவுலகத்திற்றானே, இழிக என்ன - இறங்குக வென்றுதள்ள, தாங்கல் இல் - ஆதாரமில்லாது, கவிழ்வான் - குப்புற விழுவோனாகிய திரிசங்குமஹாராஜன், தாபத - முனிவனே, சரணம் என்ன-அடைக்கலமென்று சொல்ல, (அதைக்கேட்ட முனிவன்) ஓங்கினன் - ஊயுரவெழும்பி,

நில்நில் என்ன இரைத்து - நில்நில்லென்றுசொல்லி, உரும் ஒக்க நக்கான் - இடிமுழக்கத்தை நிகர்க்கும்படி சிரித்தான்-எ-று. (௬௭௮)

இல் என்னும்பண்படி வினையெச்சப் பொருள்தந்துநின்றது. நில்நில் விரைவு பற்றிவந்த அடுக்கு. கவிழ்வான் என மேல்வருதலால் இழிக என்ன என்பதற்கு, இறங்குகவென்றுதள்ள எனப் பொருளுரைக்கப்பட்டது.

679. பேணலா திகழ்ந்த விண்ணோர் பெரும்பத முதலா மற்றைச்
சேண்முழு தமைப்ப லென்னாச் செழுங்கதிர் கோணாடிங்கள்
மாணொளி கெடாது தெற்கு வடக்கவாய் வருக வென்று
தாணுவோ டூர்வ வெல்லாஞ் சமைக்குவெ னென்னும் வேலை.

(இ-ள்,) (அப்படிநகைத்தபிறகு) பேணலாது இகழ்ந்த-எமதுசொல்லைமதிக்காமல் அவமதித்த, விண்ணோர் - தேவர்களுடைய, பெருபதம் முதல் ஆ-பெரியபதவிகள் முதலாக, மற்றைசேண்முழுது - மற்றவிண்ணுலகமுழுதையும், அமைப்பல் என்னா-அமைப்பேனென்றுசொல்லி, செழுகதிர்-செழுமையான கதிர்களுள்ள சூரியனும், கோள்-கிரகங்களும், நாள்-நக்ஷத்ரங்களும், திங்கள் - சந்திரனும், மாண் ஒளி கெடாது-மாட்சிமைப்பட்ட ஒளிமழுங்காமல், தெற்குவடக்கு ஆய்-தெற்குவடக்கின்கண்ணவாய், வருக என்று-வரக்கடவனவென்று நியமித்து, தாணுவோடு-நிலையியற்பொருள்களோடு, ஊர்வ எல்லாம் - இயங்கியற்பொருள்களாகிய எல்லாவற்றையும், சமைக்குவென் என்னும்வேலை-உண்டாக்குவேனென்று நினைக்குங்காலத்தில்—எ-று

கோள் என்றது சிறப்புநோக்கி வேறெடுத்தோதப்பட்ட இருசுடர்களையொழித்தொழிந்த கிரகங்களை.

680. நறைத்தரு வுடைய கோனு நான்முகக் கடவு டானும்
கறைத்தரு களனு மற்றைக் கடவுளர் பிறருந் தொக்கும்
பொறுத்தருண் முனிவ நின்னைப் புகல்புகுந் தவனைபோற்றும்
அறத்திற னன்று தாரா கணத்தொடு மமைக வன்னான்

(இ-ள்.) நறை - மதுவுமணமுமுள்ள, தரு - கற்பகத்தருவை, உடை - உடைய, கோனும்-தேவேந்திரனும், நான்முகக்கடவுள்தானும்-பிரமதேவனும், கறைதருகளனும் - விஷகண்டத்தையுடையசிவனும், மற்றைக்கடவுளர் - (உம்) மற்றைத்தேவர்களும், பிறரும் - ஏனைமுனிவர் முதலானோர்களும், தொக்கு-ஒருங்குகூடி, முனிவ-முனிவனே, பொறுத்தருள்-க்ஷமித்தருள்வாய், நின்னை-உன்னை, புகல் புகுந்தவனை-அடைக்கலம் புகுந்தவனை, போற்றும் - காப்பாற்றுகின்ற, அறத்திறன்நன்று-தருமத்தின்நன்மை நன்றாக இருக்கிறது, அன்னான் - அந்தத்திரிச்சங்கு என்பவன், தாராகணத்தொடும் அமைக-நக்ஷத்ரதொகுதியோடு சேர்ந்திருக்கக்கடவன்—எ-று. ()

கறைதருகளன் எனற் பாலது கறைத்தருகளன் என எதுகைநோக்கித் தகரவொற்றுமிக்கது, பிறரும் என்றது முனிவர் முதலாயினோரை யாதலால் கடவுளர் என்பத னிறுதியில் உம்மைசேர்க்கப்பட்டது.

681. அரசமா தவனீ யாதி யைந்துநாட் டென்பால் வந்துன்
புரைவிளக் கிடுக வென்னாக் கடவுளர் போய பின்னர்
நிறைதவன் விரைவி னேகி நெடுங்கடற் கிறையவன் வைகும்
உரவிட மதனை நண்ணி யுறுதவ முஞற்றுங் காலை,

(இ-ள்.) அரசமாதவன்நீ அதி-நீராஜரிஷியாகக்கடவாய், ஐந்துநாள் - (உன்னால் படைக்கப்பட்டவற்றோடு) ஐந்துநாண்மீன்கள், தென்பால்வந்து - தென்றிசையில் வந்து, உன்புரை விளக்கிடுக - உன் ஆச்சிரமத்து விளக்காகி ஒளிசெய்யக்கடவன, என்று-என்றுசொல்லி, கடவுளர் - (பிரமன் சிவன் இந்திரன் முதலிய) தேவர்கள், போயபின்னர்-போனபின்பு, நிரைதவன் - முறையாகியதவத்தையுடையவன், விரைவின் ஏகி - விரைவாகப்போய், நெடு-நெடிய, கடற்கு - கடலுக்கு, இறைவன்-தலைவனாகியவருணன், வைகும் - தங்குகின்ற, இடமதனை நண்ணி - வலிய இடத்தைச் சேர்ந்து, உறுதவம்-மிக்கதவத்தை, உஞற்றும் காலே-முயன்றுசெய்யுங்காலத்தில்.

ஐந்துநாண்மீன்களாவன-அநுஷம், கேட்டை, மூலம், பூராடம், உத்திராடம் என்பன. இவைபடைப்புக்காலந்தொட்டு வடக்கிலிருந்தன தேவர்களால் இம்முனி விஷயமாத் தெற்கில் பிரகாசிக்கும்படி நியமிக்கப்பட்டன, ஆதலால் அசுவினிமுதல் விசாகம்வரையிலுள்ள இருபத்திரண்டுநாண் மீன்களே வடக்கில் இப்பொழுது காணப்படுவன.

அம்பரீஷமஹாராஜன் சுனச்சேபனை விலைக்குக்கொண்டது.

682 குதைவரி சிலைவாட் டானைக் கோமக னம்ப ரீடன்
கதைதரு மொழியன் வையத் துயிர்க்குயி ராய தோன்றல்
வதைபுரி புருட மேதம் வகுப்பவோர் மைந்தற் கொள்வான்
சிதைவிலன் கனகந் தேர்கொண் டடவிக டுருவிச் சென்றான்.

(இ-ள்.) குதை-குதையையும், வரி-கட்டுகளையுமுடைய, சிலை-வில்லையும், வாள்-வாளையும்தரித்த, தானை-சேனையையுடைய, கோமகன்-ராஜகுமாரனும், சுதைதரும் மொழியன் - அமுதம்போன்ற மதுரவசநமுள்ளவனும், வையத்து - உலகிலுள்ள, உயிர்க்கு-உயிர்களுக்கு, உயிர் ஆய-உயிராயிருக்கிற தோன்றல்-பெருமையிற்சிறந்தவனுமாகிய, அம்பரீடன்-அம்பரீடனென்பவன், வதைபுரி-வதைசெய்தற்குரிய,புருடமேதம்வகுப்ப-புருஷமேதம்செய்ய, ஓர்மைந்தன் கொள்வான்-ஒருசிறுவனைக்கொள்ளும்பொருட்டு, சிதைவு இலன்-சலநமில்லாதவனாய்,கனகம்-(வேண்டிய) பொன்னை, தேர்கொண்டு - தேர்மேல் வைத்துக்கொண்டு, அடவிகள் - காடுகளில், துருவிசென்றான்-தேடிசசென்றான்—எ-று. (கஉ0)

இனியமொழியனும் சீவகருணையுள்ளவனுமா யிருப்பினும், கனகத் தேர் கொண்டு என்றமையான் குதைவரிசிலை வாட்டானைக்கோமகன் என்றார். வரி-நீண்டவெனினுமமையும். குதை-வில்லம்புகளின் அடிக்கட்டு.

683. நற்றவ ரிசிகன் வைகு நனைவரும் பழுவம் நண்ணிக்
கொற்றவன் வினவ லோடு மிசைந்தனர் குமரர் தம்முள்
பெற்றவ ளிளவ லெற்கே றென்றனள் பிதாமுன் னென்றான்
மற்றைய மைந்த னக்கு மன்னவன் றன்னை நோக்கி.

(இ-ள்.) (அவ்வாறு சென்ற) கொற்றவன் - அரசன், நல்தவம், நல்லதவத்தையுடைய, ரிசிகன்-இருசிகன். வைகும்-வசிக்கிற, நனைவரும்-பூவரும்புகள் மலர்கின்ற, பழுவம்நண்ணி - காட்டையடைந்து, வினவலோடும் - (அவரைக்) கேட்டலோடும், இசைந்தனர் - (அம்முனிவரும்பத்தினியும்) இசைந்தார், (ஆயினும்) குமரர்தம்முள்-புத்திரர்மூவருள், பெற்றவள்-தாயானவள், இளவல்-இளையவனாகிய சுனகன், எற்கே என்றனள் - எனக்கேயுரியனென்றாள், பிதா - தந்தையானவன், முன் - மூத்தவன்,

(எற்கே) என்றான் - எனக்கேயுரியனென்றான், மற்றையமைந்தன்-எஞ்சிநின்ற சுனச்சேபனென்கிற புத்திரன், நக்கு - அவ்விருவருடைய அறிவில்லாமைக்கு சிறித்து, மன்னவன் தன்னைநோக்கி-அரசனைநோக்கி—எ-று. (கஉக)

இளவல், முன் மற்றையமைந்தன், என்றமையால் மூவரென்பது கிடைத்தது.

684. கொடுத்தருள் வெறுக்கை வேண்டிற் றொற்கமாம் விழுமங்குன்ற
எடுத்தெனை வளர்த்த தாதைக் கென்றவற் றொழுது வேந்தன்
தடுப்பருந் தேரி னேறித் தடையிலாப் படர்த லோடும்
சுடர்க்கதிர்க் கடவுள் வானத் துச்சியஞ் சூழல் புக்கான்.

(இ-ள்.) என்னை எடுத்துவளர்த்த - என்னையேந்திவளர்த்த, தாதைக்கு - தந்தைக்கு, ஒற்கம்ஆம்-தரித்திரமாகிய, விழுமம்குன்ற-துன்பங்கெடும்படி, வேண்டிற்று வெறுக்கை - விரும்புவதாகிய திரவியத்தை, கொடுத்தருள் என்று-கொடுத்தருள்வாயென்று, அவன்தொழுது-அந்தத் தந்தையை வணங்கி, வேந்தன்-அரசனது, தடுப்பு அரு-தடையற்ற, தேரின் ஏறி-தேர்மேலேறி, தடை இலா-தடையில்லாமல், படர்தலோடும்-செல்லுதலோடும், சுடர்-ஒளிபொருந்திய, கதிர்-கிரணங்களையுடைய, கடவுள்-சூரியபகவான், வானத்து உச்சி - ஆகாயத்துச்சியாகிய, அம்-அழகாகிய, சூழல்-இடத்தில், புக்கான்-பிரவேசித்தான்—எ-று. (கஉஉ)

685. அவ்வயி னிழிந்து வேந்த னருங் கடன் முறையினாற்றச்
செவ்விய குரிசில் தானுஞ் சென்றன னியமஞ் செய்வான்
அவ்விய மவித்த சிந்தை முனிவனை யாண்டுக் காணுக்
கவ்வையி னோடும் பாத கமலமதுச்சி சேர்ந்தான்.

(இ-ள்.) வேந்தன்-அரசன், அவ்வயின் இழிந்து-அவ்விடத்திலிறங்கி, அருகடன்-அரிய நித்தியகர்மமாகியகடனை, முறையின் ஆற்ற-கிரமமாகச்செய்யாநிற்க, செவ்விய குரிசில்தானும் - செவ்வைக்குணமுள்ள, சிறுவனும், நியமம் செய்வான்சென்றனன்-நியமங்களைச்செய்யப்போனான், ஆண்டு - (போயின) அவ்விடத்தில், அவ்வியம், அவித்த-பொறாமைத்தீயை அவித்த, சிந்தை - மனத்தையுடைய, முனிவனை-விசுவாமித்திரமுனிவனை, காணு-கண்டு, கவ்வையினோடும் - கவலையோடு, பாதகமலமது - அவருடைய பாததாமரையை, உச்சிசேர்த்தான்-சிரசிற்சூடினான்—எ-று. (கஉங)

686. விறப்பொடு வணக்கஞ் செய்த விடலையை யினிது நோக்கிச்
சிறப்புடை முனிவ னென்னே தெருமரல் செப்பு கென்ன
அறப்பொரு ளுணர்ந்தோ யென்ற னன்னை நும் முன்னை யென்னை
உறப்பொருள்கொண்டு வேந்தற் குதவின னென்றா னுற்றோன்.

(இ-ள்.) விறப்பொடு - அச்சத்தோடு, வணக்கம்செய்த-வணங்கிய, விடலையை-சிறுவனை, இனிதுநோக்கி - இனிதாகப்பார்த்து, சிறப்பு உடை-முனிவன் - தவப்பெருமையுள்ளமுனிவன், தெருமரல் என்-கலக்கத்துக்குக் காரணமென்ன, செப்புக என்ன-சொல்லுக என்றுகேட்க, உற்றோன்-அவ்விடத்தடைந்த சிறுவன், (முனியை நோக்கி) அறப்பொருள் உணர்ந்தோய் - அறநூற்பொருளை யறிந்தவனே, என்றன் அன்னை - எனக்குத்தாயாகிய, நும்முன்னை - உனக்குமூத்தவள், உற - மிகுதியாக,

பொருள்கொண்டு-திரவியத்தைப்பெற்றுக்கொண்டு, என்னை - என்னை, வேந்தற்கு-அரசனுக்கு, உதவினன்-கொடுத்தாள், என்றான்-என்றுசொன்னான். (௬௮௪)

687. மைத்துன ளோடு முன்னாள் வழங்கிய முறைமை கேளாத்
தத்துற லொழிநீ யானே தடுப்பெனின் னுயிரை யென்னாப்
புத்திரர் தம்மை நோக்கிப் போகவேந் தோடு மென்ன
அத்தகு முனிவன் கூற வவர்மறுத் தகறல் காணா.

(இ-ள்.) (அவ்வாறுசொல்லக்கேட்ட) அ-அந்த, தகும்முனிவன் - தகுதியாகிய முனிவன், மைத்துனனோடு-மைத்துனனுடன், முன்னாள்-மூத்தாள், வழங்கிய-(சிறுவனை) கொடுத்த, முறைமைகேளா - முறைமையைக்கேட்டு, (அச்சிறுவனை நோக்கி) நீதத்துறல் ஒழி-நீகலங்குதலைவிட்டுவிடு, நின் உயிரை-உன்பிராணனை, யானேதடுப்பென் - நானேதடைசெய்வேன், என்னா - என்றுசொல்லி விட்டு, புத்திரர்தம்மை நோக்கி-தன்புத்திரரைப்பார்த்து, வேந்தோடும்-அரசனோடும், போக என்னா-போவீராகவென்று, கூற-சொல்ல, அவர்-அவர்கள், மறுத்து-அப்பணியைமறுத்து, அகறல்-நீங்குதலை, காணா-கண்டு—எ-று. (௬௮௫)

688. எழுங்கதி ரவனு நாணச் செவந்தன னிருக ணெஞ்சம்
புழுங்கினன் வடவை தீய மயிர்ப்புறம் பொறியி னுள்ள
அழுங்கலில் சிந்தை யிர்நீ ரடவிக டோறுஞ் சென்றே
ஒழுங்கறு புளிஞ ராகி யுறுதுய ருறுகவென்றான்.

(இ-ள்.) எழும்-உதிக்கின்ற, கதிரவனும் - சூரியனும், நாண-வெட்க, இருகண் செவந்தனன் - இரண்டுகண்களுஞ் செவந்து, நெஞ்சம் புழுங்கினன் - மனம்புழுங்கி, வடவை - வடவைத்தீயும், தீய - தீய்ந்துபோக, மயிர்-மயிர் நிறைந்த, புறம்-உடலின் மேற்புறமானது, பொறியினுள்ள - தீப்பொறிகளால் அதிகப்பட, (அவர்களை நோக்கி) அழுங்கல் இல் - வருந்துதலில்லாத, சிந்தையீர் - மனமுள்ளவர்களே, நீர்-நீங்கள், ஒழுங்கு அறு-நாகரிகமற்ற, புளிஞர் ஆகி-வேடர்களாகி, அடவிகள்தோறும் சென்று-காடுகள்தோறும்போய், உறு - அவ்விடங்களில் வந்தடைகின்ற, துயர்-துன்பத்தை, உறுக என்றான்-அநுபவிப்பீர்களென்றுசொன்னான்—எ-று. (௬௮௬)

689. மாமுனி வெகுளி தன்னால் மடிகலா மைந்தர் நால்வர்
தாமுறு சவர ராகச் சபித்தெதிர் சலித்த சிந்தை
ஏமுற லொழிக வின்னே பெறுகென விரண்டு விஞ்சை
கோமரு கனுக்கு நல்கிப் பின்னருங் குணிக்க லுற்றான்.

(இ-ள்.) மாமுனி வெகுளிதன்னால் - பெருமைபொருந்திய வசிட்டமுனிவனது கோபத்தால், மடிகலா - இறவாத, மைந்தர்நால்வர் - தன்புத்திரர் நால்வரும், உறுசவரர் ஆக-மிக்கவேடர்களாக, சபித்து - சபித்துவிட்டு, எதிர்-எதிரிலுள்ள, கோ-அழகிய, மருமகனுக்கு - மருமகனுக்கு, சலித்தசிந்தை - நடுங்கினமனது, ஏமுறல் ஒழிக-துன்பப்படுதலை ஒழிவாயாக, இரண்டுவிஞ்சை-இரண்டுமந்திரங்களை, இன்னேபெறுக என-இப்பெழுதே பெறக்கடவாயென்று, நல்கி-உபதேசித்து, பின்னரும் - மேலும், குணிக்கல் உற்றான்-(அவனுக்கு) அறிவுறுத்தலானான்—எ-று. (௬௮௭)

நால்வர் என்பதனீற்றல் முற்றும்மைதொக்கது. காமுறல் என்பதிற்போல ஏமுறல் என்பதில் நிலைமொழியிறுதி யம்முக்குறைந்தது.

690. அரைசனோ டேகி யூபத் தணைக்குபிம் மறையை யாய்தி
விரசுவர் விண்ணு ளோரும் விரிஞ்சனும் விடைவலோனும்
உரைசெறி வேள்வி முற்று முனதுயிர்க் கீறுண் டாகா
பிரசமென் றாரோ யென்னப் பழிச்சொடும் பெயர்ந்து போனான்.

(இ-ள்.) பிரசம்-தேனுள்ள, மெல்-மிருதுவாகிய, தாரோய்-பூமாலையை யணிந்தவனே, அரைசனோடு எகி-நீ அரசனுடன்சென்று, யூபத்து அணைக்குபு-யாகத்தம்பத்தையணைத்து, இமறையை ஆய்தி - இந்தமந்திரங்களை ஜபித்துக்கொண்டிரு, (அவ்வாறுஜபித்தால்) விண் உள்ளோரும் - தேவர்களும், விரிஞ்சனும் - பிரமதேவனும், விடைவலானும்- உருத்திரனும், விரசுவர் - வந்துசேர்வார்கள், உரைசெறிவேள்வி-புகழ்மிகுந்தயாகமும், முற்றும் - முடியும், உனது உயிர்க்கு - உன்னுயிருக்கு, ஈறு உண்-டாகா-முடிவுண்டாகமாட்டாது, என்ன-என்றுசொல்ல, (கேட்ட அச்சிறுவன்) பழிச்சொடும்-துதியோடும், பெயர்ந்து போனான்-நீங்கிப்போனான்—எ-று. (கஉஅ)

வேள்வி என்பதனிறுதியில் இறந்தது தழீ இய எச்சவும்மைதொக்கது பழிச்சு முதனிலைத்தொழிற்பெயர்.

691. மறைமுனி யுரைத்த வண்ண மகத்துறை மைந்த னுய
சிறையுறு கலுழ னன்னஞ் சேமுதற் பிறவு மூரும்
இறைவர்தொக் கமரர் சூழ விளவல்தன் னுயிரும் வேந்தன்
முறைதரு மகமுங் காத்தார் வடதிசை முனியுஞ் சென்றான்.

(இ-ள்.) மைந்தன்-அந்தச்சிறுவன், மறைமுனி உரைத்தவண்ணம்-வேதங்களையுணர்ந்த விசுவாமித்திர முனிசொன்னபிரகாரம், மகத்துறை - வேள்வித்துறையில், ஆய-(மந்திரங்களை) ஜபிக்க, சிறை உறுகலுழன் - சிறைவளமுள்ளகருடனும், அன்னம்-அன்னமும், சே-இடபமும், முதல் - முதலாகிய, பிறவும் - பிறவாகனங்களையும், ஊரும்-செலுத்துகின்ற, இறைவர்-திருமால் பிரமதேவன் உருத்திரன் என்கிற தலைவர்கள்முதலியோர், அமரர்சூழதொக்கு - தேவர்கள் சூழும்படிகூடி, இளவல், தன் உயிரும்-அந்தச்சிறுவனுயிரையும், வேந்தன்-அரசன், முறைதரு - வேதவிதிமுறைப்படிசெய்கிற. மகமும்-யாகத்தையும், காத்தார்-காத்தார்கள், முனியும்-விசுவாமித்திர முனிவனும், வடதிசைசென்றான்-வடதிசையிற்போனான்—எ-று. ()

692. வடாதிசை முனியு நண்ணி மலர்க்கர நாசி வைத்தாங்
கிடாவுபிங் கலையா னைய விதயத்து டெழுத்தொன் றெண்ணி
விடாதுபற் பருவ நிற்ப மூலமா முகடு விண்டு
தடாதிருட் படலை மூடச் சலித்ததெத் தலமுந் தாவி.

(இ-ள்.) முனியும்-அந்தக்கௌசிகமுனிவனும், வடதிசைநண்ணி-வடதிசையை யடைந்து, மலர்கரம்-தாமரைமலர்போன்றகையை, நாசிவைத்து- நாசிமேல்வைத்து, ஆங்கு-அவ்விடத்து, இடாவு-இடைகலையானது, பிங்கலையால்நைய-பிங்கலையாலடங்கும்படி, இதயத்தூடு-இதயத்தில், எழுந்து ஒன்று - ஓரெழுத்தாகிய பிரணவத்தை, எண்ணி-தயானித்து, விடாது-நீங்காமல், பல்பருவம்நிற்ப-பலவருடங்கள்நிற்க, மா-

பெரிய, மூலமுகவிண்டு-மூலமுகவிரிந்து, தடாது-தடுக்கப்படாமல், இருட்படலை தாவிமூட-இருட்செறிவுதாவிப்போர்த்துக்கொண்டதனால், எத்தலமும் - எவ்வுலகமும், சலித்தது-நடுங்கினது-எ-று. (கூ௲0)

வடாதிசை நீட்டல்பெற்றது. மேற்றிருவிருத்தத்தி னிறுதியில் "வடதிசை முனியும்சென்றான்" என்றுகூறி, மீட்டு, "வடாதிசைமுனியும் நண்ணி" என அநுவதித்தது அவனது தவம்முற்றும்பெறுவது அத்திசையிலென்பதை யறிவுறுத் தற்குப்போலும். இடாவென்னும் வடமொழி இடையென்றாகிப் பின்னர்க்குறுக்கல் பெற்று வழங்கும்.

வேறு.

693\. எயி லெரித்தவன் யானை யுரித்தநாள்
பயி லுறுத்துரி போர்த்தநன் பண்பெனப்
புயல்விரித் தெழுந்தா லெனப் பூதலம்
குயி லுறுத்திக் கொழும்புகை விம்மவே.

(இ-ள்.) எயில் எரித்தவன் - திரிபுரத்தையெரித்தசிவன், யானை உரித்த நாள்-யானையையுரித்தகாலத்தில், பயில்உறுத்து - பழக்கத்தைப்பொருந்துவித்து, உரி போர்த்த-அந்தத்தோலைப் போர்த்துக்கொண்ட, நன்பண்பு என-நல்லதன்மையைப் போலவும், புயல்-மேகங்கள், விரித்து எழுந்தால் என - பரவியெழுந்தாற்போலவும், பூதலம்-உலகத்தில், குயிறுத்தி-அழுந்தலைப் பொருந்துவித்து, கொழும்புகை - அந்த மிகுந்தபுகையானது, விம்ம-அதிகப்பட—எ-று.

விரித்து-வலித்தல், குயிலல்-பதித்தல்.

694\. தமந் திரண்டுலகி யாவையுந் தாவுற
நிமிர்ந்த வெங்கதிர்க் கற்றையு நீங்குறக்
கமந்த மாதிரக் காவலர் கண்ணொடும்
சுமந்த நாகமுங் கண்சும் புளித்தவே.

(இ-ள்.) தமந்திரண்டு-இருள்திரண்டு, உலகுயாவையும் தாவுற - உலகங்களெல்லாவற்றிலுந்தாவுதலால், நிமிர்ந்த-அதிகப்பட்ட, வெங்கதிர்கற்றையும் - வெயிலும், நீக்குற-நீங்க, கமந்த-நிறைந்த, மாதிரம்காவலர்கண்ணொடும் - திசைப்பாலகருடைய கண்களுடன், சுமந்த - அந்தத்திசைகளைச்சுமந்துகொண்டிருக்கிற, நாகமும்-யானைகளும், கண்சும்புளித்த-கண்களைச்சுருக்கிப்பார்த்தன—எ-று. (கூ௲உ)

சும்புளித்தல் கூசுதல் எனினுமமையும்.

695\. திரிவ நிற்ப செகதலத் தியாவையும்
வெருவ லுற்றன வெங்கதிர் மீண்டன
கருவி யுற்ற ககன மெலாம்புகை
உருவி யுற்றிட வும்பர் துளங்கினார்.

(இ-ள்.) செகதலத்து-உலகத்தில், திரிவநிற்பயாவையும் - திரிவனவும் நிற்பனவுமாகிய எல்லாப்பொருள்களும், வெருவல் உற்றன - பயத்தையடைந்தன, வெங்கதிர் மீண்டன - வெங்கதிர்கள்மீண்டன, கருவி - உலகத்துக்குத் துணைக்காரணமாகிய மேகங்கள், உற்ற-நிறைந்த, ககனம் எல்லாம்-ஆகாயமெல்லாம், புகை- புகையானது,

உருவி உற்றிட-உருவிச்செல்லுதலால், உம்பர்-தேவர்கள், துளங்கினார் - நடுங்கினார்கள்—எ-று. (௬௬௫)

696. புண்ட ரீகனும் புட்டிருப் பாகனும்
குண்டை யூர்தி குலிசியு மற்றுள
அண்டர் தாமுமவ் வந்தவயி னெய்திவே
றெண்ட போதனன் றன்னை யெதிர்ந்தனர்.

(இ-ள்.) புண்டரீகனும்-பிரமனும், புள்திருபாகனும் - கருடனுக்குச்சிறந்த பாகனாகிய திருமாலும், குண்டை ஊர்தி (உம்)- இடபவாகநத்தையுடைய சிவனும், குலிசியும் - வச்சிராயுதத்தையுடைய இந்திரனும், மற்று உள்ள அண்டர்தாமும் - மற்றுமுள்ளதேவர்களும், அவ்வயின்வந்து எய்தி-அவ்விடத்தில்வந்துசேர்ந்து, வேறுஎண் முனிவர்களுள்சிறந்தவரென்று வேறுபிரித்தெண்ணப்படுகிற, தபோதனன்தன்னை-முனிதனை, எதிர்ந்தனர்-சந்தித்தார்கள்—எ-று.

குண்டையூர்திக்கு உம்மை தொகுக்கப்பட்டது.

697. பாதி மாமதி சூடியும் பைந்துழாய்ச்
சோதி யோனுமத் தூய்மல ராளியும்
வேத பாரகர் வேறிலர் நீயலால்
மா தபோதன வென்ன வழங்கினர்.

(இ-ள்.) மா- பெருமைபொருந்திய, பாதிமதிசூடியும் - பகுக்கப்பட்டதாகிய சந்திரனையணிந்த சிவனும், பைதுழாய் சோதியோனும் - பசிய திருத்துழாய் மாலையையணிந்த திருமாலும், அ - அந்த, தூய்மலர் ஆளியும் - பரிசுத்தமான புஷ்பாசநத்தையுடையபிரமனும், (முனியைநோக்கி) மா தபோதந-! பெரியதவச்செல்வத்தையுடையவனே, நீ அல்லால்-நீயல்லாமல், வேதபாரகர் - வேதங்களைக்கரைகண்டோர், வேறு இலர்-வேறொருவருமிலர், என்ன-என்று, வழங்கினார்-பெயர்தந்தார்கள்—எ-று.

698. அன்ன வாசகங் கேட்டுண ரந்தணன்
சென்னி தாழ்த்திரு செங்கமலங் குவித்
துன்னு நல்வினை யுற்றதென் றோங்கினன்
துன்னு தேவர்தஞ் சூழலுட் போயினார்.

(இ-ள்.) அன்னவாசகம் - அந்தச்சொல்லை, கேட்டு உணர் - கேட்டறிந்த, அந்தணன் - முனிவன், சென்னி தாழ்த்து - சிரசைவணங்கி, இருசெங்கமலம் குவித்து-இரண்டு செந்தாமரைமலர்போலுங் கைகளைக்குவித்து, உன்னும் - கருதப்பட்ட, நல்வினை-நல்லதவப்பயனானது, உற்றது என்று-வந்தடைந்ததென்று, ஓங்கினன்-பூரித்தான், துன்னு-அங்குவந்து நெருங்கியிருந்த( தேவர்-தேவர்கள், தம்சூழலுள் போயினார்-தத்தமிடங்களுக்குச்சென்றார்கள்—எ-று.

699. ஈது முன்னர் நிகழ்ந்த திவன்றுணை
மாதவத் துயர் மாண்புடை யாரிலை
நீதி வித்தகன் றன்னரு ணோர்ந்தனிர்
யாது மக்கரி தென்றன நீறிலான்.

(இ-ள்.) முன்னர்நிகழ்ந்தது-முன்னேநடந்தசெய்தி, ஈது - இது, இவன்துணை-இவனுக்குச்சமாநமாக, மாதவத்து உயர் - பெரியதவத்தினாலுயர்ந்த, மாண்பு உடை

யார் இல்லை-பெருமையுடையவரில்லை, நீதிவித்தகன் - நீதியையும் ஞானவொழுக்கத்தையுமுடைய இக்கௌசிக முனிவனது, அருள்நேர்ந்தனிர் - அருள் பெற்றீர்கள், (ஆதலால்) உமக்கு அரியதுயாது-உமக்கு அருமையாகிய காரியம் யாது, என்றனன்-என்றுசொன்னான், ஈறு இல்லான்-முடிவற்ற பேரானந்தத்தை யுடையவனாகிய சதாநந்தன்—எ-று. (கநூஎ)

ஈறு இல்லான் என்பதற்கு சமதமாதி நற்குணங்களுக்கு முடிவில்லாதவன் எனினும் பொருந்தும். தன்-சாரியை,

700. என்று கோதமன் காதலன் கூறிட
வென்றி வீரர் வியப்பொடு வந்தெழா
ஒன்று மாதவன் றாடொழு தோங்கிய
பின்றை யேத்திப் பெயர்ந்தனன் றன்னிடம்

(இ-ள்.) என்றுகோதமன்காதலன்கூறிட - என்றிவ்வாறு கௌதமரிஷி புத்ரனாகிய சதாநந்தன் சொல்ல, வென்றிவீரர் - வெற்றிவீரர்களாகிய ராமலக்ஷ்மணர்கள், வியப்பொடு - அதிசயத்துடன், உவந்து எழா - களித்தெழுந்து, ஒன்றும் மாதவன்-பொருந்திய பெரியதவத்தையுடையமுனிவனது,தாள்தொழுது-பாதங்களைவணங்கி ஓங்கியபின்றை-உயர்ந்தபிறகு, (முனிவன்) ஏத்தி - (இவர்களுக்கு) மங்களாசாசநம் பண்ணி, தன் இடம்-தன்னிடத்தைநோக்கி, பெயர்ந்தனன்-போனான்—எ-று.

அருங்கேடன் என்பதிற்போல அன்விகுதியை ஒன்றென்பதனோடு புணர்க்க.

ஸ்ரீராமபிரான் சீதாபிராட்டியாரைக் கண்ணுற்றதா லுண்டான
விரகதாப விசேஷணம் காண்க.

701. முனியுந் தம்பியு மொய்ம்முறை யாற்றமக்
கினிய பள்ளிக ளெய்திய பின்னிருட்
கனியுப் போல்பவன் கங்குலுந் திங்களும்
தனியுந் தானுமத் தையலு மாயினான்.

(இ-ள்.) முனியும்- விசுவாமித்திரமுனிவனும், தம்பியும் - இளையபெருமாளும் தமக்கு இனியபள்ளிகள்-தங்களுக்கினிமையான பள்ளியறைகளை, மொய்முறையால் எய்தியபின்-மிக்கமுறைமைப்படியடைந்தபிறகு, இருட்கனியும் போல்பவன்-இருட்பழத்தையொப்பவனாகிய ஸ்ரீராமபிரானும், கங்குலும்-இரவும், திங்களும்-சந்திரனும் தனியும்-தனிமையும், தானும்- தானும், அதையலும் - அந்தச்சீதாபிராட்டியும், ஆயினன்-ஆனான்—எ-று. (கநூக)

"தானுந் தேரும் பாகனும் வந்தென்னலனுண்டான்" என்பதுபோலத் திணைவிரவித்தலைமைபற்றி ஒருமைமுடிபேற்றது. இரவும் சந்தரனும் தன் தனிமையும் ஜாநகியி னுருவெளிப்பாடும் ஆகிய இவைகளைத் துணையாகக்கொண்டு ஸ்ரீராமபிரானிருந்தானென்றதாயிற்று.

702. விண்ணி னீங்கிய மின்னுரு விம்முறை
பெண்ணி னன்னலம் பெற்றதுண்டே கொலோ
எண்ணி னீதல தென்றறியே னிரு
கண்ணி னுள்ளுங் கருத்துள்ளுங் காண்பெனல்.

(இ-ள்.) விண்ணின் நீங்கிய - மேகத்தினின்றும் நீங்கிய, மின் உரு - மின்னுருவானது, இ - முறை - இந்தப்பிரகாரம், பெண்ணின் - பெண்ணினது, நல் நலம் - நல்ல அழகை, பெற்றது உண்டேகொல் - அடைந்ததுண்டோ, எண்ணின் - ஆராயுமிடத்து, ஈது அல்லது என்று - இதுவல்லதிதுவென்று, அறியேன் - அறிகிலேன், (இவ்வுருவத்தை) இருகண்ணினுள்ளும் - புறத்திலிருகண்களாலும், கருத்துள்ளும் - அகத்தில் மனத்திலும், காண்பன்-காணுகின்றேன்—எ-று. (கசo)

காண்பேன் என்பதிற் பகரவிடைநிலை தனக்குரிய எதிர்காலத்தைக் குறியாது நிகழ்காலத்தைக் குறித்துநின்றது.

703. வள்ளற் சேக்கைக் கரியவன் வைகுறும்
வெள்ளப் பாற்கடல் போன்மிளிர் கண்ணினள்
அள்ளற் பூமக ளாகுங்கொலோ வெனது
உள்ளத் தாமரை யுள்ளுறை கின்றதே.

(இ-ள்.) வள்ளல் சேக்கை - வள்ளன்மையையுடைய சர்ப்பசயநத்தில், கரியவன் வைகுறும் - கரிய திருமேனியையுடைய இறைவன் தங்குகின்ற, வெள்ளம் பால் கடல்போல் - வெள்ளமாகிய பாற்கடல்போல, மிளிர் - விளங்குகின்ற, கண்ணினள்- கண்களையுடையவள், எனது உள்ளத்தாமரையுள் - எனது மனத்தாமரை மலரில், உறைகின்றது - வாசம் செய்வதனால், அள்ளல்பூமகள் ஆகும்கொல் - சேற்றில் விளைகின்ற தாமரைமலரை யாசநமாகவுடைய திருமகளாவளோ—எ-று. (கசக)

704. அருளிலா ளெனி னும்மனத் தாசையால்
வெருளு நோய்விடக் கண்ணின் விழுங்கலால்
தெருளிலா வுலகிற் சென்று நின்றுவாழ்
பொருளெலா மவள் பொன்னுரு வாயவே.

(இ-ள்.) அருள் இலாள் எனினும் - என்மீது கருணையில்லாதவளானாலும், மனத்து ஆசையால் - என்மனத்திலுண்டான ஆசையினாலும், வெருளும் - அஞ்சுவதற்கேதுவான, நோய் - காமமாகிய வருத்தத்தைத்தருகிற, விடம்கண்ணின் - விஷம்போலுங் கண்களால், விழுங்கலால் - விழுங்குதலாலும், தெருள் இல்லா - தெளிவில்லாத, உலகில் - உலகத்தில், சென்று நின்றுவாழ்-நடந்தும் நின்றும் வாழுகின்ற, பொருள் எல்லாம் - சராசரங்களாகிய எல்லாப் பொருள்களும், அவள் - அவளது, பொன் உரு ஆய - அழகிய வுருவமாயின—எ-று. (கசஉ)

மருண்மாக்கடலின் மறைந்துகிடத்தலால் தெருளிலாவுலகு என்றார். "இருடருமாஞாலம்" எனப் பெரியாரும்பணித்தார்.

705. பூணு லாவிய பொற்கலசங்க ளென்
ஏணி லாகத் தெழுதல வென்னினும்
வாணிலா முறு வற்கனி வாய்மதி
காண லாவதொர் காலமுண் டாங்கொலோ.

(இ-ள்.) பூண் உலாவிய - ஆபரணங்கள் தங்கிய, பொன் கலசங்கள் - பொற்கலசங்கள்போன்ற ஸ்தநங்கள், என்-எனது, ஏண் இல்-பெருமையில்லாத, ஆகத்து-மார்பில், எழுதல எனினும் - தழுவுகின்றிலவாயினும், வாள்நிலா - ஒளி பொருந்திய சந்திரிகையை யொத்த, முறுவல் - தந்தபந்தியமைந்த, கனிவாய் - கனிவாயையுடைய, மதி - (முகமாகிய) சந்திரனை, காணல் ஆவது - காணக்கூடியதாகிய, ஓர் காலம் - ஒருகாலமானது, உண்டாம்கொல் - உளதாகுமோ—எ-று. (கசங)

பொற்கலசங்கள், பூண் உலாவிய என்னும் விசேடணத்தால் கொங்கைகட்காயின. அக்கொங்கைகளைத் தழுவப்பெருமையின், வணிலாகமென்றார். வாள் நிலாம் எனப்பிரித்து ஒளிநிலைத்த வெனினும்பொருந்தும். வாணிலாமுதலிய அடையால் மதிமுகத்தையுணர்த்திற்று.

706. வண்ண மேகலைத் தேரொன்று வாணெடுங்
கண் ணிரண்டு கதிமுலை தாமிரண்
டுண்ணி வந்த நகையுமுண் டாமெனில்
எண் ணுங் கூற்றினுக் கித்தனை வேண்டுமோ.

(இ-ள்.) வண்ணம் - அழகிய. மேகலை - மேகலையை யணிந்த, தேர் ஒன்று - தேர் ஒன்றும், வாள் - வாள்போன்ற, நெடுகண் இரண்டு - நெடிய கண்களிரண்டும், கதி - பருத்த, முலை இரண்டு - முலைகளிரண்டும், உள்நிவந்த நகையும் - இதழுக்குள்ளடங்கிச் சிறந்த நகையும், உண்டாம் எனில் - உண்டாயிருக்குமாயின், எண்ணும் கூற்றினுக்கு - யாவராலும் மதிக்கப்படுகின்ற கூற்றினுக்கு, இத்தனைவேண்டுமோ - (என்னைக்கொல்வதற்கு) இத்தனையும் வேண்டுமோ—எ-று. (கசச)

ஒவ்வொன்றே உயிர் கவர்தற்கு அமையுமென்பதாயிற்று. மேகலைமாதர் துகிலின்மீதணியும் இடையணி. இது எழுகோவைகொண்டது. தாம் - அசை.

707. கன்ன லின்கருப் புச்சிலை யான்விரை
பொன்னை முன்னிய பூங்கணை மாரியால்
என்னை யெய்து தொலைக்குமென்றா லினி
வன்மை யென்னுமி தாரிடை வைகுமே.

(இ-ள்.) கன்னல் - சர்க்கரையுண்டாதற்கிடமாகிய, இன் - இனிய, கருப்பு சிலையான் - கரும்புவில்லையுடைய மன்மதன், விரை-இயற்கைமணமமைந்த, பொன்னை-திருமகளை, முன்னிய - யான்நினைக்க, பூகணை மாரியால் - புஷ்பபாண வர்ஷத்தால், என்னை - என்னை, எய்து - எய்து, தொலைக்கும் என்றால் - என் வலிதொலைப்பானாயின், இனி - இனி, வன்மை என்னும் இது - வன்மையென்று சொல்லப்படுமிது, ஆர் இடைவைகும் - யாரிடத்துத் தங்கும்—எ-று. (கசரு)

விரை என்பதற்கு விரைந்தெனப் பொருள்கூறினு மமையும். என்னை என்றது யாவருக்கும் பின்னிடாத என்னை, எனக் குறிப்பானுணர்த்தினது.

708. கொள்ளை கொள்ளக் கொதித்தெழும் பாற்கடற்
பள்ள வெள்ள மெனப்பட ருந்நிலா
உள்ள வுள்ள வுயிரைத் துருவிட
வெள்ளை வண்ண விடமுமுண் டாங்கொலோ.

(இ-ள்.) கொள்ளைகொள்ள - என்னுயிரைக் கொள்ளைகொள்ளுதற்கு, கொதித்து எழும் - கோவித்தெழுகின்ற, பால்கடல் - பாற்கடலாகிய, பள்ளவெள்ளம் என - பள்ளப்பெருக்குப்போல, படரும் - பரவுகின்ற, நிலா - நிலவானது, உள்ள உள்ள - (அவளை) நினைக்குந்தோறும், உயிரை துருவிட - என்னுயிரைத் தேடிக்கவர்தற்கு, வெள்ளை வண்ணம் - வெண்ணிறத்தையுடைய, விடமும் உண்டாம்கொல் - விஷமுமுளதோ (அந்தக்கடலினிடத்து)—எ-று. (கசசு)

எழும்படரும் என்னும் பெயரெச்சங்கள் நிலாவைக்கொண்டு முடிந்தன. உள்ள உள்ள என்னும் அடுக்கு மிகுதிப்பொருட்டு.

709. ஏகு நல்வழி யல்வழி யென்மனம்
ஆகுமோ வதற் காகிய காரணம்
பாகு போன்மொழிப் பைந்தொடி கன்னியே
ஆகும் வேறிதற் கையுற வில்லையே.

(இ-ள்.) என்மனம் - என்மனமானது, நல்வழி ஏகும் - நன்னெறிக்கட்செல்லா நிற்கும், அல்வழி ஆகுமோ - தீநெறிக்கட்செல்லுமோ, அதற்கு - அவ்வாறு தீநெறிக் கட்செல்லுதற்கு, காரணம் - காரணமென்னெனின், பாகுபோன்மொழி-சர்க்கரைப் பாகுபோன்ற மொழியையும், பைதொடி - பசும்பொன் வளையலையுமுடைய, கன்னியே ஆகும் - கன்னிகையேயாம், வேறு - வேறாக, இதற்கு ஐயுறவு இல்லை - இதற் குச் சந்தேகமில்லை—எ-று. (கசஎ)

710. கழிந்த கங்கு லரசன் கதிர்க்குடை
விழுந்த தென்னவு மேற்றிசை யாள்சுடர்க்
கொழுந்து சேர்நுதற் கோதறு சுட்டிபோய்
அழிந்த தென்னவு மாழ்ந்தது திங்களே.

(இ-ள்.) கழிந்த - சென்ற, கங்குல் - இரவாகிய, அரசன் - அரசனது, கதிர்-கிர ணங்களையுடைய, குடை - குடையானது, விழுந்தது என்னவும் - விழுந்தாற்போல வும், மேல் திசையாள் - மேற்றிசைப் பெண்ணினது, சுடர்கொழுந்துசேர் - ஒளிக் கொழுந்துசேர்ந்த, நுதல் - நெற்றியிலணிந்த, கோது அறு - குற்றமற்ற, சுட்டி - சுட்டியானது, போய் அழிந்தது என்னவும் - போயழிந்தாற்போலவும், திங்கள் - சந் திரன், ஆழ்ந்தது - மேற்கடலில் முழுகினான்—எ-று. (கசஅ)

711. வீசு கின்ற நிலாச்சுடர் வீழ்ந்ததால்
ஈச னாமதி யேகலுஞ் சோகத்தால்
பூசு வெண்கல வைப்புனை சாந்தினை
ஆசை மாத ரழித்தன ரென்னவே.

(இ-ள்.) ஈசன் ஆம்மதி - கணவனாகிய சந்திரன், ஏகலும் - பிரிந்துபோதலும், சோகத்தால் - (அந்தப்பிரிவின்) துக்கத்தால், ஆசைமாதர் - திசைகளாகிய மாதர் கள், பூசு - பூசின, வெண்கலவை - வெள்ளிய கலவையாகிய, புனை - அலங்காரத் துக்குரிய, சாந்தினை - சந்தனத்தை, அழித்தனர் என்ன - அழித்தனர்போல, வீசு கின்ற - எங்கும் வீசுகிற, நிலாசுடர் - நிலாக்கதிர், வீழ்ந்தது - அழிந்தது—எ-று. ()

இவ்விரண்டு திருவிருத்தங்களிலும், கங்குலரசன் எனவும், மேற்றிசையாள் எனவும், ஈசனாமதி எனவும், ஆசைமாதர் எனவும் அஃறிணைப்பொருள்களை உயர் திணைப் பொருள்களாகக் கூறியிருக்கின்றனர், இவ்வாறு கூறுதல் மரபென்பதை, திருவிருத்தத்தில், "வேனிலஞ்செல்வன்" "பால்வாய்ப்பிறைப்பிள்ளை யொக்கலைக் கொண்டு பகலிழந்த மேல்பாற்றிசைப்பெண் புலம்புறுமாலை" எனவும், "சிலப்பதி காரத்தில்" "திங்களஞ்செல்வன் யாண்டுளன் கொல்லோ" "இன்னிளவேனில் வந்தனனகை" எனவும், "பல விடங்களிற் கூறுதலாலுணர்க."

வேறு.

சூரியோதயவர்ணனை.

712. ததையுமலர்த்தாரண்ண லிவ்வண்ணமயலுழந்து தளருமெல்லை
சிதையுமனத்திடருடைய செங்கமலமுகமலரச் செய்யவெய்யோன்

புதையிருளினெழுகின்ற புகர்முகயானையினுரிவைப் போர்வைபோர்த்த
உதையகிரியெனுங்கடவு ணுதல்கிழித்தவிழியேபோ லுதயஞ்செய்தான்.

(இ-ள்.) ததையும் - நெருங்கிய, மிலர் - மலர்களாற் சமைத்த, தார் - மாலையை யணிந்த, அண்ணல் - பெரியோன், இவ்வண்ணம் - இந்தப்பிரகாரம், மயல் உழந்து மையலால்வருந்தி, தளரும் எல்லை - தளர்கின்ற காலத்தில், சிதையும்-(பிரிவினால்) சிதைந்த, மனத்து - மனத்தில், இடர் உடைய - துன்பத்தையுடைய, செங்கமலம் - செந்தாமரைகள், முகம் மலர - முகங்கள் மலரும்படி, செய்யவெய்யோன் - செந்நிறச்சூரியன், புதை இருளின் - அழுந்திய இருளாகிய, எழுகின்ற - தோன்றுகின்ற, புகர் - புள்ளிகளையுடைய, முகம் - முகத்தோடுகூடிய, யானையின் - யானையினது, உரிவை - தோலாகிய, போர்வைபோர்த்த - போர்வையைப் போர்த்த, உதயகிரி யெனும் - உதயகிரி யென்கிற, கடவுள் - சிவனது, நுதல்கிழித்த - நெற்றியைப் பிளந்த, விழியேபோல் - நேத்திரம்போலவே, உதயம்செய்தான் - உதயமானான். ()

713. விசையாடற்பசும்புரவிக் குரமிதிப்பவுதயகிரி விரிந்ததூளி
பசையாகமறையவர்கை நறைமலரும்நிறைபுனலும் பரந்துபாய
அசையாதநெடுவரையின் முகடுதொறு மிளங்கதிர்சென்றளைந்துவெய்
திசையாளுமதகரியைச்சிந்தூர மப்பியபோற்செவந்தமாதோ [யோன்

(இ-ள்.) விசை - வேகத்தையும், ஆடல் - வெற்றியையுமுடைய, பசுபுரவி - பச்சைக்குதிரைகள், குரம் - குளம்புகளால், மிதிப்ப - மிதித்தலால், உதயகிரி-உதயகிரியின்மேல், விரிந்த - பரவிய, தூளி - துகள், பசை ஆக - நனையும்படி, மறையவர் கை - அந்தணர்கள் கையினால் தூவுகின்ற, நறைமலரும் - தேன் உள்ள மலர்களும், நிறைபுனலும் - கைந்நிரம்பிய நீரும், பரந்துபாய - பரவிப்பாய, அசையாத - அசைவில்லாத, நெடுவரையின் - முகடுதொறும் - நெடிய மலைச்சிகரங்கள்தோறும், இளங்கதிர்சென்று அளைந்து - இளங்கிரணங்கள்போய்ப்படிய, (அந்தச்சிகரங்கள்) வெய்யோன் - சூரியன், திசை ஆளும் - திக்குகளையாளுகின்ற, மதகரியை - மதயானைகளுக்கு, சிந்தூரம் அப்பியபோல் - சிந்தூரத்தை அப்பியனபோல, செவந்த-செவந்தன—எ-று. (கருக)

மாது ஓ அசைகள்.

714. பண்டுவருங்குறிபகர்ந்து பாசறையிற்பொருள்வயினிற் பரிந்துபோன
வண்டுதொடர்நறுந்தெரியலுயிரனையகொழுனர்வரமணித்தேரோடும்
கண்டுமனங்களிசிறப்ப வொளிசிறந்து மெலிவகலுற்கற்பினார்போல்
புண்டரிகமுகமலரவகமலர்ந்து பொலிந்தனபூம்பொய்கையெல்லாம்

(இ-ள்.) பண்டு - பிரிதற்குமுன்னமே, வரும் குறிபகர்ந்து - தாம் வருகின்ற காலவரையறைசொல்லி, பாசறையின் - படைவீடு காரணமாகவும், பொருள்வயினின் - பொருள்தேடுதல் காரணமாகவும், பரிந்துபோன - விரும்பிச்சென்ற, வண்டு தொடர் - வண்டுகள் தொடர்தற்குரிய, நறுதெரியல் - பரிமளமான மலர்மாலையை யணிந்த, உயிரனைய - உயிரையொத்த, கொழுநர் - நாயகர், மணிதேர் ஓடும் - அழகியதேர் ஏறினவர்களாய், வர - வருதலை, கண்டு - பார்த்து, மனம் - மனத்தில், களி சிறப்ப - களிப்புமிக, ஒளி சிறந்து - ஒளிமிகுந்து, மெலிவு அகலும் - மெலிவு நீங்கிய கற்பினார்போல் - கற்புள்ள மாதர்போல, பூ பொய்கை எல்லாம்-பொலிவாகிய தடாகங்களெல்லாம், புண்டரிகம் - தாமரைமலர்களாகிய, முகம்மலர - முகங்கள் மலரும்படி, அகம்மலர்ந்து பொலிந்தன-உள்ளே களித்து விளங்கின—எ-று. (கருஉ)

தேரோடும் என்பதற்கு, தேரில் என ஏழனுருபாகக் கொண்டுரைப்பினு மிழுக்காது.

715. எண்ணரியமறையினொடு கின்னரர்களிசைபாட வுலகமேத்த
விண்ணவருமுனிவர்களும் வேதியருங்கரங்குவிப்ப வேலையென்னும்
மண்ணுமணிமுழவதிர வானரங்கினடம்புரிவா ளிரவியான
கண்ணுதல்வானவன் கனச்சடைவிரிந்தாலென விரிந்தகதிர்களெல் [லாம்.

(இ-ள்.) எண் அரிய - மதித்தளவிடலரிய, மறையினொடு - வேதங்களுடன், கின்னரர்கள் இசைபாட - கின்னரர்கள் கானம்பாடவும், உலகம் ஏத்த - உயர்ந்தோர்துதிக்கவும், விண்ணவரும் - தேவர்களும், முனிவர்களும் - முனிவரும், வேதியரும் - பிராமணர்களும், கரம்குவிப்ப - கைகூப்பிவணங்கவும், வேலை என்னும் - கடல்முழக்கமென்னும், மண்ணும் - மார்ச்சனையமைக்கப்பட்ட, அணி முழவு - அழகாகியமத்தளமானது, அதிர - ஒலிக்கவும், வானரங்கின் - ஆகாயமா மாகியசபையில், நடம்புரி - நடநஞ்செய்கிற, வாள் இரவி ஆன - ஒளிபொருந்திய சூரியன் ஆகிய, கண்ணுதல்வானவன் - நெற்றிக்கண்ணையுடையகடவுளது, கனகச் சடை - பொன்னிறச்சடைகள், விரிந்தால்என-விரிந்தாற்போல, கதிர்களெல்லாம்- கிரணங்களெல்லாம், விரிந்த - விரிந்தன—எ-று. (கஙு)

716. கொல்லாழிநீத்தங்கோர் குனிவயிரச்சிலை தடக்கைகொண்ட கொண்
எல்லாழித்தேரிரவி யிளங்கரத்தாலடிவருடி யனந்தல்தீர்ப்ப [டல்
அல்லாரைக்கண்டா னாயிரவாய்மணிவிளக்க மழலுஞ்சேக்கைத்
தொல்லாழிதுயிலாதே துயராழிநெடுங்கடலுட் டுயில்கின்றானே.

(இ-ள்.) கொல் - (தீயோர்களை) கொல்லுதற்குரிய, ஆழி - சக்கரப்படையை, நீத்து - நீக்கி, அங்கு - அந்தத்திருவயோத்தியில், ஓர் - ஒப்பற்ற, குனி - வளைவாகிய, வயிரம் - வயிரத்தன்மையமைந்த, சிலை - கோதண்டத்தை, தடம் கை - பெரியகையில், கொண்ட - தாங்கிவந்த, கொண்டல் - மேகம்போன்ற வனும், ஆயிரம்வாய் - ஆயிரம்வாய்களையுடைய, மணிவிளக்கம் - மாணிக்கத்தீபங்கள், அழலும் - எரிகின்ற, சேக்கை - சர்ப்ப சயநத்தின்மேல், தொல் - பழமையான, ஆழி - திருப்பார்கடலில், துயிலாது - நித்திரைசெய்யாமல், துயர் ஆழி நெடுங்கடலுள் - துன்பமாகிய ஆழ்ந்த பெருங்கடலுள், துயில்கின்றான் - உறங்குகின்றவனுமாகிய சக்ரவர்த்தித்திருமகன், எல் - ஒளிபொருந்திய, ஆழி - (ஒற்றைச்) சக்ரத்தையுடைய, தேர் - தேர்மீதுவருகிற, இரவி - சூரியன், இளங்கரத்தால் - மெல்லியகரங்களால், அடிவருடி - அடிகளைத்தடவி, அனந்தல்தீர்ப்ப - நித்திரையைநீக்க, அல் - இரவாகிய, ஆழி - கடலினது, கரை - கரையை, கண்டான் - பார்த்தான்—எ-று. (கஙச)

உயர்ந்தோர் துயிலாநிற்பின், அவரைத் துயிலுணர்த்தவேண்டுவோர் அடிவருடல் முறைமையென்பது அறநூலின் றுணிபாதலால் "இரவியிளங்கரத்தாலடிவருடி யனந்தறீர்ப்ப" என்றார். மெல்லென்றிருத்தல் வேண்டுதலின் "இளங்கரத்தால்" என் றுங்கூறினர். கரம் - கை, கிரணம்.

விசுவாமித்திரர் ஸ்ரீராமபிரான் முதலியோர் வேள்விச்சாலையைச்
சார்ந்தனரென்பது.

717. ஊழிபெயர்த்தெனக்கங்குலொருவண்ணம் புடைபெயரவுறக்கம்நீத்த
சூழியானையினெழுந்து தொன்னியமத்துறை முடித்துச் சருதியன்ன

வாழிமாதவற்பணிந்து மனக்கினியதம்பியொடும் வம்பின்மாலை
தாழுமாமணிமௌலித்தார்ச்சனகன் பெருவேள்விச்சாலைசார்ந்தான்.

(இ-ள்.) (ஸ்ரீராமபிரானது) ஊழிபெயர்ந்தென-ஊழிக்காலம் கழிந்தார்போல, கங்குல் - இரவானது, ஒருவண்ணம் - ஒருவாறு, புடைபெயர - தன்னிலையினின்று நீங்குதலால், உறக்கம்நீத்த - நித்திரைநீங்கிய, சூழியானையின் - முகபடாமணிந்த யானையைப்போல, எழுந்து - துயிலுணர்ந்தெழுந்து, தொல் - (தமக்குரியனவாய்) தொன்றுதொட்டு வருகின்ற, நியமத்துறை - அநுஷ்டானவகைகளை, முடித்து - நிறைவேற்றி, சுருதி அன்ன - வேதத்தையொத்த, மாதவன்பணிந்து - பெரிய தவத்தையுடைய (விசுவாமித்திரமுனிவனை) வணங்கி, மனம் கு இனிய - தன்மனதுக்கினிமையான, தம்பியோடும் - தம்பியாகிய லக்ஷ்மணருடன், வம்பின்மாலை - வாசனையுள்ள பூமாலைகள், தாழும் - தொங்குகின்ற, மா - அழகிய, மணிமௌலி - ரத்நகிரீடத்தையும், தார் - பூமாலையையுமணிந்த, சனகன் - ஜநகமகாராஜனது, பெரு - பெரிதாகிய, வேள்விசாலை-யாகசாலையை, சார்ந்தான் - அடைந்தான். ()

வாழி - அசை. ஒருவாறு புடைபெயர்தல் முற்றும் புலராமை. நியமமுக்குங் கால மதுவாகலின் சிற்றஞ் சிறுகாலேயெழுந்து நியமமுடித்தா னென்றபடி, மனத்துக்கு எனற்பாலாது மனக்குஎன அத்துச்சாரியை குறைந்துநின்றது. "மாதவற் பணிந்து" என்பதற்கு, தமக்கு நித்திய திருவாராதநமாகிய ஆயிரமௌலிப் பெருமானைப் பணிந்தெனினுமாம்.

718. முடிச்சனகர்பெருமானு முறையாலேமறைவேள்வி முற்றிச்சுற்றும்
இடிக்குரலின்முரசியம்ப விந்திரன்போற்சந்திரன்றோய் கோயிலெய்தி
எடுத்தமணிமண்டபத்து ளெண்டவத்துமுனிவரோடு மிருந்தான்பைந்தார்
வடித்தகுனிவரிசிலைக்கை மைந்தனுந்தம்பியு மருங்கினிருப்பமாதோ.

(இ-ள்.) முடி - முடியையணிந்த, சனகர்பெருமானும் - ஜநககுலராஜனாகிய ஜநகனும், முறையால் - வேதவிதியினால், மறை - வேதத்திற் சொல்லப்பட்டிருக்கிற, வேள்வி - யாகத்தை, முற்றி - முடித்து, சுற்றும் - சுற்றிலும், இடிக்குரலின் - இடிமுழக்கம்போல, முரசு இயம்ப - பேரிகைமுழங்க, சந்திரன்தோய்கோயில் - சந்திரன்தவழ்கின்ற மாளிகையில், இந்திரன்போல் எய்தி - இந்திரனைப்போலச் சேர்ந்து, எடுத்த - உயர்த்திக்கட்டின, மணிமண்டபத்துள் - ரத்நமண்டபத்தில், பைந்தார் - பசியமாலையையணிந்த, வடித்த - குற்றமறச் செய்யப்பட்ட, குனி - வளையுமியல்பினையுடைய, வரி - கட்டமைந்த, சிலை - வில்லேந்திய, கை - கையையுடைய, மைந்தனும் - சக்ரவர்த்தித்திருமகனும், தம்பியும் - இளையபெருமாளும், மருங்கின் இருப்ப - தன்னருகிலிருக்க, என் - மதிக்கப்படுகிற, தவத்து - தவத்தையுடைய, முனிவரோடும் - முனிவருடன், இருந்தான் - வீற்றிருந்தான்—எ-று. ()

மாது, ஓ-அசைகள். வடித்தகுனி வரிசிலை யென்றதற்கேற்ப, மைந்தனென்பதற்கு பலமுள்ளவன் எனப் பொருள்கூறினும் பொருந்தும்.

விசுவாமித்திரர் தயரதபுதல்வர் தன்மை இதுவென்று
ஜநகமஹாராஜனுக்குச் சொல்லத்தொடங்கினர்.

719. இருந்தகுலக்குமரர்தமை யிருகண்ணின் முகத்தழகு பருகநோக்கி
அருந்தவனையடிவணங்கி யாரிவரையுரைத்திடுமி னடிகளென்ன
விருந்தினர்கணின்னுடைய வேள்விகாணியவந்தார் வில்லுங்காண்பார்
பெருந்தகைமைத்தயரதன்றன் புதல்வரெனவவர்தகைமை பேசலுற்றான்.

(இ-ள்.) இருந்த - (அவ்வாறுதன்னருகில்) இருந்த, குலம் - சிறப்பையுடைய, குமாரர்தமை - காளைவீரரை, இருகண் - இரண்டுகண்களும், முகத்து அழகு - (அவர்களுடைய) முகத்தழகை, பருகநோக்கி - பருகும்படிப்பார்த்து, அருதவனை - அரியதவத்தையுடைய (விசுவாமித்திர) முனிவனை, அடி வணங்கி - அடிதொழுது, அடிகள் - எமதடிகளே, இவர் யார் - இக்குமாரர்யாவர், உரைத்திடுமின் என்ன - சொல்லுவீர் என்றுகேட்க, (அப்போது விசுவாமித்திரமுனிவர்) விருந்தினர்கள் - உனக்குவிருந்தாயாய்வந்தவர்கள், நின்னுடைய வேள்விகாணிய - உன்னுடைய யாகத்தைப் பார்க்க, வந்தார் - வந்தார்கள், வில்லும்காண்பார் - (நேர்ந்தால்) வில்லையும்பார்ப்பார்கள், (இவர்கள்) பெருதகைமை - பெரியதகுதிப்பாடுடைய, தயரதன்தன்புதல்வர் - தசரதமஹாராஜனுக்குப் புத்திரர்கள், 'என - என்று சொல்லி, அவர் - அவர்களுடைய, தகையை-பெருமையை, பேசல் உற்றான்-சொல்லத்தொடங்கினான்—எ-று. (ககஎ)

கண்ணின் என்பதில் இன்சாரியை. இருகண் இன்முகத்து அழகுபருக என்பதற்கு இரண்டுகண்களும் இனிதான முகத்தழகைப் பருகவெனினும் அமையும்.

கக - வது. மிதிலைக்காட்சிப்படலம் முற்றும்.

---

# யஉ-வது குலமுறைகிளத்து படலம்.



சூரியவமிசத் தரசரது வரலாறு கூறுகின்ற படலம்.

---

720. ஆதித்தன் குலமுதல்வன் மனுவினையா ரறியாதார்
பேதித்த வுயிரனைத்தும் பெரும்பசியால் வருந்தாமல்
சோதித்தன் வரிசிலையா னிலமடந்தை முலைசுரப்பச்
சாதித்த பெருந்தகையு மிவர்குலத் தராபதிகாண்.

(இ-ள்.) ஆதித்தன்குலம் - சூரியகுலத்துக்கு, முதல்வன் - தலைமைப்பாடுடையவனாகிய, மனுவினை - மனுவை, அறியாதார் - அறியாதவர், யார் - யாவர், (ஒருவருமில்லை) பேதித்த - (எழுபிறப்பாகப்) பேதிக்கப்பட்ட, உயிர் அனைத்தும் - எல்லாவுயிர்களுக்கும், பெருபசியால் - பெரியபசியினால், வருந்தாமல் - துன்பப்படாமல், சோதி - ஒளியையுடைய, தன் - தனது, வரிசிலையால் - கட்டமைந்த வில்லாற்றலால், நிலமடந்தை - பூமியாகியபெண்ணானவள், முலைசுரப்ப - முலை சுரக்கும்படி, சாதித்த - முயன்ற, பெருதகையும் - பெருங்குணத்தையுடையவனும், இவர் - இந்தக்குமாரருடைய, குலம் - வமிசத்திற்பிறந்த, தராபதி - அரசன்.

காண் முன்னிலையசை. பெருந்தகை - அன்மொழித்தொகை. இத்திருவிருத்தத்தாற் கூறப்படுகிற அரசன் பிருது சக்ரவர்த்தி. எழுபிறப்பு - தேவர், மக்கள், விலங்கு, புள், ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்பன.

721. பிணியரங்க வினையகலப் பெருங்காலந் தவம்பேணி
மணியரங்க நெடுமுடியாய் மலரயனை வழிபட்டுப்
பணியரங்கப் பெரும்பாயற் பரஞ்சுடரை யாங்காண
அணியரங்கந் தந்தானை யறியாதா ரறியாதார்.

(இ-ள்.) மணி - நவமணிகளுக்கும், அரங்கம் - இடமாயிருக்கிற, நெடுமுடியாம்-பெரியமுடியையணிந்த ஜநகமஹாராஜனே, பிணி - நோய்கள், அரங்க-கெடவும், வினை அகல - அவைகட்குக் காரணமாகிய வினைகள் ஒழியவும், பெருகாலம் - அநேககாலம், தவம்பேணி - தவத்தைவழுவாமற்செய்து, மலர் - தாமரைமலரில் வாழ்கின்ற, அயனை - பிரமனை, வழிபட்டு - வழிபாடுசெய்து, (அவனிடத்துப் பெற்று) பணி - ஆதிசேஷனாகிய, அரங்கம் - இடங்கொண்ட, பெருபாயல் - பெரிய பாயலையுடைய, பரஞ்சுடரை - பரஞ்சோதியாகிய ரங்கநாதனை, யாம்காண - யாம் கண்டுய்ய, அணி - அழகிய, அரங்கம் - திருவரங்கமென்னுந் திவ்யதேசத்தில், தந்தானை - எளிதிற்கொண்டுவந்து கொடுத்தவனை, அறியாதார் - அறியாதவர்கள், அரியாதார் - அறிவில்லாதவர்களே—எ-று. (உ)

இதனாற்சொல்லப்பட்டவன் இக்ஷ்வாகு.

722\. தான்றனக்கு வெலற்கரிய தானவரைத் தலைதுமித்தென்
வான்றரக்கிற் றிகொலென்று குறையிரப்ப வரங்கொடுத்தாங்
கேன்றெடுத்த சிலையினனா யிகல்புரிந்த விவர்குலத்தோர்
தோன்றலைப்பண் டிந்திரன்காண் விடையேறாய்ச் சுமந்தானும்

(இ-ள்.) இந்திரன் - இந்திரனானவன், தனக்குவெல்லற்கு அரிய - தனக்கு வெல்லுதற்கரியர்களாயிருந்த, தானவரை - அசுரரை, தலைதுமித்து - தலைதுணித்து, என் - எனது, வான்-விண்ணுலகை, தரக்கிற்றிகொல் என்று - தரவல்லையோ வென்று, குறையிரப்ப - குறையிரந்துநிற்க, வரங்கொடுத்து - அவ்வாறே செய்கிறேனென்று அவனுக்கு) வரந்தந்து, ஆங்கு என்று - அப்போதேயிசைந்து, எடுத்தசிலையினன் ஆய் - கையிற்றரித்த வில்லையுடையவனாகி, இகல் புரிந்த - (அசுரரோடு) யுத்தஞ்செய்த, இவர் குலத்து ஓர் தோன்றலை - இவர்குலத்தவனாகிய ஓரரசனை, பண்டு - பூர்வககாலத்தில், விடையேறு ஆய்சுமந்தானும் - இடபகவாநமாகிச்சுமந்தவனும், இந்திரன்-தேவேந்திரனானவன்—எ-று. (ட)

காண்முன்னிலையசை. தான் அசை. தான் - தேவராஜனாகியதானும் எனவொரு வுயர்வுசிறப்பும்மை சேர்த்துரைப்பினு மமையும். இதனாற்சொல்லப்பட்டவன் - காகுத்தன். "எடுத்தசிலையினனாய்" இகல்புரிந்த என்றது, வீரத்தன்மையானேயன்றி; சூதுமாயை தொடக்கமானவைகொண்டு வென்றதன் றென்பது போதரற்கு.

723\. அரைசனவன் பின்னோரை யென்னாலும் மளப்பரிதால்
உரைகுறுக நிமிர்கீர்த்தி யிவர்குலத்தோ ரொருவன்காண்
நரைதிரைமூப் பிவைமாற்றி யிந்திரனு நந்தாமல்
குரைகடலை நெடுவரையாற் கடைந்தமுது கொடுத்தானும்.

(இ-ள்.) அரைசன் - அரசனாகிய, அவன்பின்னோரை - அவனுக்குப்பின்வந்தவர்களை, அளப்பு - அளவிடுதல், என்னாலும் அரிது - எனக்கருமையாகும், இந்திரனும் - தேவராஜனும், நந்தாமல் - இறவாமல், நரைதிரைமூப்பு - நரைதிரைமூப்புக்களாகிய, இவைமாற்றி - இவைகள்மாற்றும்படி, குரைகடலை - ஒலிக்கின்ற கடலை, நெடுவரையால் - நெடியமலையாகிய மத்தினால், கடைந்து - கடைந்து, அமுதுகொடுத்தானும் - அதிலுண்டான அமிர்தத்தைக் கொடுத்தவனும், உரைகுறுக - சொல்குறுகும்படி, நிமிர் - உயர்ந்த, கீர்த்தி - கீர்த்தியையுடைய, இவர்குலத்தோன் - இவர்கள்குலத்திற் பிறந்தோனாகிய, ஒருவன்-ஓரரசன்—எ-று. (சு)

என்னாலும் என்னுமும்மை உயர்வுசிறப்பு. ஆல் - அசை. காண் முன்னிலையசை. கொடுத்தானும் என்னும் உம்மை இறந்தது தழீஇயது.

724. கருதலரும் பெருங்குணத்தோ ரிவர்முதலோர் கணக்கிறந்தோர்
திரிபுவன முழுதாண்டு சுடர்நேமி செலநின்றோர்
பொருதுறைசேர் வேலினாய் புலிப்போத்தும் புல்வாயும்
ஒருதுறையி னீருண்ண வுலகாண்டோ னுளனொருவன்.

(இ-ள்.) பொரு-போர்செய்கின்ற, துறை - வகைகள், சேர்-சேர்ந்த, வேலினாய்-வேலையுடையஜநகமஹாராஜனே, திரிபுவனம்முழுது ஆண்டு - மூன்றுலகங்களையும் முழுதும் ஆண்டு, சுடர்-ஒளியையுடைய, நேமி-ஆஜ்ஞாசக்கரம், செல-அவ்வோவிடங்களில்செல்லும்படி, நின்றோர் - நின்றவர்களும், கருதல் அருபெரு குணத்தோர்-நினைத்தற்கரிய பெருங்குணத்தையுடையவர்களும் ஆகிய, இவர் முதலோர்-இவர்கள் முன்னோர்கள், கணக்கு இறந்தோர் - கணக்கற்றவர்கள், (அவர்நிற்க) புலிப்போத்தும்-ஆண்புலியும், புல்வாயும்-மானும், ஒருதுறையில்-ஒருநீர்த்துறையில், நீர்உண்ண-நீர் உண்ணும்படி, உலகு ஆண்டோன்-உலகத்தையாண்டவன், ஒருவன் உளன்-ஒருவன் உண்டு—எ-று. (௫)

பெருங்குணம் ஜீவகாருண்ணியம் முதலாயின. புலிப்போத்தும் புல்வாயுமாகிய, விலங்குகள் தமக்கியற்கையாகிய பகைமைபாராட்டாமல் ஒத்துவாழும்படியாக செய்தானென்றால் மானுடர் சிறியாரைப் பெரியார் நலியாவண்ணம் அரசுசெய்தானென்பது சொல்லவேண்டாதாயிற்று. புல்வாய்-அன்மொழித்தொகை.

725. மறைமன்னு மணிமுடியு மாரமும்வா ளொடுமின்னப்
பொறைமன்னு வானவருந் தானவரும் பொருமொருநாள்
விறன்மன்னர் தொழுகழலா யிவர்குலத்தோன் விற்பிடித்த
அறமென்ன வொருதனியே திரிந்தமரா பதிகாத்தோன்

(இ-ள்.) விறல்மன்னர் - வெற்றியையுடைய அரசர்கள், தொழு - வணங்குதற்குரிய, கழலாய்-பாதங்களையுடைய ஜநகமஹாராஜனே, மறை - சிற்பநூல்விதியாகச் செய்ததொழில்கள், மன்னு-பொருந்திய, மணிமுடியும்-ரத்நகிரீடங்களும்; ஆரமும்-ரத்நஹாரங்களும, வாளொடுமின்ன-தம்கைவாள்களோடு மின்னுதல்செய்ய, பொறை மன்னும் - பொறைமிகுந்த, வானவரும் - தேவர்களும், தானவரும் - அசுரர்களும், பொரும் - போர்செய்த, ஒருநாள் - ஒருகாலத்தில், வில்பிடித்த - கையில்வில்லேந்தி வந்த, அறம் என்ன-தர்மதேவதைபோல, ஒருதனியேதிரிந்து - தானொருவனாகவே திரிந்து, அமராபதிகாத்தோன்-(விண்ணுலகத்தில்) அமராவதிபட்டணத்தைக் காத்தவனும், இவர்குலத்தோன்-இவர்கள்குலத்தினனாகிய ஓரரசன்தான்—எ-று. (௬)

மறை ஈண்டுச் சிற்பநூலையுணர்த்திநின்றது. மணியை ஆரத்தோடுங் கூட்டப்பட்டது. ஓடு உடனிகழ்ச்சிப்பொருட்டு. "விற்பிடித்த அறமென்ன" என்றது அபூதவுவமை. அமராபதி இந்திரனகரம்.

726. இன்னுயிர்க்கு மின்னுயிரா யிருநிலங்காத் தாரென்று
பொன்னுயிர்க்குங் கழலவரை யாம்போலும் புகழ்கிற்பாம்
மின்னுயிர்க்கு நெடுவேலா யிவர்குலத்தோன் மேற்பறவை
மன்னுயிர்க்குத் தன்னுயிரை மாறாக வழங்கினனால்.

(இ-ள்.) மின் உயிர்க்கும்-ஒளியையுமிழ்கின்ற, நெடுவேலாய்-நீண்டவேலாயுதத்தையுடைய ஜநகமஹாராஜனே, இன் உயிர்க்கும்-இனியவுயிர்களுக்கும், இன் உயிர் ஆய்-இனியவுயிராயிருந்து, இருநிலம்-பெரியவுலகத்தை, காத்தார்என்று-காத்தார்கள்

என்று, பொன் உயிர்க்குங்கழலவரை-அழகைத் தருகின்ற வீரக்கழலேயணிந்த சூரிய குலத்தரசர்களை, புகழ்கிற்பாம் யாம்போலும் - புகழவல்லேம் நாமோ, இவர்குலத் தோன்-இவர்கள் குலத்தரசனொருவன், மேல் - முற்காலத்தில், பறவை-ஒருபறவை யின், மன்உயிர்க்கு - நிலைபெறுள்ளவுயிருக்கு, மாறு ஆக - பிரதியாக, தன்னுயிரை வழங்கினன்-தன்னுயிரைக்கொடுத்தான்—எ-று. (எ)

ஆல்-அசை. போலும் என்பது இழிவின்கண்வந்த வோரிடைச்சொல். பறவை யென்றது புறவை. இதனாற் சொல்லப்பட்டவன் சிபி.

727. இடனோட்ட வினநெடிய வரையுருட்டி யிவ்வுலகம்
திடனோட்ட மெனக்கிடக்கு வகையிரங்கித் தெவ்வேந்தர்
உடனோட்ட நெடுவேலா யிவர்குலத்தோ ருவரிநீர்க்
கடனோட்ட ரெனின்வேறோர் கட்டுரையும் வேண்டுமோ.

(இ-ள்,) தெவ்வேந்தர்-பகையரசருடைய, உடல்தோட்ட-உடலைத்தொளைத்த, நெடுவேலாய் - நெடியவேலாயுதத்தையுடைய ஜநகமஹாராஜனே, இவர்குலத்தோர்-இவர்வமிசத்தார், இரங்கி - குதிரைக்காக மனமிரங்கி, இடறு - இடறுகின்ற, ஓட்ட-ஓட்டின்றன்மையவாக, இனம்-கூட்டமான, நெடியவரை உருட்டி - நீண்டமலைகளை யுருட்டி, இவ்வுலகம் - இவ்வுலகத்தை, திடறு ஓட்டம் என - மேடாகிய ஓட்டமாக, கிடக்கும்வகை-கிடக்கும்படி, உவரிநீர்க்கடல்-உப்புநீர்க்கடலை, தோட்டார் எனின்-தோண்டினார்கள் என்றால், வேறு-வேறாகவெடுத்துச்சொல்லவேண்டிய, ஓர்கட்டுரை யும்-ஒருபெருமொழியும், வேண்டுமோ-சொல்லவேண்டுமோ—எ-று. (அ)

ஓட்டம் இரண்டனுள் முன்னையது தேங்காயினோடு எனவும், பின்னையது குள முதலியவற்றைத் தோண்டும்போது அளவுதோன்றவைப்பதோர் மேட்டுக்குறி யெனவும் கொள்க. மூன்றாமடிநான்காமடிகளின் முதலிலுள்ள தோட்ட தோட்டார் என்பவற்றிற்குத் தொள் பகுதி, இதற்குப்பொருள் தொளைத்தல். இதனாற்சொல்லப் பட்டவர் சகரர்.

723. தூநின்ற்சு டர்வேலோ யனந்தனே சொல்லானேல்
யானின்று புகழ்ந்தேத்தற் கெளிதேயே டவிழ்கொன்றைப்
பூநின்ற மவுலியையும் புக்களைந்த புனற்கங்கை
வானின்று கொணர்ந்தானு மிவர்குலத்தோர் மன்னவன்காண்.

(இ-ள்.) தூநின்ற - பகைவரதுமாமிசம்பொருந்திய, சுடர் - காந்தியையுடைய, வேலோய் - வேலாயுதத்தைத்தாங்கின ஜநகமஹாராஜனே, (இவர் குலத்தினரது புகழை) அநந்தனேசொல்லானேல் - ஆதிசேடனே சொல்லமாட்டானாயின், யான் நின்று-யானிருந்து, புகழ்ந்துதுதித்தற்கு, புகழ்ந்து எத்தற்கு - எளிதே - எளிதோ ஏடு அவிழ் - இதழ்களவிழ்கின்ற, கொன்றைபூ - கொன்றைமலர்கள், நின்ற-தங்கிய, மவுலியையும்-சிவனது சடாபாரத்தையும், புக்கு அளைந்த - புகுந்துகலந்த, புனல் - நீரையுடைய, கங்கை - கங்கையை, வான்நின்று - விஷ்ணுவினுலகத்திலிருந்து, கொணர்ந்தானும்-பூலோகத்துக்குக் கொண்டுவந்தவனும், இவர்குலத்து - இவர்கள் குலத்திற்பிறந்த, ஓர் மன்னவன்-ஓரரசன்தான்—எ-று. (க)

காண் - முன்னிலையசை புகழ்ந்தேத்தல் ஒருபொருட் பன்மொழி. ஏகாரம்-எதிர்மறை. ஆதிசேஷன் இரண்டாயிரநாவினாலும் புகழவல்லனல்ல னாயின், யானொருநாவினால் எவ்வாறு புகழவல்லேன் என்பது கருத்து. இதனால்சொல்லப் பட்டவன் பகீரதன்,

729. கயற்கடல்சூ ழுலகெல்லாங் கைநெல்லிக் கனியாக்கி
இயற்கைநெறி முறையாலே யிந்திரற்கு மிடரியற்றி
முயற்கறையின் மதிக்குடையாயிவர்குலத்தோன்முன்னொருவன்
செயற்கரிய பெருவேள்வி யொருநூறுஞ் செய்தமைத்தான்.

(இ-ள்.) முயல்கறை இல்-முயற்களங்கமில்லாத, மதி-சந்திரன்போன்ற, குடையாய் - முத்துக்குடையையுடைய ஜநகமஹாராஜனே, முன் - முற்காலத்தில், இவர் குலத்தோன் ஒருவன் - இவர்கள் குலத்தினனாகிய வோரரசன், கயல்-கயல்மீன்கள் சஞ்சரிக்கிற, கடல் - கடலினால், சூழ்-வளையப்பட்ட,உலகு எல்லாம்-உலகமுழுதும், கைநெல்லிக்கனி ஆக்கி-உள்ளங்கை நெல்லிக்கனிபோலத் தன்னாணைக்குள்ளடக்கி, இயற்கைநெறி முறையால்-வேதத்தினியற்கையாகிய நன்னெறிமுறையால், இந்திரற்கும்-இந்திரனுக்கும், இடர் இயற்றி-இடரைச்செய்ய, செயற்கு அரிய-பிறர்செய்தற்கு அருமையான, ஒருநூறு பெருவேள்வியும் - ஒருநூறு பெரியயாகங்களையும், செய்து அமைத்தான்-செய்துமுடித்தான்—எ-று, (கo)

முயற்கறையில் மதி என்றது அபூதவுவமை. மதிக்குடை என்றமையால் குடையென்பதற்கு முத்துக்குடையென்றனம். வேதம் அபௌருஷேயமாதலால் அதிற் சொல்லப்பட்டநெறியை இயக்கைநெறி என்றார். இயற்றிசெயவெனெச்சத் திரிபு. இந்திரற்கும் என்னுமும்மை உயர்வுசிறப்பு. அவனுக்கிடரியற்றலாவது நூறு யாகங்களைச்செய்துமுடித்து அவனரசைக்கைக்கோடல். இதனாற் சொல்லப்பட்டவன் ககுஸ்தன்.

730. சந்திரனை வென்றானு முருத்திரனைச் சாய்த்தானும்
துந்துவெனுந் தானவனைச் சுடுசரத்தாற் றுணித்தானும்
வந்தகுலத் திடைவந்த ரகுவென்பான் வரிசிலையால்
இந்திரனை வென்றுதிசை யிருநான்குஞ் செருவென்றான்.

(இ-ள்.) சந்திரனைவென்றானும்-சந்திரனைவென்றவனும், உருத்திரனைச் சாய்த்தானும் - உருத்திரனைப்போரிலோட்டினவனும், துந்து என்னும்தானவனை-துந்துவென்கிற அசுரனை, சுடுசரத்தால்-எரிகின்றபாணத்தினால், துணித்தானும்-சேதித்தவனும், வந்த-தோன்றின, குலத்திடை - இவர்கள்குலத்தில், வந்த-பிறந்த, ரகுஎன்பான்-ரகுவென்பவன், வரிசிலையால்-கட்டமைந்தவில்லினால்,இந்திரனைவென்று-இந்திரனைஜெயித்து, இருநான்குதிசையும் - எட்டுத்திக்கிலுள்ளவர்களையும், செருவென்றான்-போரில்வென்றான்—எ-று. (கக)

ரகு வென்பது வடமொழித்தற்சமம். ராசமாபுரி ரவிகுல திலகன் எனச்சிந்தாமணியிலும்வருதல் காண்க.

731. வில்லென்னு நெடுவரையால் வேந்தென்னுங் கடல்கலக்கி
எல்லென்னு மணிமுறுவ லிந்துமதி யெனுந்திருவை
அல்லென்னுந் திருநிறத்த வரியென்ன வயனென்பான்
மல்லென்னுந் திரள்புயத்துக் கணியென்ன வைத்தானே.

(இ-ள்.) அயன் என்பான் - அயன் என்பவன், வில் என்னும் - வில்லாகிய, நெடுவரையால் - நெடியமந்தரகிரியாகியமத்தினால், வேந்து என்னும் - பகையரசராகிய, கடல்-பாற்கடலை, கலக்கி-கலங்கச்செய்து, எல் என்னும்-ஒளியென்கிற, அணிமுறுவல்-அழகியநகையையுடைய, இந்துமதியென்னும்-இந்துமதியென்கிற, திருவை-திரு

மகளை, அல் என்னும் - இராத்திரியென்றுசொல்லத்தக்க, திருநிறத்த-திருநிறத்தை யுடைய, அரி என்ன-திருமால்போல, மல் என்னும்-மற்போரென்றெப்போதுமவாவு கின்ற, திரள்புயத்துக்கு-திரண்டதன்தோள்களுக்கு,அணி என்ன-ஆபரணம்போல, வைத்தான்-அணிந்துகொண்டான்—எ-று. (கஉ)

அரி, திருப்பாற்கடலைக்கலக்கி, அதிலவதரித்த திருமகளைத் தன்திருமார்புக் காபரணமாகக்கொண்டாற்போல, அயன் என்பவன் சத்ருராஜ சமுத்திரத்தைக் கலக்கி இந்து என்கிற திருமகளைக் கைக்கொண்டானென்பது கருத்து. கடல்கலக் கித் திருவைக் கைக்கொள்ளுதலில், அரி அயன் என்னும் இருவருந் தம்முளொப் பாவாரென்பது.

732. அயன்புதல்வன் றயரதனை யறியாதா ரில்லையவன்
பயந்தகுலக் குமரரிவர் தமையுள்ள பரிசெல்லாம்
நயந்துரைத்துக் கரையேற நான்முகற்கு மரிதாம்பல்
இயந்துவைத்த கடைத்தலையா யானறிந்த படிகேளாய்

(இ-ள்.) பல் இயம் துவைத்த - பலவாத்தியங்களை முழக்குகின்ற, கடைத்தலை யாய்-தலைவாயிலையுடைய ஜநகமஹாராஜனே, அயன்புதல்வன் - அயனுக்குப்புத்திர னாகிய, தயரதனை - தசரதசக்ரவர்த்தியை, அறியாதார்-அறியாதவர்கள், இல்லை-ஒரு வருமில்லை, அவன்-அந்தத்தசரதன், பயந்த-பெற்ற, குலம் - மேன்மையான, குமரர்- குமரர்களாகிய, இவர்தமை-இவர்களை, உள்ளபரிசு-உள்ளவாறு, எல்லாம்-முழுதும், நயந்து உரைத்து - விரும்பிப்புகழ்ந்து, கரையேற - (புகழ்க்கடற்) கரையேறுதற்கு, நான்முகற்கும் - பிரமதேவனுக்கும், அரிது ஆம் - அருமையாகும். (அதனை) யான் அறிந்தபடி-நானறிந்திருக்கிறபிரகாரம், (சொல்ல) கேளாய்-கேட்பாய்—எ-று. ()

புகழ்க்கடல் கல்யாணகுணார்ணவம், அறியாதாரில்லையென்றது அவனது பிர சித்தியை விளக்குகின்றது. அவர்களிடத்துள்ள நற்குணங்களை யொறுவாறுணர்த் தல் கூடுமேயன்றி முற்றுமுணர்ந்தோதல் கூடாதென்பார் "உள்ளபரிசு எல்லாம் நயந்துரைத்துக்கரையேறநான்முகற்கும் அரிது" என்றார்.

இராமன் அவதாரச்சுருக்கம்.

733. துனியின்றி யுயிர்செல்லச் சுடராழிப் படைவெய்யோன்
பனிவென்ற படியென்னப் பகைவென்று படிகாப்போன்
தனுவன்றித் துணையில்லான் றருமத்தின் கவசத்தான்
மனுவென்ற நீதியான் மகவின்றி வருந்துவான்.

(இ-ள்.) துனி இன்றி - துன்பமில்லாமல், உயிர்செல்ல - உயிர்கள் வாழாநிற்க, சுடர்-ஒளியையுடைய, ஆழிப்படை-சக்ராயுதம்போன்ற, வெய்யோன்-சூரியன், பனி பனியை, வென்றபடி என்ன-வென்றதன்மையைப்போல, பகைவென்று-பகைவரை வென்று, படிகாப்போன்-உலகத்தைக்காப்பவனும், தனு அன்றி - தன்கை வில்லல் லாமல், துணையில்லான்-வேறுசஹாய மில்லாதவனும், தருமத்தின் கவசத்தான்-அற மாகிய கவசத்தை யணிந்தவனும், மனு என்ற-மனு (இவனே)என்றுசொல்லத்தக்க, நீதியாய்-நீதியையுடையவனும் ஆகிய அந்தத்தசரதன், மக இன்றி வருந்துவான்-புத் திரரில்லாமல் வருந்துகின்றவனாகி, (கச)

பகை பண்பாகுபெயர். தனு அன்றி துணை இல்லான் என்றமையால் தநுர்வேத பாரங்கதன் என்பதும், தருமத்தின் கவசத்தான் என்றமையால் தர்மத்தை யன்றி வேறொன்றைத் தனக்கு அரணாகக் கொள்ளானென்பதும், மனுவென்ற நீதியான் என்றமையால் நீதியிற்சிறந்தோன் என்பதும் விளங்குகின்றன.

734. சிலைக்கோட்டு நுதற்குதலைச் செங்கனிவாய்க் கருநெடுங்கண்
விலைக்கோட்டும் பேரல்குன் மின்னுடங்கு மிடையாரை
முலைக்கோட்டு விலங்கென்றங் குடனணுகி முன்னின்ற
கலைக்கோட்டுப் பெயர்முனியாற் றுயர்நீங்கக் கருதினான்.

(இ-ள்.) சிலை-வில்லைப்போல, கோட்டு-வளைவையுடைய, நுதல்-நெற்றியையும், குதலை - மழலைச்சொற்களையுடைய, செகனிவாய் - செம்மையாகிய கோவைக்கனி போன்றவாயையும், கருநெடுகண்-கரியநெடியகண்களையும், விலைக்கு ஓட்டும்-விலைக்குக்கொடுக்கின்ற, பேர்அல்குல்-பெரிய அல்குலையும், மின்-மின்னலைப்போல, நுடங்கும் - துவள்கின்ற, இடையாரை - இடையையுமுடையவராகிய வேசையரை, முலை கோட்டுவிலங்கு என்று - ஸ்தநங்களாகிய கொம்புகளையுடைய விலங்குகளென்று கருதி, அங்கு- அவ்விடத்தில், முன் உடன்அணுகி - முற்காலத்தில் அவர்களோடு சென்று, நின்ற - நின்ற, கலைக்கோட்டுப்பெயர் முனியால் - கலைக்கோட்டு முனிவனென்கிற பெயரையுடையவனைக்கொண்டு, துயர் நீங்க - தன்புத்திராபின்மையாதிய துக்கம்நீங்கும்படி, கருதினான்-நினைத்தவனாகி-எ-று. (௪௫)

உடன் அணுகி எனவும் பிரிக்கலாம். மின்நுடங்கும் என்பதற்கு மின்னற்கொடியானது நிகராமையாற் றுவள்கின்ற எனினும் பொருந்தும்.

735. தார்காத்த நறுங்குஞ்சித் தநயர்களென் றவமின்மை
வார்காத்த வனமுலையார் மணிவயிறு வாய்த்திலரால்
நீர்காத்த கடல்காத்த நிலங்காத்தே னென்னிற்பின்
பார்காத்தற் குரியாரைப் பணிநீயென் றடிபணிந்தான்.

(இ-ள்.) தார்காத்த - பூமாலைகளையணிந்த, நறுகுஞ்சி - நல்ல சிகையையுடைய, தநயர்கள்-புத்திரர்கள், என்தவம் இன்மை- என்தவத்திலில்லாமையால், வார்காத்த-கச்சினால் தடுக்கப்பட்ட, வனம்முலையார்-அழகியஸ்தநங்களையுடைய என்மனைவியர், மணிவயிறுவாய்த்திலர்-அழகியகருப்பங்கொண்டிலர், நீர்காத்த-நீர் நிறைந்த, கடல் காத்த-கடலாற்சூழப்பட்ட, நிலம்- பூமியை, காத்தேன் - காத்துவந்தேன், என்னிற் பின்-எனக்குப்பிறகு, பார்காத்தற்கு உரியாரை - பூமியை காப்பதற்குரிய நல்லாண் மக்களை, நீபணி என்று-நீர் அருள்செய்யவேண்டுமென்று, அடிபணிந்தேன்-அடிவணங்கினான்-எ-று. (௪௬)

என்னின் என்பதில் ஐந்தனுருபு நீங்கற்பொருளில்வந்தது. பார்காத்தற்கு என்றமையால் உரியார் எனறது நல்லாண்மக்களை யுணர்த்திநின்றது.

736. அவ்வுரைகேட் டம்முனியு மருள்சுரந்த வுவகையனாய்
இவ்வுலக மன்றியே யெவ்வுலகு மினிதளிக்கும்
செவ்வியிளஞ் சிறுவர்களைத் தருகின்றே னினித்தேவர்
வவ்விநுகர் பெருவேள்விக் குரியவெலாம் வருகென்றான்.

(இ-ள்.) அ முனியும்-அந்தமுனிவனும், அவ்வுரைகேட்டு - அந்தவார்த்தையைக் கேட்டு, அருள்சுரந்த உவகையன் ஆய் - கருணைசுரந்த களிப்பையுடையவனாய், இ

உலகம் அன்றியே-இந்தவுலகமேயல்லாமல், எவ்வுலகும்-எந்தலோகத்தையும்,இனிது அளிக்கும்-இனிதாகப்பாதுகாத்தற்குரிய, செவ்வி-அழகான, இளஞ்சிறுவர்களை-இளமையானபுத்திரர்களை, தருகின்றேன்-கொடுக்கிறேன், இனி - இனி, தேவர் - தேவர்கள், வவ்வி நுகர்-கவர்ந்துண்ணுகின்ற ஹவிஸ்ஸையுடைய, பெருவேள்விக்கு-பெரிய யாகத்துக்கு, உரிய எல்லாம் - தகுந்தவைகளெல்லாம், வருக என்றான் - வருவிக்கப் படக்கடவன என்று கட்டளையிட்டான்-எ-று. (கஎ)

எவ்வுலகும் இனிதளிக்கும் செவ்வியென்றது, கல்வியாகிய பொதுவழகும்,தனு வன்றித்துணையின்மை, தருமத்தின் கவசமுடைமை, மனுவென்ற நீதியுடைமை, தொடக்கமான சிறப்பழகுமாகிய இவற்றை.

737. காதலரைத் தரும்வேள்விக் குரியவெலாங் கடிதமைப்ப
மாதவரிற் பெரியோனு மற்றதனை முற்றுவித்தான்
சோதிமணிப் பொற்கலத்துச் சுதையனைய வெண்சோறோர்
பூதகணத் தரசேந்தி யனனின்றும் புறப்பட்ட.

(இ-ள்.) (அவ்வாறே சக்ரவர்த்தியும்) காதலரைதரும் வேள்விக்கு-புத்ரகாமேஷ்டிக்கு, உரிய எல்லாம்-உரியனவாகிய எல்லாப்பொருள்களையும், கடிது அமைப்ப-விரைவாக அமைத்துவைக்க, மாதவரில்பெரியோனும் - முனிவரிற் சிறந்தவனாகிய கலைக்கோட்டுமுனிவனும், அதனை-அந்தயாகத்தை, முற்றுவித்தான்-முடிவித்தான், (அப்பொழுது) ஓர்பூதகணத்தரசு-ஒருபூதகணத்தரசானது, சுதை அனைய-அமுதத்தையொத்த, வெண்சோறு-கலப்பில்லாத சோற்றை, சோதி - பிரகாசம்பொருந்திய, மணி-மணிகளிழைத்த, பொன்கலத்து-பொற்பாத்திரத்தில், ஏந்தி-ஏந்திக்கொண்டு அனல்நின்றும்-அந்தவேள்வித்தீயினின்றும், புறப்பட்ட-வெளிப்பட்டது-எ-று.

புறப்பட்டது என்பதில் துவ்வீறு தொகுத்தல், இஷ்டி-யாகம். புத்ரகாமேஷ்டி புத்ராபேக்ஷையால் செய்யப்படுவதோர் யாகம், சுதை அனைய என்றார் நிறத்தானும் சுவையானும் ஒத்திருத்தலின்.

738. பொன்னின்மணிப் பரிகலத்திற் புறப்பட்ட வின்னமுதைப்
பன்னுமறைப் பொருளுணர்ந்த பெரியோன்றன் பணியினால்
தன்னனைய நிறைகுணத்துத் தசரதனும் வரன்முறையால்
நன்னுதலார் மூவருக்கும் நாலுகூ றிட்டளித்தான்.

(இ-ள்.) (அவ்வாறு அந்தயாகத்தினின்றும்) பொன்னின்மணி பரிகலத்தின்-பொன்னினாற்செய்த ரத்நகசிதமான பாத்திரத்தோடு, புறப்பட்ட - (பூதகணத்தரசு கொண்டுவர) வெளிப்பட்ட, இன் அமுதை - இனியசோற்றை, பன்னும் - யாவரும் புகழுதற்குரிய, மறை-வேதத்தின், பொருள் - அர்த்தத்தை, உணர்ந்த - (ஐயல்திரிபு அற-அறிந்த, பெரியோன் - பெரியோனாகிய (கலைக்கோட்டு) முனிவனது, பணியினால்-கட்டளையினால், தன் அனைய - தன்னைத்தானே நிகர்க்கிற, நிறைகுணத்து-நிறைந்தகுணத்தையுடைய, தசரதனும் - சக்ரவர்த்தியும், நன்னுதலார் மூவருக்கும்-தன்மனைவியர் மூன்றுபேருக்கும், வரல்முறையால் - கிரமப்படி, நாலுகூறு இட்டு-நாலுபங்காக்கி, அளித்தான்-கொடுத்தான். (கஅ)

739. விரிந்திடுதீ வினைசெய்த வெவ்வியதீ வினையாலும்
அருங்கடையின் மறையறைந்த வறஞ்செய்த வறத்தாலும்
இருங்கடகக் கரதலத்திவ் வெழுதரிய திருமேனிக்
கருங்கடலைச் செங்கனிவாய்க் கவுசலையென்பாள் பயந்தாள்.

(இ-ள்.) விரிந்திடு - விருத்தியடைகின்ற, தீவினைசெய்த - தீவினையானது செய்த, வெவ்வியதீவினையாலும் - கொடியதீவினைப்பயனாகிய பாவத்தாலும், அருகடையின் - முடிவில்லாமையையுடைய, மறை-வேதங்களால், அறைந்த - சொல்லப்பட்ட, அறம்செய்த-நல்வினையானதுசெய்த, அறத்தாலும்-நல்வினைப்பயனாகிய புண்ணியத்தாலும், இரு-பெருமையாகிய, கடகம்-கடகத்தையணிந்த, கரதலத்து- கையினையுடைய, இ-இந்த, எழுத அரிய - சித்திரித்தற்குமருமையாகிய, திருமேனியை திருமேனியையுடைய, கருங்கடலை - கருங்கடலையொப்பவனாகிய, ஸ்ரீராமனை, செங்கனிவாய் - செவந்த கோவைக்கனிபோன்ற வாயினையுடைய, கவுசலையென்பாள்- கௌசலையென்பவள், பயந்தாள்-பெற்றாள்—எ-று. (உ0)

அருங்கேட்டிற்போல அருங்கடை என்பதில் அருமை இன்மைப்பொருட்டு. இன்சாரியை. அன்றி, அருகடை இல் எனப்பிரித்து உணர்தற்கருமையாகிய முடிவு இல்லாத எனப்பொருள்கூறினும் பொருந்தும், கடைப்படுதல் இன்மையாகியஎன்னலுமாம். எல்லாநல்களுக்கும் முதனாலென்பது. கருங்கடல் உருவகம். எம்மைப்போன்ற பெரியோர்பால் இன்சொற்களைக்கூறு மியல்பினளென்பான் செங்கனிவாயென்றான்.

740. தள்ளரிய பெருநீதித் தனியாறு புகமண்டும்
பள்ளமெனுந் தகையானைப் பரதனெனும் பெயரானை
எள்ளரிய குணத்தாலு மெழிலாலு மிவ்விருந்த
வள்ளலையே யனையானைக் கேகயர்கோன் மகள்பயந்தாள்.

(இ-ள்.) தள் அரிய-(உயர்ந்தோரால்) நீக்குதற்கரிய, பெருநீதி - பெரிய நீதியாகிய, தனி-ஒப்பற்ற, ஆறு-நதியானது, புக- புகும்படி, மண்டும் - நெருங்கு பாய்கின்ற, பள்ளம் என்னும்-கடலென்றுசொல்லுதற்கேற்ற, தகையானை - நற்குணங்களையுடையவனும், பரதன் என்னும் பெயரானை - பரதனென்கிற பெயரை யுடையவனும், எள் அரிய-பழித்தலில்லாத, குணத்தாலும்-நற்குணங்களாலும்,எழிலாலும்-அழகினாலும், இ இருந்தவள்ளலையே-இவ்விடத்திருக்கிற ஸ்ரீராமனையே, அனையானை-ஒத்தவனுமாகிய இவனை, கேகயர்கோன் - கேகயதேசத்தார்க்கரசனாகிகைகயனுக்கு, மகள் - மகளாகியகைகேயி, பயந்தாள்-பெற்றாள். (உக)

ஆறுபுகமண்டும் என்றவிசேடணத்தால் பள்ளம் என்பதற்குக் கடலென்று பொருளுரைத்தோம். தள் எள் என்பன முதனிலைத்தொழிற்பெயர்கள். ஆசிரியர் மேலைத்திருவிருத்தத்தில் கௌசலை எனப் பெயர்குறித்தாற்போல இத்திரு விருத்தத்தில் கைகேயி எனப் பெயர்குறியாது கேகயர்கோன்மகள் என்றொழிந்தது அவளால் மேல்நிகழு மனர்த்தத்தை யெண்ணி அவளதுபெயர் கூறவஞ்சிப்போலும்.

741. அருவலிய திறலினரா யறங்கெடுக்கும் விறலரக்கர்
வெருவரு திண்டிறலார்கள் வில்லேந்து மெனிற்செம்பொற்
பருவரையு நெடுவெள்ளிப் பருப்பதமும் போல்வார்கள்
இருவரையு மிவ்விருவர்க் கிளையாளு மீன்றெடுத்தாள்.

(இ-ள்.) அரு-பிறரால்வெல்லுதற்கரிய, வலிய - வலியையுடைய, திறலினராய்- வெற்றிபொருந்தினவர்களாய், அறம்கெடுக்கும் - தர்மத்தைச்சிதைக்கின்ற, விறல் அரக்கர்-வெற்றியையுடைய அரக்கர்கள், வெருவரு - அஞ்சுதற்குரிய, திண்திறலார்

கள்-மிக்கபலமுள்ளவர்களும், செம்பொன்பருவரையும்-செம்பொன்னாலாகிய பெரிய மலையும், நெடுவெள்ளிபருப்பதமும்-நீண்டவெள்ளிமலையும், வில் ஏந்தும் எனின்-வில் லையேந்திநிற்பனவாயின், போல்வார்கள் - அவைகளையொத் திருப்பவர்களும் ஆகிய, இருவரையும்-மற்ற இரண்டுபேர்களையும், இவ்விருவர்க்கு இளையாளும் - இவ்விரண்டு தேவியர்களுக்கும் இளையவளாகிய சுமித்திரையும், ஈன்று எடுத்தாள் - பெற்றெடுத் தாள்—எ-று. (உஉ)

செப்பொற்பருவரை, மேரு. நெடுவெள்ளிப்பருப்பதம், கைலாயம். இருவர் என்றது லக்ஷ்மண-சத்ருக்கர்களை.

742. தலையாய பொருளுணர்விற் கலைமகட்குத் தலைவராய்ச்
சிலையாயுந் தனுவேதந் தெவ்வரைப்போற் பணிசெய்யக்
கலையாழிக் கதிர்த்திங்க ளுதயத்திற் கலித்தோங்கும்
அலையாழி யெனவளர்ந்தார் மறைநான்கு மனையார்கள்.

(இ-ள்.) மறைநான்கும் அனையார்கள் - நான்குவேதங்களை யொத்தவர்களாகிய அந்தப்புத்திரர்கள் நால்வரும், தலை ஆய - முதன்மையாகிய, பொருள் - மெய்ப்பொருள்களை, உணர்வில் - அறிவதில், கலைமகட்குதலைவர் ஆய் - நாமகளுக்குத் தலைமையுடையார்களாய், சிலை ஆயும் - விற்பயிற்சியையாராய்தற்குரிய, தனுவேதம் - தநுர் வேதமானது, தெவ்வரைப்போல்-தம்பகையரசர் தம்மால்வெல்லப்பட்டுவந்து பணி செய்தல்போல, பணிசெய்ய-பணிசெய்யாநிற்க, கலை- நிறைவாகிய கலைகளையுடைய, ஆழி-வட்டமாகிய, கதிர்-கிரணக்களையுடைய, திங்கள்-சந்திரனது,உதயத்தில்-உதய காலத்தில்,கலித்து ஓங்கும்-ஒலித்துப்பொங்குகிற, அலை-அலைகளையுடைய, ஆழிஎன- கடல்போல, வளர்ந்தார்-அறிவினால்உயர்ந்தார்கள்—எ-று. ()

தலையாயபொருள், வீட்டுநூற்பொருள். ஆழி என மேல்வந்தமையின், கலை யென்பதற்கு நிறைவாகிய கலையென்றனம். புருஷார்த்த சதுஷ்டயப்ரதாயினியான வேதத்தை யுவமையாக்கினது இவர்களும் அவ்வாறு நாற்பொருட் பயத்தினராத லைக்கி.

743. திறையோடு மரசிறைஞ்சுஞ் செறிகழற்காற் றசரதனும்
பொறையோடுந் தொடர்மனத்தான் புதல்வரெனும் பெயரேகாண்
உறையோடு நெடுவேலா யுபநயன விதிமுடித்து
மறையோடு வித்திவரை வளர்த்தானும் வசிட்டன்காண்.

(இ-ள்.) உறையோடும் நெடுவேலாய்-எதிர்ப்பாரில்லாமையினால்) உறையில் தங் கிய நெடியவேலாயுதத்தையுடைய ஜநகமஹாராஜனே, திறையோடும்-கப்பத்தோடும் வந்து, அரசு-வேந்தர்கள், இறைஞ்சும்-வணங்கும்படியான, செறி-நெருக்கிய, கழல்- வீரக்கழலணிந்த, கால்-பாதங்களையுடைய, தசரதன் ஆம் - தசரதனாகிய, பொறை யோடும் தொடர்மனத்தான்-பொறுமையோடு நட்புக்கொண்ட மனத்தையுடையவ னுக்கு, புதல்வர் என்னும்பெயரே - புத்திரர்களென்கிற பெயரொன்றுமேயுள்ளது, உபநயனவிதிமுடித்து-உபநயனவிதியைமுடித்து, மறை ஓடுவித்து-வேதாதிகளிற்றேர் ச்சியடைவித்து, இவரை - இவர்களை, வளர்த்தானும் - வளர்த்தவனும், வசிட்டன்- வசிட்டமுனிவனே—எ-று. (உச)

காண்முன்னிலையசை. வளர்த்தானும் என்னுமும்மை இறந்தது தழீஇயது.

744. ஈங்கிவரா லென்வேள்விக் கிடையூறு கடிதியற்றும்
தீங்குடைய கொடியோரைக் கொல்விக்குஞ் சிந்தையனாய்ப்
பூங்கழலார்க் கொண்டுபோய் வனம்புக்கேன் புகாமுன்னம்
தாங்கரிய பேராற்றற் றாடகையே தலைப்பட்டாள்.

(இ-ள்.) ஈங்கு - இவ்விடத்தில், என்வேள்விக்கு - என் யாகத்துக்கு, கடிது - விரைவாக, இடையூறு இயற்றும் - இடையூற்றைச் செய்கிற, தீங்கு உடையகொடியோரை - தீமையையுடைய துஷ்டர்களை, இவரால் - இவர்களைக்கொண்டு, கொல்விக்கும் - கொல்விக்கவேண்டுமென்கிற, சிந்தையனாய் - கருத்தையுடையவனாய், பூ-பொலிவாகிய, கழலார்க்கொண்டுபோய் - வீரக்கழலையணிந்த இவர்களை யழைத்துக்கொண்டுபோய், வனம்புக்கேன் - வனத்திற் பிரவேசித்தேன், புகாமுன்னம் - புகுவதற்குமுன்னே, தாங்கு அரிய - பிறர் தாங்குதலருமையாகிய, பேர் ஆற்றல்-பெரிய வல்லமையையுடைய, தாடகையே - தாடகையென்னு மரக்கியே, தலைப்பட்டாள்-முதலிலெதிர்த்தாள்—எ-று. (உரு)

ஈங்கு என்றது தன் தவவனம், மிதிலைக்கு அருகிலுள்ளதென்றபடி.

745. அலையுருவக் கடலுருவத் தாண்டகைதன் னீண்டுயர்ந்த
நிலையுருவப் புயவலியை நீயுருவ நோக்கையா
உலையுருவக் கனலுமிழ்கட் டாடகைதன் னுரமுருவி
மலையுருவி மரமுருவி மண்ணுருவிற் றொருவாளி.

(இ-ள்.) அலை உருவு - அலையுருவிக்கொண்டு வருகின்ற, அக்கடல் - அக்கடல்போன்ற, உருவத்து - நிறத்தையுடைய, ஆண்தகை - ஆண்மையிற் சிறந்தோனாகிய ஸ்ரீராமனது, நீண்டு உயர்ந்த - நீண்டுயர்ந்தனவாகிய, நிலை - விட்டுநீங்காத, உருவம் - அழகையுடைய, புயம்வலியை - தோள்வலியை, ஐயா நீ உருவநோக்கு - ஐயாநீ ஆழமாகப்பார், (இந்தத் தோள்வலியைக்கொண்டெய்த) ஒருவாளி-ஓரம்பு, உலை-கொல்லுலைக்களத்தை, உருவு - உருவி எழுகின்ற, கனல் - நெருப்பை, உமிழ்-உமிழ்கின்ற, கண் - கண்களையுடைய, தாடகை - தாடகையினது, உரம் உருவி - மார்பையுருவி, மலை உருவி - (அடுத்துநின்ற) மலைகளையுருவி, மரம் உருவி - மரங்களையுருவி, மண் உருவிற்று - எதிர்நிற்கும் பொருளில்லாமையால் பூமியிலுந்தைத்துருவிற்று—எ-று.

ஆண்டகைதன், தாடகைதன், என்பவற்றீற்றுத் தன் இரண்டும் அசைகள்.

746. செக்கர்நிறத் தெரிகுஞ்சிச் சிரக்குவைகள் பொருப்பென்ன
உக்கனவோ முடிவில்லை யோரம்பி னெடுமரக்கி
மக்களிலங் கொருவன்போய் வான்புக்கான் மற்றையவன்
புக்கவிட மறிந்திலேன் போந்தனெனென் வினைமுடித்தே.

(இ-ள்.) செக்கர்நிறத்து - செவ்வானத்தி னிறம்போன்ற நிறத்தையுடைய, எரி நெருப்பையொத்த, குஞ்சி - ஆண்மயிரையுடைய, சிரம் - தலைகளினது, குவைகள் - குவியல்கள், பொருப்பு என்ன - மலைகள்போல, உக்கனவோ - சிந்ினவோ, முடிவு இல்லை - இறுதியுடையனவல்ல, ஓர் அம்பினொடும் - ஒரு பாணத்தினால், அரக்கிமக்களில் - அரக்கியாகிய தாடகை ன் புத்திரர்களில், ஒருவன் - ஒரு புத்திரனாகிய சுவாகு, போய் - சென்று, அங்கு - அவ்விடத்தில், வான்-வீரசுவர்க்கத்தில், புக்கான்-பிரவேசித்தான், மற்றையவன்-வேறொரு புத்திரனாகிய மாரீசன், புக்க-பிரவேசித்த,

இடம் - இடத்தை, அறிந்திலேன் - உணர்ந்திலேன், என்வினை - எனது யாககாரியத்தை, முடித்து - நிறைவேற்றி, போந்தனென்-வந்தேன்—எ-று. (உஎ)

உக்கன, புக்கான், புக்க, என்பவற்றில், பகுதியிரட்டிக் காலங்காட்டியது.

747. ஆய்ந்தேற வுணரய்ய வயற்கேயு மறிவரிய
காய்ந்தேவி லுலகனைத்துங் கடலோடு மலையோடும்
தீய்ந்தேறச் சுடுகிற்கும் படைக்கலங்கள் செய்தவத்தால்
ஈய்ந்தேனு மனமுட்க விவற்கேவல் செய்குனவால்.

(இ-ள்.) அய்ய - ஐயனே, (இவன்புகழ்கள்) அயற்கேயும் - பிரமதேவனுக்காயினும், அறிவு அரிய - அறிதலருமையாகின்றன, (அதனை) ஆய்ந்து - நீயாராய்ந்து, ஏற - முற்றும், உணர் - அறி, காய்ந்து-கோவித்து, ஏவில் - இவன் ஏவினால், உலகு அனைத்தும் - எல்லா வுலகங்களையும், கடலோடும் - கடல்களுடனும், மலையோடும்-மலைகளுடனும், தீய்ந்து ஏற - கரிந்துபோம்படி, சுடுகிற்கும் - சுடுகின்ற, படைக்கலங்கள் - ஆயுதங்கள், செய்தவத்தால் - செய்த தபோமஹிமையால், ஈய்ந்தேனும்-கொடுத்தானும், மனம் உட்க - மனம்நாண, இவற்கு - இந்தச் சக்ரவர்த்தித் திருமகனுக்கு, ஏவல்செய்குன - ஏவல்செய்யாநின்றன—எ-று. (உஅ)

ஆல் அசை. ஆய்ந்து ஏற என்பதற்கு, ஆராய்ந்துகடைத்தேற எனினுமமையும். செய்தவத்தால் என்பதைப் படைக்கலங்கள்மேலேற்றிக் கூறலுமாம்.

748. கோதமன்றன் பன்னிக்கு முன்னையுருக் கொடுத்ததிவன்
போதுநின்ற தெனப்பொலிந்த பொலன்கழற்காற் பொடிகண்டாய்
காதலென்ற னுயிர்மேலு மிக்கரியோன் பாலுண்டால்
ஈதிவன்றன் வரலாறும் புயவலியு மெனவுரைத்தான்.

(இ-ள்.) கோதமன்பன்னிக்கு-கௌதமமுநிவனுடைய பத்நிக்கு, இவன் - இந்த ஸ்ரீராமனது, போதுநின்றது என - தாமரை மலரானது கவிழ்ந்திருந்தாற்போல, பொலிந்த - பிரகாசியாநின்ற, பொலன்கழல் - பொற்கழலையணிந்த, கால்பொடி - ஸ்ரீபாதரேணுவானது, முன்னை யுருகொடுத்தது - பழைய மாநுடவுருவத்தைத் தந்தது, என்றன் உயிர்மேலும் - (எனக்கு) என்னுயிர்மேலிருப்பதைப் பார்க்கினும், இகரியோன்பால் - இந்தக்கரிய திருமேனியை யுடையவனிடத்தில், காதல் உண்டு-விருப்பமுண்டு, இவன் வரலாறும் - இவனது (குலமுதலிய) வரலாறும், புயவலியும்-புஜபலமும், ஈது என உரைத்தான் - இதுவென்று சொன்னான்—எ-று. (உகூ)

தன் மூன்றும் ஆல் ஒன்றும் அசைநிலைகள். கண்டாய் முன்னிலையசை யிடைச்சொல். ஈது தொகுதியொருமை.

கஉ - வது குலமுறைகிளத்துபடலம் முற்றும்.

---

## கங-வது. கார்முகப் படலம்.

வில்லிறுத்ததைக்குறித்துக் கூறும் படலம்.

---

749. மாற்றம்யா துரைப்பது மாயவிற்கு நான்
தோற்றவா றெனமனந் துளங்கு கின்றதால்
நோற்றன ணங்கையு நோய்தினை யன்வில்
ஏற்றுமே லிடர்க்கட லேற்று மென்றனன்,

(இ-ள்.) (இவ்வாறு விசுவாமித்திரர் சொல்லக்கேட்ட ஜநகமஹாராஜன் அந்த முனிவனைப்பார்த்து) மாயம் - ஆச்சரியகரமான, வில்கு - வில்லுக்கு, தோற்ற ஆறு- அரசர்கள் தோற்ற விதத்தைக்குறித்து, நான் - யான், யாதுமாற்றம் உரைப்பது என - என்னவார்த்தை சொல்லுகிறதென்று, மனம் துளங்குகின்றது - என் மனம் நடுங்காநின்றது, ஐயன் - இவ்வையன், வில் - இந்தவில்லை, நொய்தின் ஏற்றும் எல்- இலேசாக நாணேற்றுவானாயின், நங்கையும் - சீதையும், நோற்றனள் - நல்லநோன்பு நோற்றவளாவாள், (அந்தச்சீதைக்கு விவாகமில்லாதிருத்தலைக் குறித்துத் துன்பப் படுகின்ற எம்மையும்) இடர்க்கடல் - துன்பசாகரத்தினின்றும், ஏற்றும் - (இன்பக் கரை) யேற்றுவானாவான், என்றனன் - என்று ஜநகமஹாராஜன் சொன்னான்-எ-று.

நோற்றனள் என்பது, துணிவுபற்றி எதிர்காலம் இறந்தகாலமாகவந்த கால வழுவமைதி. நங்கை - பெண்மைக்குணங்கள் நிறைந்தவள். இடர்க்கடல் என்ற மையால் ஏற்றும் என்றதற்கு இன்பக்கரையேற்றுவான் எனப் பொருளுரைக்கப் பட்டது.

750. என்றனை னென்றுதன் னெதிர்நின் றூரையக்
குன்றுறழ் வரிசிலை கொணர்மி னீண்டென
நன்றென வணங்கினர் நால்வ ரோடினர்
பொன்றிணி கார்முகச் சாலை புக்கனர்.

(இ-ள்.) என்றனன் - என்று சொன்னவனாகி, என்று-தன்பணியையேற்க, தன் எதிர்நின்றாரை - தன்னெதிரில் நின்றவர்களை (நோக்கி,) அ - அந்த, குன்று உறழ் - மலையையொத்த, வரிசிலை - கட்டமைந்தவில்லை, ஈண்டு - இவ்விடத்துக்கு, கொணர் மின் என - கொண்டுவாருங்களென்று சொல்ல, (அதுகேட்டு) நால்வர் - நான்கு ஏவ லாளர், நன்று என வணங்கினர் - அப்படி செய்வோமென்று தொழுது, ஓடினர் - விரைந்துபோய், பொன்திணி - பொன்னினாற் செய்யப்பட்டுத் திணிந்த, கார்முகச் சாலை - விற்சாலையில், புக்கனர் - ப்ரவேசித்தார்கள்—எ-று. (உ)

நன்று என்றது இவ்விடத்துத் தன்பொருள் குறியாது, பணித்தவாறே செய் வோமென்னும் பொருள்படநின்றதோர் குறிப்புச்சொல். என்று செயவெனெச்சத் திரிபு.

751. உறுவலி யானையை யொத்த மேனியர்
செறிமயிர்க் கல்லெனத் திரண்ட தோளினர்
அறுபதி னாயிர ரளவி லாற்றலர்
தறிமடுத் திடையிடை தண்டிற் றூங்கினர்.

(இ-ள்.) உறுவலியானையை - மிக்க வலியையுடைய யானையை, ஒத்த - நிகர்த்த மேனியர் - சரீரத்தையுடையவர்களும், செறிமயிர் - நெருங்கிய மயிரையுடைய, கல் எனதிரண்ட - மலைபோலத் திரண்ட, தோளினர் - தோள்களை யுடையவர்களும், அளவு இல் - அளவற்ற, ஆற்றலர் - வல்லமையை யுடையவர்களுமாகிய, அறுபதி னாயிரர் - ஐயாயிரம்பேர், தறி மடுத்து - தூண்களைக்குறுக்கே இணைத்து, இடை இடை-இடையிடையே, தண்டின் - தண்டுகளைக்கொண்டு, தாங்கினர்-சுமந்தார்கள்.

பதினாயிரத்தில் நேராக அற்றது ஐயாயிரம் என்க.

752. நெடுநில மகண்முது காற்ற நின்றுயர்
தடகிரி வடவரை தானு நாணுற

இடமிலை யுலகென வந்த தெங்கணும்
கடல்புரை திருநக ரிரைத்துக் காணவே.

(இ-ள்.) நெடு - நெடிய, நிலமகள் - பூமிதேவியானவள், முதுகு-முதுகின் வருத்தத்தை, ஆற்ற - ஆற்றிக்கொள்ளவும், நின்று உயர்-நிலைபெற்றோங்கிய, தடம் நிமிர்-பெருமைமிகுந்த, வடவரையும் - மேருமலையும், நாண் உற - வெட்கத்தை யடையவும், கடல்புரை - கடலையொத்த, திரு - செல்வமிகுந்த, நகர் - நகரத்திலுள்ளோர், இரைத்துக்காண - இரைந்துகொண்டுவந்து பார்க்கவும், உலகு எங்கணும் - உலகில் எவ்விடத்தும், இடம் இல்லை என - இடமில்லையென்னும்படி, வந்தது - (அவ்வில்லானது) வந்தது—எ-று. (ச)

நகர் இடவாகு பெயர். தான் - அசை.

மிதிலாநகரவாசிகள் முறைபாடு.

753. சங்கொடு சக்கரந் தரித்த தாளைய
சிங்கவே றல்லனே லிதனைத் தீண்டுவான்
எங்குள னொருவனின் றேற்றி னிச்சிலை
மங்கைதன் திருமணம் வாழு மாலென்பார்.

(இ-ள்.) (அந்த நகரத்தாருட்சிலர்) சங்கொடு சக்கரம் தரித்ததானைய - பாஞ்சஜந்யத்தோடு சுதரிசநத்தையும் தரித்த படைகளாகவுடைய, சிங்க ஏறு அல்லனேல்-ஆண்சிங்கத்தையொத்த திருமாலல்லனாயின், இதனை --இந்தவில்லை, தீண்டுவான் - தொடுகிறவனாகிய, ஒருவன் - ஒருவீரன், எங்கு உளன்-எங்கேயிருக்கிறான், (இவன்) இன்று - இம்போது, இ சிலை - இந்தவில்லை, ஏற்றின் - நாணேற்றினால், மங்கைதன் திருமணம் - சீதைதன் திருமணத்தில், வாழும் - வாழ்வையடையும், என்பார்-என்று சொல்வார்கள்—எ-று. (ரு)

754. கைதவந் தனுவெனல் கனகக் குன்றென்பார்
எய்தவன் யாவனோ வேற்றிப் பண்டென்பார்
செய்தவத் திசைமுகன் றீண்டி யன்றுதன்
மொய்தவப் பெருமையின் முயற்சி யாலென்பார்.

(இ-ள்.) (சிலர்) தனு எனல் - இதனை வில்லென்றுசொல்லுவது, கைதவம் - கபடம், (மற்றென்னெனின்) கனகக்குன்று என்பார் - மேருவென்றே சொல்வார்கள், (சிலர்) பண்டு - முற்காலத்தில், ஏற்றி - இதில் நாணேற்றி, எய்தவன் - அம்பெய்தவன், யாவனோ என்பார் - எவனோ வென்பார்கள், (சிலர்) அ திசைமுகன் - அந்தப் பிரமதேவன், செய்தது - இதைச் சிருட்டித்தது, தீண்டி அன்று-கையினால் தொட்டல்ல, தன் - தனது, மொய்தவப் பெருமையின் - நிறைந்ததவப் பெருமையினது, முயற்சியால் - முயற்சியினால்தான், என்பார் - என்பார்கள்—எ-று. (சு)

செய்தது என்பதி னீறுதொக்கது.

755. திண்ணெடு மேருவைத் திரட்டிற் றோவென்பார்
வண்ணவான் கடல்பண்டு கடைந்த மத்தென்பார்
அண்ணல்வா ளரவினுக் கரசனோ வென்பார்
விண்ணிடு நெடியவில் வீழ்ந்த தோவென்பார்.

(இ-ள்.) (சிலர் இவ்வில்லானது) திண்டுநெடு மேருவை - வலிய நெடிய மேருவை, திரட்டிற்றோ - திரட்டிச்செய்ததோ, என்பார் - என்பார்கள், (சிலர் இவ்வில்லானது) வண்ணம் - அழகான, வான் - மேலான, பண்டு - முற்காலத்தில், கடல்

கடைந்த - திருப்பாற்கடலைக் கடைந்த, மத்து ஓ என்பார் - மத்தோவென்பார்கள், (சிலர் இவ்வில்லானது) அண்ணல் - பெருமைபொருந்திய, வாள் - ஒளியையுடைய, அரவினுக்கரசனோ - நாகராஜனோ, என்பார் - என்பார்கள், (சிலர் இவ்வில்லானது) விண் இடு - மேகத்திலிடப்பட்ட, நெடியவில் - நீண்ட (இந்திர) வில்லானது, வீழ்ந்ததோ என்பார் - பூமியில் விழுந்ததோவென்பார்கள்—எ-று. ()

மத்து என்பதனோடு ஓகாரஞ்சேர்க்கப்பட்டது.

756. என்னினது கொணர்கென வியம்பினா னென்பார்
மன்னவ ருளர்கொலோ மதிகெட்டா ரென்பார்
முன்னையூழ் வினையினான் முடிக்கி லாமென்பார்
கன்னியு மிச்சிலை காணுமோ வென்பார்.

(இ-ள்.) (சிலர்) இது - இந்தவில்லை, என் - யாதுகாரணமாக, கொணர்க என - கொண்டுவருகவென்று, இயம்பினான் - (அரசன்) சொன்னான், என்பார் - என்பார்கள், (சிலர்) மன்னவர் - அரசர்களுக்குள், மதிகெட்டார் - இவனைப்போல மதிகெட்டவர்களாகிய, மன்னவர் - அரசர்கள், உளர்கொல் - உளரோ, என்பார் - என்பார்கள், (சிலர்) முன்னை - பழமையாகிய, ஊழ்வினையினால் - ஊழ்வினையால், முடிக்கில் - (இந்தக்காரியத்தை) முடித்தால், ஆம் - முடியும், என்பார் - என்பார்கள், (சிலர்) கன்னியும் - சீதையும், இ சிலை - இந்தவில்லை, காணுமோ - பார்ப்பாளோ, என்பார் - என்பார்கள்—எ-று. (அ)

இவ்விடத்து ஊழென்றது ஆகூழை. வினையென்றது அதன்பயனை.

757. இச்சிலை யுதைத்தகோற் கிலக்கம் யாதென்பார்
நச்சிலை நங்கைமே னாட்டும் வேந்தன்பார்
நிச்சய மெடுக்குங்கோ னேமியா னென்பார்
சிற்சிலர் விதிசெய்த தீமைதா னென்பார்.

(இ-ள்.) (சிலர்) இ உலை உதைத்த - இந்தவில்லாலுதைக்கப்பட்ட, கோல்கு - அம்புக்கு, இலக்கம்யாது - லக்ஷ்யம்யாது, என்பார் - என்பார்கள், (சிலர்) வேந்து - அரசன், நச்சிலை - சிறந்தவில்லை, நங்கைமேல் - சீதையின்பொருட்டு, நாட்டும் - குறிக்கிறான், என்பார் - என்பார்கள், நேமியான் - சக்கரத்தசரனாகிய இறைவன், நிச்சயம் - உண்மையாக, எடுக்கும் - (இந்தவில்லை) எடுத்துநாணேற்றுவான், என்பார் - என்பார்கள், சிற்சிலர் - சிலர்சிலர், (இந்தக்காரியம்) விதிசெய்த - ஊழ்செய்த, தீமைதான் - தீங்கே, என்பார் - என்பார்கள்—எ-று. (கூ)

நப்பின்னை என்பவற்றிற்போல, நச்சிலையென்பதில், ந என்னும் இடைச்சொல் சிறப்புப்பொருள் தந்தது.

758. மொய்த்தன ரின்னண மொழிய மன்னன்முன்
உய்த்தனர் நிலமுது குளுக்கிக் கீழுற
வைத்தனர் வாங்குனர் யாவரோ வெனக்
கைத்தலம் விதித்தனர் கண்ட வேந்தரே.

(இ-ள்.) (அந்நகரஜனங்கள்) இன்னணம் - இவ்வாறு, மொய்த்தனர்மொழிய - நெருங்கிநின்று சொல்லிக்கொண்டிருக்க, (ஐயாயிரம்பேர்) நிலம் - நிலமகளது, முதுகு - மேற்புறமானது உளுக்கி - நெளிந்து, கீழ்உற பள்ளமாக, உய்த்தனர் - கொண்டுவந்து, மன்னன்முன் - அரசனுக்கெதிரில், வைத்தனர் - வைத்

தார்கள், (அவ்வாறுவைத்தவில்லை) கண்டவேந்தர் - பார்த்த அரசர்கள், (இதை) வாக்குநர் - வளைப்பவர், யாவரேர என்று - யாவரோவென்று சொல்லி, கைத்தலம் விதித்தனர் - கைகள் நடுங்கினார்கள்—எ-று. (க0)

இன்னவண்ணம் என்பது, ஓன்னணம் என மரீஇயது.

759. போதக மனையவன் பொலிவு நோக்கியவ்
வேதனை தருகின்ற வில்லை நோக்கித்தன்
மாதினை நோக்குவான் மனத்தை நோக்கிய
கோதமன் காதலன் கூறன் மேயினன்.

(இ-ள்.) போதகம் அனையவன் - மதயானையையொத்தவனாகிய சக்ரவர்த்தித் திருமகனது, போலிவுநோக்கி - ஊக்கத்தோடு விளங்குதலைப்பார்த்து, வேதனை தருகின்ற - (பார்க்குந்தோறும்) வேதனையையுண்டாக்குகிற, அ வில்லைநோக்கி - அந்தவில்லைப்பார்த்து, தன்மாதினை-தன்புதல்வியாகிய சீதையின்நலத்தை, நோக்குவான - எண்ணிப்பார்ப்பவனாகிய ஜநகமஹாராஜனது, மனத்தை - உட்கருத்தை, நோக்கிய - குறிப்பினாலுணர்ந்த, கோதமன்காதலன் - கௌதமரிஷியின் புத்ரனாகிய சதாநந்தருஷி, கூறல்மேயினன் - சொல்லத் தொடங்கினன். (கக)

சதாநந்தரிஷி வில்வந்த வரலாறு கூறுகின்றார்.

760. இமையவில் வாங்கிய வீசன் பங்குறை
உமையினை யிகழ்ந்தின னென்ன வோங்கிய
கமையறு சினத்தனிக் கார்முகங் கொளாச்
சமையுறு தக்கனார் வேள்வி சாரவே.

(இ-ள்.) இமையம் வில் - மேருவாகியவில்லை, வாங்கிய - வளைத்த, ஈசன்பங்கு உறை-சிவனது இடதுபாகத்தில் வசிக்கின்ற, உமையினை - உமாதேவியை, இகழ்ந்தனன் என்ன - அவமதித்தானென்று, ஓங்கிய உயர்ந்த, கமை அறு-பொறுமையற்ற, சினத்தன் , கோபத்தைபுடையவனாகிய வீரபத்திரன், இ கார்முகம்கொளா-இந்தவில்லைக் கைக்கொண்டு, சமை உறு-சமைக்கப்பட்டிருக்கிற, தக்கனார்வேள்வி-தக்கனது யாகசாலையில், சார - பொருந்துதலும்—எ-று. (கஉ)

761. உக்கன பல்லொடு கரங்க டோடினர்
புக்கனர் வானவர் புகாத சூழல்கள்
தக்கன வேள்வியிற் றழலு மாறின
முக்கணெண் டோளவன் முனிவு மாறினன்.

(இ-ள்.) பல்லொடுகரங்கள் - (அங்கிருந்ததேவர்களுள் சிலருடைய) பல்லுடன்கைகளும், உக்கன - (பூமியில்) சிந்தின, வானவர் - (அப்படி உதிரப்பெற்ற) தேவர்கள், ஓடினர் - ஓடி, புகாதசூழல்கள் - முன் புகுந்தறியாத இடங்களிலும், புக்கனர் - புகுந்தார்கள், தக்கன் - தக்கனது, நல்வேள்வியில் - சிறந்தயாகத்திலிருந்த, தழலும் - யாகாக்நியும், ஆறின - தணிந்தன, முக்கண் எண்தோளவன்-மூன்றுகண்களையும் எட்டுத்தோல்களையுமுடைய சிவனும், முனிவுமாறினன் - கோபம் நீங்கினன்—எ-று. (கந)

சூழல்களும் என்னும் உம்மை இழிவுசிறப்பு. ஓடுவென்னு மூன்றனுருபை யுடனிகழ்ச்சியாக்காது எண்ணுப்பொருட்டெனக்கோடலுமாம்.

762. தாளுடை வரிசிலை சம்பு வும்பர்தம்
நாளுடை மையினர் நடுக்க நோக்கியிக்
கோளுடை விடையனுன் குலத்துட் டோன்றிய
வாளுடை யுழவனோர் மன்னன் பால்வைத்தான்.

(இ-ள்,) (அவ்வாறு முனிவுமாறின) சம்பு - சிவன், உம்பர்-தேவர்கள், தம்நாள் உடைமையின் - தமது ஆயுளையுடையார்களா யிருந்தமையால், அவர்நடுக்கம் நோக்கி - அவர்களுடைய நடுக்கத்தைக்கண்டு, இ - இந்த, கோள், உடை - வலியையுடைய, விடைஅன்னுன்-இடபத்தையொத்த (ஸ்ரீராமனது), குலத்துள்-குலத்தில், தோன்றிய - பிறந்த, வாள் உடை உழவன் - வாள்வீரனுகிய, ஓர் மன்னன்பால் - ஒரு அரசனிடத்தில், தாள்உடை - குதையையுடைய, வரி - கட்டமைந்த, சிலை - (இந்த) வில்லை, வைத்தான் - வைத்துப்போனுன்—எ-று. (கச)

ஓர்மன்னன் என்றது தேவராதமஹாராஜனை.

763. கார்முக வலியையான் கழறல் வேண்டுமோ
வார்சடை யரனிகர் வரத நீயலால்
யாருள ரறிபவ ரிதற்குத் தோன்றிய
தேர்முக வல்குலாள் செவ்வி கேளெனு.

(இ-ள்.) வார்சடை - நீண்டசடையையுடைய, அரன்நிகர் - சிவனையொத்த, வரத - வரதனே, கார்முகம்வலியை - இந்தவில்வலியை, யான்கழறல்வேண்டுமோ- நான் சொல்லவேண்டுமோ, (இதன்வலியை) நீ அல்லால் - நீயறிவதன்றி, அறிபவர் - வேறு அறியவல்லவர்கள், யார் உளர் - யாரிருக்கிறுர்கள், இதற்கு - இவ்வில்லின்பொருட்டு, தோன்றிய - அவதரித்த, தேர்முகம் - தேர்த்தட்டையொத்த, அல்குலாள் - நிதம்பத்தையுடைய சீதையின், செவ்வி - வரலாற்றை, கேள் எனு - கேளென்றுசொல்லி—எ-று. (கரு)

வரதன் - வரங்கொடுப்போன். செவ்வி இவ்விடத்துத்தன்பொருளைப் பயவாது வரலாற்றை யுணர்த்திநின்றது.

சீதாபிராட்டியின் அவதாரவிசேஷம்.

வேறு.

764. இரும்பனைய கருநெடுக்கோட் டிணையேற்றின் பணையேற்ற
பெரும்பியலிற் பளிக்குநுகம் பிணைத்ததனோ டணைத்தீர்க்கும்
வரம்பின்மணிப் பொற்கதப்பை வயிரத்தின் கொழுமடுத்திட்
டுரம்பொருவி னிலம்வேள்விக் கலகில்பல சாலுழுதேம்.

(இ-ள்.) வேள்விக்கு - வேள்வியின்பொருட்டு, இரும்பு அனைய - இரும்பையொத்த, கருநெடுகோட்டு - பெரிய நீண்ட கொம்புகளையுடைய, இணை ஏற்றின் - இரண்டிபயங்களின், பணை ஏற்ற - பருமைதங்கிய, பெருபியலில் - பெரியபிடரின்மீது, பளிக்கு நுகம்பிணைத்து - பளிங்கினுர்செய்த நுகத்தடியைச்சேர்த்து, அதனோடு அணைத்து - அதனோடுபொருத்தி, ஈர்க்கும் - இழுக்கின்ற, வரம்பு இல் மணி - அளவற்றமணிகளை அழுத்திய, பொன் கலப்பை - பொன்னுர்செய்த கலப்பையில், வயிரத்தின் கொழுமடுத்திட்டு - வயிரத்தாற்செய்த காரைச்சேர்த்து, உரம்பொருவு இல் - பலத்தினுல் ஒப்பில்லாத, நிலம் - பூமியை, அலகு இல் - அளவற்ற, பலசால் உழுதேம் - பலசாலுழுதோம்—எ-று, (கசு)

765. உழுகின்ற கொழுமுகத்தி னுதிக்கின்ற கதிரொளிபோல்
பொழிகின்ற புவிமடந்தை திருவெளிப்பட் டெனப்புணரி
எழுகின்ற தெள்ளமுதோ டெழுந்தவளு மிழிந்தொதுங்கத்
தொழுகின்ற நன்னலத்துப் பெண்ணரசி தோன்றினாள்.

(இ-ள்.) உழுகின்ற - உழுதலைச்செய்கின்ற, கொழுமுகத்தின் - கொழுவினது முகத்தில் நின்றும், உதிக்கின்ற - உதயஞ்செய்கிற, கதிர் ஒளிபோல் - சூரியப்பிரகாசம்போலவும், பொலிகின்ற (உயிர்கட்கு எல்லாவளங்களையும்) சுரக்கின்ற, புவிமடந்தை - பூமிதேவின், திரு - அழகானது, வெளிப்பட்டென - வெளிபபட்டாற்போலவும், புணரி - திருப்பாற்கடல், எழுகின்ற - உண்டாகிய, தெள் அமுதோடு - தெளிவாகிய அமிர்தத்துடன், எழுந்தவளும் - அவதரித்தவளாகிய திருமகளும், இழிந்து - (அழகு முதலானவைகளால்) இழிவையடைந்து, ஒதுங்க - ஒருபுறத்தொதுங்க, தொழுகின்ற - பெண்கள்யாவரும் வணங்குதற்குரிய, நல்நலத்து - சிறந்த அழகையுடைய, பெண்ணரசி - பெண்ணரசியாகிய இந்தச்சீதை, தோன்றினாள்-அவதரித்தாள்—எ-று. (கஎ)

766. குணங்களையென் கூறுவது கொம்பினைச்சேர்ந் தவையுய்யப்
பிணங்குவன வழகிவளைத் தவஞ்செய்து பெற்றதுகாண்
கணங்குழையா ளெழுந்ததற்பின் கதிர்வானிற் கங்கையெனும்
அணங்கிழியப் பொலிவிழந்த வாறொத்தார் வேறுற்றார்.

(இ-ள்.) குணங்களை - இவளுடைய குணங்களை, என் கூறுவது - யாவையென்றெடுத்துச்சொல்லுவது, அவை - அந்தக்குணங்கள், கொம்பினை-இப்பூங்கொம்பையொத்தவளை, சேர்ந்து - அடைந்து, உய்ய - உய்யும்படி, பிணங்குவன - தம்முள் ஒன்றுக்கொன்றுமாறுபடுவன, அழகு-அழகானது, இவளை - இந்தஜாநகியை, தவஞ்செய்து - தவம்புரிந்து, (அந்தப்பயனால்) பெற்றன - கிடைக்கப்பெற்றது, கணம்குழையாள் - பலவாகத்திரண்ட குழையையுடைய இவள், எழுந்ததன்பின், அவதரித்தபிறகு, வேறுஉற்றார் - மற்றைப்பெண்பாலாராயுள்ளார், கதிர் - ஒளியமைந்த, வானின் - விண்ணுலகினின்றும், கங்கை என்னும் - கங்கையென்கிற, அணங்கு - தெய்வப்பெண், இழிய - மண்ணுலகிலிறங்கினதனால், பொலிவு இழந்த - தமது பொலிவையிழந்த, ஆறு ஒத்தார் - மற்றை நதிகளையொத்துப்பொலி விழந்திருந்தனர்—எ-று. (கஅ)

குணங்கள் என்றது, நற்குணங்களை. பிணங்குவன என்றது, இவளையடைதலில் ஒன்றையொன்று முற்படுதல். குணங்களால் இவளுக்கோரேற்றமின்று, இவளால் அக்குணங்களேற்றமடைந்தன வென்பது கருத்து.

767. சித்திரமிங் கிதுவொப்ப தெங்குண்டு செய்வினையால்
வித்தகமும் விதிவசமும் வெவ்வேறே புறங்கிடப்ப
அத்திருவை யமரர்குல மாதரித்தா ரெனவறிஞ
ரித்திருவை நிலவேந்த ரெல்லாருங் காதலித்தார்.

(இ-ள்.) இங்கு - இவ்விடத்திலுள்ள, இது - இந்த ஜாநகியினுருவை, ஒப்பது - ஒப்பதாகிய, சித்திரம் - சித்திரமானது, எங்கு உண்டு - எவ்விடத்திலுள்ளது, செய் - (அவரவர்) செய்த, வினையால் - வினைப்பயனால், வித்தகமும் - (இன்னருக்கின்னாரென்கிற நூல்களாலுணரவரும்) உணர்ச்சியும், விதிவசமும் - ஆதிசங்கற்பமும், வெவ்வேறே புறங்கிடப்ப - ஒன்றையொன்றுவ்வாது புறத்திலிருக்கக, அறிஞ -

அறிஞனே, அமரர்குலம் - தேவர்கூட்டம், அ திருவை - அந்தத்திருமகளை, ஆதரித்தார் என - விரும்பினாற்போல, நிலவேந்தர் எவ்லாரும் - பூலோகத்தரசரெல்லாரும், இ திருவைகாதலித்தார்-இந்தத்திருமகளை விரும்பினார்கள் —எ-று. (கக)

அமரர் ஔபசாரிகம். நிலவேந்தரெல்லாரும் என்ற முற்றும்மையால் விரும்பாதாரொருவருமில்லை யென்றதாயிற்று.

768. கலித்தானைக் கடலோடுங் கைத்தானக் களிற்றரசர்
ஒலித்தானை யெனவந்து மணமொழிந்தார்க் கெதிருடுத்த
புலித்தானைக் களிற்றுரிவைப் போர்வையான் போர்வில்லை
வலித்தானை மங்கைதிரு மணத்தானென் றியாம்வலித்தேம்.

(இ-ள்,) கலி-புகழையுடைய, தானைக்கடலோடும்-படைக்கடலோடு, கை-துதிக்கையையும், தானம்-மதத்தையும்பொருந்திய, களிறு-யானைச்சேனையையுடைய, அரசர்-வேந்தர்கள், ஒலித்து - ஆரவாரித்து, ஆனை எனவந்து - யானைகள்போலவந்து, மணம்மொழிந்தார்க்கு - மணத்தைக்குறித்துப் பேசினவர்களுக்கு, எதிர்-மறுமொழியாக, புலிதானை உடுத்த-புலித்தோலை வஸ்திரமாகவுடுத்த, களிறு உரிவைபோர்வையான் - யானைத்தோலாகிய மேற்போர்வையை யுடையவனாகிய சிவனது, போர்வில்லை - போர்க்குரியவில்லை, வலித்தானை - வளைத்தவனை, மங்கை திருமணத்தான் என்று-இந்தச் சீதையினது திருமணத்துக்குரியவனென்று, யாம்வலித்தேம்-நாங்கள் நிச்சயித்தோம் என்றுசொன்னோம்—எ-று. (உ0)

வலித்தானை என்பதில், ஐ-சாரியையாகக் கோடலுமாம்.

769. வல்வில்லுக் காற்றார்கள் மாரவேள் வளைகருப்பின்
மெல்வில்லுக் காற்றாராய்த் தாமெம்மை விளிகுற்றார்
கல்வில்லோ டெழுந்தென்ன் குணங்குழையைக் காதலித்துச்
சொல்வில்லா லுலகளிப்பாய் போர்செய்யத் தொடங்கினார்.

(இ-ள்.) சொல்வில்லால் - சொல்லாகியவில்லினால், உலகு-உலகை, அளிப்பாய்-காப்பவனாகிய விசுவாமித்திரமுனிவனே, (நாயகன்நிச்சயித்ததைக்கேட்டு) உலகு ஈய்ந்த-பூமியினாற்பெறப்பட்ட, கணம்குழையை - கணங்குழையையுடையாளை, காதலித்து-விரும்பி, வல்வில்லுக்கு, ஆற்றார்கள்-இந்தவலியவில்லை வளைப்பதற்கு வலியிலராய், மாரவேள்-மன்மதனது, வளை - வளைந்த, கருப்பின்மெல்வில்லுக்கு-கரும்பாகிய மெல்லியவில்லுக்கு, ஆற்றாராய் - சஹியாதவராய், தாம்-தாங்கள், எம்மை-எங்களை, விளிகுற்றார்-அழைத்து, கல்வில்லோடு-மலைப்போன்ற வில்லுடன்வந்து, போர்செய்யத் தொடங்கினார்-யுத்தம்பண்ணத் தொடங்கினார்கள்—எ-று. (உக)

மாரவேள் இருபெயரொட்டுத் பண்புத்தொகை. கருப்பின் என்பதில், இன்சாரியை. ஈய்ந்த-செயப்பாட்டுவினை.

770. இம்மன்னர் பெருஞ்சேனை யீவுதனை மேற்கொண்ட
செம்மன்னர் பொருளேபோற் புகழ்வாய்ப்பச் சிறந்ததால்
பொம்மென்ன வண்டலம்பும் புரிகுழலைச் காதலித்த
அம்மன்னர் சேனைதம தாசைபோ லாயிற்றால்.

(இ-ள்.) இ மன்னர்-இந்தஜநகமஹாராஜனுடைய, பேருசேனை - பெரியசேனையானது, ஈவுதனைமேற்கொண்ட - ஈகையைமேற்கொண்ட, செம்மன்னர்பொருளே

போல் - செம்மைக்குணத்தையுடைய அரசர்களுடைய பொருள்போலவே, புகழ் வாய்ப்ப-புகழ்நிரம்ப, சிறந்தது - குறைந்தும் சிறப்படைந்தது, வண்டு - வண்டுகள், பொம் என்ன - பொம்மென்று, அலம்பும்-ஒலிக்கின்ற, புரிகுழலை-கட்டப்பட்ட கூந்தலையுடைய ஜாநகியை, காதலித்த - விரும்பின், அ மன்னர்சேனை - அந்த அரசரது சேனையானது, தமது ஆசைபோல் - தமது ஆசைபோல, ஆயிற்று - பயனடையாமற் போயிற்று—எ-று. (உஉ)

ஆல் அசை. பயன் வெற்றி.

771. மற்காக்கு மணிப்புயத்து மன்னனிவன் மழவிடையோன்
விற்காக்கும் வாளமருள் மெலிகின்றா னெனவிரங்கி
எற்காக்கு முடிவிண்ணோர் படையீந்தா ரெனவேந்தர்
அற்காக்கை கூகையைக்கண் டஞ்சினவா மெனவகன்றார்.

(இ-ள்.) எல்கார்க்கும் - ஒளியையிடையறாதுவீசுகின்ற, முடி-கிரீடத்தையணிந்த, விண்ணோர் - தேவர்கள், மல்காக்கும் - மற்போரைக்காக்கின்ற, மணி - அழகைக் கொண்ட, புயத்து - புயங்களையுடைய, மன்னன்-அரசனாகிய, இவன்-இந்த ஜநகன், மழவிடையோன்வில் - சிவன்வில்லை, காக்கும் - காத்தற்பொருட்டுச்செய்கிற, வாள் அமர்உள் - வாட்போரில், மெலிகின்றான் என - மெலிகின்றானென்று, இரங்கி-மனமிரங்கி, படை ஈந்தார் என - படைகள்கொடுத்தார்களென்று (கேள்வியுற்று) வேந்தர் - அவ்வரசர்கள், அல்-இரவில், காக்கை - காகமானது, கூகையைக்கண்டு-கூகையைப்பார்த்து, அஞ்சின என-அஞ்சியோடினபோல, அகன்றார்-அஞ்சியோடினார்கள்.

மற்கு ஆக்கும் என்றுபிரித்து மற்போருக்குரிய ஆக்குகின்ற எனினுமமையும். ஆம் அசை.

772. அன்றுமுத லின்றளவு மாருமிந்தச் சிலையருகு
சென்றுமிலர் போயொளித்தார் தேர்வேந்தர் திரிந்துமிலர்
என்றுமினி மணமுமிலை யென்றிருந்தே மிவனேற்றின்
நன்றுமலர்க் குழற்சீதை நலம்பழுதா காதென்றான்.

(இ-ள்.) அன்றுமுதல் இன்று அளவும்-அன்றுதொடங்கி இன்றுவரையும், தேர் வேந்தர்-தேர்வேந்தர்களில், ஆரும்-எவரும்- இந்தசிலை அருகு-இந்துவில்லுச் சமீபத்தில், சென்றும் இலர் - போயுமிலர், திரிந்தும் இலர்-இந்தநகரத்தில் திரிந்துமிலர், (மற்றென்னெனின்) போய் ஒளித்தார் - ஓடி யொளித்தார்கள், (அவ்வாறாயினபின்) இனி - இனிமேல், என்றும்-எக்காலத்தும், மணமும்-திருமணமும், இல்லையென்று-இல்லையென்றுகருதி, இருந்தேம் - யாமுமிருந்தோம், இவன்-இந்த ஸ்ரீராமன், ஏற்றின் - (இந்தவில்லை) நாணேற்றுவானாயின், நன்கு எங்களுக்கு நன்மையைத்தருவதாகும், மலர்-மலரையணிந்த, குழல்-குழலையுடைய, சீதை-ஜாநகியின், நலம்-பெண்டன்மையும், பழுது ஆகாது - பழுதுபடாது, என்றான்-என்று சதாநந்தன் கூறினான்.

நன்று பண்டியாகப்பிறந்த குறிப்புவினைமுற்று. நலம் என்பதனீற்றில் இறந்தது தழீஇய வெச்சவும்மை தொக்குநின்றது.

773. நினைந்தமுனி பகர்ந்தவெலா நெறியுன்னி யறிவனுந்தன்
புனைந்தசடை முடிதுளக்கிப் போரேற்றின் முகம்பார்த்தான்

வனைந்தனைய திருமேனி வள்ளலுமம் மாதவத்தோன்
நினைந்தவெல்லாம் நினைந்தந்த நெடுஞ்சிலையை நோக்கினான்.

(இ-ள்.) நினைந்து - மறவாது, அ முனி - அந்தச் சதாநந்தமுனிவன், பகர்ந்த எல்லாம்-சொன்னவற்றையெல்லாம், அறிவனும் - ஞானவானாகியகௌசிகனும், நெறி உன்னி - முறையேயெண்ணி, தன் - தனது, புனைந்த - அலங்கரிக்கப்பட்ட, சடை-சடையையுடைய, முடி - தலையை, துளக்கி - அசைத்து, போர் - போரில், ஏற்றின்-ஆண்சிங்கத்தையொத்தவனாகிய ஸ்ரீராமனது, முகம் - முகத்தை, பார்த்தான்-(தன் கருத்துத்தோன்ற) நோக்கினான், வனைந்தனைய-சித்திரித்தாற்போன்ற, திருமேனி-திருமேனியையுடைய, வள்ளலும்-ஸ்ரீராமனும், அ-அந்த, மாதவத்தோன்-முனிவன், நினைந்த எல்லாம்-நினைந்தவற்றையெல்லாம், நினைந்து-எண்ணி, அந்த நெடுசிலையை-அந்த நெடியவில்லை, நோக்கினான்-கடாட்சித்தான் —எ-து. (உ௫)

சடைக்குப் புனைவாவது சிக்கறக்கோதி முடித்திருத்தல். முடிதுளக்கினது வில்லினது திண்மையைக்கேட்டுவியந்தென்க. வனைந்தனைய-வனைந்தாலனைய.

வேறு.

774\. பொழிந்தநெய் யாகுதி வாய்வழி பொங்கி
எழுந்த கொழுங்கன லென்ன வெழுந்தான்
அழிந்தது வில்லென விண்ணவ ரார்த்தார்
மொழிந்தன ராசிகள் முப்பகை வென்றார்.

(இ-ள்.) (வேள்வித்தீயில்) பொழிந்த-பொழியப்பட்ட, நெய் ஆகுதி-நெய்யாகுதியின், வாய்வழி - இடத்தின்வழியே, பொங்கியெழுந்த-சீறியெழுந்த, கொழுகனல் என்ன-செழுமையாகிய நெருப்பைப்போல. எழுந்தான் - (சக்ரவர்த்தித்திருமகன்) இருக்கையைவிட் டெழுந்திருந்தான், விண்ணவர் - (அதைப்பார்த்த) தேவர்கள், வில் - த்ரியம்பகமென்னும் இந்தவில்லானது, அழிந்தது என்ன - அழிந்துபோயிற் றென்று, ஆர்த்தார்-ஆரவாரித்தார்கள், முப்பகைவென்றார்-முப்பகைவென்றவராகிய முனிவர், ஆசிகள் மொழிந்தனர்-மங்களாசாசநம்பண்ணினார்கள் —எ-று. (உ௬)

துணிவுபற்றி அழிந்தது என இறந்தகாலத்தாற்கூறினார். முப்பகையாவன காம வெகுளிமயக்கங்கள். அம்பகம்-கண். த்ரியம்பகம் - மூன்றுகண்களையுடைய சிவன், அவன்கைவில்லாதலால் த்ரியம்பகமென இந்து வில்லுக்குக் காரணக்குறியாயிற்று.

775\. தூய தவங்கள் தொடங்கிய தொல்லோன்
ஏயவன் வல்வி லிறுப்பதன் முன்னம்
சேயிழை மங்கையர் சிந்தைதொ றெய்யா
ஆயிரம் வில்லை யநங்க னிறுத்தான்.

(இ-ள்.) தூய-பரிசுத்தமான, தவங்கள் - தவத்தொழில்களை, தொடங்கிய செய்யத்தொடங்கின, தொல்லோன் - பழையோனாகிய விசுவாமித்திரமுனிவனால், ஏயவன்-ஏவப்பட்டவனாகிய ஸ்ரீராமபிரான், வல்வில் - (இந்த) வலியவில்லை, இறப்பதன் முன்னம்-ஒடிப்பதற்குமுன்னே, அநங்கன் - மன்மதன், (அந்த ஸ்ரீராமபிரானது திருமேனிசௌந்தர்யத்தி லீடுபட்டுக்கொண்டிருந்த) சேயிழை - செம்பொன்னாபரணங்

களையணிந்த, மக்கையர் - மாதர்களுடைய, சிந்தைதொறு - மனங்கள்தோறும், எய்யா-புஷ்பபாணங்களை கய்து, ஆயிரம்வில்லை - (மெல்லிய ஆயிரங்கருப்புவில்லை, இறுத்தான்-ஒடித்தான்—எ-று. (உள)

ஆயிரம்வில்லை யநங்கனிறுத்தான் என்றது, அளவிறந்த மலரம்புகளை எய்தமையால் கருப்புவில் ஆயிரமுறிந்தன என்றபடி.

776. காணு நெடுஞ்சிலை கால்வலி தென்பார்
நாணுடை நங்கை நலங்கிளர் செங்கேழ்
பாணி யிவன்படர் செங்கை படாதேல்
வாணுதல் சீதையும் வாழ்வில ளென்பார்.

(இ-ள்.) (சிலர்) காணும்-பாரும், நெடுசிலை-நெடியவில்லானது, கால்வலிது என்பார்-கால்வன்மையையுடையதென்பார்கள், (சிலர்) நாண் உடை-நாணத்தையுடைய, நங்கை-சீதையினது, நலம்கிளர்-அழகாகவிளங்குகின்ற, செங்கேழ்-செந்நிறம்பொருந்திய, பாணி - கையில், இவன் - இந்தஸ்ரீராமனது, படர்செங்கை - அகன்ற செந்தாமரைக்கை, படாதேல் - பொருந்தாதாயின், வாள்நுதல்-ஒளிபொருந்திய நெற்றியையுடைய, சீதையும் - சீதையும், வாழ்வுஇலள் என்பார்-வாழ்வையுடையளல்லள் என்பார்கள்—எ-று. (உஅ)

சிலைகால்வலிதென்பது, "கண்ணுந்தோளுமுலையும் பிறவும் - பன்மைகட்டிய சினைநிலக்கிளவி - பன்மைகூறுங்கடைப்பாடலவே - தம்வினைக்கியலு மெழுத்தவங்கடையே" என்னுஞ்சூத்திரத்தில் ஒன்றினமுடித்தலென்பதனாற்போந்தமுடிவு.

777. கரங்கள் குவித்திரு கண்கள் பனிப்ப
இருங்களி றிச்சிலை யேற்றில னாயின்
நரந்த நறைக்குழ னங்கையு நாமும்
முருங்கெரி யிற்புக மூழ்குது மென்பார்.

(இ-ள்.) (சிலர்) கரங்கள்குவித்து-(தத்தங்குலதெய்வங்களைநினைத்து) கைகளைக் கூப்பி, இருகண்கள்பனிப்ப - இரண்டுகண்கள் நீரைத்துளிக்க, இருகளிறு-பெருமையாகிய யானையையொத்தவனாகிய இந்த ஸ்ரீராமன், இசிலை - இந்தவில்லை, ஏற்றிலனாயின்-நாணேற்றானாயின், நரந்தம் நறைகுழல்-கஸ்தூரியின்மணமமைந்த கூந்தலையுடைய, நங்கையும்-ஜாநகியும், நாமும் - யாமும், முருங்கு-எரியுமியல்புள்ள, எரியில்-நெருப்பில், புக-சரீரம் அழுந்த, மூழ்குதும் என்பார்-மூழ்குவோமென்பார்கள்-எ-று.

778. வள்ளல் மணத்தை மகிழ்ந்தன னென்றால்
கொள்ளென முன்பு கொடுப்பதை யல்லால்
மெள்ள மணைத்தவன் வில்லை யெடுத்திப்
பிள்ளைமுன் னிட்டது பேதைமை யென்பார்.

(இ-ள்.) (சிலர்) வள்ளல் - வள்ளலாகிய ஜநகமஹாராஜன், மணத்தை-சீதாகல்யாணத்தை, மகிழ்ந்தனன் என்றால்-விரும்பினவனாயின், கொள்என-இவளையேற்றுக் கொள்வாயென்று, முன்பு - கேட்பதற்குமுன்னே, கொடுப்பதையல்லால் (ஸ்ரீராமனுக்கு) கொடுப்பதையல்லாமல், வெள்ளம் - கங்கையை, அணைத்தவன் - சடையிற் சேர்த்த சிவனது, வில்லை எடுத்து-வில்லைநிலைபெயர்த்து, இபிள்ளைமுன்-இந்தப்பாலகனுக் கெதிரில், இட்டது - வளைப்பாயென்று வைத்தது, பேதமை என்பார் - அறியாமையென்பார்கள்—எ-று. (௩0)

779. ஞான முனிக்கொரு நாணிலை யென்பார்
கோனிவ னிற்கொடி யாரிலை யென்பார்
மானவ னிச்சிலை கால்வளை யானேல்
பீன தனத்தவள் பேறில ளென்பார்.

(இ-ள்.) (சிலர், வில்லின்பொருட்டு இப்பிள்ளையை அழைத்துவந்த) ஞான முனிக்கு - ஞானத்தையுடைய விசுவாமித்ர முநிவனுக்கு, ஒருநாண்இலை - சிறிதும் நாணமில்லை, என்பார் - என்பார்கள், (சிலர்) கோன்-அரசனாகிய, இவனின் - இவனினும், கொடியார் இல்லை - கொடுமையுடையோரில்லை, என்பார் - என்பார்கள், (சிலர்) மானவன் - பெருமையை யுடையோனாகிய ஸ்ரீராமபிரான், இ சிலை - இந்த வில்லை, கால்வளையானேல் - இருகடைகளையும் வளையானாயின், பீனம் - பெருமையையுடைய, தனத்தவள் - ஸ்தநங்களை யுடையவளாகிய ஜாநகி, பேறு - தவப்பயனை, இலள் - உடையவளல்லள், என்பார் - என்பார்கள்—எ-று. (௩௧)

கோன் என்பதில், னகரம் - சாரியை.

780. தோகைய ரின்னன சொல்லிட நல்லோர்
ஓகை விளம்பிட வும்ப ருவப்ப
மாக மடங்கலு மால்விடை யும்பொன்
நாகமு நாகமு நாண நடந்தான்.

(இ-ள்.) தோகையர் - அங்குள்ளமாதர்கள், இன்னனசொல்லிட - இவைபோன்றவைகளைச் சொல்லிக்கொண்டிருக்கவும், நல்லோர் - சாதுஜநங்கள், ஓகைவிளம்பிட - சந்தோஷவார்த்தைகளைச் சொல்லிக்கொண்டிருக்கவும், உம்பர் - தேவர்கள், உவப்ப - களிக்கவும், மாகம் - உயர்வாகிய, மடங்கலும் - சிங்கமும், மால் - பெரிய, விடையும் - விருஷபமும், பொன் நாகமும் - பொன்மலையாகிய மேருவும், நாகமும் - மதயானையும், நாண - (நடையைக்கண்டு) நாணும்படி, நடந்தான் - (அந்தவில்லைநோக்கி) நடந்தனன்—எ-று. (௩௨)

சிங்கமும், இடபமும், மதயானையும் இறைவனது நடைக்கும், மேரு திருமேனியின் ஒளி அசையாமைக்கும் உவமையாகக்கொள்க. "திருக்கண்டேன் பொன்மேனிகண்டேன்" என்பதனாலும் இது விசதமாகும்.

781. ஆடக மால்வரை யன்னது தன்னைத்
தேடரு மாமணி சீதை யெனும்பொற்
சூடக வால்வளை சூட்டிட நீட்டும்
ஏடவிழ் மாலையி தென்ன வெடுத்தான்.

(இ-ள்.) மால் - பெருமைபொருந்திய, ஆடகவரை அன்னதை - மேருமலையையொத்த வில்லை, தேடு அரு - தேடுதலரிய, மா - சிறந்த, மணி - ரத்நத்தையொத்த, சீதை எனும் - ஜாநகியென்கிற, பொன் - பொன்னாற்செய்த, சூடகம் - டகத்தையும், வால்வளை - வெள்வளையையும் அணிந்தவளுக்கு, சூட்டிட - தரிக்க, நீட்டும் - பெரியோர்கள் மங்களாசாரம் செய்துகொடுத்த, ஏடு அவிழ் - இதழ்கள் விரிந்த, மாலை - பூமாலை, இது என்ன - இதுவென்று கண்டோர் சொல்லும்படி, எடுத்தார் - (ஸ்ரீராமபிரான் தனது இடக்கரத்தால் எளிதாக) எடுத்தனன். (௩௩)

மாமணிசீதை - வடமொழிச்சந்தி· தன் சாரியை.

782. தடுத்திமை யாம லிருந்தவர் தாளின்
மடுத்தது நாணுதி வைத்தது நோக்கார்
கடுப்பினில் யாரு மறிந்திலர் கையால்
எடுத்தது கண்டன ரிற்றது கேட்டார்.

(இ-ள்.) (காட்சியை) தடுத்து - தடைசெய்து, இமையால் இருந்தவர் - கண்ணிமைக்காமலிருந்தவர்கள், (சக்ரவர்த்தித் திருமகன்) தாளின்மடுத்ததும் - திருவடிப்பெருவிரலால் (அவ்வில்லின்குதையை) மிதித்ததையும், நாண் நுதி வைத்ததும் - நாணை நுனியில் பூட்டினதையும், கடுப்பினில் - செயலின்வேகத்தால், யாரும் - யாவரும், நோக்கார் - கண்ணால் காணதவர்களாய், அறிந்திலர், (ஆயினும்) கையால் - கையினுல்; எடுத்தது -(அவ்வில்லை) எடுத்ததை, கண்டனர் - கண்ணால் கண்டார்கள், (உடனே) இற்றது - (அவ்வில் முறிந்ததனுலுண்டான) ஓசையை, கேட்டார் - காதினுற் கேட்டார்கள்—எ-று. (௩௪)

தடுத்திமையாமலிருந்தது ஸ்ரீ ராமபிரானது கைக்கடுப்பையும், சாஹஸத்தையுங் கண்டதற்கு. எடுத்ததுகண்டனர் இற்றதுகேட்டார் எனவே இடையில் நிகழ்ந்தவற்றை யுணர்ந்திலரென்றதாயிற்று

வே று.

783. ஆரிடைப் புகுதுநாமென் றமரர்கள் கமலத்தோன்றன்
பேருடை யண்டகோளம் பிளந்ததென் றேங்கிநைந்தார்
பாரிடை யிற்றதன்மை பகர்வதென் பாரைத்தாங்கி
வேரிடைக் கிடந்தநாக மிடியென வெருவிற்றன்றே.

(இ-ள்.) (அவ்வில் முறிந்ததனுலுண்டாகிய வோசையைக்கேட்ட) அமரர்கள் - தேவர்கள், கமலத்தோன் - பிரமதேவனுடைய, பேர் உடை - பெயரையுடைய, அண்டகோளம் - அண்டகோளமானது, பிளந்தது - பிளவுபட்டதனுலுண்டாகிய வோசை, (இது) என்று - என்று நினைத்து, நாம் - யாம், ஆர் இடை - யாவரிடத்து, புகுந்து என்று - அடைக்கலம்புகுவோமென்று; எங்கி - ஏக்கமுற்று, நைந்தார் - மனம்வருந்திஞர்கள், பாரிடை உற்றதன்மை - (இந்தவோசையால்) பூமியில் உண்டாகிய தன்மைகளை, என்பகர்வது - என்னென்றெடுத்துச் சொல்லுவது, பாரைத்தாங்கி - பூமியைச்சுமந்து, வேரிடைகிடந்த - அடியில் தங்கியிருக்கிற, நாகம் - ஆதிசேஷனென்னும் நாகமும், இடிஎன - (இது) இடியோசையென்று நினைத்து, வெருவிற்று-பயந்தது—எ-று. (௩௫)

அன்று ஏ அசைகள். கமலத்தோன்றன் பேருடை யண்டகோளம் என்றது, பிரமாண்டகோளத்தை. இதில் தன்சாரிசை. அணடகோளம் என மேலுலகத்தையும், வேரிடைக்கிடந்தநாகம் எனக், கீழுலகத்தையுங்குறிக்கவே, பூலோகம் பட்டபாடு சொல்லவேண்டாதே யமையுமாதலால், "பாரிடையுற்ற தன்மைபகர்வதேன்" என்ருர்;

784. பூமழை சொரிந்தார்விண்ணேர் பொன்மழை பொழிந்தமேகம்
பாமமா கடல்களெல்லாம் பன்மணி தூவியார்த்த
கோமுனிக் கணங்களெல்லாங் கூறின வாசிகொற்ற
நாமவேற் றனசற்கின்று நல்வினை பயந்ததென்ரு.

(இ-ள்.) கொற்றம் - வெற்றியமைந்த, நாமம் - பகைவருக்கு அச்சத்தையுண்டாக்குகிற, வேல் - வேலாயுதத்தையுடைய, சனகற்கு - ஜநகமஹாராஜனுக்கு, இன்று - இப்பொழுது, நல்வினை - அவன்செய்த நல்வினையானது, பயந்தது - பயனைக்கொடுத்து, என்னா - என்று, விண்ணோர் - விண்ணுலகத்தார், பூமழைசொரிந்தார் - புஷ்பமாரி பொழிந்தார்கள், மேகம் - மேகங்கள், பொன்மழை பொழிந்த, பொன்மாரிபொழிந்தன, பாமம் - பரப்பையுடைய, மா - பெரிய, கடல்கள் எல்லாம் - சமுத்திரங்களெல்லாம், பல்மணி தூவி - பலவகையான ரத்நங்களைச்சிதறி, ஆர்த்த - ஆரவாரித்தன, கோ - சிறப்பையுடைய, முனிக்கணங்களெல்லாம்-முனிக்கூட்டங்களெல்லாம், ஆசி கூறின - மங்களாசாசநம் செய்தன—எ-று. (கூசு)

முனிக்கணங்கள் பொருளான் உயர்திணையாயினும் சொல்லான் அஃறிணை போறலின் கூறினஎன அஃறிணைமுடிபேற்றது

785. மாலையு மிழையுஞ்சாந்துஞ் சுண்ணமும் வாசநெய்யும்
வேலைவேண் முத்தும்பொன்னுங் காசுநுண் டுகிலும்வீசிப்
பால்வளை யமிர்தளாய பல்லியந் துவைப்பமுந்நீர்
ஒல்கிளர்ந் துவாவுற்றென்ன வொலிநகர் கிளர்ந்ததன்றே.

(இ-ள்.) நகர் - மிதிலாநகரமானது, மாலையும் - மலர்மாலைகளையும், இழையும் - ஆபரணங்களையும், சாந்தும் - சந்தநத்தையும், சுண்ணமும் - பரிமளப்பொடிகளையும், வாசம்நெய்யும் - வாசனைபொருந்திய நெய்யையும், வேலை - கடலிற்பிறந்த, வெண்முத்தும் - வெள்ளியமுத்துக்களையும், பொன்னும் - பொன்னையும், காசும் - மணிகளையும், நுண்துகிலும் - மெல்லியவஸ்த்திரங்களையும், வீசி - இந்தச் சுபசமாசாரத்தைச் சொல்லினார்க்கெல்வாம்) கொடுத்து, பால்வளை - வெள்ளிய சங்குகளும், அமிர்து அளாய - அமுதத்தி னினிமைகலந்த, பல் இயல் - பலவாத்தியங்களும், துவைப்ப - முழக்க, உவா - பூர்ணசந்திரன், உற்று - உதிக்க, முந்நீர் - கடலானது, ஒல்கிளர்ந்தென்ன - ஒலியால்மிக்கு விளங்கினாற்போல, ஒலிகிளர்ந்தது - ஒலியால்மிக்குப்பொலிந்தது—எ-று. (கூஎ)

ஓலம் ஒல் என அம்முக்குறைந்துநின்றது. உற்று செயவெனெச்சத்திரிபு அன்று ஏ அசைகள். முந்நீர் - ஆற்றுநீர் ஊற்றுநீர்.

786. நல்லியன் மகரவீணைத் தேனுக நகையுந்தோடும்
வில்லிட வாளும்வீச வேல்கிடந் தனையநாட்டத்
தெல்லியன் மதியமன்ன முகத்திய ரெழிலிதோன்றச்
சொல்லிய பருவநோக்குந் தோகையி னாடினாரே.

(இ-ள்.) வேல்கிடந்தனைய - வேல்கள் தங்கியிருந்தாற்போன்ற, நாட்டத்து - கண்களமைந்த, எல் இயல் - பகற்காலத்தில் விளங்குகிற, மதியம் அன்ன - சந்திரனையொத்த, முகத்தியர் - முகத்தையுடைய மாதர்கள், நல் இயல் - நல்லிலக்கணமமைந்த, மகரவீணை - மகரவீணையின் (ஓசையாகிய,) தேன் உக - தேன்சிந்தவும்; நகையும் - முறுவலும், தோடும் - காதணியும், வில்லிட - ஒளிசெய்யவும், வாள் வீசவும் - பிரகாசத்தைவீசவும், எழிலிதோன்ற - மேகந்தோன்றும்படி, சொல்லிய - சொல்லப்பட்ட, பருவம் - கார்ப்பருவத்தை, நோக்கும் - நோக்கிக்கொண்டிருக்கிற, தோகையின் - மயிலைப்போல, ஆடினார் - ஆடினார்கள்—எ-று. (கூஅ)

வில் இடைவிட்டவொளி, வாள் இடைவிடாவொளி. ஏ அசை.

787. உண்ணற வருந்தினரிற் செவந்தொளிர் கருங்கண்மாதர்
புண்ணுறு புலவிநீங்கக் கொழுனரைப் புல்லிக்கொண்டார்
வெண்ணிற மேகமேன்மேல் விரிகடல் பருகுமாபோல்
மண்ணுறு வேந்தன்செல்வம் வறியவர் முகந்துகொண்டார்.

(இ-ள்.) உண் - அறுவையுண்ணுகின்ற, நறவு-மதுவை, அருந்தினரின்-உண்டவர் (கண்களைப்) போல, செவந்து ஒளிர் - செவந்தொளிர்கின்ற, கருகண் - கரிய கண்களையுடைய, மாதர் - மாதர்கள், புண் உறு - மனவருத்தம்பொருந்திய, புலவி நீங்க-ஊடல் நீங்குதலால், கொழுநரை - தங்கணவரை, புல்லிக்கொண்டார் - தழுவிக்கொண்டார்கள், வெள்நிறம் - வெண்ணிறத்தையுடைய, மேகம் - மேகங்கள், மேன்மேல் - அதிகமாக, விரிகடல் - விரிந்தகடல்நீரை, பருகுமாபோல் - (மிகுதியும்) பருகும்விதம்போல, மண் உறு - பூமியிலுள்ளார்க்குப் பொருத்தமான, வேந்தன் - ஜநகமஹாராஜனது, செல்வம் - பொருள்களை, வறியவர் - எளியவர்கள், முகந்துகொண்டார் - (மிகுதியும்) வாரிக்கொண்டார்கள்—எ-று. (௬௧)

புண்ணுறு புலவிநீங்குதற்குக் காரணம் களிப்பு. கடல் முதலாகுபெயர்.

788. வயிரியர் மதுரகீத மங்கைய ரமுதகீதம்
செயிரியர் மகரயாழின் றேம்பிழி தெய்வகீதம்
பயிரியர் வேயின்கீத மென்றிவை பருகிவிண்ணோர்
உயிருடை யுடம்புமெல்லா மோவிய மொப்பநின்றார்.

(இ-ள்.) வயிரியர் - பாணர்பாடுகின்ற, மதுரம்கீதம் - மதுரகீதங்களும், மங்கையர் - மங்கைப்பருவமுள்ள கணிகைமாதர்பாடுகின்ற, அமுதங்கீதம் - அமுதம் போலும் இனிமையையுடைய கீதங்களும், செயிரியர் - செயிரியர்களுடைய, மகர வீணையின், தேம்பிழி - தேனினது இனிமைடையுடைய, தெய்வம்கீதம் - தெய்வ கீதங்களும், பயிரியர் - பயிரியரது, வேயின்கீதம் - மூங்கிற்குழலோசையாகிய கீதங்களும், என்ற இவை - என்றுசொல்லப்பட்ட இவைகளை, விண்ணோர் - தேவர்கள், பருகி - உண்டு, உயிர் உடை உடம்பும் எல்லாம் - (அசைவுக்குக்காரணமான) உயிரையுடையசரீரங்களெல்லாம், ஓவியம் ஒப்ப - (அந்தகரத்துக்கு) சித்திரத்தைப்போல, நின்றார் - (அசைவற்று) நின்றார்கள்—எ-று. (௬0)

வேயிகீதம் என்பதை. வேய் இன்கீதம் எனப்பிரித்து, வேயங்குழலின் இனிமையாகிய கீதமெனப் பொருளுரைத்தலுமாம். உயிர் உடை உடம்பு என்கையால் அசைவும், ஓவியமொப்ப என்கையால் அசைவின்மையும் பெற்றும், செயிரியர், பயிரியர் என்பன சாதிப்பெயர்கள். மதுரகீதம், அமுதகீதம், தெய்வ கீதம் இம்மூன்றும் வடமொழிச்சந்தியாதலால் இயல்பாயின.

789. ஐயன்வில் லிறுத்தவாற்றல் காணிய வமரர்நாட்டுத்
தையலா ரிழிந்துபாரின் மகளிரைத் தழுவிக்கொண்டார்
செய்கையின் வடிவினுடல் பாடலிற் றெளிதறேற்றார்
மையரி நெடுங்கணோக்க மிமைத்தலு மயங்கினின்றார்.

(இ-ள்.) ஐயன் - ஸ்ரீராமபிரான், வில் இறுத்த - வில்லைமுறித்த, ஆற்றல் - தோள்வலியின்சிறப்பை. காணிய - காணும்பொருட்டு, அமரர் நாட்டுத்தையலார் - தெய்வலோகத்துப்பெண்கள், இழிந்து - (இவ்வுலகம்விட்டு) இறங்கி, பாரின்மகளிரை - பூலோகத்துப்பெண்களை, செய்கையின் - செய்கையினாலும். வடிவின் -

உருவத்தினாலும், ஆடல்பாடலின் - ஆடல்பாடல்களினாலும், தெளித்தல்தேற்றார்-(பூலோகத்துப்பெண்களென்று) துணியாதவர்களாய், தழுவிக்கொண்டார்-தழுவிக்கொண்டார்கள், (பிறகு) மை-மையுண்ட, அரி-செவ்வரிபரந்த, நெடு-நெடிய, கண்-கண்கள், நோக்கம்-பார்வையால், இமைத்தலும் - இமைத்தவளவில், மயங்கிநின்றார்-(பார்த்து) மயங்கி நின்றார்கள்—எ-று. (௬௧)

செய்கை முதலியவற்றால் தம்மோ டொற்றுமை யுடையராயும் கண்ணிமைத்தலால் வேற்றுமை யுடையராயும் தோன்றுதலால், மயங்கி நின்றார்களென்பது கருத்து.

790. தயரதன் புதல்வனென்பார் தாமரைக் கண்ணனென்பார்
புயலிவன் மேனியென்பார் பூவையும் பொருவுமென்பார்
மயலுடைத் துலகமென்பார் மானிட னல்லனென்பார்
கயல்பொரு கடலுள்வைகுங் கடவுளே காணுமென்பார்.

(இ-ள்.) (அந்நகரஜனங்களிற்சிலர் ஸ்ரீராமபிரானைநோக்கி) தயரதன்புதல்வன் என்பார்-இவன் தசரதபுத்திரன் என்பார்கள், (சிலர்) தாமரைக்கண்ணன் என்பார் - தாமரைக்கண்களையுடையவனாகிய ஸ்ரீயப்பதியே என்பார்கள், (சிலர்) இவன் மேனி-இவனது திருமேனி, புயல் என்பார்-மேகநிறமென்பார்கள், (சிலர்) பூவையும்-காயாமலரையும், பொருவும் என்பார் - ஒக்குமென்பார்கள், (சிலர்) உலகம் - உலகமானது, மயல் உடைத்து என்பார்-இவனிடத்துவிருப்பமுள்ள தென்பார்கள்,(சிலர்) மானிடன் அல்லன் என்பார் - (இவன்) மனிதனல்லனென்பார்கள், (சிலர்) கயல் பொரு-கயல்மீன்கள் ஒன்றோடொன்று சண்டைசெய்தற்குரிய, கடலுள்-திருப்பாற்கடலுள், வைகும்-தங்குகின்ற, கடவுளே என்பார்-வியூகக்கடவுள்தானென்பார்கள்.

புயல்பொருவுதலேயன்றி யென்பதுபடநின்றமையின் பூவையும் என்னுமும்மை இறந்தது தழீஇயது.

791. நம்பியைக் காணநங்கைக் காயிரம் நயனம்வேண்டுங்
கொம்பினைக் காணுந்தோறுங் குரிசிற்கு மன்னதேயாந்
தம்பியைக் காண்மினென்பார் தவமுடைத் துலகமென்பார்
இம்பரிந் நகரிற்றந்த முனிவனை யிறைஞ்சுமென்பார்

(இ - ள்.) (சிலர்) நம்பியை - ஸ்ரீராமனதுவடிவழகை, காண - காணுதற்கு, நங்கைக்கு-சீதைக்கு, ஆயிரம்நயனம்வேண்டும் - ஆயிரங்கண்கள்வேண்டும், கொம்பினை-பூங்கொம்புபோல்பவளாகிய சீதையினது வடிவழகை, காணுந்தோறும் - பார்க்குந்தோறும், குரிசிற்கும்-சக்ரவர்த்தித்திருமகனுக்கும், அன்னதே ஆம்-அவ்வாறேவேண்டும், தம்பியை-தம்பியாகிய லட்சுமணரின்வடிவழகை, காண்மின் என்பார்-பாருங்களென்பார்கள், (சிலர்) உலகம்-இவ்வுலகமானது, தவம் உடைத்து என்பார்-தவப்பேறுடையது என்பார்கள். (சிலர்) இம்பர்-இவ்வுலகத்திலுள்ள, இநநகரில் - இந்தநகரத்தில், தந்த-யாம்காணும்படியழைத்துவந்த, முனிவனை - விசுவாமித்திரமுனிவனை, இறைஞ்சும் என்பார்-வணங்குங்கோளென்பார்கள்—எ-று. (௬௨)

என்பார் என்னும் பல்லோர் படர்க்கை வினைமுற்றைவேண்டும் அன்னதேயாம என்பவற்றோடுக் கூட்டியுரைப்பினுமாம். ஊழிமுதல்வ னுறைதற்கிடனாயிருத்தலால், தவமுடைத்துலகம் என்பார் என்றார்.

792. இற்றிவ ணின்னதாக மதியொடு மெல்லிநீங்கப்
பெற்றுயிர் பின்னுங்காணு மாசையாற் சிறிதுபெற்ற
சிற்றிடைப் பெரியகொங்கைச் சேயரிக் கரியவாட்கட்
பொற்றொடி மடந்தைக்கப்பா லுற்றது புகலலுற்றும்.

(இ-ள்.) இவண் - இவ்விடத்தில், இற்று இன்னது ஆக-இந்தச்செய்தியில் வாறிருக்க, மதியொடும்-சந்திரனுடன், எல்லிநீங்கப்பெற்று - இரவும்நீங்கப்பெற்று, பின்னும்-மேலும், காணும் - சக்ரவர்த்தித் திருமகனைப்பார்க்கவேண்டுமென்கிற, ஆசையால்-ஆசையினால், உயிர்சிறிதுபெற்ற - உயிரைச்சிறிதுபெற்ற, சிறுஇடை-சிறிய இடையையும், பெரியகொங்கை - பெயஸ்தநங்களையும், சேய் அரி-செவ்வரிபரந்த, கரிய - கருமையாகிய, வாள்கண்-வாள்போலுங்கண்களையும், பொன்தொடி-பொன் வளையலையுமுடைய மடந்தைக்கு-சீதாபிராட்டிக்கு, அப்பால்-அதின்பிறகு, உற்றது-நிகழ்ந்ததை, புகலல் உற்றும்-சொல்லத்தொடங்கினோம்.

அப்பால் என்பது சேடியர்கள் மலர்களாலும் தளிர்களாலுஞ் சமைத்த அணையானது தன்மேனியிலுண்டான காமத்தீயாற் கரியாகிற்க, ஆயிரத்தினிரட்டி யடுக்கினார் என்பதைச் சுட்டி நின்றது.

793. ஊசலா டுயிரினோடு முருகுபூம் பள்ளிநீங்கிப்
பாசிழை மகளிர்சூழப் போயொரு பளிக்குமாடக்
காசிறு மரையின்பொய்கைச் சந்திர காந்தமீன்ற
சீதநீர் தெளித்தமென்பூஞ் சேக்கையை யரிதிற்சேர்ந்தாள்.

(இ-ள்.) (சீதாபிராட்டியானவள்) ஊசல் ஆடு-ஊசலையொத்துக் கன்னிமாடத்தில் கண்டவனோ அல்லனோ என்று தடுமாறுகின்ற, உயிரினோடும் - உயிருடனே, உருகு - தன்னுடலுருகுதற்கேதுவான, பூபள்ளிநீங்கி - புஷ்பசயநத்தைவிட்டு-பாசு இழை மகளிர்சூழ-பசும்பொன் னாபரணங்களையணிந்தமாதர் சூழ்ந்துசெல்ல,போய்-சென்று, காசு இல்-குற்றமில்லாத, தாமரையின்பொய்கை-தாமரைத்தடாகத் திடையிலுள்ள, ஒருபளிங்குமாடம்-ஒருபளிங்குமாளிகையில், சந்திரகாந்தம் ஈன்ற-சந்திர காந்தக்கற்கள் உமிழ்ந்த, சீதம்நீர்தெளித்த - குளிர்ச்சியையுடைய நீரைத்தெளித்த, மெல்-மென்மையாகிய, பூசேக்கையை-பூம்பள்ளியை, அரிதின்சேர்ந்தாள் - அருமையாக அடைந்தாள்—எ-று. (௬௫)

பளிக்குவலித்தல். உருகுபூம்பள்ளியை நீங்கினளாதலால் சந்திரகாந்தமீன்ற சீதநீர்தெளிந்த மென்பூஞ்சேக்கையை யரிதிற்சேர்வித்தார்களென்பது கருத்து.

794. பெண்ணிவ ணுற்றதென்னும் பெருமையா லருமையான
வண்ணமு மிலைகளாலே காட்டலால் வாட்டந்தீர்ந்தேன்
றண்ணறுங் கமலங்காளென் றளிர்நிற முண்டகண்ணின்
உண்ணறங் காட்டிநீரென் னுயிர்தர வுலோவினீரே.

(இ-ள்.) தண் - குளிர்ச்சியாகிய, நறு-பரிமளமுள்ள, கமலங்காள்-தாமரைகளே, இவண் உற்றது - இங்குவந்தது, பெண் - பெண்மகள், என்னும்-என்றிரங்குகின்ற, பெருமையால் - பெருந்தன்மையால், அருமையான-காணுதற்கருமையான, வண்ணமும் - (ஸ்ரீராமபிரானது) திருமேனிநிறத்தையும், இலைகளால்-இலைகளைக்கொண்டு, காட்டலால் - காட்டுதலால், வாட்டம்தீர்ந்தேன் - சோர்வுநீங்கினேன், என்-எனது, தளிர்நிறம் - மாந்தளிரினிறம்போன்ற நிறத்தை, உண்ட - கவர்ந்துகொண்ட, கண்

ணின் - கண்களின், உள்நிறம்காட்டி-உண்ணிறத்தையுங்காட்டி, நீர் - நீங்கள், என் உயிர்தா-என்னுயிரை ஒத்த அப்பெருமானைக்கொடுக்க, உலோவினீர்-லோபஞ்செய் தீர்கள்—எ-று. (௬௬)

ஸ்ரீராமபிரான் தன்னைநோக்கியகாலத்தில் அந்நோக்குத்தோற்று, தான் அவன் பாற்கொண்ட காதலால் அழகழிந்து தன்னுடல்முழுதும் பசலைபோர்த்தலால், என் தளிர் நிறமுண்ட கண்ணென்றாள், உயிரானவனையென் றுருவகமாக்குக.

வேறு.

795. நாணுலாவு மேருவோடு நாணுலாவு பாணியுந்
தூணுலாவு தோளும்வாளி யூடுலாவு தூணியும்
வாணிலாவி னூலுலாவு மாலைமார்பு மீளவுக்
காணலாகு மாகினாவி காணலாகு மேகொலாம்.

(இ-ள்.) நாண் உலாவு - (தோளழகைக்கண்டு) நாணியிருக்கிற, பேருவோடு-மேருவையொத்த வில்லுடன், நாண் உலாவு பாணியும்-நாண்தங்கிய திருக்கரத்தையும், தூண் உலாவுதோளும் - தூண்போன்றதோள்களையும், வாளி-அம்புகள், ஊடு உலாவு-உள்ளே நிறைந்த, தூணியும்-அம்பறுத்தூணியையும்,வாள்-ஒளிபொருந்திய, நிலாவின் - சந்திரிகையைப்போல, நூல் உலாவும்-முப்புரிநூல் அசைகின்ற, மாலை-மாலையையணிந்த, மார்பும்-மார்பையும், மீளவும்-மறுபடியும், காணல் ஆகும் ஆகின்-காணக்கூடுமொனால், ஆவி-என்னுயிரை, காணலாகும்-காணக்கூடும்—எ-று. (௬௭)

ஏ கொல் ஆம் அசைகள். "காணலாகு மாகினாவி காணலாகும்" என்றமையால், காணலாகாதாகின் உயிரிழப்பேனென்று கூறியவாறாயிற்று.

796. விண்டலங் கலந்திலங்கு திங்களோடு மீதுசூழ்
வண்டலம் பலங்கல்தங்கு பங்கியோடும் வார்சிலைக்
கொண்டலொன் றிரண்டுகண்ணின் மொண்டுகொண்டென்னாவியை
உண்டதுண்ட னெஞ்சினின்று முண்டதென்று முண்டரோ.

(இ-ள்.) விண்தலம் கலந்து - ஆகாயத்திற்சேர்ந்து, இலங்கு - விளங்குகின்ற, திங்களோடு-சந்திரனோடும், மீது-மேல், சூழ்-(தேனுண்ண வளைந்த, வண்டு-வண்டுகள், அலம்பு-ஒலிக்கின்ற, அலங்கல்தங்கு-மலர்மாலைகள்தங்கிய, பங்கியோடும்-சிகையோடும், வார்சிலை - நீண்டவில்லையுடைய, கொண்டல் ஒன்று - ஒருமேகமானது, இரண்டுகண்ணின் - தன்னிரண்டுகண்களால், என் ஆவியைமொண்டுகொண்டு-என்னுயிராகிய நீரைமுகந்துகொண்டு, உண்டது உண்டு-உண்டதுண்டு, அது-அவ்வுரு, என்நெஞ்சின்-என்மனத்தில், இன்றும் உண்டு - இப்பொழுதும் நிலைத்திருக்கின்றது, என்றும் உண்டு-இனி என்றும்நீங்காது—எ-று. (௬௮)

அரோ அசை. திங்கள் என்றது முகத்தை. கொண்டல் என்றது ஸ்ரீராமபிரானை கொண்டல் மொண்டுகொண்டு என்றதனால், ஆவியென்பதற்கு உயிராகியநீர் எனப் பொருளுரைக்கப்பட்டது.

797. பஞ்சரங்கு தீயினாவி பற்றநீடு கொற்றவில்
வெஞ்சரங்க ணெஞ்சரங்க வெய்யகாம னெய்யவே
சஞ்சலங் கலந்தபோது தையலாரை யுய்யவந்
தஞ்சலஞ்ச லென்கிலாத வாண்மையென்ன வாண்மையே.

(இ-ள்.) வெய்யகாமன் - இரக்கமில்லாதமன்மதன், நீடுகொற்றம்வில் - தனது நீண்டவெற்றியமைந்தவில்லினின்றும், வெம்சரங்கள்-வெவ்வியபாணங்களை, பஞ்சு அரங்கு-பஞ்சை அழிக்கின்ற, தீயின்-நெருப்பைப்போல, ஆவிபற்ற - என்னுயிரைப் பற்றவும், நெஞ்சு அரங்க - மனம்வருந்தவும், எய்ய - எய்வதினால், சஞ்சலம்கலந்த போது-சலநமுண்டானகாலத்தில், தையலாரை-மாதரிடத்தில், உய்யவந்து-அவர்கள் பிழைக்கும்படிவந்து, அஞ்சல் அஞ்சல்-அஞ்சாதை அஞ்சாதை, என்கிலாத - என்று சொல்லாத, ஆண்மை - ஆண்மையானது, என்ன ஆண்மை - எத்தன்மைத்தான ஆண்மை—எ-று. (௪௯)

ஏ அசை என்ன ஆண்மையென்றது ஆண்மையன்றென்னுங் குறிப்புப்பொருளது. அடுக்குவிரைவுப்பொருளது. ஆண்மை ஆண்டன்மை, அது உரன்பெருமை முதலியவற்றைக் கொண்டிருப்பது. தையலார், சாதிப்பன்மை

798. இளைக்கலாத கொங்கைகா ளெழுந்துவிம்மி யென்செய்தீர்
முளைக்கலா மதிக்கொழுந்து போலும்வாண் முகத்தினன்
வளைக்கலாத விற்கையாளி வள்ளன்மார்பி னுள்ளுறத்
திளைக்கலாகு மாகிலான செய்தவங்கள் செய்மினே.

(இ-ள்.) (நினைக்குந்தோறும்) இளைக்கலாத-இளைக்காமல், பூரிக்கின்றகொங்கைகாள்-ஸ்தநங்களே, எழுந்துவிம்மி - உயர்ந்தும்பருத்தும், (அதற்குத்தகுதியாக) என் செய்தீர்-யாதுசெய்தீர்கள், முளை - உதித்தலையுடைய, கலா-கலைகள்நிறைந்த, மதிக்கொழுந்துபோலும்-பூர்ணசந்திரனையொத்த, வாள்முகத்தினன் - ஒளிபொருந்திய முகத்தையுடையவனாகிய, வளைக்கலாத-ஒருவராலும் வளைக்கக்கூடாத,வில்-வில்லை, கை-கையிற்பிடித்த, ஆளி-சிங்கம்போன்ற, வள்ளல்-ஸ்ரீராமபிரானது, மார்பின் உள் உற - திருமார்பிற்பொருந்த, திளைக்கல் ஆகும் ஆகில்-அநுபவித்தல் உங்களுக்குக் கருத்தாயின், ஆன - அதற்குத்தக்க, செய்தவங்கள் - செய்தற்குரியதவங்களை, செய்மின்-செய்யுங்கள்—எ-று. (௫0)

ஏ அசை. என்செய்தீர் என்பது ஒன்றுஞ்செய்திலீர் என்பதுபடநின்றது.

799. எங்குநின் றெழுந்ததிந்த விந்துவந்தெ னெஞ்சுலா
அங்கியன் றனங்கனெய்த வம்பின்வந்த சிந்தைநோய்
பொங்குகின்ற கொங்கைமேல் விடம்பொழிந்த தென்னினும்
கங்குல்வந்த திங்களன்று களங்க மில்லையே.

(இ-ள்.) இந்த இந்து-இந்தச்சந்திரன், எங்குநின்று-இந்நாள்வரையெங்கே தங்கியிருந்து, எழுந்தது - இப்போது இவ்விடத்திலுதித்தது, வந்து - இவ்வாறு வந்து, அநங்கன் - அங்கஹீநனாகியமன்மதன், என்நெஞ்சு உலா-என்மனத்தில் நடையாடி, அங்கு இயன்று - அங்கேதங்கியிருந்து, எய்த அம்பின் - எய்தபாணத்தினால், வந்த-உண்டாகிய, சிந்தைநோய்-மனத்தின்கண்ணிகழ்வதாகிய காமநோய் பொங்குகின்ற-மிகுந்தெழுகின்ற,கொங்கைமேல்-ஸ்தநங்களின்மேல், விடம்பொழிந்தது எனினும்-(நிலவாகிய) விடத்தைச்சொரிந்த தாயினும், அகம்-தன்னிடத்தில், களங்கம்இல்லை-களங்கமில்லையாதலால், (இது) கங்குல்வந்த-நேற்றிரவில்வந்த, திங்கள் அன்று-சந்திரன் அன்று—எ-று. (௫௧)

ஏ - இற்றசை. எழுந்த இந்துபொழியா தொழியாதென்னுந் துணிவால் இறந்தகாலத்தாற் கூறினர். தாமரைப்பொய்கையிற் பளிங்குமாடத்துச் சந்திரகாந்த முமிழ்ந்த சீதநீர்தெளித்த புஷ்பசயநத்திற் றான்கிடத்தலானும், சேடியர்

செய்யும் சைத்யோபசாரத்தானும் வெங்கதிர் தண்கதிராய்த்தோன்றலா லிவ்வாறு கூறினர்.

800. அடர்ந்துவந் தனங்கனெஞ் சழன்றுசிந்து மம்பெனும்
விடங்குடைந்த மெய்யினின்று வெந்திடா தெழுந்துவெங்
கடந்துதைந்த காரியானை யன்னகானை காலடைந்
துடன்றொடர்ந்து போனவாவி வந்தவாவெ னுள்ளமே.

(இ-ள்.) உள்ளமே-மனமே, அநங்கன்-உருவிலியானவன், அடர்ந்துவந்து-நெருங்கிவந்து, நெஞ்சு அழன்று-நெஞ்சுகொதித்து, சிந்தும்-சிந்துகின்ற, அம்பு என்னும்-அம்பு என்று சொல்லப்படுகிற, விடம்-விஷாக்கினியில், குடைந்த-முழுகின, மெய்யின்-தேகத்தில், வெந்திடாதுநின்று எழுந்து - வேகாது நின்றெழுந்து, வெம்கடம் துதைந்த-வெவ்விய மதம்நிறைந்த, கார்-கறுத்த, யானை அன்ன-யானையையொத்த, கானை-காளைப்பருவமுள்ளவனது, கால்அடைந்து-பாதத்தையடைந்து, உடன்-கூட, தொடர்ந்து போன-தொடர்ந்துசென்ற, ஆவி-உயிரானது, (அங்கு நின்றுவிடாமல்) வந்த ஆறு என்-திரும்பிவந்தமைக்குக் காரணம்யாது—எ-று. (௫௨)

மீண்டுவந்தது, மறுபடியும், "அடர்ந்துவந்தநங்கனெஞ் சுழன்றுசிந்துமம்பெனும் விடங்குடைதற்குப்போலும் என்பது கருத்து."

801. விண்ணுளே யெழுந்தமேக மார்பினூலின் மின்னொடும்
மண்ணுளே யிழிந்ததென்ன வந்துபோன மைந்தனூர்
எண்ணுளே யிருந்தபோதும் யாவரென்று தேர்கிலென்
கண்ணுளே யிருந்தபோது மென்கொல்காண் கிலாதவே.

(இ-ள்.) விண்ணுள் எழுந்தமேகம் - ஆகாயத்திலெழுந்தமேகங்கள், மார்பில்-தன்மார்பிற்றரித்த, நூலின்மின்னொடு-மின்னலாகிய முப்புரிநூலோடு, இ மண்ணுள் இந்தமண்ணுலகத்தில், இழிந்தது என்ன-இறங்கினதென்று சொல்லும்படி, (கன்னிமாடத்தருகே) வந்துபோன-வந்துசென்ற, மைந்தனூர் - சக்ரவர்த்தித்திருக்குமாரர், எண்ணுள் இருந்தபோதும் - என்னுள்ளத்திலிருந்த காலத்தும், யாவர் என்று தேர்கிலேன் - யாரென்றுதுணிந்திலேன், கண்ணுள் இருந்தபோதும் - (அவ்வாறன்றிக்) கண்ணூக்கெதிரிலிருந்தபோதும், காண்கிலாத - காணக்கூடாததுக்குக்காரணம், என்-யாது—எ-று. (௫௩)

ஏகாரமைந்தும் அசைகள்.

802. பெய்கடற் பிறந்தயல் பிறக்கொணு மருந்துபெற்
றையபொற் கலத்தொடங்கை விட்டிருந்த வாதர்போல்
மொய்கிடக்கு மண்ணறோண் முயங்கிடாது முன்னமே
கைகடக்க விட்டிருந்து கட்டுரைப்ப தென்கொலோ.

(இ-ள்.) பெய்-பலவளங்களையும் சொரிகின்ற, கடல்பிறந்து - திருப்பாற்கடலிற்பிறந்து, அயல்-வேறிடத்தில், பிறக்கொணு-பிறக்கக்கூடாத, மருந்து-அமிர்தத்தை, பெற்று- (முயற்சியின்றிப்) பெற்று, (அநுபவியாமல்) ஐய - அழகாகிய, பொற்கலத்தொடு-பொற்பாத்திரத்துடன், அங்கை-அகங்கையினின்றும், விட்டு இருந்த - (அவ்வமிர்தத்தை) நீங்கியிருந்த, ஆதர்போல்-அறிவிலிகள்போல, மொய்கிடக்கும்-வலிமைதங்கிய, அண்ணல்-அப்பெரியோனுடைய, தோள்-தோள்களை, முயங்கிடாது - தழு

வாது; முன்னமே - முன்னேதானே, கைகடக்கவிட்டிருந்து - கைகடக்கும்படி விட்டிருந்து, (இப்பொழுது) கட்டு உரைப்பது - உறுதிமொழிகளைச் சொல்லுவதனாற் பயன், என்-யாது—எ-று. (ருச)

நெருங்கிவந்தபோது தழுவாதுவிட்டு, தூரத்திற்சென்றபிறகு கட்டுரைப்பதனாலென்னபயனென்பதாம்.

803. என்றுகொண்டு ணைந்துநைந் திரங்கிவிம்மி விம்மியே
பொன்றிணிந்த கொங்கைமங்கை யிடரின்மூழ்கு போழ்தின்வாய்
குன்றமன்ன சிலைமுரிந்த கொள்கைகொண்டு குளிர்மனத்
தொன்றுமுண்கண் மதிமுகத் தொருத்திசெய்த துரைசெய்வாம்.

(இ-ள்.) பொன்திணிந்த - பொற்கச்சிறுக்கிய, கொங்கை - ஸ்தநங்களையுடைய, மங்கை சீதாபிராட்டி,என்று-என்றுபலவாறுசொல்லி, உள்கொண்டு-அந்தராகவனது சவுந்தரியாதிகுணங்களை மனத்திற்கொண்டு, நைந்துநைந்து இரங்கி-பலமுறைநைந்திரக்கமுற்று, விம்மி விம்மி - பலமுறை அழுது, இடரில் - துன்பக்கடலில், மூழ்கு-முழுகுகின்ற, போழ்தின்வாய்-காலத்தில், குன்றம்அன்ன-மலையொத்த,சிலைமுரிந்த-வில்லொடிந்த, கொள்கைகொண்டு-செய்தியைக்கொண்டு குளிர்-குளிர்ந்த, மனத்து-மனத்தோடு, ஒன்றும்-ஒன்றுபட்ட, உண்கண்-மையுண்டகண்களையும், மதிமுகத்து-சந்திரனையொத்த முகத்தையுமுடைய, ஒருத்தி - ஒருசேடி, செய்தது - செய்ததை, உரைசெய்வாம்-சொல்லுவோம்—எ-று. (ருரு)

அடுக்கிரண்டும் மிகுதிப்பொருள், தன்னிறைவிக்கு மணமில்லாதிருத்தல் பற்றித் துயருழந்து வெதும்பிய மனத்தளாதலானும், டஇபோதத்துயரொழிவுக்குரிய வாயில் பெற்றேமென்றுள்ளாறிஞ ளாதலானும், "கண்ணுமுகமும் மனத்தின்வழி பட்டனவாதலால் குளிர்மனத்தொன்று முண்கண்மதி முகத்தொருத்தியென்றார்."

வேறு.

804. வடங்களுங் குழைகளும்வான வில்லிடத்
தொடங்குபு கலைகளுங் குழலுஞ் சோர்தர
நுடங்கிய மின்னென நொய்தி னெய்தினாள்
நெடுந்தடங் கிடந்தகண் ணீல மாலையே.

(இ-ள்.) நெடு-நெடிய, தடம்கிடந்த- விசாலமான, கண் - கண்களையுடைய, நீலமாலை-நீலமாலையென்பவள், வடங்களும்- (பலவகைமணிகளாற்செய்த) வடங்களும், குழைகளும் - காதணிகளும், வானம் வில் இட - வானவில்லைப்போல ஒளிவீசவும், தொடங்குபு-பின்னிக்கொண்டு, கலைகளும்-கலைகளும், குழலும் - கூந்தலும், சோர்தர-அவிழ்ந்துசரியவும், நுடங்கிய-துவளுகின்ற, மின் என - மின்னற்கொடிவருவதுபோல, நொய்தின் எய்தினாள்-விரைவாகவந்தாள்-எ-று.

நீலமாலை-ஒருசேடி, வானவல்லிட என்பதற்கு மேன்மையையுடைய ஒளிவீச எனினுமமையும். கலைகள் என்றது உடையையும் உத்தரீயத்தையும் அன்றி ஆடையையும் அதன் மேலணிந்த மேகலையையும் எனினு மிழுக்காது.

805. வந்தடி வணங்கிலள் வழங்கு மோதையள்
அந்தமி லுவகைய ளாடிப் பாடினள்

சிந்தையுண் மகிழ்ச்சியும் புகுந்த செய்கையும்
சுந்தரி சொல்லெனத் தொழுது சொல்லுவாள்.

(இ-ள்.) வந்து-(அவ்வாறு) வந்து, அடிவணங்கிலள் - பிராட்டியை அடிவணங்காமல், வழங்கும் ஓதையள்-ஆரவாரஞ்செய்கிறவளாயும், அந்தம் இல்-முடிவில்லாத, உவகையள் - சந்தோஷத்தையுடையவளாயும், ஆடி - நடனஞ்செய்துகொண்டு, பாடினள்- மங்கலப்பாட்டுப்பாடினள், (அதைக்கண்டபிராட்டி அவளைநோக்கி) சிந்தையுள்மகிழ்ச்சியும்-உன்மனத்திலுள்ள சந்தோஷத்தையும், புகுந்தசெய்கையும்-(அந்தச் சந்தோஷத்துக்குக் காரணமாக) நடந்தசெய்தியையும், சுந்தரி - அழகுள்ள நீலமாலையே, சொல் என - சொல்லென்றுகேட்க, தொழுதுசொல்லுவாள் - (அந்த நீலமாலையானவள் பிராட்டியை) வணங்கிச்சொல்லுகிறாள்—எ-று. (௬௭)

வந்தவளாகிய சேடி, வந்தசெய்தியைச்சொல்லாமல் களிப்பின்மிகுதியால்ஆடிப் பாடிக்கொண்டிருந்து, பிறகு பிராட்டி வந்த செய்தியைச் சொல்லென்று கட்டளையிட்டதன்மேல் வணங்கிச்சொல்ல லாயினளென்பது கருத்து.

806. கயரத துரகமாக் கடலன் கல்வியன்
தயரத னெனும்பெயர்த் தனிச்சென் னேமியான்
புயல்பொழி தடக்கையான் புதல்வன் பூங்கணை
மயல்விளை மதனற்கும் வடிவி மேன்மையான்.

(இ-ள்.) கயம்ரதம்துரகம்-யானைதேர்குதிரை (காலாள்)என்கிற இவைகளாகிய, மா-பெரிய, கடலன்- கடலையுடையவன், (மா) கல்வியின் - நிறைந்த கல்வியையுடையவன், தயரதன் என்னும்பெயர்-தயரதனென்கிற பெயரையுடைய, தனி - தனிமையாக, செல்-செல்லாநின்ற, நேமியான்-ஆஜ்ஞாசக்கரத்தையுடையவன், புயல்-மேகம்போல, பொழி-(கைம்மாறுகருதாது பொன்மாரியைச்) சொரிகின்ற,தடம்கையான்-பெரியகைகளையுடையவன், (ஒருவனுளன் அவனுக்கு) புதல்வன் - புத்திரனும், பூ கணை-புஷ்பபாணத்தால், மயல்விளை - காமமயக்கத்தையுண்டாக்குகிற, மதனற்கும்-மன்மதனுக்கும், வடிவுமேன்மையான்-அழகுசிறந்தோனும்—எ-று. (௬அ)

கயரதன் என்பது தவசிகன் என்றாற்போல்வது, காலாள் என்பதுஇனம்பற்றுவந்தது. கைத்தலம்விதிர்த்தனர் என்பதிற் சினைப்பெயர்போல வடிவுமேன்மையான் என்பதில் பண்புநின்றுயர் திணைகொண்ட திணைவழுவமைதி.

807. மராமர மிவையென வலிய தோளினன்
அராவணை யமலனென் றயிர்க்கு மாற்றலான்
இராமனென் பதுபெய ரிளைய கோவொடும்
பராவரு முனியொடும் பதிவந் தெய்தினன்.

(இ-ள்.) (கண்டோர்) இவை-இவைகள், மராமரம் என-மராமரங்களென்று சொல்லும்படி, வலிய-வலியமைந்தனவாகிய, தோளினன்-தோள்களையுடையவனும், அராவணை-சர்ப்பசயநத்தையுடைய, அமலன் என்று-நிர்மலனாகிய திருமாலென்று, அயிர்க்கும்-(கண்டோர்) சந்தேகிக்கத்தக்க, ஆற்றலான் - வலியையுடையவனும், (ஆகிய ஒருவனுளன்) (அவனுக்கு) பெயர் இராமன் என்பது-பெயர் இராமனென்று சொல்லப்படுவது, (அவன்) இளையகோவொடும்-பின்தம்பியாகிய லக்ஷ்மணனோடும்- பரா

வரு-(யாவரும்) துதித்தற்குரிய, முனியொடும்-ஒருமுனிவனேடும், பதி-நமது நகரத்தை, வந்து எய்தினன்-வந்தடைந்தான்—எ-று.

பராவு அரு எனப் பதம்பிரித்து, துதித்தற்கரிய எனப் பொருள் கூறலுமாம்.

808. பூணியல் மொய்ம்பினன் புனித னெய்தவில்
காணிய வந்தன னென்னக் காவலன்
ஆணையி னடைந்தவில் லதனை யாண்டகை
நாணினி தேற்றின னடுங்கிற் றும்பரே.

(இ-ள்,) பூண் இயல்மொய்ம்பினன் - வாகுவலயங்களணிந்ததோள்களையுடைய வனாகிய அந்த ஸ்ரீராமன், புனிதன் - பரிசுத்தனானசிவன், எய்த - அம்பெய்த, வில்-வில்லை, காணிய - பார்ப்பதற்கு, வந்தனன் என்ன - வந்தானென்று (முனிவன்) சொல்ல, காவலன்-நம்மரசனது, ஆணையின் - கட்டளையால், அடைந்த வில்லதனை-வந்தவில்லை, ஆண்தகை-(அந்தப்) புருடோத்தமன், நாண் இனிது ஏற்றினன்-எளிதாகநாண் ஏறிட்டான், (அந்தவோசையால்) உம்பர்-மேலுலகமும், நடுங்கிற்று-நடுங்கினது-எ-று. (௬0)

ஏ அசை. உம்பர் என்பதனீற்றில் உயர்வுசிறப்பினேடு இறந்தது தழீஇயவெச்சவும்மை தொக்கது.

809. மாத்திரை யளவிற்றாண் மடுத்து முன்பயில்
சூத்திர மிதுவெனத் தோளின் வாங்கினன்
ஏத்தின ரிமையவ ரிழிந்த பூமழை
வேத்தவை நடுக்குற முறிந்து வீழ்ந்ததே.

(இ-ள்.) மாத்திரை அளவில்தாள் மடுத்து-ஒருநொடியளவில் காலால்மிதித்துக்கொண்டு, முன்-முன்னமே, பயில்-தான்கைப்பழகின, சூத்திரம் இது என - சூத்திரமிதுவென்று கண்டோர்சொல்லும்படி, தோளின்வாங்கினன் - தோளினல்வளைத்தான், (அதைக்கண்டு) இமையவர்-தேவர்கள், ஏத்தினர்-(அவனது தோள்வலியை) புகழ்ந்தார்கள், பூமழை-(அவர்கள்சொரிந்த) புஷ்பவர்ஷங்கள், இழிந்த-வீழ்ந்தன, (அப்போது அந்தவில்லானது) வேத்து அவை நடுக்கு உற - ராஜசபையிலுள்ளார் நடுக்கமடையும்படி, முறிந்துவீழ்ந்தது-(பேரொலியுடன்) முறிந்துவிழுந்தது-எ-று.

அவை இடவாகுபெயர். வேத்தவைவலித்தல்.

810. கோமுனி யுடன்வரு கொண்ட லென்றபின்
தாமரைக் கண்ணின னென்ற தன்மையால்
ஆமவனே கொலென் றைய நீங்கினள்
வாமமே கலையினுள் வளர்ந்த தல்குலே.

(இ-ள்.) கோமுனியுடன்வரு-சிறப்பையுடைய முனிவனுடன்வந்த, கொண்டல் என்றபின் - மேகம்போல் வானென்று சொன்னபிறகு, தாமரைக்கண்ணினன் என்ற - தாமரைமலர்போன்ற கண்களையுடையவனென்று சொல்லப்பட்ட, தன்மையால் -!குணத்தினல், (இவன்) அவனேகொல் ஆம் என்று - (அன்றுநாம் கண்ட) அவன்தானென்றுட்கொண்டு, ஐயம்நீங்கினள் - சந்தேஹம் நீங்கினள்;

(அப்போது அவளுக்கு) வாமம் - அழகாகிய, மேகலையின் உள் - மேகலைக்குள், அல்குல் வளர்ந்தது - அல்குலானது விருத்தியடைந்தது—எ-று. (௬௨)

வளர்ந்ததல்குல் என்றது வேட்கையின் மிகுதியாற் பூரித்தலை.

811. இல்லையே நுசுப்பென்ப ருண்டுண் டென்னவும்
மெல்லியன் முலைகளும் விம்ம விம்முவாள்
சொல்லிய குறியினத் தோன்ற லேயவன்
அல்லனே லிறப்பேனென் றகத்து ளுள்ளினாள்.

(இ-ள்.) நுசுப்பு இல்லையே என்பர் - இடையில்லையேயென்று முன்புசொல்பவர்கள், உண்டு உண்டு என்னவும் - (இப்போது) உளதுளது என்னும்படியாகவும், மெல் இயல்முலைகளும் - மென்மையாகிய இயற்கையையுடைய முலைகளும், விம்ம-பூரிக்க, விம்முவாள் - விம்முகின்றவளாகிய சீதாபிராட்டி, சொல்லிய குறியின-(நீலமாலையென்னுஞ்சேடி) சொன்ன அடையாளத்தால், அத்தோன்றலே-அன்றுகண்ட சக்ரவர்த்தித் திருமகனேயாதல்வேண்டும், அவன் அல்லனேல் - (வில்முறித்தவன்) அவனல்லனாயின், இறப்பென் என்று - இறப்பேனென்று, அகத்துள் உன்னினாள்-மனத்திலெண்ணினாள்—எ-று. (௬௩)

ஏகாரம் இரண்டனுள் முன்னதுதேற்றமும் பின்னது பிரிநிலையுமாம். அடுக்கு துணிவுப்பொருட்டு.

812. ஆசையுற் றயர்பவ ளன்ன ளாயினள்
பாசடைக் கமலத்தோன் படைத்த வில்லிறும்
ஓசையிற் பெரியதோ ருவகை யெய்தியக்
கோசிகற் கொருமொழி சனகன் கூறுவான்.

(இ-ள்.) ஆசை உற்று - ஸ்ரீராமன்மேல் ஆசைகொண்டு, அயர்பவள் - அயர்கின்றவளாகிய பிராட்டி, அன்னள் ஆயினள் - அத்தன்மையள் ஆயினாள், சனகன் - ஜநகமஹாராஜன், பாசு அடை - பசிய இலைகளையுடைய, கமலத்தோன் - தாமரைமலரிலிருப்பவனாகிய பிரமதேவன், படைத்த - சிருஷ்டித்த, வில் இறும் - வில் இற்றதனாலுண்டாகிய, ஓசையின் - ஒலியால், பெரியது - பெரிதாகிய, ஓர் - ஒப்பற்ற, உவகை எய்தி-சந்தோஷத்தையடைந்து, அ கோசிகற்கு-அந்த விசுவாமித்திரமுனிவனுக்கு, ஒருமொழி கூறுவான்-ஒருவார்த்தை சொல்லுகின்றான்—எ-று. (௬௪)

தாளின்மடுத்ததும் நாணுநிவைத்ததும் கடுப்பினின் நோக்கிலனாதலின், ஓசையிற்பெரியதோ ருவகையெய்தி என்றும், அவ்வுவகைக்குக் காரணன் கோசிகனாதலால், அக்கோசிகனென்றுங் கூறினர்.

813. உரைசெயெம் பெருமவுன் புதல்வன் வேள்விதான்
விரைவினின் றொருபகன் முடித்தல் வேட்கையோ
முரைசெறிந் ததிர்கழல் முழங்கு தானையவ்
வரைசையு மிவ்வழி யழைத்தல் வேட்கையோ.

(இ-ள்.) எம்பெரும - எம்பெருமானே, உன் புதல்வன் - உன்புத்ரனாகிய இத்தச் சக்ரவர்த்தித் திருமகனது, வேள்வி-திருக்கல்யாணமானது, விரைவின்-விரைவாக, இன்று ஒருபகல் - இன்று ஒருநாளிற்றானே, முடித்தல் வேட்கையோ - முடித்தல் இஷ்டமோ, முரைசு எறிந்து - பறையறைவித்து, அதிர்கழல் - ஒலிக்கின்ற வீரக்கழலையணிந்த, முழங்கு - முழங்குகின்ற, தானை - சேனையையுடைய, அரசையும் -

அந்தத் தசரதசக்ரவர்த்தியையும், இ வழி-இவ்விடத்தில, அழைத்தல் - அழைத்து மணமுடித்தல், வேட்கையோ-உனக்கு இஷ்டமோ, உரைசெய்-சொல்வாய்—எ-று.

விஞ்சைகளிரண்டையும், தெய்வப் படைக்கலங்களையும் அருள்செய்தவ ளுத லால், நின்புதல்வன் என்றுரைத்தனன்.

814. மல்வலா னவ்வுரை பகர மாதவன்
ஒல்லையி லவனும்வந் துறுத னன்றென
எல்லையி லுவகையா னியைந்த வாறெலாம்
சொல்லுகென் றோலையுந் தூதும் போக்கினான்.

(இ-ள்.) மல்வலான் - மற்போரில் வல்லவனாகிய ஜநகமஹாராஜன், அ உரை பகர - அந்தவார்த்தையைச் சொல்ல, மாதவன் - (கேட்ட) கௌசிகன், ஒல்லையின்-விரைவில், அவனும் - அந்தச் சக்ரவர்த்தியும், வந்து உறுதல்-(இவ்விடத்தில்) வந்து சேர்தல், நன்று என - நல்லதென்றுசொல்ல, எல்லை இல் அளவில்லாத, உவகை யான் - மகிழ்ச்சியையுடையவன், இயைந்த ஆறு எல்லாம் - இங்கு நடந்தவிதங்க ளெல்லாவற்றையும், சொல்லுக என்று - சொல்வீர்களென்று, ஓலையும் தூதும்போக் கினான் - திருமுகத்தையும் தூதுவரையுமனுப்பினான்—எ-று. (௬௬)

௧௩-வது கார்முகப்படலம் முற்றும்.

---

## ௧௪-வது. எழுச்சிப்படலம்.

தசரதன் தனதுபடைகளோடு மிதிலைக்குச் செல்வதைக் குறித்துக் கூறுகின்றபடலம்.

815. கடுகிய தூதருங் காலிற் காலிற்சென்
றிடிகுரன் முரசதி ரயோத்தி யெய்தினார்
அடியிணை தொழுமிட மன்றி மன்னர்தம்
முடியொடு முடிபொரு வாயின் முன்னினார்.

(இ-ள்.) கடுகிய - விரைந்துசென்ற, தூதரும் - தூதர்களும், காலின்-காலினால், காலின் - காற்றைப்போல, சென்று-நடந்துபோய், இடிகுரல் - இடிமுழக்கம்போல, முரசு அதிர் - பேரிகை யொலிக்கிற, அயோத்தி எய்தினார் - அயோத்யாநகரத்தை யடைந்து, அடியிணை - (சக்ரவர்த்தியினுடைய) இரண்டு பாதங்களையும், தொழும்-தொழுவதற்குரிய, இடம் அன்றி - இடமேயல்லாமல், (ஒழிந்த இடமெங்கும்) மன்னர் - (குறையிரக்கவந்த) அரசர்களுடைய, முடியொடுமுடி - முடியோடு முடிகள், பொரு - மோதுகின்ற, வாயில் - வாயிலில், முன்னினார் - முற்படச்சென்றார்கள். ()

பிராட்டிக்குத் திருமணம் விரைவின் முடியவேண்டுமென்னுங் கருத்துடைய தாதலால், கடுகிய தூதரென்றார். இடிக்குரலெனற்பாலது இடிகுரல் என எதுகை நோக்கியும் சந்த இன்பம் நோக்கியும் தொகுத்தது,

816. முகந்தனர் திருவருண் முறையி னெய்தினர்
திகழ்ந்தொளிர் கழலிணை தொழுது செல்வனைப்
புகழ்ந்தன ரரசநின் புதல்வர் போயபின்
நிகழ்ந்ததை யிதுவென நெடிது கூறினர்.

(இ-ள்.) திருவருள் - (சக்ரவர்த்தியினுடைய) சிறந்த அருளப்பாட்டை, முகந்தனர்-முழுதுமடைந்து, முறையின் எய்தினர்-(தாம் செல்லவேண்டிய) முறைமைப் படிபோய், திகழ்ந்து ஒளிர் - மிகவும் பிரகாசிக்கிற, கழல் இணை - இரண்டு பாதங்களையும், தொழுது - வணங்கி, செல்வனை புகழ்ந்தனர் - மஹைசுவரியவானான தசரதனைப் புகழ்ந்து, அரச-சக்ரவர்த்தியே, நின்புதல்வர் - உன் புத்திரர்களாகிய ராமலக்ஷ்மணர்கள், போயபின் - இவ்விடம் விட்டுப்போனபிறகு, நிகழ்ந்தது இது என-நடந்தசெய்தியிதுவென்று, நெடிதுகூறினர் - (மிதிலையில் நடந்தசெய்தியை) மிகுதியுமெடுத்துச் சொன்னார்கள்—எ-று. (௨)

நிகழ்ந்ததை என்புழி ஐ சாரியை.

817. கூறிய தூதருங் கொணர்ந்த வோலையை
ஈறில்வண் புகழினா யிதுவ தென்றனர்
வேறொரு புலமகன் விருப்பி வாங்கினன்
மாறதிர் கழலினன் வாசி யென்றனன்.

(இ-ள்.) கூறிய தூதரும் - அவ்வாறு சொன்ன தூதர்களும், கொணர்ந்த - கொண்டுவந்த, ஓலையை - திருமுகத்தை, ஈறு இல் - முடிவில்லாத, வண்புகழினாய்-வளவியபுகழை யுடையவனே, அது - அதைக்குறித்த திருமுகமானது, இது என்றனர்-இதுதானென்றார்கள், (அதைச் சக்ரவர்த்திக் கருகிருந்த) வேறு ஒருபுலமகன் - வேறொரு கல்வியறிவுள்ளவன், விரும்பி வாங்கினன் - விரும்பித் தன் கையினால் வாங்கிக்கொண்டான், (அவனைநோக்கி) மாறு அதிர்கழலினன் - ஒலியைக்கேட்டு பகைவர் நடுங்குகின்ற வீரக்கழலையணிந்த தசரதன், வாசி என்றனன் - வாசிப்பாயென்று கட்டளையிட்டான்—எ-று. (௩)

வேறொரு புலமகன் என்றது அரசன் தானே வாங்கினனில்லையென்பது பெருமிதத்தை யுணர்த்திநின்றது.

818. இலைமுகப் படத்தவ ரெழுதிக் காட்டிய
தலைமகன் சிலைத்தொழில் செவியிற் சார்தலும்
நிலைமுக வலயங்க ணிமிர்ந்து நீங்கிட
மலையென வளர்ந்தன வயிரத் தோள்களே.

(இ-ள்.) இலைமுகப்படத்து - ஓலையினிடமாகிய படத்தின்கண், அவர் எழுதிக்காட்டிய - அந்த ஜநகமஹாராஜனும் கௌசிகனும் எழுதிவிடுத்த, தலைமகன்-தனது மூத்தகுமாரனது, சிலைத்தொழில் - விற்றொழிலைக்குறித்த செய்தி, செவியில் சார்தலும் - செவியிற் கேட்டவுடன், நிலைமுக வலயங்கள் - நிலைத்த இடம்பெற்ற வாகுவலயங்கள், நிமிர்ந்து நீங்கிட - வளைவுநீர்ந்து சுழன்றுபோக, வயிரத்தோள்கள்-வயிரத்தையொத்த திண்டோள்கள், மலை எனவளர்ந்தன - மலைகள்போல வளர்ந்தன.

ஏ - அசை. சக்ரவர்த்தி, தன் மூத்தகுமாரன்செய்த வில்லாண்மையைக் கேள்வியுற்று அதனாலுண்டாகிய வுள்ளக்களிப்பால், தோள்கள் பூரித்தானென்பது கருத்து.

819. வெற்றிவேன் மன்னவன் றக்கன் வேள்வியில்
கற்றைவார் சடைமுடிக் கணிச்சி வானவன்
முற்றவே ழுலகையும் வென்ற மூரிவில்
இற்றபே ரொலிகொலன் றிடித்ததீங் கென்றான்.

(இ-ள்.) வெற்றிவேல்-வெற்றிவேலைத்தாங்கிய, மன்னவன் - சக்ரவர்த்தி, (தன்னருகிலுள்ளாரைநோக்கி) கற்றை - தொகுதியாகிய, வார்-நீண்ட, சடைமுடி-சடைமுடியையும், கணிச்சி - மழுவையுமுடைய, வானவன் - சிவன், தக்கன்வேள்வியில்-தக்கன்செய்த யாகத்தில், (வந்திருந்த) முற்ற எழுலகையும் - முடியாகிய எழுலகத்தாரையும், வென்ற - செயித்தற்குக் கருவியாகியிருந்த, மூரிவில்-வலியமைந்த வில்லானது' இற்ற - முறிந்ததனாலுண்டாகிய, பேர் ஒலிகொல் - பேரொலிதானோ, அன்று - அன்று, ஈங்கு இடித்தது - இவ்விடத்தில் இடிபோலொலித்தது, என்றான்-என்று சொன்னான்—எ-று.

வானவன் என்பது கணிச்சியென்னும் விசேடணத்தாற் சிவனையுணர்த்திற்று.

820. என்றுரைத் தெதிரெதி ரிடை விடாதுநேர்
துன்றிய கனைகழற் றாதர் கொள்கெனப்
பொன்றிணி கலன்களுந் தூசும் போக்கினன்.
குன்றென வுயரிய குலவுத் தோளினன்.

(இ-ள்.) குன்று என - மலையென்னும்படி, உயரிய-உயர்ந்த, குலவுதோளினன், திரட்சியாகிய தோள்களையுடைய சக்ரவர்த்தியானவன், என்று எதிர் எதிர் உரைத்து - என்றிவ்வாறு வசிட்டன் முதலாயினோரை நோக்கிச்சொல்லி, இடைவிடாது-இடையறுதணியப்பட்டு, நேர் துன்றிய-செம்மையமைந்த, கனை -ஒலிக்கின்ற, கழல்-கழலையனிந்த, தூதர் - தூதர்கள், கொள்க என - கொள்கவென்று, பொன் திணி - பொன்னினாற் செய்யப்பட்டுத் திணிந்த, கலன்களும் - அணிகலன்களையும், தூசும்-ஆடைகளையும், போக்கினன் - கொடுப்பித்தான்—எ-று. (௬)

என்றுரைத்தென்றது மேலைச்செய்யுட் டொடர்ச்சியாதலால், இவ்வாறென்றனம். அரசர்க்கரசனாயினோன் இழிந்தோர்க்குத் தன்கையாற் கொடுத்தல் மரபன்றென்பது போதரப் போக்கினன் என்றனர்.

821. வானவன் குலத்தெமர் வரத்தி னால்வரும்
வேனில்வே ளிருந்தவம் மிதிலை நோக்கிநம்
சேனையு மரசருஞ் செல்க முந்தென
ஆனைமேன் மணமுர சறைகென் றேவினான்.

(இ-ள்.) வானவன்குலத்து - சூரியகுலத்தில் தோன்றிய, எமர் - எம்முன்னோர் பெற்ற, வரத்தினால் - தவப்பேற்றால், வரும் - அவதரித்த, வேனில் வேள் - வசந்தகால மன்மதன்போல்பவனாகிய ஸ்ரீராமபிரான், இருந்த - இருக்கின்ற, அம்மிதிலை நோக்கி - அந்தமிதிலையைநோக்கி, நம் சேனையும் - நமது சைநியமும், அரசரும்-அரசர்களும், முந்துசெல்க என - முன்னே போகக்கடவரென்று, ஆனைமேல் - யானைமேல், மணமுரசு அறைக - மணமுரசுகொட்டுக, என்று ஏவினான் - என்று கட்டளையிட்டான்—எ-று. (௭)

வானவன் என்பது வானத்திலியங்கும் காரணத்தால் சூரியனுக்குத் தலைமை பற்றிவந்தபெயர். வேள் - விருப்பத்தை யுண்டாக்குவோன். ஸ்ரீராமனது இரு

ப்பு மிதிலைக்கு ஓரழகுசெய்தலான், அம்மிதிலை என்பதற்கு அழகாகிய மிதிலையெனினு மமையும். இப்பொருளில் இருந்த என்னும் பெயரெச்சம் காரணப்பொருட்டு.

822. வாம்பரி விரிதிரைக் கடலைவள்ளுவன்
தேம்பொழி துழாய்முடிச் செங்கண் மாலவன்
ஆம்பரி சுலகெலா மளந்து கொண்டநாள்
சாம்புவன் றிரிந்தெனத் திரிந்து சாற்றினன்.

(இ-ள்.) தேம்பொழி - தேனைச்சொரிகின்ற, துழாய் - துளவ மலர்மாலையையணிந்த, முடி-முடியையுடைய, செங்கண்மாலவன்-செந்தாமரைக்கண்ணனாகிய திருமாலானவன், ஆம்பரிசு - தக்கவண்ணம், உலகு எல்லாம் - எல்லாம் - வுலகங்களையும், அளந்துகொண்டநாள்-அளந்து தன்வசப்படுத்திக்கொண்டநாளில், சாம்புவன்-சாம்புவனானவன், திரிந்தென-திரிந்துபறையறைந்தாற்போல, வள்ளுவன்-வள்ளுவனானவன், வாம்பரி-தாவுகின்ற குதிரைகளாகிய, விரிதிரை-விரிந்த அலைகளையுடைய கடலை-(சேநா) சமுத்திரத்தை, திரிந்து சூழ்ந்து, சாற்றினன் - பயணமுரசறைந்து (அக்கட்டளையை) தெரிவித்தான்—எ-று. (அ)

வாவும்பரி வாம்பரியெனத் தொகுத்தது.

823. சாற்றிய முரசொலி செவியிற் சாருமுன்
கோற்றொடி மகளிருங் கோல மைந்தரும்
வேற்றரு குமரரும் வென்றி வேந்தரும்
காற்றெறி கடலெனக் களிப்பி னோங்கினர்.

(இ-ள்.) சாற்றிய-(அவ்வாறு) சாற்றப்பட்ட, முரசு ஒலி - முரசொலியானது, செவியில்சாரும் முன்-காதில்நுழையுமுன்னே, (அந்நகரத்திலுள்ள) கோற்றொடி மகளிரும்-வளைவாகிய வளையலையணிந்தமாதர்களும், கோலம் மைந்தரும் - அழகிய ஆடவர்களும், வேல்தருகுமரரும்- (பகைவர்மார்பிற்) செலுத்துகின்ற வேலையுடைய ராஜகுமாரர்களும், வென்றிவேந்தரும்-வெற்றியையுடைய அரசர்களும், காற்று-காற்றினால், எறி- (அலைகளை) எறிகின்ற, கடல் என - கடல்போல,களிப்பின் ஓங்கினர்- களிப்பினாற்பூரித்தார்கள்—எ-று. (க)

மகளிரும் மைந்தரும் என்றது அரசரொழிந்தாரை. மகளிர் என்பதை வேந்தர் என்பதனோடுங்கூட்டி அரசமகளிரும் எனப் பொருளுரைத்துக்கொள். மைந்தர் என்பது இவ்விடத்தில் கணவரையுணர்த்திற்று. பெரியார் இறைவனைத் "திருமகண் மைந்தன்" எனக்கூறுதல்காண்க.

824. விடைபொரு நடையினன் சேனை வெள்ளமோர்
இடையிலை யுலகினி லெண்ண வீண்டிய
கடையுக முடிவினி லெவையுங் காற்படப்
புடைபெயர் கடலென வெழுந்து போயதே.

(இ-ள்.) விடைபொருநடையினன்-இடபத்தைபொத்த நடையையுடைய சக்ரவர்த்தின், சேனை வெள்ளம் - சேனாசமுத்திரமானது, ஈண்டிய - நெருங்கிய, கடை- கடையாகிய, யுகம்முடிவினில் - யுகமுடிவுக்காலத்தில், எவையும் - எல்லாப்பொருள்களும், கால் - சண்டமாருதத்தால், பட - அழிய, புடைபெயர் - இடம்விட்டுப்பெயர்

கின்ற, கடல் என-கடல்போல, உலகினில் - உலகத்தில், ஓர் இடை இல்லை என்ன-சிறிது இடமுமில்லையென்னும்படி, எழுந்துபோயது-எழுந்துசென்றது—எ-று.

ஒன்று என்பதன் றிரிபாகிய ஓர் என்னும் வரையறைப்பண்பு இவ்விடத்துச் சிறிதென்னும் பொருட்டு.

825. சில்லிட முலகெனச் செறிந்த தேர்கடாம்
புல்லிடு சுடரெனப் பொலிந்த வேந்தரால்
எல்லிடு கதிர்மணி யெறிக்கு மோடையால்
வில்லிடு முகிலெனப் பொலிந்த வேழமே.

(இ-ள்.) உலகு-உலகமானது, சில் இடம் என-சிறிதிடத்தையுடைய தென்னும்படி, செறிந்ததேர்கள் - நெருங்கியதேர்கள், புல் இடுவேந்தரால் - தம்மேலிருக்கிற வேந்தர்களால்; சுடர் என - சூரியனைப்போல, பொலிந்த - பிரகாசித்தன, வேழம்-யானைகள், எல் இடுகதிர்மணி-ஒளிவீசுகிறகதிர்களையுடைய இரத்திநங்கள், எறிக்கும் ஒளிவீசுதற்கிடமான, ஓடையால்-முகபடாத்தினால், வில்இடுமுகில் என-பலஒளியையுடைய வில்லைத்தோற்றுவிக்கிற மேகம்போல, பொலிந்த-பிரகாசித்தன—எ-று.

சில்லிடமென்றது தகுதி.

826. கால்விரிந் தெழுகுடை கணக்கி லோதிமம்
பால்விரிந் ததுவெனப் பறப்ப போன்றன
மேல்விரிந் தெழுகொடிப் படலை விண்ணெலாம்
தொலுரிந் துகுவன போன்று தோன்றுமால்.

(இ-ள்.) கால்விரிந்து எழு -காம்பினின்றும் எழுந்துவிரிகின்ற, குடை - வெண்குடைகள், கணக்கு இல - கணக்கற்ற, ஓதிமம் - அன்னங்கள், பால்விரிந்தது என-பால்பரந்ததுபோல, பறப்ப - பறப்பனவற்றை, போன்றன - ஒத்திருந்தன, மேல் விரிந்து எழு-ஆகாயத்தில்விரிந்தெழுந்த, கொடிப்படலை - கொடித்திரள்கள், விண் எல்லாம்-ஆகாயமெல்லாம், தோல்உரிந்து-தோலுரிபட்டு, உருவனபோன்று தோன்றும்-சிந்துவனபோன்று காணப்படுவன—எ-று. (கஉ)

குடை என்பது சிறந்தவெண்குடையை யுணர்த்திற்று: ஓதிமம்பால் பரந்தது வெனப்பறப்பபோன்றன என்றமையான்.

827. நுடங்கிய துகிற்கொடி நுழைக் கைம்மலைக்
கடங்கலுழ் சேனையைக் கடலி தாமென
இடம்பட வெங்கணு மெழுந்த வெண்முகில்
தடம்புனல் பருகிடத் தாழ்வ போன்றவே.

(இ-ள்.) நுடங்கிய-ஆடுகின்ற, துகில்கொடி- சீலைக்கொடிகள், நுழை - துவாரமுள்ள, கைமலை-துதிக்கையையுடைய மலைபோன்றயானைகளின், கடம் கலுழ் - மதமொழுகாநின்ற, சேனையை - சேனையை (கண்டு,) இதுகடல் ஆம் என - இதுகடலாமென்று (கருதி,) இடம்பட-இடமறையும்படி, எங்கணும்-ஆகாயமெங்கும், எழுந்த - எழுந்தனவாகிய, வெண்முகில்-வெள்ளியமேகங்கள், தடம் புனல்பருகிட - பெரியநீரைப்பருகுதற்பொருட்டு, தாழ்வபோன்ற-இறங்குவனவற்றையொத்திருந்தன.()

828. இழையிடை யிளவெயி லெறிக்கு மவ்வெயில்
தழையிடை நிழல்கெடத் தவழு மத்தழை
மழையிடை யெழில்கெட மலரு மம்மழை
குழைவுற முழங்கிடுங் குழாங்கொள் பேரியே.

(இ-ள்.) இழையிடை- ஆபரணங்களில், இளவெயில் எறிக்கும் - இளமையான வெயிலெறிக்கும், அவ்வெயில் - அந்தவெயில், தழையிடை - பீலிக்குடையினிடத்துண்டாகிய, நிழல்கெட-நிழல்கெடும்படி, தவழும்-தவழாநிற்கும், அத்தழை-அந்தப் பீலிக்குடை; மழையிடை - மேகத்தினிடத்துண்டாகிய, எழில்கெட - அழகுகெட, மலரும்-விரியும், அம்மழை-அந்தமேகங்கள்,குழைவுஉற-சிதையும்படி,குழாம்கோள்-கூட்டத்தைக்கொண்ட, பேரி-பேரிகைகள், முழங்கிடும்-முழங்காநிற்கும்—எ-று.,

829. மன்னணிப் புரவிகள் மகளி ரூர்வன
அன்ன முந்தியதிரை யாறு போன்றன
பொன்னணிப் புணர்முலைப் புரிமென் கூந்தலார்
மின்னென மடப்பிடி மேகம் போன்றவே.

(இ-ள்.) மகளிர் ஊர்வன-மாதர்கள் ஊர்கின்றனவாகிய, மன் அணி-நிலைபெற்ற (கிங்கிணிமாலைமுதலிய) அணிகளையணிந்த, புரவிகள் - குதிரைகள், அன்னம் உந்திய- (தன்மேற்றங்கிய) அன்னங்களைத்தள்ளிக்கொண்டுவருகிற, திரை - அலைகளையுடைய, ஆறுபோன்றன- ஆற்றையொத்தன, பொன் அணி - பொன்னாபரணங்களையணிந்த, புணர்முலை-நெருங்கிய ஸ்தநங்களையும், புரி-கட்டப்பட்ட, மெல்கூந்தலார்-மெல்லிய கூந்தலையுமுடையமாதர்கள், மின் என-மின்னலை யொத்திருக்க, மடப்பிடி-இளமையாகிய பெண்யானைகள், மேகம்போன்ற-மேகத்தையொத்திருந்தன. ()

மாதர் அன்னத்தையும், புரவி அலையையும், அப்புரவித்தொகுதி யாற்றையும் ஒத்திருந்தனவென்பது கருத்து.

830. இணையெடுத் திடையிடை நெருக்க வேழையர்
துணைமுலைக் குங்குமச் சுவடு மாடவர்
மணிவரைப் புயத்துமென் சாந்து மாழ்கிமெல்
அணையெனப் பொலிந்ததக் கடல்செ லாறரோ.

(இ-ள்.) அ கடல்செல் ஆறு-அந்தசேனைக்கடல் செல்லுகின்றவழியில், இணை-இரண்டாக,எடுத்து-ஏந்தப்பட்டுஇடை இடை-இடங்கள்தோறும்,நெருக்க-நெருங்குதலால், ஏழையார்-பேதைமையையுடைய மாதர்களுடைய, துணைமுலை-இரண்டுஸ்தநங்களி லணியப்பட்டிருக்கிற, குங்குமச்சுவடும்-குங்குமக்கோலமும், ஆடவர்-குமரர்களுடைய, மணிவரை - அழகையுடைய மலைபோன்ற, புயத்து - புயங்களிலணிந்த, மென்சாந்தும்-மென்மையாகிய சந்தனக்கோலமும், மாழ்கி-(உதிர்ந்து) கலந்து, மெல் அணை என-மெல்லிய அணையைப்போல, பொலிந்தது-பொலிவுற்றது—எ-று. ()

831. முத்தினுன் முழுநில வெறிக்குமொய்ம்மணிப்
பத்தியா விளவெயில் பரப்பும் பாகினும்
தித்தியா நின்றசொற் செவந்த வாய்ச்சியர்
உத்தரா சங்கமிட் டொளிக்குங் கூற்றமே.

(இ-ள்.) பாகினும் - சர்க்கரைப்பாகினும், தித்தியாநின்ற-மதுரிக்கின்ற, சொல்-சொற்களைப்பேசுகிற, செவந்தவாய்ச்சியார் - செவந்தவாயையுடைய மாதர்கள், உத்தராசங்கம் இட்டு-உத்தரீயத்தையிட்டு, ஒளிக்கும் - மறைத்துள்ள, கூற்றம் - கூற்று, முத்தினால் - (தானணிந்திருக்கிற) முத்தணியால், முழுநிலவு எறிக்கும்-முழுநிலவை வீசும், மொய் - (ஆபரணங்களில்) நெருங்கப் பதித்திருக்கிற, மணிபத்தியால்-இரத்தினவரிசையால், இளவெயில் பரப்பும் - இளவெயிலைப் பரப்பாநிற்கும்—எ-று. (௩௧)

உத்தராசங்கமிட் டொளிக்குங்கூற்றம் என்றது மகளிர் கொங்கைகளை. இவை மைந்தர் சிந்தைநொந்தயர்ந்திடப் புரியுந்தன்மையனவாதலால் கூற்றம் என்றார்.

832. வில்லினர் வாளினர் வெறித்த குஞ்சியர்
கல்லினை யழித்துயர் கனகத் தோளினர்
வல்லியின் மருங்கினர் மருங்குறு மாப்பிடி
புல்லிய களிறென மைந்தர் போயினார்.

(இ-ள்.) வில்லினர் - வில்லைத் தாங்கினவர்களும், வாளினர்-வாளைப்பிடித்தவர்களும், வெறித்தகுஞ்சியர் - (பூமாலை முதலியவைகளால்) மணத்தசிகையை யுடையவர்களும், கல்லினை அழித்து உயர் - மலையினது திண்மையையழித்துயர்ந்த, கனகத்தோளினர்-பொன்னணியணிந்த தோள்களையுடையவர்களும் ஆகிய, மைந்தர் - ஆடவர், வல்லியின்மருங்கினர் மருங்கு - கொடிபோன்ற இடையை யுடையவர்களாகிய தம்மனைவியர் பக்கலில், மா-பெருமைபொருந்திய, பிடி - பெண்யானையை, புல்லிய-தழுவிச்செல்கின்ற, களிறு என - ஆண் யானையைப்போல, போயினார் சென்றார்கள்.

கல்லினை அழித்து - மலைக்குலங்களி னழகைக்கெடுத்து, உயர் - சிறந்த, கனகம் - பொன்மலையாகிய மேருவையொத்த, தோளினர் - தோள்களை யுடையவர்கள், என்று கூறலுமாம்.

833. மன்றலம் புதுமலர் மழையிற் சூழ்ந்தெனத்
துன்றிருங் கூந்தலார் முகங்க டோன்றலால்
ஒன்றலா முழுமதி யூரு மானம்போல்
சென்றன வாலவர் சிவிகை யீட்டமே.

(இ-ள்.) மன்றல் - மணத்தையுடைய, அம் - அழகிய, புதுமலர் - புதியமலர்கள், மழையில் - மேகத்தில், சூழ்ந்தென-சூழ்ந்திருந்தாற்போல, துன்று-நெருங்கிய, இருகூந்தலார்-பெரிய கூந்தலையுடைய மாதர்களுடைய, முகங்கள் தோன்றலால்-முகங்கள்மாத்திரம் காணப்படுதலால், ஒன்று அல்லா - பலவாகிய, முழுமதி - பூர்ணசந்திரர்கள், ஊரும் - ஏறிநடத்துகிற, மானம்போல் - விமாநங்களைப்போல, அவர் - அம்மாதர்களேறின, சிவிகையீட்டம் - சிவிகைக்கூட்டங்கள், சென்றன-போயின-எ-று.

ஆல் - ஏ - அசை. மானம் முதற்குறை.

834. மொய்திரைக் கடலென முழங்கு மூக்குடைக்
கைகளிற் றிசைநிலைக் களிற்றை யாய்வன
மையனுற் றிழிமத மழையறா மையால்
தொய்யலைக் கடந்தில சூழி யானையே.

(இ-ள்.) சூழி-முகபடாமணிந்த, யானை-யானைகள், மையல் உற்று-மயக்கத்தை யடைந்து, இழி - இழிகின்ற, மதமழை ஆறாமையால் - மதமழை நீங்காமையால், தொய்யலை - (உளதாகிய) சேற்றை, கடந்தில்-கடவாதனவாய், மொய் - நெருங்கிய, திரை - அலைகளையுடைய, கடல் என - கடலைப்போல, முழங்கும் - முழங்குகின்ற, மூக்கு உடை - மூக்கையுடைய, கைகளின் - துதிக்கைகளால், திசை - திக்குகளில், நிலை - நிலைத்தலையுடைய, களிற்றை - யானைகளை, ஆய்வன - போர்செய்யத்) தேடு வனபோலும்—எ-று, (உ0)

இந்தச்சேனையிலுள்ள யானைக்கூட்டங்கள் தமது மதமழைச்சேற்றிற் காலாழ்ந்து அதைக் கடவாதனவாய் நின்று தம் துதிக்கைகளை நீட்டி அசைத்தல், திசை யானைகளைப் போர்செய்யத் தேடுவனபோலும் என்பது கருத்து.

835. சூருடை நிலையெனத் தோய்ந்துந் தோய்கிலா
வாருடை வனமுலை மகளிர் சிந்தைபோல்
தாரொடுஞ் சதியொடுந் தாவு மாயினும்
பாரிடை மிதிக்கில பரியின் பந்தியே.

(இ-ள்.) பரியின்பந்தி-குதிரைப்பந்திகள், தாரொடும் - கிங்கிணி மாலையோடும், சதியொடும் - தாளவொற்றோடும், தாவுமாயினும்-தாவுவனவாயினும், சூர் உடைநிலை என - தெய்வத்தின் தன்மைபோலவும், தோய்ந்தும் - புறத்திற்சேர்ந்தும், தோய்கிலா - அகத்திற்சேராத, வார் உடை - கச்சையுடைய, வனம் - தொய்யில் எழுதிய, முலை - முலைகளையுடைய, மகளிர் சிந்தைபோல் - விலைமாதர்களுடைய மனம்போலவும், பார் இடைமிதிக்கில - பூமியின்மேலிருக்கின்றனவில்லை. (உக)

சூருடைநிலை - பூமியிற்கால் தோயாதுசெல்லல். சூருடைநிலை, மகளிர் சிந்தை இரண்டும் தொழிலுவமம்.

836. ஊடிய மனத்தின ருறுத நோக்கினர்
நீடிய வுயிர்ப்பினர் நெரிந்த நெற்றியர்
தோடவிழ் கோதையுந் துறந்த கூந்தலர்
ஆடவ ருயிரென வருகு போயினார்.

(இ-ள்.) (சிலர்) ஊடியமனத்தினர் - பிணங்கினமனத்தை யுடையாரும், உறுத-அன்போடு பொருந்தாத, நோக்கினர் - பார்வையையுடையாரும், நீடிய உயிர்ப்பினர்-பெருமூச்செறிகின்றவரும், நெரிந்த நெற்றியர் - நெரிந்த நெற்றியையுடையாரும், தோடு அவிழ்-இதழ்கள் விரிந்த, கோதையும் - பூமாலையையும், துறந்த-நீக்கிய, கூந்தலர் - கூந்தலையுடையாரும் ஆகி, ஆடவர் - தமது நாயகருடைய, உயிர் என - உயிரைப்போல, அருகுபோயினார்-அவர்களுக்குச் சமீபத்திற் போனார்கள். (உஉ)

உறுதநோக்கு - அன்பில்லாதநோக்கு. உம்மை உயர்வு சிறப்பு.

837. மாறெனத் தடங்களைப் பொருது மாமரம்
ஊறுபட் டிடவிடை யொடித்துச் சாய்த்துராய்
ஆறெனச் சென்றன வருவி பாய்கவுட்
டாறெனக் கனலுமிழ் தறுகண் யானையே.

(இ-ள்.) அருவி - மலையருவிபோல, பாய் - மதம்பாய்கின்ற, கவுள்-கன்னத்தின் தொளையில் குத்துகின்ற, தாறு என-இருப்பு முள்ளைப்போல, அனல் உமிழ்-நெருப்பையுமிழ்கின்றனவும், தறுகண் - அஞ்சாமையை யுடையனவுமாகிய, யானை - யானைகள், மாறு என-பகையெனக்கருதி, தடங்களைப்பொருது-மலைகளைமோதி, மாமரம்

பெருமரங்கள், இடை ஊறுபட்டிட-நடுவில் குறைவுபட, ஒடித்துச்சாய்த்து உராய்-உராய்ந்து முறித்துச் சாய்த்து, ஆறு என சென்றன - சரயுநதியைப்போலச் சென்றன—எ-று. (௨௩)

ஏ-அசை. எராய் என்னும் இறந்தகாலவினையெச்சம் காரணப்பொருட்டு. மிதிலையில் சேர்ந்தனரென்பது.

838. உழுந்திட விடமிலை யுலக மெங்கணும்
அழுந்துய வுயிர்க்கெலா மருட்கொம் பாயினன்
எழுந்திலனெழுந்திடைப் படருஞ் சேனையின
கொழுந்துபோய்க் கொடிமதில் மிதிலை கூடிற்றே.

(இ-ள்.) அழுந்திய - (துன்பத்தி) லழுந்தின, உயிர்க்கு எல்லாம் - உயிர்களுக்கெல்லாம், அருள் - அருளாகிய, கொம்பு ஆயினன்-ஊன்றுகோலா யிருப்பவனாகிய சக்ரவர்த்தி, எழுந்திலன் - (தனதிருக்கைவிட்டு) எழுந்திலன், (அப்படியிருக்க அவனது கட்டளையால்) உலகம் எங்கணும்-உலகமெங்கும், உழுந்து இட-ஒரு உழுந்தை வைக்கவும், இடம் இல்லை - இடமில்லையென்னும்படி, எழுந்து - புறப்பட்டு, இடை-அயோத்யைக்கும் மிதிலைக்குமிடையில், படரும்-செல்லுகின்ற, சேனையின்-சேனையினது, கொழுந்து-முன்னணியானது, போய்-சென்று, கொடி-துவசங்கள் நாட்டின, மதில் - மதில்சூழ்ந்த, மிதிலை-மிதிலாநகரத்தை, கூடிற்று-சேர்ந்தது—எ-று. (௨௪)

ஏ - அசை.

839. கண்டவர் மனங்கள்கை கோப்பக் காதலின்
வண்டமர் கோதையர் வதன ராசியால்
பண்டிகள் பண்டிகள் பரிசிற் செல்வன
புண்டரீ கத்தடம் போவ போன்றவே.

(இ-ள்,) பண்திகழ் - அலங்காரம் திகழ்கின்ற, பண்டிகள்-பண்டிகள், பரிசின்-பரிசைபோல, செல்வன - அசையாது செல்லுவன், கண்டவர்-பார்த்தவர்களுடைய, மனங்கள் - உள்ளங்கள், காதலின் - ஆசையினால், கைகோப்ப-நட்புக்கொள்ளும்படி, வண்டு - வண்டுகள், அமர்-(தேனுண்ணவந்து) பொருந்துகின்ற, கோதையர் - கூந்தலையுடைய மாதர்களுடைய, வதநராசியால் - முகக்கூட்டத்தினால், புண்டரீகத்தடம் - தாமரைமலர்த் தடாகங்கள், போவபோன்ற-போவனபோன்றிருந்தன-எ-று.

ஏ - அசை. திகழ் திகள் ஆயினதுபோலி. தம்மேலேறினோரை உடம்பசையாது கொண்டுய்த்தலான், பண்டி பரிசைக்குவமை யாயின. பண்டிகள் மகளிர் முகங்களோடு கூடிச் செல்வன, தாமரைமலர்த் தடாகங்கள் செல்வனபோலத் தோன்றுநின்றனவென்பது கருத்து.

840. பாண்டிலின் வைத்தவோர் பாவை தன்னொடும்
ஈண்டிய வன்பின னேகுவா னிடை
காண்டலும் நோக்கிய கடைக்க ணஞ்சனம்
ஆண்டகைக் கினியதோ ரமுத மாயதே.

(இ-ள்.) பாண்டிலின் வைத்த - பண்டியில் வைக்கப்பட்ட, ஓர்பாவை - ஒரு பாவைபோல்வாள், ஈண்டிய அன்பினன் - மிக்க அன்புடையவனாய், தன்னொடும் ஏகுவானிடை - பண்டியைப்பற்றித் தன்னோடு தொடர்ந்து செல்பவனாகிய ஓரினை

ஞனை, காண்டலும்-பார்த்தலும், நோக்கிய-(அவ்வாறு) பார்த்த, கடைக்கண்-கடைக் கண்ணிலுள்ள, அஞ்சனம்-கருமையானது, ஆண்டகைக்கு-ஆண்டன்மையையுடைய அவ்விளைஞனுக்கு, ஓர் - ஒப்பற்ற, அமுதம் ஆயது - அமுதமாயிற்று—எ-று. (௨௬)

ஏ-அசை. கடைக்கணஞ்சனம்-நெடுவழிச்செலவால் உளதாகிய அயர்வு முதலிய வற்றை யொழித்தல்பற்றி அமுதமாயது என்றார். பாவை உவமையாகுபெயர்.

841. பிள்ளைமா னோக்கியைப் பிரிந்து போகின்றான்
அள்ளனீர் மருதவைப் பதனி னன்னமாம்
புள்ளுமென் றாமரைப் பூவு நோக்கினன்
உள்ளமுந் தானுநின் றூசலாடுவான்.

(இ-ள்.) பிள்ளைமான் - மான்கன்றினோக்கம்போன்ற, நோக்கியை-நோக்கத்தை யுடையாளை, பிரிந்துபோகின்றான் - நெருக்கத்தினால் பிரிந்துபோகின்றவனொருவன், அள்ளல் - சேற்றையும், நீர் - நீரையுமுடைய, மருதவைப்பதனின் - மருதநிலத்தில், அன்னம் ஆம்புள்ளும் - அன்னமாகிய பறவைகளையும், (அது ஏறிய) மெல் - மெல் லிய, தாமரைப்பூவும் - தாமரைமலரையும், நோக்கினன்-பார்த்து, உள்ளமும் - மன மும், தானும் - தானுமாக, நின்று-நின்று, ஊசல் ஆடுவான்-ஊசலாடுவானாயினன்.

அன்னத்தையும் தாமரை மலரையும் நோக்குதலும் முறையே அவளது நடை யையும் பாதங்களின் மென்மையையும் நினைத்து, அவள் நடந்துகால் வருந்தின், ஆற்றுவார் யாவர் எனத், தன்னுள்ளம் வருந்தினன் என்பது கருத்து. தன் மனம் அங்குமிங்குஞ் செல்லுதலான், ஊசலாடுவான் என்றார். உள்ளமுந்தானுநின் றூச லாடுவான் என்பது தலைமைபற்றியுயர்திணை முடிபேற்றது.

வேறு.

842. அங்கண் ஞாலத் தரசுமி டைந்தவா
பொங்கு வெண்குடை சாமரை போர்த்தலால்
கங்கையாறு கடுத்தது காரெனச்
சங்கு பேரி முழங்கிய தானையே.

(இ-ள்.) அம்கண் - அழகிய இடத்தையுடைய, ஞாலத்து - உலகத்திலுள்ள அரசு-அரசர்கள், மிடைந்தவா - நெருங்கினவிதம் (இது,) கார் என - மேக முழக்கம் போல, சங்கு - மங்கலச்சங்குகளும், பேரி - பேரியும், முழங்கிய - முழங்குகின்ற, தானை - சேனையானது, பொங்கு - விளங்குகின்ற, வெண்குடை - வெள்ளிய குடை களும், சாமரை - சாமரங்களும், போர்த்தலால் - மூடுதலால், கங்கை ஆறு கடுத்தது- கங்காநதியையொத்தது—எ-று. (௨௭)

இது என்பது சொல்லெச்சம். அரசு சாதி யொருமை.

843. அமர ரஞ்சவ் வணங்கனை யாருயிர்
கவருங் கூர்நுதிக் கண்ணெனுங் காலவேல்
குமரர் நெஞ்சு குளிப்ப வழங்கலால்
சமர பூமியு மொத்தது தானையே.

(இ-ள்.) அமரர் அஞ்சு-தேவர்கள் அஞ்சுகின்ற, அ-அந்த, அணங்கு அனையார்- தெய்வப்பெண்ணை யொத்தவர்கள், உயிர் கவரும் - உயிரைக்கவர்கின்ற, கூர்நுதி - கூரிய நுனியையுடைய, கண் என்னும் - கண்ணென்கிற, காலவேல்-யமனையொத்த வேல்களை, குமரர்நெஞ்சு குளிப்ப - இளைஞருடைய மார்பில் தைக்கும்படி, வழங்க

லால் - வழங்குதலால், தானை - அந்தச் சேனையானது, சமரபூமியும் - யுத்தகளத்தை யும், ஒத்தது - ஒத்திருந்தது—எ-று. (உ௯)

உருவு முதலியவற்றாலும், கண்டார்க்கு இவர்மேனி நம்மாற் றீண்டக்கூடுமோ வெனத் தோறும் அச்சத்தாலும் அமரரஞ்சவ் வணங்கனையார் என்றார்

844. தோண் மிடைந்தன தூணமிடைந்தென
வாண் மிடைந்தன வான்மின் மிடைந்தெனத்
தாண் மிடைந்தன தம்மின் மிடைந்தென.
ஆண் மிடைந்தன ஆளி மிடைந்தென.

(இ-ள்.) தூணம் மிடைந்தென - தூண்கள் நெருங்கினாற்போல, தோள்மிடைந் தன-புயங்கள் நெருங்கின, வான்மின் மிடைந்தென - மேகத்தின்மின்னல் நெருங்கி னாற்போல, வாள்மிடைந்தன - வாள்கள் நெருங்கின, தம்மின்மி டைந்தன - தம் மில் ஒருவரோடொருவர் நெருங்கினாற்போல, தாள்மிடைந்தன - கால்கள் நெருங் கின, ஆளிமிடைந்தென - சிங்கங்கள் நெருங்கினாற்போல, ஆள்மிடைந்தன-காலாட் படைகள் நெருங்கின—எ-று. (௩0)

ஆண்மிடைந்தன எனக்கொண்டு ஆண்மக்களுடைய கூட்டங்கள் நெருங்கின எனக் கூறலுமொன்று.

845. வார் குலாமுலை வைத்தகண் வாங்கிடப்
பேர் கிலாது பிறங்கு முகத்தினன்
தேர்கிலா னெறி யந்தரிற் சென்றொரு
மூரி மாமத யானையை முட்டினான்.

(இ-ள்.) வார்குலாம் - கச்சணிந்த, முலை - கொங்கைகளில், வைத்த - வைத்த, கண் - கண்களை, வாங்கிடப்பேர்கிலாது (முலைநெருக்கி லகப்பட்டமையால்) - வாங் கக்கூடாமல், பிறங்கும் - களிப்பினால் பிரகாசிக்கிற, முகத்தினன் - முகத்தையுடை யோன், நெறிதேர்கிலான் - வழியையறியாதவனாகி, அந்தரின்சென்று - குருடரைப் போலப் போல், ஒரு - ஒரு, மூரி - பலம்பொருந்திய, மா - பெரிய, மதயானையை- மதயானையை, முட்டினான் - முட்டிக்கொண்டான்—எ-று. (௩௧)

கொங்கைகளின்மேல் கண்பார்வை, முலைகளின் நெருக்கிலகப்பட்டுப் பேரா மையால் எதிரில்வரு மதயானை அவன் கண்ணுக்குத் தோன்றவில்லை யென்பது. கருத்து.

846. சுழிகொள் வாம்பரி துள்ளவோர் தோகையாள்
வழுவி வீழலுற் றாளையோர் வள்ளறான்
எழுவி னீள்புயத் தாலெடுத் தேந்தினான்
தழுவி னின்றொழி யான்றரை தான்வையான்.

(இ-ள்.) சுழிகொள் - நற்சுழிகளைக்கொண்ட, வாம்பரி - தாவுகின்ற குதிரை யானது, துள்ள - துள்ளியதனால், ஓர் தோகையாள் - ஓர் மயிற்சாயலையுடையாள், வழுவிவீழலுற்றாளை - (தானேறியிருந்த வாகனத்தினின்றும்) வழுக்கி விழலுற்ற வளை, ஓர்வள்ளல்-அவ்வழியே செல்லும் ஒருவள்ளலானவன், எழுவின் - எழுத்தூண் போல, நீள் - நீண்ட, புயத்தால் - தோள்களால், எடுத்து ஏந்தினான்-எடுத்துத் தாங் கினான், தழுவினின்று - அவ்வேந்துதலினின்று, ஒழியான் - நீங்கானவனாகி, தரை வையான் - பூமியில் வையாதவனானான்—எ-று. (௩௨)

தழுவு முதனிலைத்தொழிற் பெயர்.

847. துணைந்த தாமரை நோவத் தொடர்ந்தடர்
கணைக் கருங்கணி னாளையோர் காளைதான்
பணைத்த வெம்முலைப் பாய்மத யானையை
அணைக்க நங்கைக் ககலிட மில்லென்றான்.

(இ-ள்.) துணைத்த - இரண்டாகிய, தாமரை - தாமரைமலர்போன்ற பாதங்கள், நோவ - நோம்படி, தொடர்ந்து அடர் - தொடர்ந்து பொருகின்ற, கணை - அம்பையொத்த, கரு கண்ணினாளை - கருங்கணகளையுடையாளை, ஓர்காளை - ஒரு விடைபோல்வான், பணைத்த - பருத்த, வெம் - விருப்பத்தைத்தருகின்ற, முலை - முலையாகிய, பாய்மதயானையை - பாய்கின்றமதயானையை, அணைக்க - கட்ட, நங்கைக்கு - இப்பெண்ணுக்கு, அகல் இடம் - அகன்ற இடம், இல் - மார்பில் இல்லை, என்றான் - என்றுசொன்னான்—எ-று. (௩௩)

இல் என்பது ஐகாரம் குறைந்து நின்றது, கொங்கைகள் மிகப்பருத்து மார்பிடத்தை யெல்லாங்கவர்ந்துகொண்டமையால் "அகலிடமில்" என்றான். இவ்வாறன்றி நம்கைக்கு அகல் இடமில் எனப் பதம்பிரித்து நமது கையில் அகன்ற இடமில்லை எனப்பொருளுரைப்பினு மமையும். அகலம் பண்பாகுபெயர். இது கடைக்குறை.

848. சுழியுங் குஞ்சி மிசைச்சுரும் பார்த்திடப்
பொழியு மாமத யானையிற் போகின்றான்
கழிய கூரிய வென்றொரு காரிகை
விழியை நோக்கித்தன் வேலையு நோக்கினான்.

(இ-ள்.) சுழியும் - சுழித்துமுடித்த, குஞ்சிமிசை - மயிர்முடியில், சுரும்பு ஆர்த்திட - வண்டுகள் ஆரவாரிக்க, பொழியும் - சொரிகின்ற, மா - பெரிய, மதயானையில் - மதயானையின்மேலேறி, போகின்றான் - போகின்றானொருவன், ஒருகாரிகை - (தன்னைநோக்கிய) ஒருபெண்ணினது, விழியைநோக்கி - கண்களைப்பார்த்து, கழியகூரிய என்று - (இவை) மிகவும் கூரியவாயிரா நின்றனவென்று கருதி, தன் வேலையும் நோக்கினான் - (அவைகட்குச் சமமான கூர்மையிருக்கின்றதோ இல்லையோவென்று அறிதற்பொருட்டு) தன்கைவேலையும் நோக்கினான்—எ-று. (௩௪)

கழிய கூரிய என்ற - எனப்பிரித்து, கழியகூரிய என்று கண்டோராற் சொல்லப்பட்ட எனினுமமையும். எனவே வேல் தசை உடலில்பாயும் இயல்புளதே அன்றி, உயிரிற்பாய்ந்து தொளைக்கு மியல்பிலதென்று வேலை அவமதித்தானென்பது குறிப்பெச்சம்.

849. தரங்க வார்குழற் றாமரைச் சீறடிக்
கருங்கண் வாளுடை யாளையோர் காளைதான்
நெருங்கு பூண்முலை நீள்வளைத் தோளினிர்
மருங்கு லெங்கு மறந்தது நீரென்றான்.

(இ-ள்.) தரங்கம் - அலையின்சுருளையொக்க, வார் - நீண்ட, குழல் - கூந்தலையும், தாமரை - தாமரைமலர்போன்ற, சீறடி - சிறியபாதங்களையும், கருகண் - கருங்கண்களாகிய, வாள் - வாள்களையும், உடையாளை - உடையளாகிய ஒருபெண்ணை, ஓர்காளை - ஓர்காளையானவன், (நோக்கி) நெருங்கு - நெருங்கிய, பூண் - ஆபரணங்களையணிந்த, முலை - ஸ்தநங்களையும், வளைநீள் தோளினிர் - வளையலையணிந்த நீண்ட தோள்களையு முடையீரே, நீர் - நீர், மருங்குல் - (உமது) உடையை, எங்கு மறந்தது - எவ்விடத்துவைத்து மறந்தீர், என்றான் - என்று கேட்டான்—எ-று. ()

வார்த்தையாட விரும்பி இவ்வாறு இவ்வாறு வினைய வினை அவளது இடையின் நுண்மையை யுணர்த்துகின்றது.

850. கூற்றம் போலுங் கொலைக்கண்ணி னாலன்றி
மாற்றம் பேசகி லாளையோர் வள்ளறான்
ஆற்று நீரிடை யங்கைக ளாலெடுத்
தேற்று வாருமை யாவர் கொலோவென்றான்.

(இ-ள்.) ஓர்வள்ளல் - ஒருவள்ளலானவன், கூற்றம்போலும் - யமனைப்போல் கின்ற, கொலை - கொலைத்தொழிலையுடைய, கண்ணினால் அன்றி - கண்களினாலல்லாமல், மாற்றம்போசுகிலாளை - பேச்சுப்பேசாத ஒருத்தியை, (நோக்கி) உமை - உம்மை, ஆற்று நீர் இடை - ஆற்றுநீரில், அம்கைகளால் எடுத்து - அழகியகைகளாலெடுத்து, ஏற்றுவார் - கரையேற்றுவோர், யாவர்கொல் - யாவரோ, என்றான் - என்றுவினவினான்—எ-று. (௩௬)

ஆற்றுநீர் இடை உமையாவர் ஏற்றுவாரெனவே அவள் தமியளாய்ச் செல்கின்றனளென்பது தெள்ளிதின்விளங்கும். அங்கை என்றான் அவளைத்தீண்டிக் கரையேற்றப்பெருதலால். யாவரென்பதில் யாவினா அவனது பாக்கியத்தையும், ஓ உயர்வுசிறப்பையும் உணர்த்தின.

851. தள்ளரும் பரந் தாங்கிய வொட்டகப்
தெள்ளுதேன் கரும் பியாவையுந் தின்கில
உள்ள மென்னத்தம் வாயு முலர்ந்தன
கள்ளுண் மாந்தரிற் கைப்பன தேடியே.

(இ-ள்.) தள் அருபரம் - இறக்குதலருமையானபாரத்தை, தாங்கிய - சுமந்து செல்லாநின்ற, ஒட்டகம் - ஒட்டைகள், கள் உண் - கள்ளைப்பருகுகின்ற, மாந்தரின் - களியர்கள்போல, கைப்பனதேடி - கைப்பனவாகிய வேம்பு முதலானவைகளைத் தேடாநின்று, தம் உள்ளம் என்ன - தம்நெஞ்சுலர்ந்தாற்போல, வாயும் உலர்ந்தன - வாயுமுலர்ந்தனவாகி, தெள்ளுதேன் - தெளிந்ததேனினால், கரும்பு - கரும்பு, யாவையும் - இவைகளெல்லாவற்றையும், தின்கில - உண்கில—எ-று. ()

கள்ளுண்ணுமாக்கள் பால்முதலிய நற்பொருள்களை விரும்பாது கள்ளொன்றனையே விரும்புமாறுபோல, ஒட்டைகள் தீஞ்சுவைக் கரும்புமுதலான மதுரவஸ்துக்களெல்லாமிருக்க, அவற்றை விரும்பாது வேம்புமுதலிய கைப்பொருள்களைத் தேடினவென்பது கருத்து. ஏ - அசை.

852. அரத்த நோக்கின ரற்றிரண் மேனியர்
பரித்த காவினர் பப்பர ரேகினார்
திருத்து கூட்டத்திற் றிண்கணை யத்தொடும்
எருத்தி னேந்திய மால்களி றென்னவே.

(இ-ள்.) அரத்தம் நோக்கினர் - செந்நிறமான கண்களையுடையவரும், அல்திரள்மெனியர் - இருள்திரண்டாற்போன்ற சரீரங்களையுடையாரும் ஆகிய, பப்பரர் - பப்பரர்கள், திருத்துகூட்டத்தின் - திருத்துதற்குரிய சம்மட்டியை, திண்கணையத்தோடும் - வலியகணையத்தோடும், எருத்தின் ஏந்திய - பிடர்மீதி சுமந்து செல்லுகின்ற, மால் - மதமயக்கமுள்ள, களிறு என்ன - மதயானைகளைப்போல, பரித்தகாவினர் - சுமவாநின்று செல்கின்ற காவடியையுடையவர்களாய், ஏகினர் - சென்றார்கள்—எ-று. (௩௮)

கணையம் மதயானையைத்தடுக்குமரம்.

853. பித்த யானை பிணங்கிப் பிடியிற்கை
வைத்த மேலிருந் தஞ்சிய மங்கைமார்
எய்திடுக்க ணுற்றூர் புதைத் தார்கிரு
கைத்தலங் களிற் கண்ணடங் காமையே.

(இ-ள்.) பித்தயானை - மயக்கத்தையுடைய ஒருயானை, பிணங்கி - பாகனோடு மாறுபட்டு, பிடியில் - பெண்யானைமேல், கைவைத்த - கையைவைத்தது, (அதனால்) மேல்இருந்து - (அப்பிடியின்) மேலிருந்து, அஞ்சிய - பயந்த, மங்கைமார்- மங்கையர், புதைத்தார்க்கு - மூடிக்கொண்டவர்களுக்கு, இருகைத்தலங்களின் - இரண்டு குடங்கைகளிலும், கண் அடங்காமை - தன் கண்களடங்காமையால், எய்து - இளைத்து, இடுக்கண் உற்றூர் - துன்பமடைந்தார்கள்—எ-று. (௩௩)

பயந்தவர் கண்புதைத்த வியற்கையாதலால் அஞ்சிய மங்கைமார்கண் புதைத்தார் என்றூர். கண்ணடங்காமையாவது - கண்கள் மிகப்பெரியனவாகி, கைத்தலத்தடங்காதகன்றிருத்தல். ஒரோ குடங்கைப் பெரியன கெண்டைக் குலமிவையோவந்து பேர்கின்றனவே'' எனவே தந்தமிழ்செய்த வித்தகப்பெரியாரும் பணித்தமைகாண்க.

854. வாம மேகலை யாரிடை வாலதி
பூமிதோய் பிடிச் சிந்தரும் போயினூர்
காமர் தாமரை நாண்மலர்க் கானத்துள்
ஆமை மேல்வருத் தேரையி னுயரோ

(இ-ள்.) வாமம் - அழகான, மேகலையார் இடை - மேகலையணிந்த மாதர்கள் அருகில், சிந்தரும் - சிந்தர்களும், காமர் - அழகாகிய, தாமரை - தாமரையின், நாள்மலர் கானகத்தில் - புதியமலர்க்காட்டில், ஆமைமேல்வரும் - ஆமைமேலேறி வருகின்ற, தேரையின் ஆய் - தேரைபோலாகி, வாலதி - வால், பூமிதோய் - பூமியைத்தொடுகின்ற, பிடி - பெண்யானைகளின்மேலேறி, போயினூர் - சென்றூர்கள். ()

சிந்தர் - குறளர். இவர் மெய்காப்பாளர் - அரோ - அசை. தேரை - தவளையிலோர்பேதம்.

855. இம்பர் நாட்டின் றரமல்ல ளீங்கிவள்
உம்பர் கோமகற் கென்கின்ற தொக்குமால்
கம்ப மாவரக் கால்கள் வளைத்தொரு
கொம்ப னூளைக்கொண் டோடுங் குதிரையே.

(இ-ள்.) மால் - மயங்காநின்ற, கம்பம் - கட்டுத்தறிற் கட்டுதற்குரிய, மா - (ஒரு) யானையானது, வர - வருதால், (மருண்டு) குதிரை - ஒரு குதிரையானது, ஒருகொம்பு அன்னூளை - ஒருபூங்கொம்புபோல்பவளை, கொண்டு - தன்மேற் கொண்டு, கால்வளைத்து ஓடும் - கால்களைவளைத்துக்கொண்டு ஒடாநிற்கும், (அவ்வாறு ஓடுதல்) ஈங்கு இவள் - என்மேல் உள்ள இம்மாது, இம்பர்நாட்டின்தரம் அல்லள் - இவ்வுலகத்தில்இருக்குந் தரத்தினளல்லள், உம்பர்கோமகன்கு - தேவேந்திரனுக்கு (உரியளாந்தரத்தினள்,) என்கின்றது ஒக்கும்-என்றுணர்த்துவதை யொத்திருக்கும்—எ-று. (௩௪)

எ - அசை. இங்கு என்றது தன்மையிடத்தை புணர்த்தியது. இம்பர்நாட்டின் தரம் அல்லள் என்றமையால், உம்பர்கோமன்கு என்பதில் உரியளாந்தரத்தினள் என்பது சேர்த்துரைக்கப்பட்டது.

856. சந்த வார்குழல் சோர்பவை தாங்கலார்
சிந்து மேகலை சிந்தையுஞ் செய்கலார்
எந்தை வில்லிருத் தானெனு மின்சொலை
மைந்தர் பேச மனங்களித் தோடுவார்.

(இ-ள்.) எந்தை - எமது அப்பனாகிய ஸ்ரீராமபிரான், வில் - த்ரியம்பகம் என்னும்வில்லை, இருத்தான் என்னும் - முறித்தான் என்கிற, இன்சொல்லை - இனிதானசரிதத்தை, மைந்தர்பேச - ஆடவர்கள்பேசாநிற்க, (அதைக் கேட்கும்பொருட்டு) சொர்பவை - அவிழ்வனவாகிய, சந்தம்வார்குழல் - மயிர்ச்சாந்துபூசின நீண்ட கூந்தல்களை, தாங்கலார் - எந்திக்கொள்ளாமலும், சிந்தும் - அற்றுச்சிதறுகிற, மேகலை - மேகலைகளை, சிந்தையும்செய்கலார் - மனத்திலெண்ணாமலும், மனம் களித்து மனம்பூரித்து, ஓடுவார் - ஓடுவார்கள்—எ-று. (௬௨)

இறைவனுக்கு முயிர்களுக்கு முளவாகிய சம்பந்தமொன்பதனுள் பிதா புத்ர சம்பந்தமொன்றாதலினது பற்றித் தம்போலு மெய்த்தொண்டர்களையு முளப்படுத்தி "எந்தை" என்றும், பேசப்பேச வினிமையைத்தருதலால் "இன்சொல்" என்றுங் கூறினார். அன்றி உயிர்கட்கினிய வீட்டின்பத்தைத் தருதலால் "இன்சொல்" என்றாரெனினு மமையும். ஸ்ரீ ராமபிரான் வில்லிறுத்தசரிதத்தைக் கேட்கும் விருப்பத்தினாற் றங்குழல்சோர்வதையும் மேகலைசிந்துவதையு நோக்காம லோடினார்களென்பது கருத்து,

857. குடையர் குண்டிகை தூக்கினர் குந்திய
நடையர் நாசி புதைத்தகை நாற்றலர்
கடை களிற்றையுங் காரிகை யாரையும்
அடைய வஞ்சிய வந்தணர் முந்தினார்.

(இ-ள்.) கடை - அரசரது தலைவாயில்களிற் கட்டுதற்குரிய, களிற்றையும் - யானைகளையும், காரிகையாரையும் - மாதர்களையும், அடைய - முழுதும், அஞ்சிய - பயந்த, அந்தணர் - முனிவர்கள், குடையர் - குடையையுடையார்களும், குண்டிகை தூக்கினர் - கமண்டலச்சிக்கத்தை யுடையார்களும், குந்தியநடையர் - குந்திய நடையையுடையார்களும், நாசிபுதைத்தகை - நாசியைமூடியகைகளை, நாற்றலர் - தொங்கவிடாதவர்களுமாகி, முந்தினார் - முற்பட்டுச்சென்றார்கள்—எ-று. (௬௩)

உயிர்கட்குத் தம்மை யறியாமலும் ஓர் துன்பம் நேரிடாவண்ணங் குறிக்கொண்டுகாப்பவராதலின் "குந்தியநடையர்" என்றும், ஸ்ரீராமபிரானது திருவுருவத்தைத் தமதுள்ளத்திருத்தி ரேசகபூரக கும்பங்களைச் செய்துகொண்டே செல்கின்றவராதலின் "நாசிபுதைத்தகை நாற்றலர்" என்றும், கிரிவனநதிகளின் சாற்பிற்பிறந்து அருந்தவர்க்குப் பணிசெய்வனவாகிய களிறுகள்போலன்றி, இவை போர்த்தொழின்முதலிய பயின்று அரசரது தலைவாயிலில் கட்டப்பட்டிருப்பனவாதலானும், காரிகையாருடைய வனப்பு முதலியவற்றைக் கண்ணுறினுந் தவவொழுக்கஞ் சிதையுமாதலானும் "கடைகளிற்றையுங் காரிகையாரையும் அடையவஞ்சிய வந்தணர்" என்றுங் கூறினார், "குந்தியநடை" என்றது, புல் முதலிய வோரறிவுயிரையும் குறிக்கொண்டு காத்தற்பொருட்டு அடியிடையிட்டுப்பெயர்த்திடுதலை, இது சவ்வீரதேசத்தரசனது சிவிகை காவுவாராய்ச்சென்ற "ஜடாபரதர்" முதலாயினோ ரிடத்துக்காணலாம். கிரிவனநதிகளின் சார்பிற்பிறந்த யானைகள் முறையே கிரிசரம், வனசரம், நதிசரம், என்னும் பெயரைப்பெறுவன. அருந்தவர்க்குப் பணிசெய்வனவாகிய களிறுகள் என்றது. அயோத்யா-

காண்டம், திருச்சித்ரகூட படலத்தில் "வளைகள்காந்தளிற் பெய்தன அனையகைம் மயிலே-தொளைகொள் தாழ்தடக் கைநெடுந் துருத்தியிற்றாக்கி-அளவில்மூப்பினர் அருந்தவர்க் கருவிநீர்கொணர்ந்து - களபமதல்கரி குண்டிகை சொரிவன காணாய்" என்னும் உக-வது, திருவிருத்தத்தால் விசதமாகும். எதுகைத்தொடைநோக்கி, கடைகளிற்றை எனக்ககரந்தொகுத்தலாயிற்று.

858. நாறு பூங்குழ னங்கையோர் கண்கணீர்
ஊறு நேர்வந் துருவு வெளிப்பட
மாறு கொண்டனை வந்தனை யாகில்வந்
தேறு தேரெனக் கைக ளிழிச்சுவார்.

(இ-ள்.) நாறு-மணக்கின்ற, பூ-மலர்மாலைகளையணிந்த, குழல்-கூந்தலையுடைய, நங்கையோர் - மாதர்கள், கண்கள்-தமதுகண்களின், நீர் ஊறு-நீரினது ஊற்றுக்கு-நேர்-எதிரில், வந்து-வந்து, உருவுவெளிப்பட-(பிரிந்துபோன தங்கணவர்களுடைய) வுருவெளிப்பட, (அதனைநோக்கி) மாறுகொண்டனை-பகைகொண்டுபோயினை, வந்தனை ஆகில்-இப்போதுநீயேவந்தாயாகில், வந்து-சுற்றிவந்து, தேர் ஏறு என-தேர்மேலேறுவாயென்று, கைகள் இழிச்சுவார்-கைகளைத் தாழ்த்துவார்கள்—எ-று (சச)

மாதர்கள் தங்கணவர்களுடைய உருவெளிப்பாடு கண்டுரைத்தது. நங்கையோர் சாதிப்பன்மை.

859. குரைத்த தேருங் களிறுங் குதிரையும்
நிரைத்த வார்முரசுந் நெளிந் தெங்கணும்
இரைத்த பேரொலியா லிடை யாவரும்
உரைத் துணர்ந்தில ரூமரி னேகினர்.

(இ-ள்.) குரைத்ததேரும்-ஒலித்ததேர்களும், களிறும்-யானைகளும், குதிரையும்-குதிரைகளும், நிரைத்த - வரிசையாகச் செல்லுகின்ற வார்-வாரால்இறுக்கிய, முரசும்-பேரிகைகளும், நெளிந்து-(நெருக்கத்தால்) மெல்லச்சென்று, எங்கணும் இரைத்த-எவ்விடத்துமொலித்த, பேரொலியால்-பெரிய வோசையினால். இடை-அவ்விடத்திற் செல்லுகின்ற, யாவரும் - எல்லாரும், உரைத்து-ஒருவரோடொருவர்பேசி, உணர்ந்திலர் - உரைத்த சொல்லைச்கேட்டு அறிந்திலர்( (ஆதலால்) ஊமரின் - ஊமைகளைப் போல, ஏகினர்-வாய் பேசாமற் சென்றார்கள்—எ-று.

தேர்முதலியவற்றின் பேரொலியா லொருவர்க்கொருவர் தங்களிற் பேசிய சொற்களைக் கேட்டுணரக் கூடாமையான் "ஊமரினேகினர்" என்றார்.

860. நுட் சிலம்பி யலர்ந்தன நுண்டுகில்
கட் சிலம்பு கருங்குழ லார்குழூ
உட் சிலம்பு சிலப்ப வொதுங்கலால்
புட் சிலம்பிடு பொய்கையும் போன்றதே.

(இ-ள்.) நுண்சிலம்பி - நுண்ணியசிலம்பிப் பூச்சிகளால்செய்யப்பட்டு, அலர்ந்தன்ன-பரவியிருப்பனவாகிய நூற்கூடுகளையொத்த, நுண்துகில்-மெல்லியவஸ்திரத்தையும், கள்சிலம்பு-தேன்நிரம்பிய, கருகுழலார் - கரிய கூந்தலையுமுடையமாதரது, குழூ-கூட்டம், உள் - தனக்குள்ளே, சிலம்பு சிலம்ப - காற்சிலம்புகள் ஒலிக்கும்படி,

ஒதுங்கலால்-நடத்தலால், (அக்குழு) புள்-பலவகைப்பறவைகளும், சிலம்பிடு-ஒலித்தற்கிடமாயிருக்கிற, பொய்கையும் போன்றது-தடாகத்தையும் ஒத்திருந்தது—எ-று

ஏ-அசை. கள்-மலர்த்தேன். சிலம்புதல் இவ்விடத்து நிறைதலின் மேலது.

861. தெண் டிரைப்பர வைத்திரு வன்னவர்
நுண் டிரைப்புரை நோக்கிய நோக்கினைக்
கண் டிரைப்பன வாடவர் கண்களி
வண் டிரைப்பன வானை மதங்களே

(இ-ள்.) தெள்திரை - தெளிவாகிய அலைகளையுடைய, பரவை-திருப்பாற்கடலிலுதித்த, திரு அன்னவர்-திருமகளையொத்தமாதர்கள், நுண்- நுட்பமாகிய, திரை-திரைச்சீலையின், புரைவரு-தொளைவழியே, நோக்கியநோக்கினை-பார்த்த கண்களை, கண்டு - பார்த்து, ஆடவர்கண் - ஆடவர்களுடைய கண்கள், இரைப்பன - களித்து முழங்குவன, ஆனைமதங்கள்-யானை மதங்களில், களிவண்டு-களிப்பையுடைய வண்டுகள்-இரைப்பன-(மொய்த்து) ஆரவாரிப்பன, (௬௭)

திரு என மேல்வருதலால் பரவைஎன்பதற்குப் பாற்கடலெனப் பொருளுரைக்கப்பட்டது. ஆடவர்கண் கண்டிரைப்பன என்றது மாதர் புரையின் வழியே நோக்கிய நோக்கத்தை உணர்ந்தன கண்களாதலால், அவ் இரைந்து பேசினவற்றைக் கருவியின்மேலேற்றி, ஆடவர்கண் கண்டிரைப்பன என்றார்.

862. உழை கலித்தன வென்ன வுயிர்த்துணை
நுழை கலிக்கருங் கண்ணியர் நூபுர
இழை கலித்தன வின்னிய மாவெழு
மழை கலித்தென வாசி கலித்தவே.

(இ-ள்.) உயிர்துணை - ஆடவர்களுடைய வுயிராளவும், நுழை - உருவிச்செல்லுகின்ற, கலி-வலியமைந்த, கருகண்ணியர்-கரியகண்களையுடைய மாதர்களணிந்திருக்கிற, நூபுரம் இழை - காற்சிலம்பாகிய ஆபரணங்கள், உழைகலித்தன என்ன-உழையொலித்தனவென்னும்படி, கலித்தன - ஒலித்தன, (அவ்வொலியை) இன் இயம் ஆ-இனிய வாத்தியமாகக்கொண்டு, எழுமழைகலித்தென-எழுமேகங்களு முழங்ினாற்போல, வாசிகலித்த-குதிரைகள் கனைத்தன—எ-று. (௬௮)

உழை-எழிசைக்குள், சிரத்திற் பிறக்கு விசை. கலி-வஞ்சகம் எனினுமமையும்.

863. மண் களிப்ப நடப்பவர் வாணுதல்
உண் களிக்க மலங்களி துள்ளுறை
திண் களிச்சிறு தும்பி யெனச்சிலர்
கண் களித்தன காமன் களிக்கவே.

(இ-ள்.) மண்களிப்ப - பூமிதேவியானவள் களிக்கும்படி, நடப்பவர்-நடப்பவர்களாகிய மாதர்களுடைய, வாள் நுதல்-ஒளியமைந்த நெற்றியோடுகூடிய, உண்களிக மலங்களின் உள் உறை-மதுவுண்ட களிப்பையுணர்த்துகிற முகமாகிய தாமரைமலர்களிற்றங்கிய, திண்களி-மிக்ககளிப்பையுடைய, சிறுதும்பி என-(கண்ணுளாகிய) சிறிய வண்டுகள்போல, காமன் - மன்மதன், களிக்க - (நமக்குப் போர்வாய்த்ததென்று) களிக்கும்படி, சிலர்-சில ஆடவர்களுடைய, கண்களித்தன-கண்கள்களித்தன-எ-று.

மண்களித்தலாவது இவர்கள் நம்மீது நடக்கப்பெற்றோமென்று களித்தல். மாதர்களும் ஆடவர்களும் ஒருவரை யொருவர் பார்த்துக் களித்தார்கள் என்பதாம். களிக்க காரியப்பொருட்டாகிய செயவெனச்சம்.

864. எண்ண மாத்திர மும்மரி தாமிடை
வண்ண மாத்துவர் வாய்க்கனி வாய்ச்சியர்
திண்ண மாத்தொளிர் செவ்விள நீரிழி
சுண்ண மாத்தன தூளியு மாத்தவே.

(இ-ள்.) எண்ணமாத்திரமும - கருதலளவைக்கும், அரிது ஆம் - அரிதாகிய, இடை - இடையையும், வண்ணம் - நன்னிறமமைந்த, மா - பெருமைதங்கிய, துவர் - பவளத்தையொத்த, வாய் - வாயினையும், கனி - முக்கனிச்சாறு போற்சுவையமைந்த, வாச்சியர் - சொல்லையுமுடைய மாதர்களுடைய, திண்ணம் - உறுதியாக, ஆத்து ஒளிர் - வாரினல்கட்டப்பட்டுப் பிரகாசிக்கிற, செவ்விளநீர் - செவ்விளநீரினின்றும், இழி - உதிர்ந்த, சுண்ணம் - கதம்பப்பொடிகள், ஆத்தன - (அவ்வெளியெல்லாம்) நிறைந்தன, தூளியும் - மட்டுகளும், ஆத்தன - திணிந்தன—எ-று. ()

யாத்தல் ஆத்தல் என மரீஇயது.

865. சித்திரத் தடந்தேர் மைந்தர் மங்கையர்
உய்த் துரைப்ப நினைப்ப வுலப்பிலா
இத் திறத்தின ரெத்தனை யோபலர்
மொய்த் திரைத்து வழிக்கொண்டு முன்னினார்.

(இ-ள்.) சித்திரம் - சித்திரவேலையமைந்த, தடம்தேர் - பெரியதேரிமேலேறிய, மைந்தர் - ஆடவர்களும், மங்கையர் - மாதர்களும், உய்த்து உரைப்ப - உளகித்தறிந்துசொல்லவும், நினைப்ப - நினைக்கவும், உலப்பு இலர் - அளவிலர், இத்திறத்தினர் - இத்தன்மையுடையோர், எத்தனையோபலர் - எவ்வளவோ பலபோர்கள், மொய்த்து - நெருங்கி, இரைத்து - ஆரவாரித்து, வழிக்கொண்டு முன்னினார் - வழிக்கொண்டு முந்திநடந்தார்கள்—எ-று. (௬௧)

ஸ்ரீராமபிரானது திருமணங் கண்டுகளிக்க வேண்டி விரைகின்றனராதலால் முன்னினார் என்றார்.

வேறு.

866. குசையுறு பரியுந்தேரும் வீரருங் குமிழியெங்கும்
விசையொடு கடுகப்பொங்கி வீங்கிய தூளிவிம்மிப்
பசையுறு துளியின்றாரைப் பசுந்தொளை யடைந்தமேகம்
திசைதொறும் நின்றயானை மதத்தொளை செம்மிற்றன்றே.

(இ-ள்.) குசை உறுபரியும் - கடிவாளமமைந்த குதிரைகளும், தேரும் - தேர்களும், வீரரும் - வீரர்களும், எங்கும்குமுழி - எவ்விடத்துங்கூடி, விசையோடு கடுக - வேகத்துடன்விரைந்துசெல்ல, (அதனால்) பொங்கிவீங்கியதூளி - மிகவும் அதிகப்பட்டதூளியானது, விம்மி - பெருகி, மேகம் - மேகத்தில், பசை உறு - ஈரம்பொருந்திய, துளியின்தாரை - துளியின்தாரைகள் வருதற்குரிய, பசுதொளை - பசியதொளைகளை, அடைந்த - அடைத்ததாகி, திசைதோறும் - எல்லாதிசைகளிலும், நின்றயானை - நின்றனவாகிய யானைகளின், மதத்தொளை - மதமொழுகுந்துவாரங்களை, செம்மிற்று - அடைத்துவிட்டது—எ-று, (௬௨)

அன்று ஏ அசைகள்,

867. கேடகத் தடக்கையாலே கிளரொளி வாளும்பற்றிச்
சூடகத் தளிர்க்கை மற்றைச் சுடர்மணித் தடக்கைபற்றி
ஆடகத் தோடையானை யழிமதத் திழுக்கலாற்றில்
பாடகக் காலினாரைப் பயப்பயக் கொண்டுபோனார்.

(இ-ள்.) (ஆடவர்கள்) கேடகம் - கேடகம்பிடித்த, தடம்கையாலே - பெரிய கையினால், கிளர் - விளங்குகின்ற, ஒளி - ஒளியையுடைய, வாளும்பற்றி - வாளையும்பிடித்து, சூடகம் - வளையையணிந்த, தளிர்-மாந்தளிர்போன்ற நிறத்தையுடைய, கை-கைகளை, மற்றை-வேறொன்றாகிய, சுடர்-காந்தியையுள்ள, மணி-ரத்நாபரணங்களணிந்த, தடக்கைபற்றி - பெரியகையினால் பிடித்துக்கொண்டு, ஆடகத்து - பொன்னினாற்செய்த, ஓடை - நெற்றிப்பட்டத்தையுடைய, யானை - யானைகளின், அழிமதத்து - அழிகின்ற மதநீரினாலுண்டாகிய, இழுக்கல் ஆற்றில் - சேற்றுவழியில், பாடகம் காலினாரை - பாடகமணிந்த கால்களையுடைய தங்கள் நாயகியார்களை, பயப்பய - மெல்லமெல்ல, கொண்டுபோனார் - அழைத்துக்கொண்டுபோனார்கள் ()

பய-பய-என்பதில்-யம்முன் அகரம்போலி. அடுக்கு அச்சப்பொருட்டு. கேடகம்பற்றுதற்குரிய இடக்கரத்தில், யலக்கரத்திற் பற்றுதற்குரிய வாளையும்பற்றி, வலக்கரத்தால் தங்கள் நாயகிகளைப் பிடித்துக்கொண்டு, யானை மதச்சேற்றில் வழுக்கிவிழாமல், மெல்லக் கொண்டுசென்றார்களென்பது கருத்து.

868. செய்களின் மடுவினன்னீர்ச் சிறைகளி னிறையப்பூத்த
நெய்தலுங் குமுதப்பூவு நெகிழ்தசெங் கமலப்போதும்
கைகளு முகமும்வாயுங் கண்களுங் காட்டக்கண்டு
கொய்தவை தருதிரென்று கொழுநரைத் தொழுகின்றாரும்.

(இ-ள்.) செய்களில் - வயல்களிலும், மடுவில் மடுக்களிலும், நல்நீர்சிறைகளில் - நல்லநீரையுடைய தடாகங்களிலும், நிறையப்பூத்த - நிரம்பமலர்ந்த, நெய்தலும் - நெய்தற்பூக்களும், குமுதம்பூவும் - குமுதம்பூக்களும், நெகிழ்ந்த - மலர்ந்த, செங்கமலப்போதும் - செந்தாமரைப்பூக்களும், கைகளும் - தங்களுடைய கையினழகையும், முகம் - முகத்தினழகையும், வாயும் - வாயினழகையும், கண்களும் - கண்ணழகையும், காட்டக்கண்டு - காட்டப்பார்த்து, அவை - அவற்றை, கொய்து தருதிர் என்று - பறித்துக்கொடுப்பீர் என்று, கொழுநரை - தங்கள் கணவர்களை, தொழுகின்றாரும் - வணங்குகிறவர்களாகிய மாதரும் (அக்கூட்டத்துளர்)—எ-று. ()

உருவும் திருவும் பருவமும் குணனும் குலனும் அன்பும் முதலியவற்றால் தம்முளொப்புமையுடையராதலின் ஒப்போர்கூற்றாகிய தருதிர் என்றார் எனவும், இத்திறத்தார்பலராகலின் பயனிலைகொடாது அவாய்நிலையானே தொழுகின்றாருமெனவுங்கூறினார். கொழுநரை என்றமையால் தொழுகின்றார் மாதர் என்பதுபெற்றாம். நெய்தல் கண்ணுக்கும், குமுதம் வாய்க்கும், கமலப்போது கைக்கும் முகத்துக்கும் உவமையாகக்கொள்க. நெய்தல்முதலிய மூன்றற்கும் கைகள் முதலியவற்றை யுவமித்துச்சொன்னதனால் இது எதிர் நிரணிறையெனப்படும்.

869. பந்தியம் புரவிநின்றும் பாரிடை யுழிந்தோர்வாசக்
கொந்தள பாரஞ்சோரக் குலமணிக் கலன்கள்சிந்தச்
சந்தநுண்டுகிலும் வீழத் தளிர்கையா லணைத்துச்சார
வந்தது வேழமென்ன மயிலென விரியல்போவார்.

(இ-ள்.) பந்தி-வரிசையாய்ச் செல்லுகின்ற, அம்புரவிநின்றும் - அழகிய குதிரைகளினின்றும், பார் இடை இழிந்தோர் - பூமியிலிறங்கின மாதர்கள், வேழம்சார வந்தது என்ன-யானை நெருங்கவந்ததென்று (கண்டோர்) (சொல்லக்கேட்டு,) வாசம்-பரிமளமுள்ள, கொந்தளபாரம்சோர - பூங்கொத்தையணிந்த அளகபாரம் சரியவும், குலம் - உயர்வாகிய, மணி - ரத்நங்களிழைத்துச் செய்யப்பட்ட, கலன்கள் - ஆபரணங்கள், சிந்த-சிதறவும், சந்தம் - அழகாகிய, நூண் துகிலும் - நுண்ணிய ஆடையும், வீழ - வீழவும், தளிர்க்கையால் அணைத்து - (அவைகளை விழவொட்டாமல்) தளிர்போன்ற கைகளால் அணைத்துக்கொண்டு, மயில் என - மயில்போல, இரியல் போவார் - சிதறியோடுவார்கள்—எ-று. (௬௯)

அணைத்தலைத்துகிலைச் சாரவைத்தார் அணி முதலியவற்றினும் நாண் சிறந்ததென்பது விளங்குதற்கு. "தாயிற்சிறந்தன்றுநாண்" எனவும், "என்கண் மணிபோன்றொருநாள் பிரியா துயிரிற்பழகி யுடன்வளர்ந்த வருநாண்" எனவும் பிறரு மிவ்வாறு கூறுதல் காண்க.

870. குடையொடு களிறுந்தொங்கற் குழாங்களுங் கொடியின்காடும்
இடையிடை மயங்கியெங்கும் வெளிகரந் திருளைச்செய்யப்
படைகளு முடியும்பூணும் படர்வெயில் பரப்பிச்செல்ல
இடையொரு கணத்தினுள்ளே யிரவுண்டு பகலுமுண்டே.

(இ-ள்.) குடையொடு-குடைகளோடு, களிறும்-யானைகளும், தொங்கல் குழாங்களும் - பீலிக்குஞ்சத்தொகுதிகளும், கொடியின்காடும் - கொடிக்காடுகளும், இடையிடைமயங்கி - இடையிடையேகலந்து, எங்கும் - எவ்விடத்தும், வெளிகரந்து-ஆகாயத்தைமறைத்து, இருளைச்செய்ய - இருளையுண்டாக்குதலாலும், படைகளும் - ஆயுதங்களும், முடியும் - முடிகளும், பூணும் - ஆபரணங்களும், படர்வெயில் - பரந்த வெயிலை, பரப்பிச்செல்ல - பரப்பிச்செல்லுதலாலும், இடை - அவ்விடத்தில், ஒரு கணத்தினுள்ளே - ஒருகாலத்திற்றானே, இரவுண்டு-இரவும் உளது, பகலும் உண்டு-பகலுமுளது—எ-று. (௭௰)

ஏ - அசை. கணம் இவ்விடத்துக் காலத்தை யுணர்த்திற்று. குடை முதலிய இருளையுண்டாக்குதலாலும், படைமுதலிய வெயிலையுண்டாக்குதலாலும் இரவும பகலும் ஒருகாலத்திற்றானே யுண்டாயினவென்பது கருத்து. பகலும் என்னும் உம்மை இறந்தது தழிஇயதனோடு உயர்வுசிறப்பில் வந்தது.

871. முருக்கிதழ் முத்தமூரல் முறுவலார் முகங்களென்னும்
திருக்கிளர் கமலப்போதிற் றீட்டின கிடந்த கூர்வாள்
நெருக்கிடை யறுக்கும்நீர்க ணீங்குமி னீங்குமென்றென்
றருக்கனி லொளிருமேனி யாடவ ரகலப்போவார்.

(இ-ள்.) அருக்கனில் - சூரியனைப்போல, ஒளிரும் - பிரகாசிக்கிற, மேனி - சரீரத்தையுடைய, ஆடவர் - புருடர்கள், முருக்கு இதழ்-முருக்கம்பூப்போன்ற இதழையும், முத்தம்மூரல் - முத்துப்போன்ற பற்களையும், முறுவலார் - நகையையுமுடைய மாதரது, முகங்கள் என்னும் - முகங்களென்கிற, திருகிளர் - அழகு விளங்காநின்ற, கமலப்போதில் - தாமரைமலரில், தீட்டின கிடந்த-தீட்டப்பட்டுக் கிடந்தனவாகிய, கூர்வாள் - கூரிய வாள்கள், நெருக்கு-ஆடவரது நெருக்கத்தை, இடை அறுக்கும்-இடையே புகுந்தறுக்கும், நீர்கள் - நீங்கள், நீங்குமின் நீங்குமின் என்று என்று - விலகுங்கோள் விலகுங்கோள் என்று பலகாற் சொல்லி, அகலப்போவார் - தூரத்திற் போவார்கள்—எ-று. (௭௧)

நீர்கள் என்பதில் கள் இசைநிறைக்கண்வந்தது. இது, "மேவித்தொழுதுய்மி னீர்கள்" என்னும் ஆழ்வாரருளிச்செயலினுங் காண்க. "எழிற்கொம்பரன்னீர்கள்" எனப் பிறருங்கூறுப. அடுக்கிரண்டனுள் முன்னையது அச்சப்பொருட்டு, பின்னையது ஒருதொழில் பலகானிகழ்தற்பொருட்டு.

872. நீந்தரு நெறியினுற்ற நெருக்கினுற் சுருக்குண்டற்றுங்
காந்தின மணியுமுத்துஞ் சிந்தின கலாபஞ்சூழ்ந்த
பாந்தளி னல்குலார்தம் பரிபுரம்புலம்பப் பைம்பொற்
பூந்தளி ருறைப்பமாழ்கிப் போக்கரி தென்னநிற்பார்.

(இ-ள்.) நீந்து அரு - கடத்தலருமையாகிய, நெறியின்-வழியில், உற்ற-மிகுந்த, நெருக்கினால் - நெருக்கத்தினால், சுருக்குண்டு-சுருங்கி, அற்று-அறுந்து, காந்து-பிரகாசியாநின்ற, இனம் - கூட்டமாகிய, மணியும் - மணிகளும், முத்தும்-முத்துகளும், சிந்தின - சிதறிக்கிடப்பவை, கலாபம்சூழ்ந்த - கலாபத்தைச் சூழவணிந்த, பாந்தளின் அல்குலார் - பாம்பின் படத்தையொத்த அல்குலையுடையார், தம்பரிபுரம் புலம்ப - தமது காற்சிலம்பொலிக்க, பைப பொன் - பசுமையாகிய பொன்னணியணிந்த, பூதளிர் - பொலிவையுடைய தளிர்போன்ற பாதங்களில், உறைப்ப-உறுத்த, மாழ்கி-மயங்கி, போக்கு - (அதில்) நடந்துபோதல், அரிது என்ன - அருமையாமென்று, நிற்பார் - நிற்பார்கள்—எ-று. (௫௮)

சிந்தினமணியுமுத்தும் பாதங்களில் உறுத்துவதனால் அவற்றின்மேல் நடத்தலரிதென்று மயங்கி நிற்பார்களென்பது கருத்து. பைம்பொன் பூந்தளிர் என்றமையால் பாதங்களை யுணர்த்திற்று. பூதளிர் - தாமரை மலரையொத்த தளிர் எனினுமாம். அழகாகிய தளிர் என்றலுமொன்று. கலாபம் பதினறு கோவைமணி இது மாதரிடையணியுளொன்று நீந்துமுதனிலைத் தொழிற்பெயர். போக்கு முதனிலை திரிந்த தொழிற்பெயர்.

873. கொற்றபல் லியங்களெங்குங் கொண்டலிற் றுவைப்பப்பண்டிப்
பெற்றவே றன்னப்புள்ளிற் பேதையர் வெருவிநிங்க
முற்றுறு பரங்க ளெல்லா முறைமுறை பாசத்தோடும்
பற்றற வீசியேகி யோகியிற் பரிவுதீர்ந்த.

(இ-ள்.) கொற்றம் - வெற்றியமைந்த, பல் இயங்கள் - பல வாத்தியங்கள், எங்கும் - எவ்விடத்தும், கொண்டலின் - மேகத்தைப்போல, துவைப்பு முழங்குவதனால், பண்டி - பண்டியிற்கட்டின, பெற்றம் ஏறு - எருதுகள், அன்னம்புள்ளின் - அன்னப்பறவைகள்போல, பேதையர் - மாதர்கள், வெருவி நீங்க-அஞ்சி நீங்கும்படி, முற்றுறுபரங்கள் எல்லாம்-(தம்மேற்சுமத்திய) நிறைந்த பாரங்களையெல்லாம், முறைமுறை - வரிசைவரிசையாக, பாசத்தோடும்-பாசத்துடன், பற்று அறவீசி-தொடர்பு இல்லாமல் சேதித்து, ஏகி - போய், யோகியின் - யோகியைப்போல, பரிவுதீர்ந்த-வருத்தந்தீர்ந்தன—எ-று. (௫௯)

பெற்றவேறு அன்னப்புள்ள என்பன இருபெயரொட்டுப் பண்புத்தொகைகள். யோகிக்குப்பரங்கள் முயற்சிகள். பாசம் எருதுக்குக் கயிறும் யோகிக்கு ஆசையும். பரிவு தீர்தலாவது எருதுக்குச் சுமைத்துன்ப நீக்கமும் யோகிக்குப் பிறவித்துன்ப நீக்கமுமாம்.

874. காற்செறி வேகப்பாகர் கார்முக வுண்டைபாரா
வார்ச்சிறைக் கொங்கையன்ன கும்பமு மருப்புங்காணப்

பாற்செறி கடலிற்றேன்றும் பணைக்கைமால் யானையென்ன
நீர்ச்சிறை பற்றியேரு நின்றகுன் றனையவேழம்.

(இ-ள்.) குன்று அனையவேழம்-மலையையொத்த யானைகள், கால்செறிவேகம் - காற்றைப்போலும் வேகத்தையுடைய, பாகர்-பாகர்களுடைய, கார்முகம் உண்டை - வில்லுண்டையை, பாரா-மதியாமலும், நீர்ச்சிறை - நீரணையை, பற்றி ஏறு - பற்றி யேறுமலும், (மாதரது) வார் - வாராகிய, சிறை-சிறையிலமைந்த, கொங்கை அன்ன- கொங்கைகளையொத்த, மத்தகமும் - கும்பமும், மருப்பும் - கொம்புகளும், காண- தோன்றும்படி, பால்செறி - பால்மிகுந்த, கடலில் - கடலினிடத்து, தோன்றும் - தோன்றிய, பணை - பருமையாகிய, கை - தும்பிக்கையையுடைய, மால் - பெரிய, யானை என்ன-ஐராவதம்போல, நின்ற - நின்றன.

கும்பமும் கொம்பும் வெளியே தோன்றும்படி நீரிலமிழ்ந்திநின்ற யானைகள் பாற்கடலினின்றும் தோன்றிய ஐராவதம்போன்றிருந்தனவென்பது கருத்து.

875. அறலியற் கூந்தற்கண்வா ளமுதுகு குமுதச்செவ்வாய்
விறலிய ரோடுநல்யாழ்ச் செயிரியர் புரவிமேலார்
நறைசெவிப் பெய்வதென்ன நனைவளர் மேகப்பாடல்
முறைமுறை நணுகப்போனார் கின்னர மிதுனமொப்பார்.

(இ-ள்.) அறல் இயல் - கருமணலி வியற்கையமைந்த, கூந்தல் - கூந்தலையும், கண்வாள் - கண்களாகிய வாள்களையும், அமுதுகு-(சொல்லாகிய) தேன் சிந்துகிற, குமுதம் - செவ்வல்லி மலர்போன்ற, செவ்வாய் - செவந்த வாயையுமுடைய, விறலியரோடு - பாடுவிச்சிகளோடு, நல்யாழ் - நல்ல யாழ் வாசிப்போராகிய, செயிரியர்- செயிரியர்கள், புரவிமேலார் - குதிரைமேலேறினவர்களாகி, கின்னரமிதுனம் ஒப்பார் - கின்னரமிதுநப் பறவைகளையொத்து, நறை - தேனை, செவி - காதுகளில், பெய்வது என்ன - வார்ப்பதுபோல, (பாடுகின்ற) நனைவளர்-குளிர்ச்சிமிக்க, மேகப் பாடல்-மேகராகக் குறிஞ்சிப்பாடல், முறை முறை நணுக - முறைமுறையாகப் பொருந்த, போனார் - சென்றார்கள்—எ-று. (௬௧)

வெவ்விய கோடைக்காலத்துப் பாடினும் மேகங்களைக்கூட்டி மழை பெய்விக்க வல்லதாதலால் நனைவளர் மேகப்பாடல் என்றார். செயிரியர் பாணரிலொருசாரார்.

876. அருவிபெய் வரையிற்பொங்கி யங்குச நிமிரவெங்கும்
இரியலிற் சனங்கள்சிந்த விளங்களிச் செங்கண்யானை
விரிசிறைத் தும்பிவேறோர் வீழ்மதந் தோய்ந்துமாதர்
சுரிகுழல் படியவேற்றின் பிடியொடுந் தொடர்ந்துசெல்ப.

(இ-ள்.) இளங்களிச் செங்கண்யானை - இளமையும் களிப்புமுள்ள செவந்தகண்களையுடைய யானைகள், அருவிபெய் - அருவிகளைப்பொழிகிற, வரையின்-மலையைப் போல, பொங்கி - மதநீரையொழுக்கி, அங்குசம் நிமிர - (தம்மைக் குத்துகிற) அங்குசமானது வளைவுதீரச்சென்று, எங்கும் - எவ்விடத்தும், இரியலின் - ஓடுவதனால், சனங்கள் சிந்த - ஜநங்கள் சிதறியோட, விரிசிறை - விரிந்த சிறைகளையுடைய, தும்பி - வண்டுகள், வேறு ஓர் வீழ்மதம்தோய்ந்து - வேறொரு யானையின்மதத்திற் படிந்து, மாதர் - மகளிருடைய, சுரிகுழல்படிய - சுரிந்த கூந்தல்களில் மொய்க்க, வேற்றின் பிடியொடும் - வேறு பிடிகளோடு, தொடர்ந்து செல்ப - தொடர்ந்து போவன—எ-று. (௬௨)

வேற்றின் என்பதில் இன் அல்வழிச்சாரியை.

877. நிறைமதித் தோற்றங்கண்ட நீனெடுங் கடலிற்றாகி
அறைபறை துவைப்பத்தேரு மானையு மாடன்மாவும்
கறைகெழு வேற்கணாரு மைந்தருங் கவினியொல்லை
நெறியிடைப் படரவேந்த னேயமங்கையர்தாஞ் செல்வார்.

(இ-ள்.) நிறை - கலைகள் நிறைந்த, மதி - சந்திரனது, தோற்றம் - உதயத்தை, கண்ட - பார்த்த, நீல - நீலநிறமுள்ள, நெடு - நெடிய, கடலிற்று ஆகி - கடலையொத்தனவாகி, அறை - கொட்டப்படுகின்ற, பறை - (பேரி முதலிய) வாத்யங்கள், துவைப்ப - கொட்டப்பட்டொலிக்க, தேரும் - தேர்களும், ஆனையும் - யானைகளும், ஆடல் - வெற்றியமைந்த, மாவும் - குதிரைகளும், கறைகெழு - உதிரம்பொருந்திய, வேல் - வேல்போன்ற, கண்ணாரும் - கண்களையுடைய மாதர்களும், மைந்தரும்-ஆடவர்களும், கவினி - அழகுறக்கூடி, ஒல்லை - விரைவாக, நெறி இடைபடர - வழியிற் செல்ல, வேந்தன் - சக்ரவர்த்தியின், நேயம் - அன்புக்குரிய, மங்கையர் - மனைவியர்கள், செல்வார் - செல்வாராயினர்—எ-று. (௬௩)

தாம் - அசை. இற்று-உவமவுருபிடை யடியாகப்பிறந்த வினைக்குறிப்புமுற்று, பறை - ஜாதி யொருமையாகலின், இற்று என வொருமைவினைகொண்டது. தோற்கருவியாகிய பறையைக்கூறவே, இனமாகிய தொளைக்கருவி முதலியவும் கொள்ளப்படும்.

கைகேசி சென்றனளென்பது.

878. பொய்கையங் கமலக்கானிற் பொலிவதோ ரன்னமென்னக்
கைகையர் வேந்தன்பாவை கணிகைய ரீட்டம்பொங்கி
ஐயிரு நூறுசூழ்ந்த வாய்மணிச் சிவிகைதன்மேல்
தெய்வமங் கையருநாணத் தேனிசை முரலப்போனாள்.

(இ-ள்.) பொய்கை-தடாகத்தில் மலர்ந்த, அம்-அழகிய, கமலக்கானில்-தாமரை மலர்க்காட்டில், பொலிவது - விளங்குவதாகிய, ஓர்-ஒரு, அன்னம் என்ன - அன்னம் போல, கைகயர்வேந்தன்பாவை-கேகயதேசத்தார்க்கு அரசனாகிய உதாஜித் என்பவனுடைய புத்ரியாகிய கைகேசியானவள், ஐயிருநூறு - ஆயிரம் என்னுந் தொகை கொண்ட, கணிகையர் ஈட்டம்பொங்கி - பரத்தையர்கூட்டம் களிப்புமிகுந்து, சூழ்ந்த - சூழ்ந்துவரப்பெற்ற, ஆய் - ஆராய்ந்தெடுத்த, மணி-மணிகளாற்செய்த, சிவிகைமேல் - பல்லக்கின்மேலேறி, தெய்வமங்கையரும் - தெய்வப் பெண்களும், நாண-நாணவும், தேன் - தேன்போன்ற, இசை - இசைப்பாட்டுகள், முரல - ஒலிக்கவும், போனாள் - சென்றாள்—எ-று. (௬௪)

பாவை - உவமையாகுபெயர்.

879. காரண மின்றியேயுங் கனலெழ விழிக்குங்கண்ணார்
வீரவேத் திரத்தார்தாழ்ந்து விரிந்தகஞ் சுகத்துமெய்யார்
தாரணிபுரவி மேலார் தலத்துளார் தடித்தசொல்லார்
ஆரணங் கனையமாத ரடிமுறை காத்துப்போனார்.

(இ-ள்.) காரணம் இன்றியேயும் - காரணமில்லாமலும், கனல் எழ - தீப்பொறிகளுண்டாக, விழிக்கும் - விழித்துப் பார்க்கின்ற, கண்ணார் - கண்களையுடையவர்களும், வீரம் - வீரத்தன்மையுள்ள, வேத்திரத்தார் - பிரம்பையுடையார்களும், தாழ்ந்துவிரிந்த - நீண்டகன்ற, கஞ்சுகத்து - சட்டையையணிந்த, மெய்

யார்-சரீரத்தையுடையார்களும், தார் அணி-கிங்கிணிமாலையைத்தரித்த, புரவிமேலார் குதிரைமேலேறி வருவோர்களும், தலத்து உள்ளார்-பூமியிலிருப்பவர்களும், தடித்த சொல்லார் - உரத்தசொல்லை யுடையவர்களுமாகிய, ஆரணங்கு அனைய - தெய்வப் பெண்களையொத்த, மாதர்-மாதர்கள், அடி - அந்தக்கைகேசியின்பாதங்களை, முறை-முறைப்படி, காத்து-காத்துக்கொண்டு, போனார்-சென்றார்கள்—எ-று. (௬௫)

"காரணமின்றியேயுங் கனலெழவிழித்தல்" பிறர் அணுகாமைப்பொருட்டு.

சுமித்திராதேவி சென்றனளென்பது.

880. விரிமணித் தார்கள்பூண்ட வேசரி வெரிநிற்றோன்றும்
அரிமலர்த் தடங்கணல்லா ராயிரத் திரட்டிசூழக்
குருமணிச் சிவிகைதன்மேற் கொண்டலின் மின்னிதென்ன
இருவரைப் பயந்தநங்கை யாழிசை முரலப்போனாள்.

(இ-ள்.) விரி-ஒளிவிரிந்த, மணிதார்கள்-கிங்கிணிமணிமாலைகளை, பூண்ட-தரித்த, வேசரி-கோவேறுகழுதைகளின், வெரிநின்-முதுகில், தோன்றும் - எறிவிளங்குகின்ற, அரி-செவ்வரிபரந்த, மலர் - குவளைமலர்போன்ற, தடம்கண் - விசாலமாகிய கண்களையுடைய, ஆயிரத்திரட்டிநல்லார்-இரண்டாயிரமாதர்கள், சூழ - சூழ்ந்துவர, குரு-நிறம்பொருந்திய, மணி-நீலமணிகளாற்செய்த. சிவிகைமேல்-பல்லக்கின்மேல், கொண்டலில்-மேகத்திலுள்ள, மின்-மின்னலே, இது - இவ்வுருவாயினது, என்ன - என்றுகண்டோர்சொல்லும்படி, இருவரைபயந்த - இரண்டுபுத்திரர்களைப்பெற்ற, நங்கை-சுமித்திராதேவி, யாழ் இசைமுரல-வீணைகானம்முழங்க, போனாள்- (கேட்டுக் கொண்டே) சென்றாள்—எ-று. (௬௬)

"கொண்டலின் மின்னிதென்ன" என்றமையால் மணி என்பதற்கு நீலமணி எனப்பொருள் கூறப்பட்டது. "இருவர்" என்றது லக்ஷ்மணன், சத்ருக்நன் என்பவர்களை.

881. செங்கையில் மஞ்சையன்னஞ் சிறுகிளி பூவைபாவை
சங்குறை கழித்தவன்ன சாமரை முதலதாங்கி
இங்கல தெண்ணுங்காலிவ் வெழுதிரை வளாகந்தன்னில்
மங்கைய ரில்லையென்ன மடந்தையர் மருங்குபோனார்.

(இ-ள்.) இங்கு அல்லது-இவ்விடத்தல்லாமல், எண்ணுங்கால்-எண்ணுமிடத்து, இ-இந்த, எழுதிரை-எழுகடல்சூழந்த, வளாகந்தன்னில்-பூமியில், மங்கையர் - மாதர்கள், இல்லை என்ன-இல்லையென்னும்படி, செங்கையில்-செவந்தகைகளில், மஞ்ஞை-மயில்களும், அன்னம்-அன்னங்களும், சிறுகிளி-சிறுகிளிகளும், பூவை-நாகணவாய்ப் புட்களும், பாவை-ப்ரதிமைகளும், சங்கு உறைகழித்த அன்ன-சங்கினையுறையினின் றுங் கழித்தாற்போன்ற, சாமரை - சாமரங்களும், முதல - முதலியவற்றை, தாங்கி-ஏந்திக்கொண்டு, மடந்தையர் - இளமைப்பருவமுள்ள மாதர்கள், மருங்குபோனார் - அந்தச்சுமித்திரைக்கருகே சென்றார்கள்—எ-று. (௬௭)

வளாகம்-இடவாகுபெயர். திரை-சினையாகுபெயர். தன்-சாரியை.

கௌசலை சென்றனளென்பது.

882. வெள்ளெயிற் றிலவச்செவ்வாய் முகத்தைவெண் மதியமென்று
கொள்ளையிற் சுற்றுமீன்கள் குழுமிய வனையவூர்தி

தெள்ளரி பாண்டிபாணிச் செயிரிய ரிசைத்தேன்சிந்த
வள்ளலைப் பயந்தநங்கை வானவர் வணங்கப்போனாள்.

(இ-ள்.) சுற்றும்-ஆகாயத்திற்சுழலுகிற, மீன்கள் - நக்ஷத்ரங்கள், வெள் எயிறு-வெள்ளியபற்களையும், இலவம்- முருக்கம்பூப்போன்ற, செவ்வாய் - செவந்தவாயையுமுடைய, முகத்தை முகத்தை, வெண்மதியம் என்று-வெண்மையாகிய சந்திரனென்றுகருதி, கொள்ளையின்-மிகுதியாக, குழுமிய அனைய-மொய்த்ததையொத்த, ஊர்தி-(பலமணிகளாலமைத்த) பல்லக்கின்மேலேறி, தெள் அரி - தெளிவாகிய வண்டினிசையையொத்த, பாண்டி - பாண்டியென்னும் பண்ணையும், பாணி - இசைப்பாட்டையும்பாடுகின்ற, செயிரியர்-செயிரியர்கள், ஸ்ரீராமபிரானை, பயந்த - பெற்ற, நங்கை-கௌசலை, வானவர்வணங்க-தேவர்கள் வணங்கும்படி, போனாள்-சென்றாள்—எ-று.

நங்கை-குணபூர்த்தியுள்ளவள், வானவர் வணங்குதல் இறைவனைப்பெறுதலானென்க.

883. கூனொடு குறளுஞ்சிந்துஞ் சிலதியர் குழாமுங்கொண்ட
பானிறப் புரவியன்னப் புள்ளெனப் பாரிற்செல்லத்
தேனொடு மிஞிறும்வண்டுந் தும்பியும் தொடர்ந்துசெல்லப்
பூநிறை கூந்தன்மாதர் புடைபிடி நடையிற்போனார்.

(இ-ள்,) கூனொடு-கூனர்களோடு, குறளும் - குறளரும், சிந்தும் - சிந்தரும், சிலதியர்குழாமும்-தோழிக்கூட்டமும், கொண்ட-ஏறிய, பால்நிறம் - வெண்ணிறத்தையுடைய, புரவி-குதிரைகள். அன்னப்புள் என - அன்னப்புட்போல, பாரில் செல்ல-பூமியில் (மெல்லநடந்து)செல்ல, தேனொடு-தேன்வண்டுகளுடன், மிஞிறும்-ஞிமிறும் வண்டும்-கருவண்டுகளும், தும்பியும்-தும்பிகளும், தொடர்ந்து செல்ல - தொடர்ந்து செல்லும்படி, பூ நிரைகூந்தல்-பூமாலைகள்நிரம்பிய கூந்தலையுடைய, மாதர்-மகளிர்கள், புடை - (கௌசலையி) னிருபக்கத்தும், பிடி நடையின்போனார் - பெண்யானையின் நடைபோல நடந்து சென்றார்கள்—எ-று. ()

கூன்முதலியமூன்றும் பண்பாகுபெயர்கள். "அன்னப்புள் என" என்றதனால், செல்ல என்பதற்கு மெல்லநடந்துசெல்ல என்றனம், ஞிமிறு-பொன்வண்டு, பூகருவியாகுபெயர். அன்றிச் சினையாகுபெயர் எனினும்பொருந்தும்.

884. துப்பினின் மணியிற்பொன்னிற் சுடர்மர கதத்தின்முத்தின்
ஒப்பற வமைத்தபைம்பூ ணோவியம் புகழவேறி
முப்பதிற் றிரட்டிகொண்ட வாயிரமுகிழ்மென் கொங்கைச்
செப்பருந் திருவினல்லார் தேர்மிசை சூழப்போனார்.

(இ-ள்.) முகிழ் - குவிந்த, மெல் - மென்மையாகிய, கொங்கை - கொங்கைகளையுடைய, செப்புஅரு - புகழ்தலருமையான, திருவின் - திருமகள்போல, முப்பதிற்றிரட்டிகொண்ட ஆயிரம் நல்லார்-அறுபதினாயிரம் மாதர்கள், துப்பினின் - பவளத்தாலும், மணியின் -நீலமணியாலும், பொன்னின் - பொன்னாலும், சுடர் - காந்தியையுடைய, மரகதத்தின்-மரகதத்தாலும், முத்தின்-முத்தாலும், ஒப்பு அற - சமானமற, அமைத்த-செய்யப்பட்ட, பை பூண்-பசும்பொனாபரணங்களையணிந்த, ஓவியம்-சித்திரப்பாவைகள், புகழ-தம்மழகைக்கண்டு புகழும்படியாக, தேர்மிசை ஏறி-தேர்மேலேறி, சூழ-சூழ்ந்துவர, போனார்-சென்றார்கள்.

துப்பு முதலியவற்றாலமைத்த "ஓவியம்புகழ" என்றதனால், பலநிறத்தினர் என்றதாயிற்று. முகிழ்-தாமரையரும்பெனினுமொக்கும். செப்பு-முதனிலைத்தொழிற் பெயர்.

வசிட்டமுனிவர்சென்றனர் என்பது.

885, செவிவயி னமிர்தகேள்வி தெவிட்டினர் தேவர்நாவின்
அவிகையி னளிக்குநீரா ரையிரு கோடிசூழக்
கவிகையி னீழற்கற்பி னருந்ததி கணவன்வெள்ளைச்
சிவிகையி னன்னமூருந் திசைமுக னென்னச்சென்றான்.

(இ-ள்.) செவிவயின்-செவியினிடத்தில், அமுதம்-அமிர்தத்தையொத்த, கேள்வி ஞானக்கேள்விகளை, (பலகாற்கேட்டு) தெவிட்டினர் - தெவிட்டினவர்களும், தேவர் நாவின்-தேவர்களுடையநாவில், அவி-ஆகுதியை, கையின் அளிக்கும்- தம்கையினால் கொடுக்கின்ற, நீரார்-தவத்தன்மையை யுடையவர்களும், (ஆகிய) ஐ இருகோடி-பத்துக்கோடிபேர்கள், சூழ-சூழ்ந்துவர, கவிகையின் நீழல் - குடைநிழலில், கற்பின்-கற்பினையுடைய, அருந்ததி-அருந்ததிக்கு, கணவன் - நாயகனாகிய வசிட்டமுனிவன், வெள்ளைச்சிவிகையின்- வெண்ணிறப் பல்லக்கிலேறி, அன்னம் ஊரும் - அன்னத்திலேறி நடாத்துகிற, திசைமுகன்என்ன-பிரமதேவனைப்போல,சென்றான்-போனான்.

பரதசத்ருக்நர் சென்றனரென்பது.

886. பொருகளி றிவுளிபொற்றேர் பொலங்கழற் குமரர்முந்நீர்
அருவரை சூழ்ந்ததென்ன வருகுபின் முன்னுஞ்செல்லத்
திருவளர் மார்பர்தெய்வச் சிலையினர் தேரர்வீரர்
இருவரு முனிபின்போன விருவரு மென்னப்போனார்.

(இ-ள்.) பொரு - போர்செய்தற்குரிய, களிறு - யானைகளும், இவுளி - குதிரைகளும், பொன்தேர் - பொன்னினாற் செய்யப்பட்டதேர்களும், பொலம்கழல்குமரர் - பொற்கழலணிந்த காலாட்களும், முந்நீர் - கடலானது, அரு - அளத்தற்கரிய, வரை-மலையை, சூழ்ந்தது என்ன-சூழ்ந்ததுபோல, அருகு-சமீபத்திலும், பின்முன்னும்-பின் முன்பக்கங்களிலும். செல்ல-போக, திருவளர்மார்பர்- திருமகளுறைகின்ற மார்பையுடையார்களும், தெய்வச்சிலையினர்-தெய்வத்தன்மை யமைந்த வில்லையுடையார்களும், தேரர்-தேரையுடையார்களும், வீரர்-வீரர்களுமாகிய, இருவரும்- பரதசத்ருக்நரிருவரும், முனிபின்போன - விசுவாமித்திரமுனிவன்பின்போன. இருவரும் என்ன-ராமலக்ஷ்மணர்களாகிய இருவரையும்போல, போனார்- (பிரியாமல்) போனார்கள்—எ-று. (எஉ)

திருவளர் மார்பர் என்பது விளக்கமுதலியபற்றி யரசர்க்குப் புனைந்துரைவகையாற் கூறுவதோர் மரபு.

தசரதசக்ரவர்த்தி சென்றனரென்பது.

887. நித்திய நியமமுற்றி நேமியான் பாதஞ்சென்னி
வைத்தபின் மறைவலோர்க்கு வரப்பறு மணியும்பொன்னும்
பத்தியா னிரையும்பாரும் பரிவுட னல்கிப்போனான்
முத்தணி வயிரப்பூணான் மங்கல முகூர்த்தநன்னாள்.

(இ-ள்.) முத்து அணி-முத்துமாலையையணிந்த, வயிரப்பூணன் - வயிரப்பூணைப் பூண்டவனாகிய சக்ரவர்த்தி, நித்தியநியமம் முற்றி-நாடோறுஞ்செய்தற்குரிய நியமங்களைமுடித்து, நேமியான் - திருவாழியையுடையவனாகிய ஆயிரமோலிப்பெருமானுடைய, பாதம்-திருவடிகளை, சென்னிவைத்தபின் - சிரசிற்றரித்துக்கொண்டபிறகு, மறைவல்லோர்க்கு-பிராமணர்களுக்கு, வரம்பு அறு-அளவற்ற, மணியும்- ரத்நங்களையும், பொன்னும்-சுவர்ணத்தையும், பத்தி-வரிசையாகிய, ஆனநிரையும்-பசுக்கூட்டத்தையும், பாரும்-நிலங்களையும், பரிவுடன்-அன்போடு, நல்கி-கொடுத்து, மங்கலமுகுர்த்தம்-சுபமுஹூர்த்தமாகிய, நல்நாள்-நல்லவோரையில், போனான்-சென்றான்.

நாள் முதலாகுபெயர்.

888. இருபிறப் பாளரெண்ணா யிரர்மணிக் கலசமேந்தி
அருமறை வருக்கமோதி யறுகுநீ ரளித்துச்சூழ
வரன்முறை வந்தார்கோடி மங்கலமழலைச் செவ்வாய்ப்
பருமணிக் கலாபத்தார்பல் லாண்டிசை பரவப்போனான்.

(இ-ள்.) இருபிறப்பாளர்-பிராமணர்கள், எண்ணாயிரர்-எண்ணாயிரம்பேர், மணி கலசம் ஏந்தி-ரத்நங்களாலமைத்த பூர்ணகும்பங்களைத்தாங்கி, அருமறை - அருமையாகியவேதங்களின், வருக்கம் ஓதி-(அந்தச்சமயத்திற்குசிதமான) வருக்கத்தை அத்யயநம்பண்ணி, அறுகுநீர் அளித்து- அறுகம்புல்லால் நீரைத்தெளித்துக்கொண்டு, சூழ-சுற்றிலும், வரன்முறை - வரன்முறையாக, வந்தார்-வந்தார்கள், கோடி - கோடியென்னுந்தொகையைக்கொண்ட, மங்கலம்-மங்களமான, மழலை-மழலைச்சொற்களையும், செவ்வாய்-செவந்தவாயையும், பருமணி-பெரியமணிகளாற்செய்யப்பட்ட, கலாபத்தார்-கலாபத்தையுமிடையமாதர்கள், பல்லாண்டுபாடும் ஓசை, பரவ-எங்கும்வியாபிக்க, போனான்-சென்றான்-எ-று.

இருபிறப்பாளர்-உபநயநத்திற்குமுன்னொருபிறப்பும்; பின்னொருபிறப்புமாகிய இருபிறப்புடையராயுள்ள அந்தணர், அரசர், வணிகர் என்னும் முதன்மூன்றுவருணத்தார்; அவருள் இவ்விடத்துக் கேற்புடையார் அந்தணராதலறிக. வருக்கம் வேதசாகையினுட்பிரிவு.

889. கண்டில னென்னையென்பார் கண்டன னென்னையென்பார்
குண்டலம் வீழ்ந்ததென்பார் குறுகரி தினிச்சென்றென்பார்
உண்டுகொ லெழுச்சியென்பா ரொலித்தது சங்கமென்பார்
மண்டல வேந்தர்வந்து நெருங்கினர் மயங்கவென்பார்.

(இ-ள்.) (அரசரிற்சிலர்) என்னைகண்டிலன் என்பார் - என்னைப்பார்த்திலனென்பார்கள், (சிலர்) என்னைகண்டனன் என்பார் - என்னைப்பார்த்தான் என்பார்கள், (சிலர்) குண்டலம்வீழ்ந்தது என்பார் - நமது குண்டலம் விழுந்ததென்பார்கள், (சிலர்) இனி-இனி, சென்று-போய்; குறுகு அரிது என்பார் - (அரசனை) கிட்டுதலருமையாமென்பார்கள், (சிலர்) எழுச்சி உண்டுகொல் என்பார் - புறப்பாடுளதோவென்பார்கள், (சிலர்) சங்கம் ஒலித்தது என்பார்-மங்கலச்சங்கம் முழங்கினதென்பார்கள், (சிலர்) மண்டலவேந்தர்-மண்டலாதிபர்கள், வந்து - (தத்தமிடங்களைவிட்டு) வந்து, மயங்க-கலங்க, நெருங்கினர் என்பார்-நெருங்கினார்களென்பார்கள்-எ-று.

குறுகு-முதனிலைத்தொழிற்பெயர். கொல்-ஐயம். இத்திருவிருத்தத்தால் தசரதனது சக்ரவர்த்தித்வம் விளங்குகின்றது.

890. பொற்றொடி மகளிரேறும் பொலன்கொடார்ப் புரவிவெள்ளம்
சுற்றுறுகமலம் பூத்த தொடுகடற் றிரையிற்செல்லக்
கொற்றவேன் மன்னர்செங்கைப் பங்கயக்குழாங்கள் கூப்ப
மற்றொரு கதிரோனென்ன மணிநெடுந் தேரிற்போனான்.

(இ-ள்.) பொன்தொடி - பொன்வளையலையணிந்த, மகளிர் - மாதர்கள், ஏறும்- ஏறிவருகின்ற, பொலன்கொள்தார்-பொன்வேலையைக்கொண்ட கிங்கிணிமாலையை யணிந்த, புரவிவெள்ளம் - குதிரைக்கூட்டம், சுற்று உறு-சுற்றிலும்பொருந்திய, கமலம்பூத்த-தாமரைமலர்கள்பூத்த, தொடு-சகரர்களால்தோண்டப்பட்ட, கடல்-கடலினது, திரையின் - அலைகளைப்போல, செல்ல-இருபுறத்திலும் செல்லாநிற்க, கொற்றம்-வெற்றிதங்கிய; வேல் - வேலையுடைய, மன்னர் - அரசர்கள், செங்கை-செவந்த கைகளாகிய, பங்கயக்குழாங்கள் - தாமரைமலர்க்கூட்டங்களை, கூப்ப-குவியாநிற்க: மற்றொருகதிரோன் என்ன - வேறொருசூரியனைப்போல, மணி - ரத்நங்களிழைத்த, நெடு-நெடிய, தேரில்-தேர்மேலேறி, போனான்-சென்றான் —எ-று. (எ௬)

"கைப்பங்கயங்கள் கூப்ப" என்றதற்கேற்ப, மற்றொருகதிரோன் என்றார். "கமலம்பூத்த" என்றது - மாதர்முகங்கள்களித்து நிறைந்த என்றபடி. கமலம்பூத்த கடல்-இல்பொருளுவமை.

891. ஆர்த்தது விசும்பைமுட்டி மீண்டகன் றிசைகளெங்கும்
போர்த்ததங் கொருவர்தம்மை யொருவர்கட் புலங்கொளாமை
சீர்த்தது செறிந்ததோடித் திரைநெடுங் கடலையெல்லாம்
தூர்த்தது சகரரோடு பகைத்தெனத் தூளிவெள்ளம்.

(இ-ள்.) தூளிவெள்ளம் - சேனாபராகம், ஆர்த்தது - நிறைந்தது, (அன்றியும்) விசும்பை-மேலுலகத்தை, முட்டி-தீண்டி, மீண்டு-திரும்பி, அகல்-விசாலமான, திசைகள் எங்கும் - திசைகளையெல்லாம், போர்த்தது - மூடிக்கொண்டது, அங்கு - அவ்விடத்து, ஒருவர்தம்மைஒருவர்-ஒருவரையொருவர், கண்புலம்கொள்ளாமை-கண்ணினாற்பார்க்கக்கூடாமல்; சீர்த்தது - மிகுந்தது, செறிந்தது-நெருங்கிற்று, சகரரோடு-சகரர்களுடன், பகைத்தென - பாகைத்தாற்போல, ஓடி-விரைவாய்ச்சென்று, திரைநெடுகடலை எல்லாம் - அலைகளையுடைய நெடியகடல்களையெல்லாம், தூர்த்தது-தூர்த்துவிட்டது—எ-று. (எஎ)

"தூளிவெள்ளம்" என்னும் எழுவாய், "ஆர்த்தது" முதலியபயனிலைகளைத் தனித்தனிகொண்டுமுடிந்தது. தம்-சாரியை. தோண்டினவர் ஆதலால், "சகரரோடு பகைத்தென" என்றார்,

892. சங்கமும் பணையுங்கொம்புந் தாளமுங் காளத்தோடு
மங்கல பேரிசெய்த பேரொலி மழையையோட்டத்
தொங்கலுங் குடையுந்தோகைப் பிச்சமுஞ் சுடரையோட்டத்
திங்கள்வெண் குடைகண்டோடத் தேவரு மருளச்சென்றான்.

(இ-ள்.) சங்கமும் - சங்குகளும், பணையும்-வேயங்குழல்களும், கொம்பும்-ஊதுகொம்புகளும், தாளமும்-தாளங்களும், காளத்தோடு - சிறுசின்னங்களோடு, மங்கல பேரி - மங்கலபேரிகளும், செய்த - உண்டாக்கின, பேரொலி-பேரோசையானது, மழையை-மேகமுழக்கத்தை, ஓட்ட-அடக்கவும், தொங்கலும் - பீலிக்குஞ்சங்களும், குடையும் - குடைகளும், தோகைபிச்சமும் - மயிற்றோகையாற் செய்தகுடைகளும்,

சுடரை ஓட்ட - சூரியகிரணங்களை மழுங்கச்செய்யவும், வெண்குடைகண்டு-வெண்குடைகளைப்பார்த்து, திங்கள்-சந்திரன்; ஓட-விரைந்துசெல்லவும், தேவரும்-தேவர்களும், மருள-மயங்கவும், சென்றான்-போனான்—எ-று. (எஅ)

"திங்கள் வெண்குடை கண்டோட" என்றதனால், மழை சுடர்களினும் சந்திரன் அறிவுடையான் என்பது விளங்காநின்றது.

893. மந்திர கீதவோதை வலம்புரி முழங்குமோதை
அந்தண ராசியோதை யார்த்தெழு முரசினோதை
கந்துகொல் களிற்றினோதை கடிகையர் கவிதையோதை
இந்திர திருவன்செல்ல வெழுந்தன திசைகளெங்கும்

(இ-ள்,) இந்திரன் திருவன்-இந்திரனதுசெல்வம்போன்ற செல்வத்தையுடைய சக்ரவர்த்தி, செல்ல - செல்லாநிற்க, மந்திரகீதம் ஓதை - வேதமந்த்ரகீதவோசையும், வலம்புரி-வலம்புரிச்சங்குகள், முழங்கும்-முழுங்குகின்ற, ஓதை-ஓசையும், அந்தணர்-அந்தணர்கள் கூறும், ஆசி - மங்களாசாஸநங்களின், ஓதை-ஓசையும், ஆர்த்து எழு-ஆரவாரித்தெழுகின்ற, முரசின் ஓதை-முரசங்களினோசையும், கந்து-கட்டுத்தறியை, கொல் - முறிக்கின்ற, களிற்றின் - யானைகளின், ஓதை-ஓசையும், கடிகையர்-கடிகைமாக்களது, கவிதை - மங்கலக்கவிகளின், ஓதை-ஓசையும், திசைகள் எல்லாம்-திக்குகளிலெல்லாம், எழுந்தன-அதிகப்பட்டொலித்தன—எ-று. (எக)

செல்ல எழுந்தன என வினைமுடிக்க.

894. நோக்கிய திசைகளெல்லாந் தன்னையே நோக்கிச்செல்ல
வீக்கிய கழற்கால்வேந்தர் விரிந்தகைம் மலர்கள்கூப்பத்
தாக்கிய களிறுந்தேரும் புரவியும் படைஞர்தாளும்
ஆக்கிய தூளிவிண்ணு மண்ணுல காக்கப்போனான்.

(இ-ள்.) நோக்கிய - தான்பார்த்த, திசைகள் எல்லாம்-திக்குகளிலுள்ளோரெல்லாம், தன்னையேநோக்கிசெல்ல-தன்னையேபார்த்துக்கொண்டு செல்லவும், வீக்கிய-கட்டிய, கழல்-வீரக்கழலுள்ள, கால்-கால்களையுடைய, வேந்தர்-அரசர்கள், விரிந்த-பரந்த, கைமலர்கள் - கைகளாகியதாமரைமலர்களை, கூப்ப - குவிக்கவும், தாக்கிய-ஒன்றோடொன்றுதாக்குகின்ற, களிறும் - யானைக்கால்களும், தேரும் - தேர்க்கால்களும், புரவியும்-குதிரைக்கால்களும், படைஞர்-காலாட்களின், தாளும்-கால்களும், ஆக்கிய - உண்டாக்கிய, தூளி-தூளியானது, விண்ணும்-விண்ணுலகத்தையும், மண்ணுலகு-மண்ணுலகமாக, ஆக்க-செய்யவும், போனான்-சென்றான்—எ-று. (அ0)

தேர்க்கால்-தேர்ச்சக்கரம். கால் இப்பொருட்டாதல் "சகடக்கால்போலவரும்" என்பதனாலும் உணர்க. சக்கரம் தேர்நடத்தற்குக் கால்போறலின், அதனைக்கால் என வழங்குப.

895. வீரருங் களிறுந்தேரும் புரவியு மிடைந்தசேனை
பேர்விட மில்லைமற்றோ ருலகில்லை பெயர்க்கலாகா
நீருடை யாடையாளு நெளித்தனள் முதுகையென்றால்
பார்பொறை நீக்கினனென் றுரைத்ததெப் பரிசுமன்றே.

(இ-ள்.) வீரரும்-காலாள்களும், களிறும்-யானைகளும், தேரும்-தேர்களும், புரவியும்-குதிரைகளும், மிடைந்த - நெருங்கின, சேனை-சேனைகள், பேர்வு-நிலைபெயர்தற்குரிய, இடம் இல்லை - பூமியிலிடமில்லை, மற்று ஓர் உலகு இல்லை - வேறொருலகமுமில்லை, (ஆதலால்) பெயர்க்கல் ஆகா - நிலைபெயர்த்தல்கூடாது, நீர்-கடலை, உடை-உடுத்தற்குரிய, ஆடையாளும் - ஆடையாகவுடையவளாகிய பூமிதேவியும், முதுகை நெளித்தனள் என்றால் - (தாங்கமாட்டாமல்) முதுகுநெளித்தாளென்றால், (இந்தச் சக்ரவர்த்தி) பார்பொறை - பூமிக்குப்பாரத்தை, நீக்கினன் என்று - (தான்சுமந்து) நீக்கினனென்று, உரைத்தது - அறிவுடையோர் சொன்னது, எ பரிசு-எவ்வண்ணம்.

இவ்வாறு கூறுதல் அளவற்றசேனைகளையுடையான் என்பது விளங்குதற்கு.

896. இன்னண மேகிமன்னன் யோசனை யிரண்டுசென்றான்
பொன்வரை போலுமிந்து சயிலத்தின் சாரல்புக்கான்
மன்மதக்களிறுமாதர் கொங்கையு மாரனம்பும்
தென்வரைச் சாந்துநாறுஞ் சேனையு மிறுத்ததன்றே,

(இ-ள்.) இன்னணம் - இவ்வண்ணமாக, ஏகி - போய், மன்னன் - சக்ரவர்த்தி, யோசனை இரண்டுசென்றான் - இரண்டுயோசனைதூரத்தைக்கடந்தவனாய், பொன்வரைபோலும்-பொன்மலைபோல்கின்ற, இந்துசயிலத்தின்-சந்த்ரசைலத்தின், சாரல்-சாரலில், புக்கான் - பிரவேசித்தான். மன்மதக்களிறும் - மன்மதனது யானையும், மாதர் - மாதர்களுடைய, கொங்கையும் - கொங்கைகளும், மாரன் அம்பும் - மன்மத பாணங்களும், தென்வரைசாந்தும்-பொதியமலைச் சந்தனமும், நாறும்-விளங்குகின்ற, சேனையும்-சேனையும், இறுத்தது-இறங்கியது—எ-று. (அ௨)

மன்மதக்களிறு - இருள், அது கூந்தலையுணர்த்திநின்றது. மாரன் அம்பு-மலர். மாரன்மன்மதககளிறும் அம்பும் என்நிறுத்தி, மன்மதனது நிலைபெற்றமதத்தையுடைய யானையும் பாணங்களும் எனப்பொருள்கூறினுமிழுக்காது. மாதர்களுடைய கூந்தல்மலரையும், கொங்கைகள் சந்தனத்தையுங்கொண்டு பரிமளியாநின்ற சேனை இறங்கிற்று என்பது இதன்கருத்து. அன்று ஏ அசைகள்.

கச-வது. எழுச்சிப்படலம் முற்றும்.

# கரு-வது. வரைக்காட்சிப்படலம்.



சந்திரசைலத்தைக் கண்டதைக்குறித்துச் சொல்லும்படலம்.



897. கோவையார்வடக் கொழுங்வ டொடிதர நிவந்த
ஆவிவேட்டன வரிசிலை மனங்கன்மேற் கொண்ட
பூவைவாச்சியர் முலைசிலர் புயத்தொடும் பூட்டத்
தெவதாரத்துஞ் சந்தினும் பூட்டின சில்மர்.

(இ-ள்.) கோவை-ஆகாயத்தை, ஆர்-பொருந்துகின்ற, கொழு-செழுமையாகிய, வடக்கவடு - வடதிசையிலுள்ளமேருமலை, ஒடிதர - ஒப்பாகாமல்பின்னிட, நிவந்த-உயர்ந்தன, ஆவி-தம்மேலெழுதிய தொய்யிலுலரும்படி) அகிற்புகையை, வேட்டன.

விரும்பின, வரி - கட்டமைந்த. சிலை-கரும்புவில்லையுடைய, அனங்கன்-மன்மதனுரு வத்தை, மேற்கொண்ட - மேற்புறத்திற்கொண்டன, (ஆகிய) பூவை - நாகணவாய்ப் புள்ளின் சொல்லையொத்த, வாய்ச்சியர்-சொல்லையுடையமாதர்கள், முலை-கொங்கை களை, சிலர்புயத்தொடும் - சில ஆடவர்களுடைய புயங்களோடும், பூட்ட - அணைக்க, கோவை - தொடர்ச்சியை, ஆர் - பொருந்திய, வடம்-ஆலமரத்தினது, கொழுகவடு-செழியகிளைகள், ஒடிதர-ஒடிய, நிவந்த - உயர்ந்தன, ஆவி-தடாகத்தை, வேட்டன-விரும்பின, வரிசிலை அநங்கன்-வரிசிலையநங்கனையொத்த ஆடவனை, மேற்கொண்ட-தம்மேற்கொண்டன, (ஆகிய) சிலமா - சிலயானைகள், தேவதாரத்தும்-தேவதாரமரங் களினும், சந்தினும்-சந்தனமரங்களினும், பூட்டின-கட்டப்பட்டன —எ-று, (௬)

"முலை சிலர் புயத்தொடும்பூட்ட" என்றது யானைகளின்மேலிருக்கிற மாதர்களை ஆடவர்கள் தங்கள்கைகளை நீட்டியிறக்குங்கால், தம்புயங்களில் அம்மாதர்களுடைய கொங்கைகள் தாக்குதலை. அனங்கன் உவமையாகுமெயர்.

898. நேரொடுங்கலில் பகையினை நீதியால் வெல்லும்
சோர்விடம்பெறு வுணர்வினன் சூழ்ச்சியே போல
வாரொடுந்தொடர் கவட்டொடு மராமரக் குவட்டை
வேரொடுங்கொடு கிரியென நடந்ததோர் வேழம்

(இ-ள்.) ஓர்வேழம் - ஒருயானையானது, நேர்-நேராக, ஒடுங்கல் இல்-அடங்குத லில்லாத, பகையினை-பகைவனை, நீதியால் வெல்லும்-நீதியால்வெல்லுகின்ற, சோர்வு இடம்பெறு - மறப்பானது இடம்பெறாத, உணர்வினன் - அறிவையுடையானது, சூழ்ச்சிபோல - ஆராய்ச்சியைப்போல, வாரொடும் - (தான்) வாரினால், தொடர் - கட்டுண்ட, கவட்டொடு-கிளையுடன், மராமரக்குவட்டை-மராமரத்தின்வளாரையும், வேரொடும்கொடு-வேருடன்கொண்டு, கிரி எனநடந்து-மலைபோலநடந்தது—எ-று.

மராமரத்தை வேரொடுங் கொடு என்னாது கவட்டொடு மராமரக்குவட்டை வேரொடுங்கொடு என்றது தன்னைப்பிணித்த கவட்டையிறுத்துத், தானுண்ணற் பொருட்டு மராமரக்குவட்டை முறித்து, அவ்வளவிலமையாது அம்மரத்தையே பறித்துச், சென்றதென்ப துணர்த்தற்கு.

899. திரண்டதாணெடுஞ் செறிபணை மருதிடையொடியப்
புரண்டுபின்வர வுரலொடு போனவன் போல
உருண்டுகாறொடர் பிறகிடு தறியொடு மொருங்கே
இரண்டுமாமர மிடையிற் நடந்ததோர் யானை.

(௯-ள்.) ஓர்யானை-ஒருயானையானது, திரண்டதாள்-திரண்டபராரையையும், நெடு-நீண்ட, செறி-நெருங்கிய, பணை-கிளைகளையுமுடைய, மருது-மருதமரங்கள், இடை ஒடிய-நடுவில் முறியவும், புரண்டு பின்வர-புரண்டுபின்னேவரவும், உரலொடுபோன வன்போல - உரலோடு (அந்தமரங்களுக் கிடையே) சென்ற கண்ணபிரான்போல, உருண்டுகால்தொடர் - உருண்டுகாலைத்தொடர்ந்து, பிறகிடு-பின்னிட்டுவருகிற தறி யொடும்-கட்டுத்தறியொடும், ஒருங்கு-ஒருகாலத்தில், இரண்டுமாமரம்-இரண்டுபெரிய மரங்களில், இடை இற-நடுவில்முறியும்படி, நடந்தது-நடுவேசென்றது—எ-று.

900. கதங்கொள் சீற்றத்தை யாற்றுவா னினியனகழறிப்
பதங்கொள் பாகனு மந்திரியொத்தனன் பன்னூல்

விதங்களா லவன் மெல்லெனமெல்லென விளம்பும்
இதங்கள் கொள்கிலா விறைவனை யொத்ததோர் யானை.

(இ-ள்.) கதம்கொள் சீற்றத்தை - பெருங்கோவம் கொள்வதற்குக் காரணமாகிய சிறுகோவத்தை, ஆற்றுவான்-தணித்தற்பொருட்டு, இனியனகழறி - இனிய குறிப்புரைகளைச்சொல்லி, பதம் - (இசைந்துவரும்) பக்குவத்தில், கொள் - வசப் படுத்திக்கொள்ளுகிற, பாகனும் - பாகனும், மந்திரி ஒத்தனன் - அமைச்சனை யொத்தான், ஓர்யானை - ஒருயானையானது, (எற்குமாறு) பல்நூல்விதங்களால்-பல நூல்களின்முறை வகைகளால், அவன் - அவ்வமைச்சன், மெல்லென - மெல்லென விளம்பும் - மெல்லமெல்லப்போதிக்கிற, இதங்கள் - (உறுதிபயக்கும்) நற்பொருள் களை, கொள்கிலா - ஏற்றுக்கொள்ளாத, இறைவனை - அரசனை, ஒத்தது - ஒத்தி திருந்தது—எ-று. (ஐ)

சீற்றம் சிறிதுபோழ்து நிகழும்கோவம்,இது சிறுமைப்பண்படியாகப் பிறந்தது.

901. மாறுகாணும தாய்நின்று மழையென முழங்கும்
தாறுபாய்கரி வனகரி தண்டத்தைத் தடவிப்
பாறு பின்செலக் காலெனச்செல்வது மண்டோர்
ஆறுபோகிய வாறுபோ மாறுபோன் றதுவே.

(இ-ள்.) மாறுகாணுமதாய் நின்று - பகைகாண்பதாகிநின்று, மழையெனமுழங்கும் - மேகத்தைப்போல முழங்குகின்ற, தாறுபாய் - இருப்புமுள்ளால் குத்தப் பட்ட, கரி - ஒருயானையானது, வனகரி - வனகரியினது, தண்டத்தை - சென்ற வழியை, தடவி - கையினால் பரிசித்துக்கொண்டு, பாறு - பருந்துகள், பின்செல்ல- பின்றொடர்ந்துவர, கால்என செல்வது - காற்றைப்போலச் செல்லுவது, பண்டு - முன், ஓர் ஆறுபோகிய ஆறு - ஒருநதி சென்றவழியில், போம் - போகின்ற, ஆறு போன்றது - நதியையொத்திருந்தது—எ-று (௯)

பாறுபின்செல்ல என்றதனால் அவ்யானை பகைவரைவென்று ணவருந்துத திண்ணமென்பது விளங்கும். வனகரி தண்டத்தைதடவுதல் - மோப்பம்பிடித்தல்.

902. பாத்த யானையிற் பதங்களிற் படுமதம்நாறக்
காத்த வங்குச நிமிர்ந்திடக் கால்பிடித்தோடிப்
பூத்தவேழிலைம் பாலையைப் பொடிப்பொடி யாகக்
காத்திரங்களாற் றலத்தொடுந் தேய்த்ததோ களிறு.

(இ-ள்.) ஓர்களிறு - ஒருயானையானது, பாத்த - அணியாகப் பகுத்துக்கட்டிய, யானையின்பதங்களில் - யானைவரிசைகளில், படு - உண்டாகிய, மதம் - மதநாற்றம், நாற-வீச, காத்த - தன்னைக்காத்திருந்த, அங்குசம் - பாகன்கையங்குசமானது, நிமிர்ந்திட - நிமிர்ந்துபோக, கால்பிடித்து - மணத்தைப்பிடித்துக்கொண்டு, ஓடி - ஓடி, பூத்த மலர்ந்த, ஏழிலைம்பாலையை - ஏழிலைம்பாலையென்னுமரத்தை, பொடிபொடிஆக - பொடிப்பொடி யாகும்படி, காத்திரங்களால் - முன்னங்கால்களால், தலத்தொடும்தேய்த்து - தரையோடுந் தேய்த்துவிட்டது—எ-று. (௩०)

பகுத்த எனற்பாலது "பாத்த" என விகாரமாயிற்று. கால் ஆகுபெயர். அடுக்குமிகுப்பொருட்டு, ஏழிலைப்பாலை எனற்பாலது "ஏழிலைம்பாலை" என மெலிந்துநின்றது; இத்னைவடநூலார் சப்த பர்ணி என்ப.

903. அலகிலானைக ளனேகமு மவற்றொடு மிடைந்த
திலகவாணுதற் பிடிகளுங் குருளையுஞ் செறிந்த
உலவைநீள்வனத் தூதமே யொத்தவவ் வூதத்
தலைவனேயொத்துப் பொலிந்தது சந்திர சயிலம்.

(இ-ள்,) அலகு இல் - அளவில்லாத, ஆனைகள் அனேகமும் - அனேகமாகிய ஆண்யானைகளும், அவற்றொடுமிடைந்த - அவற்றுடனெருங்கிய, திலகம் - திலக மணிந்த, வாள் - ஒளிபொருந்திய, நுதல் - நெற்றியையுடைய, பிடிகளும் - பெண் யானைகளும், குருளையும் - கன்றுகளும், செறிந்த - அடர்ந்தன, (அவ்வடர்ச்சி) உலவைநீள் - கொம்புகள் நீண்ட, வனத்து - வனத்தில், ஊதமே ஒத்தது-யானைக் கூட்டத்தையே யொத்தது, சந்திரசயிலம் - (அந்தச்) சந்த்ரசைலமானது, ஊதத் தலைவனே ஒத்துபொலிந்தது - ஊதநாதனையே யொத்துவிளங்கினது —எ-று. ()

ஏ இரண்டும். தேற்றப்பொருளன.

904. தெருண்ட மேலவர் சிறியவர்ச் சேரினு மவர்தம்
மருண்ட தன்மையை மாற்றுவ ரெனுமிது வழக்கே
உருண்ட வாய்தொறும் பொன்னுரு ளுரைத்துரைத் தோடி
இருண்ட கல்லையுந் தன்னிற மாக்கிய விரதம்.

(இ-ள்.) தெருண்ட - தெளிந்த, மேலவர் - மேன்மக்கள், சிறியவர்ச்சேரினும் - கீழ்மக்களைச்சேர்ந்தாலும், அவர் - அவர்களுடைய, மருண்ட - மயங்கின, தன் மையை - இழிதன்மையை, மாற்றுவர் எனும் - நீக்குவார்களென்கிற, இது - இது, வழக்கே - இயற்கையே, (அதுபோல) இரதம் - தேர்கள், பொன் உருள் உருண்ட வாய்தோறும் - பொற்சக்கரங்களுருண்டு சென்றவிடமெல்லாம், உறைத்து உறை த்து - உரைத்துரைத்து, ஓடி - விரைந்துசென்று, இருண்ட - கருத்த, கல்லையும் - கற்பாறைகளையும், தன்நிறம் ஆக்கிய - தன்னிறமாகச் செய்தன—எ-று. (அ)

"சேரினும்" என்பது, சேரார் எனப் பொருடந்து நின்றதனால் உம்மை எதிர் மறைப்பொருட்டு அதுபோல என்பது இசையெச்சம். "கல்லையும்" என்னும் உம்மை இழிவுசிறப்பு.

905. கொவ்வை நோக்கிய வாய்களை யிந்திர கோபம்
கவ்வி நோக்கின வொன்றுகொல் காட்டின மயில்கள்
நவ்வி நோக்கியர் நலங்கொண்மே கலைபொலஞ் சாயற்
செவ்வி நோக்கின திரிவன போல்வன திரிந்த.

(இ-ள்.) கொவ்வைநோக்கிய - கொவ்வைக்கனியினது அழகையுடைய, வாய் களை - வாய்களை, இந்திரகோபம் - இந்த்ரகோபத்தை, கவ்விநோக்கின என்று கொல் - கவ்விய வழகையுடையனவென்றோ, காட்டு - காட்டிலுள்ள, இனம்மயில் கள் - கூட்டமாகிய மயில்கள், நவ்விநோக்கியர் - மான்போன்ற பார்வையையுடைய மாதர்களது, நலம்கொள் - அழகைக்கொண்ட, மேகலை - மேகலையின் அழகையும், பொலம்சாயல்செவ்வி பொன்மயமாகிய சாயலினழகையும், நோக்கின - நோக்கி, திரிவனபோல்வன - திரிவனவற்றை யொத்தனவாய், திரிந்த - திரிந்தன. (கூ)

மேகலைமணிகள் தம்முடைய கலாபத்தின் கண்களைப்போலவும் தம்மெய்யி லுள்ள புள்ளிகளைப்போலவுங் காணப்படுதலின், "நோக்கின" என்றார்.

906. உய்க்கும் வாசி னிழிந்தன ரன்னத்தி னொதுங்கி
மெய்க் கலாபமுங் குழைகளு மிழைகளும் விளங்கத்
தொக்க மென்மர நிழல்படத் துவன்றிய சூழல்
புக்க மங்கையர் பூத்தகொம் பாமெனப் பொலிந்தார்.

(இ-ள்.) உய்க்கும்வாசிகள் - செலுத்தப்பட்ட குதிரைகளினின்றும், இழிந்தனர் - இறங்கி, அன்னத்தின் ஒதுங்கி - அன்னத்தைப்போல நடந்து, தொக்க - அடர்ந்த, மெல் - மெல்லிய, மரம் - மரங்களின், நிழல்பட - நிழலுண்டாக, துவன்றியசூழல் - நிறைந்தவிடத்தில், புக்க - புகுந்த, மங்கையர் - மாதர்கள், மெய் - தமது சரீரத்தின்மேல், கலாபமும் - கலாபமும், குழைகளும் - குழைகளும், இழைகளும் - மற்றையணிகளும், விளங்க - பிரகாசித்தலால், பூத்த - மலர்ந்த. கொம்பு ஆம் என் - பூங்கொம்பாமென்று சொல்லும்படி, பொலிந்தார் - விளங்கினார்கள். ()

907. தளங்கொ டாமரை யெனத்தளி ரடியினு முகத்தும்
வளங்கொண் மாலைவண் டலமர வழுவருந் தினராய்
விளங்கு தம்முருப் பளிங்கிடை வெளிப்பட வேறோர்
துளங்கு பாறையிற் றோழிய ரயிர்த்திடத் துயின்றார்.

(இ-ள்.) வழி - வழிநடையால், வருந்தினராய் - வருந்தினவர்களால் - தளம் கொள் இதழ்களின் மிகுதியைக்கொண்ட, தாமரைஎன - தாமரைமலர்களென்று நினைத்து, தளிர் அடியினும் - தளிர்போன்ற பாதங்களினும், முகத்தும் - முகத்திலும், வளம்கொள் - வளத்தைக்கொண்டிருக்கிற, மாலை - வரிசையாகிய, வண்டு - வண்டுகள், அலமர - சுழலவும், விளங்கு - விளங்குகின்ற, தம் உரு - தமதுருவங்கள், பளிங்கிடை - வேறொரு, பளிக்குப்பாறையில் வெளிப்பட - தோன்றுதலால், வேறுஓர் - வேறொரு, துளங்கு - விளங்குகின்ற, பாறையில் - பளிங்குப்பாறையில், தோழியர் - தம்முடைய தோழிமார்கள், அயிர்த்திட - (இங்குத்தோன்றுகின்ற இவ்விரண்டுருக்களில் நம் தலைவியுரு எது என்று) ஐயப்படவும், துயின்றார் - நித்திரைசெய்தார்கள்—எ-று. (௧௧)

908. பிடிபுக் காவிடை மின்னொடும் பிறங்கிய மேகம்
படிபுக் காலெனப் படிதரப் பரிபுரம் புலம்பத்
துடிபுக் காவிடைத் திருமக டாமரை துறந்து
குடிபுக் காலெனக் குடிபுக்கார் கொடியன்ன மடவார்.

(இ-ள்.) மின்னொடும் - மின்னல்களோடும், பிறங்கிய - விளங்கிய, மேகம் - மேகங்கள், படிபுக்கால், என - பூமியிற்படிந்தாற்போல, ஆ இடை - அவ்விடத்தில், பிடிபுக்கு - பெண்யானைகள்புகுந்து, படிதர - பூமியிற்படிய, கொடி அன்ன மடவார் - பூங்கொடியையொத்த மாதர்கள், துடி - உடுக்கையானது, புக்கா - உவமையாகப்புகாத, இடை - இடையையுடைய, திருமகள் - திருமகள், தாமரைதுறந்து - தாமரைமலரைவிட்டு, குடிபுக்கால் என - குடிபுகுந்தாற்போல, பரிபுரம்புலம்ப - காற்சிலம்புகள் சப்திக்க, குடிபுக்கார் - குடிபுகுந்தார்கள்—எ-று.

வேறு.

909. உண்ணமுத மூட்டியிளை யோர்நகர் கொணர்ந்த
துண்ணெனு முழக்கின துருக்கர்தா வந்த
மண்மகடன் மார்பினணி வன்னசர மென்னப்
பண்ணியவ வயப்பரிகள் பந்தியி னிரைத்தார்.

(இ-ள்.) உண் - உண்ணுதற்குரிய, அமுதம் - உணவுகளை, ஊட்டி - உண்பித்து, இளையோர் - இளைஞரால், நகர் - நகரினின்றும், கொணர்ந்த - கொண்டு வரப்பட்டனவும், துண் எனும் - கேட்டோரஞ்சுகின்ற, முழக்கின - முழக்கத்தையுடையனவும், துருக்கர்தரவந்த - துருக்கர்கள் கொடுக்கவந்தனவும், (ஆகிய) பண் இயல் - கல்லணையமைந்த, வயம்பரிகள் - வெற்றியுள்ள குதிரைகளை, மண்மகள் தன்மார்பின் - பூமிதேவியின் மார்பில், அணி - அணிந்த, வன்னம் - பலநிறங்களையுடைய, சரம் என்ன-நவரத்நஹாரம்போல, பந்தியின்-வரிசை வரிசையாக, நிரைத்தார் முறையேகட்டினார்கள்—எ-று. (௩௩)

910. நீர்திரை நிரைத்தவென நீடிரை நிரைத்தார்
ஆர்கலி நிரைத்தவென வாவண நிரைத்தார்
கார்நிரை யெனக்களிறு காவிடை நிரைத்தார்
மாருத நிரைத்தவென வாசிக ணிரைத்தார்.

(இ-ள்.) நீர்திரைநிரைத்த என - நீரலைகணிரைக்கப்பட்டனபோல, நீள் திரை நிரைத்தார் - நீண்டதிரைச்சீலைகளை முறையேகட்டினார்கள், ஆர்கலிநிறைத்த என - கடல்கணிரைக்கப்பட்டனபோல, ஆவணம்நிறைத்தார் - கடைத்தெருக்களை நிரைத்தார்கள், கார்நிரை என - மேகவரிசையைப்போல, களிறு - யானைகளை, கா இடை - சோலைகளில், நிரைத்தார - நிரைத்தார்கள், மாருதம்நிரைத்த என-காற்று நிரைக்கப்பட்டனபோல, வாசிகள்நிரைத்தார் - குதிரைகளை நிரைத்தார்கள்—எ-று.

911. நடிக்குமயில் லென்னவரும் நவ்விவிழி யாரும்
வடிக்குமயில் வீரரு மயங்கினர் திரிந்தார்
இடிக்குமுர சக்குரலி னெங்குமுரல் சங்கின்
கொடிக்களி னுணர்ந்தரசர் கோநக ரடைந்தார்.

(இ-ள்.) நடிக்கும் - நடிக்கின்ற, மயில் என்ன - மயிலைப்போல, வரும் - வருகின்ற, நவ்விவிழியாரும் - மான்பார்வையையொத்த பார்வையையுடைய மாதர்களும், வடிக்கும் - வடிக்கின்ற, அயில் கைவேலையுடைய, வீரரும் - வீரர்களும், மயங்கினர்திரிந்தார் - மயங்கித் திரிந்தார்கள், (ஆயினும) இடிக்கும் - இடியைப்போல வொலிக்கின்ற, முரசக்குரலின் - பேரிகையிளேசையாலும், எங்கும் - எவ்விடத்தும், முரல் - முழங்குகின்ற, சங்கின் தத்தமகுரிய சங்கிளேசையாலும், கொடிக்களின் - கொடிகளாலும், உணர்ந்து - அறிந்து, அரசர் - தத்தமரசர்களுடைய, கோநகர் - ராஜக்ருஹங்களை, அடைந்தார் - சேர்ந்தார்கள்—எ-று. (௩௫)

912. மிதிக்கநிமிர் தூளியின் விளக்கமறு மெய்யைச்
சுதைக்கணுரை யைப்பொருவு தூசுகொடு தூய்தா
உதிர்த்தன ரிளங்குமர ரோவியரி லோவம்
புதுக்கின ரெனத்தருண மங்கையர் பொலிந்தார்.

(இ-ள்.) மிதிக்க - காலாள்கள் மிதிக்க, நிமிர் - மேலெழுந்த, தூளியின் - தூளியினால், விளக்கல் அறு-பொலிவற்ற, மெய்யை - சரீரத்தை, சுதைக்கண் - பாலின் கண்ணுள்ள, நுரையைப்பொருவு - நுரையையொத்த, தூசுகொடு - வெண்டுகிலைக்கொண்டு, இளங்குமாரர் - இளங்குமாரர்கள், தூய்து ஆ-பரிசுத்தமாக, உதிர்த்தனர் - உதிர்த்தார்கள், (அதனால்) தருணமங்கையர் - இளமைப்பருவமுள்ள

மாதர்கள், ஓவியரில் - சித்திரக்காரர்களைப்போல, ஓவம்புதுக்கினர் என - சித்திரங்களைப்புதுக்கினார்களென்று (கண்டோர்) சொல்லும்படி, பொலிந்தார்-பிரகாசித்தார்கள்—எ-று. (கசு)

தம்சரீரங்களின்மேற் படிந்ததூளியைத் துடைக்கப்பட்ட மங்கையர்கள் மாசுதிர்க்கப்பட்ட சித்திரப்ரதிமைகள்போல விளங்கினார்களென்பது கருத்து.

913. தாளுயர் தடக்கிரி யிழிந்துதரை சேரும்
கோளரி யெனக்கரிகொள் கொற்றவ ரிழிந்தார்
பாளைவிரி யொத்துலவு சாமரை படப்போய்
வாளெழ நிறைத்தபட மாடமவை புக்கார்.

(இ-ள்.) தடக்கிரி இழிந்து-பெரியமலையினின்றுமிறங்கி, தரைசேரும்-பூமியையடைகின்ற, கோள் அரி என-வலியமைந்தசிங்கம்போல, தாள் உயர்-முன்னங்கால்களுயர்ந்த, கரி-யானைகளால், கொள் - தம்மேற்கொள்ளப்பட்ட, கொற்றவர்-அரசர்கள், இழிந்தார் - இறங்கினார்களாகி, பாளைவிரி ஒத்து - விரிந்த கமுகம்பாளையையொத்து, உலவு - (தம்மிருபுறத்தும்) அசைகின்ற, சாமரை-வெண்சாமரங்கள், பட-வீச, போய்-சென்று, வாள் எழ-ஒளிமிகும்படி, நிரைத்த-முறைப்படவமைத்த, படமாடமவை-ஆடையாற்செய்தவீடுகளில், புக்கார் பிரவேசித்தார்கள்—எ-று. (கள)

படமாடம்-கூடாரங்கள்.

914. தூசினொடு வெண்பட முடைக்குடில்க டோறும்
வாசநகை மங்கையர் முகங்கள்மழை வானிற்
காசின்மதி யின்கதிர் வழங்குநிழ லெங்கும்
வீசுதிரை வெண்புனல் விழுங்கியன போலும்.

(இ-ள்.) தூசினொடு - தூசினோடு, வெண்படம் உடை - வெண்டுகிலாற்செய்யப்பட்ட, குடில்கள்தோறும்-சிறுவீடுகள்தோறும், வாசம்-இயற்கைமணமமைந்த, நகை-சிரிப்பையுடைய, மங்கையர் - மாதர்களுடைய, முகங்கள் மழைவானில்-மேகங்கள் உலாவுகின்ற ஆகாயத்திற்பொருந்திய, காசு இல் - குற்றமில்லாத, மதியின்கதிர்-சந்திரகிரணங்கள்போல, வழங்கு-வழங்குகின்ற, நிழல்-ஒளியினால், எங்கும்-(அக்குடில்களின்) எல்லாப்பக்கங்களிலும், வீசு-(கட்டப்பட்டு) அசையாநிற்கிற, திரை-திரைச்சீலைகளால், வெண்புனல்-வெண்மையாகியநீரால், விழுங்கினபோலும்-கவரப்பட்டனவற்றையொத்திருந்தன—எ-று.

"குலக்கொடிமாதர்வாய் குமுதநாறுவ" என்பதனால் நகைக்கியற்கைவாசங் கூறப்பட்டது.

915. மண்ணுற விழுந்துநெடு வானுற வெழுந்து
கண்ணுதல் பொருந்தவரு கண்ணனில் வருங்கார்
உண்ணிற நறும்பொடியை வீசியொரு பாகம்
வெண்ணிற நறும்பொடி புனைந்தமத வேழம்.

(இ-ள்.) மண் உறவிழுந்து-மண்ணிற்பொருந்தவிழுந்து, நெடுவான் உறஎழுந்து-நெடியவானைப்பொருந்தநிமிர்ந்து, கார்-தன்னுடம்பின்கரியநிறத்தை, உண்-மறைத்த, நிறம்-நிறமுள்ள, நறும்பொடி-நறியபொடியை, வீசி-உதிர்த்துவிட்டு, ஒருபாகம்-ஒருபக்கத்தில், வெண்ணிறம் - வெண்ணிறமுள்ள, நறும்பொடி - நறியபொடியை,

புனைந்த - தரித்திருக்கிற, மதவேழம் - மதயானை, கண்ணுதல்பொருந்த - நெற்றிக் கண்ணையுடையசிவன் தன்னொருபாகத்தில் பொருந்தியிருக்க, வரு - வருகின்ற, கண்ணனில்-கண்ணனைப்போல, வரும்-வரும்—எ-று. (௧௧)

கண்ணுதல் இரண்டாம்வேற்றுமைத் தொகைநிலைக்களத்துப்பிறந்த அன்மொழித்தொகை. கண்ணன் என்பது எல்லாம்வல்ல விறைவனென்னும்பொருளதோர் பாகத மொழிசிதைவு, இறைவனது திருமேனியில் கண்ணுதல் பொருந்துதல் கற்பாந்தத்தில். இது, "வலத்தனன் றிரிபுரமெரித்தவன்" எருளுமிறையோனும் திசைமுகனுந் திருமகளுங் கூருளுந்தனியுடம்பன்" என்றற்றொடக்கத்தனவற்றால் விசதம்.

916. தீயவரொ டொன்றிய திறத்தரு நலத்தோர்
ஆயவரை யந்நிலை யறிந்தனர் துறந்தாங்
கேயவரு நுண்பொடி படிந்துட னெழுந்தொண்
பாய்பரி விரைந்துதறி நின்றன பரந்தே.

(இ-ள்.) ஒள்பாய்பரி - ஒள்ளியபாய்கின்றகுதிரைகள், தீயவரொடு - தீயவர்களோடு, ஒன்றிய-நட்புக்கொண்ட, திறத்து அரு-திறத்தாலருமையாகிய, நலத்தோர்-நல்லறிவினையுடையோர், ஆயவரை-அத்தீயோரை, அ நிலை அறிந்தனர்-அந்தத்தீமையாகிய நிலைமையையுணர்ந்து, துறந்தாங்கு-துறந்தாற்போல, எய-பொருந்திய, அரு நுண்பொடிபடிந்து - அருமையாகிய நுண்ணியபொடியிற்படிந்து, உடன் எழுந்து-உடனேயெழுந்து, விரைந்து - விரைவாய், உதறிபரவிநின்றன-உதறிவிட்டுப்பரந்து நின்றன—எ-று. (உ0)

ஆய்-ஆராய்ந்து எனக்கூறினுமாம்.

917. மும்மைபுரி வன்கயிறு கொய்துசெயன் மொய்ம்பால்
தம்மையு முணர்ந்துதரை கண்டுவிறை கின்ற
அம்மையினொ டிம்மையை யறிந்துநெறி செல்லும்
செம்மையவ ரென்னநனி சென்றன துரங்கம்.

(இ-ள்.) செயல்மொய்ம்பால்-ஞானவொழுக்கமாகிய தம்செய்கையின்வலியால், மும்மைபுரி-மூவாசையாகிய, வன்கயிறு-வலியகயிற்றை, கொய்து-அறுத்து, தம்மையும் உணர்ந்து-(இறைவனுடைமையாகிய) தம்மையுமறிந்து, தரைகண்டு-உலகியலையுமறிந்து, விரைகின்ற - (அதன்பற்றுவிடுதற்கு) விரைகின்ற, அம்மையினொடு-மறுமைப்பயனோடு, இம்மையை-இம்மைப்பயனை, அறிந்து-தெரிந்து, நெறசெல்லும்-தன்னெறிக்கட்செல்லுகிற, செம்மையவர் என்ன - செம்மைக்குணமாகிய ஞானத்தையுடையாரைப்போல, துரங்கம் - குதிரைகள், செயல் மொய்ம்பால்-போர்த்தொழில் செய்கையின்வலியால், மும்மைபுரி-(தம்மைப்பிணித்த) மூன்றுபுரியாகிய, வன்கயிறு-வலியகயிற்றை, கொய்து - அறுத்து, தம்மையும் உணர்ந்து - தம்வலியையுமறிந்து, தரைகண்டு-ஓடுகிறநிலத்தையும் நோக்கிக்கொண்டு, விரைகின்ற-விரைகின்றனவாகி, அம்மையினோடு-செல்லுமவ்விடத்தில் தம்மயமாயிருத்தற் சுகத்தோடு, இம்மையை-இவ்விடத்து ஒருவர்வயத்துநிலிறுத்தற்றுக்கத்தை, அறிந்து-தெரிந்து, நெறி-வழியில்-நனிசென்றன-மிகுதியுஞ்சென்றன—எ-று. (உ௧)

918. விழுந்தபனி யன்னதிரை வீசுபுரை தோறும்
கழங்குபயில் மங்கையர் கருங்கண்மிளிர் கின்ற

தழங்குகழி சிந்திய தரம்பயில் தரங்கத்
தெழுந்திடை பிறழ்ந்தொளிர் கொழுங்கயல்க ளென்ன.

(இ-ள்.) விழுந்தபனி அன்ன - (விண்ணினின்றும்) விழுந்தபனியையொத்த, திரை-திரைச்சீலைகள், வீசு-கட்டப்பட்டசைகின்ற, புரைதோறும்-குடில்கடோறும், கழங்குபயில்-அம்மனைக்காயாடப் பழகுகின்ற, மங்கையர்-மார்களுடைய, கருகண்-கருங்கண்கள், தழங்கு-ஒலிக்கின்ற, கழிசிந்திய-கழியிஞல்சிந்தப்பட்டனவாகி, தரம்பயில் - மேன்மையாகப்பொருந்திய, தரங்கத்து - அலைகளில், எழுந்து - (உண்டாகி மேலெழுந்து, இடை-அவற்றினிடத்தே, பிறழ்ந்து ஒளிர்-பிறழ்ந்தொளிர்கின்ற, கொழு கயல்கள் என்ன-செழியகயல்மீன்களைப்போல, மிளிர்கின்ற-பிரகாசியாநின்றன.

வெள்விசி நுண்ணிழைச்சீலையாற்செய்த திரையாதலால் பனியுவமையாயிற்று.

919\. வெள்ளநெடு வாரியற வீசியுள வேனும்
கிள்ளவெழு கின்றபுனல் கேளிரின் விரும்பித்
தெள்ளுபுன லாறுசிறி தேயுதவுகின்ற
உள்ளது மருதுதவும் வள்ளலையு மொத்த.

(இ-ள்.) தெள்ளுபுனல் ஆறு-தெளிந்தநீரையுடைய ஆறுகள், வெள்ளம்-வெள்ளமாகிய, நெடுவாரி-மிகுந்தநீர், அற-தம்மிடத்துவறண்டுபோகும்படி, வீசிஉள எனும்-(அரசர்களுக்கும் அவர்கள் பரிவாரங்களுக்கும்) கொடுத்தனவாயினும், கிள்ள - தோண்ட, எழுகின்ற-சுரக்கின்ற, புனல்-நீரையும், சிறிதே உதவுகின்ற - சிறிதாய்க் கொடுத்துக்கொண்டே வருகின்றன, (அதனால்) கேளிரின்விரும்பி-(இரப்போரை) தம்முறவினரை விரும்புதல்போலவிரும்பி, உள்ளது - தன்னிடத்துள்ளபொருளை, மருது-தடுக்காமல், உதவும் - உதவுகின்ற, வள்ளலையும் ஒத்த-வள்ளலையுமொத்திருந்தன—எ-று. (உ௩)

அரசர்களும் அவர்கள்பரிவாரங்களும் முகந்துண்ணுதலால் நீர்வற்றினவென்பது கருத்து.

920\. துன்றிநெறி பங்கிகடு ளங்கவழ லோடும்
மின்றிரிவ வென்னமணி யாரமிளிர் மார்பர்
மன்றன்மண நாறுபட மாடநுழை கின்றூர்
குன்றினமு ழைறதோறுநுழை கோளரிக ளொத்தார்.

(இ-ள்,) துன்றி - நெருங்கி, நெறி - நெறித்த, பங்கிகள் - சிகைகள், துளங்க-அசைய, அழலோடு - அக்கினியுடன், மின் திரிவ என்ன-மின்னல்கள் திரிவதுபோல, மணியாரம்-ரத்நஹாரங்கள், மிளிர் - பிரகாசியாநின்ற, மார்பர்-மார்பினையுடையவர்களாய், மன்றல்மணம்நாறு - மிக்கமணம்வீசுகின்ற, படம்மாடம் நுழைகின்றூர்-கூடாரங்களில் நுழைகின்றவர்கள், குன்றின் முழைதோறும் நுழை - மலைக்குகைகள் தோறும் பிரவேசிக்கிற, கோளரிகள் ஒத்தார்-வலியையுடைய சிங்கங்களையொத்தார்கள்—எ-று, (உ௪)

921\. நெருங்கயி லெயிற்றனைய செம்மயிரி னெற்றிப்
பொருங்குலிக மப்பியன போர்மணிக ளார்ப்ப
பெருங்களி றலைப்புனல் கலக்குவன பெட்டுக்
கருங்கடல் கலக்குமது கயிடவரை யொத்த.

(இ-ள்.) நெருங்கு - நெருங்கிய, அயில் - வேல்போன்ற, எயிற்று - எயிற்றினை யுடைய, அனைய-அத்தன்மையவாகியும், செம்மயிரின்-செம்மயிரினையுடைய, நெற்றி-நெற்றில், பொரும்-தனக்குத்தானெதிர்கின்ற,குலிகம்-சாதிலிங்கத்தை,அப்பியன-தடவப்பட்டனவாயும், போர்மணிகள் ஆர்ப்ப-ஒன்றோடொன்று போர்செய்தலையுடையமணிகள் இருபுறத்து மாரவாரிக்கப்பெற்றனவாயுமுள்ள, பெருங்களிறு-பெரிய யானைகள், அலைப்புனல்-அலைகளையுடையநீரை, பெட்டு-விரும்பி, கருகடல்-பெரிய கடலை, கலக்கும் - கலக்கிய, மதுகயிடவரையொத்த - மதுகைடவர்களை யொத்தனவாய், கலக்குவன-கலக்காநின்றன—எ-று. (உ௫)

தம்முட் பகைகொண்டாற்போல மாறிமாறி யொலித்தலாற் போர்மணிகள் என்றார்.

922. ஒக்கநெறி யுய்ப்பவ ருரைத்தகுறி கொள்ளா
பக்கமின மொய்க்கய லலைக்கநனி பாரா
கைக்கரு மதத்தவிலை மாதர்கலை யல்குல்
புக்கவரை யொத்தன புனற்சிறைக ளேறா.

(இ-ள்.) ஒக்க - (தமக்கும் அவர்களுக்கும்) ஒத்திருக்க, நெறிஉய்ப்பவர்-நல்வழியிற்செலுத்தும்பாகர்கள், உரைத்த-கூறிய, குறி-குறிகளை, கொள்ளா-கொள்ளாதனவாகி, பக்கம் - பக்கங்களில், இனம்-கூட்டமாக, மொய்-மொய்த்தலையுடைய, கயல்-கயல்மீன்கள், அலைக்க - வருத்த, நனிபாரா-மிகவும் மதியாதனவாகி, மதத்த-மதத்தையுடையவனவாகிய, கை-துதிக்கையையுடைய, கரு-யானைகள், புனல்சிறைகள்-நீர்நிலைகளினின்றும், ஏறா - கரையேறாதனவாகி, (அதனால்) விலைமாதர் - வேசையருடைய, கலை - கலையையணிந்த, அல்குல் - அல்குற்கடலிற், புக்கவரை ஒத்தன-வீழ்ந்து அழுந்தினவர்களையொத்திருந்தன-எ-று. (உ௬)

நீர்நிலைகளில்வீழ்ந்து கரையேறாமலும், பாகன் குறிப்புரைகளைக் கேளாமலும் இருக்கிற யானைகள், விலைமாதர்களுடைய அல்குற்கடலில் விழுந்து அழுந்திப் பெரியோர்களுடைய உறுதிமொழிகளை மதியாதிருப்பவர்களை யொத்திருந்தனவென்பது கருத்து. புக்கவரை என்ற சொல்லாற்றல் ஏறுமை யழுந்தினதைத் தோற்றுவியாநின்றது.

923. துகிலிடை மடந்தையரொ டாடவர் துவன்றிப்
பகலிடை யவட்டிலின் மடுத்தெரி பரப்பும்
அகிலிடு கொழும்புகை யழுங்கலில் முழங்கா
முகில்படு நெடுங்கடலை யொத்துளதம் மூதூர்.

(இ-ள்.) துகில் - துகிலையுடுத்த, இடை - இடையையுடைய, மடந்தையரொடு-மாதர்களோடு, ஆடவர்துவன்றி-ஆடவர்கள்நெருங்கி, பகல் இடைய-சூரியனொளிமழுங்கும்படி, அட்டிலில் - மடைப்பள்ளியில், எரிமடுத்து-நெருப்புமூட்டி, பரப்பும்-பரப்பிய, அகில் இடு - அகிற்கட்டைகளிலுண்டாகின்ற, கொழும்புகை-செழுமையாகிய புகை, அழுங்கல் இல் - கெடுதலில்லாமல், முழங்கா - முழங்கி, (அதனால்) அம்மூதூர் - அந்தப்பழமையையூரானது, முகில்படு - மேகங்கள் (நீருண்ண) படிகிற, நெடு கடலை-நெடியகடலை, ஒத்து உளது-ஒத்திருந்தது—எ-று. (உஎ)

பொன்னணிமுதலிய வொழிந்து அடுதொழில் புரிகின்றனராதலின், துகிலிடை மடந்தையர் என்றார்.

வேறு.

924. கமருறு பொருப்பின்வாழும் விஞ்சையர் காணவந்தார்
தமரையு மறியார்நின்று திகைப்புறு தகைமைசான்ற
குமரரு மங்கைமாருங் குழுவலால் வழுவிவிண்ணின்
றமரர்நா டிழிந்ததென்னப் பொலிந்ததவ் வனீகவெள்ளம்

(இ-ள்.) கமர் உறு - பிளத்தலமைந்த, பொருப்பின் வாழும் - மலைகளில் வாழ்கின்ற, விஞ்சையர் - வித்யாதரர்கள், காணவந்தார் - காணவந்தவர்களாய், தமரையும் - (தம்மோடுவந்த) சுற்றத்தாரையும், அறியார் - அறியாதவர்களாய், நின்றுதிகைப்பு உறும் - நின்று திகைத்தலைப் பொருந்துகின்ற, தகைமைசான்ற - அழகுமிகுந்த, குமரரும் இளைஞர்களும், மங்கையரும் - மங்கையர்களும், குழுவலால் - கூடுதலால், அ அனிகம் வெள்ளம் - அந்தச்சேநாசமூத்ரம், அமரர்நாடு - தேவருலகம், விண்ணின்று வழுவி - விண்ணினின்றுந்தவறி, இழிந்தது என்ன - இழிந்ததென்று சொல்லும்படி, பொலிந்தது - பிரகாசித்தது—எ-று. (உ௪)

மக்க ளியக்கமில்லாவிடத் தியங்குவோரென்பார் "கமருறுபொருப்பின் வாழும் விஞ்சையர்" என்றார்.

925. வெயினிறங் குறையச்சோதி மின்னிழல் பரப்பமுன்னாள்
துயிலுணர் செவ்வியோருந் துனியுறு முனிவினோரும்
குயிலொடு மினிதுபேசிச் சிலம்பொடு மினிதுகூவி
மயிலினந் திரிவவென்னத் திரிந்தனர் மகளிரெல்லாம்.

(இ-ள்.) முன்னாள் - முன்னாளில்செய்தற்குரிய, துயிலுணர் - துயிலுணர்ந் தெழுந்த, செவ்வியோரும் - நலத்தையுடையோரும், துனி உறும்முனிவினோரும்-ஊடலால் வெறுப்பையுடையோரும், (ஆகிய) மகளிர் எல்லாம் - மாதர்களெல்லாரும், குயிலொடும் இனிதுபேசி - குயில்களுடன் இனிமையாகப்பேசி, சிலம்பொடும் இனிதுகூவி - மலைகளோடும் இனிமையாகக்கூவி, வெயில் நிறம்குறைய - வெயிலினதுநிறம் குறையும்படி, சோதிமின்னிழம்பரப்ப - (தமது அணிகள்) மின்னலையொத்த ஒளியைப்பரப்ப, மயிலினம் - மயிற்கூட்டங்கள், திரிவ என்ன - திரிவன போல, திரிந்தன - திரிந்தார்கள்—எ-று. (உ௫)

துனியின்றித் தங்கணவர்பா லின்பநுகர்ந்து களித்தவர் என்பார் துயிலுணர் செவ்வியோர் எனவும், அவ்வாறு நுகரப்பெற்றிலர் என்பார் துனியுறு முனிவினோர் எனவும், அம்மலையைச்சார்ந்த சோலைமுதலியவற்றின்வளங்கள், கண்டோர்க்கு, முன்னுளதாய வெறுப்பு முதலியவற்றைநீக்கிப் பெருங்களிப்பு நல்கும் என்பார் அவ்விருதிறத்தாரையும் ஒருங்கெண்ணிக் கூவித்திரிந்தனரெனவுங்கூறினார். மயிலினந் திரிவவென்னத் திரிந்தனர் என்றதனால் மயிலோ டெதிராடலுங் கொள்க. துனி, கலவிக்காலத்து ஆடவர்பாற் குற்றங் காரணமாக, மாதரிடத் துண்டாவதோர் சிறுபிணக்கு.

926. தாளிணை கழல்களார்ப்பத் தாரிடை யளிகளார்ப்ப
வாள்பிடை யிலங்கச்செங்கேழ் மணியணி வலயமின்னத்
தோளென வுயர்ந்தகுன்றின் சூழல்க ளினிதுநோக்கி
வாளரி திரிவவென்னத் திரிந்தனர் மைந்தரெல்லாம்.

(இ-ள்.) மைந்தர் எல்லாம் - ஆடவரெல்லாரும், தோள் என உயர்ந்த - தம் தோள்களைப்போலுயர்ந்த, குன்றின் - அம்மலையின், சூழல்கள் - இடவளங்களை,

இனிதுநோக்கி - இனிதாகப்பார்த்து, வாள் அரி - ஒளியையுடைய சிங்கங்கள், திரிவ என்ன-திரிவதுபோல, தாள் இணை-இரண்டுபாதங்களிலும், கழல்கள் ஆர்ப்ப-வீரக்கழல்கள் ஆரவாரிக்கவும், தார் இடை - மலர்மாலைகளில், அளிகள் ஆர்ப்ப - வண்டுகள் ஆரவாரிக்கவும், வாள் - வாளாயுதங்கள், புடை இலங்க - இடையின் பக்கத்திலிவிளங்கவும், செங்கேழ் - செந்நிறம்பொருந்திய, மணி அணி - ரத்நாபரணங்களும், வலயம் - தோளணிகளும், மின்ன - மின்னவும், திரிந்தனர் - திரிந்தார்கள்—எ-று, (கூ0)

சந்திரசைலத்தின் நிலையைச் சொல்லுகின்றார்.

927. சுற்றிய கடல்களெல்லாஞ் சுடர்மணிக் கனகக்குன்றைப்
பற்றிய வளைந்தவென்னப் பரந்துவந் திறுத்தசேனை
கொற்றவர் தேவிமார்கள் மைந்தர்கள் கொம்பனார்வந்
துற்றவர் காணலுற்ற மலைநிலை யுரைத்துமன்றே.

(இ-ள்,) சுற்றிய - பூமியைச்சுற்றிய, கடல்கள் எல்லாம் - சமுத்திரங்களெல்லாம், சுடர் - சுடர்கின்ற, மணி - மணிகளையுடைய, கனகக்குன்றை - மேருபர்வதத்தை, பற்றிய - கவர்ந்துகொள்ள, வளைந்த என்ன - வளைந்தனபோல, சேனை - சேனைகள், பரந்துவந்து - பரவிவந்து, இறுத்த - அவ்விடத்துத்தங்கின, கொற்றவர் - (அச்சேனையிலுள்ள) வரசர்களும், தேவிமார்கள் - அவர்கள் மனைவியரும், மைந்தர்கள்-ராஜகுமாரர்களும், கொம்பனார் - ராஜகுமாரத்திகளும், (ஆகிய) அவர்-அவர்கள், வந்துஉற்று - வந்தடைந்து, காணல் உற்ற - காணத்தொடங்கிய, மலை - சந்திரசைலத்தினது, நிலை - நிலையை, உரைத்தும் - சொல்லுவோம். (கூக)

அன்று, ஏ - அசைகள்.

928. பம்புதேன் மிஞிறுதும்பி பரந்திசை பாடியாட
உம்பவா னகத்துநின்ற வொளிவளர் தருவினோங்கும்
கொம்புகள்பணைக்கைநீட்டிக்குழையொடுமொடித்துக்கோட்டுத்
தும்பிக ளுயிரேயன்ன துணைமடப் பிடிக்குநல்கும்.

(இ-ள்.) கோட்டுதும்பிகள்-பெரியதந்தங்களையுடைய யானைகள், பம்பு-நெருங்கிய, தேன் - தேனைவிரும்பி, மிஞிறு - மிஞிறுகளும், தும்பி - தும்பிகளும், பரந்து-பரவி, இசைபாடி - இசைகளைப்பாடி, ஆட - ஆட, உம்பர் வானகத்து - மேலாகிய ஸ்வர்க்கலோகத்தில், நின்ற - நிலைபெற்ற, ஒளிவளர் - ஒளியொடு கூடிவளர்கின்ற, தருவின் - பஞ்சதருக்களின், ஓங்கும் - உயர்ந்த, கொம்புகள் - கிளைகளை, பணைகை நீட்டி - பருமையாகிய துதிக்கைகளைநீட்டி, குழையோடும் - தளிர்களோடும், ஒடித்து - முறித்து, உயிரே அன்ன - உயிரையேயொத்த, துணை - தமக்குத் துணையாகிய, மடம் - இளமைபொருந்திய, பிடிக்கு - பெண்யானைகளுக்கு, நல்கும் - கொடுக்கும்—எ-று (கூஉ)

"மிஞிறு, தும்பி" என்பன வண்டு விசேடம்.

929. பண்மலர் பவளச்செவ்வாய்ப் பனிமலர்க் குவளையன்ன
கண்மலர்க் கொடிச்சிமார்க்குக் கணித்தொழில் புரியும்வேங்கை
உம்மலர் வெறுத்ததும்பி புதியதே னுதவுநாகத்
தண்மல ரென்றுவானத் தாரகை தாவுமன்றே,

(இ-ள்.) பண் - பண்போன்றசொற்கள், மலர் - உண்டாகின்ற, பவளச்செவ்வாய் - பவளச்செவ்வாயையும், பணிமலர் - குளிர்ச்சிபொருந்திய, குவளை அன்ன - குவளை மலரையொத்த, கண்மலர் - கண்களாகிய மலர்களையுடைய, கொடிச்சிமார்க்கு - குறத்தியர்க்கு, வேங்கை - வேங்கைமரங்கள், கணிதொழில்புரியும் - கணிதத் தொழிலைச்செய்யும், உண் - தான்தேனுண்ட, மலர் - மலர்களை, வெறுத்த - வெறுத்த, தும்பி - வண்டுகள், புதியதேன் - புதியதேனை, உதவும் - கொடுக்கின்ற, தண் - குளிர்ச்சிபொருந்திய, நாகமலர் என்று - புன்னைமலர்களென்று நினைத்து, வானம் - ஆகாசத்திலுள்ள, தாரகை - உடுக்கைகளின்மேல், தாவும்-தாவுவன—எ-று. (௩௩)

அன்று, ஏ - அசைகள்.

930. மீனெனும் பிடிகளோடும் விளங்கும்வெண் மதிநல்வேழம்
கூனல்வான் கோடுநீட்டிக் குத்திடக் குமுறிப்பாயும்
தேனுகு மடைமைமாற்றிச் செந்தினைக் குறவர்முந்தி
வானநீ ராறுபாய்ச்சி யைவனம் வளர்ப்பர்மாதோ.

(இ-ள்.) மீன் எனும் - தாரகைகளென்கிற, பிடிகளோடும் - பெண்யானைகளோடும், விளங்கும் - விளங்குகின்ற, வெள்மதி - வெள்ளியசந்திரனாகிய, நல்வேழம் - நல்லயானையானது, கூனல் - வளைவாகிய, வான் - சிறந்த, கோடு - இருபுறநுனிகளாகிய கொம்புகளை, நீட்டி - நீட்டி, குத்திட - இருமலைக்குத்துதலால், குமுறி - குமுறுதல்செய்து, பாயும் - பாய்கின்ற, தேன் - தேனானது, உகு - ஒழுகுகின்ற, மடைமையைமாற்றி - மடையைத்தடுத்து, செந்தினை - செந்தினைக்கொல்லைகளையுடைய, குறவர் - குறவர்கள், முந்தி - முற்பட்டு, வான ஆறுநீர் - ஆகாசக்கையினீரை, பாய்ச்சி - பாயும்படிசெய்து, ஐ வனம் - மலைநெற்பயிரை, வளர்ப்பார்-வளர்ப்பார்கள்-எ-று. (௩௪)

மாது, ஓ-அசைகள். குறவர்க்கு ஐவனத்தினும் செந்தினை சிறந்ததென்றற்கு, "செந்தினைக்குறவர்" என்றார். அன்றி, செந்தினையை முன்வைத்ததும் அதற்குக் காரணமாமெனினும் அமையும்.

931. குப்புறற் கருமையாலக் குலவரைச் சாரல்வைகி
ஒப்புறத் துளங்குகின்ற வுடுபதி யாடியின் கண்
இப்புறத் தேயுங்காண்பார் குறத்திய ரிசைந்தகோலம்
அப்புறத் தேயுங்காண்பா ரரம்பைய ரழகுமாதோ.

(இ-ள்.) குப்புறற்கு - கடந்துபோவதற்கு, அருமையால் - அருமையாயிருத்தலால், அ - அந்த, குலம் - சிரேஷ்டமான, வரைசாரல் - மலைச்சாரலில், வைகி - தங்கி, ஒப்பு உற - முகத்துக்கொப்பைப் பொருந்த, துளங்குகின்ற - அஞ்சுகின்ற, உடுபதி - சந்திரனாகிய, அடியின்கண் - (இருபக்கத்தும் ஒளியுள்ள) கண்ணாடியில், குறத்தியர் - குறத்தியர்கள், இசைந்தகோலம் - தங்கருத்துக்கிசைந்த வலங்காரத்தை, இப்புறத்தேயும் காண்பார் - இருபுறத்தினுங் காண்பார்கள், அரம்பையர் - அரம்பைப்பெண்கள், அழகு - தம்மழகை, அப்புறத்தேயும் காண்பார் - அப்புறத்தினுங்காண்பார்கள்-எ-று. (௩௫)

மாது, ஓ - அசைகள்.

932. உதியுறு துருத்தியூது முலையுறு தீயும்வாயின்
அதிவிட நீருநெய்யு முண்கிலா தாவியுண்ணும்

கொதிநுனை வேற்கண்மாதர் குறத்தியர் நுதலினோடு
மதியினை வாங்கியொப்புக் காண்குவர் குறவர்மன்னோ.

(இ-ள்.) உதி உறு - உலைத்துருத்தியாகிய, துருத்தி - துருத்தியால், ஊதும் - ஊதப்படுகிற, உலையுறு தீயும் - கொல்லுலைத்தீயையும், வாயின் - வாயினால், அதிவிடம் நீரும் - அதிகவிஷநீரையும், நெய்யும் - நெய்யையும், உண்கிலாது - உண்ணாமல், ஆவி - உயிரை, உண்ணும்-கவர்கின்ற, கொதி-கொதிக்கின்ற, நுனை-முனையையுடைய, வேல் - வேல்போன்ற, கண் - கண்களையுடைய, மாதர் - அழகிய, குறத்தியர் - குறத்தியரது, நுதலினோடு - நெற்றியோடு, குறவர் - குறவர்கள், மதியினை வாங்கி - அர்த்தசந்திரனையெடுத்து, ஒப்புக்காண்குவர் - ஒப்புப்பார்ப்பார்கள்-எ-று.

மன் - ஓ - இரண்டும் அசைகள். மன் - பெரும்பாலும் எனினுமாம். மாதர் குறத்தியர் என்பதற்கு மாதராகிய குறத்தியர் எனப் பொருளுரைத்தலுமொன்று. மாதர் பண்பாகுபெயர், காரியவாகு பெயரும்.

933. பேணுதற் கரியசீயக் குருளையம் பிடிகளீன்ற
காணுதற் கினியவேழக் கன்றொடு களிக்குமுன்றில்
கோணுதற் குரியதிங்கட் குழவியுங் குறவர்தங்கள்
வாணுதற் கொடிச்சிமாதர் மகவொடு தவழுமாதோ.

(இ-ள்.) முன்றில்-சிறுகுடில்களின் முன்றில்களின், பேணுதற்கு அரிய - விரும்புதற்கு அருமையாகிய, சீயக்குருளை - சிங்கக்குட்டிகள், அம் - அழகிய, பிடிகள் ஈன்ற - பெண்யானைகள்பெற்ற, காணுதற்கு இனிய - பார்த்தற்கினிய, வேழக்கன்றொடு - யானைக்கன்றுகளுடன், களிக்கும் - களித்துவிளையாடும், கோணுதற்கு உரிய - வளைதற்குரிய, திங்கள்குழவியும் - இளஞ்சந்திரனும், குறவர்தங்கள் - குறவர்களுடைய, வாள்நுதல் - ஒளிபொருந்திய நெற்றியையுடைய, கொடிச்சிமாதர் - மனைவியாகிய குறத்தியர்பெற்ற, மகவோடு - குழந்தைகளுடன், தவழும் - தவழாநிற்கும்-எ-று. (௩௭)

களிக்கும் தவழும் என்னும் மிரண்டும் வேற்றுமையின்றி விளையாட்டயருமென்னும் பொருள்குறித்து நின்றமையின், தன்வினையொன்றிய முடிபேயாம். இவ்வாறு, "பைம்புதல்வேங்கையு மொள்ளிணர்விரிந்தன. நெடுவெண்டிங்களு மூர்கொண்டன்றே" எனப் பிறர்கூறுதலுங்காண்க.

934. அஞ்சனக் கிரியினன்ன வழிகவுள் யானைகொன்ற
வெஞ்சினத் தரியின்றிண்காற் சுவட்டொடு விஞ்சைவேந்தர்
குஞ்சியந் தலத்துநீலக் குணமணித் தலத்துமாதர்
பஞ்சியங் கமலம்பூத்த பசுஞ்சுவ டுடைத்துமன்னோ.

(இ-ள்.) விஞ்சைவேந்தர் - வித்யாதர அரசர்களுடைய, குஞ்சி அம்தலத்தும் - அழகியசிகையினிடத்தும், குணம் நீலம் மணிதலத்தும் - சிறந்த நீலமணிப்பாறையினிடத்தும், அஞ்சனக்கிரியின் அன்ன - கரியமலையையொத்த, அழிகவுள் - (மதநீரிடையறுதொழுகுதலால்) அழகழிந்த கதுப்பினையுடைய, யானை - யானைகளை, கொன்ற - கொலைசெய்த, வெம்சினத்து - கடுங்கோபத்தையுடைய, அரியின் - சிங்கங்களின், திண்கால்சுவட்டொடு - திண்ணியகால்களின் சுவடுகளோடு, மாதர் - வித்யாதரமாதர்களுடைய, பஞ்சி - செம்பஞ்சூட்டிய, அம் - அழகிய, கமலம் - பாதகமலங்கள், பூத்த - படுதலாலுண்டாகிய, பசுஞ்சுவடு உடைத்து - ஈரமாகிய சுவடுகளையும் உடையது அம்மலை-எ-று. (௩௮)

935. செங்கய லனையநாட்டஞ் செவியுறா முறுவல்தோன்றா
பொங்கிருங் கூந்தல்சோரா புருவங்க ணெரியாபூவின்
அங்கையு மிடறுங்கூட்டி நரம்பளைந் தமிர்தமூறும்
மங்கையர் பாடல்கேட்டுக் கின்னர மயங்குமாதோ.

(இ-ள்.) செங்கயல் அனைய - செவந்த கயல்மீனையொத்த, நாட்டம் - கண்பார்வைகள், செவி உறா-செவியைப்பொருந்தாமலும், முறுவல்தோன்றா-பற்கள் தோன்றாமலும், பொங்கு இரு-மிகவும் நீட்சியாகிய, கூந்தல்சோரா-கூந்தலவிழாமலும், புருவங்கள் நெரியா-புருவங்கள் மேலெழாமலும், பூவின்-தாமரை மலரையொத்த, அங்கையும்-அகங்கையோசையையும், மிடறும்- மிடற்றோசையையும், கூட்டி - ஒருவழிப்படுத்தி, நரம்பு அளைந்து - நரம்பிசையைப்பொருந்தி, அமிர்தம் ஊறும் - அமிர்தம்போலச்சுரக்கின்ற, மங்கையர்பாடல்கேட்டு-மாதர்கள்பாடுகிற பாடலைக்கேட்டு,கின்னரம்-கின்னரப்பறவைகள், மயங்கும் - இது தம்மினத்துப்பாடலோ அன்றோ எனப் புத்திமயங்கும்—எ-று. (௩௧)

936. கள்ளவிழ் கோதைமாதர் காதொடு முறவுசெய்யும்
கொள்ளைவாட் கண்ணினார்தங் குங்குமக் குழம்புதங்கும்
தெள்ளிய பளிக்குப்பாறைத் தெளிசுனை மணியிற்றேய்த்த
வள்ளமு நறவுமென்ன வரம்பில பொலியுமன்றே.

(இ-ள்.) காதொடும் உறவுசெய்யும் - காதுடனுறவுசெய்கின்ற, கொள்ளை - மிகுகளிப்பையுடைய, வாள்-வாள்போன்ற, கண்ணினார் - கண்களையுடையராகிய, கள்அவிழ்-தேனைச்சொரிகிற, கோதை - மலர்மாலையையணிந்த, மாதர் - மாதர்களுடைய, குங்குமக்குழம்புதங்கும்-குங்குமச்சேறுதங்கிய, தெள்ளிய-தெரிந்த,பளிக்குப்பாறை-பளிக்குப்பாறைகளை மேற்புறத்திலுடைய,தெளிசுனை-தெளிந்தநீர்நிறைந்தசுனைகள், மணியின்தேய்த்த-செம்மணிகளா லிழைக்கப்பட்ட, வள்ளமும்-கிண்ணமும், நறவும் நறையும், என்ன-போல, வரம்பு இலபொலியும்-அளவில்லாதன விளங்கும்—எ-று.

937. ஆடவ ராவிசோர வஞ்சன வாரிசோர
ஊடலிற் செவந்தநாட்டத் தும்பர்தம் மரம்பைமாதர்
தோடலர் கோதைநின்றுந் துறந்தமந் தாரமாலை
வாடல நறவறாத வயின்வயின் வயங்குமாதோ.

(இ-ள்.) ஆடவர்-நாயகர்களுடைய, ஆவி-உயிரானது, சோர - தளரவும், அஞ்சனம்-மையோடுகலந்த, வாரிசோர-கண்ணீரொழுகவும், ஊடலின்-ஊடலால், செவந்த-செவப்பேறிய, நாட்டத்து-கண்களையுடைய, உம்பர்-தேவர்களுடைய, அரம்பைமாதர்-(மனைவிமாராகிய) அரம்பைமாதர்கள், கோதை நின்றும்-தமது கூந்தலினின்றும், துறந்த-நீக்கின; தோடு அலர் - இதழ்கள்விரிந்த, மந்தாரமாலை - மந்தாரமலர்மாலைகள், வாடல-வாடாமலும், நறவு அறாத-தேனீங்காமலும், வயின்வயின் -அம்மலையினிடமெங்கும், வயங்கும்-விளங்காநிற்கும். ()

மந்தாரம்-பஞ்சதருக்களிலொன்று. மாது, ஓ-அசைகள். தேவமாலைகளாதலால் வாடலும், தேனறலும் இலவாயின.

938. மாந்தளி ரனையமேனிக் குறத்தியர் மாலைசூட்டிக்
கூந்தலின் கமுகின்பாளை குழலினோ டொப்புக்காண்பார்

ஏந்திழை யரம்பைமாத ரெரிமணிக் கடகம்வாங்கிக்
காந்தளம் போதிற்பெய்து கைகளோ டொப்புக்காண்பார்.

(இ-ள்.) மாந்தளிர் அனைய-மாந்தளிரையொத்த,மேனி-சரீரத்தையுடைய, குறத்தியர் - குறத்தியர்கள், மாலைசூட்டி-மந்தாரமாலையைத்தரித்து, கூந்தலின் கமுகின் பாளை-கூந்தற் கமுகின்பாளைகளை, குழலினோடு - தங்கூந்தலோடு, ஒப்புகாண்பார்-உவமைகாண்பார்கள், ஏந்து இழை-தாங்கியவாபரணங்களையுடைய, அரம்பைமாதர்-அரம்பைமாதர்கள். எரிமணி கடகம் - நெருப்பையொத்த செவ்வொளியையுடைய மாணிக்கக்கடகங்களைவாங்கி - கழற்றி, காந்தளம் போதில் - காந்தண்மலர்களில், பெய்து-பூட்டி,கைகளோடு-தங்கைகளோடு, ஒப்புகாண்பார்-உவமைகாண்பார்கள்—எ-று. (௬௭)

"கூந்தலின்" என்பதில், இன்-சாரியை. "காந்தளம்" என்பதில், அம்-சாரியை.

939. சரம்பயில் சாபமென்னப் புருவங்க டம்மினாட
நரம்பினோ டினிதுபாடி நாடக மயிலோடாடி
அரம்பையர் வெறுத்துநீத்த வவிர்மணிக் கோவையாரம்
மரம்பயில் கடுவன்பூண மந்திகண் டுவக்குமாதோ.

(இ-ள்.) சரம்பயில்-அம்புபொருந்துகின்ற, சாபம் என்ன - வில்லைப்போல, புருவங்கள்-புருவங்களானவை, தம்மின்ஆட-தம்மிற்றுடிக்க, நரம்பினோடு - யாழினோடு மாறுபடாமல், இனிதுபாடி-இனிமையாகப்பாடி, மயிலோடு-மயில்களோடு, நாடகம் ஆடி-நடனமாடி, அரம்பையர்-தெய்வப்பெண்கள், வெறுத்துநீத்த - வெறுத்துநீக்கிய, அவிர்-விளங்குகின்ற, மணிகோவை-ரத்நஹாரங்களையும், ஆரம்-முத்துமாலைகளையும், மரம்பயில்-மரங்களிற்சஞ்சரிக்கிற,கடுவன்-ஆண்குரங்குகள்,பூண-தரித்துக்கொள்ள, மந்தி-பெண்குரங்குகள், கண்டு-பார்த்து, உவக்கும்-களிக்கும்—எ-று. (௬௮)

மாது, ஓ-அசைகள், "சரம்பயில்சாபம்" வடிவு - தொழில்களைப் பற்றிவந்த உவமம், நரம்பு-சினையாகுபெயர். மது உண்டவர்களாதலால் சரம்பயில் சாப மென்னப் புருவங்கள் தம்மிலாடலாயின.

940. சாந்துசாய் தடங்கடோறுந் தாதுரா கத்திற்சார்ந்த
கூந்தலம் பிடிகளெல்லாங் குங்கும மணிந்தபோலும்
காந்தின மணியின்சோதிக் கதிரொரடுங் கலந்துமூசச்
சேந்துவா னகமெப்போதுஞ் செக்கரை யொக்குமாதோ.

(இ-ள்.) சாந்து-சந்தனமரங்கள், சாய் - தழைந்துசாய்ந்த, தடங்கள்தோறும்-மலைச்சாரல்கடோறுமுள்ள, தாதுராகத்தில்-செங்காவிக் கற்குன்றுகளில், சார்ந்த-சேர்ந்த, கூந்தல்-புறமயிரையுடைய, அம்-அழகிய, பிடிகள் எல்லாம்-பெண்யானைகளெல்லாம், குங்குமம் அணிந்தபோலும்-குங்குமக்குழம்பைத் தரித்தனவற்றையொக்கும், காந்து-ஒளிவீசுகின்ற, இனம்மணியின்சோதி, தொகுதியாகிய மணிகளினொளியானது, கதிரொடும்-சூரியகிரணத்தோடும், கலந்து-சேர்ந்து, மூச-மொய்ப்பதினால், வானகம்-ஆகாயத்தினிடம்,சேந்து-செவந்து, எப்போதும்-எக்காலத்தும், செக்கரை-செவ்வானத்தை, ஒக்கும்-ஒத்திருக்கும்—எ-று. (௬௯)

மாது,ஓ-அசைகள். தாதுராகம்,நற்றவரிசிகன் என்பதுபோல வந்த வடமொழிச் சந்தி, "தாதுராகம்" காவிக்கல், "சேந்து" என்பது செவந்து என்பதன் மரூஉ.

941. நிலமகட் கணிகளென்ன நிரைகதிர் முத்தஞ்சிந்தி
மலைமகள் கொழுநன்சென்னி வந்துவீழ் கங்கைமான
அலகில்பொன் னலம்பியாரஞ் சார்ந்துவீ ழருவிமாலை
உலகளந் தவன்றன்மார்பி னுத்தரீ யத்தையொத்த

(இ-ள்.) நிலமகள்கு-பூமிதேவிக்கு, அணிகள் என்ன-ஆபரணங்களென்று சொல்லும்படி, நிரை-வரிசையாக, கதிர்-ஒளியையுடைய;முத்தம்-முத்துக்களை, சிந்தி-சிதறி, மலைமகள்கொழுநன்-பார்வதிநாயகனாகிய ருத்ரமூர்த்தியின், சென்னி-சிரசில், வந்து-சேர்ந்து, வீழ் - அவ்விடத்தினின்றும் விழுகின்ற, கங்கை - கங்காப்ரவாஹத்தை, மான - நிகர்க்க, அலகு இல் - அளவில்லாத, பொன் - பொற்பொடிகளை, அலம்பி-கொழித்துக்கொண்டு, ஆரம்சார்ந்து - முத்துக்களைப்பொருந்தி, வீழ்- விழுகின்ற, அருவி-அருவியாறுகளின், மாலை - வரிசைகள், உலகு அளந்தவன்-உலகத்தைத் திருவடிகளாலளந்தருளின த்ரிவிக்ரமனது, மார்பின் - மார்பிலணிந்த, உத்தரீயத்தை ஒத்த-உத்தரீயத்தை யொத்திருந்தன—எ-று, (சரு)

942. கோடுலா நாகப்போதோ டிலவங்க மலருங்கூட்டிச்
சூடுவார் களிவண்டோச்சித் தூநறுந் தேறலுண்பார்
கேடிலா மகரயாழிற் கின்னர மிதுனம்பாடும்
பாடலா லூடனீங்கும் பரிமுக மாக்கள்கண்டார்.

(இ-ள்.) கோடு உலாம்-கிளைகள் அடர்ந்துள்ள, நாகப்போதொடு-புன்னைமலர்களோடு, இலவங்கமலரும் - இலவங்கமலர்களையும், கூட்டி-சேர்த்துத்தொடுத்து, சூடுவார்-அணிகின்றமாதர்களும், களிவண்டு ஓச்சி-களிப்பையுடையவண்டுகளையோட்டி, தூ - பரிசுத்தமாகிய, நறுதேறல்-நல்லதேனை, உண்பார் - பருகுகின்ற மாதர்களும், கேடு இலா-குற்றமில்லாத, மகரயாழின்-மகரயாழைப்போல, கின்னரமிதுனன்-கின்னரமிதுனப்பறவைகள். பாடும் - பாடுகின்ற, பாடலால்-பாட்டினால், ஊடல்நீக்கும்-ஊடனீங்குகின்ற, பரிமுகமாக்கள் - குதிரைமுகத்தையுடைய மக்களை, கண்டார் - பார்த்தார்கள்-எ-று. (சசு)

943. பெருங்களி றேயுமைந்த பேரெழி லாகத்தோடு
பொருந்துணைக் கொங்கையன்ன பொருவில்கோங் கரும்பின்மாடே
மருங்கெனக் குழையுங்கொம்பின் மடப்பெடை வண்டுந்தங்கள்
கருங்குழற் களிக்கும்வண்டும் கடிமணம் புணரக்கண்டார்.

(இ-ள்.) பெருகளிறு ஏயும் - பெருமையாகிய யானையையொத்த, மைந்தர்-ஆடவர்களுடைய, பேர் எழில்-மிக்க அழகையுடைய, ஆகத்தோடு-மார்போடு, பொரும்-தாக்குகின்ற, துணைக்கொங்கை அன்ன-இரண்டாகியகொங்கைகளை ஒத்த, பொருவு இல் - உவமையில்லாத, கோங்கு அரும்பின்மாடு-கோங்கரும்புகளினருகில், மருங்கு என-தம்மிடையைப்போல, குழையும் - துவள்கின்ற, கொம்பின்-பூங்கொம்பினிடத்திருந்த, மடம் - இளமையாகிய, பெடைவண்டும் - பெண்வண்டுகளும், தங்கள்-தம்முடைய, கருங்குழல்-கரியகூந்தலில், களிக்கும்-களிக்கின்ற, வண்டும்-ஆண்வண்டுகளும், கடிமணம்புணர-புதுமணம்பொருந்த, கண்டார்-பார்த்தார்கள்—எ-று. ()

944. படிகத்தின் றலமென்றெண்ணிப் படர்சுனை மூழ்கிப்புக்க
சுடுகைப்பூங் கமலமன்ன சுடர்மதி முகத்தினார்தம்

வடகத்தோ டுடுத்ததூசை மாசினீர் நனைப்பநோக்கிக்
கடகத்தை யெறிந்துதம்மிற் கருங்குழல் வீரர்நக்கார்.

(இ-ள்.) படிகத்தின் தலம் என்று எண்ணி-பளிக்குப்பாறையாகிய இடமென்று கருதி, படர்சுனை - பரந்தசுனையில், முழுகிபுக்க-விரைந்துபுகுந்த, சுடிகை-நுதலணி யணிந்த, பூகமலம் அன்ன - தாமரைமலரையொத்த, சுடர்-ஒளிபொருந்திய, மதி-பூர்ணசந்திரனையொத்த, முகத்தினார் - முகத்தையுடைய மாதர்களுடைய, வடகத்தோடு-மேலுத்தரீயத்துடன், உடுத்ததூசை-இடையிலுடுத்த ஆடையை, மாசு இல்-களங்கமில்லாத, நீர்நனைப்ப-அச்சுனைநீரானதுநனைக்க, நோக்கி-பார்த்து, கருகுழல்-பெரியவீரக்கழலையணிந்த, வீரர் - வீரர்கள், கடகத்தை எறிந்து - தம்கடகங்களை யெறிந்து, (படிகத்தின்றலத்துக்கும் மாசினீருக்குமுள்ள வேற்றுமையை யறிந்துகொண்டு) தம்மில்நக்கார்-தமக்குள்ளே சிறித்தார்கள்—எ-று. (௪௮)

முகமென்றதனால் மதி பூர்ணசந்திரனை யுணர்த்தியது. வேற்றுமை தோன்றாமையினால் கடகத்தை எறிவாராயினார்.

945. பூவணை பலவுங்கண்டார் பொன்னரி மாலைகண்டார்
மேவருங் கோபமன்ன வெள்ளிலைத் தம்பல்கண்டார்
ஆவியி னினியகொண்கர்ப் பிறிந்தறி வழிந்தவிஞ்சைப்
பாவையர் வைகத்தீய்ந்த பல்லவ சயநங்கண்டார்.

(இ-ள்.) பூவணைபலவும்கண்டார்-புஷ்பசயநங்கள் பலவற்றையும் கண்டார்கள், பொன்னரிமாலைகண்டார்-பொன்னரிமாலைகளைக்கண்டார்கள், மேவு அரு-அடைதற்கரிய, கோபம் அன்ன - இந்திரகோபத்தையொத்த, வெள்ளிலைதம்பல் கண்டார்-வெற்றிலை தம்பலத்தைக் கண்டார்கள், ஆவியின் - தம்முயிரினும், இனிய - இனியராகிய, கொண்கர்ப்பிறிந்து - நாயகருக்கு வேறாகப்பிறிந்ததனால், அறிவு அழிந்த-அறிவுகெட்ட, விஞ்சைபாவையர் - வித்யாதர மங்கையர்கள், வைக - சயநித்தலால், தீய்ந்த-கருகிப்போன, பல்லவம்சயநம்-தளிராற்செய்த படுக்கைகளை கண்டார்-கண்டார்கள்—எ-று. (௪௯)

பூவணைமுதலியவற்றை ஓரிடத்திற்கண் புற்றாரென்பது தோன்றத்தனிப் பயனிலைகொடுத்தார். தம்பலம் என்பது தம்பல் என ஈறுதொகுத்தது

946. பானலங் கண்களாடப் பவளவாய் முறுவலாடப்
பீனவெம் முலையினிட்ட பெருவிலை யாரமாடத்
தேன்முரன் றளகத்தாடத் திருமணிக் குழைகளாட
வானவர் மகளிராடும் வாசநா றூசல்கண்டார்.

(இ-ள்.) பானல் - கருங்குவளைமலர்போன்ற, கண்கள் ஆட - கண்கள்பிறழவும், பவளவாய்-பவளம்போன்றவாயில், முறுவல் ஆட - நகைதோன்றவும், பீனம்-பெருமையையுடைய, வெம்-(கண்டார்க்கு)விருப்பத்தைத்தருகிற, முலையின் இட்ட-முலைமேலணிந்த, பெருவிலை-மிக்கவிலையையுடைய, ஆரம்-முத்துவடங்கள், ஆட-அசையவும்,தேன்-வண்டுகள், முரன்று-ஒலித்து, அளகத்து-கூந்தலில், ஆட-சுழலவும், திரு-அழகாகிய, மணிக்குழைகள் - ரத்நகுண்டலங்கள், ஆட - (செவிகளில்) அசையவும், வானவர்மகளிர் - தேவமாதர்கள், ஆடும் - ஆடுகின்ற, வாசம்நாறு - பரிமளம்வீசுகிற, ஊசல்கண்டார்-ஊசல்களைக்கண்டார்கள்—எ-று.

பானலம் என்பதில் அம் சாரிசை, அழகெனினுமாம்

947. சுந்தர வானமாதர் துவரிதழ்ப் பவளவாயும்
அந்தமில் சுரும்புந்தேனு மிஞிறுமுண் டல்குல்விற்கும்
பைந்தொடி மகளிர்கைத்தோர் பசையில்லை யென்னவிட்ட
மைந்தரி னீத்ததீந்தேன் வள்ளங்கள் பலவுங்கண்டார்.

(இ-ள்.) சுந்தரம்-அழகான, வானமாதர்-விண்ணாட்டுப் பெண்களுடைய, துவர் இதழ் - சிவந்த அதரத்தையுடைய, பவளவாயும்-பவளக்கிண்ணத்தையொத்தவாயும், அந்தம் இல் - முடிவில்லாத, சுரும்பும் - கருவண்டுகளும், தேனும்-தேன் வண்டுகளும், மிஞிறும் - பொன் வண்டுகளும், உண்டு-பருகி, அல்குல் விற்கும்-அல்குலை விற்கின்ற, பைந்தொடி - பசும்பொன் வளையலையணிந்த, மகளிர் - பொருட் பெண்டிர், கைத்து-வெறுத்து, ஓர் பசையில்லை என்ன - சிறிதும் பசையில்லையென்று, விட்ட-பற்றுவிட்ட, மைந்தரின் - ஆடவர்களைப்போல, நீத்த-நீக்கிவிட்ட, தீந்தேன் வள்ளங்கள்பலவும் - இனியநறாக்கிண்ணங்கள் பலவற்றையும், கண்டார் - கண்டார்கள்-எ-று

பவளம் கருவியாகுபெயர். கைத்து ஓர்பசை என்பதற்கு பொருளிற் சற்றும் பசை எனவும் பொருள்கூறலாம்.

948. அற்பக லாக்குஞ்சோதிப் பளிக்கறை யமளிபாங்கர்
மற்பக மலர்ந்ததிண்டோள் வானவர் மணந்தகோலம்
விற்பகை நுதலினார்தங் கலவியின் வெறுத்துநீத்த
கற்பக மீன்றமாலை கலனொடுங் கிடப்பக்கண்டார்.

(இ-ள்.) வில் - வில்லோடு, பகை-பகைக்கின்ற, நுதலினார் - நெற்றியையுடைய தெய்வப்பெண்கள், அல் - இரவை, பகல் ஆக்கும்-பகலாக்குகின்ற, சோதி-ஒளியையுடைய, பளிக்கறை - பளிக்கறைக்குள், அமளிபாங்கர் - சயநத்தில், மல்-மற்போரையுடைய, பகமலர்ந்த - (மலர்கள்) இதழ்கள்விழ மலர்கின்ற, திண்தோள் - திண்ணிய தோள்களையுடைய, வானவர் - தேவர்களோடு, மணந்த-கூடின, கோலம் - அலங்காரத்தை, தம் கலவியின் - தமது கலவிக் காலத்தில், வெறுத்துநீத்த - வெறுத்துக் கழித்த, கற்பகம் ஈன்றமாலை - கற்பகதரு கொடுத்த மலர்மாலைகள், கலனொடும் - ஆபரணங்களோடும், கிடப்பக்கண்டார் - கிடக்கப்பார்த்தார்கள்—எ-று. (௩௨)

949. கையென மலரவேண்டி யரும்பிய காந்தணோக்கிப்
பையர விவையென்றஞ்சிப் படைக்கண்கள் புதைக்கின்றாரும்
நெய்தவழ் வயிரப்பாறை நிழலிடைத் தோன்றும்போதைக்
கொய்திவை தருதிரென்று கொழுநரைத் தொழுகின்றாரும்.

(இ-ள்.) கை என - தமது கையைப்போல, மலரவேண்டி-மலரவிரும்பி, அரும்பியகாந்தள் - அரும்புவிட்ட காந்தள்களை, நோக்கி - பார்த்து, இவை - இவைகள், பை - படத்தையுடைய, அரவு என்று அஞ்சி-பாம்புகளென்று பயந்து, படை-வேற்படைபோன்ற, கண்கள் - கண்களை, புதைக்கின்றாரும் - மூடிக்கொள்பவர்களும், நெய்தவழ் - நெய்தல் பொருந்திய, வயிரப்பாறை - வைரமணிப்பாறையின், நிழல் இடை - நிழலில், தோன்றும் - காணப்படுகிற, போதை - மலரை, இவை கொய்து தருதிர் என்று - இவைகளைப் பறித்துத் தாருங்கோளென்று, கொழுநரை - தங்கணவர்களை, தொழுகின்றாரும் - வணங்குகின்றவர்களும்—எ-று. (௩௩)

மலர்நிழலை மலரெனக் கருதினாரென்றமையி னெய்தல் தவழ்கிற வைரப் பாறையைத் தெளிர்ந்த நீர்நிறைந்த சுனையெனக் கருதினாரென்பதுங் கொள்க.

950. பின்னங்க ளுகிரிற்செய்து பிண்டியந் தளிர்கைக்கொண்ட
சின்னங்கள் முலேயினப்பித் தேமலர் கொய்கின்றாரும்
வன்னங்கள் பலவுந்தோன்ற மணியொளிர் மலையினில்லா
அன்னங்கள் புகுந்தவென்ன வகன்சுனே குடைகின்றாரும்.

(இ-ள்.) பிண்டி - அசோகமரத்தினது, அம் - அழகிய, தளிர் - தளிர்களை, உகிரின் - நகங்களினல், பின்னங்கள்செய்து-சிறுகூறுகளாக்கி, கைக்கொண்ட-கையிற் கொண்டிருக்கிற, சின்னங்கள் - சின்னங்களை, முலேயின் - முலேமுகட்டில், அப்பி - பொருந்தச் சேர்த்து, தேம் - தேனையும் வாசனேயையுமுடைய, மலர் - மலர்களை, கொய்கின்றாரும் - பறிக்கின்றவர்களும், வன்னங்கள் பலவும் தோன்ற - பல நிறங்களுந் தோன்றும்படி, மணி - நவரத்நங்கள், ஒளிர்-ஒளிர்கின்ற, மலேயில் - மலேகளில், நில்லா - நிலேபெற்றிராத, அன்னங்கள் - அன்னப்பறவைகள், புகுந்த என்ன - பிரவேசித்தாற்போல, அகல் - அகலமாகிய, சுனே - சுனேகளில், குடைகின்றாரும் - முழுகுகின்றவர்களுமாயினர்—எ-று. (௬௪)

நெய்தற் கருப்பொருளாகலின், "மலேயினில்லாவன்னங்கள்" என்றார். "வன்னங்கள் பலவுந்தோன்ற" என்றதனல், "மணி" என்பதற்கு, நவமணியெனப் பொருள் கூறலாயிற்று.

வேறு.

951. ஈனு மாழை யிளந்தளி ரேயொளி
ஈனு மாழை யிளந்தளி ரேயிடை
மானும் வேழமு நாகமு மாதர்தோள்
மானும் வேழமு நாகமு மாடெலாம்.

(இ-ள்.) இடை - அம்மலேயினிடையில், ஈனும் - தளிர்க்கின்ற, மாழை - மாமரத்தினது, இளதளிர் - இளமையாகிய தளிரை, ஏய் - ஒத்த, ஒளி - ஒளியை, ஈனும்- தருகின்ற, மாழை - பொன்னினது, இளதளிர் - அச்சவடிவினவாகிய தகடுகளுள்ளன, மாடு எலாம் - அம்மலேயைச்சார்ந்த விடமெல்லாம், மானும் - மானினங்களும், வேழமும் - யானேகளும், நாகமும் - வாநரங்களும், மாதர்தோள்-மங்கையர்களுடைய தோளே, மானும் - ஒக்கும், வேழமும் - மூங்கில்களும், நாகமும் - புன்னே மரங்களுமுள்ளன—எ-று. (௬௫)

952. திமிர மாவுடற் குங்குமச் சேதகம்
திமிர மாவொடுஞ் சந்தொடுந் தேய்க்குமால்
அமர மாதரை யொத்தொளி ரஞ்சொலார்
அமர மாதரை யொத்ததவ் வானமே.

(இ-ள்.) (சேனேயிலுள்ள) திமிரம் - இருள்போன்ற, மா - நிறமமைந்த யானேகள், உடல் - தம்முடலில், குங்குமச்சேதகம்-குங்குமச்சேற்றாலெழுதிய கோலத்தை, திமிர - பொருந்தும்படி, மாவொடும் - மாமரங்களோடும், சந்தொடும்-சந்தன மரங்களோடும், தேய்க்கும் - உராயும், அமரமாதரை - தெய்வ மங்கையர்களே, ஒத்து-உருமுதலியவற்றாலொப்பாகி, ஒளிர் - ஒளிர்கின்ற, அம் - அழகிய, சொலார் - சொல்லேயுடைய அரசமங்கையர்கள், அமர - தங்குதலினல், மாதரை- (அம்மலேயைச்சார்ந்த) பெரிய நிலமானது, அ வானம் - அந்த ஸ்வர்க்கத்தை, ஒத்தது -ஒத்திருந்தது-எ-று.

தேவர்விழுதலியவற்றாலடையு மருமையுடைத்தாகலின், "அவ்வானம்" என்றார்.

953. பேர வாவொடு மாசுணம் பேரவே
பேர வாவொடு மாசுணம் பேரவே
ஆர வாரத்தி னோடு மருவியே
ஆர வாரத்தி னோடு மருவியே.

(இ-ள்.) பேர் அவாவொடு - (நீருட்குளிக்கப்) பேராசையால், மாசுணம்-பெரும் பாம்புகள், பேர - இடம்விட்டுப் பெயரவும், வே - மூங்கில்கள், பேர - பெயரவும், ஆவொடு - ஆச்சாமரங்களும், மா - பெருமையாகிய, சுணம் - (குரத்தியரிடித்த) பராகமும், பேர - பெயரவும், ஆரவாரத்தினோடு - பேராசையோடு, ஆர - நிரம்ப, ஆரத்தின் - முத்துகளை, மருவி - கலந்து, ஓடும் - ஒழுகாநிற்கும், அருவி - அம்மலையருவி—எ-று. (௫எ)

"ஆவாவொடு" என்பது, எதுப்பொருட்டு. "ஆவொடு"; என்பது, மாசுணத்தோடு எனவாராமையால், எண்ணுப்பொருட்டன்று; இறைநிறைப்பொருட்டு.

954. புகலும் வாளரிக் கண்ணியர் பொற்புயம்
புகலும் வாளரிக் கண்ணியர் பூண்முலை
அகிலு மாரமு மாரவங் கோங்குமே
அகிலு மாரமு மாரவங் கோங்குமே.

(இ-ள்.) புகலும் - (உரு ஆற்றல் முதலியவற்றால்) எடுத்துக்கூறும், வாள்-ஒளியமைந்த, அரி - பொன்னிறவண்டுகள் மொய்த்த, கண்ணியர் - மலர்மாலையணிந்த ஆடவர்களது, பொன்புயம் - பொன்னணியணிந்த புயங்களில், வாள் - வாளையொத்த, அரி - செவ்வரிவாய்ந்த, கண்ணியர் - கண்களையுடைய மங்கையர்களது, பூண்முலை - பூணணிந்தமுலைகள், புகலும் - சேரலும், அகிலும் - அகிற்சேவையும், ஆரமும் - முத்துவடமும், ஆர - நிரம்ப, அங்கு - அப்புயமுலைகளில், ஓங்கும் - சிறக்கும், அகிலும் - அம்மலையினிடமெங்கும், ஆரமும் - சந்தனமரங்களும், ஆர் - ஆத்திமரங்களும், அம் - அந்த வழகிய, கோங்கும் - கோங்குமரங்களும், மே - மேவுவன—எ-று. (௫அ)

ஏனைய பூச்சுகளினும் மணிவடங்களினுஞ் சிறந்தனவென்பார் அகிலுமாரமுமென்றும், புயமுலைகளிரண்டனு ளொன்றற் கணிந்தவை தழுவுங்கால் மற்றொன்றற்கும் பொருந்துதலால் அங்கோங்குமென்றுங் கூறினர். சந்தனத்தினும் அகில் தோய்வை - புகையாற் பெரும்பான்மையும் பயன்படுதலானும், ஆரம் நிலவெறித்தலேயன்றிப் பரிசத்தார் றண்மைசெய்தலானும், ஏனையவற்றினுஞ் சிறந்தனவாயின. அகில மென்பது அகிலெனக் கடைக்குறையா யிடத்தின் மேனின்றது. பொன்மகிலு மாரமு முறையே அவற்றினாகிய அணிக்குந் தோய்வைக்கும் வடத்திற்கு மாகலாற் கருவியாகுபெயர்கள். மே என்னுமுதனிலைத் தனிவினை கொள்வாருங்கள் வருநேர் என்றார்போல, வினைமுற்றுப் போருடந்தது,

955. துன் னரம்பை நிரம்பிய தொல்வரை
துன் னரம்பைய ரூருவிற் றோன்றுமால்
கின் னரம்பயில் கீதங்க ளென்னவாங்
கின் னரம்பயில் கின்றன ரேழைமார்

(இ-ள்.) துன் - இலைகளடர்ந்த, அரம்பை - வாழைமரங்கள், நிரம்பிய - வளநிறைந்த, தொல் - பழமையாகிய, வரை - அம்மலையினிடத்து, துன் - வந்த, அரம்பையர் - தெய்வமங்கையர்களுடைய, ஊருவின் - தொடைகளைப்போல, தோன்

றும் - விளங்காநிற்கும், இன்னரம் - இன்னரப்பறவைகள், பயில் - இயற்கையாய்ப் பாடுகின்ற, கீதங்கள் என்ன - இசைகளைக்கேட்பதுபோல, ஆங்கு - அம்மலையி னிடத்து, இன் - இனிய, நரம்பு - யாழிசையை, அயில்கின்றனர் - செவியாலுண் கின்றனர், ஏழைமார்-அரசமங்கையர்கள்-எ-று. (௫௯)

கீதங்களென்னலாம் எனப் பாடமோதுவாரு முளர்; அதனாற் பொருட் சிறப் பின்மை யறிக,

956. ஊறு மாகட மாவுற வூங்கெலாம்
ஊறு மாகட மாமத மோடுமே
ஆறு சேர்வன மாவரை யாடுமே
ஆறு சேர்வன மாவரை யாடுமே.

(இ-ள்.) மா - பெரிய, கடம் - காட்டிலுள்ள, மா-மரங்கள், ஊறுஉற - சிதை வைப்பொருந்த, ஊங்கு எலாம் - அம்மலையி னிடையிடங்களெல்லாம், ஊறும் ஆ- சுரங்குமாறு, கடமா - யானைகளினது, மதம் - மதப்பெருக்கு, ஓடும் - ஓடாநிற்கும், ஆறு - வழியில், சேர் - திரட்சியாகிய, வனம் - வனங்களில், ஆ - ஆச்சாமரங்க ளும், வரை - மூங்கில்களும், ஆடும் - அசையாநிற்கும், ஆறு - ஆறுகளில், சேர்வன - நீருண்ணச்செல்வன, மா - அழகிய, வரை ஆடும் - மலையாடுகளும்-எ-று. (௬௦)

வரை - சினையாகுபெயர். "சேர்" என்பது, திரட்சியை யுணர்த்திய வுரிச்சொ லென்றுணர்க "கவர்விருப்பாகுஞ் சேரேதிரட்சி, வியலென்கிளவி யகலப்பொ ருட்டே" என்பதனால், உம்மை, ஆக்கம், ஏனைவிலங்குகளும் எனப்பொருடரலின்.

957. கல்லி யங்கு கருங்குற மங்கையர்
கல்லி யங்ககழ் காமர் கிழங்கெடா
வல்லி யங்க ணெருங்கு மருங்கெலாம்
வல்லி யங்க ணெருங்கி மயங்குமே.

(இ-ள்.) கல் - அம்மலையில், இயங்கு - உலவுகின்ற, கருகுறமங்கையர் - கருமை யாகிய குறப்பெண்கள், கல்லி - கல்லியென்னுங் கருவியால், அங்கு - அவ்விடத் தில், அகழ் - தோண்டி, காமர் - அழகிய, கிழங்கு - கிழங்குகளை, எடா - எடுப்ப தற்காக, வல்லியங்கள் - புலிகள், நெருங்கு - அடர்ந்த, மருங்கு எலாம் - மலைப் பக்கமெல்லாம், வல் - திண்மையாகிய, இயங்கள் - தொண்டகமென்னுந் தோற் கருவிமுதலிய வாத்தியவோசைகள், நெருங்கி - மிகுந்து, மயங்கும் - வேற்றுமை யுணரப்படாமல் மயங்கும்-எ-று. (௬௧)

"அகழ்" என்னுமுதனிலைத் தனிவினை, மண் மாண்புனை என்பதுபோலச், செயவெனெச்சப்பொருடந்தது, செய்யா என்னும் வினையெச்சுகிளவி என்பத னல்வந்த "எடா" என்னும் ஆகாவீற்று வினைவெச்சம்-செயவெனெச்சத்திரிபு.

958. கோளி பங்கய மூழ்கக் குளிர்கயம்
கோளி பங்கய மூழ்கக் குலைந்தவால்
ஆளி பொங்கு மருவரை யூடிழிந்
தாளி பொங்கு மரம்பைய ரோதியே.

(இ-ள்.) குளிர் - குளிர்ந்த, கயம் - கயங்களில், கோள் - வலியையுடைய, இபம் - யானைகளும், கயம் - அவற்றின் கன்றுகளும், மூழ்க - முழுகுவதினால், கோளி - (கரையிலுள்ள) பூவாக்காய்க்குமரங்களும், பங்கயம் - தாமரைகளும்,

சூழ்க் - நீரிலழுந்தும்படி, குலைந்த - தன்னிற்குலைந்தன, ஆளி - சிங்கங்கள், பொங்கும் - மிகவும் வாழ்கின்ற, அரு - அளவிடலரிய, வரை ஊடு - மலையினின்றும், இழிந்து நீங்கிவந்து, அரம்பையர் - தெய்வப்பெண்களுடைய, ஓதி - கூந்தலில், ஆளி - வண்டுகள், பொங்கும் - களிக்கும்-எ-று. (௬௨)

ஆளி - நீட்டல்.

959. ஆக மாலய மாகவு ளாள்பொலி
வாக மாலென லாகிய தம்மலை
மேக மாலை மிடைந்தன மேலெல்லாம்
மேக மாலை மிடைந்தன கீழெலாம்.

(இ-ள்.) மேகமாலை - மேகவரிசைகள், மேல் எலாம்-மேற்புறமெல்லாம், மிடைந்தன - நெருங்கியனவாகி, மேக - தங்க, கீழ் எலாம் - அதன் கீழிடமெல்லாம், மாலை - மாலைக்கதிரொளியால், மிடைந்தன-செறியப்பட்டன, (ஆதலால்) அ மலை - அந்தசந்திரசைலம், ஆகம் - திருமார்பை, ஆலயமாக - இருப்பிடமாக, உளாள் - உடையவிரைவி, பொலி - விளங்குகின்ற, வாக - அழகையுடைய, மால் எனல் ஆகியது - இறைவனெனச் சொல்லலாறது-எ-று. (௬௩)

அம்மலை, இறைவனைப்போலவும், தன்மேற்றவழ்கின்ற மேகப்பரப்பின் கீழ்ப் பக்கத்தில் மாலைச்சூரிய கிரணங்கள் பாய்வதினுற் பொன்னிறம்பெற்று, அது திருமகளைப்போலவும் காணப்பட்டன, என்பது கருத்து. மேக - எ-து. வேவ - வேக, சாவ - சாக, என்பனபோலக் குச்சாரியை யேற்றுவந்தது.

960. பொங்கு தேனுகர் பூமி ஞிறுமென
எங்கு மாதரு மைந்தரு மீண்டியத்
துங்க மால்வரைச் சூழல்கள் யாவையும்
தங்கி நீங்கலர் தாமினி தாடுவார்.

(இ-ள்.) பொங்கு - பொங்குகின்ற, தேன் நுகர் - தேனையுண்கின்ற, பூ - பூவில் மொய்த்த, மிஞிறு ஆம் என - வண்டுகளாமென்னும்படி, எங்கும் - எவ்விடத்தும், மாதரும் மைந்தரும் - மங்கையரும் மாடவரும், ஈண்டி - நெருங்கி, அ-அந்த, துங்கம்-உயர்வாகிய, மால் - பெருமையையுடைய, வரைசூழல்கள்யாவையும் - மலைச்சாரல்களிளெல்லாம், தங்கி - வசித்து, நீங்கலர் - நீங்காதவர்களாய், தாம் - தாம், இனிது ஆடுவார் - இனிமையாக விளையாடுவார்-எ-று. (௬௪)

வண்டுகள் மலர்களிற்சென்று தேன்பருகுமாறுபோல, அம்மமலைவளங்களை யாங்காங்குச் சென்று நுகர்த்தனர் என்பது கருத்து.

961. இறக்க மென்பதை யெண்ணில ரெண்ணுங்கால்
பிறக்கு மென்பதோர் பீழைய தாதலால்
துறக்க மெய்திய தூயவ ரேயென
மறக்க கிற்றில ரன்னதன் மாண்பெலாம்.

(இ-ள்.) இறக்கம் என்பதை - இறங்குதலென்று சொல்லப்படுவதை, எண்ணுங்கால் - எண்ணினுல், ஓர் - ஒப்பற்ற, பீழை - துன்பத்தை, பிறக்கும் என்பது ஆதலால் - உண்டாக்குமென்று சொல்லப்படுவதாகையால், எண்ணிலர் - எண்ணுதவராகி, துறக்கம் எய்திய - விண்ணுலகத்தி லின்பத்தை யடைந்த, தூயவர்

என - தவத்தூய்மை யுடையார்போல, அன்னதன் - அம்மலையினது, மாண்பு எலாம் - வளங்களையெல்லாம், மறக்ககிற்றிலர் - மறந்திலர்-என்-று. (சுரு)

மாண்பு - குணவாகுபெயர், "பீழையாது" என்பதில், து - பகுதிப்பொருள் விகுதி, அ - சாரியை.

வே று.

962. மஞ்சார்மலை வாரண மொத்தது வானினோடும்
வெஞ்சாயை யுடைக்கதி ரங்கதன் மீதுபாயும்
பஞ்சானன மொத்தது மற்றது பாயவேறும்
செஞ்சோரி யெனப்பொலி வுற்றது செக்கர்வானம்.

(இ-ள்.) மஞ்சு ஆர் - மேகங்கள் நிறைந்த, மாலை-அஸ்தமய கிரியானது, வாரணம் ஒத்தது - யானையையொத்தது, வானின் - ஆகாயத்தில், ஓடும் - விரைந்து செல்லுகின்ற, வெம் சாயை உடை - வெவ்விய கிரணங்களையுடைய, கதிர் - சூரியன், அங்கு - அவ்விடத்து, அதன்மீதுபாயும் - அவ்வானைமேற்பாய்கின்ற, பஞ்சாநநம் ஒத்தது - சிங்கத்தையொத்தது, செக்கர்வானம் - செவ்வானமானது, அது பாய - அந்தச்சிங்கம் பாய்வதனால், ஏறும் - மேலேசிதறுகிற, செம்சோரி என - செவந்த உதிரம்போல, பொலிவுற்றது - விளங்கியது-எ-று. (சுசு)

மஞ்சார் மலையெனப் பொதுப்படக் கூறினாரேனும், செக்கர்வானம் முதலிய ப்ரஸ்தாபத்தாலும், வருவது மாலைக்கால மாகலானும் அஸ்தமயகிரியெனப் பொருளுரைக்கப்பட்டது. பஞ்சாநநம் விரிந்த முகமுள்ளது.

963. திணியார்சினை மாமரம் யாவையுஞ் செக்கர்பாயத்
தணியாத நறுந்தளி தந்தன போன்றுதாழ
அணியாரொளி வந்து நிரம்பலி னங்கமெங்கும்
மணியாலியன் றம்மலை யொத்ததம் மையில்குன்றம்.

(இ-ள்.) திணி ஆர் - பலம்பொருந்திய, சினை - கிளைகளையுடைய, மாமரம் யாவையும் - மாமரங்களெல்லாம், செக்கர்பாய - (தம்மேல்) செவ்வானவெளி பரவுதலால், தணியாத - குறையாத, நறுதளிர் - நல்லதளிர்களை, தந்தனபோன்று - தளிர்ந்தனபோன்று, தாழ - தளிர்ந்திருக்க, அணி ஆர் - அழகுநிறைந்த, ஒளி - அவ்வொளியானது, வந்து நிரம்பலின் - வந்து நிறைதலால், அ - அந்த, மை இல் குன்றம் - குற்றமற்றமலையானது, அங்கம் எங்கும் - தன்னுடம்புமுழுதும், மணியாலியன்ற - மணிகளாலிழைக்கப்பட்ட, மலை ஒத்தது-மலையையொத்திருந்தது. (சுஎ)

மாம்ரம் என்பதற்குப் பெரியமரமெனினுமமையும். தாழ்தல் - தொக்குதல் எனினுமாம்.

964. கண்ணுக்கினி தாகி விளங்கிய காட்சியாலும்
எண்ணற்கரி தாகி யிலங்கு சிரங்களாலும்
வண்ணக்கொழுஞ் சந்தனச் சேதக மார்பணிந்த
அண்ணற்கரி யோன்றனை யொத்ததவ் வாசில்குன்றம்.

(இ-ள்.) அ - அந்த, ஆசு இல்குன்றம் - குற்றமில்லாதமலையானது, கண்ணுக்கு - பார்ப்பவர் கண்களுக்கு, இனிது ஆகிவிளங்கிய - இனியதாகித்தோற்றுகிற, காட்சியாலும் - தோற்றத்தானும், எண்ணற்கு அரிது ஆகி இலங்கு - எண்ணுதற்கருமையுடையதாகி விளங்குகின்ற, சிறங்களாலும் - சிகரங்களையுடைமையானும்,

வண்ணம் - அழகிய, கொழு - செழுமையாகிய, சந்தநச்சேதம் - (செஞ்) சந்த நக்குழம்பை, மார்பு அணிந்த - மார்பிற்பூசிய, அண்ணல் - பெரியோனாகிய, கரியோன் தனை - திருமாலை, ஒத்தது - ஒத்திருந்தது-எ-று. (௬அ)

மேலைத் திருவித்தத்தினும் இத்திருவிருத்தத்தினும் மையில்குன்றம் ஆசில் குன்றமென்றார், "அளக்கலாகாவளவும்" அளக்கலாகாப் போருளும், துளக்கலாகா நிலையும், சேய்மைக்காட்சியும், வறப்பினும் வளந்தரூஉம் வண்மையுமாகிய இவற்றை யொருங்குடைய தென்றற்கு. அன்றிக் கர்மசாட்சியாகிய சூரியன் நாடோருந் தன்னிடத்துச் சிறிதுநேரந் தங்குதற் கிடனா யிருத்தாளெனினுமாம்.

965. ஊனும்முயி ரும்மனையா ரொரு வர்க்கொருவர்
தேனும் மிஞிறுஞ் சிறுதும்பியும் பம்பியார்ப்ப
ஆனை யினமும் பிடியும்மிக லாளியேறும்
மானுங்கலை யும்மென மால்வரை வந்திழிந்தார்.

(இ-ள்.) ஒருவர்க்கொருவர், - ஒருவருக்கொருவர், ஊனும் உயிரும் அனையார்-உடலுமுயிரும்போல்பவராகிய ஆடவரும் மாதரும், (தாமணிந்த மலர்மாலைகளில் மொய்த்த) தேனும்மிஞிறும் - தேன்வண்டுகளும் பொன்வண்டுகளும், சிறுதும்பியும் - சிறியதும்பிவண்டுகளும், பம்பி ஆர்ப்ப - நெருங்கியாரவாரிக்க, ஆனை இனமும் - ஆண்யானைக்கூட்டமும், பிடியும் - பெண்யானைகளும், இகல் - வலியமைந்த, ஆளியேறும் - ஆண்சிங்கங்களும், மானும்கலையும் - பெண்மான்களும் ஆண்மான்களும், என-போல, மால்வரை - பெரியசந்திரசைலத்தினின்றும், வந்து இருந்தார் - வந்திறங்கினார்கள்—எ-று. (௬௧)

பிடியும் என மேல்வருதலால் ஆனையினமும் என்பதற்கு ஆண்யானைக் கூட்டமும் எனப்பொருளுரைக்கப்பட்டது.

966. கால்வானகத் தேருடை வெய்யவன் காய்கடுங்கட்
கோல்மாய்கதிர்ப்புல் லுளைக்கொல்சினக் கோளரிம்மா
மேல்பான்மலையிற் புகவீங்கிருள் வேறிருந்த
மால்யானையீட்ட மெனவந்து பரந்ததன்றே.

(இ-ள்.) வானகம் - ஆகாயத்தின்கண்ணுலாவுகின்ற, கால் - ஒற்றைச்சக்கரமமைந்த, தேர் உடை - தேரையுடைய, வெய்யவன் - சூரியனாகிய, காய் - கோபிக்கின்ற, கடுங்கண் - அஞ்சாமையையுடைய, கோல்மாய் - அம்புகளைச்சிதைக்கின்ற, கதிர் - கிரணங்களாகிய, புல் - மெல்லிய, உளை - புறமயிரையுடைய, கொல்சினம் - கொல்லுகின்றசினத்தையுடைய, கோள் - பலமுள்ள, அரிமா - ஆண்சிங்கம், மேல்பால் - மேற்றிசையிலுள்ள, மலையில் - அஸ்தமயகிரியின்மேல், புக - ப்ரவேசித்தலால், வேறு இருந்த - தனித்திருந்த, வீங்கு இருள் - மிக்க இருள், மால் - மதமயக்கத்தையுடைய, யானை ஈட்டம் என - யானைக்கூட்டம்போல, வந்துபரந்தது - வந்து (உலகில்) பரவியது-எ-று (௭0)

கால்வானகத் தேருடைவெய்யவன் அரிமா என்பதற்கு,காலின்கண் வெண்மையாகிய நகங்களினது அழகையுடைய சூரியனாகிய ஆண்சிங்கமெனப் பொருள்கூறினும் அமையும்.

967. மந்தாரமுந்து மகரந்த மணங்குலாவும்
அந்தாரரசர்க் கரசன்ற னனீகவெள்ளம்

நந்தாதொலிக்கும் நாலைப்பெரு வேலையெல்லாம்
செந்தாமரைபூத் தெனத்தீப மெடுத்தவன்றே.

(இ-ள்.) நந்தாது - குறையாமல், ஒலிக்கும் - ஒலிக்கின்ற, நாலை-பேரொலியை யுடைய, பெருவேலையெல்லாம் - பெரியகடல்களிலெல்லாம், செந்தாமரை பூத்தென - செந்தாமரைமலர்கள் பூத்தாற்போல, மந்தாரம் - மந்தாரவிருக்ஷத்தினும், முந்தும் - முற்படுகின்ற, மகரந்தம்மணம்குலாவும் - தேனும்மணமுமமைந்த, அம் - அழகிய, தார் - மலர்மாலையையணிந்த, அரசர்க்கு அரசன் - சக்ரவர்த்தியின், அநீக வெள்ளம் - சேநாசமுத்திரத்தில், தீபம் எடுத்த - தீபங்கள் எடுக்கப்பட்டன - எ-று.

தன் - சாரியை. அன்று ஏ அசைகள்.

968. தண்ணக்கடலிற் றளிசிந்து தரங்கநீங்கி
விண்ணிற்சுடர் வெண்மதிவந்தது மீன்கள்சூழ
வண்ணக்கதிவெண் ணிலவின்றிரள் வாலுகத்தோ
டொண்ணித்திலமீன் றொளிர்வால்வளை யூர்வதொத்தே.

(இ-ள்.) (கடலையைநீங்கி வெண்மணற்பரப்பில்) ஒள் - ஒள்ளிய, நித்திலம் - முத்துகளை, ஈன்று - உயிர்த்து, ஒளிர் - பிரகாசிக்கிற, வாள்வளை - வெண்மையாகிய சங்கங்கள், ஊர்வது ஒத்து - உலாவுவதையொத்து, தண்கடலில் - குளிர்ச்சியாகியகடலில், தளிசிந்து - திவலைகளைத்தூவுகின்ற, தரங்கம்நீங்கி - அலைகளினின்றும் நீங்கி, விண்ணில் - ஆகாயத்தில், சுடர் - விளங்குகிற, வெண்மதி - வெள்ளியசந்திரன்வண்ணம் - அழகிய, கதிர் - தன்கிரணங்களாகிய, வெண்ணிலவின்திரள் - வெண்ணிலாக் கதிர்களென்கிற, வாலுகத்தோடு - வெண்மணலில், மீன்கள்சூழ - விண்மீன்கள் தன்னைச்சூழ்ந்துவர, வந்தது - வந்துதோன்றிற்று. (எஉ)

தன்னம் என்பதில் அம்சாரியை.

969. மீனாறுவேலை யொருவெண்மதி யீனும்வேலை
நோனாததனை நுவலற்கருங் கோடிவெள்ளம்
வானாடியரிற் பொலிமாதர் முகங்களென்னும்
ஆனாமதியங்கண் மலர்ந்தத னீகவெள்ளம்.

(இ-ள்.) மீன்நாறு - மீன்கள்சஞ்சரிக்கிற, வேலை-கடல், ஒருவெள்மதி ஈனும் வேலை - ஒருவெள்ளிய சந்திரனைப் பெருங்காலத்தில், அதனைநோனாது - அதைப் பொறுக்காமல், அநீகவெள்ளம் - சேநாசமுத்ரமானது, வான்நாடியரின் - விண்ணுலகத்துப்பெண்கள்போல, பொலி-விளங்குகிற, மாதர்-மாதர்களுடைய, முகங்களென்னும்-முகங்களென்கிற நுவலற்குஅரு- சொல்லுதற்கரிய, கோடிவெள்ளம் - கோடிவெள்ளமாகிய, ஆனாமதியங்கள் - கலைகள்தேயாதசந்திரர்களை, மலர்ந்தது- பெற்றது-எ-று. (எங)

முடைக்கடல் ஒருசந்திரனைப் பெறுமளவில் படைக்கடல் அநேக சந்திரர்களைப் பெற்றதென்பது கருத்து.

970. மண்ணும்முழ வின்னொலிமங்கையர் பாடலோதை
பண்ணும்நரம்பிற் பகையாவியற் பாணியோதை
கண்ணும்முடை வேயிசைகண்ணுள ராடரோடும்
விண்ணும்மரு ளும்படிவிம்மி யெழுந்தவன்றே.

(இ-ள்.) கண்ணுளர் - நாடகர்கள், ஆடல்தோறும்-ஆடிடங்களிலெல்லாம், மண்ணும்-மார்ஜனையமைந்த, முழவின் ஒலி-மத்தளவோசையும், மங்கையர் - மாதர்கள், பாடல் ஓதை - பாடலோசையும், பண்ணும்நரம்பின்-பண்களையுடைய நரம்பினோடு, பகையா இயல்-மாறுபடாத இயற்கையையுடைய, பாணி ஓதை-கைத்தாளவோசையும், கண் உடை - கணுக்களையுடைய, வேய் இசை - வேய்ங்குழலோசையும், விண்ணும்-விண்ணுலகத்தாரும், மருளும்படி - மயங்கும்படி, விம்மி எழுந்த-மிக்கொலித்தன—எ-று. (எச)

மண் பண் கண் என்பவற்றீற்றில் உகரச்சாரியையும் மகரமும் விரித்தல். விண்ணும் என்பதி னும்மை உயர்வுசிறப்பு, ஆடல் தானியாகுபெயர்.

971. மணியின்னணி நீக்கிவயங்கொளி முத்தம்வாங்கி
அணியும்முலை யாரகிலாவி புலர்த்துநல்லார்
தணியும்மது மல்லிகைத்தாமம் வெறுத்துவாசம்
திணியும்மிதழ்ப் பித்திகைக்கத்திகை சேர்த்துவாரும்.

(இ-ள்.) மணியின் அணிநீக்கி-மணிமாலையைநீக்கி, வயங்கு-விளங்குகின்ற, ஒளி-ஒளியையுடைய, முத்தம்வாங்கி-முத்துமாலையை (சேடியர்கொடுக்க) வாங்கி, அணியும்-அணிகின்ற, முலையார்-ஸ்தநங்களையுடையராகிய, அகில் ஆவி-அகிற்புகையால், புலர்த்தும் - (சந்தநக்கோல முதலியவற்றை) உலர்த்துகிற, நல்லார்-மாதர்கள், தணியும்-குளிர்கின்ற. மது - தேனையுடைய, மல்லிகை தாமம்-மல்லிகை மலர்மாலையை, வெறுத்து-வெறுத்து, வாசம்திணியும்-மணம்மிகுந்த, இதள்-இதழ்களையுடைய, பித்திகைகத்திகை-கருமுகைமாலையை, சேர்த்துவாரும்-அணிகின்றவர்களும் (ஆயினர்) எ-று. (எரு)

972. புனக்கொண்டவேழம் பிணிப்போர்புனை பாடலோதை
மதுக்கொண்டமாந்தர் மடவாரின் மிழற்றுமோதை
பொதுப்பெண்டிரல்குற் புனைமேகலைப் பூசலோதை
கதிக்கொண்டயானை களியாற்களிக் கின்றவோதை.

(இ-ள்.) (அந்தமலையினிடத்தில்) புதுகொண்ட - புதிதாகப்பிடித்த, வேழம்-யானைகளை, பிணிப்போர் - கட்டுவோர்களது, புனைபாடலோதை - அழகானபாட்டினோசையும், மதுகொண்டமாந்தர்-மதுவுண்டமக்கள், மடவாரின்-தம்மாதர்களிடத்தில், மிழற்றும் ஓதை - குழறிப்பேசுமோசையும், பொதுபெண்டிர் - பொதுமாதர்களுடைய, அல்குல்-நிதம்பப்ரதேசத்தில், புனை-அணிகின்ற, மேகலை-மேகலையினது, பூசல் ஓதை-பெரிதொலிக்கின்றவோசையும், கதம்கொண்டயானை-சினங்கொண்டயானைகள், களியால் - மதவெறியால், களிக்கின்றவோதை, செருக்குகின்றவோசை பிறவோசைகளும் (உள்ளன)—எ-று. (எகூ)

பிணிப்போர் பாடல் என்பது ஆறுவது வினைமுதற் பொருண்மையின் கண் வந்தகாரகம். புனைபாடல் என்பது-யானைகளைத் தளைக்குங்காற் பாடும்பாட்டு. பாடல் கருவியாகலின் புனையென்னும் வினைத்தொகை காரியப்பொருட்டு. இந்நான் கோசையேயன்றிப் பிறவோசையென்பது பயனிலகொடாமையாற் பெற்றும்.

973. உண்ணுவமுதன் னகலைப்பொரு ளுள்ளதுண்டும்
பெண்ணாரமுதம் மலையார்மனத் தூடல்பேர்த்தும்
பண்ணுனபாடல் செவிமாந்திப் பயன்கொளாடல்
கண்ணுவினிதுய்க்கவுங் கங்குங் கழிந்ததன்றே.

(இ-ள்.) உண்ணு - வாயினுல் உண்ணப்படாத, அமுது அன்ன - அமுதத்தையொத்த, கலை உள்ளது பொருள்-கலைகளி லுண்டாயிருக்கிறதாகிய பொருளை,உண்டும்-(ஐயம் திரிபு அற செவியா) லுண்டும். பெண் - பெண்களுள், ஆர் - கிடைத்தற்கரிய, அமுதம் அனையார்-அமுதத்தையொத்த மாதர்களுடைய, மனத்து-மனத்துத் தோன்றியதாகிய, ஊடல்பேர்த்தும் - ஊடலைத்தணித்தும், பண் ஆன - பண்ணோடிசைந்த, பாடல்-பாடலாகிய நறவை, செவிமாந்தி - செவியாற்பருகி, பயன்கொள்-பாடாலினர்த்தத்தைக்கொண்ட, ஆடல்-நடநத்தை, கண்ணுல்-கண்களால், இனிது உய்க்கவும்-இனிமையாக நடத்தவும், கங்குல்கழிந்தது-அன்றிரவு நீங்கியது—எ-று.

கலைப்பொருள் சாதியொருமையாதலால் உள்ளதென வொருமை முடிபேற்றது. கலைபொருள் உள்ளது என நிறுத்தி, கலைப்பொருள்களில் உண்மைப்பொருளை என வுரைப்பினு மமையும். பண்என வேறு கூறினமையால், பாடல் என்ற தொழிற்பெயர் சொற்றொடருக்காய், அது சொற்றொடரின் பொருளுக்கானமையின் இருமடியாகுபெயர். பாடல் ஆடற்கு இனமாகலின் உம்மைகொடுத்துப் பிரிக்காது மாந்தியென்றும் பயன்கொ ளாடலென்றுங் கூறினர். பாடலின் பொருள்கொண்ட நடநமாவது பாடற்பொருளின்படி காட்டும் பாவனையோடு கூடிய நடநம்.

௧௫-வது. வரைகாட்சிப்படலம் முற்றும்.

---

# ௧௬-வது பூக்கொய்படலம்.



மலர்பறிப்பதைக் குறித்து கூறும்படலம்.

---

974. மீனுடை யெயிற்றுக்கங்குற் கனகனை வெகுண்டுவெய்ய
கானுடைக் கதிர்களென்னு மாயிரங் கரங்களோச்சித்
தானுடை யுதயமென்னுந் தமனியத் தறியுனின்று
மானுட மடங்கலென்னத் தோன்றினன் வயங்குவெய்யோன்.

(இ-ள்.) மீன் - விண்மீன்களாகிய, எயிறு உடை-பற்களையுடைய, கங்குல்-இரவாகிய, கனகனை - இரணியனை, வெகுண்டு-கோவித்து, கான் உடை - காடுபோல அடர்ச்சியையுடைய, கதிர்கள் என்னும்-கிரணங்களென்கிற, ஆயிரம் கரங்கள் ஓச்சி-ஆயிரங்கைகளைநீட்டி, தான் உடை - தான் உடைத்தாயிருக்கிற, உதயம் என்னும்-உதயகிரியென்கிற, தமனியம் தறியுள் நின்று-பொற்றூணினின்றும், மானுட மடங்கல் என்ன-நரசிங்கப்பெருமான்போல,வயங்கு வெய்யோன்-விளங்குகின்ற சூரியன், தோன்றினன்-உதித்தான்—எ-று. (௧)

சூரியன் உதயகிரியினின்று முதித்தது நரசிங்கப்பெருமான்போலப் பொற்றூணினின்றும் உதித்ததுபோன் றிருந்ததென்பது கருத்து.

975. முறையெலா முடித்தபின்னர் மன்னனு மூரித்தேர்மேல்
இறையெலாம் வணங்கப்போனு னெழுந்துடன் சேனைவெள்ளம்
குறையெலாஞ் சோலையாகிக் குழியெலாங் கழுநீராகித்
துறையெலாங் கமலமான சோனையா றடைந்ததன்றே.

(இ - ள்.) முறையெலாம் - நித்யாநுஷ்டாநங்களையெல்லாம், முடித்தபின்னர் - முடித்தபிறகு, மன்னனும் - சக்ரவர்த்தியும், மூரி - பலமமைந்த, தேர்மேல்-ரதத்தின்மேல், இறை எலாம் - அரசரெல்லாரும், வணங்க-தொழ, போனான்-சென்றான், உடன் - உடனே, சேனைவெள்ளம் எழுந்து - சேநா சமுத்ரமானது எழுந்து, குறையெலாம் - தான்பாயாத இடங்களிலெல்லாம், சோலை ஆகி-சோலைகளையுடையதாகி, குழியெலாம் - பள்ளமான இடங்களிலெல்லாம், கழுநீர் ஆகி-கழுநீர்மலர்களை யுடையதாகி, துறையெலாம்-நீர்த்துறைகளிலெல்லாம், கமலம் ஆன-தாமரைமலர்களை யுடையதான, சோணையாறு அடைந்தது-சோணையாறறைச் சேர்ந்தது—எ-று.

மன்னனும் என்னு மும்மை இறந்தது தழீஇயது.

976. அடைந்தவ ணிறுத்தபின்ன ரருக்கனு மும்பர்ச்சேர்ந்தான்
மடந்தையர் குழாங்களோடு மன்னரு மைந்தர்தாமும்
குடைந்துவண் டுறையுமென்பூக் கொய்துநீ ராடமைதீர்
தடங்களு மடுவுஞ்சூழ்ந்த தண்ணறுஞ் சோலைசார்ந்தார்.

(இ-ள்.) அவண் அடைந்து-அவ்விடத்தையடைந்து, இறுத்தபின்னர்-தங்கின பிறகு, அருக்கனும்-சூரியனும், உம்பர்சேர்ந்தான்-ஆகாயத்தினிடையில் சேர்ந்தான், மடந்தையர் குழாங்களோடு-மாதர்கூட்டங்களுடன், மன்னரும்-அரசரும், மைந்தர் தாமும்-ராஜகுமாரரும், வண்டு-வண்டுகள், குடைந்து-கிண்டி,உறையும்-தங்குகின்ற, மெல்பூ - மெல்லியமலர்களை, கொய்து - பறித்து, நீர்ஆட-நீராடுதற்கு, மைதீர்-குற்றமற்ற, தடங்களும்-தடாகங்களும், மடுவும்-மடுக்களும், சூழ்ந்த-சூழ்ந்திருக்கிற, தண்-குளிர்ச்சியையுடைய, நறு-பரிமளமுள்ள, சோலை-சோலையை, சார்ந்தார்-அடைந்தார்கள்—எ-று. (௩)

அருக்கனும் என்னுமும்மை இறந்தது தழீஇயது. மடந்தையர் - தத்தம்மனைவியர். மன்னரும் என்பதை யடுத்திருத்தலால் மைந்தர் என்றது ராஜகுமாரர்கள் மேலது. தாம் அசை. மைதீர் என்னும் விசேடணம் தடங்களையும் மடுக்களையும் விசேடித்துநின்றது, அவைமைதீர்ந்திருத்தலானது - தம்மிடத்தாடினார்க்குச் சரீராரோக்யத்தை யுண்டாக்குகை, தெளிவு, மணற்பாங்காயிருக்கை, எவ்விடத்தும் மார்புக்கு மேற்படாமல ஒருமட்டமான ஆழமுடைத்தாதல் என்னும் இக்குணங்களையுடையதாயிருத்தல்.

977. திண்சிலை புருவமாகச் சேயரிக் கருங்கணம்பால்
புண்சில செய்வரென்று போவன போன்றமஞ்ஞை
பண்சிலம் பணிவாயார்ப்ப நாணினாற் பறந்தகிள்ளை
ஒண்சிலம் பார்ப்பமாத ரொதுங்குதோ றொதுங்குமன்னம்.

(இ-ள்.) (அவ்விடத்துவந்தமாதர்கள்) புருவம்-(தம்முடைய) புருவங்களை, திண்சிலை ஆக வலியமைந்த விற்களாகக்கொண்டு - சே அரி கருகண் - செவ்வரி படர்ந்த கரியகண்களாகிய, அம்பால் - அம்புகளால், சிலபுண்செய்வர் என்று-சிலபுண்களைத் (தம்மிடத்து) உண்டாக்குவார்களென்று (கருதி,) மஞ்ஞை-அவ்விடத்துச் செல்லாநின்ற) மயில்கள், போவனபோன்ற-(அஞ்சிப்) போவனவற்றையொத்தன, கிள்ளை-(அவ்விடத்துள்ள) கிளிகள், பண்சிலம்பு-பண்கள்தொனிக்கின்ற, அணிவாய்-(அவர்களுடைய) அழகியவாயினால், ஆர்ப்ப-பேச, (கேட்டு அந்தக்சுவைதம்மொழியி வில்லாமையால்) நாணினால் - நாணத்தினால், பறந்த - பறந்தன, அன்னம் - (அவ்விடத்

துள்ள) அன்னங்கள், ஒள்சிலம்பு ஆர்ப்ப - ஒள்ளிய காற்சிலம்புகளொலிக்கும்படி, மாதர் ஒதுங்குதோறு-மாதர்கள்நடக்குந்தோறும், ஒதுங்கும்-(அந்தநடையைக்கற்று) நடப்பன—எ-று. (ரு)

ஒதுங்கும் என்பதற்கு, நடை யழகுக்குத் தோற்று நாணி யெதிர்நில்லா தொதுங்குவன என்றுரைப்பினுமாம்.

978. செம்பொன்செய் சுருளுந்தெய்வக் குழைகளுஞ் சேர்ந்துமின்னப்
பம்புதே னலம்பவொல்கிப் பண்ணையி னாடல்நோக்கிக்
கொம்பொடுங் கொடியனாரைக் குறிப்பறிந் துணர்த்தல்தேற்றார்
வம்பவி ழலங்கன்மாலை மைந்தரு மயங்கிநின்றார்.

(இ-ள்.) செம்பொன்செய் - செம்பொன்னினாற்செய்த, சுருளும்-ஓலைச்சுருளும், தெய்வம்-தெய்வத்தன்மையமைந்த, குழைகளும்-குண்டலங்களும், சேர்ந்துமின்ன-கூடிமின்னவும், பம்புதேன் அலம்ப - நெருங்கியவண்டுகளொலிக்கவும், ஒல்கி - அசைந்து, பண்ணையின் - தோழிக்கூட்டத்தோடு, ஆடல்-விளையாடுதலை, நோக்கி-பார்த்து, கொம்பொடும் - பூங்கொம்புகளோடு, கொடி அன்னாரை - பூங்கொடியை யொப்பவராகிய தம்மனைவியரை, குறிப்பு அறிந்து - அடையாளந்தெரிந்து, உணர்தல்தேற்றார் - தெளியாதவர்களாய், வம்பு அவிழ்-மணத்தொடுவிரிகின்ற, அலங்கல்-பூமாலைகளையும், மாலை-மணிவடங்களையுமணிந்த, மைந்தரும்-ஆடவரும், மயங்கிநின்றார்-பிரமித்துநின்றார்கள்—எ-று. (௬)

மைந்தரும் என்னுமும்மை உயர்வுசிறப்பு. வேற்றுமை யுணராமைக்குக் காரணம் கொம்புங்கொடியும் போதுகளையு மலர்களையுமுடையனவாய் வண்டுகளொலிக்கக் கூட்டமாகக் காற்றினாலசைந்தாடுதல், வம்பு அவிழ் அலங்கல் என்றமையால் பூமாலையென்றும், மாலை என்றமையால் மணிவடமென்றும் பொருளுரைத்தனம்.

979. பாசிழைப் பரவையல்குற் பண்டரு கிளவித்தண்டேன்
மூசிய கூந்தன்மாதர் மொய்த்தபே ரமலைகேட்டுக்
கூசின வல்லபேச நாணின குயில்களெல்லாம்
வாசகம் வல்லார்முன்னின் றியாவர்வாய் திறக்கவல்லார்.

(இ-ள்,) வாசகம்வல்லார் முன்நின்று - வாக்சாதுர்யமுள்ளவர்களுக் கெதிரினின்று, வாய்திறக்கவல்லார்-வாய்திறந்து பேசவல்லவர்கள், யாவர்-எவர், (ஒருவருமில்லை ஆதலால்) பாசு இழை - பசியபொன்னணியணிந்த, பரவை-பரப்பாகிய, அல்குல் - நிதம்பப்ரதேசத்தையும், பண்தருகிளவி - பண்போலுமின்சொல்லாகிய, தண்தேன்-குளிர்ச்சியாகிய தேனையும், மூசியகூந்தல்-அடர்ந்தகூந்தலையுமுடைய, மாதர்-மாதர்கள், மொய்த்த-கூடியிருக்கிற, பேர் அமலை-பேரொலியை, குயில்கள் எல்லாம் கேட்டு-குயில்களெல்லாம்கேட்டு, கூசின அல்ல-பயந்தனவல்ல, பேசநாணின-பேச வெள்கின—எ-று. (௭)

யாவர் என்னும்வினா இன்மை குறித்துநின்றது. பேரொலிக்கஞ்சியன்று இன்சொற்சுவைக்கு நாணிப் பேசாதிருந்தனவென்பது கருத்து.

980. நஞ்சினுங் கொடியநாட்ட மமுதினும் நயந்துநோக்கிச்
செஞ்சவே கமலக்கையாற நீண்டலும் நீண்டகொம்பர்
தஞ்சிலம் படியின்மென்பூச் சொரிந்துடன் றாழ்ந்தவென்றால்
வஞ்சிபோன் மருங்குலார்மாட் டியாவரே வணங்கிலாதார்.

(இ-ள்.) நஞ்சினும்கொடியநாட்டம் - விஷத்தினுங்கொடியனவாகிய கண்க ளால், அமுதினும் நயந்துநோக்கி - அமுதத்தினும் விரும்பிப்பார்த்து, கமலம்கை யால் - தாமரைமலர்போன்ற கைகளால், செஞ்செவேதீண்டலும் - செவ்வையாகத் தீண்டுதலும், நீண்டகொம்பர் - உயர்ந்துநின்ற பூங்கொம்புகள், தம் - தம்முடைய, சிலம்பு - சிலம்பணிந்த, அடியில் - பாதங்களில், மெல்பூசொரிந்து - மெல்லியமலர் களைச் சொரிந்து, உடன் - உடனே, தாழ்ந்த என்றால் - வணங்கினவென்றால், வஞ்சிபோல் - கொடியையொத்த, மருங்குலார்மாட்டு - இடையையுடையமாதர்களை, வணங்கிலாதார் - வணங்காதவர்கள், யாவர் - எவர்கள், (ஒருவருமில்லை)—எ-று. (எ)

ஓரறிவுயிர்கள் தாழுமாயின் ஐயறிவுயிர்கள் தாழுமாறு சொல்லவேண்டாதா யிற்று.

981. அம்புயத் தணங்கினன்னா ரம்மலர்க் கைகள்தீண்ட
வம்பிய லலங்கற்பங்கி வாளரி மருளுங் கோளார்
தம்புய வரைகள்வந்து தாழ்வன தளிர்த்த மென்பூங்
கொம்புகள் தாழுமென்றல் கூறலாந் தகைமைத் தொன்றோ.

(இ-ள்.) அம்புயத்து - தாமரைமலரிலெழுந்தருளிய, அணங்கின் அன்னார்-திரு மகளையொத்தமாதர்கள், அம் - அழகாகிய, மலர் - தாமரைமலர்போன்ற, கைகள் - கைகளால், தீண்ட - தீண்டுதலால், வம்பு இயல் - மணமமைந்த, அலங்கல் - பூமா லையையணிந்த, பங்கி - சிகையையுடைய, வாள் - ஒளிபொருந்திய, அரி - சிங்கங் கள், மருளும் - தம்மினமென்று மயங்குதற்குரிய, கோளார் - தன்மையையுடைய ஆடவர்களுடைய, புயம்வரைகள் - புயமலைகள், வந்துதாழ்வன - வந்து வணிங்கா நிற்பன, (ஆயின்) தளிர்த்த - தழைத்த, மெல் - மெல்லிய, பூகொம்பு - பூங்கொம்பு கள், தாழும் என்றல் - தாழ்வன என்றுசொல்லுதல், கூறல் ஆம் - எடுத்துச்சொல் லுதற்குரிய, தகைமைத்து - தன்மையை யுடையதாகிய, ஒன்றோ - ஒருபொருளோ, (அன்று)—எ-று. (அ)

வாளரிமருங்கோள் என்றது - கம்பீரநடை, சரீரபலம், சமர்க்கஞ்சாத்தறு கண்மை என்றிவை முதலியவற்றை. ஓ-எதிர்மறை. தம் சாரியை.

982 நதியினுங் குளத்தும்பூவா நளினங்கள் குவளையோடு
மதிநுதல் வல்லிபூப்ப நோக்கிய மாலைத்தும்பி
அதிசய மெய்திப்புக்கு வீழ்ந்தன வலைக்கப்போகா
புதியன கண்டபோழ்து விடுவரோ புதுமைபார்ப்பார்.

(இ-ள்.) நதியினும் - நதிகளிலும், குளத்தும் - குளங்களிலும், பூவா - பூவாத, நளிநங்கள் - தாமரைமலர்களை, குவளையோடு - குவளைமலர்களுடன், மதிநுதல் - அர்த்தசந்திரன்போன்ற நெற்றியையுடைய, வல்லி - பூங்கொடிகள், பூப்ப - மலர, நோக்கிய - (அவற்றைப்) பார்த்த, மாலைதும்பி - வரிசையாக வருகிறதும்பிகள், அதி சயம் எய்தி - அதிசயத்தையடைந்து, புக்கு வீழ்ந்தன - புகுந்து மொய்த்தன, புது மைபார்ப்பார் - புதுமையைக்காண விரும்புவோர், புதியனகண்டபோழ்து - புதிய வற்றைப்பார்த்தபோது, விடுவரோ - விடுவார்களோ, (விடார்) (ஆதலால்) அலைக்க - ஓட்டவும், போகா - நீங்கிப்போகா—எ-று. (௯)

983. உலந்தரு வயிரத்திண்டோ ளொழுகிவா றொளிகொள்மேனி
மலர்ந்தபூந் தொடையன்மாலை மைந்தர்பால் மயிலினன்னார்

கலந்தவர் போலவொல்கி யொசிந்தன சிலகைவாராப்
புலந்தவர் போலநின்ற வுளசில பூத்தகொம்பர்.

(இ-ள்.) உலம்தரு - திரள்கல்லையொத்த, வயிரம் - வயிரக்கல்லினது, திண் - திண்மையமைந்த, தோள் - தோள்களையும், ஒழுகி - நேர்மையாகி, வார் - நீண்ட, ஒளிகொள் - ஒளியைக்கொண்ட, மேனி - மேனியையும், மலர்ந்த - பூத்த, பூ - புஷ்பங்களால், தொடையல் - தொடுத்தலமைந்த, மாலை - மாலையையுமுடைய, மைந்தர்பால் - தம்நாயகரிடத்து, கலந்தவர் - சேர்ந்தவராகிய, மயில் அன்னார்போல-மயிலையொத்த மாதர்கள்போல, (பூத்தகொம்பர்) சில - பூத்தகொம்புகளிற்சில, ஒல்கி ஒசிந்தன - அசைந்து துவண்டன, பூத்தகொம்பர்சில - பூத்தகொம்புகளிற்சில, புலந்தவர்போல - கூடியுங்கூடுதலில்லாத மாதரைப்போல, கைவரா - கைக்கெட்டாதனவாய், நின்றவுள - நிமிர்ந்துநின்றவையுள—எ-று. (௧௦)

தொடையல் - விகுதி மேல்விகுதிபெற்ற தொழிலாகுபெயர். இன்சாரியை.

984. பூவெலாங் கொய்துகொள்ளப் பொலிவில துவளநோக்கி
யாவையாங் கணவர்கண்ணுக் கழகில விவையென்றெண்ணிக்
கோவையும் வடமும்நாணுங் குழைகளுங் குழையப்பூட்டிப்
பாவையர் பனிமென்கொம்பை நோக்கினர் பரிந்துநிற்பார்.

(இ-ள்.) பாவையர் - பாவைபோலுமாதர்கள், பூ எல்லாம் - புஷ்பங்களையெல்லாம், கொய்து கொள்ள - பறித்துக்கொள்வதனால், பொலிவு இல - பொலிவில்லனவாகி, துவள - துவளாநிற்க, நோக்கி - பார்த்து, இவை - இவைகள், கணவர்கண்ணுக்கு - கணவர்களுடைய கண்களுக்கு, யாவை ஆம் - எத்தன்மையன ஆகும், அழகு இல - அழகில்லன, என்று எண்ணி - என்று நினைத்து, கோவையும் - (தாம் பூண்டிருந்த) மணிமாலையையும், வடமும் - முத்துவடத்தையும், நாணும் - பொன்ஞாணையும், குழைகளும் - குண்டலங்களையும், குழைய - துவளும்படி, பூட்டி - தரித்து, பனி - குளிர்ச்சியையுடைய, மெல் கொம்பை - மெல்லிய பூங்கொம்புகளை, நோக்கினர் - பார்த்து, பரிந்துநிற்பார் - விரும்பிநிற்பார்கள்—எ-று. (௧௧)

தம்மழகிழப்பைநோக்காது, கணவர்களிப்பேதம் களிப்பாகக்கொள்ளுதல் கற்புடையோ ரொழுக்கமாதலால், பூப்பறித்த, கொம்புகளுக்குத் தம்மணிகளைப் பூட்டிப் பரிந்துநின்றனரென்பது கருத்து.

வேறு.

985. துறும்போதினிற் றேன்றுவைத் துண்டுழல் தும்பியீட்டம்
நறுங்கோதை யோடு நனைசின்னமு நீத்தநல்லார்
வெறுங்கூந்தன் மொய்க்கின்றன வேண்டல வேண்டுபோதும்
உறும்போக மெல்லாம் நலனுள்வழி யுண்பரன்றே.

(இ-ள்.) உறும்போகம் எல்லாம் - அடையத்தக்க போகங்களையெல்லாம், நலன் உள்வழி - இன்பமுண்டானவிடத்தில், உண்பர் அநுபவிப்பார்கள், (ஆதலால்) துவைத்து - மிதித்து (மலர்த்தி,) துறும் - அடர்ந்த, போதினில் - பேரரும்புகளிலுள்ள, தேன் - தேனை, உண்டு - குடித்து, உழல் - (அவற்றைநீங்கா) துலவுகின்ற, தும்பி ஈட்டம் - வண்டுக்கூட்டங்கள், வேண்டுபோதும் - தாம் விரும்புதற்குரிய போதுகளையும், வேண்டல - விரும்பாதனவாகி, நறுகோதையோடு - நறுவிய மலர்மாலையோடு, நனை - குளிர்ந்த, சின்னமும் - சின்னங்களையும், நீத்த - நீக்கிய, நல்லார்-

(கற்புமுதலிய நல்லியற்கைக ளமைந்த) மாதர்களுடைய, வெறு கூந்தல்-வெறுமையாகிய கூந்தல்களை, மொய்க்கின்றன - மொய்த்துக்கொண்டிருக்கின்றன—எ-று. ()

அன்று ஏ-அசைகள், மலர்ச்சின்னங்களையும், மலர்மாலைகளையும் நீத்த கூந்தல்களை மொய்ப்பதற்குக் காரணம் அவற்றின் இயற்கைமணம் உளதாதலாலென்க.

986. மெய்ப்போ தினங்கைக் கணியன்னவள் மென்பளிங்கில்
பொய்ப்போது தாங்கிப் பொலிகின்றதன் மேனிநோக்கி
இப்பாவை யெங்கோற் குயிரன்னவ ளென்னவுன்னிக்
கைப்போதி னோடுநெடுங் கண்பனி காரநின்றாள்.

(இ-ள்.) போதில்நங்கைக்கு - திருமகளுக்கு, மெய் - உண்மையாகவே, அணி அன்னவள் - ஆபரணம்போல மிக்க அழகையுடையாள் ஒருத்தி, மென்பளிங்கில் - மெல்லியபளிங்குக்கல்லில், பொய்போதுதாங்கி பொலிகின்ற - நிழலாகிய போதைத் தாங்கிவிளங்குகின்ற, தன் மேனிநோக்கி - தன் சரீரநிழலைப்பார்த்து, (ஒரு பெண்ணெனக்கருதி) இப்பாவை - இந்தப்பெண்ணனவள், எம்கோன்கு - எமது நாயகனுக்கு, உயிர் அன்னவள் என்ன - உயிர்போல்வாளென்று, உன்னி - நினைத்து, கைபோதினோடு - தன் கைம்மலரோடு, நெடுகண் - நெடியகண்களினின்றும், பனிநீர், கார - ஒழுக, நின்றாள் - நின்றனள்—எ-று. (௧௩)

இப்பாவையை நம்கணவன் கண்டானாயின் நம்மேற் காதலொழிவானென்றும், இவ்வழகின்சிறப்பு நமக்கில்லையென்றும் கருதியழுதாளென்பது கருத்து. பொலிகின்ற என்னும் பெயரெச்சம் மேனியென்னும் பெயர்கொண்டது. கார்தல் போதுக்கில்லையேனும் வீழ்தலுளதாகலின், ஒடுவுருபு வேறுவினையுடனிகழ்ச்சிக்கண் வந்தது. பனி பண்பாகுபெயர். சாயை ஆதலால் தாமரை மலரல்லாமையால் பொய்ப்போதென்றார்.

987. கோளுண்ட திங்கள் முகத்தாளொரு கொம்பொர் மன்னன்
தோளுண்ட மாலையொரு தோகையைச் சூட்டநோக்கித்
தாளுண்ட கச்சாற் றகையுண்ட முலைக்கணாலி
வாளுண்ட கண்ணின் மழையுண்டென வாரநின்றாள்.

(இ-ள்) கோள் - ராகு என்னுங் கிரகத்தினால், உண்ட - (ஒருபுறம்) கவரப்பட்ட, திங்கள் - பூர்ணசந்திரனையொத்த, முகத்தாள் - முகத்தையுடையவளாகிய, ஒருகொம்பு - ஒரு பூங்கொம்புபோல்வாள், ஓர்மன்னன்-ஓரரசன், தோள் உண்ட மாலை - தன்தோளிற் றரித்திருந்தமாலையை, ஒருதோகையைச்சூட்ட - ஒரு மயிலன்னாளாகிய தன் மனையாளுக்குச்சூட்ட;நோக்கி - (அதை)பார்த்து, தாள் உண்ட - முடிக்கயிறமைந்த, கச்சால் - கச்சினால், தகை உண்ட - கட்டப்பட்ட, முலைக்கண் - ஸ்தநங்களின்மேல், வாள்உண்ட - வாளையொத்த, கண்ணில் - கண்களில் மழை உண்டு என - மழையுளதென்றுசொல்லும்படி, ஆலிவார - நீர்த்துளிகளொழுக, நின்றாள் - நின்றனள்—எ-று, (௧௪)

இவ்வாறு என்கணவன் சூட்டப்பெற்றிலேனெனக் கவன்றாளென்பதுகருத்து. அன்றி, ஓர் மன்னன் தன் மனைவியிருவருள் தன்னோடு வாழ்க்கைப்பட்டவளுக்குத் தோள்மாலையைச்சூட்டத், தன் கணவனது வன்புடைமைக்கு மனம் பொறாமையால் கவன்றாள் என்பது. கோள்சடைக் குவமையாதலால் ஒருபுறம் என்பது வருவிக்கப்பட்டது,

988. மயில்போல் வருவாள் மனங்காணிய காதல்மன்னன்
செயிர்தீர்மலர்க் காவினோர் மாதவிச் சூழல்சேர
மயில்வா ளிறைபண்டு பிறிந்தறியாள் பதைத்தாள்
உயிர்நாடி யொல்கும் முடல்போ லலமந்துழன்றாள்.

(இ-ள்.) மயில்போல் - மயிலைப்போல, வருவாள் - (தன்னிடத்து) வருபவளாது, மனம் - மனநிலையை, காணிய - அறியும்பொருட்டு, காதல்மன்னன்-அவளிடத்தாசையுள்ள ஒருமன்னவன், செயிர்தீர் - குற்றமற்ற, மலர்காவின் - மலர்ச்சோலையின், ஓர்மாதவிசூழல் - ஒருமாதவிப்பந்தரில், சேர - மறைந்திருக்க, பண்டு - பூர்வத்தில், இறை - சிறிதுகாலமும், பிறிந்து அறியாள்-வேறாகி அறியாதவளாய், பயில்வாள் - உடனுறைபவளாகிய அந்தப்பெண், பதைத்தாள் - துடித்து, உயிர் நாடி ஒல்கும் - உயிரைநாடித்தளர்கின்ற, உடல் போல் - சரீரம்போல, அலமந்து உழன்றாள் - சுழன்றுதிரிந்தாள் —எ-று. (கஙு)

மாதவி - வசந்தமல்லிகைக்கொடி. சூழல் - கொடிவீடு, இதனை வடநூலார் லதாக்ருஹம் என்பர். மாதவி குருக்கத்திமரம் என்பாருமுளர். அது இண்டைக்கியையாமையுணர்க. உயிர்நீங்கவுடல் பதைப்பதுபோலக் காதலன் நீங்கக் காதலி பதைத்தாள் என்பது கருத்து.

989. மைதாழ் கருங்கண்கள் செவப்புற வந்துதோன்ற
நெய்தாவும் வேலானொடு நெஞ்சுபுலந்துநின்றாள்
எய்தாதுநின்ற மலர்நோக்கி யெனக்கி தீண்டக்
கொய்தீதி யென்றோர் குயிலைக்கரங் கூப்புகின்றாள்.

(இ-ள்.) மை தாழ் - மைதங்கிய, கருகண்கள் - கரியகண்களில், செவப்பு - செந்நிறமானது, உற - மிகவும், வந்துதோன்ற - வந்துதோன்றும்படி, நெய்தாவும் - நெய்பூசிய, வேலானொடு - வேலையுடைய நாயகனோடு, நெஞ்சு புலந்து நின்றாள் - மனத்தாற்பிணங்கிநின்றவோர்மாது, எய்தாதுநின்ற - தனக்கெட்டாமல்நின்ற, மலர் நோக்கி - மலர்களைப் பார்த்து, (அவற்றைப் பறிக்குமாற்றலிலளாய்) எனக்கு - (பறித்துக்கொடுப்பவரில்லாத) எனக்கு, இது - இதனை, ஈண்ட - மிகுதியும், கொய்து - பறித்து; ஈதி என்று - கொடுப்பாயென்று, ஓர் குயிலை - ஒரு குயிலைப் பார்த்து, கரம்கூப்புகின்றாள் - கைகூப்பி வணங்குவாளாயினாள்—எ-று. (கசு)

எனக்கெனுஞ் சொல்லாற்றல் துணையின்மையை விளக்குகின்றது. தலைவனோடு புலந்துநின்றவள் அவனுக்குத் தன்முடைத்திரக்கந்தோன்றக் குயிலைநோக்கி இவ்வாறு கூறினாளென்பது கருத்து.

990. செம்மாந்த தெங்கின் னிளநீரையொர் செம்மனோக்கி
அம்மாவிவை மங்கையர் கொங்கைக ளாகுமென்ன
எம்மாதர் கொங்கைக் கிவையொப்பன வென்றோரேழை
விம்மா வெதும்பா வெயராமுகம் வெய்துயிர்த்தாள்.

(இ-ள்,) செம்மாந்த - உயர்ந்துவளர்ந்த, தெங்கின் - தென்னமரத்திலுள்ள, இளநீரை - இளநீர்களை, ஓர்செம்மல் - ஒருதலைவன், நோக்கி - பார்த்து, (வியந்து, அம்மா - ஆச்சரியம், இவை - இவைகள், மங்கையர் - மாதர்களுடைய, கொங்கைகள் ஆகும் - ஸ்தநங்களுக்கு நிகராகும், என்ன - என்று சொல்ல, ஓர் ஏழை - அவனருகிலிருந்த வொருமாது, இவை - இவைகள், எம்மாதர் கொங்கைக்கு - எந்தமா

தர்களுடைய ஸ்தநங்களுக்கு, ஒப்பன என்று - நிகராயிருப்பனவென்று சொல்லி விம்மா - அழுது, வெதும்பா - உள்ளங் கொதித்து, முகம் வெயரா - முகம் வேர்த்து, வெய் துயிர்த்தாள் - வெப்பமாக மூச்சுவிட்டாள்—எ-று. (௧௭)

மங்கையர் கொங்கைகள் என்றமையால், இவன் நம்மிடத்தேயன்றிப் பிற மாதரிடத்தும் நசையுளானெனக்கருதி அவனை வெறுத்தனளென்பது கருத்து. கணவன்கூற்றாகிய மாதர் சாதிப்பன்மை. இவள்கூற்றாகிய மாதர் பலர்பால்.

991. போரென்ன வீங்கும் பொருப்பன்ன பொலங்கொள்திண்டோள்
மாரன் னனையான் மலர்கொய்திருந்தானை வந்தோர்
காரன்ன கூந்தற் குயிலன்னவள் கண்புதைப்ப
ஆரென்ன லோடு மனலென்ன வயிர்துயிர்த்தாள்.

(இ-ள்.) கார் அன்ன - மேகத்தை யொத்த, கூந்தல் - கூந்தலையுடைய, குயில் அன்னவள் - குயிலையொத்தவளாகிய ஒருத்தி வந்து - வந்து, போர் என்ன-போர் என்றுசொல்லவே, வீங்கும் - பூரிக்கின்ற, பொருப்பு அன்ன - மலையைநிகர்த்த, பொலம்கொள் - அழகைக்கொண்ட, திண்தோள் - வலியதோள்களையுடைய, மாரன் அனையான் - மன்மதனை யொப்பவனாய், மலர் கொய்து இருந்தானை - பூப்பறித்துக்கொண்டிருந்த தன்கணவனை, கண்புதைப்ப - கண்களைமூடலால், (அவன்) ஆர் என்னலோடும் - யாரென்று கேட்டலோடும், (அவள்) அனல் என்ன - நெருப்பைப்போல, அயிர்த்து - அவனிடத்துச் சந்தேகித்து, உயிர்த்தாள் - நெட்டுயிர்ப்பெறிந்தாள்—எ-று, (௧௮)

ஆரென்று அவன்வினவினு ஞதலால், நம்மைப்போல இவனிடத்து விளையாட்டுக்குரியார் பலருளர் என்றயிர்த் துயிர்த்தா ளென்பது கருத்து. வீங்கும் தோள் எனவும், அனலென்ன வுயிர்த்தாள் எனவும் இயையும். குயில் அன்னவள் என்றது மொழியாற் குயிலையொப்பவ ளென்றபடி.

992. ஊற்றார் நறைநாண் மலர்மாத ரொருங்குவாசச்
சேற்றா விளையாத செந்தாமரைக் கைகணீட்டி
ஏற்றார்க் குதவா னிடையேந்தின னின்றொழிந்தான்
ஏற்றா னுதவான் கடுவச்சையன்போ லோர்மன்னன்.

(இ-ள்,) மாற்றான் - மறுக்காதவனும், உதவான் - கெடாதவனுமாகிய, கடுவச்சையன்போல் - கடுங்குணத்தையுடைய லோபனைப்போல, ஓர்மன்னன் - ஓரரசன், வாசம்-நறுமணமமைந்த, சேற்றால் விளையாத-சேற்றில்விளையாத, செந்தாமரை-செந்தாமரைமலர்போன்ற, கைகள் - கைகளை, ஒருங்குநீட்டி-ஒருமிக்க நீட்டி, மாதர் ஏற்றார்க்கு - ஏற்றவர்களாகிய தன்மாதர்களுக்கு, ஊற்று ஆர் - ஊறுதலமைந்த, நறை - தேனையுடைய, நாள் - புதிய, மலர் - மலர்களை, உதவான் - (இனியமுகத்தனாய்) உதவானாக, இடை - இருவருக்குமிடையே, ஏந்தினன் - ஏந்தினவனாய், நின்று ஒழிந்தான் - நின்றுவிட்டான்—எ-று. (௧௯)

உவமையில் மாற்றான் என்பதற்கேற்பப் பொருளில் இனியமுகத்தன் என்பது வருவிக்கப்பட்டது. பன்மாத ரிடையென்னது மாதரிடை யென்றமையால் இருவர் என்பது பெறப்பட்டது. தான்கொணர்ந்த நாள்மலர்களைப்பகுத்துச் சமன்செய்து ஒருங்குதருவானாயினும் என்னை மற்றவளோடொத்தாளாகக் கருதினன்றி என்னைச் சிறந்தவர்களாகக் கருதிலன் என இருவரும் தனித்தனி மாறுபட்டு ஊடுவாராகலானும், அதுகருதி மறுத்தானாயினும் அன்னது பெறுவானாகலானும் இவ்வாறு செய்தானென்பது கருத்து,

993. தைக்கின்ற வேனோக்கின டன்னுயி ரன்னமன்னன்
மைக்கொண்ட கண்ணா ளெதிர்மாற்றவள் பேர்விளம்ப
மெய்க்கொண்ட நாணந் தலைக்கொண்டிட விம்மிமென்பூக்
கைக்கொண்டு மோந்தா ளுயிர்ப்புண்டு கரிந்தவன்றே.

(இ-ள்.) தைக்கின்ற - மார்பிற்றைக்கின்ற, வேல் - வேல்போன்ற, நோக்கினள் - கண்களை யுடையாளொருத்தி, தன் உயிர் அன்ன - தன்னுயிரையொத்த, மன்னன் - அரசன், மை கொண்ட - மையெழுதப்பெற்ற, கண்ணாள் எதிர் - கண்களையுடைய அம்மாதுக்கெதிரில், மாற்றவள்பேர்விளம்ப - மற்றவளது பெயரைச் சொல்ல, (அதனால்) மெய் கொண்ட-உண்மையான, நாணம் - நாணமானது, தலை கொண்டிட - அதிகப்பட, விம்மி - அழுது, மெல் பூ - மென்மையாகிய மலர்களை, கைகொண்டு - கையாலெடுத்து, மோந்தாள், - மோந்தனள், (அவை) உயிர்ப்பு உண்டு - உயிர்ப்பின் வெம்மைபட்டு, கரிந்த - கரிந்துபோயின—எ-று. (உ0)

ஒருமன்னன் மாற்றாள்பாலுள்ள ஆசையினாலோ சோர்வினாலோ அவள்பேரைச்சொல்லக் கேட்டவள் நம்முயிர்போல இவனை யாம்கருதி அன்புசெய்தொழுகாநிற்க, இவன் அவளிடத்து மிக்க விருப்பமுள்ளவனா யிருக்கின்றானெனக்கருதி, தான் இதுவரைசெய்த அன்புமுதலியவற்றைப்பற்றி நாணி, தன் பொய்யொழுக்கத்தால் வஞ்சித்துவைத்தானெனக் கலுழ்ந்து அவனோடூடினளென்பது கருத்து.

994. திண்டே ராசன் னொருவன்குலத் தேவிமார்தம்
ஒண்டாமரை வாண் முகத்துண்மிளி ருண்கணெல்லாம்
கண்டா தரிப்பத் திரிவான்மதங் கவ்வியுண்ண
வண்டா தரிக்கத் திரிமாமத வானையொத்தான்

(இ-ள்.) திண்தேர் அரசன் ஒருவன் - திண்மையாகிய தேரினையுடைய ஒரு, அரசன், குலம் - உயர்வாகிய, தேவிமார் - தன்மனைவியர் பலருடைய, ஒள் - ஒட்பமான, தாமரை - தாமரைமலர்போன்ற, வாள் முகத்துள் - ஒளிபொருந்திய முகங்களில், மிளிர் - விளங்குகின்ற, உண் கண் எலாம் - மையுண்ட கண்களெல்லாம், கண்டு - (தன்கட்டழகை) கண்டு, ஆதரிப்ப - விரும்பும்படி, திரிவான் - திரிபவனாயினான், (அவன்) மதம்-மதத்தை, கவ்வி உண்ண-வாய்நிறையக் கொண்டுண்ண, வண்டு ஆதரிப்ப - வண்டுகள் விரும்பும்படி, திரி - திரிகிற, மா - பெரிய, மதயானை ஒத்தான் - மதயானையை ஒத்திருந்தான்—எ-று. (உக)

தேவிமார் என்றமையால் பலரென்பது பெற்றது. தம்-சாரியை.

995. சந்திக்கலா வெண் மதிவா ணுத லாள்தனக்கும்
வந்திக்க லாகு மடவாட்கும் வகுத்துநல்கி
நிந்திக்க லாகா வுருவத்தின் னின்றபோழ்தும்
சிந்திக் கலாப மயிற்கண்கள் செவந்துபோனார்.

(இ-ள்.) நிந்திக்கலாகா வுருவத்தின் - (சாமுத்திரிக நூலோரால்) குற்றங்கூறல் பொருந்தாதவடிவையுடைய ஓராசன், சந்தி-சந்தியாகாலத்தில் தோன்றுகின்ற, கலாவெண்மதி - கலைகளையுடைய வெண்பிறைபோன்ற, வாள் - ஒளிபொருந்திய, நுதலாள் தனக்கும் - நெற்றியையுடைய ஒருநாயகிக்கும், வந்திக்கல் ஆகும் - (அருந்ததிமுதலிய கற்புடைமகளிரும்) வந்தனைசெய்தற்குரிய, மடவாட்கும்-(மற்றொரு நாயகிக்கும், வகுத்துநல்கி - (சமனாகப்) பகிர்ந்துகொடுத்து, நின்ற போழ்தும் -

யாதொரு குற்றமுமிலாளுய் நின்றகாலத்தும், (அவ்விருவரும்) கலாபம் - (அந்த மலர்களையேயன்றி அவன்கண்டுகளிக்கத் தாம் தரித்திருந்த) கலாபத்தையும், சிந்தி - அறுத்துச்சிதறி, அயில்-வேல்போன்ற, கண்கள்செவந்துபோனர் - கண்கள் செவந்துசென்றார்கள்—எ-று. (உஉ)

வருத்து என்னும் வினைக்கு மலர்கள் என்னுஞ் செயப்படுபொருள் அதிகாரத் தான் வருவிக்கப்பட்டது. ஒப்பவருத்து நல்கினமை அவர் சினத்திற்குக் காரண மாயிற்று. கலாபம், மாதர் இடையணிகளுளொன்று, அது பதினறு கோவையுள் ளது. கண்கள்செவத்தல் சினக்குறிப்பு. நுதல் என மேல்வருதலால் மதி பிறை யெனப்பட்டது. அன்றி, "கடியிளகு திங்ற கல்லாமந்தி" என்பதிற்போல இவ் விடத்துக்கல்லா என்பதில் லகரந் தொகுத்தலாய்க் கலா எனநின்று இளமையை யுணர்த்திற்றெனினுமாம்.

வே று.

996. வந்தெங்குந்தம் மன்னுயிரேயோ பிறிதொன்றே
கந்தந்துன்றுஞ் சோர்குழல்காணர் கலைபேணர்
அந்தந்தோறு மற்றுகுமுத்த மவைபாரார்
சிந்துஞ்சந்தத் தேமலர்நாடித் திரிவாரும்.

(இ-ள்.) சிந்தும் - தேனைச்சிந்துகிற, சந்தம் - அழகாகிய, தேம் மலர் - வாசனை பொருந்தியமலர்கள், தம் மன் உயிரேயோ - தமது நிலைபேறுடையவுயிரோ, பிறிது ஒன்றே - அதுபோன்ற மற்றேரின்பொருளோ, (அறியோம்) கந்தம்துன்றும் - மயிர்ச்சாந்து பூசப்பட்டு நெருங்கியிருக்கிற, சோர்குழல்காணர்-அவிழ்கின்ற கூந் தலை நோக்காமலும், கலைபேணர் - (சோர்கின்ற) ஆடையைக்காவாமலும், அந்தம் தோறும் அற்று உகும் - கடைப்பூட்டுத்தோறு மற்றுச்சிந்துகிற, முத்தமவைபாரார்- முத்தங்களைமதியாமலும், எங்கும்வந்து - அச்சோலையினிடமெங்கும் வந்து, நாடி திரிவாரும் - (மலர்களைத்) தேடித்திரிவாரும்—எ-று. (உ௩)

ஓ இரண்டும் ஐயப்பொருள். அறியோம் என்பது சொல்லெச்சம். விளையாட் டயர்தல் ஊடல்முதலியவற்றைக் கூறவே பூக்கொய்தலையொழிந்தன ரென்றவா றன்று, அத்தொழிலைவிடாது முயல்வார் பலருளரென்பார் இஃதீண்டுக்கூறினர்.

997. யாழொக்குஞ்சொற் பொன்னனையாளோ ரிகல்மன்னன்
தாழத்தாழா டாழ்ந்தமனத்தாள் தளர்கின்றள்
ஆழத்துள்ளுங் கள்ளம்நினைப்பா ளவனின்ற
சூழற்கேதன் கிள்ளையையேவித் தொடர்வாளும்.

(இ-ள்.) யாழ் ஒக்கும்சொல்-யாழினிசையையொத்த சொல்லையுடைய, பொன் அனையாள் - திருமகளையொப்பாளொருத்தி, இகல்மன்னன் - திண்மையையுடைய நாயகனுகிய ஓரரசன், தாழ-தன்னை வணங்காநிற்க, தாழாள் - தன்னெஞ்சிளகாதவ ளாய், தாழ்ந்தமனத்தாள் - (அவன் நீங்கியபின்) இளகிய மனத்தை யுடைய வளாய், தளர்கின்றள் - தளராநின்று, (அவனை அணையும்படி) ஆழத்து உள்ளும் - ஆழமா யெண்ணுகிற, கள்ளம் நினைப்பாள் - கபடமான எண்ணமுடையவளாய், அவன் நின்ற சூழல்கு - அவன்நின்ற இடத்துக்கு, தன் கிள்ளையை ஏவி - தன்கிளி யைச்செல்லவிடுத்து, தொடர்வாளும் - அதன்பின் தொடர்ந்துசெல்பவளும்—எ-று.

அவன்தாழ்ந்தபோது தானிசைந்திலளாதலால், தானேசெல்லுதற்கும் சென்றிணங்குதற்கும்நாணி, அவன் தன்னைக்கண்டு தன்னிடத் தன்புசெய்யுமாறு கிள்ளையையேவி, அதைநாடிச்சேல்பவள்போலச் சென்றனளென்பது கருத்து.

998. அந்தாரரகத் தைங்கணைநூறு யிரமாகச்
சிந்தாநின்ற சிந்தையினன்செய் குவதோரான்
மந்தாரங்கொண் டீகுதியோமா தவியென்றோர்
சந்தார்கொங்கைத் தார்குழலாள்பாற் றளர்வானும்.

(இ-ள்.) அம்தார் - அழகியமாலையையணிந்த, ஆகத்து - மார்பின்கண்ணே, ஐங்கணை, பஞ்சபாணங்களை, நூறு ஆயிரம் ஆக - நூறு ஆயிரம் என்னுங்கணக்காக, சிந்தாநின்ற - (மன்மதன்) பிரயோகிக்கப்பெற்ற, சிந்தையினன் - மனத்தையுடைய ஓரரசன், செய்குவது ஓரான் - மேல்தான் செய்தற்குரியதை யறியாதவனாய், (ஓர் மாதவியைநோக்கி) மாதவி-மாதவீ, (நீ) மந்தாரம்கொண்டு ஈகுதியோ - மந்தாரமலரைப்பூத்துச்கொடுக்கவில்லையோ, என்று-என்று வினவி, சந்து ஆர்கொங்கை - சந்தநந்தியிர்ந்த கொங்கைகளையும், தார்குழலாள்பால் - மாலையையணிந்த கூந்தலையுமுடைய ஒருமாதினிடத்தில், தளர்வானும் - துவள்கின்றவனும்-எ-று. (௨௫)

மாதவீ மந்தாரங்கொண் டீகுதியோ என்றமையால், இவள் இதுகாறும் இன்முகத்தினளாய் இன்பந்தந்து இப்போது தன்னியற்கைமாறித் துன்பந்தராநின்றனள் இதுதகுமோ, தகுமாயின், நீயும் உன்னியர்கைமலர்பூவாது மந்தாரமலர்பூத்துத் தருவாயென்பது குறிப்பெச்சம். அவள் தனக்கிணங்காளாகியும் தானவளையிழித்துக்கூறுங் கருத்திலனாதலால் சந்தார் கொங்கைமாதர் குழலாள் என்றான்.

999. நாடிக்கொண்டாள் குற்றம்நயந்தாண் முனிவாற்றாள்
ஊடிக்காணக் காட்டுநலத்தா ளுடனில்லாள்
தேடித்தேடிச் செய்தசெழும்பூ நறுமாலை
சூடிச்சூடிக் கண்ணடிநோக்கித் துவள்வாளும்.

(இ-ள்.) ஊடி - பிணங்கி, காண - (பின்னர்த்தன்நாயகன்) நுகரும்படி, காட்டும் - நுகர்விக்கின்ற, நலத்தாள் - இன்பத்தையுடையாளொருத்தி, குற்றம் நாடிக்கொண்டாள் - குற்றத்தைத்தானே தேடிக்கொண்டு, நயந்தாள் - (அதுதக்கதென) விரும்பி, முனிவு ஆற்றாள் - பிணக்கத்தைச்சகியாதவளாகி, உடன் நில்லாள் - அவனோடுகூடி நில்லாமல், (சென்று) தேடிதேடி செய்த - ஆய்ந்தாய்ந்து தொடுத்த, செழுபூநறுமாலை - செழியமலர்களாகிய நல்லமாலைகளை, சூடிசூடி - பலகாற்றரித்து, கண்ணடிநோக்கி - கண்ணாடியில் பார்த்து, துவள்வாளும் - சோர்வாளும்-எ-று. ()

கண்ணடிநோக்கித் துவள்வாள் என்றார். நறுமலர்ப்பூமாலை பலசமைத்துச் சூடிச் கண்ணடியிற்பார்த்து இவை நம்காதலன் கண்ணுக் கின்பந்தராவெனக் கழித்து வருந்தினளாதலான்.

1000. மறலிக்கூனும் வன்கதிர்வேலா னிடையேவந்
துறவிக்கோலம் பெற்றிலெனென்று னுடன்வாழ்விப்
பிறவிக்கொல்லே னென்செய்வதிப்பே ரணியென்றோர்
விறலிக்கிவா ளொத்திழையெல்லாம் விடுவாளும்.

(இ-ள்.) மறலிக்கு-யமனுக்கு, ஊண் ஆம்-உணவையுண்டாக்குகின்ற,வல்-வலிய, கதிர்-ஒளிதங்கிய, வேலான-வேலையுடைய தன்கணவன், இடையே வந்து உற-என் பால்வந்துசேரும்படி, இ கோலம்-இவ்வலங்காரத்தை, பெற்றிலென் என்றால்-பெற்றிலேனாயின், உடன்வாழ்வு-அவனைப்பிரியாதவாழ்க்கையை, இ பிறவிக்கு-இப்பிறப்பில். ஒல்லேன்-இயையப்பெற்றிலேன், இ - இந்த, பேர் அணி - பெருமையுள்ள ஆபரணம், என்செய்வது-யாதுபயனைச்செய்வது, என்று-என்றுசொல்லி, ஓர்விறலிக்கு-ஒருவிறலிக்கு, இழை எல்லாம்-ஆபரணங்களையெல்லாம், ஈவாள் ஒத்து-கொடுப்பவளாகி, விடுவாளும்-அவளைத்தன் கணவனிடத்துத் தூதுசெல்லவிடுபவளும்—எ-று.

தலைவனாகப் பெருமையால் கவல்கின்ற இம்மங்கையை விறலிநோக்கி, தலைவன் நின்னைச்சேயிடைப் பிரிவானல்லன், காவிடைச் செயற்கரியதோர் கருமவயப் பட்டான்போலும், அதுகொண்டு நீகவலற்கவென்றாளைநோக்கி,எவ்வினையையேனுந் தன்கைப்படையேயன்றி வேறுதுணைவேண்டாது முட்டின்றி எளிதின் முடிக்கு மாற்றலுடையா னென்பாள் மறலிக்கூணும் வன்கதிர்வேலான் எனவும், வருதல் பாணித்தலால் நீயேனு மவனுழைச்சேறற் கியைந்திலையோ வென்றாட்கு அவன் ஊடனிகழ்தற்குக் காரணமாகிய குற்றமுடையானாக யான்சேறல் தகுதியன்றென் பாள் இடையேவந்துஎனவும், அவனைப்பிறிந்தவழி யெற்றுக்குக்கோலம்வேய்ந்தனை யென்றாட்கு அவன் கண்டு மகிழ்ந்து என்னைப் புல்லுமாறன்றி வேறன் றென்பாள் உற எனவும், தான் பலகாற்சூடித் துவண்டவருத்தமும் அதனருமையுந்தோன்றஇக் கோலம் எனவும், பலசொல்லிப்பயனென்னை, யானிதுபோழ்து அவனை முயங்கப் பெறேனாயின் உயிர்வாழ்க்கை வேண்டேன் என்பாள் உடன்வாழ்விப்பிறவிக்கொல் லேன் எனவும், அவன் கண்டு உவக்கப்பெறாவையின் பயனிலதும்இழிந்ததுமாமென் பாள் என்செய்வ திப்பேரணி எனவும்கூறி, தன்கூற்றின் மெய்ப்பாடு தோன்றத் தானணிந்திருந்த மணியணிமுதலிய இந்து விடுவாளாயினா ளென்பது கருத்து.

1001. வம்பிற்பொங்குங் கொங்கைசுமக்கும் வலியின்றிக்
கம்பிக்குந்தந் நுண்ணிடைநோவக் கசிவாரும்
பைம்பொற்கிண்ணம் மெல்விரல்தாங்கிப் பயில்கின்ற
கொம்பிற்பிள்ளைக் கிள்ளையொளிக்கக் குழைவாரும்.

(இ-ள்.) வம்பின்பொங்கும்-கச்சினின்றும் அடங்காது புறத்தேதோன்றுகின்ற, கொங்கை-கொங்கைகளை, சுமக்கும்வலி இன்றி-சுமக்கும் ஆற்றலில்லாமல், கம்பிக்கும்-நடுங்காநின்ற, தம் நுண் இடை நோவ-தம்முடைய நுண்ணிடை (நடக்குந் தோறும்) நோவதினால், கசிவாரும்-தளர்வாரும், பிள்ளைகிள்ளை-இளங்கிளிகள், பயில்கின்ற கொம்பில் - நெருக்கிய பூங்கொம்புகளில், ஒளிக்க - ஒளித்துக்கொள்ள, பை பொன்-பசும்பொன்னினாற்செய்யப்பட்ட, கிண்ணம் - (உணவமைந்த) பட்டில்களை, மெல்விரல் தாங்கி-மெல்லிய விரலாலேந்தி, குழைவாரும்-மனமுருகுவாரும்—எ-று.

1002. தன்னைக்கண்டாள் மென்னடைகண்டாள் தமர்போலத்
துன்னக்கண்டா டோழமைகண்டா டுணையென்றாள்
உன்னைக்கண்டா ரெள்ளுவர்பொல்லா துடுநீயென்
றன்னக்கன்னிக் காடையளிப்பா னமைவாரும்.

(இ-ள்.) தன்னைக்கண்டாள்-தன்னைக்கண்டு, மெல்நடைகண்டாள் - மென்மையாகிய நடையைக்கண்டு, தமர்போல-சிலதியர்போல, துன்ன கண்டாள் - பிரியாது தொடரக்கண்டு, தோழமைகண்டாள்-(அதனால்) நட்பின்தன்மையைக்கண்டு, துணை என்றாள்-உயிர்த்தோழியென்றுகூறி, உன்னை கண்டார்-உன்னைக்கண்டவர்கள், எள்ளுவர் - இகழ்வார்கள், பொல்லாது - (அது) பொல்லாது, நீ உடு என்று-நீயுடுத்துக்கொள்ளென்று, அன்னம் கன்னிக்கு-அன்னமாகிய கன்னிக்கு, ஆடை அளிப்பான்-ஆடையைக்கொடுக்க, அமைவாரும்-ஒருப்படுவாரும்—எ-று. (உக)

குலமகளிராதலால் தமர் என்பது பெயரிற்பிரிந்த ஆறெழுமிகுசொல். அன்னம் சாதியொருமை. கன்னி திணைவழுவமைதி. "முற்படக்கிளத்தல் செய்யுளுளுரித்தே" என்பவாகலின், சுட்டுப்பொருட்டாம்நின்ற தன்னென்பது முற்படக்கிளக்கப்பட்டது. கண்டாள் என்றாள் என்பன பன்மையிறெருமைவந்த வழுவமைதி, என்னை; அமைவார்யாவரும் தன்னைக்கண்டு மென்னடைகண்டு துன்னக்கண்டு தோழமைகண்டு துணையென்றாராகலின், கண்டாள் என்றாள் என்னும் ஒருமை அமைவார் என்னும் பன்மையோடு தனித்தனிசென்றியைதலின் வழுவின்றேனும் இற்றுப்பன்மைபற்றி வழுவமைதி யாயிற்று. மேல்வரு மிரண்டு செய்யுள் முடிபுகளுமன்ன.

1003. பாசொக்குஞ்சொன் னுண்கலையாடன் படரல்குல்
ஆகக்கண்டோ ராடரவாமென் றயனண்ணும்
தோகைக்கஞ்சிக் கொம்பினொதுங்கித் துணரீன்ற
சாகைத்தங்கைக் கண்கள்புதைத்தே தளர்வாரும்.

(இ-ள்.) பாகு ஒக்கும்சொல்-பாகையொத்த சொல்லையும், நுண்கலையாள்-நுண்ணிய ஆடையையுமுடையாள், தன்படர் அல்குல்-தன்பரந்த அல்குலை, ஆகக்கண்டு-நேராகப்பார்த்து, ஓர் ஆடு அரவு ஆம் என்று - (அதனை) ஒரு ஆடுமியற்கையுள்ள பாம்பெனக்கருதி, அயல்நண்ணும்-அருகில்வருகின்ற, தோகைக்கு அஞ்சி - மயிலுக்குப்பயந்து, கொம்பின் ஒதுங்கி-பூங்கொம்புபோலநடந்து, துணர் ஈன்ற-பூங்கொத்துகள்மலர்ந்த, சாகை-பூங்கொம்புகளில், (மறைந்து) தம்கை - தம்முடையகைகளால், தளர்ந்து-தளர்ச்சியடைந்து, கண்கள்புதைப்பாரும்-கண்களைப்பொத்துவாரும்.

புதைத்துத் தளர்வார் என்பதைப் பின்முன்னாகநிறுத்தி விகுதிபிரித்துக்கூட்டி உரைக்க.

1004. பொன்னேதேனே பூமகளேகா ணென்னையென்று
தன்னேரில்லா ளங்கொருகொய்யற் றழைமூழ்கி
இன்னேயென்னைக் காணுதிநீயென் றிகலித்தன்
நன்னீலக்கண் கையின்மறைத்து நகுவாரும்.

(இ-ள்.) அங்கு - அச்சோலையில், தன்நேரில்லாள் - தனக்கொப்பில்லாதவளொருத்தி, பொன்னே - பொன்னையொத்தவளே, தேனே - தேனையொத்தவளே, பூமகளே - பூமகளை யொத்தவளே, என்னை காண் என்று - என்னைப் பாரென்று சொல்லி, கொய்யல் - பறிப்பதற்குரிய, தழை மூழ்கி - தழைகளில் நுழைந்து, இன்னே - இப்பொழுதே, நீ என்னைகாணுதி என்று - நீயென்னைக்காணென்று, இகலி - மாறுபட்டு, தம் - தம்முடைய, நல் நீலம் - மிகவுங்கரிய, கண் -

கண்களை, கையின் மறைத்து-கையினால்மூடி, நகுவாரும்-அவர்களுக்குப் புலப்படாமையால் நகைப்பாரும்—எ-று. (௩௧)

பகைத்தலாவது - விளையாட்டயர்வதிற் றம்மாற்றலை வியந்துகூறி முரணி நிற்றல். பொன் தேன் பூமகள் என்பன உவமையாகுபெயர்கள்.

1005. வில்லிற்கோதை நாணுறமிக்கோ ரிலவங்கம்
புல்லிக்கொண்ட தாமரைமென்பூ மலர்தாங்கி
அல்லிற்கோதை மாதர்முகப்பே ரரவிந்தச்
செல்வக்கானிற் செங்கதிரென்னத் திரிவாரும்.

(இ-ள்.) வில்லில்-(இடக்கையில்தாங்கிய) வில்லில், கோதைநாண் உற-நேர்மையாகிய நாண்பொருந்த, மிக்க - மேன்மையாகிய, ஓர் இலவங்கம்-ஒப்பற்ற இலவங்க மலர்களை, புல்லிக்கொண்ட-(சுற்றிலும்) சேர்ந்துகொண்ட, தாமரை - தாமரையின், மெல் - மெல்லிய, பூ-பொலிவாகிய மலர் - மலரை, தாங்கி - (வலக்கையில்) தாங்கி, அல்லின் - இருள்போன்ற கூந்தலில், கோதை - மாலையையணிந்த, மாதர் - மாதர்களுடைய, முகம் - முகங்களாகிய, செல்வம் - வளமாகிய, பேர் - பெரிய, அரவிந்தக் கானில் - தாமரை மலர்க்காட்டில், செங்கதிர் என்ன-செங்கதிர்போல, திரிவாரும் - திரிகின்றவர்களும்—எ-று. (௩௨)

தாமரை மலர்தாங்கி என்றதனால் தம்தேவிமாரகத்தே காமவேட்கை தோன்றவும், முகமாகிய பெரிய தாமரைமலர்க்காட்டில் செங்கதிர் என்ன என்றதனால் அது புறத்தே தோன்றவும், ஆடவர்கள் திரிந்தார்களென்பது கருத்து. அல் என்பது இருளுக்கு ஆகுபெயராய், அது குழலுக்கு உருவகமாயது.

1006. செய்யிற்கொய்யுஞ் செங்குமுதஞ்செஞ் சிலையொன்றும்
கையிற்பெய்யுங் காமனுநாணுங் கவினார்த
மையற்பேதை மாதர்மிழற்றும் மழலைச்சொல்
தெய்வப்பாடல் சொற்கலையென்னத் தெரிவாரும்.

(இ-ள்.) செய்யில் - வயல்களில், கொய்யும் - கொய்த, செங்குமுதம் - செங்குமுதமும், செஞ்சிலை ஒன்றும் - செம்மையாகிய வில்லொன்றும், கையில் பெய்யும்-கைகளில் வைத்த, காமனும் நாணும் - காமனும் நாணுதற்குரிய, கவினார் - அழகையுடைய ஆடவர்கள், மையல் - மையலால், பேதை - பேதைத்தன்மையையுடைய, தம்மாதர் மிழற்றும் - தம்மாதர்கள் (குறிப்பாகச்) சொல்லுகின்ற, மழலைசொல் - குதலைச்சொற்களை, தெய்வப்பாடல் - வேதங்களையும், சொல் கலை - சொல்லுதற்குரிய கலைகளையும், என்ன-(ஆராய்வது) போல, தெரிவாரும் - ஆராய்வாரும். (௩௩)

பெய்யும் என்னும் பெயரெச்சம் கவினார் என்னும் பெயர் கொண்டது. குமுதம் என்றதற்கேற்ப மையல் என்றார். தெய்வப்பாடல் என்பது அடையடுத்ததொழிலாகுபெயர்: தெரிவார் எனக் காரியத்தைக் காரணமாக வுபசரித்தார்.

1007. சோலைத்தும்பி மென்குழலாகத் தொடைமேவும்
கோலைக்கொண்ட மன்மதவாயன் குறியுய்ப்ப
நீலத்துண்கண் மங்கையர்சூழ நிரையாவின்
மாலைப்போதின் மாய்விடையென்ன வருவாரும்.

(இ-ள்.) சோலை - அச்சோலையின்கண், தும்பி - வண்டுகளினோசை, மெல்குழல் ஆக - மெல்லிய குழலோசையாக, தொடைமேவும் - தொடுத்தலைப் பொருந்திய,

கோலைகொண்ட - கோலைக்கொண்ட, மன்மதன் ஆயன் - மன்மதனாகிய கோவலன், குறி உய்ப்ப - குறியிற்செலுத்துதலால், மாலைபோதில்-மாலைப்போதில், நீலத்து-நீல நிறமமைந்த, உண்கண் - மையுண்ட கண்களையுடைய, மங்கையர் - மாதர்கள், நிரை ஆவின் சூழ - கூட்டமாகிய பசுக்களைப்போலச் சூழ்ந்துவர, மால் - பெருமையாகிய, விடை என்ன - இடபங்கள்போல, வருவாரும்-வருவாருமாயினர்—எ-று. (௩௭)

தும்பி கருத்தாவாகுபெயர். குழல் கருவியாகுபெயர். தொடைமேவுங்கோல் என்பதற்கு, மன்மதனுக்கு நாணில்மேவிய அம்பெனவும், ஆயனுக்கு மாலைமேவிய ஆத்துரத்துங் கோலெனவும் பெர்ருள்கொள்க. திரிவாரும் என்பது முதல் வருவாரும் என்ப நீருகக்கிடந்த பன்னிருவினை முற்றுகளிலும் இறப்பு தொழிற்றன்மை யுணர்த்துதல்பற்றி எதிர்வாயிற்று. இதை, "இறப்பே யெதிர்வே யென்னுஞ் சூத்திரத்தானமைக்க." இன்னும் இவைபோல்வன பிறசெய்வாருமுளரென்பார் அவாய் நிலையான் முடித்தார்.

வேறு.

1008. ஊக்க முள்ளத் துடைய முனிவரால்
காக்க லாவது காமன்கை வில்லெனும்
வாக்கு மாத்திர மல்லது வல்லியிற்
பூக்கொய் வாள்புரு வக்கடை போதுமே.

(இ-ள்.) வல்லியில் - கொடிகளில், பூகொய்வாள்-மலர்பறிக்கின்ற ஒருத்தியின், புருவக்கடை - புருவக்கடையே, போதும் - (தவவொழுக்கங்களையழிக்க) அமையும், (ஆதலால்) உள்ளத்து - மனத்தில், ஊக்கம் உடைய - கலங்காமையையுடைய, முனிவரால் - முனிவர்களால், காக்கலாவது - காத்தற்குரியது, காமன் கை - காமனது கையிற் பிடித்த, வில் என்னும் - வில்லென்று சொல்லப்படுகின்ற, வாக்குமாத்திரம் அல்லது - வாக்குமாத்திரமுள்ளதன்றி, (ஒழுக்கமின்று)—எ-று.

ஊக்கம் - தாம்விட்ட காமவின்ப முதலியவற்றிற்குச் சலியாது நிற்குந்தன்மை. இது இறுதிக்கட்கூறுதற் கருத்தென்னையெனின், ஐம்புலவேட்கையைத் துறவாத இல்லறத்தார் அம்மாதர்களுடைய உரு முதலியவற்றை வேட்டாராக இதுகாறுங் கூறிய தொருவியப்பன்று, காண்பாராயின், முற்றத்துறந்த முனிவரும் வேட்ப ரென்பது தோன்றற்கென்க. எனவே, அம்மாதர் யாவரும் மிக்க கட்டழகுடையா ரென்பது கருத்து. போதுமே என்றதில் ஏகாரத்தைக் கடையென்பதனோடு கூட்டுக. இது பிரிநிலை. பகைவருக்க மாறனுட் காமஞ் சிறந்த தொன்றாகலிற் காக்கலாவது காமன் கைவில் என்றார்.

1009. நாறுபூங்குழ னன்னுதல் புன்னைமேல்
ஏறி ஞான்மனத் தும்பர்சென் றேறினாள்
ஊறு ஞானத் துயர்ந்தவ ராயினும்
வீறு சேர்முலை மாதரை வெல்வரோ.

(இ-ள்.) ஊறு - பெருகுகின்ற, ஞானத்து - ஞானத்தினால், உயர்ந்தவர் ஆயினும் - சிறந்த முனிவராயினும், வீறுசேர் - பெருமை சேர்ந்த, முலை - முலைகளையுடைய, மாதரை - மாதராசையை, வெல்வரோ - வெல்லுவார்களோ, (வெல்லார்) ஆதலால், நாறு - மணக்கின்ற, பூ-பூமாலையையணிந்த, குழல் - கூந்தலையும், நல் நுதல் - அழகாகிய நெற்றியையு முடையாளொருத்தி, புன்னைமேல் - புன்னைமர

த்தின்மேல், ஏறினன் - ஏறினவனாகிய தன்கணவனது, மனத்து உம்பர்-மனத்தின் மேல், சென்று ஏறினள்-போய் ஏறினள்—எ-று. (௩௬)

உம்மை உயர்வுசிறப்பு. மாதர் காரண வாகுபெயர். நன்னுதல் மனத்தும்பர் சென்றேறுதலாவது-நாயகிபால் வைத்த வேட்கையடங்காது அவளையே கருதியிருத்தல்.

1010. சிலையின் மேலிருந் தானுருத் தேவரால்
வலைய வும்மரி யாள்வனப் பின்றலை
நிலைவு நோக்கமு நீக்கலன் கைகளால்
நலையு நாண்முறி யுங்கொய்து நல்கினன்.

(இ-ள்.) (மலர்கொய்தற்பொருட்டு) சிலையின்மேல்-கிளையின்மேல், இருந்தான்- இருந்த ஓராடவன், தேவரால்-(உம்) தேவர்களாலும், வலையவும் அரியாள்-எழுதற்கும் அரியவுருவையுடைய ஒருத்தியினது, வனப்பின்தலை-அழகினிடத்து, நிலைவும்- எண்ணத்தையும், நோக்கமும் - பார்வையையும், நீக்கலன் - மறுக்காதவனாகி, (அவளுக்கு) கைகளால் - தன்கைகளைக்கொண்டு, நலையும் - அரும்புகளை, நாள்முறியும்- புதியதளிர்களையும், கொய்தும்நல்கினன்-பறித்துக்கொடுத்தான்—எ-று. (௩௭)

வலையவும் என்பதின் கட்சிறப் பும்மையைத் தேவரால் என்பதனோடுங் கூட்டுக.

1011. வண்டு வாழ்குழ லாண்முக நோக்கியோர்
தண்டு போற்புயத் தான்றடு மாறினன்
உண்டு கோபமென் றுள்ளத் துணர்ந்தவள்
தொண்டை வாயிற் றுடிப்பொன் று சொல்லவே.

(இ-ள்.) ஓர் தண்டு போல் - ஒப்பற்ற கதாயுதம்போன்ற, புயத்தான்-புயங்களையுடையவோரரசன், வண்டு - வண்டுகள், வாழ் - (தேனுண்டு) வாழ்கின்ற, குழலாள் முகம் - கூந்தலையுடைய தன்னாயகியினதுமுகத்தை, நோக்கி-பார்த்து, அவள் - அவளது, தொண்டை வாயில் - கொவ்வைக்கனியை யொத்த வாயில், துடிப்பு ஒன்று- துடிப்பொன்றுமே, சொல்ல - (கோபமுண்டென்று) தெரிவிக்க, தடுமாறினன்-மனநிலைகலங்கினன்—எ-று. (௩௮)

தண்டுபோற் புயத்தான் எனவே, வறிய தோளனெனப் பொருள் போதரலான், தன்றேண்மாலையை யொரு தோகைக்குச் சூட்டி வந்தா னாகல் வேண்டும், ஆகவே, அவளூடினா ளென்பதுகருத்து. முயங்கும் வேட்கையான் அவள் வாயுரை பெறுவானேக்கிக் கருத்ததன்வழிச் செல்லநின்றனனாதலால், மற்றைய ஆடற்குறிப்புகளையுணர்ந்திலனென்பார் துடிப்பொன்று சொல்லவென்றார்.

1012. ஏயுந் தன்மைய ரிவ்வகை யாரெலாம்
தூய தண்ணிழற் சோலைத் துறுமலர்
வேயுஞ் செய்கை வெறுத்தனர் வெண்டிரை
பாயுந் தீம்புனற் பண்ணைசென் றெய்தினர்.

(இ-ள்.) ஏயும் தன்மையர் - (இவ்வாறாக) பொருந்திய வியல்புடையாரும், இவ்வகையார்-இவ்வகையையுடையபிறரும் (ஆகிய,) எல்லாம்-எல்லாரும், தூய-பரிசுத்தமான, தண்-குளிர்ந்த, நிழல்-நிழலைத்தருகின்ற, சோலை-சோலையின்கண், துறுமலர்-

அடர்ந்தமலர்களை, வேயும் செய்கை-(பறித்து) சூடுகின்றசெய்கையை,வெறுத்தனர்-வெறுத்தவர்களாய், வெள்திரைபாயும்-வெண்மையாகிய அலைகள் (கரையில்) பாய்கின்ற, தீ-இனிதான, புனல்பண்ணை - நீர்விளையாட்டை, சென்று எய்தினர்-சென்று பொருந்தினர்கள்—எ-று. (௩௧)

கசு-வது. பூக்கொய்படலம் முற்றும்.



## கஎ-வது. நீர்விளையாட்டுப்படலம்.

நீர்விளையாட்டை குறித்துச்சொல்லிய படலம்.

1013. புனைமலர்த் தடங்கணோக்கிப் பூசல்வண் டார்த்துப்பொங்க
வினையறு துறக்கநாட்டு விண்ணவர் கணமுநாண
அனகரு மணங்கனரு மம்மலர்ச் சோலைநின்று
வனகரி பிடிகளோடும் வருவன போலவந்தார்.

(இ-ள்.) வினை அறு - தீவினையற்ற, துறக்கநாட்டு-விண்ணுலகத்திலுள்ள, விண்ணவர்கணமும்-தேவர்கூட்டமும், நாண-(இவர்களழகைக்கண்டு) நாணும்படி, அனகரும் - குற்றமற்றவராகிய ஆடவரும், அணங்கு அன்னரும் - தெய்வப்பெண்களையொத்தமாதரும், அ-அந்த, மலர்சோலைநின்று - பூஞ்சோலையினின்று, வனகரி-வனயானைகள், பிடிகளோடும் - பெண்யானைகளோடுங்கூடி, வருவனபோல - வருவனவற்றையொத்துத் தோன்ற, புனை - அலங்கரித்த லமைந்த, மலர்-மலர்களையுடைய, தடங்கள் நோக்கி - நீர்நிலைகளைப்பார்த்து, பூசல்வண்டு-ஆரவாரத்தையுடைய வண்டுகள், ஆர்த்துபொங்க-ஒலித்தெழ, வந்தார்-வந்தார்கள்—எ-று. (க)

வினையறு துறக்கநாடு இடத்து நிகழ்பொருளின்றொழில் இடத்தின்மேல் நின்றது. தீவினையற்றோரெய்துதற்குரியதாகலின். விண்ணவர் என்றதற் கேற்ப அனகரு மணங்கனரும் எனவும், சோலை என்றதற்கேற்ப வனம் என்றும் கூறினர்.

1014. அங்கவர் பண்ணை நன்னீ ராடுவா னமைந்ததோற்றப்
கங்கைவார் சடையோனன்ன மாமுனி கனலமேனாள்
மங்கையர் கூட்டத்தோடும் வானவர்க் கிறைவன்செல்வம்
பொங்குபாற் கடலிற்செல்லுந் தோற்றமே போன்றதன்றே.

(இ-ள்.) அங்கு-அந்த நீர்நிலையிடத்து, அவர்-அவர்கள்,நல்நீர்பண்ணை ஆடுவான்-நல்ல-நீர்விளையாட்டைச்செய்வதற்கு, அமைந்த தோற்றம் - அமைந்தகாட்சியானது, கங்கைவார் - கங்கை ஒழுகாநின்ற, சடையோன் அன்ன - சடையையுடைய சிவனையொத்த, மாமுனி - பெரியமுனிவனாகிய துர்வாசமுனிவன், மேல்நாள் கனல-முன்னாளில்சபித்தலால்,மங்கையர் கூட்டத்தோடும்-தெய்வமாதர் கூட்டத்தோடும், வானவர்க்கிறைவன் - இந்திரனது, செல்வம் - செல்வமானது, பொங்கு-(பலவளங்களும்) மிகுந்த, பால்கடலில் - திருப்பாற்கடலின்கண், செல்லும் - சென்றுசேர்ந்த, தோற்றமேபோன்றது-தோற்றத்தையேயொத்திருந்தது—எ-று. (உ)

அன்று ஏ-அசைகள். பண்ணை - மகளிர் விளையாட்டு. கனல என்னுங் காரணம் காரியத்தின்மேனின்றது, ஏ-பிரிநிலை.

1015. மையவாங் குவளையெல்லா மாதர்கண் மலர்கள்பூத்த
கையவா முருவத்தார்கள் கண்மலர் குவளைபூத்த
செய்யதா மரைகளெல்லாந் தெரிவையர் முகங்கள்பூத்த
தையலார் முகங்கள்செய்ய தாமரை பூத்தவன்றே,

(இ-ள்.) மைய ஆம் குவளையெல்லாம் - கரியனவாகிய குவளை மலர்களெல்லாம், மாதர் - அம்மாதர்களுடைய, கண்மலர்கள் பூத்த-கண்மலர்களைப்போலப் பூத்தன, கை-(சாமுத்ரிகநூலினது) ஒழுங்கு, அவாம் - விரும்புகிற, உருவத்தார்-உருவத்தையுடைய அம்மாதர்களுடைய, கண்-கண்கள், மலர்-மலர்ந்த, குவளைபூத்த-குவளைமலர்களைப்போலவிளங்கின, செய்யதாமரைகள் எல்லாம் - சிவந்த தாமரைமலர்களெல்லாம், தெரிவையர்-அம்மாதர்களுடைய, முகங்கள்பூத்த-முகங்களைப்போலப்பூத்தன, தையலார் முகங்கள் - அம்மாதர்களுடைய முகங்கள், செய்யதாமரை பூத்த-செந்தாமரைமலர்களைப்போலப் பொலிந்தன—எ-று.

அன்று ஏ-அசைகள். கை என்பது முறைமை, அது இவ்விடத்து சாமுத்ரிக நூலொழுங்கையுணர்த்திற்று. ஊடிய மனத்தினரு முளராதலால், கண்மலரெல்லாம் முகங்களெல்லாமென்னாது அவற்றை வாளாகூறினர். அவாம் என்பதில் இற்றுமிசை யுகரமெய்யொடுகெட்டது. இது உபயமயோபமானவணி. தண்டியாசிரியர் இதரவிதரவணியென்பர்.

1016. தாளையெய் கமலத்தாளின் மார்புறத் தழுவுவாரும்
தோளையே பற்றிவெற்றித் திருவெனத் தோன்றுவாரும்
பாளையே விரிந்ததென்னப் பரந்துநீ ருந்துவாரும்
வாளைமீ னுகளவஞ்சி மைந்தரைத் தழுவுவாரும்.

(இ-ள்.) தாளை எய்-தம்பாதங்களையொத்த, கமலத்தாளில்-தாமரைமலர்த்தண்டுகளை, மார்புஉற-மார்பிற்பொருந்த, தழுவுவாரும்-தழுவிக்கொள்வோரும், தோளையே பற்றி - தம்நாயர்களுடைய தோள்களையேபற்றி, வெற்றி-வெற்றிக்குரிய, திருஎன-திருமகளைப்போல, தோன்றுவாரும் - காணப்படுவோரும், பாளையே விரிந்தது என்ன - (கமுகம்) பாளையேவிரிந்ததுபோல, பரந்து-பரவி, நீர்-நீரை, உந்துவாரும்-தள்ளுவாரும், வாளைமீன் உகள-வாளைமீன்கள் துள்ள, அஞ்சி-பயந்து, மைந்தரை-நாயகரை, தழுவுவாரும்-மார்பைத்தழுவிக்கொள்வோரும்—எ-று. (௪)

வெற்றித் திருவென்றலால், தோள் என்றது ஆடவர்தோளை. வெற்றிதங்குதற்கிடம் தோளாதலால் வெற்றித்திருவென்றார்.

1017. வண்டுணக் கமழுஞ்சுண்ணம் வாசநெய் நானத்தோடு
கொண்டெதிர் வீசுவாருங் கோதைகொண் டோச்சுவாரு
தொண்டைவாய்ப் பெய்துதூநர் கொழுநீர்மேற் றாகின்றாரும்
புண்டரீ கக்கைகூப்பிப் புனல்முகத் திறைக்கின்றாரும்.

(இ-ள்.) வண்டுஉண்ண - வண்டுகளுண்ண விரும்பும்படி, கமழும்-பரிமளிக்கிற, சுண்ணம்-பராகத்தையும், வாசம்நெய்-வாசமூட்டியதைலத்தையும், நானத்தோடும்-கஸ்தூரியோடும், கொண்டு - கைக்கொண்டு, எதிர் வீசுவாரும்-(ஒருவர்க்கொருவர்)

எதிரேயெறிவாரும், கோதைகொண்டு-பூமாலைகளை (கையிற்) கொண்டு, ஒச்சுவாரும்-வீசுவாரும், தொண்டை - கொவ்வைகனியையொத்த, வாய்பெய்து-வாயிற்பெய்து, தூநீர்-சுத்தநீரை, கொழுநர்மேல்-தம்கணவர்மேல், தூகின்றாரும்-சிறுகக்கொப்பளிக்கின்றவர்களும், புண்டரீகம்கை - தாமரைமலர்போன்ற கைகளை, கூப்பி - குவித்து, புனல்-நீரை, முகத்து - தம்கணவர் முகத்தில், இறைக்கின்றாரும் - இறைக்கின்றவர்களும்—எ-று. (ரு)

காதலர் கூட்ட நிகழுங்காலத்து மாதர்முகந் தூய்மையது என்றது அற நூற்றுணிபாதலால், வாய்ப்பெய்து தூநீர் என்றார்.

1018. மின்னொத்த விடையினாரும் வேயொத்த தோளினாரும்
இன்னத்தி னளகபந்தி திருமுக மறைப்பநீக்கி
அன்னத்தை வருதியென்னோ டாடவென் றழைக்கின்றாரும்
பொன்னொத்த முலையின்வந்து பூவொத்த வுளைகின்றாரும்

(இ-ள்.) மின் ஒத்த - மின்னற் கொடியை யொத்த, இடையினாரும்-இடையையுடையாரும், வேய் ஒத்த-(இளமையாகிய) மூங்கிலையொத்த, தோளினாரும்-தோள்களையுடையாரும், சின்னத்தின்-(சோலையில்தாமணிந்த) சின்னத்தையுடைய, அளகபந்தி-தலைமயிர்ப்பந்தியானது, (தாம்நீரில்மூழ்கி யெழும்போது) திருமுகம்மறைப்ப-திருமுகத்தைமறைக்க, நீக்கி - (அதை) விலக்கி, என்னோடு ஆட - என்னுடன் விளையாட, வருதி யென்று-வருவாயென்று, அன்னத்தை அழைக்கின்றாரும்-அன்னத்தை அழையாநின்றாரும், பொன்ஒத்தமுலையில்-பொற்கிண்ணத்தையொத்த முலைகளில், பூவந்து ஒத்த-மலர்கள்வந்தொத்த, உளைகின்றாரும்-வருந்துவாரும்—எ-று. (சு)

அம்மாதர்களுடைய உறுப்பில் ஒவ்வொன்றுமே காணலுற்றாருடைய கண்மனங்களை யொரு சேரக்கவரும் வனப் பிற்றாமாகலின் அவ்வாறு தங்கள் மனங்கள் அந்நலார்பாற் செல்லாநிற்கக் கணவர்கள் அவ்வச்சமயங்களில் அவ்வவ் வுறுப்புக்காரணமாக அவர்க்கிட்டு, மின்னொத்தவிடையினள், வேயொத்த தோளினள் எனக்கூறுங் கூற்றைத் தாம்கொண்டுகூறினாரன்றி, இடையொன்றுமே சிறந்தார் தோளொன்றுமே சிறந்தார் என இருவகையராகக் கூறினாரல்லர். ஒருவர் கூறுங்கூற்றை ஏனையோர் தாம்கொண்டுகூறுதல், "காதன் மிக்குழிக் கற்றவுங்கைகொடா" என்னுஞ் சிந்தாமணிச் செய்யுளுள்ளுங்காண்க. பூவொத்த வுளைதல் மிக்க பயிர்ப்புடையரென்ப துணர்த்திற்று.

1019. பண்ணுள பவளத்தொண்டை பங்கயம் பூத்ததன்ன
வண்ணவாய்க் குவளைவாட்கண் மருங்கிலாக் கரும்பினன்னார்
உண்ணிறை கயலைநோக்கி யோடுநீர்த் தடங்கட்கெல்லாம்
கண்ணுள வாங்கொலென்று கணவரை வினவுவாரும்

(இ-ள்.) பண் உள்ள-பண்போலுஞ் சொல்லுள்ள, தொண்டை கொவ்வைக்கனியையுடைய, பவளம் - பவளக்கிண்ணத்தையும், பூத்ததுபங்கயம் அன்ன - பூத்ததாகிய தாமரைமலரையுமொத்த, வண்ணம் வாய் - அழகியவாயையும், குவளைவாள் கண் - குவளை மலரையும் வாளையுமொத்த கண்களையுமுடைய, மருங்கு இல்லாத - இடையில்லாத, கரும்பின் அன்னார் - கரும்பையொத்த மாதர்கள், உள்நிறை கயலைநோக்கி - உள்ளேநிறைந்த கயல்களைப்பார்த்து, ஓடும்நீர் - ஓடுகின்ற நீரையுடைய, தடங்கட்கு எல்லாம் - தடாகங்களுக்கெல்லாம், கண் உள

ஆம்கொல் என்று - கண்களுளவாமோவென்று, கணவரை - தம்கொழுநரை, வினவுவாரும் - கேட்போரும்—எ-று. (எ)

தடங்கள் - சாதிப்பன்மை. பவளத்தொண்டை யென்பதைத் தொண்டைப் பவளமெனக் கூட்டுக.

1020. தேனகு நறவமாலைச் செறிகுழற் றெய்வமன்னார்
தானுடைக் கோலமேனி தடத்திடைத் தோன்றநோக்கி
நானக நகுகின்றாளிந் நன்னுதல் தோழியாமென்
றூனமில் விலையினார முளங்குளிர்ந் துதவுவாரும்

(இ-ள்.) தேன் - வண்டுகள், நகும் - களிக்கின்ற, நறவம்மாலை - தேன்பொருந்திய மாலையையணிந்த, செறிகுழல் - அடர்ந்த கூந்தலையுடைய, தெய்வம் அன்னார் - தெய்வத்தையொத்த மங்கையர்கள், உடை - உடைய, கோலம் மேனி - அழகாகிய மேனியின்நிழல், தடத்திடை - தடாகத்தில், தோன்றநோக்கி - தோன்றப்பார்த்து, இ - இந்த, நன்னுதல் - மாதானவள், நான் நக - நான் சிரிக்க, நகுகின்றாள் - தானுஞ் சிரிக்கிறாள், (ஆதலால்) தோழி ஆம் என்று - (அந்த வுருவத்தை) தோழியாமென்று கருதி, ஊனம் இல் - குறைவில்லாத, விலையின் - விலையையுடைய, ஆரம்-மணிவடத்தை, உளங்குளிர்ந்து உதவுவாரும் - மனங்குளிர்ந்து கொடுப்பாரும்—எ-று. (அ)

தான் - அசை தம்சாயை நீரிற்றோன்றக்கண்டு தோழியரென்று நினைத்துத் தாமணிந்திருந்த மணிவடத்தை யப்பிரதிபிம்பத்தோழியர்க்குக் கொடுக்கின்றார் என்பது கருத்து.

1021. குண்டலந் திருவில்வீசக் குலமணி யாரமின்ன
விண்டொடர் வரையின்வைகு மென்மையிற் கணங்கள்போல
வண்டுளர் கோதைமாதர் மைந்தர்தம் வயிரத்திண்டோள்
தண்டுகள் தழுவுமாசை புனற்கரை சார்கின்றாரும்.

(இ-ள்.) வண்டு - வண்டுகள், (போதுகளைமலர்த்தும்படி) உளர் - தடவுகின்ற, கோதை - பூமாலையையணிந்த, மாதர் - மாதர்கள், மைந்தர் - தம்கொழுநருடைய, வயிரம் - வயிரப்பூணணிந்த, திண்தண்டுதோள் - திண்ணிய தண்டம்போன்ற தோள்களை, தழுவும் ஆசை - தழுவும்விருப்பத்தால், விண்தொடர்வரையின்வைகும் - சுவர்க்கத்தைத்தொடுகின்ற மலையில்தங்கிய, மென்மயில் கணங்கள்போல - மெல்லிய மயிற்கூட்டங்கள் போல, குண்டலம் (காதிலணிந்த) குண்டலங்கள், திருவில் வீச - சிறந்த ஒளியைவீசவும், குலம் - கூட்டமாகிய, மணி ஆரம் - ரத்நஹாரங்கள், மின்ன - (மார்பிலணியப்பட்டு) மின்னுதல்செய்யவும், புனல்கரை - நீர்க்கரையை, சார்கின்றாரும் - அடைவாரும்—எ-று (௯)

தன்னிலத்து மயில் என்பார் "வரையின்வைகு மென்மயில்" என்றார். "புனமயிலே போதராய்" என்னுங் கோதையர் வாக்யமு மிக்கருத்தே பற்றிவந்தது.

1022. அங்கிடை யுற்றகுற்றம் யாவதென் றறிதல்தேற்றும்
செங்கய லனையநாட்டஞ் செவப்புறச் சீறிப்போன
மங்கையோர் கமலச்சூழல் மறைந்தனள் மறையமைந்தன்
பங்கய முகமென்றோரா தையுற்றுப் பார்க்கின்றானால்

(இ-ள்.) அங்கு - அவ்விளையாட்டில், இடை - நடுவே, உற்றகுற்றம் - உண்டாகியகுற்றம், யாவது என்று - யாதென்று, அறிதல்தேற்றும் - அறியோம், செங்கயல் அனைய - செங்கயலை யொத்த, நாட்டம் - கண்கள், செவப்பு உற - செவக்கும்படி, சீறிப்போன - (தன்னைச்) சீறிச்சென்ற, மங்கை - ஒருமாது, ஓர்கமலச்சூழல் - ஒருதாமரைமலர்ச்செறிவில், மறைந்தனள் - மறைந்தாள், மறைய - அவள் மறையவே, மைந்தன் - அவள்கொழுநன், பங்கயம் - (இது) தாமரைமலர், முகம் - (இது நம்மாது) முகம், என்று ஓராது - என்று அறியாமல், ஐயுற்று - சந்தேகமடைந்து, பார்க்கின்றான் - பாராநின்றான்—எ-று. (கய)

அறிதறேற்றும் ஒரு சொன்னீர்மையது.

1023. பொற்றொடி தளிர்க்கைச்சங்கம் வண்டொடு புலம்பியார்ப்ப
எற்றுநீர் குடையுந்தோறு மேந்துபே ரல்குனின்றும்
கற்றைமே கலைகணீங்கிச் சீரடி கவ்வக்காலில்
சுற்றிய நாகமொன்று துணுக்கத்தாற் றுடிக்கின்றாரும்.

(இ-ள்.) சங்கம் - வளையல், வண்டொடுபுலம்பி ஆர்ப்ப - வண்டொடு புலம்பியாரவாரிக்கும்படி, பொன்தொடி - பொன்னாற்செய்த வளையலையணிந்த, தளிர்கை- தளிர்போன்றகைகளால், எற்றும் - அலை எறியாநின்ற, நீர் - நீரில், குடையுந்தோறும் - மூழ்குந்தோறும், ஏந்து - உயர்ந்த, பேர் அல்குல்நின்றும் - பெரிய அல்குலிலிருந்து, கற்றை - திரட்சியாகிய, மேகலைகள் நீங்கி - மேகலைகள் நெகிழ்ந்து, சீரடி கவ்வ - சிற்றடியைக் கவ்விக்கொள்வதனால், காலில் சுற்றிய - காலிற் சுற்றிக்கொண்ட, நாகம் என்று - பாம்புகளென்று கருதி, துணுக்கத்தால் - அச்சத்தால், துடிக்கின்றாரும் - துடிக்கின்றவரும் ஆயினர்—எ-று, (கக)

நாகம் சுற்றிய என்பதற்கு, பாம்புகள் சுற்றிக்கொண்டன என வுரைப்பினுமாம். எற்று என்பது, செய்யூவென்னும் வாய்பாட்டு வினையெச்சங் குறுகிற்றென்பாருமுளர். இப்பொருட்டு, எறியாநின்று குடைதல் என நிகழ்காலமாகத் திரித்துத் துணைவினையாக்குக. எறியாநின்று குடைதலாவது ஒருத்தி ஒருத்திமேலெறியாமுன்னமே நீருள்மூழ்கல். இறைக்கின்றார் முதலியவற்றில் தொழிற்றன்மை புணர்த்துதல் பற்று இறப்புநிகழ்வாயிற்று. இதனை, "ஏனைக்காலமு மயங்குதல் வரையார்" என்னுஞ் சூத்திரத்தா னமைக்க. இவ்வாறு இறப்பு எதிர்வு நிகழ்வுமாய் வருவதை ஒருபொருண்மை குறியாது வருமென்பாருமுளர்.

1024. குடைந்துநீ ராடிமாதர் குழாம்புடை சூழவாழித்
தடம்புயம் பொலியவாண்டோர் தார்கெழு வேந்தனின்றான்
கடைந்தநா ளமிர்திளேடுங் கடலிடை வந்துதோன்றும்
மடந்தையர் சூழநின்ற மந்தரம் போலமாதோ.

(இ-ள்.) கடைந்தநாள் - கடைந்தநாளில், அமுதினேடும் - அமிர்தத்தோடும், கடலிடை - திருப்பாற்கடலில், வந்து தோன்றும் - வந்துதோன்றிய, மடந்தையர் - தெய்வப்பெண்கள், சூழ - சூழாநிற்க, மந்தரம்போல - (இடையேநின்ற) மந்தரமலைபோல, நீர் குடைந்து ஆடும் - நீரில் முழுகி விளையாடுகிற, மாதர் - மாதருடைய, குழாம் - கூட்டம், புடைசூழ - பக்கத்தில் சூழ்ந்துநிற்க, ஆழி - அங்கதமணிந்த, தடம்புயம் - பெரியபுயங்கள், பொலிய - விளங்க, ஆண்டு - அந்தத்தடத்தில், ஓர் - ஒரு, தார்கொழு - பூமாலையைப்பொருந்திய, வேந்தன் - அரசன், நின்றான் - நின்றான்-எ-று, (கஉ)

மாது ஓ-அசைகள். ஆழி-பண்பாகுபெயர். கெழுவென்பது வேற்றுமை குறித்த பொருள்வயின் வந்த சாரியையெனக் கோடலுமாம்.

1025. தொடியுலாங் கமலச்செங்கைத் தூநகைத் துவர்த்தசெவ்வாய்க்
கொடியுலா மருங்குனல்லார் குழாங்தொரு குருசினின்றான்
கடியுலாங் கமலவேலிக் கண்ணகன் கானியாற்றுப்
பிடியெலாஞ் சூழநின்ற பெய்மத யானையொத்தான்.

(இ-ள்.) தொடி உலாம் - வளையல்தங்கிய, கமலம் - தாமரைமலர்போன்ற, செங்கை-செவந்தகையையும், தூநகை - பரிசுத்தான நகையமைந்த, துவர்த்தசெவ்வாய்-மிகுதியுஞ் செம்மையாகிய வாயையும், கொடி உலாம் - பூங்கொடிபோற்றுவள்கின்ற, மருங்குல்-இடையையும் உடைய, நல்லார்-மாதர்களுடைய, குழாத்து-கூட்டத்தில், ஒருகுருசில் நின்றான்-ஓர் அரசன் நின்றான், (அவன்) கடி உலாம்-வாசனைதங்கிய, கமலம்வேலி - தாமரைவேலியமைந்த, கண் அகன்-இடமகன்ற, கான்யாற்று-காட்டாற்றில், பிடி எல்லாம் - பெண்யானைகளெல்லாம், சூழ-சூழ்ந்துநிற்க, நின்ற-(அவற்றிடையே) நின்ற, மதம்பெய்-மதத்தைப் பொழிகின்ற, யானை ஒத்தான்-ஆண்யானையை யொத்திருந்தான்—எ-று. (௧௩)

பல்லின்றூய்மை அதற்காரியத்தொழின்மே லேற்றப்பட்டது.

1026. கானமா மயில்களெல்லாங் களிகெடக் களிக்குஞ்சாயல்
சோனைவார் குழலினார்தங்குழாத்தொரு தோன்றனின்றான்
வானயா றதனைநண்ணி வயின்வயின் வயங்கித்தோன்றும்
மீனெலாஞ் சூழநின்ற விரிகதிர்த் திங்களொத்தான்.

(இ-ள்.) கானம் - (அங்குள்ள) சோலையில் வசிக்கிற, மா - பெருமையமைந்த, மயில்கள் எல்லாம்-மயில்களடைய, களி கெட-செருக்கழியும்படி, களிக்கும் சாயல்-செருக்குகின்ற சாயலையும், சோனை - சோனைமழைபோன்ற, வார்குழலினார்-நீண்ட கூந்தலையுமுடைய மாதர்களுடைய, குழாத்து - கூட்டத்தில், ஒருதோன்றல், நின்றான் - ஒரு அரசன்நின்றான், (அவன்) வானயாறதனைநண்ணி - ஆகாயகங்கையை நெருங்கி, வயின்வயின் - (விண்ணில்) பலவிடத்தும், வயங்கி தோன்றும்-விளங்கித் தோன்றுகிற, மீன் எல்லாம்சூழ-விண்மீன்களெல்லாம் சூழும்படி, நின்ற-(இடையே) நின்ற, விரி-விரிந்த, கதிர்-கிரணங்களையுடைய, திங்கள் ஒத்தான்-சந்திரனை யொத்திருந்தான்—எ-று. (௧௪)

குழல் சோனைபோறலாவது-சோனை மழைபோ லிடையறாது வார்ந்துதொங்குதல். மீனெலாஞ்சூழநின்ற விரிகதிரென மேல்வருதலால், வயின் வயின் என்பதற்கு விண்ணிற் பலவிடத்தும் எனப் பொருளுரைக்கப்பட்டது.

1027. மேவலாந் தகைமை த்தல்லால் வேழவிற் றடக்கைவீரற்
கேவெலாங் காட்டுகின்ற விணைநெடுங்கண்ணேரேழை
பாவைமார் பயந்தகோலப் பண்ணையிற் பொலிவாள்வண்ண
பூவெலா மலர்ந்தபொய்கை தாமரை பொலிவதொத்தாள்.

(இ-ள்.) வேழம்வில் - வெண்கரும்புவில்லைப்பிடித்த, தடம்கை-பெரியகையையுடைய, வீரற்கு-வீரனாகியமன்மதனுக்கு, மேவலாம்தகைமைத்து அல்லால்-விரும்புதலாகிய தன்மையையுடையதுமன்றி, ஏ எல்லாம்காட்டுகின்ற - அம்பெய்யுந்தொழிலெல்லா வற்றையுங்காட்டுகிற, இணை-ஒன்றற்கொன்றொப்பாயிருக்கிற, நெடு கண்-

நெடியகண்களையுடைய, ஓர் ஏழை - ஒருபெண்ணானவள், பாவைமார்பயந்த-தோழிமார்சமைத்த, கோலம் பண்ணையில்-அழகிய கூட்டத்தில், பொலிவாள்-விளங்குவாள், (அவள்) வண்ணம் - பலநிறமமைந்த, பூ எல்லாம்-பலவகைமலர்கள், மலர்ந்த-மலர்ந்திருக்கிற, பொய்கை - பொய்கையில், தாமரை-தாமரைமலர், பொலிவது - (மிக்கு) விளங்குவதை, ஒத்தாள்-ஒத்திருந்தாள்—எ-று. (௧௫)

பயந்தவென்பது இலக்கணை. தகைமைத் தென்பதன்கண் எதிரது தழீஇய வெச்சவும்மையும், ஏவெலாம் என்பதன்கண் இறந்தது தழீஇயதனோடு முற்றுப் பொருள்படநின்ற வும்மையும், விகாரத்தாற் றொக்கன. தகைமைத்து என்பது பன்மையி லொருமைவந்த வழுவமைதி. உருபுகட்குக் குறித்துவருகிளவிநோக்கிப் பொருள்கூறல் மரபாதலால், வீரற்கு மேவலாந்தகைமைத்து. கண்ணென்பதற்குக் காதற் பொருளும், வீரற் கேவெலாங் காட்டுகின்ற கண் என்பதற்குச் சிறப்புப் பொருளுங்கொள்க.

அனுவாயமனத்தையு மெய்யவல்லானுக்கு ஏவெலாங்காட்டலிற் சிறப்பாயிற்று "வேழவிற்றடக்கைவீரன்" என்றது, உருவளர்காமனா யிருந்தகாலத்து, யாவரையுஞ் சலிப்பிக்கவல்லானாகிய ஒருவனேவென்றமையும், உருவிலியாகிய இக்காலத்தும், "தொடுகரச்சிலை தொடப்பொரூமலர் சுருப்புநாணிடு வதைந்து கோல் - அடு படைத்தலைவ னார்வசந்தமலை தென்றறேருருவ மருவமாம்-முடுகு கொற்றமத னொருவனிப்புவன முற்றும் வெற்றிகொள" என்றபடியே பதினான்கு லோகத்தாரையும் வெல்லாநின்றமையும் நோக்கியென்க.

1028. மிடலுடைக் கொடியவேலே யென்னவாண் மிளிர்வவென்னச்
சுடர்முகத் துலவுகண்ணாள் தோகையர் சூழநின்றாள்
மடலுடைப்போதுகாட்டும்வளர்கொடி பலவுஞ்சூழக்
கடலிடைத் தோன்றுமென்பூங் கற்பகவல்லியொத்தாள்.

(இ-ள்.) மிடல் உடை - வலியையுடைய, கொடிய, வேலே என்ன - கொடுமையாகியவேல்களே, யென்னும்படியாயும், மிளிர்வ - விளங்குவனவாகிய, வாள்என்ன- வாள்களென்னும்படியாயும், சுடர்-ஒளியமைந்த, முகத்து-முகத்தில், உலாவு-பிறழாநின்ற, கண்ணாள்-கண்களையுடையவோர்மாது, தோகையர் சூழநின்றாள்-(தன்) சேடியர்சூழ நின்றனள், (அவள்) மடல் உடை-இதழ்களையுடைய, போது-மலர்களை, காட்டும்-மலர்கின்ற, வளர்கொடி பலவும் சூழ - வளர்கின்றபலவகைக் கொடிகளும்சூழும்படி, கடலிடை-திருப்பாற்கடலிற்றோன்றிய, மெல் பூ-மென்மலர்களையுடைய, கற்பக வல்லி ஒத்தாள்-காமவல்லியையொத்திருந்தாள்—எ-று. (௧௬)

காமவல்லி-கற்பகமரத்தின்மேற் படர்ந்தேறு மோர்கொடி.

1029. தேரிடைக் கொண்டவல்குற் றெங்கிடைக் கொண்டகொங்கை
ஆரிடைச் சென்றுங்கொள்ள வொண்கிலா வழகுகொண்டாள்
வாரிடைத் தனமீதாட மூழ்கினாள்வதனமைதீர்
தீரிடைத் தோன்றுந்திங்க ணிழலெனப் பொலிந்ததன்றே

(இ - ள்.) தேரிடை - தேர்த்தட்டினிடத்து, கொண்ட - மெய்யழகைக்கொண்ட, அல்குல் - அல்குலையும், தெங்கிடை - தென்னங்குரும்பைகளினிடத்து, கொண்ட - (மெய்யழகைக்) கொண்ட, கொங்கை - கொங்கைகளையும், ஆரிடைச் சென்றும் - எவரிடத்துச்சென்றும், கொள்ள ஒண்கிலா - பெற்றுக்கொள்ளக்

கூடாத, அழகு - அழகையும், கொண்டாள் - கொண்டிருப்பாளொருத்தி, வார் இடை - வாரிலடங்கியிருக்கிற, தனங்கள் - கொங்கைகள், மீது ஆட - மேலே தோன்றுகிறமுகமானது, மைதீர் - குற்றம்நீங்கிய, நீர் இடைதோறும் - நீரினிடைத் துத்தோன்றுகிற, திங்கள்நிழல் என சந்த்ரனுடைய சாயைபோல, பொலிந்து - விளங்கியது-எ-று, (௬எ)

தேர் இடைகொண்ட என்பதற்கு, தேர்த்தட்டானது (அஞ்சி) விலகுதலைக் கொண்ட எனவுங்கூறலாம், தெங்கிடைகொண்ட என்பதற்கு மிவ்வாறே பொருள் கொள்க.

வேறு.

1030. மலை கடந்த புயங்கள் மடந்தையர்
கலை கடந்தக லல்குல் கடாம்பட
முலை கடந்தமின் துந்தி நெருங்கலால்
நிலை கடந்து பரந்தது நீத்தமே.

(இ-ள்.) மலைகடந்தபுயங்கள்-(ஆடவர்களுடைய) மலைகளைவென்ற புயங்களும், மடந்தைமார் - மாதர்களுடைய, கலைகடந்து அகல்-கலையைவென்றகன்ற, அல்குல்-நிதம்பப்ரதேசங்களும், பட - ஒன்றோடொன்று தாக்க, முலைகள் - கொங்கைகள், தந்தமில் - தத்தமக்குள்ளே, முந்தி - முற்பட்டு, நெருங்கலால் - நெருங்குதலால், நீத்தம் - (நீர்நிலைகளிலுள்ள) நீரானது, நிலைகடந்துபரந்தது - தன்னிலையைக்கடந்து பரவியது-எ-று, (௬அ)

நீர் தன்னெல்லைகடந்து மேலூர்தற்குக்காரணம் மிகப்பருத்த இம்மூன்று றுப்புக்களின் நெருக்கமென்பது கருத்து.

1031. செய்ய வாய்வெளுப் பக்கண் செவப்புற
நெய்ய ராக மழியத் துகினெகத்
தொய்யின் மாமுலை மங்கையர் தோய்தலால்
பொய்கை காதற் கொழுநரும் போன்றதே.

(இ-ள்.) செய்யவாய்வெளுப்ப-செம்மையாகிய வாய் வெளுக்கவும், கண்செவப்பு உற - கண்கள் செந்நிறத்தையுடையவும், நெய்யராகம் அழிய - நெய்யொடுகலந்த செம்பராகமழியவும், துகில் நெக - ஆடையவிழவும், தொய்யில்மாமுலை - தொய்யி லணிந்த பெரியமுலைகளையுடைய, மங்கையர் - மாதர்கள், தோய்தலால் - மூழ்கு வதனால், பொய்கை - அத்தடாகமானது, காதல் - விருப்பமுள்ள, கொழுநரும் - கணவரையும், பொன்றது-ஒத்திருந்தது-எ-று. (௬௯)

கொழுநரும் என்னுமும்மை இறந்தது தழீஇயது. தொய்யில் சந்தனக்கோலம்.

1032. ஆன தூயவ ரோடுட னாடினர்
ஞான நீரவ ராகுத னன்றரோ
தேனு நாவியுந் தேக்ககி லாவியும்
மீனு நாறின வேறினி வேண்டுமோ.

(இ-ள்) ஆன - (பலவகையானும்) ஹிதபரரான, தூயவரோடு - பரிசுத்தர்க ளோடு, உடன் ஆடினர் - கூடிப்பழகினவர்கள், நன்று - மிகவும், ஞானநீரவர் ஆகு வர் - ஞானகுணத்தையுடையார்களாவார்கள், (அதுபோல) மீனும் - (ஆடவரும் மாதரும் ஆடுகிறமடுநீரிலுள்ள) மீன்களும், தேனும் - தேன்மணத்தையும், நாவி

யும் - கஸ்தூரிமணத்தையும், தேக்கு - நிறைந்த, அகில் ஆவியும் - அகிற்புகைமணத்தையும், நாறின - மணந்தன, (அங்ஙனமாக அவர்களுடைய ஏற்றத்தை விளக்குதற்கு இனி வேறுவேண்டுமோ - இனிவேறுகாரணம் வேண்டப்படுமோ-எ-று. ()

நன்று என்னு முரிச்சொல், பெரிதென்னும் பொருள் பட்டு வினையெச்சமாய் நின்றது. அரோ - அசை. ஈற்றேகாரம் எதிர்மறை

1033. மிக்க வேந்தர்தம் மெய்யழி சாந்தொடும்
புக்க மங்கையர் குங்குமம் போர்த்தலால்
ஒக்க நீல முகிற்றலை யோடிய
செக்கர் வானக மொத்ததத் தீம்புனல்.

(இ-ள்.) மிக்க - மேலான, வேந்தர் - அரசருடைய, மெய் அழிசாந்தொடும் - மெய்யினின்று மழிந்த செஞ்சந்தநத்தோடும், புக்க - (நீராடப்) புகுந்த, மங்கையர் - மாதர்களணிந்த, குங்குமம் - குங்குமக்குழம்பு, போர்த்தலால் - மேலே பரவித்தோன்றலால், அ தீ புனல் - அந்த இனிமையானநீரானது, நீலமுகில் தலை - நிலமேகத்தில், ஒக்க ஓடிய-மாறுபடாமற்பரவிய, செக்கர்வானகம் ஒத்தது - செவ்வானத்தை யொத்திருந்தது-எ-று. (உக)

மாறுபடாமற் பரவுதலாவது வேற்றுமை தோன்றா தொன்றுதல்.

1034. காக துண்ட நறுங்கல வைக்களி
ஆக முண்ட தடங்கலும் நீங்கலால்
பாகடர்ந்த பனிக்கனி வாய்ச்சியர்
வேகடஞ் செய் மணியென மின்னினர்

(இ-ள்.) காகதுண்டம் - அகிற்றேய்வையும். நறுகலவைகளி - நல்லகலவைச் சந்தனக்குழம்பும் (ஆகிய,) ஆகம் உண்டது அடங்கலும் - சரங்கொண்டிருந்த பொருள்முழுதும், நீக்கலால் - நீங்குதலால், பாகு அடர்ந்த - (சர்க்கரைப்) பாகைப் பகைத்த, பனி-குளிர்ச்சியாகிய, கனி - முக்கனிச்சாற்றின் சுவையமைந்த, வாய்ச்சியர் - சொல்லையுடையமாதர்கள், வேகடம்செய் - வேகடஞ்செய்த, மணி என - இரத்தினம்போல, மின்னினர் - மின்னினார்கள்-எ-று. (உஉ)

கனிவாய்ச்சியர் என்பதற்கு, கொவ்வைக்கனிபோலும் அதரத்தை யுடையாரெனவும் பொருளுரைத்தல்கூடும். வேகடஞ்செய்தல் - சாணைப்பிடித்தல், அன்றி அழுக் ககற்றுதல் எனினுமமையும்.

1035 மாயருத் திறலான் பசுஞ் சாந்தினால்
தூய பொற்புயத் துப்பொதி தூக்குறி
மீயரித்து வெளுக்க(வோர் மெல்லியல்
சேயரிக் கருங் கண்கள் செவந்தவே.

(இ-ள்.) பாய் - பாய்கின்ற, அரி - சிங்கத்தின்பலம்போன்ற, திறலான் - பலத்தையுடையநாயகன், பசுசாந்தினால் - ஈரமாகிய சந்தனத்தால், தூய - பரிசுத்தமான, பொன் - பொன்னணியணிந்த, புயத்து - புயத்தில், பொதி - நிரம்பவெழுதிய, தூகுறி - தூய்மையாகிய தொய்யிற் குறிகளை, மீ அரித்து - அழித்து, வெளுக்க - வெளுத்தலால், (அதைக்கண்ட ஓர்மெல்லியல் - ஒருமாதினுடைய, சேயரி-செவ்வரிபரந்த, கருக்ண்கள் - கருகண்கள், செவந்த - செவந்தன-எ-று, (உ௩)

பசுமை வெண்மை யென்னும் பண்புகள், வண்ணப்பண் புணர்த்தாது, முறையே ஈரத்தையும் இன்மையையும் உணர்த்தின. தான் அன்பின் வரைந்த தொய்யிலையழித்தலால், தன்மாட்டன்பிலனென ஊடினாளென்பதுகருத்து. கண்கள்செவத்தற்கு உலகறி காரணமொழித்து தூக்குறி வெளுத்தலாகிய வேறொருகாரணம் வெளிப்படவந்தையின் விபாவனை யென்னுமணி.

1036. கதம்ப நாள்விரை கள்ளவிழ் தாதொடும்
ததும்பு பூந்திரைத் தண்புனல் சுட்டதால்
நிதம்ப பாரத்தொர் நேரிழை காமத்தால்
வெதும்பு வாளுடல் வெப்பம் வெதுப்பவே.

(இ-ள்.) நிதம்பபாரத்து-நிதம்பப்ரதேசத்தையுடைய, ஓர் நேரிழை-ஒருபெண்ணனவள், காமத்தால் வெதும்புவாள் - காமத்தால் வெதும்புகின்றாள், உடல்-அவளுடம்பிலுண்டாகிய, வெப்பம் - வெம்மையானது, வெதுப்ப-வெதுப்புதலால், கதம்பம்-பரிமளப்பொடியும், நாள்விரை-புதிய சந்தனமும், கள்-தேனும், அவிழ்-மலர்கள் மலர்தலாலுதிர்கின்ற, தாதொடும்-புஷ்பராகங்களோடும், (ஆகிய இவைகள்) ததும்பு-நிரம்பிய, பூ - பொலிவாகிய, திரை - அலைகளையுடைய, தண் - குளிர்ச்சியாகிய, புனல்-நீரும், சுட்டது-வெதும்பியது—எ-று. (உ௪)

சிறப்பும்மை விகாரவகையாற்றொக்கது. நேரிழை - வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.

1037. தைய லாளையொர் தாரணி தோளினன்
நெய்கொ ளோதியி னீர்முகந் தெற்றினன்
செய்ய தாமரைச் செல்வியைத் தீம்புனல்
கையி னாட்டுங் களிற்றர சென்னவே.

(இ-ள்.) செய்யதாமரைச்செல்வியை-செந்தாமரைமலரி லெழுந்தருளியிருக்குந் திருமகளை, கையின்-கையால், தீ புனல் ஆட்டும்-இனிதாகிய நீராடச்செய்கிற, களிற்றரசு என்ன-சிறந்தயானையைப்போல,ஓர்-ஒப்பற்ற, தார் அணிதோளினன்-மாலையையணிந்த தோள்களையுடைய வோரரசன், தையலாளை - ஒருபெண்ணினது, நெய்கொள் ஓதியில்-நெய்பூசிய கூந்தலில், நீர்முகந்து எற்றினன்-நீரைமொண்டுவீசினன்.

தையலாளை-உருபு மயக்கம். தையல்-கைபுனையப்பட்டவள்.

1038. சுளியு மென்னடை தோற்க நடந்தவர்
அளிகொள் சீறடி யொத்தன வாமென
வளிவு தோன்ற மிதிப்பன போன்றன
நளின மேறிய நாகிள வன்னமே.

(இ-ள்.) நளினம் ஏறிய - தாமரைமலரின்மேலேறிய, நாகு இள அன்னம்-மிக்கவிளமையாகிய, அன்னங்கள், (வேறுநாட்டு மாதர்களுடைய) சுளியும்-வெறுக்கின்ற, மெல்நடை-மெல்லிய நடைக்கு, தோற்க - நாம்தோற்கும்படி, நடந்தவர்-நடந்த இம்மாதர்களுடைய, அளி கொள்-மென்மையைக்கொண்ட, சீறடி-சிற்றடிகளை, ஒத்தன ஆம் என-ஒத்தனவாமென்று, விளிவு-தம்முடையகோபம், தோன்ற-புறத்தே தோன்றும்படி, மிதிப்பனபோன்றன-மிதிப்பவற்றையொத்திருந்தன—எ-று (உ௬)

இது பகைத்துணையை விறல்கோடலாகவர்தமையால் விறல்கோளணி. அடியை யொத்தன ளினமெனவே துணையாதல் பெறப்பட்டது. இது அணிவிளக்கம்.

1039. எரிந்த சிந்தைய ரெத்தனை யென்கெனோ
அரிந்த கூருகிரா தழி சாந்துபோய்த்
தெரிந்த கொங்கைகள் செவ்விய நூல்புடை
வரிந்த வங்கல சங்களை மானவே.

(இ-ள்.) கொங்கை - கொங்கைகள், செவ்வியநூல்-அழகியநூலை, புடைவரிந்த-மேலேசுற்றிய, அம்கலசங்களைமான - அழகியகலசங்களையொத்திருக்க, அரிந்தகூர் உகிரால் - அரிந்தகூரியநகங்களால், அழி-அழிந்த, சாந்துபோய் - சந்தனமழிந்து, தெரிந்த-தோன்றின, (அவற்றைக்கண்டு காமத்தால்) எரிந்தசிந்தையர் - எரிந்த மனத்தையுடைய ஆடவர்களளவு, எத்தனை என்கென் - எவ்வளவு எனறுசொல்லு வேன்—எ-று. (௨௭)

ஓ இரக்கப்பொருட்டு.

1040. தாழ நின்ற ததைமலர்க் கையினால்
ஆழி மன்னொரு வன்னுரைத் தானது
வீழி யின்கனி வாயொரு மெல்லியல்
தோழி கண்ணிற் கடைக்கணிற் சொல்லினாள்.

(இ-ள்.) (நீண்டு) தாழநின்ற - தொங்குகின்ற, ததை - இதழ்களடர்ந்த, மலர்-தாமரைமலர்போன்ற, கையினால் - கையால், ஆழிமன் ஒருவன்-சக்கரத்தையுடைய ஓரரசன், உரைத்தான் - (தன்வேட்கையை) சொல்லினான், அது-அதை, வீழியின் கனிவாய் - வீழக்கனியையொத்த வாயையுடைய, ஓர்மெல்லியல்-ஒரு மாதானவள், தோழிகண்ணில் - தன்தோழியின்கண்ணில், கடைக்கணின்-தன்கடைக்கண்ணி னால், சொல்லினாள்-குறிப்பித்தாள்—எ-று. (௨௮)

மெல்லியல் பண்புத்தொகைநிலைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.

1041. தள்ளி யோடி யலைதடு மாறலால்
தெள்ளு நீரின் முழுகுசெந் தாமரை
புள்ளி மானனை யார்முகம் போல்கிலா
துள்ளி னாணி யொளிப்பன போன்றவே.

(இ-ள்.) தள்ளி-(தன்னிலையினின்றும்) தள்ளப்பட்டு, ஓடி-ஓடி, அலை-அலைகள், தடுமாறலால் - போவதும்வருவதுமாயிருப்பதனால், தெள்ளும் நீரில்முழுகு - தெளி வாகிய நீரில்முழுகுகின்ற, செந்தாமரை - செந்தாமரைமலர்கள், புள்ளிமான் அனை யார்-புள்ளிமானையொத்த மாதர்களுடைய, முகம்போல்கிலாது-முகங்களையொவ்வா மல், உள்ளில் நாணி - மனத்தில்நாணமடைந்து, ஒளிப்பனபோன்ற-ஒளிப்பனபோ லிருந்தன—எ-று. (௨௯)

1042. இனைய வெய்தி யிரும்புன லாடிய
வனை கருங்கழல் மைந்தரு மாதரும்
அனைய நீர்வறி தாகவந் தேறினார்
புனை நறுந்துகில் பூணொடுந் தாங்கினார்.

(இ-ள்,) இனைய - இத்தன்மைகளை, எய்தி - அடைந்து, இருபுனல் ஆடிய-பெருமைபொருந்திய நீரில் மூழ்கின, வனை - அலங்கரித்துச் செய்யப்பட்ட, கருகழல் - பெரியவீரக்கழலையணிந்த, மைந்தரும் - ஆடவர்களும், மாதரும் - மாதர்

களும், அனையநீர் - அத்தன்மையதாகிய நீரானது, வறிது ஆக-வறியதாக, வந்து ஏறினார் - கரையில்வந்து ஏறி, புனை - புனைதற் குரிய, நறு துகில் - நல்ல ஆடைகளை, பூணொடும்-ஆபரணங்களோடு, தாங்கினார் - தரித்தார்கள்—எ-று. (௩௦)

தாங்கினார் என்றமையால் துகில் பூண் இவற்றானன்றி இயற்கை யழகுடையாரென்பதும், பூவின் மெல்லியரென்பதும் பெறப்பட்டன.

1043. மேவினார் பிறிந் தார்க்கந்த வீங்குநீர்
தாவு தண்மதி தன்னொடுந் தாரகை
ஓவு வானமு முண்ணிறை தாமரைப்
பூவெலாங் குடி போனதும் போன்றதே.

(இ-ள்.) மேவினார் பிரிந்தார்க்கு-இறங்கி நீராடி நீங்கிக் கரையில்நின்ற ஆடவர்களுக்கும் மாதர்களுக்கும், அந்தவீங்குநீர் - அந்தமிக்கநீரையுடையமடுவானது, தாவு-தவழ்கின்ற, தண்மதி தன்னொடும் - தண்ணியசந்திரனோடும், தாரகை-விண்மீன்கள், ஓவு - நீங்கிய, வானமும் - ஆகாயத்தையும், உள்நிறை - தனக்குள்ளே நிறைந்திருந்த, தாமரைபூ எல்லாம் - தாமரைமலர்களெல்லாப், குடிபோனதும் - குடிபோய்விட்டதையும், போன்றது - ஒத்திருந்தது—எ-று. (௩௧)

ஏ - அசை.

1044. மானி னோக்கியர் மைந்தரோ டாடிய
ஆன நீர்விளை யாடலை நோக்கினான்
தானு மன்னது காதலித் தானென
மீன வேலையை வெய்யவ னெய்தினான்.

(இ-ள்.) வெய்யவன் - சூரியன், மானின் நோக்கியர் - மான்போலும்நோக்கத்தையுடையமாதர்கள், மைந்தரொடு - ஆடவர்களுடன், ஆடிய-நீராடின, ஆன - தக்க, நீர்விளையாடலை நோக்கினான்-நீர்விளையாட்டைப்பார்த்து, தானும் - தானும், அன்னது - அந்தநீர்விளையாட்டை, காதலித்தான் என - விரும்பினவன்போல, மீனம் வேலையைஎய்தினான் - மீன்கள்சஞ்சரிக்கிற சமுத்திரத்தையடைந்தான். எ-று.

பொழுதுபட்டதென்மது கருத்து.

1045. ஆற்ற லின்மையி னாலழிந் தேயுந்தம்
வேற்று மன்னர்தம் மேல்வரும் வேந்தர்போல்
ஏற்று மாதர் முகங்களொ டெங்கணும்
தோற்ற சந்திரன் மீளவுந் தோற்றினான்.

(இ-ள்.) ஆற்றல் இன்மையினால் - வலியில்லாமையால், அழிந்தேயும்-தோல்வியையடைந்தும், தம்வேற்றுமன்னர்மேல் - தம்பகையரசர்மேல், வரும் - (போர் குறித்து) வருகிற, வேந்தர் போல் - அரசர்கள்போல, மாதர் முகங்களொடு - மாதர்களுடைய முகங்களுடன், எங்கணும் - எவ்விடத்தும், தோற்ற - முற்காலத்தில் தோல்வியடைந்த, சந்திரன் - சந்திரனானவன், மீளவும் தோற்றினான் - மறுபடியும் நாணமில்லானாய் உதயஞ்செய்தான்—எ-று. (௩௩)

எங்கணும் என்றது இன்பநுகர்ந்த நகரத்தையும் அஃதொழிந்த விடத்தையும்.

௧௫ - வது. நீர்விளையாட்டுப்படலம் முற்றும்.

## ௧௮ - வது. உண்டாட்டுப்படலம்.



உண்டாடலைக்குறித்துச் சொல்லும் படலம்.



1046. வெண்ணிற நறைநிறை வெள்ள மென்னவும்
பண்ணிறஞ் செறிந்திடை பரந்த தென்னவும்
உண்ணிறை காமமிக் கொழுகிற் றென்னவும்
தண்ணிறை நெடுநிலாத் தழைத்த தெங்குமே.

(இ-ள்.) வெள்நிறம் - வெண்ணிறத்தையுடைய, நறை - மதுவினது, நிறை வெள்ளம் என்னவும் - நிறைந்தபெருக்கைப்போலவும், பண் - இசையானது, நிறம்செறிந்து - உருபெற்று, இடை - உலகில், பரந்தது என்னவும் - பரவினாற் போலவும், உள்நிறை - எல்லாவுயிர்களின் மனத்தில் நிறைந்த, காமம் - காமமானது, மிகுந்து - பெருக்கெடுத்து, ஒழுகிற்று என்னவும் - புறத்தில் ஒழுகினாற்போலவும், தண் நிறை நெடுநிலா - குளிர்ச்சிநிறைந்த பெருநிலவானது, எங்கும் - எவ்விடத்தும், தழைத்தது - செழித்தது—எ-று. (௧)

இது உவமக்கிளவிபெற்று வந்தவத்துத் தற்குறிப்பணி. அணிவிளக்கம் - குபுனைபொருடனைப் பண்பாதியில் வேறுநினைவுறக்கிளத்த றற்குறிப்பென்ப. அது தான், சாதிமுதனான்கினு முண்மை யின்மையினுங் குணத்தொழிலினு முரையுரையாமையினுஞ் சொருபமேதுப் பயனக்குறிப்பினு முறையே முரணத்தொண்ணூற்றாறே. உவமக்கிளவி யுமையக்கிளவியுமதனை விரிக்கும்பிறவுமன்னே.

1047. கலந்தவர்க் கினியதோர் கள்ளு மாய்ப்பிரிந்
துலந்தவர்க் குயிர்சுடு விடமு மாயுடன்
புலந்தவர்க் குதவிசெய் புதிய தூதுமாய்
மலர்ந்தது நெடுநிலா மதனன் வேண்டவே.

(இ-ள்.) கலந்தவர்க்கு - சேர்ந்திருப்பவராகிய ஆடவர்மங்கையர் என்னுமிருதிறத்தார்க்கும், இனியது - இனியதாகிய, ஓர்கள்ளும் ஆய் - ஒப்பற்றகள்ளுமாகி, பிரிந்து உலந்தவர்க்கு - பிரிந்து வாடினவர்களுக்கு, உயிர் சுடு - உயிரைச் சுடுவதாகிய, விடமும் ஆய் - விஷமுமாகிய, உடன் - கூடவிருந்தே, புலந்தவர்க்கு - பிணங்கினவர்களுக்கு, உதவிசெய் - உதவிசெய்கின்ற, புதியதூதும் ஆய் - புதுமையாகிய தூதுமாகி, மதனன்வேண்ட - மன்மதன்வேண்டுகோளால், நெடுநிலா - பெரியநிலவானது, மலர்ந்தது - பரந்தது—எ-று.

இருவரிடத்து மொக்கநின்று காமவேட்கை தூண்டுகின்றதாதலால், புதிய தூதாயிற்று. இது, நிலாவென்னு மொருபொருளின்கண் விடய வேற்றுமையாற் பல்பொருள்களைச் சார்த்திக் கூறினமையாற் பலபடப்புனைவணி.

1048. ஆறெலாங் கங்கையே யாய வாழிதாம்
கூறுபாற் கடலையே யொத்த குன்றெலாம்
ஈறிலான் கயிலையை யியைந்த வெண்ணினி
வேறுநாம் புகல்வது நிலவின் வீக்கமே.

(இ-ள்.) (நிலவுபரத்தலால்) ஆறு எல்லாம் - ஆறுகளெல்லாம், கங்கையே ஆய - கங்காநதியேயாயின. ஆழி - கடல்களெல்லாம், கூது - சிறப்பித்துச்சொல்லப்படுகிற, பால்கடலேயே ஒத்த - பாற்கடலேயேயொத்தன, குன்று எல்லாம் - மலைகளெல்லாம், ஈறு இல்லான் - முடிவற்றவனுகிய பரமசிவனது, கயிலையை இயைந்த - கைலாயத்தையேயொத்தன, இனி - இவ்வாறானபிறகு, நிலவின்வீக்கம் - நிலாப்பெருக்கைக்குறித்து, நாம்வேறுபுகல்வது என். - நாம்வேறெடுத்துக் கூறுவதுயாது—எ-று. (௩)

அயர்வறுமமரர்களில் சேர்ந்தவனுதலின் ஈறிலான் என்றது தேவர்களை அமரர் என்பதுபோலவந்த உபசாரவழக்கு.

1049. எள்ளருந் திசைகளோ டியாரும்யாவையும்
கொள்ளை வெண்ணிலவினாற் கோலங் கோடலால்
வள்ளுறை வயிரவாள் மகர கேதநன்
வெள்ளணி யொத்தது வேலை ஞாலமே.

(இ-ள்.) வேலை ஞாலம் - கடல்சூழ்ந்தவுலகமானது, எள் அரு - இகழ்ச்சியற்ற, திசைகளோடு - திக்குகளோடு, யாரும் - (அத்திக்குகளிலுள்ள) எல்லாரும், யாவையும் - எல்லாப்பொருள்களும், கொள்ளை - மிகுதியாகிய, வெள் நிலவினால் - வெண்ணிலவால், கோலம் கோடலால் - கோலங் கொள்ளுதலால், வள்-வாரினாலாகிய, உறை - உறையிற்றங்கிய, வயிரவாள் - வயிரம்போன்ற (தாழைமடலாகிய) வாளையுடைய, மகரகேதநன் - மீனக்கொடியையுடைய மன்மதனது, வெள்ளணி ஒத்தது - வெண்கஞ்சுகமணிந்த படைவகுப்பை யொத்தது—எ-று. (௪)

யாவருங் காமனுணைக்குள்ளடங்கி யொழுகினு ரென்பது கருத்து. ஞாலம் என்பது திசைகளோடென்றமையின் இடத்தையும், யாரும் யாவையுமென்றமையின் இடவாகுபெயராய் இடத்து நிகழ்பொருளையு முணர்த்திற்று. வெள்ளணி என்பதற்குப் பரத்தையிற்பிரிந்த தலைவன்பால், தலைவி நெய்யாடிய திருவை சாற்றற்குமுன், வெள்ளணி யணிந்துவிடுத்தலைப் பொருளாகக்கூறுவாருமுளர். அங்ஙனங் கூறுதற்கு யாதோரியையு மீண்டின்மையி னது பொருந்தாது. வள் கூர்மையெனினு மிழுக்காது.

1050. தயங்குதா ரகைபுரை தரள நீழலும்
இயங்குதார் மிடைந்தகா ரெழினிச் சூழலும்
கயங்கள்போன் றொளிர்பளிங் கடுத்த கானமும்
வயங்குபூம் பந்தரு மகளி ரெய்தினர்.

(இ-ள்.) தயங்கு - பிரகாசிக்கின்ற, தாரகை புரை - விண்மீன்களையொத்த, தரளம் நீழலும் - முத்தும்பந்தலினிழலிலும், இயங்கு - (காற்றால்) அசைகின்ற, தார்மிடைந்த - மலர்மாலைகள் நெருங்கிய, கார் - மேகத்தையொத்த, எழினிசூழலும்-(பரந்தவடிவினவாகிய) திரைகளைகட்டிய இடங்களிலும், கயங்கள் போன்று ஒளிர் - குளங்களையொத்து விளங்குகிற, பளிங்கு அடுத்த கானமும் - பளிங்குப்பாறைகள் பொருந்திய காடுகளிலும், வயங்கு - விளங்குகின்ற, பூ பந்தரும் - பூம்பந்தல்களிலும், மகளிர் எய்தினர் - மாதர்கள்சென்று சேர்ந்தார்கள். (௫)

1051. பூக்கம ழோதியர் போது போக்கிய
சேக்கை யின்பச்செருச் செருக்குஞ் சிந்தையா

ஆக்கிய வமிர்தென வம்பொன் வள்ளத்து
வாக்கிய பசுநறு மாந்தன் மேயினர்.

(இ-ள்,) பூ கமழ் - மலர்கள்கமழ்கின்ற, ஓதியர் - கூந்தலையுடையமாதர்கள், போதுபோக்கிய - இராக்காலங்கழித்ததற்காக, சேக்கை - சயநத்தில், இன்பம் செரு -இன்பத்தைத்தருகிற கலவிப்போரினால், செருக்கும் - களிக்கிற, சிந்தையார்- மனத்தையுடையவர்களாய், ஆக்கிய அமிழ்து என - (திருப்பாற்கடலைக் கடைந்து, உண்டாக்கிய அமிர்தம்போல, அம் - அழகிய, பொன் வள்ளத்து - பொன்வட்டிலில், வாக்கிய-வடித்த, பசுநறு - புதியமதுவை, மாந்தல்மேயினர் - பருகுந்தொழிலைப்பொருந்தினர்கள்—எ-று (கூ)

பசுமை புதுமையின் மேலது.

1052. மீனுடை வானுடை விஞ்சை நாட்டவர்
ஊனுடை யுடம்பினு ருருவ மொப்பிலார்
மானுடை நோக்கினர் வாயின் மாந்தினர்
தேனுடை மலரிடைத் தேன்பெய் தென்னவே.

(இ-ள்.) மீன் உடை-தாரகைகளையுடைய, வான் உடை - ஆகாயத்திலுள்ள, ஞ்சைநாட்டவர் -வித்யாதரநாட்டினர், (பிறப்பினுலுயர்ந்தவராயினும்) ஊன் உடை உடம்பினர் - மாமிசத்தாலாக்கப்பட்ட வுடம்பையுடைய இவ்வாட்வர்மாதர் என்னுமிருதிறத்தாருடைய, உருவம் ஒப்பிலார் - வடிவையொத்தலிலர், (அவ்வாறு சிறந்த அழகையுடைய) மான் உடை நோக்கினர் - மானோக்கம் போலும் நோக்கினையுடைய மாதர்கள், தேன் உடைமலர் இடை - தேனையுடையமலரினிடத்து, தேன்பெய்தென்ன - தேனைபெய்தாற்போலத்தோன்ற, வாயின் மாந்தினர் - வாயினல்பருகினர்கள்—எ-று. (எ)

இவர்களை ஊனுடை யுடம்பினர் என்றமையான், அவர் பிறப்பினலுயர்ந்தவர் என்பது பெறப்பட்டது. அவ்வுயர்வாவது, உடலில் வெயர்வைதட்டல், வேடையுண்டாதல், கால்நிலந்தோய்தல் முதலியவை யின்மை.

1053. உக்கபால் புரைநிலா வுண்ட வள்ளமும்
கைக்கொள்வா ளொளிபடச் செவந்து காட்டத்தன்
மைக்கணுஞ் செவந்ததோர் மடந்தை வாய்வழி
புக்கதே னமிர்தமாய்ப் பொலிந்த போன்றவே.

(இ-ள்) ஓர் மடந்தை - ஒருமாதானவள், கைக்கொள்வாள் - கையாலெடாநின்றாள், ஒளி பட - (இந்தக்கையின்) ஒளிபடுவதினால், உக்கபால்புரை - சிந்தினபாலையொத்த, நிலா உண்ட - சந்திரகிரணம்பாய்ந்த, வள்ளமும் - வட்டிலும், செவந்துகாட்ட - செவந்து தோன்ற, தன் - தன்னுடைய, மை கண்ணும் - மைக்கண்களும், செவந்த - செவந்தன, (ஆதலால்) வாய்வழி - வாய்வழியாக, புக்கதேன் - புகுந்தேன், அமிர்தம் ஆய் - அமிர்தமாகி, பொலிந்தபோன்ற - போலிந்தது போலும்—எ-று. (அ)

தன்னையுண்டவருடைய வுருவை செம்மைசெய்தலின் அமுத முவமையாயிற்று.

1054. தாமமு நானமுந் தைத்த தண்ணகிற்
றாமமுண் குழலியு் ருண்ட தூநறை

ஏமவெங் குழியுகு நெய்யி னுள்ளுறை
காமவெங் கனலினைக் கனற்றிக் காட்டிற்றே.

(இ-ள்.) தாமமும் - மாலையும், நானமும் - கஸ்தூரியம், ததைந்த - அடர்ந்த தண் - தண்ணிய, அகில் தூமம் உண் குழலியர்-அகிற்புகையுண்ட கூந்தலையுடைய மாதர்கள், உண்ட - உண்ட, தூநறை - பரிசுத்தமாகிய மதுவானது, வெம் - வெவ்வியநெருப்பையுடைய, ஓமக்குழி உகும் - ஓமக்குண்டத்தில் சிந்திய, நெய்யின் - நெய்யைப்போல, உள் உறை - உள்ளத்தில்தங்கிய, காமம் - காமமாகிய, வெம் கனலினை - வெவ்வியதீயை, கனற்றிக்காட்டிற்று - எரித்துக்காட்டிற்று—எ-று. ()

வேறு.

1055. விடனொக்கு நெடியநோக்கி னமிர்தொக்கு மின்சொலார்தம்
மடனொக்கு மடனுமுண்டே வாணுதலொருத்திகாணத்
தடனொக்கு நிழலைப்பொன்செய் தண்ணறுந் தேறல்வள்ளத்
துடனொக்க வுவந்துநீயே யுண்ணுதி தோழியென்றாள்.

(இ-ள்.) வாள் நுதல் - ஒளியமைந்த நெற்றியையுடைய, ஒருத்தி - ஒருமாது, காண - காணும்படி, தடன் ஒழுக்கும் நிழலை - பெருமைபொருந்திய நிழலை, (மதுவில்தோன்றக்கண்டு) தோழி - தோழியே, தண் நறு தேறல் - தண்ணிய நறிய மதுவை, பொன்செய் வள்ளத்து - பொன்னாற்செய்யப்பட்ட வட்டிலில், உடன் ஒக்க உவந்து - கூடவொத்துச் சந்தோஷித்து, நீயே உண்ணுதி என்றாள் - நீயே பருகுவாயென்றாள். (ஆதலால்) விடன் ஒக்கும் - விஷத்தையொத்த, நெடிய நோக்கின் - நெடியநோக்கையும், அமுது ஒக்கும் - அமிர்தத்தையொத்த, இன்சொலார் - இன்சொல்லையுமுடைய மாதரது, மடன் ஒக்கும் - அறியாமையை யொத்த, மடனும் உண்டே - அறியாமையுமுண்டோ (இல்லை)—எ-று. (௧0)

1056. அச்சநுண் மருங்குலாளோ ரணங்கனை ளளகபந்தி
நச்சுவேற் கருங்கட்செவ்வாய் நளிர்முக மதுவுட்டோன்றப்
பிச்சிநீ யென்செய்தாயிப் பெருநற விருக்கவாளா
எச்சிலை நுகர்தியோவென் றெயிற்றரும் பிலங்கநக்காள்.

(இ-ள்.) அச்சம் நுண் மருங்குலாள்-அச்சத்தைத் தருகிற நுண்ணிடையை யுடையவளாகிய, ஓர் அணங்கு அன்னாள் - ஒருதெய்வப்பெண்ணை யொத்தவள், அளகபந்தி - (தனது) அளகபந்தியையும், நச்சுவேல் கருகண் - நஞ்சூட்டிய வேல் போலுங்கரியகண்களையும், செவ்வாய் - செவ்வாயையுமுடைய, நளிர்முகம் - குளிர்ந்தமுகம், மதுவுள் தோன்ற - (வட்டிலுள்ள) மதுவில் காணப்பட, (அதை ஒரு பெண்ணின்முகமெனக்கருதி) பிச்சி-பிச்சியே, நீ என்செய்தாய் - நீ யென்ன காரியஞ்செய்தாய், இ பெருநறவு இருக்க-(சாடியில்) இந்த மிகுந்த மதுவிருக்க, வாளா-பயனில்லாமல், எச்சிலை நுகர்தியோ என்று - எச்சிலை யுண்கிறாயோ வென்று, எயிறு அரும்பு இலங்க நக்காள் - பற்களாகிய முல்லையரும்புகள் விளங்கும்படி சிரித்தாள்-எ-று. (௧௧)

1057. புறமெலா நகைசெய்தேசப் பெருவரு மேனிவேறோர்
மறமுலாங் கொலைவேற்கண்ணாள் மணியின்வள்ளத்துவெள்ளை
நிறநிலாக் கற்றைபாய நிறைந்தது போன்றுதோன்ற
நறவென வதனைவாயின் வைத்தன ளுணட்கொண்டாள்.

(இ-ள்.) பொரு அரு - ஒப்பில்லாத, மேனி - சரீரகாந்தியையுடைய, வேறு ஓர் மறம் உலாம் கொலைவேல் கண்ணாள் - வேறொருசினங் காரணமாக வுண்டாகுங்கொலைத்தொழிலைச் செய்கின்ற வேல்போலுங் கண்களையுடையாள், மணியின் வள்ளத்து - மணியாற்செய்த வட்டிலில், வெள்ளைநிறம் - வெண்ணிறமாகிய, நிலாக்கற்றை - நிலவின்றொகுதி, பாய - பாய்தலால், நிறைந்துபோன்று தோன்ற - மதுநிறைந்ததையொத்துத்தோன்ற, அதனை - அதை, நறவு என் - மதுவென்று கருதி, புறம் எலாம் நகைசெய்து எச - புறத்தாரெல்லாம் சிரித்து எசும்படி, வாயின்வைத்தனள் - (அவ்வட்டிலை) வாயில்வைத்து, (சுவைக்கப்பெறாமையால்) நாண் உள் கொண்டாள் - நாணத்தை மனத்திற்கொண்டாள்-எ-று. (௧௨)

வேற்படை மார்பிற்றைத்துருவிக் கொலைசெய்வது, இஃது அங்ஙன மல்லாமல் நின்றநிலையிலிருந்து பாய்ந்து உயிர் உருவிச் செல்வதாதலின் "வேறோர் மறமுலாங்கொலைவேற்கண்ணாள்" என்றார்.

1058. யாழ்க்குமின் குழற்குமின்ப மளித்தன விவையாமென்னக்
கேட்குமென் மழலைச்சொலலோர் கிஞ்சுகங் கிடந்தவாயாள்
தாங்கருங் குவளைதோய்ந்த தண்ணறைச் சாடியுட்டன்
வாட்கணி னிழலைக்கண்டாள் வண்டென வோச்சுகின்றாள்.

(இ-ள்.) யாழ்க்கும் - யாழுக்கும், இன் குழற்கும் - இனியகுழலுக்கும், இன்பம் அளித்தன - இன்பத்தைக்கொடுத்தன, இவை ஆம் என்ன - இவையாகுமென்று கருதி, கேட்கும் - கேட்பதற்குரிய, மெல் - மிருதுவாகிய, மழலைச்சொல் - குதலைச்சொல்லையும், ஓர் - ஒப்பற்ற, கிஞ்சுகம் கிடந்த - முருக்கம்பூப்போன்ற, வாயாள் - இதழோடுகூடிய வாயையுமுடைய வொருத்தி, தண் நறைசாடியுள் - தண்ணிய மதுச்சாடியுள், கருங்குவளைத்தாள் - கருங்குவளைத்தண்டுபடிந்த, தன் - தன்னுடைய, வாள் கண்ணின் நிழலை - ஒளியையுடைய கண்ணிழலை, கண்டாள் - கண்டு, வண்டு என - வண்டெனக்கருதி, ஓச்சுகின்றன் - ஓட்டாநின்றாள்—எ-று. (௧௩)

குவளைத்தாள்படிதல் மொய்க்கும் வண்டுகளுக் கஞ்சி அத்தண்டின் கிறுதுவாரத்தின்வழியாக மதுவை யுறிஞ்சுதற்பொருட்டு. இதனைத் தண்டியாசிரியர், கண்ணினது வனப்பை யுவந்துரைப்புழி, உலகு வரம்பிறவா நிலைமைத்தாய், ஆன்றோர் வியப்ப அத்தனிழலை வண்டெனத் திரிபுறக்கூறினமையின், திரிபதிசயமென்பர்; அணியிலக்கணநூலார், ஒப்புமையால் கண்ணை வண்டெனவுணர்ந்ததாக வந்தமையின் மயக்கவணியென்பர்.

1059. களித்தகண் மதர்ப்பவாங்கோர் கனங்குழை கள்ளினுள்ளால்
வெளிப்படு கின்றகாட்சி வெண்மதி நிழலைநோக்கி
அளித்தனெ னபயம்வானத் தரவினை யஞ்சிநீவந்
தொளித்தனை யஞ்சலென்றாங் கினியன வுணர்த்துகின்றாள்.

(இ-ள்.) ஆங்கு - அவ்விடத்து, ஓர் கனங்குழை - ஒருகனவிய குழையையுடையாள், கள்ளின் உள்ளால் - மதுச்சாடியுள், வெளிப்படுகின்ற - தோன்றுகின்ற, காட்சி - தோற்றமாகிய, வெள் - வெள்ளிய, மதி - சந்திரனது, நிழலை - சாயையை, களிக்கும்படி, நோக்கி - பார்த்து, நீவானத்து அரவினையஞ்சி - நீயாகாயத்திலிருக்கிற இராகுவென்னும் பாம்புக்கஞ்சி, வந்து ஒளித்தனை - வந்து ஒளித்துக்கொண்டாய், அபயம் அளித்தனென் - (நான்) அபயங் கொடுத்தேன், அஞ்சல் - அஞ்சாதி, என்று - என்று, இனியனவுணர்த்துகின்றாள் - இன்சொற்களைச் சொல்லுகின்றாள்—எ-று. (௧௪)

உரையாநின்றாளென்றது உணர்த்துகின்றாளென்றமையின், இனியனவென்றது உறுதிமொழிகளை, ஆகவே, நீ பிறர்க்கின்னாதவற்றை முற்பகலிற்செய்யின், பிற்பகலில் அவ்வின்னா செய்தான்பாற் றாமே வருமெனவும் இன்னா செய்யப்பட்டார்பால் குறையிரக்கவும் ஒருகாற்கூடினுங் கூடுமெனவு முணராது, யான் கணவன்பாலூடியகாலத்தும், அவனைப்பிரிந்தகாலத்தும், வெந்நிலவெறித்துவருத்தினை, இனி அது செய்யாது நல்லொழுக்கி லொழுகுகவென இன்னோ ரன்னவற்றையுணர்த்தினாளென்பது கருத்து.

1060 அழிகின்ற வறிவினாலோ பேதைமை யாலோவாற்றிற்
சுழியொன்றி நின்றதன்ன வுந்தியே தூயசெந்தேன்
பொழிகின்ற பூவின்வேய்ந்த பந்தரைப் புரைத்துக்கீழ்வந்
திழிகின்ற கொழுநிலாவை நறவென வள்ளத்தேற்றாள்.

(இ-ள்.) ஆற்றில்-யாற்றில், சுழி-சுழியானது, ஒன்றிநின்றது அன்ன-அசையாது நின்றதையொத்த, உந்தியாள் - உந்தியையுடையா ளொருத்தி, தூயசெந்தேன் பொழி-பரிசுத்தமான செந்தேனைப்பொழிகின்ற, பூவின்-பூமாலைகளால், வேய்ந்த-அலங்கரித்த, பந்தரைப்புரைத்து-பந்தலைத்தொளைத்து, கீழ்வந்து இழிகின்ற-கீழேவந்திறங்குகிற, கொழுநிலாவை - செழியநிலவை, அழிகின்ற அறிவினாலோ-அழியாநின்ற அறிவினாற்றானோ, இயற்றையாகிய பேதமையாலோ - (இயற்கையாகிய) பேதமையாற்றானோ, நறவுஎன-மதுவென்றெண்ணி, வள்ளத்து எற்றாள் - வட்டிலிலேற்றாள்—எ-று. (௬௫)

1061. மின்னென நுடங்குகின்ற மருங்குலா ளொருத்திவெள்ளை
இன்னமிர் தனையதீஞ்சொ லிடைதடு மாறியென்ன
வன்னமே கலையைநீக்கி மலர்த்தொடை யல்குல்சூழ்ந்தாள்
பொன்னரி மாலைகொண்டு புரிகுழல் புனையலுற்றாள்.

(இ-ள்.) மின் என-மின்னற்கொடிபோல, நுடங்குகின்ற-துவள்கின்ற, மருங்குலாள்-இடையுடையாள், ஒருத்தி-ஒருபெண், வெள்ளை இன் அமிர்து அனைய-(தான் பேசுகிற) வெண்மையாகிய இனிய அமுதையொத்த தீ சொல் - மதுரவசனங்கள், (கள்மயக்கத்தால்) இடைதடுமாறி என்ன-இடையே தடுமாறினாற்போல, வன்னம்-பலநிறங்களையுடைய, மேகலையைநீக்கி - மேகலையைக்களைந்து, மலர்த்தொடை - பூமாலையை, அல்குல்சூழ்ந்தாள்-அல்குலில் சூழவிட்டாள், பொன்னரிமாலைகொண்டு-பொன்னரிமாலையைக் கையிற்கொண்டு, புரிகுழல் புனையல் உற்றாள்-புரிவாகிய கூந்தலை யலங்கரிக்கத்தொடங்கினாள்—எ-று. (௬௬)

அல்குல் சூழ்ந்தாள் என மேல்வருதலால், மேகலையென்றது ஆடையை. அல்குல் சூழ்ந்தாள் என்பது இடக்கரடக்கல்.

1062. கண்மணி வள்ளத்துள்ளே களிக்குந்தன் முகத்தைநோக்கி
விண்மதி மதுவினாசை வீழ்ந்ததென் றொருத்தியுன்னி
உண்மகிழ் துணைவனோடு மூடுநாள் வெம்மைநீங்கித்
தண்மதி யாகில்யானுந் தருவெனிந் நறவையென்றாள்.

(இ-ள்.) கள்-கள்நிறைந்த, மணிவள்ளத்துள்ளே-மணிவட்டிலில், களிக்கும்-களித்துத் தோன்றுகிற, தன்முகத்தைநோக்கி - தன்முகத்தைப்பார்த்து, விண்மதி-ஆகாயத்திலுள்ள சந்திரன், மதுவின் ஆசை-கள்விருப்பத்தால், வீழ்ந்தது என்று-விழுந்ததென்று, ஒருத்தி உன்னி - ஒருத்திநினைத்து, உள்மகிழ்துணைவனோடும் - மனமகிழ்

கின்ற நாயகனுடன், ஊடும்நாள் - ஊடுகிறகாலத்தில், வெம்மைநீங்கி - வெப்பம் ஒழிந்து, தண்மதி ஆயின் - தண்ணிய சந்திரனுவா யாயின், யானும் - உரிமையை யுடைய நானும், இ நறவை-இந்தமதுவை, தருவென் என்றாள்-கொடுப்பேனென்று சொன்னாள்—எ-று. (கஎ)

1063. எள்ளொத்த கோலமூக்கி யேந்திழை யொருத்திமுன்கை
தள்ளத்தண் ணறவையெல்லாந் தவிசிடை யுகுத்துந்தேறாள்
உள்ளத்தின் மயக்கந்தன்னா லுட்புறத் துண்டென்றெண்ணி
வள்ளத்தை மறித்துவாங்கி மணிநிற விதழின்வைத்தாள்.

(இ-ள்.) எள் ஒத்த - எட்பூவையொத்த, கோலம்-அழகிய, மூக்கின் - நாசியை யுடைய, ஏந்திழை ஒருத்தி-ஒருமாதானவள், முன்கை-முன்கையானது, தண் நறவை எல்லாம்-தண்ணியமதுவையெல்லாம், தள்ள-தள்ளாநிற்க, தவிசு இடை-(தன்) ஆசநத்தின்மேல், உகுத்தும்-சிந்தியும், தேறாள்-தெளியாதவளாகி, உள்ளத்தின் மயக்கந் தன்னால் - தன்மனமயக்கத்தால், உள்புறத்து உண்டு என்று எண்ணி-உட்புறத்துள தென்று கருதி, வள்ளத்தை-வட்டிலை, மறித்துவாங்கி - திருப்பி எடுத்து, மணிநிறம்-மணிநிறமமைந்த, இதழின்வைத்தாள்-இதழின்கண்வைத்தாள்—எ-று. (கஅ)

1064. வான்றனைப் பிரிதலாற்றா வண்டினம் வச்லைசமாக்கள்
என்றவர் நிதியம்வேட்ட விரவல ரென்னவார்ப்பத்
தேன்றரு கமலச்செவ்வாய் திறந்தனள் நுகர்நாணி
ஊன்றிய கழுநீர்நாளத் தாளினா லொருத்தியுண்டாள்.

(இ-ள்.) வான்தனை - ஆகாயத்தையும், பிரிதல் ஆற்றா - பிரிவை யாற்றாத, வண்டு இனம் - வண்டுக்கூட்டங்கள், வச்சைமாக்கள் என்று - லோபிகளைக் கையேற்று, அவர்நிதியம்வேட்ட - அவற்பொருளைப்பெற விரும்பிய, இரவலர் என்ன - யாசகர்கள்போல, ஆர்ப்ப - ஆரவாரிக்க, தேன்தரு - தேனைத்தருகின்ற, கமலம் - கமலம்போன்ற, செவ்வாய்திறந்தனள் - செவந்த வாயைத்திறந்து, நுகர-உண்ண, நாணி - நாணுற்ற, ஊன்றிய - (வள்ளத்தில்) ஊன்றிய, கழுநீர் - செங்கழு நீரினது, நாளத்தாளினால் - உட்டொளையையுடைய தண்டினால், ஒருத்தி உண்டாள் - ஒருத்தி மதுவைப்பருகினாள்—எ-று, (கக)

இழிவு சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது.

1065 புள்ளுறை கமலவாவிப் பொருகயல் வெருவியோட
வள்ளுறை கழித்தவாள்போல் வரியுற வயங்குகண்ணாள்
கள்ளுறை மலர்மென்கூந்தற் களியிள மஞ்ஞையன்னாள்
உள்ளுறை யன்பனுண்ணா னெனநற வுண்ணலெண்ணாள்.

(இ-ள்.) புள் உறை - புட்கள்வசிக்கிற கமலவாவி - தாமரைத்தடாகத்திலுள்ள, பொருகயல் - பொருதற்கரிய கயல்மீன்கள், வெருவி ஓட - பயந்தோட, வள் உறை - வாராற்செய்த உறையினின்றும், கழித்த - உருவி யெடுத்த, வாள் போல் - வாளைப்போல, வரி உற - செவ்வரிபொருந்த, வயங்கு கண்ணாள் - விளங்குகின்ற கண்ணாள், கள் உறைமலர் - தேன் தங்கிய மலரையணிந்த, மெல் கூந்தல் - மெல்லிய கூந்தலையுடைய, களி - களித்த, இளமஞ்ஞை அன்னாள் - இளமையாகிய மயிலையொப்பாளொருத்தி, உள் உறை - தன்மனத்திலுறைகின்ற, அன்பன்-தன்நாயகன், உண்ணான்என - பருகான் என்று, நற உண்ணல் எண்ணாள் - தான் நறவுண்ணுதலை நினையாள்—எ-று, (உ0)

உண்ணுன் உண்ணல் என்பன பசிப்பிணிதீர நுகரப்படும் பொருளெல்லாம் உணவெனப்படுமாகலிற் பொதுவினையாயின, அன்பன் தனதுள்ளத்தில் நீங்காதவனுதலால், நறாப்பழக்கமில்லாதவன் மேல் உட்சென்ற நறா அவன்மேல் படுமென்றஞ்சி உண்ணுதொழிந்தாள்.

வே று.

1066. கூற்றுறழ் நயனங்கள் செவப்பக் கூனுதல்
ஏற்றிவா ளெயிறுக ளதுக்கி யின்றளிர்
மாற்றருங்கரதல மறிக்கு மாதொரு
சீற்றமா மபிநயந் தெரிக்கின் றாரினே.

(இ - ள்,) சீற்றம் ஆம் - கோபமாகிய, ஒரு அபிநயம் தெரிகின்றாரின் - ஒரு அபிநயத்தைக் காட்டுவாரைப்போல, மாது - ஒருபெண்ணானவள், கூற்று உறழ் - யமனையொத்த, நயநங்கள் - கண்கள், செவப்ப - (கள்மயக்கத்தாற்) செவக்க, கூன் நுதல் - வளையாகிய புருவங்களை, எற்றி - மேற்செல்லநெரித்து, வாள்-ஒளிபொருந்திய, எயிறுகள் - பற்களால், அதுக்கி - இதழைக்கடித்து, கரதலம் - கைகளை, மறிக்கும் - மறியாநிற்பள்—எ-று. (உக)

காரியத்தைக் காரணமாக வுபசரித்து "சீற்றமாமபிநயம்" என்றார். சீற்றம், அபிநயத்தா லுணர்த்தப்படுவதாகலின், காரியமாயிற்று.

1067. துடித்தவான் றுவரிதழ்த் தொண்டைத் தூநிலாக்
கடித்தவா லெயிறுக ளதுக்கிக் கண்களால்
வடித்தவெங் குருதிவேல் விழிக்கு மாதர்மெய்
பொடித்தவேர் புறத்துகு நறவம் போன்றவே.

(இ-ள்.) துடித்த - துடியாநின்ற, வான் துவர் - மிக்கசெவப்புள்ள, இதழ் - இதழாகிய, தொண்டை - கொவ்வைக்கனியை, தூநிலாகடித்த - தூயநிலவைக் கோபித்த, வால் - வெள்ளிய, எயிறுகள் - பற்களால், அதுக்கி-கடித்து, கண்களால்-(தமது) கண்களால், வடித்த - கூர்மையைக்கொண்ட, வெம்குருதி - வெவ்விய வுதிரந்தோய்ந்த, வேல் - வேல்போல, விழிக்கும் - விழிக்கின்ற, மாதர் - மாதர்களுடைய, மெய் - சரீரத்தில், பொடித்த - அரும்பிய, வேர் - வேர்வைத்துளிகள், புறத்து - வெளியில், உகு - சிந்துகின்ற, நறவம்போன்ற - மதுத்துளிகளை யொத்திருந்தன—எ-று. (உஉ)

1068. கனித்திர ளிதழ்பொழு செம்மை கண்புக
நினைப்பதொன் றுடைப்பதொன் றுமொர் நேரிழை
தனிச்சுடர் தாமரை முகத்துச் சாபமும்
குனித்தது பனித்தது குழவித் திங்களே.

(இ-ள்.) திரள் இதழ் - திரண்டவிதழானது, கனி - கனிந்து, பொழி - பொழிகின்ற, செம்மை - செந்நிறமானது, கண் புக - கண்களிற் சேராநிற்க, நினைப்பது ஒன்று - மனத்தினால் நினைப்பதொன்றும், உரைப்பது ஒன்று - வாயினாற் சொல்லுவதொன்றும், ஆம் - ஆகிய, ஓர் நேரிழை - ஒருபெண்ணின், தனி-ஒப்பற்ற, சுடர் - விளங்குகிற, தாமரை - தாமரைமலர்போன்ற, முகத்து - முகத்தில், சாபமும் - (புருவமாகிய) வில்லும், குனித்தது - வளைந்தது - குழவிதிங்கள் - (நெற்றியாகிய) இளஞ்சந்திரனும், பனித்தது - வியர்த்துக்குளிர்ந்தது—எ-று. (உ௩)

கனிமொழி, வரிப்புனை பந்துபோல வந்தது. இறந்தது தழீஇய எச்சவும்மை விகாரத்தாற் றொக்கது. குனிதலும் பனித்தலும் காரியத்தோடு காரணத் தூக்கொற்றுமையுண்மையின் தன்வினையேயாம், குனித்தது - வலித்தல்.

1069. இலவிதழ்த் துவர்விட வெயிறு தேனுக
முலைமிசைக் கச்சொடு கலையு மூட்டற
அலைகுழல் சோர்தர வசதி யாட்டலால்
கலைவிசெய் கொழுநருங் கள்ளு மொத்தவே.

(இ-ள்.) இலவு இதழ் - இலவம்பூவையொத்த இதழானது, துவர்விட - செந்நிறத்தைவிடவும், எயிறு - பற்களில், தேன் உக - (ஊறுகின்றநீராகிய) தேன்சிந்தவும், முலைமிசை - ஸ்தநங்களின்மீதணிந்த, கச்சொடு - கச்சுடன், கலையும் - ஆடையும், மூட்டு அற - இசைத்தகட்டவிழவும், குழல் - அலைகின்ற கூந்தலானது, சோர்தர - சோரவும், அசதி ஆட்டலால் - அசதியென்னும் விளையாட்டைச்செய்வதினால், கலவிசெய் - புணர்ச்சியைச் செய்கின்ற, கொழுநரும் - கணவர்களும், கள்ளும் - கள்ளும், ஒத்த - தம்மிலொத்தன—எ-று. (௨௪)

கொழுநருங் கள்ளுமொத்த என்பது சிறப்பாற்றிணைவிரவி அஃறிணைமுடிபேற்றது. இப்படலத்தாற் கூறப்படுவன உண்டாட்டிற் கின்றியமையாத கள்ளுண்டலும், அதனால் நிகழுங் காரியவினையுமே யாகலாற், கள் சிறப்பாயிற்று. கொழுநருங் கள்ளுமாகிய இரண்டனுள், ஒவ்வொன்றும் ஒத்தகிழவனுங் கிழவியுங்காண்ப என்றாற்போல, ஒருகாற் செய்பவனுயும், ஒருகாற் செய்பொருளாயு நின்றது. இவ்வாறன்றிக் கொழுநரையுங் கள்ளுமொத்தனென முன்னைய துயர்வு சிறப்பும்மையாகவும்பின்னைய திழிவு சிறப்பும்மையாகவுங்கொண்டு, பொருளுரைக்கின், அவ்விரண்டனுள் ஒன்றுகூற, ஏனையதன் பொருள், தானே வந்தியையுமாதலின், அவற்றுள் ஒன்று வேண்டாகூறலாய் முடியுமாதலாற் பொருந்தாது. இது எதுவவமையணி.

1070. கனைகடற் கள்வனாற் கலக்க முற்றதை
அனகனுக் கறிவியென் றறியப் போக்குமோர்
இனமணிக் கலையினா டோழி நீயுமென்
மனமெனத் தாழ்தியோ வருதி யோவென்றாள்.

(இ - ள்.) கனை - ஒலிக்கின்ற, கடல் - கடலாகிய, கள்வனால் - கள்வனால், கலக்கம் உற்றதை - கலக்கமடைந்ததை, அனகனுக்கு - குற்றமில்லாதவனாகிய தலைவனுக்கு, அறிவி என்று - தெரிவிப்பாயென்று, அறிய - தலைவனறியும்படி, போக்கும் - விடுகின்ற, ஓர்-ஒப்பற்ற, இனம்-கூட்டமாகிய, மணி - மணிவினையமைந்த, கலையினாள் - ஆடையையுடையாளொருத்தி, தோழி, - தோழியே, நீயும் - (எனக்கினியாளான) நீயும், என்மனம் என-என்மனம்போல, தாழ்தியோ தாமதிப்பாயோ, வருதியோ - (விரைந்து) வருவாயோ, என்றாள் - என்றுகேட்டாள்—எ-று., (௨௫)

கடல் தன்னோடு கணவன் உடனுறைகாலத்துச், செவிக்கினிமை பயக்குமொலியைத்தந்து, அவனீங்கிய வற்றமுணர்ந்து இன்னல் பயக்கு மொலியைத்தந்து வருத்தும் வஞ்சம்புரிகின்ற தென்பாள் கனைகடற் கள்வனென்றும், நல்லார்க்கும் அவரைச் சார்ந்தொழுகினார்க்குந் தீங்குதருவதும் நன்குதருவாய் முடியுமென்பவாகலின், பிரிந்தவழி அது என்னை வருத்துகின்றது அதனால் யான் தீதேயெனென்பாள் எதிர்மறைமுகத்தால் அவனை அனகனென்றுங் கூறினாள்.

1071. மானமர் நோக்கியோர் மதுகை வேந்தன்பால்
ஆனதன் பாங்கிய ராயி ஞரெலாம்
போனவர் போனவர் தொடரப் போக்கினள்
தானுமங் கவர்பினே தமிய ளேகினள்.

(இ-ள்.) மான் அமர் - மான்விரும்புகின்ற, நோக்கி - நோக்கையுடையாள் ஒருத்தி, ஓர்மதுகை வேந்தன்போல் - திண்மையையுடைய ஓரரசனிடத்தில், ஆன தன்பாங்கியர் ஆயினர் எல்லாம் - தனக்கிணங்கிய தன்பாங்கியர் எல்லாரையும், போனவர் போனவர்தொடர - முன்போயினரும் பின்போயினரும் தொடர்ந்து செல்ல போக்கினள் - போக்கினவளாகி, தானும் - (அதுமட்டிலமைந்திராமல்) தானும், அங்கு - அத்தலைவனிடத்துக்கு, அவர்பின்னே - அவர்கள்பின்னே, தமியள் ஏகினள் - தனித்தவளாய்ச் சென்றாள்—எ-று. (உசு)

1072. விரைசெய்பூஞ் சேக்கையி னடுத்த மீமிசை
கரைசெயா வாசையங் கடலு ளாளொரு
பிரைசமென் குதலையாள் கொழுநன் பேரெலாம்
உரைசெயுங் கிள்ளையை யுவந்து புல்லினள்.

(இ-ள்.) விரைசெய் - மணக்கின்ற, பூ சேக்கையின் - புஷ்பசயநத்தில், அடுத்த - தானடைந்த, மீமிசை - மிகவும்மேலே, கரை செயா - கரைசெய்து தடுக்கப்படாத, ஆசைகடலுளாள் - ஆசையாகியகடலில் மூழ்கினவளாகிய, ஒருபிரைசம் என்குதலையாள்-தேனென்று சொல்லத்தக்க குதலைமொழியை யுடையாளொருத்தி, கொழுநன்பேர் எல்லாம் - தன்கணவன் பேர்களையெல்லாம், உரைசெயும்-சொல்லுகின்ற, கிள்ளையை - கிளியை, உவந்துபுல்லினள் - மனமகிழ்ந்து தழுவிக்கொண்டாள்—எ-று. (உஎ)

பேர் எல்லாமென்றது, இயற்பெயரேயன்றி, எழில் குணம் ஆண்மை வெற்றி முதலியவற்றானாகிய சிறப்புப்பெயர்களை. மீமிசை - ஒருபொருட்பன்மொழி.

1073. மன்றனா றொருசிறை யிருந்தொர் வாணுதல்
தன்றுணைக் கிள்ளையைத் தழீஇயென் னாவியை
இன்றுபோய்க் கொணர்கிலை யென்செய்வா யெனக்
கன்றிலோ டொத்தியென் றழுது சீறினள்.

(இ-ள்.) ஓர்வாணுதல் - ஓர்மாதானவள், மன்றல் நாறு-மணம்வீசுகின்ற, ஒருசிறையிலிருந்து - ஓரிடத்தி லிருந்துகொண்டு, தன் துணை - தன்றுணையாகிய, கிள்ளையை - கிளியை, தழீஇ - தழுவி, என் ஆவியை - என்னுயிர்போல்வானை, இன்றுபோய் கொணர்கிலை - இன்றுபோய் அழைத்துவந்தாயில்லை, எனக்கு என்செய்வாய் - எனக்கு வேறெதைச்செய்வாய், அன்றிலோடு ஒத்தி - அன்றிற்பறவையோடொத்திராநின்றாய், என்று - என்றுசொல்லி, அழுதுசீறினள் - அழுதுசீறினள்—எ-று. (உஅ)

அன்றிலோடு ஒத்தலாவது பலமுறை அவன்பெயர்களைக்கூறி அவனை யான் மறவாதவாறு செய்தல்.

1074. வளைபயில் முன்னகையோர் மயிலனாள் தனக்
கிளையவள் பெயரினைக் கொழுந னீதலும்
முளையெயி றிலங்கட முறுவல் வந்தது
களகள வுதிர்ந்தது கயற்க ணாவியே.

(இ-ள்.) வளைபயில் - பொன்வளைகள்நெருங்கிய, முன்கை - முன்கைகளையுடைய, ஓர்மயில் அன்னாள் - ஒருமயிலையொப்பாள், தனக்கு இளையவள்பெயரினை - தனக்கிளையாள்பெயரை, கொழுநன் - தன்கணவன், ஈதலும் - தனக்கிட்டழைத்தலும்; முளை எயிறு இலங்கிட - அங்குரத்தையொத்த பற்கள்விளங்க, முறுவல் வந்தது - சிரிப்புவந்தது, கயல் கண் - கயல்போலுங்கண்களில், ஆலி - நீர்த்துளி, களகள உதிர்ந்தது - களகளவேனவுதிர்ந்தது—எ-று. (உக)

சோர்வினால் இளையவள்பெயரிட்டுத் தன்னையழைத்தானாக, அவண் மாட்டு வைத்த மிக்ககாதலைக் கரந்தொழுகிய நின்கள்ள வொழுக்கம் புலப்பட்டதெனநகைத்து, என்பால் மிக்க காதலுடைமையில்லையென அழுதனள் என்பதுகருத்து.

1075. செற்றமுன் புரிந்ததோர் செம்மல் வெம்மையால்
பற்றலு மல்குலிற் பரந்த மேகலை
அற்றுகு முத்தின்முன் னவனி சேர்ந்தன
பொற்றொடி யொருத்திகண் பொருத முத்தமே.

(இ-ள்.) முன் - முன்னே, செற்றம்புரிந்ததோர் செம்மல் - குற்றத்தைச்செய்தவனாகிய ஓரரசன், வெம்மையால் - (ஊடலைத்தணிக்கும்) விருப்பத்தால், அல்குலில் - நிதம்பப்ரதேசத்தில், பரந்த - பரவிச்சூழ்ந்த, மேகலை - மேகலையை, பற்றலும் - தொடுதலும், (நில்லாதுவிரைந்துசெல்லலால்) அற்று உகும் - அறுபட்டுச் சிந்துகிற, முத்தின்முன் - முத்துகளுக்குமுன்னே, பொன்தொடி ஒருத்தி - பொன்வளையலையணிந்தா ளொருத்தியினது, கண்பொருதமுத்தம் - கண்கள்தாங்காத கண்ணீராகிய முத்துகள், அவனிசேர்ந்தன - பூமியைச்சேர்ந்தன—எ-று. (௩0)

செற்றம் காரிய வாகுபெயர். செம்மல், சொல்லா னஃறிணையாதலின், தன் விசேடணமாகிய புரிந்தது என்னும் வினையாலணையும் பெயரும் அஃறிணையாய் நின்றது. இது காரணமாகிய பற்றியூடல்தீர்ப்பதற்கு முன்னர், காரியமாகிய கண்பொருத முத்தம் அவனி சேர்ந்தனவாகக் கூறினமையின் மிகை யதிசயவிற்சி.

1076. தோடவிழ் கூந்தலா ளொருத்தி தோன்றலோ
டூடுகேனோ வுயி ருருகு நோய்கெடக்
கூடுகேனோ வவன் குணங்கள் வீணையிற்
பாடுகேனோ வெனப் பலவும் பன்னினாள்.

(இ-ள்.) தோடு அவிழ் - மலர்களவிழ்ந்த, கூந்தலாள் ஒருத்தி - கூந்தலையுடையாளொருத்தி, (வந்தால் பிரிந்து என்னுயிர்க்கு நோய்செய்ததைக்குறித்து) தோன்றலோடு - கணவனோடு, ஊடுகேனோ - பிணங்குவேனோ, உயிர் உருகும் - உயிருருகுதற்குக் காரணமாகிய, நோய்கெட - (காம) நோய்கெடும்படி, கூடுகேனோ - கூடக்கடவேனோ, அவன்குணங்கள் - அவனுடைய நற்குணங்களை, வீணையில் பாடுகேனோ - வீணையிலமைத்துப் பாடுவேனோ, என - என்று, பலவும் பன்னினாள் - பலவற்றையும் சொல்லினாள்—எ-று. (௩௧)

ஊடுகென் முதலிய மூன்று வினைமுற்றுகளிலும் கு எதிர்காலம் காட்டியது. தோடு சினையாகுபெயர்.

1077. மாடகம் பற்றினள் மகர வீணைதன்
தோடவிழ் மலர்க்கரஞ் செவப்பத் தொட்டனள்
பாடினா ளொருத்திதன் பாங்கு ளார்களோ
டோடின துரைசெயா ளுள்ளத் துள்ளதே.

(இ-ள்.) ஒருத்தி - ஒருபெண்ணானவள், ஊடினது - (தன்கணவனோடு) ஊடினது, உள்ளத்து உள்ளத்து - தன்மனத்திலுள்ளது, (அதை) தன்பாங்கு உளார்களோடு - தன்னருகிலிருக்குஞ் சேடியாரோடு, உரைசெயாள் - சொல்லாதவளாகி, மாடகம்பற்றினள் - முறுக்காணியைப்பற்றி, மகரவீணை - மகரவீணையை தன் - தனது, தோடு அவிழ்மலர் - இதழ்கள்விரிந்த தாமரைமலர்போன்ற, கரம் - கை, செவப்ப - செவக்கும்படி, தொட்டனள் பாடினள் - தொட்டுப்பாடினாள்-எ-று. ()

நாயகன் புரிந்தகுற்றத்தைத் தன்பாங்குளாரோடு உரைசெயின் அவர்கள் தன்பால்வைத்த அன்பின்மிகுதியால் அவனைக் குற்றங்கூறுவாரென்றஞ்சி, அது புறத்தில் தோற்றாவகை இவ்வாறு போதுபோக்கினா ளென்பது கருத்து.

1078. குழைத்துப்பூங் கொம்பனா ளொருத்தி கூடலை
இழைத்தன ளவ்வவ ளிட்ட போதெலாம்
பிழைத்தலு மனங்கவேள் பிழைப்பி லம்பொடும்
உழைத்தன ளுயிர்த்தன ளுயிருண் டென்னவே.

(இ-ள்.) குழைத்த - தளிர்த்த, பூகொம்பு அன்னாள் - பூங்கொம்பை யொப்பவளாகிய, ஒருத்தி - ஒருபெண்ணானவள், கூடலை இழைத்தனள் - கூடற்சுழிகளையிழைத்தாள் அவ் - அவை, அவள் இட்டபோது எல்லாம் - அவள் சுழித்தபொழுதெல்லாம், பிழைத்தலும் - தவறுதலும், அநங்கவேள்-மன்மதனது, பிழைப்பு இல்-பிழைத்தலில்லாத, அம்பொடும் - அம்புடன், உழைத்தனள் - வருந்தினள், உயிர் உண்டு என்ன - உயிருண்டென்னும்படி, உயிர்தனள் - பெருமூச்செறிந்தாள்-எ-று.

அம்புகருவியாநின்று உழைத்தகாலையில், உடனிகழ்ந்தமையின் ஒடுவுருபு கருவிப்பொருண்மேல் வந்த வுடனிகழ்ச்சிப்பொருட்டு.

1079. பந்தணி விரலினா ளொருத்தி பையுளாள்
சுந்தர னொருவன்பாற் றூது போக்கினாள்
வந்தன னெனக்கடை யடைத்துமாற்றினாள்
சிந்தனை தெரிந்திலச் செவந்த நாட்டமே.

(இ-ள்.) பந்து அணி விரலினாள் ஒருத்தி - பந்துபோலத்திரண்ட நுனியுள்ள விரலினாளொருத்தி, பையுளாள் - பிரிவினாலாகிய துன்பத்தை யுடையவளாகி, சுந்தரன் ஒருவன்பால் - அழகனும் ஒப்பில்லாதவனுமாகிய தன்கணவனிடத்து, தூதுபோக்கினாள் - (தோழியை) தூதுபோக்கினாள், (அவள்) வந்தனன் என - (அவன்) வந்தானென்றுசொல்ல, கடை அடைத்துமாற்றினாள் - வாயிலையடைத்து மறுத்தாள், நாட்டம் செவந்த - கண்கள்சிவந்தன, சிந்தனைதெரிந்திலம்- அவளுடைய எண்ணத்தை யாமறியேம்-எ-று. (௩௪)

தான் விரும்பித் தூதுபோக்கி, அவன் வந்தபின் வெறுத்துக் கடையடைத்தமையிற் சிந்தனை தெரிந்திலம் என்றாராயினும் தூதானன்றி நின்விருப்பத்தால் வந்திலையெனக் கணவனோடு ஊடினளென்பது கருத்து.

1080. உய்த்தபூம் பள்ளியி னூட னீங்குவான்
சித்தமுண் டொருத்திக் கதன்பன் றேர்கிலான்
பொய்த்ததோர் சூரியா னிமிர்ந்து போக்குவாள்
எத்தனை யிறந்தன கடிகை மீண்டென்றாள்.

(இ-ள்.) ஒருத்திக்கு - ஒருபெண்ணுக்கு, உய்த்த - (சேடியர்கள்) அமைத்த, பூபள்ளியின் - புஷ்பசயநத்தில், ஊடல் நீங்குவான் - ஊடலை நீங்கும்படி, சித்தம்

உண்டு - எண்ணமுண்டு, அது - அதை, அன்பன் - அவளிடத்தன்புள்ளநாயகன், தேர்கிலான் - தெரிந்திலன், (தெரியது சும்மாவிருக்கவே) பொய்த்தது - பொய்த்ததாகிய, ஓர் மூரியால் - ஒரு மூரியால், நிமிர்ந்துபோக்குவாள் - உடல்நிமிர்ந்து காலத்தைப்போக்குவாளாகி, ஈண்டு - இப்போது, எத்தனைகடிகை - எத்தனைநாழிகை, இறந்தன என்றாள் - கழிந்தனவென்று கேட்டாள்-எ-று. (கூ௫)

இது, "பூம்பள்ளியினூடல்னீங்கல்" வேண்டுமெனக் கருதியபொருளை அதற்குரியவகையாற் கூறாது மூரிவிட்டு "எத்தனையிறந்தன கடிகையீண்டென" வேறுவகையாற் கூறினமையின் பிறிதினவிற்சியணி. "மூரி" என்றது, அனந்தலையும், "எத்தனையிறந்தனகடிகை" என்றது காலம் பாணித்தலையும் உணர்த்தினமையின் அவ்வூடனீக்கம் விரைவில் நிகழவேண்டு மென்பது கருத்து.

1081. விதைத்தமென் காதலின் வித்தூற மெய்நிறை
இதைப்புனல் நனைத்திட முளைத்த வேயெனப்
பதைத்தன ளொருத்தன்மே லொருத்தி பஞ்சடி
உதைத்தலும் பொடித்தன வுரோம ராசியே

(இ-ள்.) ஒருத்தி - ஒருநாயகியானவள், பதைத்தனள் - (ஊடலாற்) பதைத்தவளாகி, ஒருத்தன்மேல் - தன்னாயகன்மேல், பஞ்சு அடி - செம்பஞ்சூட்டிய பாதத்தால், உதைத்தலும் - உதைத்தவுடன், விதைத்த - வித்திய, மெல்காதல் வித்து - மெல்லிய காதலாகிய வித்துகள், மெய் - அவனுடலாகிய, நிறை - குறைவில்லாத, இதை - விதுக்கொல்லையை, புனல் - (அவ்வுதையாற் பெற்ற களிப்பாகிய) நீர், நனைந்திட - நனைத்தலால், முளைத்த என - முளைத்தனவென்னும்படி, உரோமராசி - மயிர்த்தொகுதிகள், பொடித்தன - சிலிர்த்தன-எ-று. (கூசு)

இவண் மாட்டுக்கண்டு கேட்டுண்டுயிர்த்து உற்றறியும் ஐம்புலனும் உளவாகலின் அவற்றிற்செல்லுங் காதல்களும் புணர்ச்சித்தொழிற் காதல்களு மடக்கிக் காதலின் வித்தென்றாராகலின், முளைத்தவெனப் பன்மையால் உரோமராசிக்கு உவமையாகக் கூறினார்.

1082. பொலிந்தவாண் முகத்தினன் பொங்கித் தன்னையும்
மலிந்தபே ருவகையான் மாற்று வேந்தரை
நலிந்தவா ளுழவனோர் நங்கை கொங்கையே
மெலிந்தவா நோக்கித்தன் புயங்கள் வீங்கினான்.

(இ-ள்.) மாற்றுவேந்தரை - பகையரசரை, நலிந்த - வருத்திய, வாள் உழவன் - வாள்வீரனானவன், (தான்தழுவியதனால்) ஓர் - ஒப்பற்ற, நங்கை - ஒருபெண்ணினது, கொங்கை - கொங்கைகள், போய் - (தம்மியற்கை) நீங்கி, மெலிந்த ஆறுநோக்கி - மெலிந்தவிதத்தைப்பார்த்து, தன்னையும் மலிந்த - தன்னையும் விஞ்சின, பேர் உவகையால் - மிக்க களிப்பினால், பொலிந்த - பொலிவடைந்த, வாள் முகத்தினன் - ஒளியமைந்த முகத்தையுடையவனாகி, தன்புயங்கள் வீங்கினான் - தன்தோள்கள் பூரித்தான்-எ-று. (கூஎ)

1083. ஏய்ந்தபே ரழிலினா னொருவ னெய்தினன்
வேய்ந்தபோ லெங்கணு மனங்கன் வெங்கணை
பாய்ந்தபூம் பள்ளியில் படுத்த பல்லவம்
தீய்ந்தன நோக்கினன் றிசைக்குஞ் சிந்தையான்.

(இ-ள்.) எய்ந்த - அமைந்த, பேர் எழிலினன் - பேரழகையுடையா னொரு வன், எய்தினன் - (தன் நாயகியிருப்பிடம்) சேர்ந்து, எங்கணும் - எவ்விடத்தும், வேய்ந்தபோல் - அலங்கரித்தனபோல, அனங்கன் வெங்கணை - மன்மதனதுகொ டியபாணங்கள், பாய்ந்த - தைத்த, பூ பள்ளியில் படுத்த - பொலிவாகிய அணையிற் சேர்ந்த, பல்லவம் - தளிர்கள், தீய்ந்தன - கரிந்தவற்றை, நோக்கினன் - பார் த்து, திகைக்கும் சிந்தையான் - மயங்கின மனமுள்ளவனுயினன்—எ-று. (ௗஅ)

1084. ஊட்டிய சாந்துவெந் துலரும் வெம்மையான்
நாட்டினை யளித்திநீ யென்று நல்லவர்
ஆட்டுநீர்க் கலசமே யென்ன லானவோர்
வாட்டொழின் மைந்தற்கோர் மங்கை கொங்கையே.

(இ-ள்.) ஊட்டிய - (புயங்களிலும்மார்பிலும்) அப்பிய, சாந்து - சந்தனம், வெந்து உலரும் - வெந்துலர்தற்கேதுவாகிய, வெம்மையாள் - (காம) வெப்பத் தை யுடையானுகிய, ஓர் - ஒரு, வாள் தொழில் மைந்தற்கு - வாட்டொழிலில் வல்லவனுக்கு, ஓர்மங்கை கொங்கை - ஒருபெண்ணின் கொங்கைகள், நீ நாட் டினை அளித்தி என்று - நீதேசத்தைக் காவாயென்று, நல்லவர் - நல்லொழுக்கமு ள்ள அந்தணர், ஆட்டும் - ஸ்நாநம்செய்வித்த, நீர் - நீர்நிறைந்த, கலசமே என் னல் ஆன - பூர்ணகும்பங்களேயே ஒத்திருந்தன—எ-று. (ௗக)

உலரும் என்னும் பெயருஞ்சுகிளவி காரியப்பொருட்டு.

1085. பயிருறு கிங்கிணி பரந்த மேகலை
வயிரவான் பூணணி வாங்கு நீக்கினள்
உயிருறு தலைவன்பாற் போக வுன்னினள்
செயிருறு திங்களைத் தீய நோக்கினள்.

(இ-ள்.) (ஒலிசெய்தலால்) பயிர் உறு - தான் பயிர்ப்பையடைதற்குக் கார ணமாகிய, கிங்கிணி - கிங்கிணியையும், பரந்த - பரந்த, மேகலை - மேகலையையும், வயிரம் - வயிரமணிகளாற்செய்த, வான் - சிறந்த, பூண் - பூணுதற்குரிய, அணி - ஆபரணங்களையும், வாங்கி - (அவ்வவ்வுறுப்புக்களினின்றும்) கழற்றி, நீக்கினள் - நீக்கினவளாகிய ஒருத்தி, உயிர் உறு தலைவன் பால் போக - உயிரினுஞ்சிறந்த தலைவனிடத்திற் செல்ல, உன்னினள் - நினைத்து, (தன்போக்குக்குத் தடையா கிய) செயிர் உறுதிங்களை - குற்றம மமைந்த சந்திரனை, தீய - தீயும்படி, நோக்கி னள் - கோவித்துப் பார்த்தாள்—எ-று. (௪0)

தீயநோக்கினு ளெனவே, திங்களே! நீயுதித்துக் காமவேட்கையைத் தூண் டித், தலைவன்பாற் சேறல் நயக்கச்செய்து பிறர்க்குப் புலப்படாவண்ணம் சேற லுற்றேனை நிலவெறிந்து தடுத்தி, இதுநினக்குத் தருவதொன்றன்றென்று ளென் பது கருத்து.

1086. ஏனுமிவ் வன்மையை யென்னென் றுன்னுதும்
ஆலைமென் கரும்பன வொருவற் காங்கொரு
சோலைமென் குயிலனாள் சுற்றி வீக்கிய
மாலையை நிமிர்ந்தில வயிரத் தோள்களே.

(இ-ள்.) ஆங்கு - அவ்விடத்து, ஆலை - ஆலையினுட்பட்ட, மெல் கரும் அன் னன் ஒருவன்கு - மெல்லிய கரும்பையொத்தவனுகிய ஒருவனுக்கு, சோலை - சோ

லையில் வசிக்கின்ற, மெல்குயில் அன்னாள் - மெல்லியகுயிலை யொத்தவளாகிய ஒருத்தி, சுற்றிவீக்கிய - சுற்றிக்கட்டிய, மாலையை - பூமாலையை, வயிரத்தோள்கள் - வயிரத்தன்மையமைந்த (அவனுடைய) தோள்கள், நிமிர்ந்தில - அடங்கியிருந்தனவேயன்றி) நிமிர்ந்தில, (ஆதலால்) ஏலும் - (அவன்) ஏற்றுக்கொண்ட, இவ்வன்மையை - (மாலையினது) இந்தவன்மையை, என் என்று உன்னுதும் - யாதென்று யாம் நினைக்கக்கடவேம்—எ-று. (சுக)

பிரிந்து காமவெம்மையால் நொந்தானென்பார், ஆலைமென் கரும்பனான் என்றும், அவன்பட்ட காமவிடாயை, ஒருவாறு தணியாநின்றது இவள்சொல்லென்பார் சோலைமென் குயிலன்னாள் என்றும் கூறினார். ஊடனீக்கஞ் செய்யு முபகாரமுடைத்தாகலின் அம்மாலையை வயிரத்தோள்கள் நிமிர்ந்திலவாயின. தன்கொங்கைகளைத் தழுவுதற்குரியன தோள்களாதலால் பிரிவின்குற்றமவற்றின்மேற் சார்த்தி யவற்றை வீக்கினாள்போலும்.

1087. சோர்குழ லொருத்திதன் வருத்தஞ் சொல்லுவாள்
மாரனை நோக்கியோர் மாதை நோக்கினாள்
காரிகை யிவளவள் கருத்தை நோக்கியோர்
வேரியந் தெரியலான் வீடு நோக்கினாள்.

(இ-ள்.) சோர்குழல் ஒருத்தி - சேர்ந்துசரிந்த கூந்தலையுடையாளொருத்தி, தன்வருத்தம் சொல்லுவாள் - தன்வருத்தத்தைத் தெரிவிக்கும்படி, (தன்னையெய்யாநின்ற) மாரனைநோக்கி - மன்மதனைநோக்கி, ஓர்மாதை நோக்கினாள் - ஒருபெண்ணை நோக்கினான், காரிகை இவள் - காரிகையாகிய இவள், கருத்தை நோக்கி - (அத்தலைவியின்) கருத்தையறிந்து, ஓர் வேரியந் தெரியலான் - ஒருமணமமைந்த அழகிய மாலையையணிந்த வோர்மன்னனது, வீடுநோக்கினாள் - வீட்டைநோக்கினாள்-எ-று. (சுஉ)

சோர்குழலொருத்தி ஓர்மாதின் முகத்தைநோக்கலும் அவள்கருத்தை யிவள் தெரிந்துகொண்டு கணவன்பாற்சென்று அவனைக்கொணர்ந்து தருவேனென்னுங் கருத்தோடுகூடிய செயலாகிய வேரியந்தெரியலான் வீடுநோக்குதல் புரிந்து விடைகொடுத்தலின் நுட்பவணி.

1088. சினங்கெழு வாட்கையோர் செம்மல் பாலொரு
கணங்குழை மயிலனாள் கடிது போயினாள்
மனங்குழை நறவமோ மாலை தான்கொலோ
அணங்கனோ யார்கொலோ வழைத்த தூதரே.

(இ-ள்.) சினம்கெழு - கோவம்பொருந்திய, வாள் - வாளையேந்திய, கை - கையையுடைய, ஓர்செம்மல்பால் - ஓரரசனிடத்து, ஒருகனங்குழைமயிலனாள் - ஒருகனவியகுழையையுடைய மயிலையொத்தவள், கடிதுபோயினாள் - (தூதுபோக்காமல்) தானேவிரைந்துபோயினாள், அழைத்ததூதர் - (கணவனிடத்தில்) அழைத்தநூதர், யார் - யாவர், மனம்குழைநறவமோ - மனத்தைக் குழையச்செய்கிற மதுவோ, மாலைதான்கொலோ-மாலைப்போது தானோ, அனங்கனோ - மன்மதனோ (அறியோம்)-எ-று. (சுங)

அழைத்ததூதர் நறவமோ மாலையோ அனங்கனோ என்பது உயர்வினால் வந்த திணைவழுவமைதி.

1089. தொகுதரு காதற்குத் தோற்ற சீற்றத்தோர்
வகிர்மதி நெற்றியாள் மழைக்க ணாலிவந்
துகுதலு முற்றதென் னென்று கொற்றவன்
நகுதலு நக்கனள் நாணு நீங்கினள்.

(இ-ள்.) தொகுதருகாதற்கு - நிறைந்த காதலுக்கு, தோற்றசீற்றத்து - தோற்ற கோவத்தையுடைய, ஓர் வகிர்மதிநெற்றியாள் - ஒரு வகிர்மதியையொத்த நுதலையுடையவள், மழை - குளிர்ச்சி பொருந்திய, கண் - கண்களினின்றும், ஆலிவந்து உகுதலும்-நீர்த்துளிகள்வந்து சிந்துதலும், கொற்றவன்-(அவள் கணவனாகிய வோர்) அரசன், (அதைநோக்கி) உற்றது என் என்று நகுதலும் - நேரிட்டதென்னென்று நகைத்தலும், நக்கனள் - (தானும்) சிரித்து, நாணும் நீங்கினள்-நாணத்தையும் விட்டாள்—எ-று. (௪௪)

ஆற்றகுப்பைகள் என்றாற்போலத் தோற்ற சீற்றமென இறந்த காலங்காட்டு மின்னென்பது தொகுத்தது.

1090. பொய்த்தலை மருங்குலா ளொருத்தி புல்லிய
கைத்தலம் நீக்கினள் கருத்தி னீக்கலள்
சித்திரம் போன்றவச் செயலோர் தோன்றற்குச்
சத்திர மார்பிடைத் தைத்த தொத்ததே.

(இ-ள்.) பொய்த்தலைமருங்குலாள் ஒருத்தி - பொய்யாகிய இடையையுடையாளொருத்தி, கருத்தினீக்கலள் - தன் கருத்தினின்று நீக்கிலள், கைத்தலம் நீக்கினள்-(புறத்தே தழுவியதன்) கைகளை நீக்கினள், சித்திரம்போன்ற அ செயல் - சித்திரம் போன்ற அசைவில்லாத அந்தச் செய்கையானது, ஓர்தோன்றற்கு - ஓரரசனுக்கு, மார்பிடை-மார்பில், சத்திரம் தைத்தது ஒத்தது-வேற்படைதைத்ததை யொத்திருந்தது—எ-று. (௪௫)

கணவன் கருத்தறியுமாறு கைத்தலநீக்கலும் இதுபோது தன்பாலுளதாகிய குற்றம் யாதெனவருந்தின னென்பது கருத்து.

1091. மெல்லிய லொருத்திதான் விரும்புஞ் சேடியைப்
புல்லிய கையினள் போதி தூதெனச்
சொல்லுவா ளுறுமுற நாணுஞ் சொல்லலள்
எல்லையில் பொழுதெலா மிருந்து விம்மினாள்.

(இ-ள்.) மெல்லியல் ஒருத்தி - மெல்லியலையுடையாளொருத்தி, தான் விரும்பும் சேடியை - தான் விரும்புகின்ற தோழியை, புல்லியகையினள் - தழுவின கைகளையுடையவளாய், தூதுபோதி என - தூதுபோவாயென்று, சொல்லுவாள் உறும்-சொல்லவிசைவாள், உறநாணும்-(சொல்லுதற்கு) மிகவும் நாணுவாள், சொல்லலள்-(அந்தநாணத்தால்) சொல்லாளாகி, எல்லை இப்பொழுது எல்லாம் - அளவில்லாத காலமெல்லாம், இருந்து -(இவ்வாறு) இருந்து, விம்மினாள் - தன்கருத்தில் அழுங்கினாள்—எ-று. (௪௬)

இண்டைப் பொழுதென்றது அவள் சொல்லலுற்ற சமயங்களை. பலமுறைசெய்த செயலினதெல்லையில்லாமையை, அச்செயல் நிகழ்ந்தபொழுதின்மேலேற்றி, எல்லையில் பொழுதென்றார்.

1092. ஊறுபே ரன்பினு ளொருத்தி தன்னுயிர்
மாறிலாக் காதலன் செலவை மற்றொரு
நாறுபூங் கோதைபா னவில நாணுவாள்
வேறுவேறு றச்சில மொழி விளம்பினாள்.

(இ-ள்.) ஊறுபேர் அன்பினாள் ஒருத்தி - பெருகுகின்ற மிக்க அன்புடையாளொருத்தி, தன் உயிர்மாறு இல்லா - தனக்கு (நாயகியாகிய உயிரின்றி) உயிர்வேறொன்றில்லாத, காதலன் - நாயகனது, செலவை-பிரிவை, மற்று ஒரு - வேறொரு, நாறுபூகோதைபால் - மணக்கின்ற பூமாலையையணிந்த கூந்தலையுடையாளிடத்து, (சொல்லவந்து) நவிலநாணுவாள் - சொல்லநாணி, வேறுவேறு உற - வேறு வேறாகப்பொருந்த, சிலமொழி - சிலவார்த்தைகளை, விளம்பினாள்-சொல்லினாள்—எ-று.()

வேறுவேறுறச்சில மொழி விளம்பியது, தான்சொல்லக் கருதியதை மறைத்தமை அவளுக்குத் தோன்றாதவண்ணமென்க.

1093. உருத்தெரி தன்மைய வுயிரு மொன்றுதாம்
அருத்தியு மத்துணை யாய நீரினார்
ஒருத்தியு மொருத்தனு முடம்பு மொன்றெனப்
பொருத்துவ ராமெனப் புல்லி னாரரோ.

(இ-ள்.) உருதெரி தன்மைய - உருவந்தோன்றுந் தன்மையையுடைய, உயிரும் ஒன்று - உயிருமொன்றேயாகும், (ஒருவர்பாலொருவர்வைத்த) அருத்தியும்-விருப்பமும், அதுணை ஆயநீரினார் - அவ்வளவினதென்னுந் தன்மையராகிய, ஒருத்தியும் ஒருத்தனும் - ஒருத்தியும் ஒருத்தனும், உடம்பும் ஒன்று என-உடம்புமொன்றென்னலாம்படி, பொருத்துவர் ஆம் என - பொருத்துவார்போல, புல்லினார் - (ஒருவரையொருவர்) தழுவினார்கள்—எ-று. (சஅ)

1094. வெதிர்பொரு தோளினா ளொருத்தி வேந்தன்வந்
தெதிர்தலுந் தன்மன மெழுந்து முன்செல
மதிமுகங் கதுமென வணங்கி னாளது
புதுமையா கலினவற் கச்சம பூத்ததே.

(இ-ள்.) வெதிர்பொருதோளினாள் ஒருத்தி - மூங்கிலையொத்த தோள்களையுடையாளொருத்தி, வேந்தன் வந்து எதிர்தலும் - தன் கணவனாகிய அரசன் வந்து சந்தித்தலும், (விருப்பத்தால்) தன்மனம் எழுந்து முன் செல்ல - தன் மனமானதெழுந்து முன்னே செல்லாநிற்க, (தான் எழுந்துசெல்லாமல்) மதிமுகம் - சந்திரனையொத்த முகத்தை, கதுமென வணங்கினாள் - விரைவாக வளைத்தனள், அது - அச்செய்கை, புதுமையாதலின் - நூதனமாதலால், அவற்கு அச்சம் பூத்தது - அவனுக்கு அச்சமுண்டாயிற்று—எ-று. (சகூ)

எம்மைப்புறத்தே பிரிந்தனையாயினும், அகத்தேசிறிதும் பிரிந்தாயில்லையாகலான், நின்பாற்றவறின்று, அவ்வாறு நின்னைப் புறத்தேபிரிந்தேனாயினும், அகத்தே பிரியாதிருந்தேனல்லேன், அத்தவறு என்பாலுண்மையின், நின்னை நோக்குதற்கு நெஞ்சு நாணி நின்றதெனக்கொண்டு, மதிமுகங்கதுமென வணங்கினாளாயினாள். இதுபுகழ்வதுபோலப் பழித்தலாக வந்தமையின், இலேசவணி. முன்னர்த்தான் குறித்தகால வரையறை கடந்துவந்த குற்றம், தன்பாலுள்ளதாகலின், அவ்வணக்கத்தைக் காண்டலும் அவனுக்கு அச்சம்பூத்தது.

1095. துனிவரு நலத்தொடு சோர்கின் றாளொரு
குனிவரு நுதலிக்குக் கொழுந னின்றியே
தனிவருந் தோழியுந் தாயை யொத்தனள்
இனிவரு தென்றலு மிரவு மென்னவே.

(இ-ள்.) துன்னிவரும் நலத்தொடு - தன்னை நீங்காது உடன்வருகின்ற அழகுடன், சோர்கின்றாள்-வாடுகின்றவளாகிய, ஒருகுனிவருநுதலிக்கு - ஒருவளைவாகிய நெற்றியையுடையாளுக்கு, கொழுநன் இன்றியே - நாயகனில்லாமலே, தனிவரு தோழியும் - தனித்துவந்த தோழியும், இனி வருதென்றலும்-இனி வருகின்றதென்றலையும், இரவும் - இரவையும், என்ன-போல, (வருந்தாநின்றமையால்) தாயை ஒத்தனள் - தாயையொத்திருந்தாள்—எ-று. (௯0)

தன்னிறைவி விரும்பியவற்றை, அவள் விரும்பியவாறு புரிபவளாதலால், தோழியும் என்றது சிறப்பும்மை, தாயையொத்தலாவது - இவ்வாறு சோர்தல் நிற்குத் தகுவதன்றெண அறிவுகொளுத்தி யிடித்துக்கூறல். நின்னிலைகூறித் தலைவனைக் கொணர்வலெனச்சென்ற தோழியினது தேற்றமொழியால் உவகைகொண்டிருக்கையில் இனியவாய் நின்றனவன்றி வருந்திலவாதலின்; அதுபோழ்து இல்லனவாகவே யிருந்து, தோழி தனித்துவந்தபின்னர் வருத்தலுற்றமையின், இனி வருதென்றலு மிரவுமென்றார்.

1096. ஆக்கிய காதல ளொருத்தி யந்தியில்
தாக்கிய தெய்வமுண் டென்னுந் தன்மையள்
நோக்கினள் நின்றனள் நுவன்ற தோர்கிலள்
போக்கின தூதினோ டுணர்வும் போக்கினள்.

(இ-ள்.) ஆக்கிய - (நாயகனுடைய குணஞ்செய லழகிவைகளால்) உண்டாக்கப்பட்ட, காதலள் ஒருத்தி - காதலுடையாளொருத்தி, அந்தியில் - அந்திப்போதில், தாக்கிய - தன்மேலேறிய, தெய்வம் உண்டு - தெய்வமுளது, என்னும் தன்மையள்-என்கின்ற தன்மையையுடையவளாய், நோக்கினள் நின்றனள்-நோக்கிநின்று, நுவன்றது - தான்சொன்ன செய்யை, ஓர்கிலள்-அறியாமல், போக்கின தூதினோடு-போக்கப்பட்டதூதோடு, உணர்வும் போக்கினள்-அறிவையும் போக்கினாள்—எ-று. (௯௧)

1097. மறப்பிலள் கொழுநனை வரவு நோக்குவாள்
பிறப்பினோ டிறப்பெனப் பெயருஞ் சிந்தையால்
துறப்பரு முகிலிடைத் தோன்று மின்னெனப்
புறப்படும் புகுமொரு பூத்த கொம்பனாள்.

(இ-ள்.) ஒருபூத்த கொம்பு அன்னாள்-ஒரு பூத்தகொம்பை யொத்தவள், பிறப்பினொடு இறப்பு என்ன - பிறப்போடு இறப்பென்னும்படி, பெயரும் - நிறமாறுகின்ற, சிந்தையால் - மனதினால், கொழுநனை-தன் கணவனை, மறப்பு இலள் - மறத்தல் இல்லாதவளாய், துறப்பு அரு - காற்றினாலோட்டுதலரிய, முகில் இடை தோன்றும்-மேகத்தினிடத்துத் தோன்றுகின்ற, மின் என - மின்னலைப்போல, வரவு நோக்குவாள் - (படமாடத்தினின்று அவனது) வருகையைநோக்கி, புறப்படும் - புறப்படுவாள், புகும் - (மீண்டு) உள்ளே நுழைவாள்—எ-று. (௯௨)

வாராதொழியானெனத் துணிந்து, கருதாநிற்கையிற் களித்தலினாற் "பிறப்பினோடு" எனவும் ஏதேனுமோர் தடாக்கருமவயத்தனேல் வருத லெவ்வாறியையு

மென வத்துணிவழிந்து சாம்பலினிறப்பெனவு, மிவற்றுளொன்றன் வழிப்படாது பற்பலவாறு கருதாநின்று தடுமாறுதலி னிகழ்காலத்தாற் "பெயருஞ்சிந்தை" எனவுங், கருத்தின்வழியது உடலியக்கமாகலின் அதனைக் கருவியாக்கி சிந்தையால் "புறப்படும் புகும்" எனவும் இயங்கு நிலைமையதன்றாகலால் படமாடத்தை துறப்பரு முகிலிடையெனவுங் கூறினர்.

1098. எழுதருங் கொங்கைமே லநங்க னெய்தவம்
புழுதவெம் புண்களில் வளைக்கை யொற்றினாள்
அழுதனள் சிரித்தன ளற்றநு சொல்லினள்
தொழுதன ளொருத்தியைத் தூது வேண்டுவாள்.

(இ-ள்.) எழுது அரு - எழுதுத லரிதாகிய, கொங்கைமேல்-ஸ்தநங்களின்மேல், அநங்கன் எய்த - மன்மதனெய்த, அம்பு - பாணங்கள், உழுத - தைத்த, வெம்புண்களில் - வெவ்விய புண்களில், வளைகை - வளையலணிந்த கைகளை, ஒற்றினாள் - ஒழிவாகிய சமயத்தைச்சொல்லி, ஒருத்தி - ஒரு சேடியை, தூது வேண்டுவாள் - தூது வேண்டாநின்று, தொழுதனள் - தொழுதாள்—எ-று. (ருங)

எழுதரிய கொங்கைகளி னருமையையுங் கணவனது தோள்களைத் தழுவப் பெருமையால் எழில் மாமை முதலிய வழிவுற்றுப்படும் வருத்தப்பாட்டையுங் குறித்து, வளைக்கையை யொற்றியழுது, வாய்த்த அற்றத்தைக்குறித்துக் களித்துச் சிரித்தனளென்பது கருத்து;

1099. ஆர்த்தியு முற்றது மறிஞர்க் கற்றந்தான்
வார்த்தையி னுணர்த்துத லரிதன்றே மனம்
வேர்த்தனள் வெதும்பினள் மெலிந்து சாய்ந்தனள்
பார்த்தன ளொருத்திதன் பாங்க னளையே.

(இ-ள்.) ஆர்த்தியும் - அயர்வையும், உற்றதும் - அதனாலடைந்த வருத்தத்தையும், அறிஞர்க்கு - அறிந்தவர்களுக்கு, அற்றம் - சமயத்தை, வார்த்தையின் - வார்த்தையால், உணர்த்துதல் - தெரிவித்தல், அரிது அன்றே - அரிதல்லவோ, ஒருத்தி- ஒரு பெண்ணானவள், மனம் வேர்த்தனள் - மனம்புழுங்கி, வெதும்பினள் - உடல் வெதும்பி, மெலிந்து - இளைத்து, சாய்ந்தனள் - அணையைச் சாய்ந்து, தன் பாங்கனளை - தனதோழியை, பார்த்தனள் - பார்த்தாள்—எ-று. (ருச)

தான் - அசை.

1100. தனங்களி னிளையவர் தம்மின் மும்மடி
கனங்கன மிடையிடை களிக்குங் கள்வனாய்
மனங்களி னுழைந்தவர் மாந்து தேறலை
அனங்கனு மருந்தின னாதல் வேண்டுமால்.

(இ-ள்.) தனங்களின் - தனங்களையுடைய, இளையவர்தம்மின்-இளம் பெண்களினும், மும்மடி - மூன்றுபங்கு, கனம் கனம் - மிகவுமதிகமாக, இடை இடை-எல்லா விடங்களிலும், களிக்கும் - களியாநின்றான், (ஆதலால்) கள்வன் ஆய் - கள்வனாகி, மனங்களில் நுழைந்து - அவர்களுடைய மனங்களிற் பிரவேசித்து, அவர் மாந்து தேறலை - அவர்கள் குடிக்கின்ற மதுவை, அனங்கனும் - மன்மதனும், அருந்தினன் ஆதல்வேண்டும் - பருகினனாதல் வேண்டும்—எ-று. (ருரு)

ஆல் - அசை. "இடையிடை" என்றது, ஐந்தாவது செய்யுளிற்கூறிய தரளநீழன்முதலிய இடங்களை மீப்போர்த்த வுடகம் - வடகமும் சரிந்து வீழ்ந்ததைக் களிமயக்கத்தா லுணர்ந்திலரென்பார் "தனங்களினிளையவர்" என்றார்.

வேறு.

1101. நறைகம ழலங்கன்மாலை நளிர்நறுங் குஞ்சிமைந்தர்
துறையறி கலவிச்செவ்வித் தோகையர் தூசுவீசி
நிறையக லல்குல்புல்குங் கலன்கழித் தகலநீத்தார்
அறைபறை யனையநீரா ரருமறைக் காவரோதான்.

(இ-ள்.) (அணிந்த) நறைகமழ்-தேன் மணக்கின்ற, அலங்கல் மாலை - பூமாலையால், நளிர் - குளிர்ந்த, நறு குஞ்சி - நறிய சிகையையுடைய, மைந்தர் - ஆடவர்கள், துறை அறி - கரணவகைகளையறிந்த; கலவிச்செவ்வி-புணர்ச்சிக்குரிய பக்குவத்தையுடைய, தோகையர் - மாதர்களுடைய, தூசுவீசி - உத்தராசங்கத்தை வாங்கி யெறிந்து, நிறை - நிறைந்த, அகல் - அகன்ற, அல்குல் புல்கும் - அல்குலைச்சூழ்ந்த, கலன் கழித்து - மேகலை முதலிய ஆபரணங்களை வாங்கி, அகலநீத்தார் - அகலவெறிந்தார்கள், (ஏனெனின்) அறைபறை அனையநீரார் - கொட்டப்படுகிற பறையை யொப்பவர், அரு - அருமையாகிய, மறைக்கு ஆவரோ - இரகசியத்துக் காவார்களோ-எ-று.

அறைபறை யனையநீரார் அருமறைக்காகார் என்னும் பொருளாற் கலவிச் செவ்வித் தோகையர் தூசுவீசி அல்குல் புல்குங் கலன்கழித்தகல நீத்தார் என்னும் புனைவுளியாகிய சிறப்புப்பொருள் நிலையுறுத்தப்பட்டமையின் இது வேற்றுப்பொருள் வைப்பணி ரு - பொதுவினுஞ் சிறப்பினு மவைநிலையுறுத்தல் வேற்றுப்பொருள் வைப்பெனவேண்டினர் புலவர்.

1102. பொன்னருங் கலனுந்தூசும் புறத்துள துறத்தல்வம்பே
நன்னுத லொருத்திதன்பா லகத்துள நாணுநீத்தாள்
உன்னருந் துறவுபூண்ட வுணர்வுடை யொருவனேபோல்
தன்னையுந் துறக்குந்தன்மை காமத்தே தங்கிற்றன்றே.

(இ-ள்.) புறத்து உள்ள - புறத்துள்ளனவாகிய, பொன் அரு கலனும் - பொன்னாற் செய்யப்பட்ட அருமையாகிய ஆபரணங்களையும், தூசும் - ஆடையையும், துறத்தல் வம்பே - நீக்கல் (அறிவினது) நிலையில்லாமையே, (ஆதலால் அவற்றைநீக்காது) நன்னுத லொருத்தி - நல்ல நெற்றியையுடையா ளொருத்தி, உன் அரு - நினைத்தற்கரிய, துறவு பூண்ட - துறவடைந்த, உணர்வு உடை ஒருவனேபோல் - ஞானத்தையுடைய ஒருவனைப்போல, தன்பால் அகத்து உள்ள - தன்னிடத்துள்ள, நாணும் நீத்தாள் - நாணத்தையும் நீக்கினாள், (ஆதலால்) தன்னையும் துறக்கும் தன்மை-தன்னையுந் துறக்கின்றதன்மை, காமத்துதங்கிற்று - காமத்தில் தங்கியது—எ-று.

அன்று, ஏ - அசைகள்,

1103. பொருவரு மதனன்போல்வா னொருவனும் பூவின்மேலத்
திருவினுக் குவமைசால்வா ளொருத்தியுஞ் சேக்கைப்போரில்
ஒருவருக் கொருவர்தோலா ரொத்தன ருயிருமொன்றே
இருவர துணர்வுமொன்றே யென்றபோ தியாவர்வெல்வார்.

(இ-ள்.) பொருவு அரு - ஒப்பில்லாத, மதனன் போல்வான் ஒருவனும் - மன் மதனையொப்பா னொருவனும், பூவின்மேல் - தாமரைமலரின்மேலிருக்கிற, அ-அந்த, திருவினுக்கு உவமைசால்வாள் ஒருத்தியும் - இலக்குமியை யொப்பாளொருத்தியும், சேக்கை போரில்-அணையினிடத்துண்டாகிய போரில், ஒருவருக்கு ஒருவர்தோலார்- ஒருவர்க்கொருவர் தோல்வியடையாராகி, ஒத்தனர்-ஒத்திருந்தனர், உயிரும் ஒன்றே- (அவ்விருவரது) உயிருமொன்றே, இருவரது உணர்தவும் ஒன்றே - இருவருடைய ஞானங்களும் ஒன்றே, என்றபோது - என்று சொல்லப்பட்டபோது, யாவர் வெல் வார் - யார் வெல்வார்கள்—எ-று. (கூஅ)

1104. கொள்ளைப்போர் வாட்கணாளங் கொருத்தியோர் குமரனன்னான்
வள்ளத்தா ரகலந்தன்னை மலர்க்கையாற் புதைப்பநோக்கி
உள்ளத்தா ருயிரன்னாள்மே லுதைபடு மென்றுநீநின்
கள்ளத்தாற் புதைத்தியென்னு முன்னையிற் கனன்றுமிக்காள்.

(இ-ள்) அங்கு - அவ்விடத்துள்ள, கொள்ளைபோர் - மிக்க போரையுடைய, வாள்கண்ணாள் ஒருத்தி - வாள்போலுங் கண்களையுடையாளொருத்தி, ஓர்-ஒப்புற்ற, குமரன் அன்னான் - முருகனையொப்பான் ஒருவன், வள்ளத்தார் அகலம் தன்னை- வளமாகிய பூமாலையையணிந்த தனது மார்பை, மலர்கையால் புதைப்ப - தாமரை மலரையொத்த கையால் மறைக்க, நோக்கி - பார்த்து, உள்ளத்து - (உன்) மனத் தில், ஆர் - தங்கியிருக்கிற, உயிர் அன்னாள்மேல் - உயிரை யொப்பாள்மேல், உதை படும் என்று - உதைபடுமென்றுகருதி, நீ-நீ, நின் கள்ளத்தால் - உன் வஞ்சத்தால், புதைத்தியென்னு - மூடுகிறாய் என்று சொல்லி, முன்னையின் - முன்னையினும், கனன்றுமிக்காள் - சீறிச்சினமிகுந்தாள்—எ-று. (கூக)

வளம் என்பது வள்ளம் என நின்றது. இவளது மெல்லிய அடிக்கு அனிச்சமு மன்னத்தின்றூவிபு நெருஞ்சிற் பழம்போலு மாதலின், நம்மார்பு ரோமங்கள் கண் டகம்போ லுறுத்துமென்றஞ்சித் தன் மலர்க்கையால் புதைத்தலாகிய காரியஞ் செய் யப்புகுந்து, தன் விருப்பத்தை யடையாது "உள்ளத்தா ருயிரன்னாள்மேலுதைபடு" மென்று நீ "நின் கள்ளத்தாற் புதைத்தியென்னுக்" கனலாகிய விருப்பமில்லா வேற்றுப்பொருளெய்தலின் வேற்றுப்பொருள் வைப்பணி. சூ-ஏதுவினேலாதெய் தலும் பொருந்தாப்பொருளின் புணர்ச்சியும் புக்கதின் வேற்றுப்பொரு ளெய்தலு மாம் பொருத்தமிலதென்ப.

1105. பாலுள பவளச்செவ்வாய்ப பணைமுலை நிகர்த்தமென்றோள்
வேலுள நோக்கினளோர் மெல்லியல் வேலையன்ன
மாலுள சிந்தையாங்கோர் மழையுள தடக்கையாற்கு
மேலுள வரம்பைமாத ரென்பதோர் விருப்பையீய்ந்தாள்.

(இ-ள்.) பால் உள்ள - பாற்சுவையமைந்த, பவளச்செவ்வாய் - பவளச் செவ்வா யையும், பணைமுலை - பருத்த முலைகளையும், நிகர்த்த - ஒன்றையொன்றொத்த, மெல் தோள் - மெல்லிய தோள்களையும், வேல் உள்ள - வேல்போன்ற, நோக்கினள்- நோக்கத்தையுமுடைய, ஓர் மெல்லியல் - ஒரு மாதானவள், வேலை அன்ன - கடலை யொத்த, மால் உள்ள - ஆசையுள்ள, சிந்தை - மனத்தையும், ஆங்கு - அவ்விடத்து, ஓர் - ஒப்பற்ற, மழை உள்ள-மேகம்போற் கொடையுள்ள, தடம் கையான்கு-பெரிய கைகளையுடைய கணவனுக்கு, மேல் உள்ள - விண்ணுலகத்திலுள்ள, அரம்பைமாதர்

என்பது - அரம்பை யின்பமென்பதாகிய, ஓர் விருப்பை ஈய்ந்தாள் - ஒப்பற்ற இன்பத்தைத் தந்தாள்—எ-று. (சுo)

மாதர் - விருப்பம் என்பன காரணவாகுபெயர்.

வேறு.

1106. புனத்துள மயிலனாள் கொழுனன் பொய்யுரை
நினைத்தனள் சீறுவா ளொருத்தி நீடிய
சினத்தொடு காதலன் சேக்கைப் போரிடை
மனத்துறை காதலே வாகை கொண்டதே.

(இ-ள்.) புனத்து உள்ள - சோலையிலுள்ள, மயில் அன்னாள் - மயிலையொப்பாளொருத்தி, கொழுனன் பொய்யுரை-கணவனது பொய்ம்மொழியை, நினைத்தனள்-நினைத்து, சீறுவாள் - சீறுகின்றாள், ஒருத்தி-அவ்வொருத்தியின், நீடிய சினத்தொடு-மிகுந்த சினத்தோடு, காதலன் - கணவனது, சேக்கை-அணையின்கண், போரிடை-முன்னிகழ்ந்த கலவிப்) போரில், மனத்துறை காதலே-மனத்திற்றங்கிய ஆசையே, வாகைகொண்டது - வெற்றிகொண்டது—எ-று. (சுக)

சினத்தொடு காதல்வாகை கொண்டதென்றது, காதலன் முன்னாட்களில் சேக்கையிற்பிரிந்த புணர்ச்சித், தொழிலின் விருப்பம் மனத்திற் றோன்றலும், சினமடங்கித் தான் அவனுக்கிணங்கியதனை.

1107 கொலையுரு வமைந்தெனக் கொடிய நாட்டத்தோர்
கலையுரு வல்குலாள் கணவற் புல்குவாள்
சிலையுரு வழிதரச் செறிந்த மார்பிற்றன்
முலையுரு வினவென முதுகை நோக்கினாள்.

(இ-ள்.) கொலை - கொலைத்தொழிலானது, உரு அமைந்தென - உருக்கொண்டாற்போல, கொடிய நாட்டத்து-கொடுமையாகிய கண்களையுடைய, ஓர் கலை உருவு அல்குலாள் - ஓர் மாதானவள், கணவன் புல்குவாள் - தன் கணவனைத் தழுவுவாளாகி, சிலை-மலையானது, உரு அழிதர-உருவாற்றண்ணிதாம்படி, செறிந்த - பொருந்திய, மார்பில் - மார்பினிடத்து, தன்முலை உருவின என - தன் முலைகள் உருவிச்சென்றனவென்று, முதுகைநோக்கினாள் - முதுகைப் பார்த்தாள்—எ-று. (சுஉ)

இது உருவலாகிய இயைபில்லாதிருப்ப, முலை யுருவினவென அவ்வியைபுடைத்தாகக் கூறலால், அதிசயநவிற்சியணி.

1108. குங்கும முதிர்ந்தன கோதை சோர்ந்தன
சங்கின மார்த்தன கலையுஞ் சாறின
பொங்கின சிளம்புகள் பூசலிட்டன
மங்கைய ரிளநல மைந்த ருண்ணவே.

(இ-ள்.) மங்கையர் - மாதர்களுடைய, இளநலம் - புதிய இன்பத்தை, மைந்தர் உண்ண - ஆடவரநுபவித்தலால், குங்குமம் உதிர்ந்தன - (தொய்யிலெழுதிய) குங்குமச்சந்தன முதிர்ந்தன, கோதை சோர்ந்தன-கூந்தல் சோர்ந்தன, சங்கு இனம் ஆர்த்தன-சங்கவளையல்கள் ஆரவாரித்தன, கலையும் சாறின - ஆடைகளும் நழுவின, சிலம்புகள் - காலணிகள், பொங்கினபூசல இட்டன-மிகுந்து ஒலிசெய்தன—எ-று. (சுங)

பகையின்மையா லொருகாலத்துக் கூடத்தக்க உதிர்தல் முதலிய பொருள்களுக்கும், கூட்டத்தைக் கூறினமையாற் கூட்டவணி

1109. துனியுறு புலவியைக் காதல் சூழ்சுடர்
பனியெனத் துடைத்தலும் பதைக்குஞ் சிந்தையாள்
புனையிழை யொருமயில் பொய்யுறங்கு வாள்
கனவெனும் நலத்தினாற் கணவற் புல்லினாள்.

(இ-ள்.) காதல் - ஆசையானது, துனி உறுபுலவியை - கோவமிருந்த ஊடலை, சூழ்சுடர் - சூழ்ந்த கிரணங்களையுடைய சூரியன், பனி என - பனியைத் துடைத்தாற்போல, துடைத்தலும் - நீக்குதலும், பதைக்கும் சிந்தையாள் - பதறுகின்ற மனத்தை யுடையவளாகி, புனை இழை ஒருமயில் - அலங்கரித்த ஆபரணங்களை யுடைய ஒருமயிலை யொப்பவள் ஒருத்தி, பொய் உறங்குவாள்-பொய்யுறக்க முறங்குகின்றவளாகி, கனவு என்னும் நலத்தினால் - கனவாகிய நல்ல சூதினால், கணவன் புல்லினாள் - தன் கணவனைத்தழுவினள்—எ-று. (சுசு)

சூழ்சுடர் வினைத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. களவிற் பயந்தாற்போலக் கணவனைப் புல்லுதற்கு ஏதுவாதல்பற்றி நலமென்றார்.

1110. வட்டவாண் முகத்தொரு மயிலு மன்னனும்
கிட்டிய போதுடல் கிடக்கப் புல்லினார்
விட்டிலர் கங்குலின் விடிவு கண்டிலர்
ஒட்டிய வுடல்பிரிப் புணர்கி லாமையால்.

(இ-ள்.) வட்டம் - வட்டமாகிய, வாள் - ஒளியமைந்த, முகத்து - முகத்தை யுடைய, ஒரு மயிலும் - ஒரு மயில்போல்வாளும், மன்னனும் - ஓரரசனும், கிட்டிய போது - ஒருவர்க்கொருவர் கிடைக்கப்பெற்றபோது, உடல்கிடக்கப் புல்லினார் - (இரண்டு) சரீரங்களு நெருங்கத் தழுவினார்கள், ஒட்டிய வுடல் - பொருந்திய சரீரங்களை, பிரிப்பு - பிரித்தலை, உணர்கிலாமையால் - அறியாமையால், விட்டிலர் (தழுவுதலை) விட்டிலர், கங்குலின்விடிவு கண்டிலர் - இரவினது விடிவைக்கண்டிலர் எ-று.

பிரிவால் உளதாகிய வருத்தத்தி னருமைதோன்றக் கிட்டியபோதென்றார்.

1111. அருங்களி மால்கரி றனைய வீரர்க்கும்
கருங்குழன் மகளிர்க்குங் கலவிப் பூசலால்
நெருங்கிய வனமுலை சுமக்க நேர்கலா
மருங்குல்போற் றேய்ந்ததம் மாலைக் கங்குலே.

(இ-ள்.) அரு - நெருங்குதலரிய, களி - மதமயக்கத்தையுடைய, மால் - பெரிய, கரிறு அனைய - யானையையொத்த, வீரர்க்கும் - வீரர்களுக்கும், கருகுழல் மகளிர்க்கும் - கரிய கூந்தலையுடைய மாதர்களுக்கும், அ - அந்த, மாலை கங்குல்-மாலையாகிய இரவானது, கலவி பூசலால் - கலவிப்போரினால், நெருங்கிய - செறிந்த, வனம் - தொய்யிலெழுதிய, முலை - ஸ்தநங்களை, சுமக்க - சுமப்பதற்கு, நேர்கலா - ஆற்றலமைந்திராத, மருங்குல்போல் - (அவர்களுடைய) இடையைப்போல, தேய்ந்தது - தன் வலி குறைந்தது—எ-று. (சுசு)

மேற்கூறிர வேட்கைப் பெருக்கைச் செயல்களெல்லாம் நிகழ்தற் கிடனாய் நின்ற பெருமைத்தாகலின் அம்மாலைக் கங்குலென்றார்.

1112. கடையுற நன்னெறி காண்கி லாதவர்க்
கிடையுறு திருவென விந்து நந்தினன்
படர்திரைக் கருங்கடற் பரமன் மார்பிடைச்
சுடர்மணிக் கரசென விரவி தோன்றினன்.

(இ-ள்) நல்நெறி - நல்லொழுக்கமானது, கடை உற காண்கிலாதவர்க்கு - முடிவுபெறச்செய்யாதவர்களுக்கு, இடை உறு - இடையிற்சேர்ந்த, திரு என - செல்வம் அழிவதுபோல, இந்து நந்தினன்-சந்திரன் ஒளிகெட்டான், படர்திரை - படர்ந்த அலைகளையுடைய, கருங்கடல் - கரிய கடலாகிய, பரமன் - மாலோனது, மார்பிடை - மார்பிலணிந்த, சுடர் - ஒளிர்கின்ற, மணிக்கு அரசு என - ராஜரத்ந மாகிய கௌஸ்துபமணியைப்போல, இரவிதோன்றினன் - சூரியன் உதித்தான்.

இருகடையிலும் எறிகின்ற வெண்டிரைகள் ஆதிசேடப்பாயலாகவும், நடுவட் கிடந்த கருங்கடல் பரமனாகவும், சூரியன் சுடர்மணிக்கரசாகவும் உருவகஞ்செய் தமையால் முற்றுருவகவணி.

கஅ - வது. உண்டாட்டுப்படலம் முற்றும்.

---

# கக - வது எதிர்கொள்படலம்.

எதிர்கொள்வதைக் குறித்துக் கூறும் படலம்.

———(:*:)———

வேறு

1113. அடாநெறி யறைதல்செல்லா வருமறை யறைந்தநீதி
விடாநெறிப் புலமைச்செங்கோல் வெண்குடை வேந்தர்வேந்தன்
படாமுக முகிலிற்றோன்றும் பருவமொத் தருவிபல்கும்
கடாநிறை யாறுபாயுங் கடலொடுங் கங்கைசேர்ந்தான்.

(இ-ள்.) அடா நெறி - (உயிர்களுக்கு) அடுக்காத வொழுக்கங்களை, அறைதல் - சொல்வதில், செல்லா - செல்லாத, அருமறை - அரியவேதங்கள், அறைந்த - சொன்ன, நீதி - நீதிகளை, விடா - விட்டு ஒழுகாத, நெறிபுலமை செங்கோல் - ஒழுக்கத்தினறிவமைந்த செங்கோலையும், வெண்குடை - வெண்கொற்றக்குடையையுமுடைய, வேந்தர் வேந்தன் - அரசர்க் கரசனாகிய சக்ரவர்த்தியானவன், படாம்முகம் - படமணிந்த முகத்தையுடைய, முகிலில் யானைகளாகிய மேகங்களில், தோன்றும் - தன்னெல்லைகடாவது தோன்றுகின்ற, பருவம் - காலத்தில், ஒத்து - தகுதியாய், அருவிபல்கும் - அருவியைப்போலப் பெருகுகின்ற, கடாம் - மதமாகிய, நிறை ஆறுபாயும் - நிறைந்த ஆறுகள் பாய்கின்ற, கடலொடு - படைக் கடலோடு, கங்கைசேர்ந்தான் - கங்கையைச்சேர்ந்தான்—என்று. (க)

1114. கப்புடை நாவினுக ருலகமுங் கண்ணிற்றோன்றத்
துப்புடை மணலிற்றுகிக் கங்கைநீர் சுருங்கிக்காட்ட
அப்புடை யநீகவேலை யகன்புனல் முகந்துமாந்த
உப்புடைக் கடலுந் தெண்ணீ ருண்ணசை யுற்றதன்றே.

(இ-ள்.) கப்பு உடைநாவின் - பிளவாகிய நாவையுடைய, நாகர் - நாகர்களு டைய, உலகமும் -உலகும், கண்ணில்தோன்ற - கண்களுக்குத் தோன்றும்படி, துப்பு உடைமணலிற்று ஆகி - தூய மணலையுடையதாகி, கங்கை - கங்கையானது, நீர்சுருங்கிக்காட்ட - நீர்குறைந்துகாட்டும்படி, அப்பு உடை - அம்பு முதலிய ஆயு தங்களையுடைய, அநீகவேலை - படைக் கடலானது, அகன் புனல் - விரிவாகிய கங்கைநீரை, முகந்து-கொண்டு, மாந்த - பருகுவதனால், உப்பு உடைகடலும் - உப்புநீரையுடைய கடலும், தெள் நீர் - தெளிவாகிய நீரை, உண் - உண்ணவேண்டு மென்கிற, நசை உற்றது-விருப்பத்தையடைந்தது—எ-று. (உ)

மிகுதிபற்றி அப்புடை யநீகமென்றார். முகந்துமாந்த நீரொழுக்கமறலின் உப்புடைக்கடல் நீர் நசையுற்றதாயிற்று. நீர் நசைக்கு உப்புடைமை காரணமாக லின், உப்புடைக் கடலென்றது கருத்துடையடையணி.

ஜனகமஹாராஜன் செய்ததைச் சொல்லுகின்றார்.

1115. ஆண்டுநின் றெழுந்துபோகி யகன்பணை மிதிலையென்னும்
ஈண்டுநீர் நகரின்பாங்க ரிருநிலக் கிழவனெய்தத்
தாண்டுமாப் புரவித்தானைத் தண்ணளிச் சனகனென்னும்
தூண்டரு வயிரத்தோளான் செய்தது சொல்லலுற்றாம்.

(இ-ள்.) ஆண்டுநின்று - அங்கிருந்து, எழுந்து போகி-எழுந்துசென்று, அகன் பணை - விரிவாகிய வயல்கள் சூழ்ந்த, மிதிலை என்னும் - மிதிலையென்கிற, ஈண்டு நீர்-மிகுதியாகிய நீர்வளமமைந்த, நகரின் பாங்கர் - நகரினருகே, இருநிலக்கிழ வன் எய்த-பெரியபூமிக் குரியோனாகிய தசரதசக்ரவர்த்தி வராநிற்க, தாண்டும் - தாவுகின்ற, மா-பெரிய, புரவித்தானை - குதிரைச்சேனைகளை யுடைய, தண்ணளி - கிருபையுடன்கூடிய, சனகன் என்னும் - ஜநகனென்கிற, தூண்தரு வயிரத்தோ ளான் - எழுப்போன்ற வயிரத் தோள்களை யுடையவன், செய்தது - செய்ததை, சொல்லல் உற்றாம் - சொல்லத் தொடங்கினோம்—எ-று.

1116. வந்தன னரசனென்ன மனத்தெழு முவகைபொங்கக்
கந்தடு களிறுந்தேருங் கலினமாக் கடலுஞ்சூழச்
சந்திர னிரவிதன்னைச் சார்வதோர் தன்மைதோன்ற
இந்திர திருவன்றன்னை யெதிர்கொள்வா னெழுந்துவந்தான்.

(இ-ள்.) அரசன் - தசரதசக்ரவர்த்தியானவன், வந்தனன் என்ன - வந்தா னென்று (ஒற்றர் சொல்ல, கேட்ட ஜநகராஜனானவன்) மனத்து எழும் - மனத்தி லுண்டாகின்ற, உவகை பொங்க - களிப்பானது மிகுவதனால், கந்து அடுகளிறும் - கட்டுத்தறியை முறிக்கின்ற யானைகளும், தேரும் - தேர்களும், கலினமாகட லும் - கடிவாளம்பூண்ட குதிரைக்கடலும், சூழ - சூழ்ந்துவரும்படி, சந்திரன் - சந்திரனானவன், இரவிதன்னை - சூரியனை, சார்வது - சேர்வதாகிய, ஓர் தன்மை தோன்ற - ஒரு தன்மை தோன்றும்படி, இந்திரதிருவன் தன்னை - இந்திரசெல்வத் தையுடைய சக்ரவர்த்தியை, எதிர்கொள்வான் - எதிர்கொள்ளும்பொருட்டு, எழுந்து வந்தான் - (சிங்காதநத்தைவிட்டு) எழுந்துவந்தான்—எ-று. (ச)

1117. கங்கைநீர் நாடன்சேனை மற்றுள கடல்களெல்லாம்
சங்கின மார்ப்பவந்து சார்வன போலச்சாரப்
பங்கயத் தணங்கைத்தந்த பாற்கட லெதிர்வதேபோல்
மங்கையைப் பயந்தமன்னன் வளநகர் வந்ததன்றே.

(இ-ள்.) கங்கைநீர்நாடன்சேனை - கங்காஜலஸம்ருத்தியுள்ள (கோசலாதிபதியான) சக்ரவர்த்தியின்சேனைகள், மற்றுள்ளகடல்களெல்லாம் - வேறுள்ள கடல்களெல்லாம், சங்கு இனம் - சங்குக்கூட்டங்கள், ஆர்ப்ப - ஆரவாரிக்கும்படி, வந்துசார்வனபோல - வந்துசேர்வனபோல, சார-சேராநிற்க, பங்கயத்து அணங்கை - தாமரைமலரி லெழுந்தருளிய திருமகளை, தந்த - பெற்ற, பால்கடல் - திருப்பாற்கடலானது, எதிர்வதேபோல் - எதிர்கொள்வதுபோலவே, மங்கையை - சீதாபிராட்டியை, பயந்த - பெற்ற, மன்னன் - மன்னனது, வளநகர் - வளமானநகரமாக்கள், வந்தது வந்தார்கள்—எ-று. (ரு)

வேறு

1118. இலைகுலா வயிலினா னனிகமே ழெனவுலா
நிலைகுலா மகரநீர் நெடியமா கடலெலாம்
அலகின்மா களிறுதேர் புரவியா ளெனவிரா
யுலகெலா நிமிர்வதே பொருவுமோ ருவமையே.

(இ-ள்.) இலைகுலாவு அயிலினான் - இலையைப்போலவிளக்குகிற வேலைத்தாங்கிய சக்ரவர்த்தியின், அனிகம் - சேனையின் (வருகையானது,) ஏழ் என உலாம் - ஏழெனவமைந்த, நிலை குலாம் - நிலைமையைப்பொருந்திய, மகரம் - மகரமீன்கள் வாழ்கின்ற, நீர் - நீர்வளமிக்க, நெடியமாகடல் எல்லாம் - பெரிய கடல்களெல்லாம், அலகு இல் - அளவில்லாத, மாகளிறு - பெரிய யானைகளும், தேர் - தேர்களும், புரவி - குதிரைகளும், ஆள் - காலாள்களும், என - என்று, விராய் - கலந்து, உலகு எல்லாம் - எல்லாவுலகங்களிலும், நிமிர்வதே - ஓங்கிச்செல்வதையே, பொருவும் - ஒக்கின்ற, ஓருவமை - ஓருவமையுடையது—எ-று. (சு)

நிமிர்வதே பொருவு மென்றமையின் சேனையாகிய புனைவுளிக்கு வருகை யென்னுஞ் சொல் தந்துரைக்கப்பட்டது.

1119. தொங்கல்வெண் குடைதொகைப் பிச்சமுட் படவிரா
யெங்கும்விண் புதைதரப் பகல்மறைந் திருளெழப்
பங்கயஞ் செய்யவும் வெளியவும் பலபடத்
தங்குதா மரையுடைத் தானமே போலுமே.

(இ-ள்.) (சேனையானது) தொங்கல் - பீலிக்குஞ்சங்களும், வெண்குடை - வெள்ளைக்குடைகளும், தொகைபிச்சமுட்படவிராய் - கூட்டமாகிய பீலிக்குடைகளு முட்படக்கலந்து, எங்கும் - எவ்விடத்தும், விண்புதைதர - ஆகாயமறைவதினால், பகல்மறைந்து - சூரியன் மறைந்து, இருள் எழ - இருளுண்டாக, (அதனால்) செய்யவும் வெளியவும் பங்கயம் - செந்நிறத்தனவும் வெண்ணிறத் தனவுமாகிய தாமரைமலர்கள், பலபட - அநேகமாக, தங்கு - தங்கிய, தாமரை உடை தானம் போலும் - தாமரைத் தடாகத்தையொத்தது—எ-று. (எ)

தாமரை யுடைத்தானம் என்பது அடியளந்தான் என்பதுபோல வொரு பெயராய் நின்றது.

1120. கொடியுளா ளோதனிக் குடையுளா ளோகுலப்
படியுளா ளோகடற் படையுளா ளோபகர்
மடியிலா வரசினுன் மார்புளா ளோவளர்
முடியுளா ளோதெரிந் துணர்கிலா மூளரியாள்.

(இ-ள்.) தெரிந்து உணர்கிலாம் - (இன்ன இடத்தாளென்று) ஆராய்ந்துணர்ந்திலோம், முளரியாள் - தாமரைமலரில் வசிக்கின்ற வெற்றித்திருவானவள், பகர் - அறிவுடையோர் கூறுகின்ற, மடி இல்லா - சோம்பலில்லாத, அரசினுன் - சக்ரவர்த்தியின், கொடி உளாளோ - வெற்றிக்கொடியிலுள்ளாளோ, தனி - ஒப்பற்ற, குடை உளாளோ - வெற்றிக்குடையி லுள்ளாளோ, குலப்படியுளாளோ - (அவன் செல்லுகின்ற) சிறப்பாகிய நிலத்திலுள்ளாளோ, கடல் படை உளாளோ - கடல்போன்ற படையிலுள்ளாளோ, மார்பு உளாளோ - அவன் மார்பிலுள்ளாளோ, வளர்முடி உளாளோ - பெருகுகின்ற முடியிலுள்ளாளோ—எ-று. (அ)

வெற்றித்திருமக ளுறையுமிடம் கொடி முதலியனவாகலின் ஓகாரங்கள் எண்ணுப்பொருளன. அன்றி ஐயப்பொருளன வாக்கி உணர்கிலா முளரியாள் என்பதில் உணர்கிலா என மறைவினைப் பெயரெச்சமாக்கிப் பொருள் கூறினு மமையும்.

1121. வார்முகங் கெழுவுகொங் கையர்கருங் குழலின்வண்
டேர்முழங் கரவமே ழிசைமுழங் கரவமே
தேர்முழங் கரவம்வெண் டிரைமுழங் கரவமே
கார்முழங் கரவம்வெங் கரிமுழங் கரவமே.

(இ-ள்.) (அச்சேனைக்குள் யாழ்முதலியகருவிகளில்) எழ் இசைமுழங்கு அரவம்-குரல்முதலிய எழிசைகள் ஒலிக்கின்ற ஒலி, வார்முகம் கெழுவு - வாரின்கணிறைந்த, கொங்கையர் - கொங்கைகளையுடைய மாதரது, கருங்குழலின் - கரியகுழலில், வண்டு-வண்டுகள். ஏர் - அழகாக, முழங்கு-முழங்குகின்ற, அரவம் - ஒலியேயாம், தேர்முழங்கு அரவம் - தேர்கள் ஒலிக்கின்ற ஒலி, வெள்திரைமுழங்கு அரவம்-வெள்ளிய அலைகளையுடைய கடலொலிக்கும் ஒலியேயாம், வெம்கரி முழங்கு அரவம் - வெவ்வியயானைக ளொலிக்கின்ற வொலி, கார்முழங்கு அரவம் - மேகங்களொலிக்கு மொலியேயாம்—எ-று. (கூ)

ஏகாரங்களைப் பிரித்து வண்டேர் முழங்கரவமே கார்முழங்கரவமே எனக் கூட்டுக.

1122. சூழுமா கடல்களுந் திடர்படத் துகள்தவழ்ந்
தேழுபா ரகமுமுற் றுளதெனற் கெளிதரோ
ஆழியா னுலகளந் தன்றுதாள் சென்றவப்
பூழையூ டேபொடித் தப்புறம் போயதே.

(இ-ள்) சூழும் - உலகைச் சூழ்ந்திருக்கிற, மாகடல்களும் - பெரிய கடல்களும், திடர்பட - மேடாகும்படி, துகள் தவழ்ந்து - (அச்சேனையாலுண்டான) தூளெழுந்து, எழுபார் அகமும் - எழுலகினும், உற்றுளது எனற்கு எளிதோ - தங்கியிருந்ததென்றற்கு எளியதோ, ஆழியான் உலகு அளந்த அன்று - சக்ராயுதத்தையுடைய இறைவன் உலகத்தை யளந்தருளின அக்காலத்தில், தாள் சென்ற - (அவனது) திருவடிதொளைத்துச்சென்ற, அப்பூழையூடு பொடித்து - அந்தத்தொளையினூடு சென்று, அப்புறம்போயது - அப்பால் போயிற்று—எ-று. (க0)

அரோ என்னு மசைச்சொல்லி னீற்று ஓகாரந் தொகுத்தலாய் எதிர்மறை ஓகாரம் புணர்ந்தது, பின்னை யதுபிது.

1122. மன்னெடுங் குடைமிடைந் தடையவான் மறைதரத்
துன்னிடும் நிழல்வழங் கிருடுரப் பெளிதரோ

பொன்னிடும் புவியிடும் புனைமணிக் கலனெலாம்
மின்னிடும் வில்லிடும் வெயிலிடும் நிலவிடும்.

(இ-ள்.) மன் - அரசர்களுடைய, நெடுங்குடை-நெடிய குடைகள், வான் அடைய மறைதர - வான் முழுதும் மறையும்படி, மிடைந்து - நெருங்கி வருதலால், துன்னிடும் நிழல்வழங்கு - செறிந்த நிழலானது தருகின்ற, இருள் - இருளை, துரப்பு - (வேறொன்றால்) நீக்குதல், எளிதோ - எளியதோ, பொன் இடும் - அழகைத் தருகின்ற, புவி இடும் - (அந்தச்சேனைசெல்லுகின்ற) நிலத்திற்சிந்திய, புனைமணிகலன் எலாம் - அலங்கரித்த ரத்னாபரணங்க ளெல்லாம், மின் இடும் - மின்னொளியை வீசும், வில் இடும் - வில்லென்னுமொளியை வீசும், வெயில் இடும் - வெயிலை வீசும், நிலவு இடும் - நிலவை வீசும், (இவற்றாலவ் விருளொழிந்தது)—எ-று. (கக)

வில் என்பது இடையிட்டொளிசெய்தல், இவ்விடத்துத் தந்துரைத்தவெல், லாம் இசையெச்சம்.

1124. தாவின்மன் னவர்பிரான் வரமுரட் சனகனும்
ஏவருஞ் சிலையினு னெதிர்வரும் நெறியெலாம
தூவுதண் சுண்ணமுங் கனகநுண் டூளியும்
பூவின்மென் றாதும் பொடியுமே பொடியெலாம்.

(இ-ள்.) தாவு இல் - கெடுதியில்லாத, மன்னவர்பிரான் - அரசர்க்கரசனாகிய சக்ரவர்த்தியானவன், வர - வாராநிற்க, முரண் - வலியமைந்த, சனகனும் - சனகனென்கிற, ஏவரும் சிலையினுன் - அம்புகள் தொடுத்தற்குரிய வில்லையுடையவன், எதிர்வரும் நெறியெலாம் - எதிர்கொண்டுவரும் வழியெல்லாம், (நிறைந்திருக்கிற) பொடியெலாம்-பொடிகள்யாவும், தூவு - தூவப்படுகிற, தண் - குளிர்ந்த, சுண்ணமும் - கதம்பப்பொடியும், கனகம் நுண்தூளியும் - பொன்னினது நுண்ணிய துகளும், பூவின் உகும் - மலர்களினின்றும் சிந்துகின்ற, மெல் - மெல்லிய, தாது பொடியுமே - பராகமாகிய பொடிகளுமேயாம்—எ-று. (கஉ)

1125. நறுவிரைத் தேனும்நா னமுநறுங் குங்குமச்
செறியகிற் றேய்வையு மான்மதத் தேக்கரும்
வெறியுடைக் கலவையும் விரவுசெஞ் சாந்தமும்
செறிமதக் கலுழிபாய் சேறுமே சேறெலாம்.

(இ-ள்.) சேறு எல்லாம் - (அவன் செல்லும் வழியிலுள்ள) சேறெல்லாம், நறுவிரைதேனும் - (கூந்தலிலணிந்த மாலையிற் சிந்துகின்ற) நல்ல மணமமைந்த தேனும், நானமும் - மயிர்ச்சாந்தும், நறுகுங்குமம் - நறுவிய குங்குமத்தோடு கூடிய, செறி - அழுத்தமாகிய, அகில் தேய்வையும் - அகிற்சந்தனமும், மான்மதம் தேக்கரும் - கஸ்தூரியின் பெருக்கமும், வெறி உடை - வாசனையையுடைய, கலவையும் - கலவைச் சந்தனமும், விரவுசெஞ்சாந்தமும் - (பச்சைக்கர்ப்பூர முதலியவை) கலந்த செஞ்சந்தனமும், செறி-அடர்ந்த, மதக்கலுழி - மதநதிகளும், பாய் - வீழ்வதனாலுண்டாகிய, சேறுமே-சேறுமேயாம்—எ-று. (கங)

சேறும் என்னு மும்மையைக் கலுழியுடனுங் கூட்டுக.

1126. மன்றலங் கோதையார் மணியினும் பொன்னினும்
சென்றுவந் துலவுமச் சிதைவிலா நிழலினேர்

வென்றிதிண் கொடியொடும் நெடுவிதா னமும்விராய்
நின்றவெண் குடைகளி னிழல்களே நிழலெலாம்.

(இ-ள்.) நிழல் எலாம் - (அவ்வழியிலுள்ள) நிழல்களெல்லாம், மன்றல் அம் கோதையார்-மணமமைந்த அழகிய கூந்தலையுடைய ராஜஸ்த்ரீகள், மணியினும் - மணிகளாலும், பொன்னினும் - பொன்னினாலும், (செய்த வாகனங்களில்) சென்று வந்து உலவும் - சென்றுவந்துலவுதலா லுண்டாகிய, அ - அந்த, சிதைவு இல்லா - கெடுதியில்லாத, நிழலின் - நிழலோடும், ஏர்வென்றி திண்கொடியொடும் - அழகாகிய வெற்றிக்குறியாகிய திண்ணிய கொடிகளோடும், நெடுவிதானமும் விராய்- நீண்ட மேற்கட்டிகளுங்கலந்து, நின்ற - நின்ற (நிழல்களும்). வெண்குடைகளி னிழல்களே - வெண்குடைகளின் நிழல்களுமேயாம்—எ-று. (கச)

நிழல்களே என்பதை நின்றவென்பதோடுங்கூட்டுக. சென்றுவந் துலவுமென்றலின் மணிபொன் என்பன முதற்கருவியாகுபெயர்.

1127. மாறிலா மதுகையான் வருபெருந் தானைமேல்
ஊறுபே ருவகையா னனிகம்வந் துற்றபோ
தீறிலோ தையினொடு மெறிதிரைப் பரவைமேல்
ஆறுபாய் கின்றதோ ரமலைபோ லானதே.

(இ-ள்.) மாறு இல்லா - (செருமுகத்தில்) மாறுதலில்லாத, மதுகையான் - வலியையுடையவனாகிய சக்ரவர்த்தியின், வருபெருதானைமேல் - வருகின்ற பெருஞ் சேனைமேல், ஊறு-பெருகுகின்ற, பேர் உவகையான் - பெருங்களிப்பை யுடையானாகிய ஜனகமகாராஜனது, அனிகம் - சேனையானது, வந்து உற்றபோது - வந்து சேர்ந்தபோது, ஈறு இல் - முடிவில்லாத, ஓதையினொடும் - ஓசையோடும், எறி திரை பரவை மேல்-எறிகின்ற அலைகளையுடைய கடலின்மேல், ஆறுபாய்கின்றது- ஆறு பாய்வதனா லுண்டாவதாகிய, ஓர் - ஒப்பற்ற, அமலைபோல் ஆனது - ஓசை போலானது—எ-று. (கரு)

1128. கந்தையே பொருகரிச் சனகனுங் காதலோ
டுந்தவோ தரியதோர் தன்மையோ டுலகுளோர்
தந்தையே யனையவத் தகவினன் முன்புதன்
சிந்தையே பொருநெடுந் தேரின்வந் தெய்தினன்.

(இ-ள்.) ஓது அரியது - புகழ்தலரிதாகிய, ஓர் - ஒப்பற்ற, தன்மையோடு - (இயற்கையாகிய) நற்குண நற்செய்கையால், உலகு உள்ளோர் - உலகிலுள்ளார்க்கு, தந்தையே அனைய - பிதாவையே யொத்த, அ - அந்த, தகவினன் முன்பு - தகுதியையுடையானுக் கெதிரில், கந்தையேபொரு - கட்டுத் தறியையே முறிக்கின்ற, கரி - யானைகளையுடைய, சனகனும் - ஜநகமஹாராஜனும், காதலோடு உந்த - காதலுடன் தள்ளப்படுதலால், தன் சிந்தையேபொரு - தன் மனத்தையே யொத்த, நெடு தேரின் - நெடிய தேரின்மீது (ஏறி,) வந்து எய்தினன் - வந்துசேர்ந்தான்.

தாம்பன்னாள் பயின்றனவாகலிற், கந்தையேயென்றது சிறப்பேகாரம். தன் குடிகளைத் தீயொழுக்கத் தொழுகாமை யொறுத்து நல்லொழுக்கத் தொழுகச் செய்தலால், சக்ரவர்த்திக்குத் தந்தையும் அவனைக் காணுமாறு விரைகின்றதாகலிற், றேர்க்குச் சிந்தையும் முறையே பயனுவமையும் வினையுவமையு மாயினவே - இரண்டும் பிரிநிலை.

1129. எய்தவத் திருநெடுந் தேரிழிந் தினையதன்
மொய்கொடிண் சேனைபின் னிற்கமுன் சேறலும்
கையின்வந் தேறெனக் கடிதின்வந் தேறினன்
ஐயனும் முகமலர்ந் தகமுறத் தழுவினன்.

(இ-ள்.) எய்த - நெருங்கிவர, அ - அந்த, திரு - அழகிய, நெடுதேர் - நெடிய தேரினின்றும், இழிந்து - இறங்கி, இனைய - இப்படிப்பட்ட, தன் - தன்னுடைய, மொய்கொள் திண்சேனை - மொய்த்துவருகிற திண்ணிய சேனையானது, பின் நிற்க - பின்னே நிற்க, முன் சேறலும் - முன்னே செல்லுதலும், கையின் கையால், வந்து ஏறு என - (இத்தேரில்) வந்தேறுவாயென்று (குறிப்பிக்க) கடிதின் வந்து ஏறினன் - விரைவாக வந்தேறினன், ஐயனும் - சக்ரவர்த்தியும், முகம் அகம் மலர்ந்து - முகமுமகமுமலர்ந்து, உறத்தழுவினன் மிகவுந்தழுவினன்—எ-று. (கஎ)

1130. தழுவிநின் றவனிருங் கிளையையுந் தமரையும்
வழுவில்சிந் தனையினன் வரிசையின் னளவளாய்
எழுகமுந் துறவென வினிதுவந் தெய்தினன்
உழுவைமுந் தரியன னெவரினும் முயரினன்.

(இ-ள்.) உழுவைமுந்து - புலிகளுக்கு முன், அரி அன்னன் - சிங்கத்தை யொத்தவனும், எவரினும் உயரினன் - எல்லா வரசரினு முயர்ந்தவனுமாகிய சக்ரவர்த்தி, தழுவிநின்று - (ஜநகமஹாராஜனைத்) தழுவிநின்று, அவன் - அவனது, இருகிளையையும் - பெரிய சுற்றத்தையும், தமரையும் - சிநேகரையும், வழுவு இல் சிந்தனையினன் - தவறுதலில்லாத உள்ளன்பினனாகி, வரிசையின் - முறையாக, அளவளாய் - விசாரித்து, முந்துற எழுக என-முன்னே செல்லக்கடவாயென்று கூறி, இனிது வந்து எய்தினன்-இனிதாகவந்து (மிதிலையை) அடைந்தான்—எ-று.

1131. இன்னவா றிருவரு மினியவா றேகவத்
துன்னுமா நகரினின் றெதிர்வரத் துன்னினன்
தன்னையே யனையவன் றழலையே யனையவன்
பொன்னின்வார் சிலையிறப் புயநிமிர்த் தருளினன்.

(இ-ள்.) இன்னவாறு - இந்தப்ரகாரம், இருவரும் - சக்கிரவர்த்தியும் சனக மகாராஜனுமாகிய இருவர்களும், இனியவாறு ஏக - இனியவிதமாகச் செல்லா நிற்க, தழலையே அனையவன் - தீநிறத்தையேயொத்த நிறத்தையுடைய சிவனது, பொன்னின்வார்சிலை - பொன்னிறமமைந்த நீண்ட வில்லானது, இற - முறியும் படி, புயம் - தன் புயங்களை, நிமிர்த்தருளினன் - நிமிர்த்தருளினவனாகி, தன்னையே அனையவன் - தன்னைத்தானே யொப்போனாகிய ஸ்ரீராமபிரான், அ - அந்த, துன்னும் - (பலவளங்களும்) நிறைந்த, மாநகரினின்றும் - பெரிய (மிதிலா) நகரத்தினின்றும், எதிர்வரத் துன்னினன்-எதிர்வரத் தொடங்கினன்—எ-று. (கக)

1132. தம்பியுந் தானுமத் தானைமன் னவனகர்ப்
பம்புதிண் புரவியும் படைஞரும் புடைவரச்
செம்பொனின் பசுமணித் தேரின்வந் தெய்தினன்
உம்பரும் மிம்பரும் முரகருந் தொழவுளான்.

(இ-ள்.) உம்பரும் - விண்ணுலகத்தாரும், இம்பரும் - மண்ணுலகத்தாரும், உரகரும் - நாகரும், தொழவுளான் - வணங்கநின்றோனாகிய ஸ்ரீராமபிரான், தம்பி

யும் தானும் - தம்பியுந்தானுமாக, அ - அந்த, தானை - சேனைகளையுடைய, மன்னவன் - அரசனாகிய ஜநகனது, நகர் - நகரினின்றும், பம்புதிண்புரவியும் - நிறைந்த திண்மையமைந்த குதிரைப்படையும், படைஞரும் - காலாள்களும், புடைவர - பக்கத்தில் சூழ்ந்துவரும்படி, செம்பொன்னின் - பசும்பொன்னாற் செய்யப்பட்டு, பசுமணி - மரகதமணிகளழுத்திய, தேரின் - தேரின்மேலேறி, வந்து எய்தினான் - வந்து சேர்ந்தான்—எ-று. (௨0)

1133. யானையோ விரதமோ விவுளியோ பிடிகளோ
ஆனபே ருறையிலா நிறைவையா ரறிகுவார்
தானையேர் சனகனே வலினெடுந் தாதைமுன்
போனபே ரிருவர்தம் புடைவரும் படையினே.

(இ-ள்.) நெடுந்தாதை முன்போன - பெருமையாகிய தந்தைக்கு முன்போன, பேர் இருவர்புடை - பேரியல்பை யுடையா ரிருவர்பக்கத்தில், தானை ஏர் - சேனையினழகுவாய்ந்த, சனகன் ஏவலின் - ஜநகமகாராஜனது ஏவலால், வரும்படையின் - வருகின்ற படைகளில், ஆனபேர் உறை இல்லா - (எண்களில்) பெரிதாகிய உறையென்னுமளவையில்லாத, நிறைவை - நிறைவினை, ஆர் அறிகுவார் - யாரறிவார், (ஒருவருமில்லை) (ஆதலால்) யானையோ - யானைகளோ, இரதமோ - தேர்களோ, இவுளியோ - குதிரைகளோ, பிடிகளோ - பெண்யானைகளோ, (எவையோ மிக்குள்ளன)—எ-று. (௨௧)

இருவர் ராமலக்ஷ்மணர்கள்.

1134. காவியுங் குவளையுங் கடிகொள்கா யாவுமொத்
தோவியஞ் சுவைகெடப் பொலிவதோ ருருவொடே
தேவருந் தொழுகழற் சிறுவன்முன் பிரிவதோர்
ஆவிவந் தென்னவந் தரசன்மா டணுகினான்.

(இ-ள்.) காவியும் - காவிமலரையும், குவளையும் - குவளைமலரையும், கடிகொள் - பரிமளத்தைக்கொண்ட, காயாவும் - காயாமலரையும், ஒத்து - நிகர்த்து, ஓவியம் - சித்திரமும், சுவைகெட - சுவைகெடும்படி, பொலிவது - விளங்குவதாகிய, ஓர் உருவொடு - ஒப்பற்ற திருவுருவத்தோடு, தேவரும் - தேவர்களும், தொழு - தொழுகின்ற, கழல் - சீர்பாதங்களையுடைய, சிறுவன் - ஸ்ரீராமபிரான், முன் பிரிவது - முன் பிரிந்ததாகிய, ஓர் - ஒப்பற்ற, ஆவிவந் தென்ன - உயிர்வந்தாற்போல, வந்து அரசன்மாடு அணுகினான் - வந்து அரசனிடத்தில் சேர்ந்தான்.

அவன்பக்கல் ஈடுபடாதவர்களையு மீடுபடச் செய்யுஞ் சிறப்பிற்றாகலின், ஒருருவொடேயெனத் திருவுருவத்தை யெடுத்துக்கூறினார். ஒடுவுருபு, உருவொ டணுகினானென அணுகலுக்கு அடைமொழிப் பொருளில் வந்தது. ஆவி வந்தென்ன என்றது முன் விசுவாமித்திரமுனி பின்போனவர் இப்போது சக்கிரவர்த்தியின் பக்கல் வந்ததை.

1135 அனிகம்வந் தடிதொழக் கடிதுசென் றரசர்கோன்
இனியபைங் கழல்பணிந் தெழுதலுந் தழுவினான்
மனுவெனுந் தகையன்மார் பிடைமறைந் தனமலைத்
தனிநெடுஞ் சிலையிறத் தவழ்தடங் கிரிகளே.

(இ-ள்.) அனிகம்வந்து அடிதொழ - (சக்ரவர்த்தியினுடைய) சேனைகள் வந்து தன் சீர்பாதங்களைத் தொழாநிற்க, கடிதுசென்று - விரைந்துசென்று, அர

சர்கோன் - சக்ரவர்த்தியின், இனிய - இனிதான, பைங்கழல் - பசும்பொற்கழலை யணிந்த பாதங்களை, பணிந்து எழுதலும் - வணங்கி யெழுதலும், தழுவினன் - (சக்ரவர்த்தியும்) அவனைத் தழுவிக்கொண்டான், (தழுவுதலும்) மலை - மேருமலை யையொத்த, தனி - ஒப்பற்ற, நெடுஞ்சிலை இற - நெடியவில்லானது முறியும்படி, தவழ் - அசைந்த, தடம் - பெரிய, கிரிகள் - (புயங்களாகிய) மலைகள், மனு என்னும் தகையன் - மநுவென்னுந் தகுதியையுடைய சக்ரவர்த்தியின், மார்பிடை - மார்பின்கண், மறைந்தன - மறைந்துபோயின—எ-று. (௨௩)

மலை என்பதற்கு மேருவென்றது மலைகளிற் சிறந்து தோன்றுவது அதுவே யாதலால்.

1136. இளையபைங் குரிசில்வந் தடிபணிந் தெழுதலும்
தளைவருந் தொடையன்மார் புறவுறத் தழுவினன்
களைவருந் துயரறக் ககனமெண் டிசையெலாம்
விளைதரும் புகழினு னெவரினும் மிகுதியான்.

(இ-ள்.) களைவு அரு - (வேறொன்றால்) ஒழித்தலருமையாகிய, துயர் அற - துன்பம் நீங்கும்படி, ககனம் - விண்ணுலகமும், எண்திசை - எட்டுத்திசைகளுமாகிய, எல்லாம் - முழுதும், விளைதரும் புகழினன் - பெருகாநின்ற புகழையுடையானும், எவரினும் மிகுதியான் - எல்லாரினுஞ் சீரியோனுமாகிய சக்ரவர்த்தி, பை - பசும்பொன்னிறமமைந்த, இளைய குரிசில் - இளையபெருமாள், வந்து அடிபணிந்து எழுதலும் - வந்து அடிவணங்கி யெழுதலும், தளைவரும் தொடையன் - மலராற் றொடுத்தலமைந்த மாலையையணிந்தவனாகிய சக்ரவர்த்தி, மார்பு - தன் மார்பில், உற உறத் தழுவினன் - பொருந்த மிகுதியுந் தழுவிக்கொண்டான்—எ-று. (௨௪)

குன்றளிக்குங் குலமணித்தோட் சம்பரன் முதலானோரைக், குலத்தோடுந் தொலைத்த வெற்றியாளனாகிய இவன் புகழைக், ககனமெண் டிக்கிலுள்ளார் கூறுகிற்கையால், இவர்களை வருத்தவரு மசுரர் முதலிய தீயோர் அது கேள்வியுற்று அஞ்சியொதுங்கலிற், "றுயரறவிளைதரும்" புகழினனென்றார். துயரற என்பது காரியப்பொருட்டு.

1137. கற்றைவார் சடையினன் கைக்கொளுந் தனுவிறக்
கொற்றநீள் புயநிமிர்த் தருளுமக் குரிசில்பின்
பெற்றதா யரையுமப் பெற்றியிற் றொழுதெழுந்
துற்றபோ தவர்மனத் துவகையா ருரைசெய்வார்.

(இ-ள்.) கற்றை - திரட்சியாகிய, வார் - நீண்ட, சடையினன் - சடையையுடைய சிவன், கைக்கொளும் - கையிற்றாங்கிய, தனு இற - வில் முறியும்படி, கொற்றம் நீள் வெற்றிமிகுந்த, புயம் - புயங்களை, நிமிர்த்தருளும் - நிமிர்த்தருளிய, அ குரிசில்பின் - அந்த ஸ்ரீராமபிரான் தந்தையைத் (தொழுத) பிறகு, பெற்றதாயரையும் - (தன்னைப் புதல்வனாகப்) பெற்ற தாய்மாரையும், அப்பெற்றியின் - (முன் தந்தையைப் பணிந்த) அந்த முறைமைபோல. தொழுது எழுந்து - பணிந்தெழுந்து, உற்றபோது - (அவர்க்கெதிரில்) இருந்தபோது, அவர் மனத்து - அவர்களுடைய மனத்திலுண்டாகிய, உவகை - களிப்பினளவை, உரைசெய்வார்யார் - சொல்லவல்லார்யாவர், (ஒருவருமில்லை)—எ-று. (௨௫)

யார் என்னும் வினா இன்மை குறித்து நின்றது.

1138. உன்னுபே ரன்புமிக் கொழுகியொத் தொண்கணீர்
பன்னுதா ரைகடறத் தொழுதெழும் பரதனைப்
பொன்னின்மார் புறவணைத் துயிருறப் புல்லினன்
தன்னையத் தாதைமுன் றழுவினு லென்னவே.

(இ-ள்.) உன்னு - (எப்போதும்) நினைக்கின்ற, பேர் அன்பு - பேரன்பானது, மிக்கு - (மனத்தில்) மிகுத்து, ஒழுகி ஒத்து - (புறத்தே) ஒழுகினாற்போன்று, ஒள் கண்ணீர் - அழகிய கண்ணீரானது, பன்னு - சொல்லப்பட்ட, தாரைகள்தர - தாரைகளைத் தராநிற்க, தொழுது எழும் - பணிந்தெழாநின்ற, பரதனை - பரதனை, தன்னை - தன்னை, அ தாதை - அந்தத் தந்தையானவன், முன் தழுவினுல் என்னவே - முன்னே தழுவிக்கொண்டாற்போலவே, பொன்னின்மார்பு உற - திருமகள் வசிக்கின்ற மார்பில் பொருந்த, அணைத்து - அணைத்துக்கொண்டு, உயிர் உற புல்லினன் - உயிரோடும் பொருந்தும்படி தழுவிக்கொண்டான்—எ-று. (உகூ)

பொன் இன்மார்பு என்பதற்கு திருமகளுக்கினிய மார்பு எனினுமாம்.

1139. கரியவன் பின்புசென் றவனருங் காதலிற்
பெரியவன் றம்பியென் றினையதோர் பெருமையப்
பொருவருங் குமரர்தம் புனைநறுங் குஞ்சியால்
இருவர்பைங் கழலும்வந் திருவரும் வருடினர்.

(இ-ள்.) கரியவன்பின்பு சென்றவன் - கரிய திருமேனியுடைய ஸ்ரீராமபிரானுக்குப் பின்னேசென்றவன், அருங்காதலின் - (பிறரால் பெறுதல்) அரியகாதலால், பெரியவன் - பெரியவனாகிய பரதனுக்கு, தம்பி - திருத்தம்பி, என்ற இனையது - என்று சொல்லப்பட்ட இத்தன்மைத்தாகிய, ஓர்-ஒப்பற்ற, பெருமை - பெருமைவாய்ந்த, அ - அந்த, பொருவரு - போர்த்தொழில் கைவந்த, குமரர் இருவரும் வந்து - குமரர்களாகிய லக்ஷ்மணசத்ருக்நர்களிருவரும் வந்து, தம் - தம்முடைய, புனை - கைபுனையப்பட்ட, நறுகுஞ்சியால் - நறுவிய சிகையால், இருவர் - ஸ்ரீராம பரதர்களாகிய இருவருடைய பைங்கழலும் - பசும்பொற்கழலணிந்த ஸ்ரீபாதங்களையும், வருடினர் - வருடினர்கள்—எ-று. (உஎ)

குலம், கல்வி, தூய்மை, வாய்மை, ஒழுக்கம், ஆற்றல் முதலியவற்றுலுளவாகிய பெருமைகள் யாவும் உண்மையாய் நோக்கின், இவன் ஸ்ரீராமபிரானைப் பிரியா துடனுறைகின்ற திருத்தம்பி, இவன் ஸ்ரீராமபிரான்பால் மிக்க காதலையுடைய பரதனைப் பிரியாதுடனுறைகின்ற திருத்தம்பி என்னும் ஒரு பெருமைக்கு ஒரு சிறிதும் ஒப்பாகாவாகலின், "கரியவன்பின்புசென்றவன்" "காதலிற்பெரியவன்றம்பி" யென்றினையதோர் பெருமை எனவும், அப்பெருமையொன்றுமே யமையுமென வுணரும் பெருங்குணத்தினரென்பார் "அப்பொருவருங்குமரர்" எனவுங் கூறினர்.

1140. கோல்வருஞ் செம்மையுங் குடைவருந் தண்மையும்
சால்வருஞ் செல்வமென் றுணர்பெருந் தாதைதன்
மேல்வருந் தன்மையால் மிகவிளங் கினர்கள்தாம்
நால்வரும் பொருவினன் மறையெனும் நடையினர்.

(இ-ள்.) பொருவு இல் - ஒப்பில்லாத, நான்மறை யெனும் - நான்கு வேதங்களே யென்கின்ற, நடையினர் - ஒழுக்கத்தையுடையார்களாகிய, நால்வரும் - நான்குபேர்களும், கோல் - தன் செங்கோன்மையால், வரும் - உண்டாகின்ற,

செம்மையும் - நீதியையும், குடைவரும் - (தனது) குடைநிழலாலுண்டாகின்ற, தண்மையும் - தண்ணளியையும், சால்வரும் - கருத்துக்கமைய வருகின்ற, செல்வம் என்று உணர் - செல்வங்களென்றுணர்கின்ற, பெருந்தாதை - பெரிய தந்தையினது, மேல்வரும் தன்மையால் - மேன்மையாக விளங்குகின்ற குணத்தோடு, மிகவிளங்கினர்கள் - மிகவும் பிரகாசித்தார்கள்—எ-று. (௩அ)

தன் - சாரியை, தா - அசை. வானவரு முனிவரு மொழிந்த மற்றையோர் ஸ்ரீராமபிரானையும் ஏனைய மூவரையும் முறையே ஆதிபகவனெனவும், சித்தர்களெனவும் உண்மையுணர்ந்திலராய், முறைவழா துயிர்களையோம்பித், தண்ணளி செய்யாநின்ற அரசர்க்கரசனுடைய குமாரர்களென்றே அந்நாரின் மதித்தனராதலால், "பெருந்தாதை தன்மேல் வருந்தன்மையால் மிகவிளங்கின" ரென்றார்.

1141. சான்றெனத் தகையசெங் கோலினு னுயிர்கள்தாம்
ஈன்றநற் றுயெனக் கருதுபே ரருளினன்
ஆன்றவிச் செல்வமித் தனையுமொய்த் தருகுறத்
தோன்றலைக் கொண்டுமுற் செல்கெனச் சொல்லினன்.

(இ-ள்.) சான்று என தகைய - (பகை நொதுமல் நட்பு என்னு மூவகையாருக்கும் பொதுமையாக) சாட்சியென்று சொல்லுந் தகுதியுடைய, செங்கோலினன் - செங்கோலையுடையவனும், உயிர்கள்தாம் - உயிர்களாகியதாம், ஈன்ற - (தம்மைப்) பெற்ற நற்றாய் எனக் கருது-நற்றாயென்று நினைத்தற்குரிய, பேர் அருளினன் - பெருங்கருணையுள்ளவனுமாகிய சக்ரவர்த்தி, ஆன்ற இ செல்வம் இத்தனையும் - மிகுதியாகிய இவ்வைபவங்கள் இவ்வளவும், மொய்த்து - நெருங்கி, அருகு உற - அருகிற் பொருந்த, தோன்றலைகொண்டு - (இந்தச்) சிறுவனைக்கொண்டு, முன்செல்க என - முன்னே செல்லக்கடவீரென்று, சொல்லினன் - (சேனைத்தலைவரை நோக்கிச்) சொன்னான்—எ-று. (௨௧)

"காவியுமொளிர்தரு கமலமுமெனவே, யோவிய வெழிலுடை இவ்வொருவனையலது, ஓராவியுமுடலமு மிலதென் றிருப்பவனாதலால் அச்சிறப்புப்பற்றி வாளாத்தோன்றல்" என்றான்.

1142. காதலோ வறிகிலங் கரிகளைப் பொருவினர்
தீதிலா வுவகையுஞ் சிறிதரோ பெரிதரோ
கோதைசூழ் குஞ்சியக் குமரர்வந் தெய்தலும்
தாதையா தொத்ததத் தானையின் றன்மையே.

(இ-ள்.) (அந்நால்வர்பால்) கரிகளைப் பொருவினர்-யானைகளையொத்த சேனைத்தலைவர்கள், (வைத்த) காதலோ - அன்பினையோ, அறிகிலம் - (இவ்வளவிற்றென்று) அறியோம், தீது இலா - குற்றமில்லாத, உவகையும் - சந்தோஷமும், சிறிதரோ பெரிதரோ - சிறியதோ பெரியதோ, கோதைசூழ்குஞ்சி - பூமாலைவலைந்த சிகையையுடைய; அ-அந்த, குமரர் - குமரர்கள், வந்து எய்தலும் வந்துசேர்தலும், அத்தானையின்தன்மை - அந்தச் சேனையின் தன்மையானது, தாதை ஆதல் ஒத்தது - தந்தையாதலை யொத்தது—எ-று. (௩0)

ஆதலொத்தது என்பது ஆதொத்தது எனத் தொகுத்தது, இவ்வாறன்றி, வேதென்பதிற்போல, ஆது என்பதில், து புடைபெயர்ச்சி விகுதி எனினும் ஒக்கும். இவ்வுவகை ஏனையுவகைபோலாது உயிர்க்குறுதி பயத்தலால் தீதிலாவுவகையென்றார். தானையின் தன்மை, தாதையாதலொத்தலாவது, இச்செல்வமித்தனையு

மொய்த்தருகுறச் சிறுவர்நால்வரு மொருசேரச், செல்வதைக் கண்ணுற்ற தாதை அப்போதுகொண்ட சாதலையொத்த காதலையும் உவகையையொத்த உவகையையும் உடையதாதல். முன்னை ஓ - சிறப்பு. பின்னை ஓ - இரண்டும் ஐயம்.

1143. தொழுதிரண் டருகுமன் புடையதம் பியர்தொடர்ந் .
தழிவில்சிந் தையினுகந் தாடன்மா மிசைவரத்
தழுவுசங் குடனெடும் பணைதழங் கிடவெழுந்
தெழுதருந் தகையதோர் தேரின்மே லேகினன்.

(இ-ள்.) இரண்டு அருகும் - இரு பக்கங்களிலும், அன்பு உடைய தம்பியர் - அன்புள்ள தம்பிமார், தொழுது தொடர்ந்து - வணங்கிநின்று தொடர்ந்து, அழிவு இல் - அழிவில்லாத, சிந்தையின் உகந்து - மனத்தாலுவந்து, ஆடல்மாமிசைவர - வெற்றியையுடைய குதிரைகள்மேல் வராநிற்கவும், தழுவு - ஒன்றையொன்று வேற்றுமையின்றாவிக்கின்ற, சங்குடன் - சங்குகளுடனே, நெடும்பணை தழங்கிட - பெரிய முரசமொலிக்கவும், எழுந்து - செல்லலுற்று, எழுது அரு - எழுதுதற்கரிய, தகையது - அழகையுடையதாகிய, ஓர் தேரின்மேல் ஏகினன் - ஒரு தேர்மேலேறிச் சென்றான்—எ-று. (௯க)

1144. பஞ்சிசூழ் மெல்லடிப் பாவைமார் பண்ணைசூழ்
மஞ்சுசூழ் நெடியமா ளிகையின்வந் திடைவிராய்
நஞ்சுசூழ் விழிகள்பூ மழையின்மேல் விழநடந்
திஞ்சிசூழ் மிதிலைமா வீதிசென் றெய்தினன்.

(இ-ள்.) பஞ்சிசூழ்-செம்பஞ்சூட்டிய, மெல் அடி - மெல்லியபாதங்களையுடைய, பாவைமார் - மங்கையர்களுடைய, பண்ணை - கூட்டங்கள், சூழ் - சூழ்ந்து, மஞ்சு சூழ் - மேகங்கள் சூழ்கின்ற, நெடிய மாளிகையின் - நெடிய மாளிகையினின்றும், வந்து - (புறத்து) வந்து, இடைவிராய் - ((வீதியின்) இடத்தில் நிறைய, (அக்கூட்டத்தின்) நஞ்சுசூழ் - விஷம் நிறைந்த, விழிகள் - கண்பார்வைகள், பூமழையின் - (தேவர்கள் சொரியும்) புஷ்பமாரிபோல, மேல் விழ - தன்மேல் விழும்படி, நடந்து - சென்று, இஞ்சிசூழ் - மதில்சூழ்ந்த, மிதிலை - மிதிலாநகரத்தினது, மாவீதி - பெருந்தெருவை, சென்று எய்தினன் - சென்றுசேர்ந்தான்—எ-று. (௯உ)

பண்ணைசூழ் என்னும் முதனிலைத் தனிவினை, யெச்சமாய் நின்றது. விராவ என்பது விராய் எனத் திரிந்தது.

1145. சூடகந் துயல்வரக் கோதைசோர் தரமலர்ப்
பாடகம் பரதநூல் பகரவெங் கடகரிக்
கோடரங் கிடவெழுங் குவிதடங் கொங்கையார்
ஆடரங் கல்லவே யணியரங் கயலெலாம்.

(இ-ள்.) அணி - அலங்கரிக்கப்பட்ட, அரங்கு அயல் எல்லாம் - மாளிகைகளின் புறமெல்லாம், (அங்கு நிறைந்த மங்கையர்களுடைய) சூடகம் - கைவளைகள், துயல்வர - அசைதலாலும், கோதை - கூந்தல், சோர்தர - சரிதலாலும், மலர் - (பாதமாகிய) மலரிலணிந்த, பாடகம் - பாதசரங்கள், பரதநூல்பகர - பரதநூல்விதியை யொலித்துக்காட்டலாலும், வெம் கடம் கரி - வெம்மையாகிய மதத்தையுடைய யானையின், கோடு - கொம்புகள், அரங்கிட - (இறுமாப்பு) கெடும்படி, எழும் - எழுந்த, குவி - குவிந்த, தடம் - பெரிய, கொங்கையார் - ஸ்தனங்களை

யுடையவேசையர், ஆடு அரங்கு அல்லவே - ஆடரங்குகளல்லவோ, (ஆடரங்குகளேயாம்)—எ-று. (௩௩)

ஏகாரம் எர்மறைப்பொருட்டு.

1146. பேதைமார் முதல்கடைப் பேரிளம் பெண்கடாம்
ஏதியார் மாரவே ளேவவந் தெய்தினர்
ஆதிவா னவர்பிரா னணுகலா லணிகொள்கார்
ஓதியார் வீதிவா யுற்றவா றுரைசெய்வாம்.

(இ-ள்.) ஆதி - முதன்மையாகிய, வானவர்பிரான் - தேவதேவன், அணுகலால் - சேர்தலால், ஏதி ஆர் - ஆயுதங்கள் நிரம்பப்பெற்ற, மாரவேள் - மன்மதன், ஏவ - ஏவாநிற்ப, பேதைமார்முதல் - பேதைப்பருவத்தினர்முதல், பேரிளம்பெண்கள் கடைவந்து - பேரிளம்பெண்கள் கடையாக வந்து, எய்தினர் - சேர்ந்தவர்களாகிய, அணி கொள் - ஆபரணங்களைக்கொண்ட, கார் - மேகம்போன்ற, ஓதியார் கூந்தலையுடைய மாதர்கள், வீதிவாய் - தெருவில், உற்றவாறு - அடைந்த விதத்தை. உரைசெய்வாம் - சொல்லுவோம்—எ-று. (௩௪)

“பேதைமார் முதல்கடைப் பேரிளம்பெண்கள் மாரவே ளேவவந் தெய்தினரெனவே” குலமங்கையர்க்கு வேற்றுநாயகனைக் கண்டு வேட்குதல் கற்பொழுக்கமன்றேயெனின், அற்றன்று, “ஒலிகடலுலகினி லும்பர் நாகரிற் பொலிவது” தன்பொற்பு என்னுமாறு நின்ற இறைவியும் வேட்டு, “அகலகில் லேனிறையுமென்றுறை மார்பினையுடைய ஜகந்மோஹநாகாரனாகிய இறைவனது வடிவழகைக் கண்டு, ஏனைமாதர் வேட்காதிரரரன்றே” அன்றியும், “இராகவா உன்வடிவு கண்டால் மன்மதனும் மடவாராக ஆதரஞ்செய்வனென்றால் உய்யும் வண்ணமெங்கே, வாராகவாசமுலையேனைப்போலுள்ள மாதருக்கு” என்று அவன்பக்கல்புரியும் வேட்கையும் பத்தியேயாமெனத், தோலாநாவின் மேலோர் கூறலாமென்க.

கக-வது. எதிர்கொள்படலம் முற்றும்.

---

## உ௰-வது. உலாவியற் படலம்.

உலாவியலைக் குறித்துக் கூறும் படலம்.

[*]

1147. மானினம் வருவபோன்று மயிலினந் திரிவபோன்றும்
மீனின மிளிர்வபோன்று மின்னின மிடைவபோன்றும்
தேனினஞ் சிலம்பியார்ப்பச் சிலம்பினம் புலம்பவெங்கும்
பூநனை கூந்தன்மாதர் பொம்மெனப் புகுந்துமொய்த்தார்.

(இ-ள்.) மானினம் வருவ போன்றும் - மான் கூட்டங்கள் வருவனபோன்றும், மயில் இனம் திரிவபோன்றும் - மயிற்கூட்டங்கள் திரிவனபோன்றும், மீன் இனம் - மீன் கூட்டங்கள், மிடைவபோன்றும் - நெருங்குவனபோன்றும், தேன் இனம் - (கூந்தலில் மொய்த்த) வண்டுக் கூட்டங்கள், சிலம்பி ஆர்ப்ப - மிக்கொலிக்கவும், சிலம்பு இனம் புலம்ப - (காற்சிலம்பின்) கூட்டங்கள் ஒலிக்கவும், எங்கும் -

எவ்விடத்தும், பூ - மலரையணிந்த, நனை - குளிர்ந்த, கூந்தல் - கூந்தலையுடைய, மாதர் - மாதர்கள், பொம் எனப்புகுந்து மொய்த்தார் - விரைவாகப்புகுந்து மொய்த்தார்கள்—எ-று. (க)

பொம்மென என்பது விரைவுக்குறிப்புணர்த்திற்று.

1148. விரிந்துவீழ் கூந்தல்பாரார் மேகலை யற்றநோக்கார்
சரிந்தபூந் துகில்கள்தாங்கா ரிடைதடு மாறத்தாழார்
நெருங்கினர் நெருக்கிப்புக்கு நீங்குமி னீங்குமின்னென்
றருங்கல மனையமாதர் தேனுக ரளியின்மொய்த்தார்

(இ-ள்.) அரு - பெறலரிய, கலம் அனைய - ஆபரணத்தையொத்த, மாதர் - மாதர்கள், விரிந்துவீழ் - விரிந்துவீழ்கின்ற, கூந்தல்பாரார் - கூந்தலைமதியாமலும், அற்ற மேகலைநோக்கார் - அற்றனவாகிய மேகலைகளைப் பாராமலும், சரிந்த - சரிந்த, பூ - பூத்தொழிலமைந்த, துகில்கள் தாங்கார் - ஆடைகளை யேந்தாமலும், இடைதடுமாற - (மெல்லிய) இடைதடுமொரு நிற்க, தாழார் - (அதனால்) தாமதியாமலும், நெருங்கினர் - (வந்து) நெருங்கினார்கள், நெருங்கிபுக்கு - (அவ்வாறு) நெருங்கிப் புகுந்து, நீங்குமின் நீங்குமின் என்று - நீங்குங்கோள் நீங்குங்கோள் என்று சொல்லாநின்று, தேன்நுகர் - தேனையுண்ணவருகிற, அளியின்-வண்டுகளைப் போல, மொய்த்தார் - (ஸ்ரீராமபிரானை) மொய்த்துக்கொண்டார்கள்—எ-று. (உ)

1149. கண்ணினாற் காதலென்னும் பொருளையே காண்கின்றோமிப்
பெண்ணினீர் மையினாலெய்தும் பயனின்று பெறுதுமென்பார்
மண்ணினீ ருலர்ந்துவான மழையற வறந்தகாலத்
துண்ணுநீர் கண்டுவீழு முழைக்குலம் பலவுமொத்தார்.

(இ-ள்.) கண்ணினால் - கண்களால், காதல் என்னும் பொருளையே காண்கின்றோம் - காதலென்கிற பொருளையே பாராநின்றோம், இப்பெண்ணின் நீர்மையினால் - (அதனால்) நாமடைந்திருக்கும் இந்தப் பெண்தன்மையால், எய்தும்பயன் - அடைதற்குரிய பயனை. இன்று பெறுதும் என்பார் - இன்றடைவோமெனக்கருதுவோராய், மண்ணில் - பூமியில், நீர் உலர்ந்து - நீர் உலர, வானம் - மேகங்கள், மழை அற - மழை சிறிதுமின்றி, வறந்தகாலத்து - வறந்தகாலத்தில், உண்ணும் நீர்கண்டு, உண்ணுதற்குரிய நீரை (ஓரிடத்தில்) பார்த்து, வீழும் - அதனையுண்ண விரும்புகிற, உழைக்குலம்பலவும் ஒத்தார் - பல மான் கூட்டங்களையுமொத்து மொய்த்தார்கள்—எ-று. (ங)

காதலென்னும் பொருளை என்றது எண்ணுலார் மதத்தை உட்கொண்டு.

1150. பள்ளத்துப் பாயுநன்னீ ரனையவர் பானல்பூத்த
வெள்ளத்துப் பெரியகண்ணார் மென்சிலம் பலம்பமென்பூத்
தள்ளத்தம் மிடைகணோவத் தமைவலித் தவன்பாற்செல்லும்
உள்ளத்தைப் பிடித்துநாமென் றோடுகின் றருமொத்தார்.

(இ-ள்.) பள்ளத்து - பள்ளமாகிய நிலத்தில், பாயும் - பாய்கின்ற, நல்நீர் அனையவர் - தெளிந்த நீரை யொத்தவர்களாகிய, பானல் பூத்த - குவளை மலர்போல விரிந்த, வெள்ளத்து - வெள்ளத்தினும், பெரியகண்ணார் - பெரியகண்களையுடைய மாதர்கள், மெல் சிலம்பு அலம்ப-மெல்லிய சிலம்புகள் ஒலிக்க, மெல்பூத்தள்ள - பாதமாகிய மெல்லிய தாமரைமலர்கள் தள்ளாடவும், தம் இடைகள் நோவ - தம்மி

டைகள் வருந்தவும், தம்மை வலித்து - தம்மையிழுத்துக்கொண்டு, அவன்பால் செல்லும் - அப்பெருமானிடத்துச் செல்லுகின்ற, உள்ளத்தை - மனத்தை, நாம் பிடித்தும் என்று - நாம் பிடிப்போமென்று, ஓடுகின்றாரும் ஒத்தார் - ஓடுகின்றவரையும் ஒத்தார்கள்—எ-று. (ச)

1151. அரத்தமுண் டனையமேனி யகலிகை களித்ததாளும்
விரைக்கருங் குழலிக்காக வில்லிற நிமிர்ந்துவீங்கும்
வரைத்தடந் தோளுங்காண மறுகினின் வீழுமாதர்
இரைத்துவந் தமிழ்தின்மொய்க்கு மீயின மென்னலானார்.

(இ-ள்.) அரத்தம் உண்டனைய - செந்நிறத்தையுண்டாலொத்த, மேனி - மேனியையுடைய, அகலிகை - அகலியையானவள், களித்த - கண்டுகளித்த, தாளும் - சீர்பாதங்களையும், விரை-இயற்கை மணமமைந்த, கருங்குழலிக்காக-கரிய குழலையுடைய சீதாபிராட்டிக்காக, வில் இற - வில் முறிய, நிமிர்ந்து வீங்கும் - உயர்ந்து பூரித்த, வரை - மலையையொத்த, தடம் - பெரிய, தோளும் - புயங்களையும், காண - காணும்படி, மறுகினில் வீழும் - வீதியில் மொய்க்கின்ற, மாதர் - மாதர்கள், இரைத்துவந்து - சத்தித்துவந்து, அமிழ்தின் - அமிர்தத்தில், மொய்க்கும் - மொய்த்துக்கொள்ளுகின்ற, ஈ இனம் - ஈக்கூட்டம், என்னல் ஆனார் - என்னும்படியானார்கள்—எ-று. (ரு)

பெருமானுடைய வடிவழகையும், புயவலியையும் புகழ்ந்துவந்தவர்களாதலால், இரைத்துவந்து அமிழ்தின் மொய்க்கும் ஈ இனம், உவமையாயிற்று.

1152. வீதிவாய்ச் செல்கின்றான்போல் விழித்திமை யாதுநின்ற
மாதரார் கண்களூடே வாவுமான் றேரிற்செல்வான்
யாதினு முயர்ந்தோர் தன்னை யாவர்க்குங் கண்ணனென்றே
ஓதிய பெயர்க்குத்தானே யுறுபொரு ளுணர்த்திவிட்டான்.

(இ-ள்.) வீதிவாய்ச்செல்கின்றான்போல் - (ஸ்ரீராமபிரான்) வீதியினிடத்துச் செல்கின்றான்போன்று, விழித்து - கண்களை விழித்து, இமையாது நின்ற - இமையாமல் நின்ற, மாதரார் கண்களூடே - மாதர்களுடைய கண்களுக்குள்ளே, வாவும் - தாவுகின்ற, மான் - குதிரைகள் கட்டிய, தேரில் செல்வான் - தேரின்மேலேறிச் செல்பவனாய், யாதினும் - (வேதமுதலிய) எந்த நூலினும், உயர்ந்தோர் - உயர்ந்த புலமையுடையோர், யாவர்க்கும் - எல்லாருக்கும், கண்ணன் என்று - கண்ணனென்று, ஓதிய - (தன்னைக்) கூறிய, பெயர்க்கு - பெயருக்கு, தானே - தானே, உறு பொருள் - தகுதியாகிய பொருளாதலை, உணர்த்திவிட்டான் - தெரிவித்து விட்டான்—எ-று. (சா)

இமைக்கையில் அவ்வளவு காலம் பெருமான் வடிவழகு மறைபடுதலால், இமையாது நிற்பாராயினர்.

1153. எண்கடந் தலகிலாதின் றேகுறு மிவன்றேரென்று
பெண்கடந் தம்மினொந்து பேதுறு கின்றகாலை
மண்கடந் தமரர்வைகும் வான்கடந் தானைத்தான்றன்
கண்கட வாதுகாத்த காரிகை பெரியளேகாண்.

(இ-ள்) இவன்தேர் - இவனது தேரானது, எண்கடந்து - மனோவேகத்தைக் கடந்து, அலகு இலாது - (தன்வேகத்துக்கு) அளவில்லாமல், இன்று ஏகுறும் என்று - இப்போது செல்லாநின்றதென்று, பெண்கள் - மாதர்கள், தந்தம்மில்

நொந்து - தங்கள் தங்களுக்குள் நொந்து, பேதுறுகின்றகாலே - உன்மத்தராகுங் காலத்திலும், மண்கடந்து - மண்ணுலகத்தைத்தாவி, அமரர்வைகும் - தேவர்கள் தங்குகின்ற, வான் - விண்ணுலகத்தையும், கடந்தானை - தாவியளந்த பெரியோனை, தான் - தான், தன்கண் கடவாது காத்த - தன்கண்ணைக் கடவாமற் காத்துக் கொண்ட, காரிகையே - சீதாபிராட்டியே, பெரியள் - பெரியவள்—எ-று. (எ)

ஸ்ரீராமபிரான் தன் வடிவழகைக்கண்டு அணையப்பெறுமல் மங்கையர்கள் வருந்தாநிற்கவும், அவர்களைச் சிறிதும் நோக்காமல், பிராட்டி பக்கலிலேயே கருத்துடையனாய்ச் சென்றானென்பது கருத்து. சிறப்பும்மையும் இறந்தது தழீஇய வெச்சவும்மையும் விகாரத்தாற்றொக்கன.

1154. பயிரொன்று கலையுஞ்சங்கும் பழிப்பரு நலனும்பண்பும்
செயிரின்றி யலர்ந்தபொற்புஞ் சிந்தையு முணர்வுந்தேசும்
வயிரஞ்செய் பூணுநாணும் மடனுந்தன் னிறையுமற்றும்
உயிரொன்றுமொழியவெல்லாமுகுத்தொருதெரிவைநின்றாள்.

(இ-ள்.) ஒரு தெரிவை - (அவர்களுக்குள்) ஒரு மாதானவள், உயிர் ஒன்றும் ஒழிய - தன் உயிரொன்றுந்தவிர, பயிர் - பயிர்ப்பைப்போல, ஒன்று - பிரியாது பொருந்திய, கலையும் - ஆடையையும், சங்கும் - கைவளையையும், பழிப்பு அரு - பழித்தலில்லாத, நலனும் - பெண்ணலத்தையும், பண்பும் - இயற்கைக் குணத்தையும், செயிர் இன்றி - குற்றமில்லாமல், அலர்ந்த - மிக்க, பொற்பும் - அழகையும், சிந்தையும் - எண்ணத்தையும், உணர்வும் - அறிவையும், தேசும் - மாமை நிறத்தையும், வயிரம்செய்பூணும் - வயிரத்தாற் செய்த பூண்களையும், நாணும் - நாணத்தையும், மடனும் - மடப்பத்தையும், தன் நிறையும் - தன் நிறையையும், மற்றும் எல்லாம் - மற்றுமுள்ள எல்லாவற்றையும், உகுத்து நின்றாள் - சிந்தி நின்றாள்—எ-று.

பெருமானை யடையப்பெறாமையினால் கலை முதலியவைதன்னில் நீங்கினவை உணர்ந்திலாமையை உகுத்தென்றது இலக்கணை.

1155. குழையுறு மிளிருங்கெண்டை கொண்டலி னாலிசிந்தத்
தழையுறுக் கரும்பின்சாபத் தனங்கவேள் சரங்கள்பாய
இழையுறுப் புண்ணாறாத விளமுலை யொருத்திசோர்ந்து
மழையுறு மின்னினன்ன மருங்குல்போ னுடங்கிநின்றாள்.

(இ-ள்.) குழை உறு மிளிரும் - குழைமேற்படிந்து விளங்குகின்ற, கெண்டை - (கண்களாகிய) சேல்கள், கொண்டலின் - மேகம்போல: ஆலிசிந்த - நீர்த்துளிகளைச் சிந்தும்படி, தழை உறு - தழையில்லாத, கரும்பின் சாபத்து - கருப்புவில்லையுடைய அநங்கவேள் - மன்மதனுடைய சரங்கள் - பாணங்கள், பாய்தலால், இழை உறு - நூலிழை (இடையே) நுழையாத, புண் அறாத - புண்ணீங்காத, இளமுலை ஒருத்தி - இளமுலையாளொருத்தி, சோர்ந்து - தளர்ந்து, மழை உறு - மேகத்திலில்லாத, மின்னின் அன்ன - மின்னலையொத்த, மருங்குல்போல் - தன் னிடையைப்போல, நுடங்கி நின்றாள்—எ-று. (கூ)

இப்பேரழகனை அடையப்பெறாத தவமுடையேனென்று, தன்னைக் குறித்துக் கவன்றாளாதலின் சேல்கள் ஆலிசிந்துவன ஆயின.

1156. பஞ்சணி விரலினார்தம் படைநெடுங் கண்களெல்லாம்
செஞ்சவே யையன்மெய்யிற் கருமையைச் சேர்ந்தவோதாம்,

மஞ்சன மேனியான்றன் மணிநிற மாதரார்தம்
அஞ்சன நோக்கம்பார்க்க விருண்டதோ வறிகிலேமால்.

(இ-ள்) பஞ்சு அணி விரலினர் - பஞ்சுபோல் மெல்லிய அழகாகிய விரல் களையுடைய மாதர்களுடைய, படை - வேற்படைபோன்ற, நெடுங் கண்கள் எல்லாம் - நெடிய கண்களெல்லாம், ஐயன் மெய்யில் - ஸ்ரீராமபிரானது திருமேனியில் உள்ள, கருமையை - கரிய நிறத்தை, செஞ்செவேசேர்ந்தவோ - மிகுதியும் செவ்வையாகச் சேர்ந்தனவோ, (அன்றி) மஞ்சு அன்ன - மேகத்தையொத்த, மேனியான் - திருமேனியையுடைய ஸ்ரீராமபிரானது, மணிநிறம் - அழகிய நிறமானது, மாதரார் - மாதர்கள், தம் - தம்முடைய, அஞ்சனம் நோக்கம் - கருங் கண்களால், பார்க்க - பார்த்தலால், இருண்டதோ - கறுத்ததோ, அறிகிலேம் - யாம் அறியோம்—எ-று. (௧0)

தம் - சாரியை. தான் - அசை. அறிகிலேம் என்பதற்கு வினைமுதலாகிய யாமென்பது வருவித்துரைக்கப்பட்டது. இது ஐயவணி.

1157. மாந்தளிர் மேனியாளோர் வாணுதல் மதனனெங்கும்
பூந்துணர் வாளிமாரி பொழிகின்ற பூசனோக்கி
வேந்தர்கோ னாணைநோக்கான் வீரன்வில் லாண்மைபாரான்
ஏந்திழை யாரையெய்வான் யாவனோ வொருவனென்றாள்.

(இ-ள்.) மாந்தளிர் - மாந்தளிர்போன்ற, மேனியாள் - மேனியையுடையாளாகிய, ஓர் வாணுதல் - ஒரு மாது, எங்கும் - எல்லா மாதர்மீதும், மதனன் - மன்மதன், துணர் - கொத்தாகிய, பூவாளிமாரி - புஷ்பபாணவர்ஷத்தை, பொழிகின்ற- பொழியாநின்ற, பூசல்நோக்கி - போரைப்பார்த்து, வேந்தர்கோன் - சக்ரவர்த்தியினுடைய, ஆணைநோக்கான் - ஆணையை மதியாமலும், வீரன் - ரகுவீரனது, வில்லாண்மைபாரான் - வில்லாண்மையை நோக்காமலும், ஏந்திழையாரை - மாதரை, எய்வான் - எய்யாநின்றான், ஒருவன் - (இப்படிச் செய்கின்ற) ஒருத்தன், யாவனோ என்றாள் - எத்தன்மையனோ வென்றாள்—எ-று. (௧௧)

வேந்தர்கோனாணை நோக்கி அச்சமும், வீரன் வில்லாண்மைநோக்கி நாணமும் இன்றி, ஏந்திழையாரைஎய்வதனால் இரக்கமில்லானாகலின், யாவனோ என்றாள்.

1158. சொன்னலங் கடந்தகாமச் சுவையையோ ருருவமாக்கி
இன்னலந் தெரியவல்லா ரெழுதிய தென்னநின்றாள்
பொன்னையும் பொருவுநீராள் புனைந்தன வெல்லாம்போகத்
தன்னையுந் தாங்கலாதா டுகிலொன்றுந் தாங்கிநின்றாள்.

(இ-ள்.) சொல் - சொல்லுக்கும், நலம் - (எல்லா) இன்பங்களுக்கும், கடந்த - மேற்பட்ட, காமச்சுவையை - காமவின்பத்தை, ஓர் உருவமாக்கி - ஒருருவமாகச் செய்து, இன் நலம் - இன்ப நயங்களை, தெரியவல்லார் - அறியவல்லவர்கள், எழுதியது என்ன - எழுதியதுபோல, நின்றாள் - (அசைவற்று) நின்றாள், பொன்னையும் பொருவும் நீராள் - பொற்பாவையையும் ஒக்குந் தன்மையையுடையாள், (இவள்) புனைந்தன எல்லாம்போக - அணிந்தனவெல்லாம் நீங்க, தன்னையும் தாங்கலாதாள் - தன்னையுந் தாங்கும் வலியில்லாதவளாகி, துகில் ஒன்றும் தாங்கிநின்றாள் - துகிலொன்றையுமே தாங்கி நின்றனள்—எ-று. (௧௨)

அகத்து நிகழ்ந்த காமச்சுவை பிறர்க்குப் புலப்படுமாறு இற்றென வாயாற் கூறலரியதும் ஏனையுலகவின்பங்களிற் சிறந்ததுமாகலின், "சொன்னலங்கடந்த காமச்சுவை" யென்றார். பொன் ஆகுபெயர்.

1159. விற்றங்கு புருவநெற்றி வெயர்வரப் பசலைவிம்மச்
சுற்றெங்கு மெறிப்பவுள்ளஞ் சோரவோர் தோகைநின்றாள்
கொற்றஞ்செய் கொலைவேலென்னக் கூற்றெனக் கொடியகண்ணாள்
மற்றொன்றுங் காண்கிலாதாள் தமியனோ வள்ளலென்றாள்.

(இ-ள்.) ஓர் தோகை - ஒரு பெண்ணனவள், வில்தங்கு - வில்லினதழகுதங்கிய, புருவம் - புருவத்திலும், நெற்றி - நெற்றியிலும், வெயர்வர - வெயர்வை யொழுகவும், பசலை - பசலை நிறம், சுற்று எங்கும் விம்ம எறிப்ப - உடல்முழுதும் மிகும்படி எறிக்கவும், உள்ளம் சோர - மனந்தளரவும், நின்றாள் - நின்றனள், கொற்றம்செய் - வெற்றியைத்தருகின்ற, கொலை - கொலையமைந்த, வேல் என்ன - வேல் போலவும், கூற்று என்ன - யமன்போலவும், கொடிய - கொடுமையை யுடையனவாகிய, கண்ணாள் - கண்களையுடையளாகிய அவள், (தன்மனம் ஸ்ரீராமபிரான் பக்கல் சென்று பற்றியதாகையால்) மற்றொன்றும் காண்கிலாதாள் - வேறொரு பொருளையுங் காணாதவளாகி, வள்ளல் தமியனோ என்றாள் - வள்ளல் தனியனோ என்றாள்—எ-று. (கங)

தமியனோ என்னும் ஓகாரம், நீங்கினளோவென் பூங்கண்ணளே என்றாற் போல இரக்கத்தின் கண்வந்தது. யாதொரு முயற்சியுமின்றி வாளாவிருப்பவும், தன்-தண்ணருளாற்றானே வீதிவாய் வந்து, தன் வடிவழகின் பெருக்கை யாவருங் கண்ணாரக்கண்டு பருகவரையாது உதவுதலால் வள்ளலென்றும், இவ்வாறு வரையாதுதவுகின்ற பெருங்குணத்தினன் யாதொரு துணையுமின்றிச் செல்கின்றானென்னுமிரக்கத்தால், தமியனோ வென்றுங் கூறினாள். பசலையென்பது விரும்பிய காதலனை யணையப்பெறாத துன்பத்தினா லுளதாவதோர் நிறவேற்றுமை.

1160. மைக்கருங் கூந்தற்செவ்வாய் வாணுத லொருத்தியுள்ளம்
நெக்கன ளுருகுகின்றா ணெஞ்சிடை வஞ்சன்வந்து
புக்கனன் போகாவண்ணங் கண்ணெனும் புலங்கொள்வாயும்
சிக்கென வடைத்தேன்றோழி சேருது மமளியென்றாள்.

(இ-ள்.) மைக்கருங்கூந்தல் - மையையொத்த கருமையாகிய கூந்தலையும், செவ்வாய் - செவ்வாயையும், வாள் நுதல் - ஒளியமைந்த நெற்றியையுமுடைய, ஒருத்தி - ஒரு பெண்ணனவள், உள்ளம் நெக்கனள் உருகுகின்றாள் - மனந்தளர்ந் துருகா நின்றவளாய், தோழி - தோழியே, வஞ்சன் - வஞ்சகன், நெஞ்சிடை வந்து புக்கனன் - என்மனத்தில் வந்து புகுந்தனன், போகாவண்ணம் - இனிப்போகாவகை, கண் எனும் - கண்களென்கின்ற, புலம் கொள் வாயும் - புலனாகிய வழியையும், சிக்கென அடைத்தேன் - விரைவாயடைத்தேன், அமளி சேருதும் என்றாள் - சயனத்தைச் சேர்வோமென்றனள்—எ-று. (கச)

தானே யிங்குவந்து, நம்மெல்லோருக்கும் வேட்கையைப் பெருக்கி, அது பயன்படுமாறு தழுவலும், உள்ளத்தே வரல் மீண்டு புறத்தே சேரல் என்னு மிவற்றுளொருநிலையினிற்றலு மில்லானென்னுங் கருத்தால் 'வஞ்சன்' என்றும், தன்னைப்போலவே தோழியும் வேட்கையளாகலானும், தான் கண்ணெனும் புலங்

கொள்வாயைச் சிக்கெனவடைத்தலின் அவளை யுடன்கொண்டு போகவேண்டு மாகலானும், அவளைத் தன்னோடிளப்படுத்திச் சேருது மென்றுங் கூறினாள்.

1161. தாக்கணங் கனையமேனி தைத்தவேள் சரங்கள்பாரா
வீக்கிய கலனுந்தூசும் வேறுவே றுனதோரா
ஆக்கிய பாவையன்ன ளொருத்தியாண் டமலன்மேனி
நோக்குறு வாரையெல்லா மெரியெழ நோக்குகின்றாள்.

(இ-ள்.) தாக்கணங்கு அனைய - திருமகள் மேனியையொத்த, மேனி - தன் மேனியில், தைத்த - பாய்ந்த, வேள் சரங்கள் - மன்மதபாணங்களை, பாரா - மதியாமலும், வீக்கிய - கட்டிய, கலனும் - அணிகளும், தூசும் - ஆடையும், வேறு வேறு ஆனது - வெவ்வேறானதை, ஓரா - அறியாமலும், ஆக்கிய - உண்டாக்கிய, பாவை அன்னாள் ஒருத்தி - பாவை போல்வா ளொருத்தி, ஆண்டு - அவ்விடத்தில், அமலன்மேனி - ஸ்ரீராமபிரானது திருமேனியை, நோக்குறுவாரை யெல்லாம் - நோக்குவா ரெல்லாரையும், எரி எழ நோக்குகின்றாள் - தீயெழ நோக்காநின்றாள்.

யாவரும் ஒருங்கே நோக்கலிற் றிருமேனிக்குக் கண்ணெச்சில்படுமென்னுங் கருத்தாலும், தன்னை அமலனுக்குரியளாகக் கருதி, ஏனையோர் நோக்கப்பொருது அவ்வுரிமை நமக்கின்றென்னுங் கருத்தாலும் நோக்குறுவாரையெல்லாம் எரியெழ நோக்குவாளாயினாள்.

1162. களிப்பன மதர்ப்பநீண்டு கதுப்பினை யளப்பகள்ளம்
ஒளிப்பன வெளிப்பட்டோடப் பார்ப்பன சிவப்புள்ளூற
வெளுப்பன கறுப்பவான வேற்கணா ளொருத்தியுள்ளம்
குளிர்ப்பொடு காணவந்தாள் வெதுப்பொடு கோயில்புக்காள்.

(இ-ள்.) களிப்பன - களிப்பன, மதர்ப்ப - செருக்குவன, நீண்டுகதுப்பினை அளப்ப - நீண்டு கன்னத்தையளப்பன, கள்ளம் ஒளிப்பன - கள்ளம் மறைதற் கிடமாவன, வெளிப்பட்டு ஓடப்பார்ப்பன - புறப்பட்டு உருவப்பார்ப்பன, சிவப்பு உள் ஊற - சிவப்பு உள்ளே பொருந்த, வெளுப்பன - வெளுப்பன, கறுப்ப - கறுப்பன, ஆன - ஆகிய, வேல்கண்ணாள் ஒருத்தி-வேல்போலுங் கண்களையுடையாளொருத்தி, உள்ளம் குளிர்ப்பொடு - உள்ளக்களிப்புடன், காணவந்தாள் - காணும்படி வந்தாள், (கண்டபின்) வெதுப்பொடு - அடையப் பெறாமையினால் காமவெப்பத்துடன், கோயில் புக்காள் - மனைக்குச் சென்றாள்—எ-று. (கக)

1163. கருங்குழற் பாரம்வார்கொள் கனமுலை கலைசூழல்குல்
நெருங்கின மறைப்பவாண்டோர் நீக்கிடம் பெறாதுவிம்மும்
பெருந்தடங் கண்ணிகாணும் பேரெழி லாசைதூண்ட
மருங்குலின் வெளிகளூடே வள்ளலை நோக்குகின்றாள்.

(இ-ள்.) (அங்கு நெருங்கிய மங்கையர்களுடைய) கருங்குழல்பாரம்- கருமையாகிய கூந்தற்சுமையும், வார்கொள் - கச்சணிந்த, கனமுலை - பருத்த ஸ்தநங்களும், கலைசூழ் அல்குல் - கலை சூழ்ந்த அல்குற்பாரமும், நெருங்கின - நெருங்கினவாகி, மறைப்ப - (இறைவன்திருமேனியை) மறைத்தலால், ஆண்டு - அவ்விடத்து, ஓர் நீக்கிடம்பெறாது - சிறிது நீக்கிடம் பெறாமல், விம்மும் - புலம்பாநின்ற, பெருந்தடம் கண்ணி - மிகப்பெரிய கண்ணையுடையாள், காணும் - காணவிரும்புகிற, பேர் எழில் ஆசை தூண்ட - கட்டழகினாசையானது, (தன்னை) ஏவுதலால், (அம்மாத

ரது) மருங்குலின் வெளிகளூடே - இடைகளின் வெளிகளிலே, வள்ளலை - ஸ்ரீராம பிரானை, நோக்குகின்றாள் - பாரா நின்றாள்—எ-று. (கஎ)

1164. வரிந்தவா ளனங்கன்வாளி மனங்கழன் றனவுமாதர்
எரிந்தபூ ணினமுங்கொங்கை வெயர்த்தபோ திழிந்தசாந்தும்
சரிந்தமே கலையுமுத்துஞ் சங்கமுந் தாழ்ந்தகூந்தல்
விரிந்தபூந் தொடையுமன்றி வெள்ளிடை யரிதவ்வீதி.

(இ-ள்.) வரிந்த - (உடைமேல்) கட்டிய, வாள் - வாளையுடைய, அனங்கன் - மன்மதனுடைய, வாளி - பாணங்களில், மாதர்மனம் கழன்றனவும் - மாதர்களுடைய நெஞ்சில் தைத்துக் கழன்றவையும், எரிந்தபூண் இனமும் - எரிந்த ஆபரண சமூகமும், கொங்கை வெயர்த்தபோது - கொங்கைகள் வெயர்த்த காலத்தில், இழிந்த சாந்தும் - (அவ்வேர்வை நீராலழிந்து) ஒழுகின சந்தநமும், சரிந்த மேகலையும் - சரிந்த இடையணிகளும், முத்தும் -முத்து வடங்களும், சங்கமும் - சங்கவளையலும், தாழ்ந்த கூந்தல் விரிந்த - நீண்ட கூந்தல் அவிழ்ந்து விரிதலால் சிந்திய பூந்தொடையும் - பூமாலைகளும், அன்றி - அல்லாமல், அவ்வீதி - அவ்வீதியில், வெள் இடை அரிது - வெற்றிடம் கிடைப்பதரிது—எ-று. (கஅ)

1165. தோள்கண்டார் தோளேகண்டார் தொடுகழற் கமலமன்ன
தாள்கண்டார் தாளேகண்டார் தடக்கைகண் டாருமஃதே
வாள்கொண்ட கண்ணார்யாரே வடிவினை முடியக்கண்டார்
ஊழ்கொண்ட சமயத்தன்னா னுருவுகண் டாரையொத்தார்.

(இ-ள்.) தோள் கண்டார் - (ஸ்ரீராமபிரானது) தோளழகைக் கண்டவர்கள், தோளே கண்டார் - (அந்தத்) தோளழகொன்றையுமே கண்டார்கள், தொடுகழல் - வீரக்கழலையணிந்த, கமலம் அன்ன - தாமரை மலரையொத்த, தாள்கண்டார் - சீர்பாதங்களினழகைக் கண்டவர்கள், தாளே கண்டார் - சீர்பாதங்களி னழகொன்றையுமே கண்டார்கள், தடவு - பெருமையாகிய, கை - திருக்கரங்களினழகை, கண்டாரும் - கண்டவர்களும், அஃதே - அது ஒன்றையுமே கண்டார்கள், வாள் கொண்ட கண்ணார் - வாளினழகைக்கொண்ட கண்களையுடைய மாதர்களுள், வடிவினை - (அவனது) திருமேனியினழகை, முடியக்கண்டார் - முழுதும் கண்டவர்கள், யார் - யாவர், (ஒருவருமில்லை) (ஆதலால் இவர்கள்) ஊழ்கொண்ட - (ஒன்றற்கொன்று) பகைகொண்ட, சமயத்து - சமயநூல்களைக்கொண்டு, அன்னான் - அவ்விறைவனது, உருவு - யதார்த்தஸ்வரூபத்தை, கண்டாரை - கண்ட சமயிகளை, ஒத்தார் - ஒத்தார்கள்—எ-று. (கக)

எல்லாச் சமயக் கடவுளரும் இவ்விறைவனுடைய அங்கங்களென்பவாகலின், அவ்வச்சமயிகள் தத்தங் கடவுளருடைய நிலையை முற்று முணராவாறுபோல, இம் மாதர்களுக்கும் தாந்தாங் கண்ட இறைவன் றொவ்வோ ருறுப்பையு முற்றுங் கண்டிலரென்பது கருத்து. ஒருறுப்பைக் காணலுற்றார் அதனையொழித் தேனைய வுறுப்பைக் கண்டிலரெனப் பொருடரலின் ஏ பிரிநிலை.

வேறு.

1166. தையல் சிற்றிடை யாளொரு தாழ்குழல்
உய்ய மற்றவ ளுள்ளத் தொடுங்கினான்
வைய முற்றும் வயிற்றி னடக்கிய
அய்ய னிற்பெரி யாரினி யாவரே.

(இ-ள்.) வையம் முற்றும் - அண்டங்கள் யாவற்றையும், வயிற்றின் அடக்கிய - (தன்) திருவயிற்றிலடக்கிய, ஐயனின் - ஸ்ரீராமபிரானினும், பெரியார் - பெரியவர், இனியார் உளர் - இனியாவருளர், (இவ்விறைவன்) சிறு இடையாள் - சிற்றிடையை யுடையாளும், தாழ்குழல் - நீண்ட கூந்தலையுடையாளுமாகிய, ஒரு தையல் - ஒரு பெண்ணானவள், உய்ய - (வருந்தாமல்) உய்யும்படி, அவள் உள்ளத்து ஒடுங்கினான் - அவள் மனத்திலடங்கினான்—எ-று. (௨0)

1167. அலம்பு பாரக் குழலியொ ராயிழை
சிலம்பு மேகலை யும்மொலி செய்திட
நலம்பெய் கொம்பி னடந்துவந் தெய்தினாள்
புலம்பு சேடியர் கைமிசைப் போயினாள்.

(இ-ள்.) அலம்பு - பூந்தேனால் தழுவப்பட்ட, பாரக்குழலி - அளகபாரத்தை யுடையாளாகிய, ஓர் ஆயிழை - ஒரு பெண்ணானவள் (ஸ்ரீராமனைக் காணவேண்டுமென்று) சிலம்பும் - காற்சிலம்பும், மேகலையும் - மேகலாபரணமும், ஒலிசெய்திட - ஒலிசெய்யும்படி, நலம்பெய் கொம்பின் - அழகு மிக்க பூங்கொம்புபோல், நடந்துவந்து எய்தினாள் - நடந்துவந்து சேர்ந்தாள், (தன் வருத்தத்தைக் குறித்து) புலம்பு - இரங்குகின்ற, சேடியர் - சேடியர்களுடைய, கைமிசை - கைமீது, போயினாள் - சென்றாள்—எ-று. (௨௧)

புலம்பு சேடியரென்பதற்கு இந்த ஸ்ரீராமபிரானைப் பிரியுமாறு தமக்கு வாய்த்ததென்று இரங்குகின்ற சேடியரெனினுமொக்கும்.

1168. அருப்பு மென்முலை யாளங்கொ ராயிழை
இருப்பு நெஞ்சினை யேனுமொ ரேழைக்காப்
பொருப்பு வில்லைப் பொடிசெய்த புண்ணியா
கருப்பு வில்லிறுத் தாட்கொண்டு காவென்றாள்.

(இ-ள்.) அருப்பு - தாமரையரும்பையொத்த, மெல்முலையாள் - மெல்லிய ஸ்தநங்களையுடையாளாகிய, ஓர் ஆயிழை - ஒரு பெண்ணானவள், (ஸ்ரீராமபிரானை நோக்கி எம்மிடத்தருளில்லாமையால்) இருப்பு நெஞ்சினையேனும் - இரும்பையொத்த கடினமானமனமுடையையாயினும், ஓர் ஏழைக்கா - ஒரு பெண்ணுக்காக, பொருப்புவில்லை - மலையையொத்த வில்லை, பொடி செய்த - பொடியாக்கின, புண்ணியா - புண்ணியனே, கருப்புவில் - (எமக்காக) கரும்பு வில்லை, இறுத்து - முறித்து, ஆட்கொண்டு - அடிமைகொண்டு, கா என்றாள் - எம்மைக் காவாயென்றாள்—எ-று.

1169. மைத வழ்ந்த கருங்கணோர் வாணுதல்
செய்த வன்றனித் தேர்மிசைச் சேறல்விட்
டெய்த வந்தெதிர் நின்றமை தானிது
கைத வங்கொல் கனவுகொ லாமென்றாள்.

(இ-ள்.) மைதவழ்ந்த - மைபொருந்திய, கருங்கண் - கருங்கண்களையுடைய, ஓர்வாள்நுதல் - ஒருபெண்ணானவள், செய்தவன் - செய்துமுற்றிய தவத்தையுடையான், தனி - ஒப்பற்ற, தேர்மிசை சேறல் விட்டு - தேரின்மீதேறிப் போவதைவிட்டு, எய்தவந்து - நெருங்கவந்து, எதிர்நின்றமை - என்னெதிரே நின்றமை

யாகிய, இது - இவ்விஷயம், கை தவம் கொல் - கபடமோ, கனவுகொல்-கனவோ, என்றாள் - என்று சொன்னாள்—எ-று. (உங)

ஆம் - அசை. இந்த ஸ்ரீராமபிரானுடைய வடிவழகு கண்டோர்க்கு இறும்பூ தெய்துவித்தலால், இது பெருந்தவம்புரிந்து பெற்றானென்னுங் கருத்தால் செய் தவன் என்றாள்.

1170. மாதொ ருத்தி மனத்தினை யல்லதோர்
தூது பெற்றில ளின்னுயிர் சோர்கின்றாள்
போத ரிக்கட் பொலன்குழைப் பூண்முலைச்
சீதை யெத்தவஞ் செய்தன ளோவென்றாள்.

(இ-ள்.) மாது ஒருத்தி - பெண்ணொருத்தி, மனத்தினையல்லது - தன்மனத் தையல்லாமல், ஓர் தூதுபெற்றிலள் - ஒரு தூதுபெறாதவளாய், இன் உயிர்சோர் கின்றாள் - இனிய உயிர் சோராநின்று, போது - தாமரை மலர்போன்ற, அரி-செவ் வரிபரந்த, கண் - கண்களையும், பொலன் குழை - பொற்குழையையும், பூண்முலை- பூணணிந்த முலைகளையுமுடைய, சீதை - சீதாபிராட்டியானவள், எத் தவம் செய்த னளோ - எந்தத் தவத்தைச் செய்தாளோ, என்றாள் - என்று சொன்னாள்—எ-று.

இவனுடைய வடிவழகைக் கண்ணாரக்கண்டு, இனிய நயமொழிகளைச் செவி யாரக்கேட்டுத், திருமேனியை மெய்யாரத்தழுவும் பெரும்பேற்றினளென்பாள்; போதரிக்கட் பொலன்குழைப் பூண்முலைச்சீதையெனவும், தூதுமுதலிய முயற்சி யின்றி எளிதினிவனைப்பெறல் உயர்தவத்தா லாமென்பாள்; எத்தவமெனவும், அதுவும் ஒருமையினன்றி எழுமையினும் புரிந்ததாமென்பாள்; இறந்த காலத்தாற் செய்தன ளெனவும், இவள் பூவினொதுங்கிப் பொலியு மெல்லியல், அவ்வரியதவத் தைப்புரிய வருந்தினளென்னு மிரக்கத்தால், செய்தனளோ வெனவுங் கூறினாள். எனவே அவள் புரிந்ததவமின்னதென வெனக்குத் தெரியின் யானும் புரிந்திவனைப் புல்லா தொழியே னென்பது குறிப்பெச்சம்.

1171. பழுதிலா வொரு பாவையன் னாள்பதைத்
தழுது வெய்துயிர்த் தன்புடைத் தோழியைத்
தொழுது சோர்ந்தயர் வாளிந்தத் தோன்றலை
எழுத லாங்கொலிம் மன்மதனா லென்றாள்.

(இ-ள்.) பழுது இல்லா - குற்றமில்லாத, ஒரு பாவை அன்னாள் - ஒரு பாவை யையொப்பாள், பதைத்து அழுது - துடித்தழுது, வெய்து உயிர்த்து - வெம்மை யாக மூச்செறிந்து, அன்பு உடை - (தன்னிடத்து) அன்பையுடைய, தோழியை - பாங்கியை, தொழுது - வணங்கி, சோர்ந்து அயர்வாள் - சோர்ந்து தளர்பவளாய், இந்தத் தோன்றலை- இவ்வரசிளங்குமரனை, இம் மன்மதனால் - நம்மேல் அம்பையெய் கின்ற மன்மதனால், எழுதல் ஆம்கொல் என்றாள் - எழுதலாகுமோ என்றாள்—எ-று.

எழுதருந் தகையதோர் தேர் இப்பேரழகனைக் கொண்டு விரைதலிற் பதைத் தும், இனிக் காணல் என்று கூடுங் கொலோவென அழுதும், இவனது சுந்தரத் தோள்களைத் தழுவலாம் பெரும்பேறுடையாள், சீதையேயன்றி யானல்லே னாயி னேனெனக்கவன்று வெய்துயிர்த்தும், தான் வேண்டிய வேண்டியாங்கு இயற்ற வல்ல அன்புடைத் தோழியை நோக்கி, இவனுடைய சுந்தரத் தோள்களை யான் தழுவுமாறு ஏதேனுமோர் விரகுசெய்ய வல்லையோவெனத் தொழுதும், அது அவள் தன்னா லாகாமையுணர்ந்து சோர்ந்தும், இவனதுருவத்தை யோர் படத்தில் தீட்டி

யேனும் கண்ணாரக்கண்டு வேட்கை தீர்வேமெனக் கருதி, அது முடிந்த லருமை நோக்கி யயர்ந்தும், தோழியை நோக்கி எழுதுத லரிய திருமேனியை யுடையா னென்பாள்; இந்தத் தோன்றலெனவும், இவன் முன்னர் நிற்க நாணி யொளித்து நின்று தம் போலியர் மாட்டுத் தன்னுண்மைகாட்டு மெல்லியனென்பாள் இம்மன் மதனு லெனவுங் கூறினாள்.

1172. வண்ண வாயொரு வாணுதல் மானிடற்
கெண்ணுங் காலிவ் விலக்கண மெய்திட
ஒண்ணு மோவி துணர்த்துகின் றேனிவன்
கண்ண னேயிது கண்டிரும் பின்னென்றாள்.

(இ-ள்.) வண்ணவாய் - அழகிய வாயையுடைய, ஒரு வாணுதல் - ஒரு பெண்ணனவள், (சிலரை நோக்கி) எண்ணுங்கால் - ஆராயுமிடத்து, இவ்விலக்கணம் - இவ்வடிவிலக்கணம், மானிடற்கு - மானுடனுக்கு, எய்திட ஒண்ணுமோ - பெறக் கூடுமோ, (கூடாது) இது - இவ்விலக்கணவமைதியை, உணர்த்துகின்றேன் - (உமக்குத்) தெரிவிக்கின்றேன், இவன் - இவ்விலக்கணவமைதியையுடையான், கண்ணனே - இறைவனே, இது - இவ்விடயத்தை, பின் - பிறகு, கண்டிரும் என்றாள் - பார்த்திரும் என்றாள்—எ-று. (உசு)

1173. கனக நூபுரங் கைவளை யோடுக
மனநெ கும்படி வாடியொர் வாணுதல்
அனக னிந்நக ரெய்திய தாதியிற்
சனகர் செய்த தவப்பய னாலென்றாள்.

(இ-ள்.) ஓர் வாணுதல் - ஒரு பெண்ணனவள், கனகம் நூபுரம் - பொன்னாற் செய்யப்பட்ட காற்சிலம்பு, கைவளையோடு உக - கைவளையோடு கழன்று சிந்தவும், மனம் நெகும்படி - மனம் நெகிழும்படி, வாடி - வாட்டமடைந்து, அனகன் - பரிசுத்தன், இந்நகர் எய்தியது - இந்த நகரத்தில் வந்தது, ஆதியில் - தொன்று தொட்டு, சனகர் செய்த - சனகமரபினர் செய்துவந்த, தவப்பயனால் - தவப்பயனாலாகும், என்றாள் - என்று சொல்லினாள்—எ-று. (உஎ)

இவனது வருகை இந்த நகரமாதர் யார்க்கும் பயன்படாது சீதை யொருத்திக்கே பயன்படல் கருதி அவள் புரிந்த தவமொன்றுமே யமையாது, அவளது தாதை மூதாதை முதலியோர் புரிந்த தவத்தாலாகுமென்பாள் "சனகர் செய்த தவப்பய" னென்றாள். தவம்புரிதற் குரியார் பெரும்பாலும் ஆண்மக்களே யாதலின் அச்சிறப்புக்கருதித் தந்தை மரபொன்றுமே கூறினார்.

1174. நனி வருந்தி நலங்குடி போயிடப்
பனி வருங்கணொர் பாசிழை யல்குலாள்
முனி வருங்குல மன்னரு மொய்ப்பறத்
தனி வருங்கொல் கனவின் றலையென்றாள்.

(இ-ள்) பனிவரும்கண் - நீர்த்துளிக்கின்ற கண்களையுடைய, ஓர்பாசு இழை அல்குலாள் - ஒரு பசும்பொன்னணி யணிந்த அல்குலையுடையாளொருத்தி, நலம் குடிபோயிட - தன்னழகு நீங்கும்படி, நனிவருந்தி - மிகவருந்தி, (இவ்வரசிளங் குமரன்) முனிவரும் - முனிவர்களும், குலமன்னரும் - சிறந்த அரசர்களும்,

மொய்ப்பு அற - நெருங்குதலில்லாமல், கனவின் தலை - கனவின்கண், தனிவரும் கொல் என்றாள் - தனித்துவருவானோ என்றாள்—எ-று. (உ அ)

அவ்வாறு வரின் யானே சென்று அணைந்துகொள்வேனென்பது குறிப்பெச்சம். இழை முதற்காரணவாகுபெயர்.

1175. புனங்கொள் கார்மயில் போலியோர் பொற்கொடி
மனங்கொள் காதன் மறைத்தலை யெண்ணினாள்
அனங்க வேள தறிந்தன னற்றந்தான்
மனங்கள் போல முகமு மறைக்குமே.

(இ-ள்.) புனம்கொள் - புனத்தைத் (தங்குமிடமாகக்) கொண்ட, கார்மயில் போலி - கார்காலத்து மயிலை யொப்பாளாகிய, ஓர் பொற்கொடி - பொற்கொடி போல்வாளொருத்தி, மனம்கொள் - தன் மனத்தில் நிறைந்த, காதல் - ஆசையை, மறைத்தலை எண்ணினாள் - (புறத்துத் தோன்றாமல்) மறைத்தற் கெண்ணினாள், அற்றம் - ஒளிக்கக்கருதியதை, மனங்கள் போல - மனங்களைப்போல, முகமும் மறைக்குமே - முகமும் ஒளிக்குமோ, (ஒளிக்காது ஆதலால்) அனங்கவேள் - மன்மதனானவன், அது அறிந்தனன் - அதை அறிந்தான்—எ-று. (உக)

மனங்கள் சாதிப்பன்மை.

1176. இணை நெடுங்கணோ ரேந்திழை யேந்துபூ
அணை யணைந்திடி யுண்டவ ராவெனப்
புணர் நலங்கிளர் கொங்கை புழுங்கிட
உணர் வழுங்க வுயிர்த்தன ளாவியே.

(இ-ள்.) இணை - தம்முளொத்த, நெடுங் கண் - நெடியகண்களையுடைய, ஓர் ஏந்திழை - ஒருமாதானவள், ஏந்து - உயர்ந்த, பூ அணை அணைந்து - பூவணையைச் சேர்ந்து, இடியுண்ட அரா என - இடியோசையைக்கேட்ட பாம்புபோல, புணர் - நெருங்கிய, நலம்கிளர் - அழகுவிளங்குகின்ற, கொங்கை புழுங்கிட - கொங்கைகள் புழுங்கவும், உணர்வு அழுங்க - அறிவுகெடவும், ஆவி உயிர்த்தனள் - (வருந்திப்) பெருமூச்செறிந்தாள்—எ-று. (ஙம)

1177 ஆம்ப லொத்தமு தூறுசெவ் வாய்ச்சியர்
தாம்ப தைத்துயி ருட்டடு மாறுவார்
தேம்பு சிற்றிடைச் சீதையைப் போற்சிறி
தேம்பல் பெற்றில ரெங்ஙன முய்வரே.

(இ-ள்.) ஆம்பல் ஒத்து - செவ்வாம்பலையொத்து, அமுது ஊறு - (சொல்லாகிய) அமுதமூறுகின்ற, செவ்வாச்சியர் - செவ்வாயையுடையமாதர்கள், பதைத்து - துடித்து, உயிர் உள் தடுமாறுவார் - உயிரினுள்ளே தடுமாற்றமடைவார்கள், தேம்பு - (கொங்கைப்பொறையால்) வருந்துகின்ற, சிறு இடை - சிறிய இடையையுடைய, சீதையைப்போல் - சீதாபிராட்டியைப்போல், சிறிது ஏம்பல் - சிறிதுகளிப்பையும், பெற்றிலர்-அடைந்திலர், எங்ஙனம் உய்வர் - எப்படிப்பிழைப்பர்—எ-று.

வில்லைமுறித்ததால் இந்நாயகனையே திருமணம் புணர்வோம் என்றும் சீதை ஏம்பலைப்பெற்றாள். இம்மாதர்களுக்கு அஃதிலாமையால் எங்கண முய்வரென்றார்.

1178. வேர்த்து மேனி தளர்ந்துயிர் விம்மலோ
டார்த்தி யுற்ற மடந்தைய ரூரையும்
தீர்த்த னித்தனை சிந்தையிற் செங்கணிற்
பார்த்தி லனுட் பரிவில னேயென்றாள்.

(இ-ள்.) மேனிவேர்த்து - சரீரம்வேர்த்து, உயிர்தளர்ந்து - உயிர் சோர்ந்து, விம்மலோடு - வருத்தத்துடன், ஆர்த்தி உற்ற - மிக்க கவலையை யடைந்த, மடந்தையர் ஆரையும் - மாதர்களெல்லாரையும், தீர்த்தன் - பரிசுத்தனாகிய இவன், இத்தனை - சிறிதும், சிந்தையின் செங்கணின் - மனத்தினாலும் செந்தாமரை மலர் போன்ற கண்களாலும், பார்த்திலன் - நோக்கிலன், (ஆதலால்) உள் - உள்ளத்தில், பரிவு இலனே - அன்பிலனே, என்றாள் - என்று சொல்லினாள்—எ-று. (௩௨)

இத்தனையென்பது இலக்கணையானே சிறிதுமெனப் பொருடந்தது. முற்றும்மை விகாரத்தாற்றொக்கது, "நாணித்தனையு மிலாதாய் நப்பின்னைகாணின்" என்னும் விட்டுசித்தர் அருளிச்செயலும் இத்தனையு மென்பதற்குச் சிறிதுமெனப் பொருள்படல் காண்க. அன்றியும் அதன் வ்யாக்யாநத்தானுந் தெற்றென வுணர்க.

1179. வையம் பற்றிய மங்கைய ரெண்ணிலர்
ஐயன் பொற்புக் களவிலை யாதலால்
எய்யும் பொற்சிலை மாரனு மென்செய்வான்
கையம் பற்றுடை வாளினுங் கைவைத்தான்.

(இ-ள்.) வையம்பற்றிய - தேரைப்பற்றிச் செல்கின்ற, மங்கையர் எண்ணிலர் - மாதர்கள் அளவற்றவர்கள், ஐயன் பொற்புக்கு - இறைவனது அழகுக்கு, அளவு இல்லை ஆதலால் - அளவில்லை யாகையால், எய்யும் - (அம்மாதர்கள்மேல் அம்புகளை) எய்யாநின்ற, பொன் சிலை - அழகிய வில்லையுடைய, மாரனும் - மன்மதனும், என்செய்வான் - என்னசெய்வான், கை அம்பு அற்று - தன்கையம்புகளற்றுப்போயினமையால், உடைவாளினும் கைவைத்தான் - உடைவாளின்கண்ணுங் கைவைத்தான்—எ-று. (௩௩)

தேனிழுக்குதலால் உடைவாள் காலதாழைமலரில் கைவைத்து அப்புஷ்ப பராகத்தைத் திமிர்தற்பொருட்டெனவும் கூறுக.

1180. நான வார்குழ னாரிய ரோடலால்
வேனில் வேளொடு மேலுறை வார்களோ
டான பூச லறிந்தில மம்புபோய்
வான நாடியர் மார்பினுந் தைத்தவே.

(இ-ள்.) நானம் மணமமைந்த, வார் குழல் - நீண்ட கூந்தலையுடைய, நாரியரோடு அல்லால் - இம்மாதர்களிடத்து (நடந்தபோரை) யல்லாமல், வேனில் வேளொடு - வசந்தகால மன்மதனுக்கு, மேல் உறைவார்களோடு - சுவர்க்கத்தில் வசிக்கின்ற தெய்வப்பெண்கள்பால், ஆனபூசல் - நடந்தபோரை, அறிந்திலம் - அறிந்தோமில்லை, அம்புபோய் - (அவனுடைய) அம்புகள் சென்று, வானநாடியர் - அவ்வானநாட்டுப் பெண்களுடைய, மார்பினும் - கொங்கைகளினும், தைத்த - தைத்தன—எ-று,

வானநாடியர் என்பது சுட்டுப்பொருளதாய் நின்ற பெயர். ஸ்ரீராமபிரானுடைய வடிவழகைக்கண்டு மேலுறைவார்களும் நிறையழிந்தனரென்பது கருத்து.

1181. மருண் மயங்கு மடந்தையர் மாட்டொரு
பொரு ணயந்திலன் போகின்ற தேயிவன்
கருணை யென்பது கண்டறி யான்பெரும்
பரிண தன்கொல் படுகொலை யானென்றாள்.

(இ-ள்.) மருள்மயங்கும் மடந்தையர்மாட்டு - மருளினால் மயங்குகின்ற மங்கையரிடத்தில், ஒருபொருள் நயந்திலன் - ஒருபொருளையும் விரும்பாதவனாய், போகின்றதே - சும்மாபோவதே (இவன்செயல்,) (ஆதலால்) இவன் - இவன், கருணையென்பது - கருணை இன்னதென்பதை, கண்டறியான் - கண்டறிந்திலன், (மாதரிடத்து விருப்பமின்மையால்) பெரும் - பெருமையாகிய, பரிணதன்கொல் - ஞானவானோ, (இச்சீதாபிராட்டியை மணக்கச் செல்வதனால் அவனுமல்லன்) படுகொலையான் என்றாள் - மிக்க கொலைத் தொழிலையுடையானென்றாள்—எ-று.

தம்மைக் கண்ணோக்கலுமின்றிச் சேறலி னொருபொரு ணயந்திலனென்றாள். ஒருபொருள் என்பதில் இழிவு சிறப்போடு முற்றுப்பொருள்பட நின்ற வும்மை விகாரத்தாற்றொக்கது. இவனது செயல் என்பது அவாய் நிலையான் வந்தது. ஏனைய இசையெச்சம்.

1182. தொய்யில் வெய்ய முலைத்துடி போலிடை
நையும் நொய்ய மருங்குலோர் நங்கைதான்
கையும் மெய்யு மறிந்திலள் கண்டவர்
உய்யு முய்யு மெனத்தளர்ந் தோய்வுற்றாள்.

(இ-ள்.) தொய்யில் - தொய்யிலெழுதிய, வெய்ய - வெப்பத்தையுடைய, முலை - கொங்கைகளால், துடிபோல் - உடுக்கைபோன்ற, இடை - இடையானது, நையும் - நையாநின்ற, நொய்ய மருங்குல் - நுட்பமான மருங்குலையுடைய, ஓர் நங்கை - ஒரு பெண்ணானவள், கையும் மெய்யும் அறிந்திலள் - கையுமெய்யு மறியாதவளாய், கண்டவர் - பார்த்த மற்றையோர், உய்யும் உய்யும் என - பிழைப்பாள் பிழைப்பாள் என்னும்படி, தளர்ந்து - உடல் தளர்ந்து, ஓய்வு உற்றாள் - ஓய்தலையடைந்தாள்—எ-று. (ங௬)

1183. பூக வூசல் புரிபவர் போலொரு
பாகின் மென்மொழி தன்மலர்ப் பாதங்கள்
சேகு சேர்தரச் சேவகன் றேரின்பின்
ஏகு மீளுமி தென்செய்த வாறரோ.

(இ-ள்.) ஒருபாகின் மென்மொழி - சர்க்கரைப்பாகின் மதுரம்போலு மதுரமாகிய சொற்களையுடையாளொருத்தி, பூகம் - கமுகமரத்திற்பூட்டிய, ஊசல் புரிபவர்போல் - ஊசலாட்டத்தை விரும்பு மகளிர்போல், தன் - தன்னுடைய, மலர்ப் பாதங்கள் - மலரினது மென்மைபோன்ற மென்மையுடைய பாதங்கள், சேகு சேர்தர - காய்ப்பேறும்படி, சேவகன் தேரின்பின் - வீரனது திருத்தேரின்பின், ஏகும் - (பலகால்) செல்வாள், மீளும் - மீள்வாள், இது என்செய்த ஆறு - இது யாதுசெய்தவிதம்—எ-று.

தொழிற்றன்மை யுணர்த்து நெறியால், இறந்தகாலம்; ஏகும் மீளும் என எதிர்காலமாயிற்று. நமக்குக் கிடைக்கப்பெறுவானென்னும் எண்ணத்தால் ஏகுமென்றும், கிடைக்கப்பெறோம் என்னும் எண்ணத்தால் ரகுவீரன் தேரின்பின் செல்லாமல் மீளுமென்றும் கூறினார்.

1184. பெருத்த காதலிற் பேதுறு மாதரின்
ஒருத்தி மற்றங் கொருத்தியை நோக்கியென்
கருத்து மவ்வழி கண்டதுண் டோவென் றாள்
அருத்தி யுற்றபின் னாணுமுண் டாகுமோ.

(இ-ள்.) அருத்தி உற்றபின் - ஆசைமிகுந்தபிறகு, நாணம் உண்டாகுமோ - நாணமுண்டாயிருக்குமோ, (இராது ஆதலால்) பெருத்த காதலின் - மிக்க வேட்கையால், பேது உறும் - மருட்சியடைகின்ற, மாதரின்-மாதர்களுக்குள், ஒருத்தி - ஒருமாதானவள், அங்கு ஒருத்தியைநோக்கி - அவ்விடத்துள்ள மற்றொருத்தியைப் பார்த்து, என்கருத்தும் - என்மனத்தையும், அவ்வழி - அந்த ஸ்ரீராமபிரானிடத்தில், கண்டது உண்டோ வென்றாள் - பார்த்ததுண்டோ என்றாள்—எ-று. (கூஅ)

பரமாணு உருவமாதலின், கட்புலனாகாதென உணராது வினவுதலால் என் கருத்தும் அவ்வழிக்கண்டதுண்டோ என்று நாணம்விட்டு வினவினாள்.

1185. நங்கை யங்கொரு பொன்னயந் தாருய்யத்
தங்க ளின்னுயி ருங்கொடுத் தார்தமர்
எங்க ளின்னுயி ரெங்களுக் கீகிலா
வெங்க ணெங்கண் விளைந்த திவற்கென்றாள்.

(இ-ள்.) அங்கு - அவ்விடத்து, ஒருபொன் - ஒப்பற்ற பொன்போல்வாளாகிய, நங்கை - ஒருமாது, தமர் - (இவன்) சுற்றத்தார், நயந்தார் - (தம்மை) விரும்பியடைந்தோர், உய்ய - இடரினின்று நீங்கும்படி, தங்கள் - தம்முடைய, இன் உயிரும் கொடுத்தார் - இனியவுயிரையுங் கொடுத்தார்கள், (அவ்வாறிருக்க) இவற்கு - (அவர்கள் வழிமுறையில்வந்த) இவனுக்கு, எங்கள் இன் உயிர் - எங்களுடைய இனியவுயிரை, எங்களுக்கு ஈகிலா - எங்களுக்குக்கொடாத, வெங்கண் - நிர்த்தாட்சண்யம், எங்கண் - எவ்விடத்தில், விளைந்தது - உண்டாயிற்று, என்றாள் - என்றுசொன்னாள்—எ-று. (கூகூ)

தங்களின்னுயிருங்கொடுத்தார் சிபி முதலாயினார்.

1186. நாமத் தாலழி வாளொரு நன்னுதல்
சேமத் தார்வி லிறுத்தது தேருங்கால்
தூமத் தார்குழற் றூமொழித் தோகைபால்
காமத் தாலன்று கல்வியி னாலென்றாள்.

(இ-ள்.) (யான் இவனைவிரும்பாதிருக்கத் தானென்னை விரும்பிலனெனப் புறத்தேசொல்ல) நாமத்தால் - அச்சத்தால், அழிவாள் - (தன்னுள்) அழிவாளாகிய, நன்னுதல் - ஒருமாதானவள், (சீதாபிராட்டியின் கன்னித்தன்மைக்கு) சேமம் - காவலாகிய, தார் - (வெற்றி) மாலைபூண்ட, வில் - வில்லை, இறுத்தது - இவன்முறித்ததை, தேருங்கால் - ஆராயுமிடத்து, தூமம் - அகிற் புகையும், தார் - மாலையும் அமைந்த, குழல் - கூந்தலையும், தூமொழி - தூயமொழியையுமுடைய, தோகைபால் - ஜாநகியினிடத்தில், காமத்தால் அன்று - வைத்த விருப்பத்தாலல்ல, கல்வியினால் என்றாள் - (தநுர்வேதத்தில் தனக்குண்டாயிருக்கிற) புலமையாற்றான் என்றுசொன்னாள்—எ-று. (௪0)

காமத்தினாலானால் வலியவந்து நிற்கின்ற எம்மில் ஒருத்தியை ஆயினும் பாரா திரான் என்பது கருத்து.

1187. ஆர முந்துகி லுங்கல னியாவையும்
சோர வின்னுயிர் சோருமோர் சோர்குழல்
கோர வில்லிமுன் னேயெனைக் கொல்கின்ற
மார வேளின் வலியவர் யாரென்றாள்.

(இ-ள்.) ஆரமும் - முத்துவடமும், துகிலும் - சேலையும், கலன்யாவையும்-மற்றைய அணிகள்யாவும், சோர - சோர்ந்து விழும்படி, இன் உயிர் சோரும் - இனிய உயிர் சோர்கின்ற, ஓர்சோர்குழல் - ஒரு பெண்ணானவள், கோரம் - கண்டோர்க்கச் சத்தை விளைக்கின்ற, வில்லி முன்னே - (திரியம்பகமென்னும்) வில்லைவளைத்த இவனுக்கெதிரில், என்னைக்கொல்கின்ற - என்னைக் கொல்லாநின்ற, மாரவேளின்-மன்மதனின், வலியவர் - வலியுடையார், யார் என்றாள் - யாவரென்றாள்—எ-று.

1188. மாதரின்னண மெய்த்திட வள்ளல்போய்க்
கோதில் சிந்தை வசிட்டனுங் கோசிக
வேத பாரனு மேவிய மண்டபம்
ஏதின் மன்னர் குழாத்தொடு மெய்தினான்.

(இ-ள்.) மாதர் - பெண்கள், இன்னணம் - இவ்விதத் துன்பத்தை, எய்திட - அடையாநிற்க, வள்ளல் - ஸ்ரீராமபிரான், போய் - சென்று, கோது இல் சிந்தை வசிட்டனும் - குற்றமில்லாத மனத்தையுடைய வசிட்டமுனிவனும், கோசிகன் - கோசிக னென்கிற, வேத பாரனும் - அந்தணனும், மேவிய - வீற்றிருக்கிற, மண்டபம் - மண்டபத்தில், ஏது இல் - குற்றமில்லாத, மன்னர் குழாத்தொடும் - மன்னர் கூட்டத்தோடும், எய்தினான் - சேர்ந்தான்—எ-று. (சஉ)

வேதமுடிவைக் கண்டவ னென்னனும் பொருளமைந்த வேத பாரகனென்னு மாரிய மொழி வேதபாரனெனத் தொகுத்தது. ஏதம் இல் என்பது, ஏதில் என அம்முக்குறைந்து நின்றது.

1189. திருவி னாயகன் மின்றிரிந் தாலெனத்
துருவின் மாமணி யாரந் துயல்வரப்
பருவ மேகம் படிந்தது போற்படிந்
திருவர் தாளு முறையி னிறைஞ்சினான்.

(இ-ள்.) திருவின் நாயகன் - திருமகள் கொழுநனாகிய ஸ்ரீராமபிரான், துருவு இல் - தொளையில்லாத, மாமணி ஆரம் - சிறந்த மணிவடங்கள், மின்திரிந்தால் என - மின்னல்கள் உலாவினாற்போல, துயல்வர - (மார்பில்) அசைந்துலாவ, பருவம் - காற்பருவத்திலுண்டாகிய, மேகம் - மேகமானது, படிந்ததுபோல் - (நிலத்திற்) படிந்தாற்போல, படிந்து - பொருந்தி, இருவர் தாளும் - இரண்டு முனிவர்களுடைய பாதங்களையும், முறையின் இறைஞ்சினான் - கிரமமாக வணங்கினான். (சங)

1190. இறைஞ்ச வன்னவ ரேத்தின ரேவவோர்
நிறைஞ்ச பூந்தவி சேறி நிழற்கள்போல்
புறஞ்செய் தம்பி யருட்பொலிந் தானரோ
அறஞ்செய் காவற் கயோத்தியிற் றோன்றினான்.

(இ-ள்.) அறம்செய்காவற்கு - அறத்தை அழியாமற் காத்தற் பொருட்டு, அயோத்தியில் தோன்றினான் - திருவயோத்தியில் திருவவதரித்த ஸ்ரீராமபிரான், இறைஞ்ச - வணங்காநிற்க, அன்னவர் - அம்முனிவ ரிருவரும், ஏத்தினர் -

புகழ்ந்து, ஏவ - (இருவென்று) நியமிக்க, ஓர் - ஒரு, நிறைஞ்ச பூந்தவிசு ஏறி-அழகு நிறைந்த பொலிவாகிய ஆசநத்திலேறி, நிழல்கள்போல் - தன் சாயைகள்போல, புறம் செய் - (பிரியாது) புறங்காவல் செய்யாநின்ற, தம்பியர் உள் - தம்பிமார்க ளுக்கிடையில், பொலிந்தான் - விளங்கினான்—எ-று. (சுசு)

ஐந்து அஞ்சு என்றாயதுபோல, நிறைந்த நிறைஞ்ச வென்றாயது. இதுபோலி. அறஞ்செய்காவற்கு அயோத்தியில் தோன்றினவனாதலால் அம்முனிவர்களைப் பணிந்தானென்றார்.

1191. ஆன மாமணி மண்டப மன்னது
தானை மன்னன் றமரொடுஞ் சார்ந்தனன்
மீனெலாந் தன பின்வர வெண்மதி
வானிலா வுற வந்தது மானவே.

(இ-ள்.) ஆன - பேரின்பத்ததாகிய, மாமணி மண்டபம் அன்னது - திருமா மணி மண்டபத்தையொத்த மண்டபத்தில், தானைமன்னன் - சேனைகளையுடைய சக்ரவர்த்தி, தமர் ஒடும் - உறவினரோடும், தனபின் - தனக்குப்பின்னே, மீன் எல் லாம்வர - விண் மீன்களெல்லாம்வர, வெண்மதி - வெண்மையாகிய சந்திரன், வான் நிலாவுற - வான் விளங்கும்படி, வந்ததுமான - வந்ததை யொத்திருக்க, சார்ந்தனன் - சேர்ந்தான்—எ-று. (சுரு)

தன என்பது குறிப்புப் பெயரெச்சம்.

1192. வந்து மாதவர் பாதம் வணங்கிமேற்
சிந்து தேமலர் மாரி சிறந்திட
அந்த ணாளர்க ளாசியொ டாசனம்
இந்திரன் முகம் நாணுற வேறினான்.

(இ-ள்.) வந்து - (அவ்வாறு) வந்து, மாதவர்பாதம் வணங்கி - மாதவர்களு டைய பாதங்களை வணங்கி, மேல் - தன்மீது, சிந்து - தூவிய, தேம் - தேன் பொருந்திய, மலர்மாரி - பூமழை, சிறந்திட - மிகாநிற்க, அந்தணாளர்கள் - அந்தணர் கள், ஆசியொடு - ஆசீர்வாதங்களோடு, இந்திரன் முகம் நாண் உற - இந்திரன் முகம் வளையும்படி, ஆசனம் ஏறினான் - ஆசனத்திலேறி வீற்றிருந்தான்—எ-று. (சுசு)

1193. கங்கர் கொங்கர் கலிங்கர் குலிங்கர்கள்
சிங்க ளாதிபர் சேரலர் தென்னவர்
அங்கர் சீனர் குலிந்தர வந்திகர்
வங்கர் மாளவர் சோளர் மராடரே.

(இ-ள்.) கங்கர் - கங்கரும், கொங்கர் - கொங்கரும், கலிங்கர் - கலிங்கரும், குலிங்கர்கள் - குலிங்கரும், சிங்களாதிபர் - சிங்களதேசத்தரசரும், சேரலர் - சேர ரும், தென்னவர் - பாண்டியரும், அங்கர் - அங்கரும், சீனர் - சீனரும், குலிந்தர் - குலிந்தரும், அவந்திகர் - அவந்திகரும், வங்கர் - வங்கரும், மாளவர் - மாளவரும், சோளர் - சோழரும், மராடர் மராடரும்—எ-று. (சுஎ)

1194. மான மாகதர் மச்சர் மிலேச்சர்கள்
ஏனை வீர விலாடர் விராடர்கள்
சீனர் தெங்கணர் செஞ்சகர் சோமகர்
சோன கேசர் துருக்கர் குருக்களே,

(இ-ள்.) மானம் - பெருமையமைந்த, மாகதர் - மாகதரும், மச்சர் - மச்சரும், மிலேச்சர்கள் - மிலேச்சர்களும், ஏனைவீரவிலாடர் - மற்றையராகிய வீரத்தையுடைய விலாடரும், விராடர்கள் - விராடரும், சீனர் - மாசீனரும், தெங்கணர் - தெங்கணரும், செஞ்சகர் - செஞ்சகரும், சோமகர் - சோமகரும், சோனகேசர் - சோனகதேசத்தரசர்களும், துருக்கர் - துருக்கரும், குருக்கள் - குருநாட்டாரும்.

சீனரென் றீண்டுங்கூறியது, சீனம் மாசீனம் என்று அது இருவகையதாதலால்.

1195. ஏதி யாதவ ரேழ்திறற் கொங்கணர்
சேதி ராசர் தெலுங்கர் கருநடர்
ஆதி வானங் கவித்த வவனிவாழ்
சோதி நீண்முடி மன்னருந் துன்னினர்.

(இ-ள்.) ஏதி - ஆயுதங்களிற் சிறந்த, யாதவர் - யாதவரும், ஏழ்திறல் கொங்கணர் - எழுவகைப்பட்ட கொங்கணரும், சேதிராசர் - சேதிநாட்டரசரும், தெலுங்கர் - தெலுங்கரும், கருநடர் - கருநடரும், ஆதி - (ஐம்பூதங்களுள்) முதன்மையதாகிய, வானம் கவித்த - ஆகாயத்தில் மூடப்பட்ட, அவனிவாழ் - பூமியில் வாழ்கின்ற, சோதிநீள் - ஒளிமிகுந்த, முடி - முடியையுடைய, மன்னரும் - மற்றையரசர்களும், துன்னினர் - (வந்து) நெருங்கினார்கள்—எ-று. (சகூ)

அரசர்களைத் தனித்தனிக் கூறியவழி, ஒருமையாற் கூறாது பன்மையாற் கூறியது அவ்வவ்வரசனுந் தன்றன் உறவினரோடு வந்தமை யுணர்த்தற்கென்க. இங்கு வந்து சாராதவரச னொருவனுமில்லை யென்பார் "வானங்கவித்த வவனிவாழ்" மன்னர் என்றார்.

1196. தீங் கரும்பினுந் தித்திக்கு மின்சொலார்
தாங்கு சாமரை மாடு தயங்குவ
ஓங்கி யோங்கி வளர்ந்துயர் கீர்த்தியின்
பூங் கொழுந்து பொலிவன போன்றவே.

(இ-ள்.) தீங்கரும்பினும் - மதுரமாகிய கரும்பினும், தித்திக்கும் - தித்தியாநின்ற, இன்சொலார் - இனியமொழிகளையுடைய கணிகையர், தாங்கு - கையிற்றாங்கிய, சாமரை - சாமரங்கள், மாடு - (சக்ரவர்த்தியின்) இருபுறத்தும், தயங்குவ - விளங்குவன, ஓங்கி ஓங்கி வளர்ந்து - மிகவு மோங்கி வளர்ந்து, உயர் - (ஏனையோரது கீர்த்தியினு) முயர்ந்த, கீர்த்தியின் - கீர்த்தியினது, பூங்கொழுந்து - பொலிவாகிய கொழுந்துகள், பொலிவன போன்ற - விளங்குவனபோன்றன—எ-று. (ருo)

1197. சுழலும் வண்டு மிஞிறுஞ் சுரும்புஞ்சூழ்ந்
துழலும் வாச மதுமல ரோதியர்
குழலி னோடுறக் கூறுபல் லாண்டொலி
மழலை யாழிசை யோடு மலிந்தவே.

(இ-ள்.) சுழலும் வண்டும் - சுழல்வண்டுகளும், மிஞிறும் - மிஞிறு என்னும் வண்டுகளும், சுரும்பும் - சுரும்பென்னும் வண்டுகளும், சூழ்ந்து உழலும் - சூழ்ந்து திரிகின்ற, வாசம் - மணமமைந்த, மது - தேனையுடைய, மலர் - மலர்களையணிந்த, ஓதியர் - கூந்தலையுடைய மாதர்கள், குழலினோடு உற - குழலோசையோடு பொருந்தியிருக்க, கூறு-கூறுகின்ற, பல்லாண்டு ஒலி-பல்லாண்டோசைகள், மழலை (அவர்களுடைய) மழலைச்சொல்லையொத்த, யாழ் இசையோடு - யாழிசைகளோடு, மலிந்த - மிக்கன—எ-று. (ருக)

1198. வெங்க ணானையி னான்றனி வெண்குடை
திங்கள் தங்கள் குலக்கொடி சீதையாம்
மங்கை மாமணங் காணிய வந்தருள்
பொங்கி யோங்கித் தழைப்பது போன்றதே.

(இ-ள்.) வெங்கண் - வெங்கண்மையையுடைய, ஆனையினான் - யானைப் படையையுடைய சக்ரவர்த்தியினது, தனி - ஒப்பற்ற, வெண்குடை - வெண்கொற்றக் குடை (விளங்குதல்), திங்கள் - சந்திரன், தங்கள் குலக்கொடி சீதை ஆம் - தமது குலத்திற்றோன்றிய கொடிபோல்வாளாகிய சீதையென்கிற, மங்கை - பெண்ணினது, மா - பெருமை பொருந்திய, மணம் - கலியாணத்தை, காணிய - காணும் பொருட்டு, வந்து - வந்து, அருள்பொங்கி ஓங்கி - அருள்மிகுந்து ஓங்கி, தழைப்பது போன்றது - பூரிப்பதை யொத்திருந்தது—எ-று. (௫௨)

தங்களையென்றது திங்களை யுள்ளிட்டாரை. பொங்கி என்னும் வினைவினை ஓங்கியென்னும் முதல்வினையோடு முடிந்தது. உயிர்க்குணம் பலவற்றுள்ளு மருளொன்றாகலின் அது வினையாயிற்று.

1199. ஊடுபேர்விட மின்றியொன் றாம்வகை
நீடு மாகடற் றானைநெருங்கலால்
ஆடன் மாமத வானைச் சனகர்கோன்
நாடெலா மொரு நன்னக ராயதே.

(இ-ள்.) ஊடுபேர்வு இடம் இன்றி - இருந்த நிலையினின்று தம்முட் செல்லுமிடமில்லாமல், ஒன்று ஆம்வகை - ஒன்றாம்படி, நீடும் - நீண்ட, மா-பெரிய, கடல் - கடல்போன்ற, தானை - சேனைகள், நெருங்கலால் - நெருங்குதலால், ஆடல்மா - வெற்றியையுடைய குதிரைச் சேனையையும், மதயானை - மதயானைச் சேனையையுமுடைய, சனகர்கோன் - சனகமஹாராஜனது, நாடு எல்லாம் - தேசமெல்லாம், ஒரு - ஒப்பற்ற, நல்நகர் ஆயது - சிறந்த நகரமாயிற்று—எ-று. (௫௩)

இன்றியென்னும் வினையெச்சக் குறிப்பு, நெருங்கல் என்னும் தொழிற்பெயரின் முதனிலையோடு முடிந்தது.

1200. ஒழிந்த வென்னினி யொண்ணுதற் றாதைதன்
பொழிந்த காத றொடரப் பொருளெலாம்
அழிந்து வந்துகொண் டாடலி னன்புதான்
இழிந்து ளார்க்கு மிராமற்கு மொத்ததே.

(இ-ள்.) ஒண்ணுதல் - ஜானகிக்கு, தாதை - பிதாவாகிய ஜநகமஹாராஜன், தன - தனது, பொழிந்தகாதல் தொடர - மிக்ககாதலானது தொடர, பொருள் எல்லாம் - தன் பொருள்களெல்லாம், அழிந்து- அழிய, உவந்துகொண்டாடலின் - உவந்து பெருமைபாராட்டுதலால், அன்பு - காதலானது, இழிந்துளார்க்கும் - இழிந்துளோருக்கும், இராமற்கும் - ஸ்ரீராமபிரானுக்கும், ஒத்தது - ஒத்திருந்தது, இனி ஒழிந்த என்-இதுவேயன்றிச் சொல்லாதொழிந்தன யாவை—எ-று. (௫௪)

௨0-வது உலாவியற்படலம் முற்றும்.

# உக - வது கோலங்காண்படலம்.

கோலங்காண்டலைக் குறித்துக் கூறும் படலம்.

———(:*:)———

வேறு.

1201. தேவியர் மருங்குசூழ விந்திர னிருக்கைசேர்ந்த
ஓவிய முயிர்பெற்றென்ன வுவந்தர சிருந்தகாலை
தாவில்வெண் கவிகைச்செங்கோற் சனகனை யினிதுநோக்கி
மாவிய னோக்கினாளைக் கொணர்கென வசிட்டன்சொன்னான்.

(இ-ள்.) இந்திரன் இருக்கைசேர்ந்த - இந்திராசனத்தைச் சேர்ந்த, ஓவியம் - பிரதிமைகள், உயிர்பெற்றென்ன - உயிர்பெற்றாற்போல, தேவியர் - தன் தேவியர் மூவரும், மருங்குசூழ - பக்கத்திற் சூழ்ந்திருக்கும்படி, உவந்து அரசு இருந்த காலை - (சக்ரவர்த்தி)உவந்து அரசிருந்த காலத்தில், தா இல் - கெடுதலில்லாத, வெண்கவிகை - வெண்கொற்றக் குடையையும், செங்கோல் - செங்கோலையுமுடைய, சனகனை - ஜனகமகாராஜனை, இனிதுநோக்கி - இனிதாகப்பார்த்து, மா இயல் நோக்கினாளை - திருமகளது அழகு முதலிய இயற்கையமைந்த சீதையை, கொணர்க என - கொணர்கவென்று, வசிட்டன் சொன்னான் - வசிட்டன் சொல்லினான்—எ-று. (க)

மாவிய னோக்கினாள் என்பதற்கு, மாவடுவகிர்போலுங் கண்களையுடையாளெனினு மொக்கும். வசிட்டன் தேசிகனாதலால் அவன் முன்னர்ச் சக்ரவர்த்தி ஓவிய முயிர்பெற்றென்ன விருந்தானென்றுணர்க. இந்திர னிருக்கை யென்பதற்கு அரசன் திருக்கையென்பது பொருள். இவ்வாறே வடநூலாரும் இந்த்ர ஸ்த்தாநமென்ப.

1202. உரைசெயத் தொழுதகைய னுவந்தவுள் ளத்தன்பெண்ணுக்
கரைசியைத் தருதிரீண்டென் றாயிழை யவரையேவக்
கரைசெயற் கரியகாதல் கடாவிடக் கடிதுசென்றார்
பிரைசமொத் தினியசொல்லார் பேதைதா தியரிற்சொன்னார்.

(இ-ள்.) உரைசெய - (இவ்வாறு வசிட்டமுனிவன்) சொல்ல, தொழுதகையன் - வணங்கினகையனும், உவந்த உள்ளத்தன் - களித்த மனத்தை யுடையவனுமாகிய ஜனகமஹாராஜன், ஈண்டு - இவ்விடத்தில், பெண்ணுக்கு அரைசியை - பெண்ணினரசாகிய ஜாநகியை, தருதிர் என்று - அழைத்துவாருமினென்று, ஆயிழையவரை ஏவ - மாதர்களையேவ, கரைசெயற்கு அரிய - அளவு செய்தற்கரிய, காதல் - திருமணத்தைக் குறித்த, அன்பானது கடாவிட - நடத்தலால், கடிது சென்றார் - விரைந்து சென்று, பிரைசம் ஒத்து - தேனையொத்து, இனிய சொல்லார் - இனிமையாயுள்ள சொல்லையுடைய அம்மாதர்கள், பேதை - சீதாபிராட்டியின், தாதியரின் - தாதியரிடத்து, சொன்னார்-இந்தச் செய்தியைச் சொன்னார்கள்.

1203. அமிழ்திமைத் துணைகள்கண் ணுக்கணியெனவமைக்குமாபோல்
உமிழ்சுடர்க் கலன்கணங்கை யுருவினை மறைப்பதோரார்
அமிழ்தினைச் சுவைசெய்தென்ன வழகினுக் கழகுசெய்தார்
இமிழ்திரைப் பரவைஞால மேழைமை யுடைத்துமாதோ.

(இ-ள்.) அமிழ் - இமைக்கின்ற, இமைத்துணைகள் - இரண்டிமைகள், கண்ணுக்கு - கண்களுக்கு, அணி என - அழகாக, அமைக்கு மாபோல் - அமைக்கப்பட்டிருத்தல்போல, உமிழ் சுடர் - வீசுகின்ற ஒளியையுடைய, கலன்கள் - ஆபரணங்கள், நங்கை - சீதாபிராட்டியின், உருவினை - உருவத்தை, மறைப்பது - மறைப்பதை, ஓரார் - அறியாமல், அமிழ்தினை - அமிர்தத்துக்கு, சுவைசெய்தென்ன - சுவையூட்டினாற்போல, அழகினுக்கு அழகு செய்தார் - அழகுக் கழகுசெய்தார்கள், (ஆதலால்) இமிழ் - ஒலிக்கின்ற, திரை - அலைகளையுடைய, பரவை - கடல் சூழ்ந்த, ஞாலம் - உலகமானது, ஏழைமை உடைத்து - அறியாமையையுடையது ()

1204. கண்ணன்றன் னிறந்தன்னுள்ளக் கருத்தினை நிறைத்துமீதிட்
டுண்ணின்றுங் கொடிகளோடி யுலகெங்கும் பரந்தவென்ன
வண்ணஞ்செய் கூந்தற்பார வலயத்து மழையிற்றோன்றும்
விண்ணின்ற மதியின்மென்பூஞ் சிகழிகைக் கோதைவேய்ந்தார்.

(இ-ள்.) கண்ணன் நிறம் - ஸ்ரீராமபிரானது நிறமானது, தன் உள்ளக்கருத்தினை நிறைத்து - தனதுள்ளக்கருத்தைநிறைத்து, மீதிட்டு - மேலிட்டு, உள்நின்றும் - அம்மனத்தினின்றும், கொடிகள் ஓடி - கொடிகளாயோடி, உலகு எங்கும் - உலகெல்லாம், பரந்த என்ன - படர்ந்தனவென்று சொல்லும், வண்ணம் செய் - அழகைச் செய்கின்ற, கூந்தல்பாரம் - அளகபாரமாகிய, வலயத்து - வடத்தில், மழையில்தோன்றும் - மேகத்திற் றோன்றுகின்ற, விள் நின்ற - கிரணங்கள் விரிய நின்ற, மதியின் - சந்திரனைப்போலத்தோன்ற, மெல் - மெல்லிய, பூ - மலர்களாற் றொடுத்த, சிகழிகை - சிகழிகையென்னுமாலையை, வேய்ந்தார் - (சிலசேடியர்) தரித்தார்கள்—எ-று.

விள்ள நின்ற என்பது, விள்நின்ற எனத்தொகுத்தது. கருத்து - தொழிலாகுபெயர்.

1205. விதியது வகையால்வான மீனினம் பிறையைவந்து
கதுவுறு கின்றதென்னக் கொழுந்தொளி கஞலத்தூக்கி
மதியினைத் தந்தமேக மருங்குநா வளைப்பதென்னப்
பொதியிரு ளளகபந்தி பூட்டிய பூட்டுமிட்டார்.

(இ-ள்.) விதியதுவகையால் - (கூடுதற்கேதுவாகிய) ஊழ்வகையால், வானம் மீன் இனம் - விண்மீன் கூட்டங்கள், வந்து - வந்து, பிறையை கதுவுறுகின்றது என்ன - சந்திரனைச்சூழ்வதுபோல, கொழுந்து - சுட்டியென்னுமணியை, ஒளி கஞல - ஒளிநிரம்ப, தூக்கி - தொங்கக்கட்டி, மதியினை - பூர்ணசந்திரனை, தந்த மேகம் - புறத்தேசெல்லவிட்டமேகமான, மருங்கு - அதின்பக்கத்தில், நாவளைப்பது என்ன - நாவைநீட்டிவளைப்பதுபோல, பொதி யிருள் - மூடிருளையொத்த அளகபந்தி - அளகபந்தியில், பூட்டிய - பூட்டுதற்குரிய, பூட்டும் இட்டார் - பூட்டென்னு மணியையும் பூட்டினார்கள்—எ-று. (௬)

கொழுந்தென்றது, பாளைக்காய்; அது ஈண்டு உவமவாகுபெயராய்ச் சுட்டியை யுணர்த்திற்று.

1206. வெள்ளத்தின் சடிலத்தான்றன் வெஞ்சிலை யிறுத்தவீரன்
தள்ளத்தன் னுவிசோரத் தனிப்பெரும் பெண்மைதன்னை
அள்ளிக்கொண் டகன்றகாளை யல்லன்கொ லாங்கொலென்பாள்
உள்ளத்தி னூசலாடுங் குழைகிழ லுமிழவிட்டார்.

(இ-ள்.) வெள்ளத்தின் சடிலத்தான் - கங்கைச்சடையனது, வெம் சிலைஇறுத்த வீரன் - வெவ்விய வில்லை முறித்தவீரன், தன் ஆவி தள்ள - தன்னுயிர் தள்ளாடவும், சோர - (உடல்) வாடவும், தனி - ஒப்பற்ற, பெரும் பெண்மை - பெரிய பெண்டன்மையை, அள்ளிக்கொண்டு - மொண்டு கொண்டு, அகன்ற - போயின, காளை அல்லன் கொல் - இடபத்தையொத்த நடையையுடைய குமரனல்லனோ, ஆம் கொல் - ஆமோ, என்பாள் - என்றுநினைப்பவளது, உள்ளத்தின் - மனத்தைப் போல, ஊசலாடும் - ஊசலாடுகின்ற, குழை - குழைகளை, நிழல் உமிழ - ஒளிவீசும்படி, இட்டார் - காதில் தூக்கினார்கள்—எ-று. (சு)

1207. கோனணி சங்கம்வந்து குடியிருந் தனையகண்டத்
தீனமில் கலன்கள்தம்பி னியைவன வணிதல்செய்தார்
மானணி நோக்கினார்தம் மங்கலக் கழுத்துக் கெல்லாம்
தானணி யானபோது தனக்கணி யாதுமாதோ.

(இ-ள்.) மான் - மானினது நோக்கம்போன்ற, அணி - அழகிய, நோக்கினார் - நோக்கத்தையுடைய மாதர்க ளென்னப்பட்டவர்களுடைய, மங்கலக் கழுத்துக்கெல்லாம் - மங்கலமாகிய கழுத்துகளுக்கெல்லாம், தான் அணி ஆனபோது - தான் அணியானபோழ்தில், தனக்கு அணியாது - தனக்கு அணி எது (இல்லை) (மூலமேமைமையுடையதாதலால்) (வண்ணப்பெண்கள் இதையுணராமல்) கோன் - இறைவன், அணி - (கையில்) தாங்கிய, சங்கம் - (பாஞ்சஜந்யமென்னும்) சங்கானது, குடியிருந்தனைய - குடியிருந்தாற்போன்ற, கண்டத்து - கழுத்தில், ஈனம் இல் - (தொழிலில்) குறைவில்லாத, கலன்கள் தம்பில் - அணிகளில், இயைவன - (அந்தக்கழுத்துக்குப்) பொருத்தமானவற்றை, அணிதல்செய்தார் - தரித்தார்கள். ()

இப்பிராட்டியாரை முன்னிட்டுக் கொண்டு, இறைவனுடைய அநந்த கல்யாண குண மாக்கடலாடுமியல்பினராகிய ஆசிரியர், உமையாளொக்கு மங்கையர் முதலியோருடைய கண்டங்கட்குத் திருவென்னு மணியாய் நின்றவளாகலின், இப்பிராட்டியின் கண்டமோ ஒப்பிகந்ததென்பார். அங்ஙனங்கூறின், பாஞ்சஜந்யத்தின்மேலும் குற்றஞ் சாருமென்றஞ்சி, அக்குற்றஞ் சாராவகை, "கோனணி சங்கம்வந்து குடியிருந்தனையகண்டம்" என்றார். தம் - சாரியை.

1208. கோணிலா வானமீன்க ளியைவன கோத்ததென்கோ
வாணிலா வயங்குசெவ்வி வளர்பிறை வகிர்ந்ததென்கோ
நாணிலா நகையினின்ற நளிர்நிலாத் தவழ்ந்ததென்கோ
பூணிலா முலைமேலார முத்தையான் புகல்வதென்னோ.

(இ-ள்.) கோண் இல்லா - (தம்முள்) மாறுபாடில்லாதனவும், இயைவன - ஒன்றையொன்றொப்பனவுமாகிய, வானமீன்கள் - விண்மீன்களை, கோத்தது என்கோ - கோத்தவடமென்பேனோ, வாள் நிலா - ஒளிபொருந்திய நிலவானது, வயங்கு - விளங்கிய, செவ்விவளர் - அழகுவளராநின்ற, பிறை - பிறையை, வகிர்ந்தது என்கோ - வகிர்ந்த பிளவென்பேனோ, நாணில் ஆம் - நாணங்காரணமாகத்தோன்றுகின்ற, நகையின்நின்ற - நகையையுடைய பல்லினின்ற, நளிர்நிலா - தண்ணிய நிலவானது, தவழ்ந்தது என்கோ - தவழ்ந்த தோற்றமென்பேனோ, பூண் நிலாம் - ஆபரணமமைந்த, முலைமேல் - கொங்கைமேலணிந்த, ஆரம் முத்தை - முத்துவடத்தை, யான்புகல்வது என் - (உவமித்து) யான் சொல்லுதற்குரிய பொருள்யாது.

கோணிலா என்பதில், இல்லாவென்பதனிடை யொற்றுச்தொகுத்தது. கோணிலா இயைவன என்றது திரட்சியாகி ஒன்றையொன்றொத்த உருவினவும் நிலவெறிப்பனவு மாயினவற்றை. நாண் என்றது, பிராட்டிதா னிதுகாறுங் கன்னிமாடத்துறைந்து, தாதியர், செவிலியர், தங்வையரென்பபடு மாதர்களோடு பயின்றவளாதலின் இதுபோது சக்ரவர்த்தி முதலிய அரசர்களும், வசிட்டர் முதலிய முனிவர்களும், தன்னை மணம்புரியுமாறு வெஞ்சிலை யிறுத்தவீரனும் ஆகிய ஆண்மக்கள் நிறைந்த அவைக் களத்துச் சேறல்வேண்டுதலி னுளதாவதோர் நாணத்தை, அதுகாரணமாக நகைதோன்றல் மங்கையர்க் கியல்பென்கோ என்பதற்குத்தன்மையொருமை யெதிர்காலவினைமுற்றீற்றகரந்தொகுத்ததெனக்கொண்டு, என்று சொல்லக்கடவேனோவெனப் பொருள்கூறினு மிழுக்காது. ஓ ஐயம்.

1209. மொய்கொள்சீ ரடியைச்சேர்ந்த முளரிக்கும் செம்மையீய்ந்த
தையலா ளமிர்தமேனி தயங்கொளி தழுவிக்கொள்ள
வெய்யபூண் முலையிற்சேர்ந்த வெண்முத்தஞ் செவந்தவென்றால்
செய்யரைச் சேர்ந்துளாருஞ் செய்யராய்த் திகழ்வரன்றே.

(இ-ள்.) மொய்கொள் - (புலவர்கூறுமுவமைப்பொருள்களோடு ஒப்பாகீரென்று) போரைச்செய்கிற, சீறடியைச்சேர்ந்த - சிற்றடிகளையடைந்த, முளரிக்கும் - செந்தாமரைமலருக்கும், செம்மை ஈய்ந்த - செம்மையைக்கொடுத்த, தையலாள் - சீதாபிராட்டியினது, அமிர்தம் - அமிர்தம்போன்ற, மேனி - திருமேனியில், தயங்கு - விளங்குகின்ற, ஒளி - ஒளியினால், தழுவிக்கொள்ள - தழுவப்படுதலால், வெய்ய - (ஸ்ரீராமபிரானுடையதிருத்தோல்களைத்தழுவும்) விருப்பத்தையுடைய, பூண் - ஆபரணமணிந்த, முலையில்சேர்ந்த - கொங்கைகளிற்சேர்ந்த, வெள் முத்தம் - வெண்மையாகிய முத்துவடமும், செவந்த என்றால் - செவந்தனவென்றால், செய்யரை - (ஞானவொழுக்கங்களிற்) சிறந்தோரை, சேர்ந்துளோரும் - சேர்ந்த பேதையரும், செய்யராய் - அறிவுடையராய், திகழ்வர் - விளங்குவார்கள்—எ-று. ()

உவமைப்பொருள்களில் முளரி சிறந்ததாகலி னும்மை, சிறப்பு. வெண்முத்தம் என்பதினீற்றில் சிறப்பும்மை, விகாரத்தாற்றொக்கது. சேர்ந்துளாரும் இழிவுசிறப்பு. அன்றீற்றே தேற்றம். செய்யராய்த் திகழ்வர் என்றமையால், சேர்ந்துளார் பேதையரென்பது பெறப்பட்டது.

1210. கொமையுற வீங்குகின்ற குலிகச்செப் பனையகொங்கைச்
சுமையுற நுடங்குகின்ற நுசுப்பினாள் பூண்செய்தோளுக்
கிமையுற விமைக்குஞ்செங்கே ழினமணி முத்தினோடும்
அமையுற வமைவதுண்டா மாகினொப் பாகுமன்றே.

(இ-ள்.) குலிகச்செப்பு அனைய - இங்குலிகக்கிண்ணத்தையொத்த, கொமை உற வீங்குகின்ற - வட்டமுறப்பருக்கின்ற, கொங்கை - கொங்கைகளாகிய, சுமை - சுமையினால், உற நுடங்குகின்ற - மிகத் துவளுகின்ற, நுசுப்பினாள் - இடையையுடைய சீதாபிராட்டியின், பூண்செய்தோளுக்கு - பூணணிந்ததோளுக்கு, இமை உற - (பார்ப்போருடைய) கண்கள்கூசும்படி, இமைக்கும் - பிரகாசிக்கிற, செங்கேழ் - செவ்வொளியையுடைய, இனம்மணி - ஒருசாதியாகிய பதுமராகமணிகளை, முத்தினோடும் - முத்துக்களோடும், அமை - மூங்கிலானது, உற - தன்னிடத்திற் பொருந்த, அமைவது உண்டாமாகின் - அமைதலையுடையதாயின், ஒப்பு ஆகும் - நிகர் ஆகும்—எ-று. (ம)

1211. தளையவிழ் கோதையோதிச் சானகி தளிர்க்கையென்னும்
முளரிக ளிராமன்செங்கை முறைமையிற் றீண்டநோற்ற
அளியன கங்குற்போதுங் குவியல வாகுமென்றாங்
கிளவெயில் சுற்றியன்ன வெரிமணிக் கடகமிட்டார்.

(இ-ள்.) தளை அவிழ் - முறுக்கவிழ்ந்த, கோதை - பூமாலையையணிந்த, ஓதி - கூந்தலையுடைய, சானகி - சீதாபிராட்டியின், தளிர்க்கை என்னும் - தளிர்க்கையாகிய, முளரிகள் - தாமரைமலர்கள், இராமன் - ஸ்ரீராமபிரானுடைய, செங்கை - செங்கைகளால், முறைமையின் - வேதவிதிப்படி, தீண்ட - தீண்டப்பட, நோற்ற - தவஞ்செய்தன, அளியன - (யாவரும்) இரங்குந்தன்மையன, கங்குல்போதும்-இராக் காலத்தும், குவியல - குவியாதன, ஆகுமென்று - ஆமெனக்கருதி, ஆங்கு - அக் கரங்களில், இளவெயில்சுற்றி அன்ன -இளவெயில் சுற்றிநுற்போன்ற, எரி - விளங் குகின்ற, மணி - பதுமராகமணியாற் செய்யப்பட்ட, கடகம் - கடகத்தை, இட் டார் - (சிலசேடியர்) அணிந்தார்கள்—எ-று. (கக)

தளையவிழ் கோதை என்பது, சினைவினை முதன்மேனின்றது, தளையவிழ் தற்கு உரியமலர் கோதைக்குச் சினையாகலின்.

1212. சில்லிய லோதிகொங்கைத் திரள்மணிக் கனகச்செப்பில்
வல்லியு மனங்கன்வில்லு மான்மதச் சாந்திற்றீட்டிப்
பல்லிய னெறியிற்பார்க்கும் பரம்பொரு ளென்னயார்க்கும்
இல்லையுண் டென்னநின்ற விடையினுக் கிடுக்கண்செய்தார்.

(அ-ள்.) சில் இயல் - மெல்லியதன்மையமைந்த, ஓதி - கூந்தலையுடைய சீதா பிராட்டியின், கொங்கை - கொங்கைகளாகிய, மணி - நீலமணியொன்றிழைக்கப் பட்ட, திரள் - திரண்ட, கனகச்செப்பில் - பொற்செப்பில், வல்லியும் - பூங்கொடி களையும், அநங்கன்வில்லும் - மன்மதனுடைய வில்லையும், மான்மதச் சாந்தின் - கஸ்தூரிச் சந்தநத்தால், தீட்டி - எழுதி, பல் இயல்நெறியின்பார்க்கும் - பலவியல்பு களமைந்த வழிகளாற்பார்க்கின்ற, பரம்பொருள் என்ன - மேலானபொருளாகிய இறைவனைப்போல், யார்க்கும் - யாவருக்கும், இல்லை உண்டு என்ன நின்ற - இல்லை உண்டு என்று சொல்லும்படிநின்ற, இடையினுக்கு - இடைக்கு, இடுக்கண்செய் தார் - துன்பமுண்டாக்கினார்கள்—எ-று. (கஉ)

பல்லியனெறி என்றது, கருமஞானங்களைப்பற்றிப் பலவாய் விரிந்துகிடக் குந் தன்மையவாகிய சமயநெறியையுஞ், சூனியவாதருடைய நெறியையும் அந்நெ றியினேக்குவோர் உளனலனெனின், அவன் அருவ மிவ்வருவுகள் எனவும், உள னெனின், அவனுருவ மிவ்வுருவுகள் எனவும், கூறுநின்றவாறே, "இலனென உள னென விவைகுண முடையவனுய்," நின்றுள்ள இறைவனைப்போல உலகர்கள் கண்ணுக்குப் புலப்படாமையின் இல்லையெனவும், தனபாரமுதலிய வுண்மையின் உண்டெனவும் நின்ற இடையென்றாராகலிற், பரம்பொருள் பண்புவமம்.

1213. திறஞ்செய்கோ சிகநுண்டூசு நீவிநீ வாதவல்குற்
புறஞ்செய்மே கலையுந்தாழத் தாரகைச் சும்மைபூட்டித்
திறஞ்செகா சின்றசோதி பேதைசே யொளியிற்றீர்ந்த
கறங்குபு திரியயாருங் கண்விளக் குற்றுநின்றார்.

(இ-ள்.) நிறம் செய் - ஒளிசெய்கின்ற, கோசிகம் - பட்டாடையும், நுண்தூசு நீவி - நுண்ணிழையாடையாலாகிய கொய்சகமும், நீவாத - பிரியாத, அல்குல் புறம் - அங்குலின் புறத்தே, செய் - அலங்கரித்த, மேகலையும் - மேகலையும், தாழ - உள்ளடங்க, தாரகை சும்மைபூட்டி - தாரகைச் சும்மையென்னு மணிவடத்தொகுதியைப்பூட்டி, திறம் செய் - (அவ்வணிகளில்) நானாவிதமாகிய, காசு - மணிகள், ஈன்ற - வீசிய, சோதி - ஒளிகள், பேதை - சீதாபிராட்டியினுடைய, சேயொளியின் - செய்யவொளியால், தீர்ந்த - தமதுநிறம் நீங்கினவாகி, கறங்குபுதிரிய - நாற்புறத்திலும் உலாவலால், யாரும் - (அங்குள்ளமங்கையர்) எல்லாரும், கண்விளக்குற்று நின்றார் - கண்ணொளிபெற்று நின்றார்கள்—எ-று. (கரு)

மேகலையுமென்பது, கோசிகநுண்டூசுநீவி தாழ்தலன்றியெனப் பொருடரலின் இறந்தது தழீஇய வெச்சவும்மை. தாரகைச் சும்மை, உவமவாகுபெயர். கண்விளக்குறல் தகுதிபற்றியவழக்கு.

1214. ஐயவா மனிச்சப்போதி னதிகமு நொய்யவாடற்
பையர வல்குலாடன் பஞ்சின்றிப் பழுத்தபாதம்
செய்யபூங் கமலமன்னச் சேர்த்திய சிலம்புசால
நொய்யவே நொய்யவென்றோ பலபட நுவல்வதம்மா.

(இ-ள்.) செய்யபூங்கமலம் என்ன - செந்தாமரைமலர்போல, சேர்த்திய - சூழவணிந்த, சிலம்பு - சிலம்புகளானவை, பலபட நுவல்வது - பலவாறாகவொலிப்பது, ஐய ஆம் - நுண்ணியனவாகிய, அனிச்சப் போதின் - அனிச்சமலரினும், அதிகமு நொய்ய - மிகுதியுநொய்ம்மையுடையனவாகிய, ஆடல் - ஆடுதலையுடைய, பை அரவு - படவரவையொத்த, அல்குலாள் - அல்குலையுடைய பிராட்டியினது, பஞ்சு இன்றி - செம்பஞ்சூட்டுத லின்றியே, பழுத்த - சிவந்த, பாதம் - சீர்பாதங்கள், சாலநொய்யவே நொய்ய என்றோ - உண்மையாய் மிகவும் நொய்ம்மையுடையன எனக்கருதியோ, (அறியோம்) அம்மா - ஆச்சரியம்—எ-று. (கச)

ஐந்தாவது, உறழ்பொருளின்கண் வந்தது. அடுக்கு இரக்கப்பொருட்டு. எ- தேற்றம், ஓ-ஐயம்.

1215. நஞ்சிடை யமிர்தங்கூட்டி நாட்டங்க ளானவென்னச்
செஞ்சவே நீண்டுமீண்டு சேயரி சிதறித்தீய
வஞ்சமுங் களவுமின்றி மழையென மதர்த்தகண்கள்
அஞ்சன நிறமோவண்ணல் வண்ணமோ வறிதல்தேற்றும்.

(இ-ள்.) அமிர்தம் இடை - அமுதத்திடையில், நஞ்சுகூட்டி - விஷத்தைச் சேர்த்து, நாட்டங்கள் ஆன என்ன - கண்களாயினவென்றுசொல்ல, செஞ்செவே நீண்டு - நேராக நீண்டுசென்று, மீண்டு - திரும்பி, சேயரிசிதறி - செவ்வரிசிதறி, தீயவஞ்சமும் - கொடியவஞ்சமும், களவும் - கள்ளமும், இன்றி - இல்லாமல், மழை என - மேகம்போலக் (குளிர்ந்து), மதர்த்த - களித்த, கண்கள் - கண்களின் கருமை, அஞ்சன நிறமோ - (தம்மிலிட்ட) மையினது நிறமோ, அண்ணல் வண்ணமோ - ஸ்ரீராமபிரானது நிறமோ, அறிதல் தேற்றும் - அறியோம்—எ-று. (கரு)

கன்னிமாடத்தில் பிராட்டியானவள் முதலில் ஸ்ரீராமபிரானை நோக்கியதுதொட்டு, இதுகாறும் பன்முறை அவனது உருவெளித் தோற்றத்தைக் கண்டலால், அண்ணல் வண்ணமோவென, கண்ணுக்கணியென வணியுமையோடு சேர்த்துக் கூறினர். அக்கன்னிமாடத்தின்கண் அத்திருவுருவத்தைக் கண்டதுமுதல்

இதுகாறுங் காண்கின்றனனென்னுங் கருத்தால் ஆண்டு அண்ணலுநோக்கினு னென்றவாறே ஈண்டும் "அண்ணல்வண்ணமோ" என்முர், யாதொருபொருளை யாதொரு சொல்லானே ரிடத்துக் கூறி, அப்பொருளை மற்றோரிடத்துக் கூறுமிற் புழி, முன்னர்க் கூறிய கூற்று ஏதேனு மோரியையாற் பயன்பட லுளதாயி னெ னைத்துணைப்பல செய்யுட்களுக்குப் பின்னருமெடுத்துக்கூறுங் கடைப்பிடி, தமி ழ்ப்பெருமானாகிய இவ்வாசிரிய ரொருவர்மாட்டே யுண்டெனவுணர்க. ருத்ராதி தேவர் முதலிய எல்லாவுயிர்களும் இவ்விறைவிக்குப் புதல்வராகலானும், மண மகன் இறைவனே யாகலானும் "தீயவஞ்சமுங்களவுமில்லாக்" கண்கள் என்முர்.

1216. மொய்வளர் குவளைபூத்த முளரியின் முளைத்தமுந்நாள்
மெய்வளர் மதியினுப்பண் மீனுண்டே லனையதேய்ப்ப
வையக மடந்தைமார்க்கும் நாகர்கோ தையர்க்கும்வானத்
தெய்வமங் கையர்க்குமெல்லாந் திலகத்தைத் திலகஞ்செய்தார்.

(இ-ள்.) மொய் - இதழ்களடர்ந்து, வளர் - வளர்ந்த, குவளை - குவளைமலர் களை, பூத்த - தன்னிடத்து மலர்ந்த, முளரியில் - தாமரைமலரில், முளைத்த - தோன்றிய, மெய்வளர் - உடல் வளர்கின்ற, முந்நாள் மதியின் நாப்பண் - மூன்று நாட்பிறையி னடுவில், மீன் உண்டேல் - விண்மீனென் றுண்டாயின், அனையது எய்ப்ப - அதை யொத்திருக்க, வையகமடந்தை மார்க்கும் - பூலோகத்துப் பெண்க ளெல்லாருக்கும், நாகர் கோதையர்க்கும் (எல்லாம்) - நாகர்களுடைய பெண்க ளெல்லாருக்கும், வானத்தெய்வ மங்கையர்க்கும் (எல்லாம்) - விண்ணுலகத்துள்ள தெய்வப்பெண்களெல்லாருக்கும், திலகத்தை - திலகம்போற்சிறந்த பிராட்டிக்கு, திலகம் செய்தார் - திலக மணிந்தார்கள்—எ-று. (கசு)

1217. சின்னப்பூச் செருகுமென்பூச் சேகரப் போதுகோதில்
கன்னப்பூக் கஞலமீது கற்பகக் கொழுந்துமான
மின்னப்பூஞ் சுரும்புவண்டு மிஞிறுந்தும் பிகளும்பம்பும்
புன்னைப்பூந் தாதுமானும் பொற்பொடி யப்பிவிட்டார்

(இ-ள்.) சின்னப்பூ - (கிள்ளியிட்டுச்செய்த) சின்னப்பூவும், செருகும் - செருகு தற்குரிய, மெல்பூ - மெல்லியபூவும், சேகரப்போது - உச்சியி லணிதற்குரியபூவும், கஞல - (அவையவை யணிதற்குரிய தானங்களில்) நிரம்ப (அணிந்து), மீது - அவற் றின் மேலிடங்களில், கற்பகக்கொழுந்துமான - கற்பகக் கொழுந்தைப்போல, மின்ன - மின்னும்படி, பூ சுரும்பும் - பொலிவாகிய சுரும்புகளும், வண்டும் - வண்டு களும், மிஞிறும் - மிஞிறுகளும், தும்பிகளும் - தும்பிகளும், பம்பும் - மொய்த்துத் தேனுண்ணுகின்ற, புன்னைப்பூ - புன்னைமலர்களின், தாது - பராகத்தை, மானும் - நிகர்க்கின்ற, பொற்பொடி - பொற்பொடியை, அப்பிவிட்டார் - அப்பிவிட்டார் கள்—எ-று. (கஎ)

வினையுந்தொழில் முற்றுப்பெற்றதென்பார், அப்பிவிட்டாரென்முர்.

1218. செய்வளர் விளக்கமாட்டி நீரொடு பூவுந்தூவித்
தெய்வமும் பராவிவேத பாரகர்க் கீய்ந்துசெம்பொன்
ஐயவி நுதலிற்சேர்த்தி யாய்நிற வயினிசுற்றிக்
கைவளர் மயிலனாளை வலஞ்செய்து காப்புமிட்டார்.

(இ-ள்.) நெய்வளர் - நெய்யாலெரிகின்ற, விளக்கம் ஆட்டி - தீபத்தைச்சுற்றி, நீரொடு பூவும் தூவி - நீரோடு மலர்ப்பலியுமிட்டு, தெய்வமும்பராவி - தெய்வங்களையும் வணங்கி, வேதபாரகர்க்கு - அந்தணர்களுக்கு, செம்பொன் ஈய்ந்து - செம்பொன்னைக்கொடுத்து, கைவளர் - கையில் வளர்கின்ற, மயில் அன்னாளை - மயிலையொத்தவளாகிய பிராட்டிக்கு, நுதலில் - நெற்றியில், ஐயவிசேர்த்தி - சிறுவெண்கடுகையணிந்து, ஆய் - குற்றமில்லாத, நிறம் - செந்நிறத்தையுடைய, அயினி - அன்னத்திரளை யமைந்த ஆரதிநீரை, வலம்செய்து சுற்றி - வலமாகச் சுழற்றி, காப்பும் இட்டார் - (பின்பு அந்நீரிற்றொட்டு நெற்றியில்) காப்புமிட்டார்—எ-று. (கஅ)

காப்பு சூர்முதலிய தாக்காமைப்பொருட்டு இடுவதோர்பொட்டு.

1219 கஞ்சத்துக் களிக்குமின்றேன் கவர்ந்துணும் வண்டுபோல
அஞ்சொற்கள் கிள்ளைக்கெல்லா மருளினா ளழகைமாந்தித்
தஞ்சொற்கள் குழறித்தத்தந் தகைதடு மாறிநின்றார்
மஞ்சர்க்கு மாதரார்க்கு மனமென்ப தொன்றேயன்றே.

(இ-ள்.) மஞ்சர்க்கும் - ஆடவர்கட்கும், மாதரார்க்கும் - மாதர்கட்கும், மனம் என்பது - மனமென்று சொல்லப்படுவது, ஒன்றே அன்றே - ஒருதன்மையதேயன்றோ, (ஆதலால் வண்ணமாதர்கள்) களிக்கும் - களித்தற்குரிய, கஞ்சத்து - தாமரைமலரிலுள்ள, இன்தேன் - இனிதாகிய தேனை, கவர்ந்து உண்ணும் - கவர்ந்துண்ணுகின்ற, வண்டுபோல - வண்டுகளைப்போல கிள்ளைக்கு எல்லாம் - கிளிகட்கெல்லாம், அம்சொற்கள் - அழகியசொற்களை, அருளினாள் - அளித்தபிராட்டியினது, அழகை - அழகாகிய தேனை, மாந்தி - பருகி, தம்சொற்கள் குழறி - தம்முடைய சொற்கள் குழறி, தத்தம் - தங்கள் தங்களுடைய, தகை - இயல்பு, தடுமாறிநின்றார் - வேறுபட்டு நின்றார்கள்—எ-று. (கக)

1220. இழைகுலா முலையினாளை யிடையுவா மதியினோக்கி
மழைகுலா வோதிநல்லார் களிமயக் குற்றுநின்றார்
உழைகுலா நயனத்தார்மாட் டொன்றொன்றே விரும்பற்கொத்த
தழகெலா மொருங்கேகண்டால் யாவரே யாற்றவல்லார்.

(இ-ள்.) உழை குலாம் - மானினது கண்ணைப்போல் விளங்குகின்ற, நயனத்தார் மாட்டு - கண்களையுடைய மாதரிடத்து, ஒன்றொன்றே - (குணம், செய்கை, வடிவு, நடை, சாயல் முதலியவற்றில்) ஒவ்வொன்றே, விரும்பற்கு ஒத்தது - விரும்புதற்குத்தக்கது, (அங்ஙனமாக) அழகு எல்லாம் - அவ்வழகுகளெல்லாவற்றையும், ஒருங்கே கண்டால் - ஓரிடத்தி லொருகாலத்திற்றானே கண்டால், ஆற்றவல்லார் யாவர் - ஆற்றவல்லவர்கள் யாவர், (ஒருவருமில்லை யாதலால்) இழை - ஆபரணங்கள், குலாம் - (தமக்கழகளித்தலாற்) களிக்கின்ற, முலையினாளை - கொங்கைகளையுடைய பிராட்டியை, இடை - (தமக்கு) நடுவே, உவாமதியின் - பூர்ணசந்த்ரனைப்போல, நோக்கி - பார்த்து, மழைகுலா - மேகத்தைப்போல விளங்குகின்ற, ஓதி - கூந்தலையுடைய, நல்லார் - சிறந்த அழகினராகிய மாதர்கள், களி - களித்து, மயக்கு உற்று நின்றார் - மயக்கத்தை யடைந்து நின்றார்கள்—எ-று. ()

1221. சங்கங்கை யுடைமையாலுந் தாமரைக் கோயிலாலும்
எங்கெங்கும் பரந்துவெவ்வே றுள்ளத்தி னெழுதிற்றென்ன
அங்கங்கே தோன்றலாலு மருந்ததி யனையகற்பின்
நங்கையு நம்பியொத்தா ளுமினிப் புகல்வதென்னே.

(இ-ள்.) சங்கு - (வளையாகிய) சங்கை, அம்கை உடைமையாலும் - அழகிய கையினிடைத்துடைத்தாதலாலும், தாமரை கோயிலாலும் - தாமரைமலராகிய கோயிலையுடைமையாலும், எங்கெங்கும் - எல்லாவிடங்களிலும், பரந்து - பரவி, வெவ்வேறு - தனித்தனியாக, உள்ளத்தின் - உள்ளங்களில், எழுதிற்று என்ன - எழுதியதுபோல, அங்கங்கே தோன்றலாலும் - அவ்விடங்களில் தோன்றுதலாலும், அருந்ததி அனையகற்பின் - அருந்ததிபோன்ற கற்பினையுடைய, நங்கையும் - பெண்ணிற் சிறந்தாளாகிய சீதாபிராட்டியும், நம்பி ஒத்தாள் - ஸ்ரீராமபிரானை ஒத்திருந்தாள், இனி - இவ்வாறானபிறகு, நாம்புகல்வது - (பிராட்டியைக் குறித்து) நாம்சொல்லுவது, என் - யாது—எ-று. (உக)

உடைமையென்பதைத் தாமரைக் கோயிலென்பதோடுங் கூட்டுக. தன்னுடைய கருணையிலேச மாத்திரையின் ஞானவொழுக்கச் செல்வமுதலிய எல்லா நன்மையும் அடைவிக்கு நிறைவினையச், செங்கமலத்தோன்முதல் யாரும் எப்பெண் பாலார்க்கு முவமைகூறுவர், அங்ஙனமாக, அருந்ததி யனையகற்பி னங்கையென் றீண்டுக்கூறியது, "உழைகுலா நயனத்தார் மாட்டொன்றேன்றே" விரும் பற்கொத்தது என்றவாறே, எனையோர்களிற் கற்பொன்றுஞ் சிறந்தாளாகலானும், இப்பிராட்டிக்கு மணமகனாகிய ஸ்ரீராமபிரானுடைய குலதேசிகனுக்குத் துணைவியா மேம்பாடுடைய ளாகலானு மென்க. நம்பிக்கும் சங்கங்கை யுடைமை முதலியவற்றைக்கூட்டி யுரைத்துக் கொள்க. நங்கையும் என்பதி னும்மை இறந்தது தழீஇயது.

1222. பரந்தமே கலையுங்கோத்த பாதசா லகமும்நாகச்
சிரஞ்செய் நூபுரமும்வண்டுஞ் சிலம்பொடு சிலம்பியார்ப்பப்
புரந்தரன் கோற்கீழானே ரரம்பையர் புடைசூழ்ந்தென்ன
வரம்பறு சும்மைத்தீஞ்சொல் மடந்தையர்தொடர்ந்துசூழ்ந்தார்.

(இ-ள்.) புரந்தரன் - இந்திரனது, கோல்கீழ் ஆனோர் - ஆளுகையின்கீழமைந்தோராகிய, அரம்பையர் - அரம்பையர்கள், புடை சூழ்ந்தென்ன - பக்கங்களில் சூழ்ந்துவந்தாற்போல, (அல்குலின்மேற்புறத்தில்) பரந்தமேகலையும் - பரந்தமேகலையும், கோத்த - கோக்கப்பட்ட, பாதசாலகமும் - பாதசாலங்களும், நாகச்சிரம் செய் - பாம்பின் தலைபோற்செய்யப்பட்ட (கடைப்பூட்டுள்ள) நூபுரமும் - நூபுரவணியும், வண்டும் - வண்டுகளும், சிலம்பொடு - சிலம்போடு, சிலம்பி ஆர்ப்ப - மிக்கொலிக்கும்படி, வரம்பு அறுசும்மை - அளவற்ற வோசையாகிய, தீஞ்சொல் - மதுரவசனங்களையுடைய, மடந்தையர் - மாதர்கள், தொடர்ந்துசூழ்ந்தார் - தொடர்ந்து சூழ்ந்தார்கள்—எ-று. (உஉ)

நூபுரம் சிலம்பின்பேதம். வண்டென்றது, கூந்தலின் மலர்த்தேன் பருக வந்த வண்டை.

1223. சிந்தொடு குறளுங்கூனுஞ் சிலதியர் குழாமுந்தெற்றி
வந்தடி வணங்கிச்சுற்ற மணியணி விதானநீழல்
இந்துவின் கொழுந்துவிண்மீ னினத்தொடும் வருவதென்ன
நந்தலில் விளக்கமன்ன நங்கையும் நடக்கலுற்றாள்.

(இ-ள்.) சிந்தொடு - சிந்தர்களோடு, குறளும் - குறளர்களும், கூனும் - கூனர்களும், சிலதியர் குழாமும் - தோழியர் கூட்டமும், தெற்றி வந்து - தெற்றிவாசலில் வந்து, அடி வணங்கி - அடிபணிந்து, சுற்ற - சுற்றிவராநிற்க, மணி - மணி

களால், அணி - அலங்கரிக்கப்பட்ட, விதானம் - மேற்கட்டியினது, நீழல் - நிழலில், விண்மீன் இனத்தோடும் - விண்மீன் கூட்டத்தோடும், இந்துவின் கொழுந்து-பிறைச்சந்திரன், வருவது என்ன - வருவதுபோல, நந்தல் இல் - கெடுதியில்லாத, விளக்கம் அன்ன - விளக்கத்தையொத்த, நங்கையும் - பிராட்டியும், நடக்கலுற்ருள் - நடக்கத்தொடங்கினுள்—எ-று. (உ௩)

வேறு.

1224. வல்லியை யுயிர்த்தநில மங்கையிவள் பாதம்
மெல்லிய வுறைக்குமென வஞ்சிவெளி யெங்கும்
பல்லவ மலர்த்தொகை பரப்பின ளெனத்தன்
நல்லணி மணிச்சுடர் தவழ்ந்திட நடந்தாள்.

(இ-ள்.) வல்லியை - (சீதாபிராட்டியாகிய) பூங்கொடியை, உயிர்த்த - பெற்ற, நிலமங்கை - நிலமகள், இவள் -இவளது, பாதம் - சீர்பாதங்கள், மெல்லிய - மெல்லியன, உறைக்கும் என - (தரையானது) உறுத்துமென்று, அஞ்சி - பயந்து, வெளி யெங்கும் - அவ்வெளியிடமெங்கும், பல்லவம் - தளிர்களினுடையவும், மலர் - மலர்களினுடையவும், தொகை - தொகுதிகளை, பரப்பினள் என - பரப்பினளென்னும்படி, தன் நல் அணி - தன்னுடைய நல்ல ஆபரணங்களின், மணிசுடர் - மணிச்சுடர்கள், தவழ்ந்திட - தவழாநிற்க, நடந்தாள் - நடந்தனள்—எ-று. (உ௪)

1225. தொழுந்தகைய மென்னடை தொலைந்துகளி யன்னம்
எழுந்திடை விழுந்தயர்வ தென்னவய லெங்கும்
கொழுந்துடைய சாமரை குலாவவொர் கலாபம்
வழங்குநிழல் மின்னவரு மஞ்ஞையென வந்தாள்.

(இ-ள்.) களி அன்னம் - செருக்கையுடைய அன்னங்கள், தொழும்தகைய - தொழும் தகுதியையுடைய, மென்னடைதொலைந்து - மெல்லியநடைக்குத்தோற்று, எழுந்து - எழுந்து, இடை - தன்பக்கலில், விழுந்து - வீழ்ந்து, அயர்வது என்ன - அயர்வதுபோல, அயல் எங்கும் - அருகெல்லாம், கொழுந்து உடைய கொழுந்தின் றன்மையையுடைய, சாமரை - சாமரங்கள், குலாவ - அசையும்படி, ஓர் - ஒப்பற்ற, கலாபம் - தோகையானது, நிழல்வழங்க - நிழலைத்தராநிற்க, மின்னவரும் - மின்னும்படி வருகின்ற, மஞ்ஞை என - மயில்போல, வந்தாள் - (விதானத்தின் நிழலில்) வந்தனள்—எ-று. (உ௫)

1226. மண்முத லனைத்துலகின் மங்கையரு ளெல்லாம்
கண்மணி யெனத்தகைய கன்னியெழில் காண
அண்ணல்மர பிற்சுட ரருத்தியொடு தானவ்
விண்ணிழிவ தொப்பதொர் விதாநநிழல் வந்தாள்.

(இ-ள்.) மண் முதல் - பூமி முதலாகிய, அனைத்துலகில் - எல்லா உலகங்களினுமுள்ள, மங்கையருள் எல்லாம் - எல்லாமங்கையர்களுக்கும், கண்மணியென - கண்மணியைப்போல, தகைய - மேம்பாடுடைய, கன்னி - கன்னியாகிய சீதாபிராட்டியின், எழில்காண - அழகைக்காணுதற்கு, அண்ணல்மரபில் - ஸ்ரீராமபிரானது வமிசத்தில், சுடர் - (தலைவனுகிய) சூரியன், அருத்தியொடு - ஆசையோடு, தான் - தான், அவ்விண் இழிவது ஒப்பது - அந்த மண்டலத்தினின்று மிழிந்துவருவதுபோல வருவதாகிய, ஓர் - ஒப்பற்ற, விதாநநிழல்வந்தாள் - விதானத்தின் நிழலில்வந்தாள்—எ-று. (உ௬)

1227. கற்றைவிரி பொற்கடை மயிர்த்துறு கலாபம்
சுற்றுமணி புக்கவிழை மிக்கிடை துவன்றி
விற்றவழ வாணிமிர மெய்யணிகள் மின்னச்
சிற்றிடை நுடங்கவொளிர் சீறடி பெயர்த்தாள்.

(இ-ள்.) கற்றைவிரி - தொகுதியாகவிரிந்த, (தோகையினது) பொன்கடை மயிர் - பொன்னிறமானகடைமயிர், துறு - அடர்ந்த, கலாபம் - கலாபமும், சுற்றும் - சூழவணிந்த, மணிபுக்க - மணிகளமைந்த, இழை - (தாரகச்சும்மை என்னும்) அணியும், இடைமிக்குதுவன்றி - இடையில் மிகுதியாய் நிறைவதினால், வில் தவழ - வில்லென்னும் ஒளிபரவாநிற்கவும், வாள்நிமிர - வாளென்னு மொளிமிகாநிற்கவும், மெய் அணிகள் மின்ன - திருமேனியிலணிந்த மற்றையணிகள் மின்னாநிற்கவும், சிற்றிடை நுடங்க - நுண்ணிடை துவளாநிற்கவும், ஒளிர் - ஒளிர்கின்ற, சீறடி பெயர்த்தாள் - சிறிய சீர்பாதங்களைப்பெயர்த்து நடந்துவந்தாள்—எ-று. ()

1228. பொன்னினொளி பூவின்வெறி சாந்துபொதி சீதம்
மின்னினிழ லன்னவடன் மேனியொளி மான
அன்னமு மரம்பையரு மாரமிர்தும் நாண
மன்னவை யிருந்தமணி மண்டப மடைந்தாள்.

(இ-ள்.) அன்னவள்தன்மேனி ஒளி - அந்தச் சீதாபிராட்டியின் திருமேனியொளியை, பொன்னின் ஒளி - பொன்னொளியும், பூவின்வெறி - பூமணமும், சாந்துபொதி சீதம் - சந்தநத்தின் சீதளமும், மின்னின்நிழல் - மின்னின் ஒளியும், மான ஒத்திருக்கவும், அன்னமும் - (நடையால்) அன்னங்களும், அரம்பையரும் - (அழகால்) அரம்பைமாதரும், ஆர் அமுதும் - (சுவையால்) அரிய அமுதமும், நாண - நாணவும், மன் அவை இருந்த - அரசரது சபைகூடியிருந்த, மணிமண்டபம் - ரத்நமண்டபத்தை, அடைந்தாள் - சேர்ந்தாள்—எ-று. (உஅ)

பொன்னினொளி முதலிய நான்கிற்கும்; பிராட்டியின் திருமேனியி னியல்பை யுவமித்தமையின், அந்நான்கும் இவளது திருமேனியின்கண் இயல்பாயுண்டெனவுணர்க. ஒளி, தொழிலாகுபெயர்.

1229. சமைத்தவரை யின்மைமறை தானுமென லாமச்
சுமைத்திரள் முலைத்தெரிவை தூய்வடிவு கண்டார்
அமைத்திரள்கொ டோளியரு மாடவரு மெல்லாம்
இமைத்தில ருயிர்த்திலர்கள் சித்திர மெனத்தாம்.

(இ-ள்.) சமைத்தவரை - உண்டாக்கினவரை, இன்மை - தனக்கில்லாமையால், மறை தானும் எனல் ஆம் - வேதமுமெனச் சொல்லலாகிய, சுமை - பாரமாகிய, திரள்முலை - திரண்ட ஸ்தநங்களையுடைய, அ தெரிவை - அந்தப் பிராட்டியினது, தூய்வடிவு - தூய்மையாகிய திருமேனியை, கண்டார் - கண்டவர்களாகிய, அமை - மூங்கில்போல, திரள்கொள் - திரண்ட வடிவைக்கொண்ட, தோளியரும் - தோள்களையுடைய மாதரும், ஆடவரும் - ஆடவர்களுமாகிய, எல்லாம் - எல்லாரும், சித்திரம் என - (அம்மண்டபத்திலமைத்த) சித்திரப்பாவைகள்போல, இமைத்திலர் - இமைகொட்டிலர், உயிர்த்திலர்கள் - மூச்சுவிட்டிலர்—எ-று. (உகூ)

வினைவயத்தராய்த் தோன்றுவாரைப்போலாது, தன்னிச்சையாய்த், தானே திருவுருக்கொண்டனளாதலிற், சுயம்புவாய் நிகழாநின்ற வேதமெனலாகுமென்றார். வேதபுருடனைச் சுயம்பு என்பதைச் செய்யா மொழிக்குந் திருவள்ளுவர் மொழிக்குமென்னுஞ் சங்கத்தார் பாடலாலுமுணர்க. இது வைதிகருடைய மதம்.

1230. அன்னவளை யல்லளென வாமென வயிர்ப்பான்
கன்னியமிர் தத்தையெதிர் கண்டகடல் வண்ணன்
உன்னுயிர் நிலைப்பதொ ரருத்தியொ டுழைத்தாண்
டின்னமிர் தெழக்களிகொ ளிந்திரனை யொத்தான்.

(இ-ள்.) அன்னவளை - (காண்பதற்குமுன்னே) அத்தன்மையளாகிய சீதாபிராட்டியை, அல்லள் என - (கன்னிமாடத்திற் றானேக்கிய கன்னி) யல்லளென்வும், ஆம் என - ஆமெனவும், அயிர்ப்பான் - சந்தேகிப்பவனாகிய, கன்னி - கன்னிகைகளில், அமிர்தத்தை - அமிர்தத்தையொத்த சீதாபிராட்டியை, எதிர்கண்ட—எதிரே கண்ட, கடல்வண்ணன் - கடனிறத்தையுடைய ஸ்ரீராமபிரான், உன் - (நீங்குமோ, நிற்குமோவெனக்) கருதிய, உயிர் - உயிரானது, நிலைப்பது - நிலைப்பதாகிய, ஓர் அருத்தியொடு - ஒப்பற்ற ஆசையோடு, ஆண்டு - அத்திருப்பாற்கடலைக் கடைவதில், உழைத்து - வருந்தி, இன் அமிர்து எழ - இனிய அமிர்தமுண்டாதலால், களிகொள் - களிப்பைக்கொண்ட, இந்திரனை ஒத்தான் - இந்திரனைப்போலக் களித்தான்—எ-று. (௩0)

1231. நறத்துறை முதிர்ச்சியுறு நல்லமுது பில்குற்
றறத்தின்விளை வொத்துமுக டுந்தியரு குய்க்கும்
நிறத்துவ ரிதழ்க்குயி னினைப்பினிடை யல்லால்
புறத்துமுள தோவென மனத்தொடு புகன்றான்.

(இ-ள்.) நறத்துறை - (ஸ்ரீராமபிரான்) சுவையுடைப்பொருள் வகைகளில், முதிர்ச்சி உறு - சுவைமிகுதியைப் பொருந்திய, நல் அமுது - (சொல்லாகிய) நல்ல அமிர்தத்தை, பில்குற்று - சிந்தாநின்று, அறத்தின் - தருமத்தினது, விளைவு ஒத்து - விளையயன்போன்று, முகடு உந்தி - (கன்னிமாடத்தின்) மேலிடத்தினின்று நீங்கி, அருகு உய்க்கும் - அருகே கொண்டுவரப்பட்ட, நிறம் - செந்நிறமுள்ள, துவர் - பவளம்போன்ற, இதழ் - இதழையுடைய, குயில் - குயில்போன்றவள், நினைப்பினிடை அல்லால் - எண்ணத்தின்கண் அல்லாமல், புறத்தும் - புறத்திலும், உளதோ என - உள்ளாளோ என்று, மனத்தொடுபுகன்றான் - தன் மனத்தோடு சொன்னான்—எ-று. (௩க)

முகடெனப் பொதுப்படக் கூறினுரேனும், அம்மாடத் தும்பரிக்கு மமுதன்னுளென்றதற்கேற்ப, அதற்குப் பொருளுரைக்கப்பட்டது. அன்றியார்க்குங் கிட்டலரிய காவலாகிய தடையெனினுமாம். முகடு, இலக்கணை.

1232. எங்கள்செய் தவத்தினி னிராமனென வந்தோன்
சங்கினொடு சக்கர முடைத்தனி முதற்பேர்
அங்கணர சாதலினவ் வல்லிமலர் புல்லும்
மங்கையிவ ளாமென வசிட்டன்மகிழ் வுற்றான்.

(இ-ள்.) வசிட்டன் - வசிஷ்டமுனிவன், எங்கள் - எங்களுடைய, செய்தவத்தினின் - செய்தவத்தால், இராமன் என - இராமனென்று, வந்தோன் - அவதரித்தவன், சங்கினொடு சக்கரம் உடை - சங்கோடு சக்கரத்தையுமுடைய, தனிமுதல் - ஒப்பற்ற முதல்வனாகிய, பேர் அம் கண்-பேரருளையுடைய, அரசு ஆதலின் - இறைவனாதலால், அல்லி - அகவிதழ்களையுடைய, மலர்புல்லும் - செந்தாமரை மலரை ஆஸநமாகப்பொருந்திய, அ மங்கை - அவ்விறைவி, இவள் ஆம் என - இவளாகுமென்று, மகிழ்வுற்றான் - மிகமகிழ்ந்தான்—எ-று. (௩உ)

"அந்தணர்மாட் டருந்தெய்வம்" இறைவனொருவனே ஆதலால் எங்கள் செய்தவத்தினின் இராமனென என்றான்.

1233. துன்றுபுரி கோதையெழில் கண்டுலகு சூழ்வந்
தொன்றுபுரி கோலொடு தனித்திகிரி யுய்ப்பான்
என்றுமுல கேழுமர செய்தியுள னேனும்
இன்றுதிரு வெய்தியது வென்னவய மென்றான்.

(இ-ள்.) உலகு சூழ்வந்து - உலகத்தைச் சூழ்ந்துவந்து, ஒன்றுபுரி-அது உடன் படப்புரிகின்ற, கோலொடு - செங்கோலொடு, தனித்திகிரி உய்ப்பான் - தனிமை யாகிய சக்கரத்தை நடத்துகின்ற சக்ரவர்த்தி, துன்று - நெருங்கிய, புரி - புரிவாகிய, கோதை - கூந்தலையுடைய சீதாபிராட்டியின், எழில்கண்டு - அழகைக்கண்டு, என்றும் - எக்காலத்தும், உலகேழும் - ஏழுலகங்களையும், அரசு எய்தி உளன் எனும் - அரசாளுந் தொழிலையடைந்திருந்தேனாயினும், இன்று திரு எய்தியது - இன்றுதான் திருவையடைந்தது, என்னவயம் என்றான் - இது எதின்வலி யென்றான்—எ-று. (கூகூ)

இவள் மருகியாக வாய்ப்பதற்குத் தானும் தன் தாதை மூதாதை முதலியோருஞ் செய்த தவத்தின் வலி காரணமாதற்கு அமையாதென்னுங் கருத்தால் என்னவயமென்றான்.

1234. நைவள நவிற்றுமொழி நண்ணவர லோடும்
வையநுகர் கொற்றவனு மாதவரு மல்லார்
கைகடலை புக்கன கருத்துளது மெல்லாம்
தெய்வமென வுற்றவுடல் சிந்தைவச மன்றோ.

(இ-ள்.) உடல் - தேகமானது, சிந்தைவசம் அன்றோ - மனத்தின் வயப்பட்டதன்றோ, (ஆதலால்) வையம் நுகர் - அண்டங்களையுண்ட, கொற்றவனும் - ஸ்ரீராமபிரானும், மாதவரும் - முனிவர்களும், அல்லார் - அல்லார்க்கு, நைவளம் நவிற்றும் - குறிஞ்சி யாழி னிசையைப்போலப் பேசுகின்ற, மொழி - சொல்லையுடைய சீதாபிராட்டி, நண்ணவரலோடும் - நெருங்கிவரலும், கருத்து - மனமும், உள்ளதும் - அதுவொழிந்துள்ளனவாகிய கரணங்களும், (ஆகிய) எல்லாம் - எல்லாம், தெய்வம் என உற்ற - தெய்வமெனப் பொருந்தியன, (அதுகாரணமாக) கைகள் தலை புக்கன - கைகள் தலைமேற் சென்றேறின—எ-று. (கூச)

உளது, என்பது பன்மையி லொருமை வந்த வழுவமைதி.

1235. மாதவரை முற்கொள வணங்கிநெடு மன்னன்
பாதமல ரைத்தொழுது கண்கள்பனி சோரும்
தாதையரு கிட்டதவி சிற்றனி யிருந்தாள்
போதினை வெறுத்தரசர் பொன்மனை புகுந்தாள்.

(இ-ள்.) போதினைவெறுத்து - (இருக்கையாகிய) செந்தாமரைமலரை வெறுத்து, அரசர் - அரசர்களுடைய, பொன்மனை புகுந்தாள் - அழகிய மனையிற் குடிபுகுந்தவளாகிய பிராட்டியானவள், மாதவரை - முனிவர்களை, முற்கொளவணங்கி- முன்னர்த்தொழுது, நெடு மன்னன் - சக்ரவர்த்தியின், பாத மலரை - பாத தாமரை மலர்களை, தொழுது - வணங்கி, கண்கள் பனிசோரும் - (திருமணங் கூடியதேயென்னுங் களிப்பால்) கண்ணீர் துளிக்கின்ற, தாதை அருகு இட்ட -

தந்தையருகிலிட்ட, தவிசில் - ஆசநத்தில், தனி இருந்தாள் - தனித்து வீற்றிருந்தாள்—எ-று. (௩௫)

கண்கள் பனிசோர்தற்குக் காரணம், தான் அருமையாய் வளர்த்தெடுத்த அரியமகளை இனிப்பிரியும் பிரிவைக் கருதுதலெனினுமாம். அறஞ்செய் காவற் கயோத்தியிற்றோன்றிய இறைவனுக்கு வாழ்க்கைத் துணையாய்ப், "போதினை வெறுத்தரசர் பொன்மனை புகுந்தாள்" ஆகலின், மாதவர் முதலியோரை வணங்கினாளென்பது கருத்து. நெடுமென்னன் என்றமையால் சக்ரவர்த்தி யென்றுரைக்கப்பட்டது.

1236. அச்சென நினைத்தமுத லந்தண னிருந்தான்
பச்சைமலை யொத்தபடி வத்தட லிராமன்
நச்சுடை வடிக்கண்மலர் நங்கையிவ ளென்றால்
இச்சிலை கிடக்கமலை யேழையு மிறாதே.

(இ-ள்.) அச்சு என நினைத்த - (செய்தற்கரியகாரியங்களைச்செய்து முடிக்கு மாற்றலுடைய னாதலால் உலகத்துக்கு) அச்சாணியைப்போல அறிவுடையோரால் மதிக்கப்பட்ட, முதல் அந்தணன் - (முனிவர்களுள்) முதல்வனாகிய வசிட்ட முனிவன், நச்சு உடை தான் விரும்புதலையுடைய, வடிகண்மலர் - வடுவகிர்போலுங் கண்மலர்களையுடைய, நங்கை - பெண், இவள் என்றால் - இத்தன்மையளென் றுணர்ந்திருப்பானாதல், பச்சைமலை ஒத்த மரகத மலையையொத்த. படிவத்து - திருவுருவத்தையுடைய, அடல் இராமன் - திண்மையாகிய ஸ்ரீராமபிரான், இச்சிலைகிடக்க - இத்திரியம்பகமென்னும் வில்கிடக்கட்டும், மலை ஏழையும் - சப்த குலாசலங்களையும், இறாதே - முறிக்காதோ, (என்று) இருந்தான் - (வியந்து) இருந்தான்—எ-று. (௩௬)

எனவென்னுஞ்சொல் எஞ்சிநின்றது.

1237. எய்யவில் வளைத்தது மிறுத்தது முரைத்து
மெய்வினை விடத்துமுத லையம்விட லுற்றாள்
ஐயனை யகத்துவடி வேயல புறத்தும்
கைவளை திருத்துபு கடைக்கணி னுணர்ந்தாள்.

(இ-ள்.) எய்ய - எய்தற்பொருட்டு, வில் வளைத்தும் - வில்லை வளைத்ததையும், இறுத்ததும் - முறித்ததையும், உரைத்து - (வசிட்டமுனிவன்) அமையச் சொல்வதனால், மெய்வினை விடத்து - கன்னிகாமாடத்தில் தன்னைக் கண்டவனிவனேயென) உண்மை தோன்றியவிடத்தில், முதல் - முன்கொண்டிருந்த, ஐயம் - சந்தேகத்தை, விடல் உற்றாள்-விடத்தொடங்கினவளாகி, ஐயனை - ஸ்ரீராமபிரானை, அகத்து - தன்னுள்ளத்தில் நிலைத்த, வடிவேயல - உருவத்தாலே யல்லாமல், புறத்தும் - புறத்திலும், கைவளை திருத்துபு - கைவளைகளை முறையே வையாநின்று, கடைக்கணின் உணர்ந்தாள் - கடைக்கண்ணினாலுணர்ந்தாள்—எ-று.

உரைக்க உரைத்தெனத் திரிந்தது. அமையவுரைத்தலாவது, அங்குள்ள பலரும் உணரும்படி விசுவாமித்திர முனிவனோடு வந்தமை முதலியவற்றை யுரைத்தல்.

1238. கருங்கடை நெடுங்கணொளி யாறுநிறை கண்ணப்
பெருங்கடலின் மண்டவுயிர் பெற்றினி துயிர்க்கும்

அருங்கல னணங்கரசி யாரமிழ் தனைத்தும்
ஒருங்குட னருந்தினரை யொத்துடல் தடித்தாள்.

(இ-ள்) கருங்கடை நெடு கண் - (தனது) கருமையாகிய நெடிய கடைக்கண்ணினது, ஒளி - ஒளியாகிய, யாறு - யாறுனது, கண்ணப்பெருங்கடலின்மண்ட - ஸ்ரீராமபிரானுடைய அழகாகிய நிறைந்த பெருங்கடலில் நெருங்கிப்பாய்வதினால், உயிர்பெற்று - (ஊசலாடுகின்ற) உயிர்நிலைக்கப்பெற்று, இனிது உயிர்க்கும் - (களிப்பால்) இனிதாக மூச்செறிகின்ற, அருங்கலன் - அருமையாகிய அணிகளையணிந்த, அணங்கு அரசி - தெய்வப்பெண்களுக்கரசியான பிராட்டியானவள், ஆர் அமிழ்து அனைத்தும் - அரிய அமுது முழுமையும், ஒருங்கு உடன் அருந்தினரை ஒத்து - வேறொருவரின்றித் தாமே கிடைத்தமாத்திரத்தில் உண்டவரை யொத்து, உடல் தடித்தாள் . திருமேனி பூரித்தாள்—எ-று. (௩௮)

1239. கணங்குழை கருத்தினுறை கள்வனென லானன்
வணங்குவி லிறுத்தவ னெனத்துயர் மறந்தாள்
அணங்குறு மவிஞ்சைகெட விஞ்சையி னகம்பா
டுணர்ந்தறிவு முற்றபய னுற்றவரை யொத்தாள்.

(இ-ள்.) கணங்குழை - சீதாபிராட்டியானவள், கருத்தின் உறை - தன்மனத்திற்றங்கிய, கள்வன் எனல் ஆனன் - கள்வன் என்று சொல்லலானவன், வணங்கு - வளையு மியற்கையுள்ள, வில் - வில்லை, இறுத்தவன் என - முறித்தவனென்று தேறி, துயர் மறந்தாள் - (முன்கொண்ட) துயரத்தை மறந்தவளாகி, அணங்கு - (பிறவி) வருத்தம், உறும் - பொருந்துதற்குக் காரணமாகிய, அவிஞ்சைகெட - அறியாமை நீங்க, விஞ்சையின் அகம்பாடு - ஞானநூலினுட் பொருளை, உணர்ந்து - அறிந்து, அறிவும் உற்ற - ஞானத்தையுமடைந்த, பயன் உற்றவரை - (மோக்ஷ) லாபத்தை யடைந்தவர்களை, ஒத்தாள் - ஒத்திருந்தாள்—எ-று. (௩௯)

விஞ்சை - காரியவாகுபெயர். அகம்பாடு - தொழிலாகுபெயர். இறந்தது தழீஇய எச்சவும்மை விகாரத்தாற்றொக்கது.

1240. கொல்லுயர் களிற்றரசர் கோமக னிருந்தான்
கல்விகரை யுற்றமுனி கௌசிகனை மேலோய்
வல்லிபொரு சிற்றிடை மடந்தைமண நாளாம்
எல்லையி னலத்தபக லென்றுரைசெய் கென்றான்.

(இ-ள்.) கொல் - கொல்லுந் தொழிலில், உயர் - உயர்ந்த, களிறு - யானைச்சேனையையுடைய, அரசர்கோமகன் - அரசர்களுக்கரசன், இருந்தான் - வீற்றிருந்தவனாகி, கல்வி - ஞானக்கல்வியாகிய கடலினது, கரை உற்ற - கரையைக்கண்ட, முனி கௌசிகனை - முநிவனாகிய விசுவாமித்ரனை நோக்கி, மேலோய் - பெரியோனே, வல்லிபொரு - கொடியையொத்த, சிறு இடை - சிறிய இடையையுடைய, மடந்தை - சீதையின், மணம் நாள் ஆம் - திருமணநாளாகிய, எல்லை இல் நலத்த - அளவற்ற நன்மையையுடைய, பகல் - தினம், என்று - எந்தத்தினம், உரை செய்க என்றான் - சொல்லியருளுகவென்றான்—எ-று. (௪0)

"கரை" என மேல்வருதலால், "கல்வி" என்றதைக் கடலாக்கி யுரைத்தனம்

1241. வாளையுக ளக்கயல்கள் வாவுமதின் மேதி
மூளைமுது கைக்கிழிய மூரிய வரால்மீன்

பாளைவிரி யக்குதிகொள் பண்ணைவள நாடா
நாளையென வுற்றபக னற்றவ னுரைத்தான்.

(இ-ள்.) வாளை உகள - வாளைகள் துள்ளுவதனால், கயல்கள்வாவும் - சேல்கள் தாவாநிற்கும், அதின் - அதனால், மேதி - எருமைகள். மூளை - மூளையுள்ளிடத்தமைந்த, முதுகைக்கிழிய - முதுகுகிழியவும், மூரிய - வலியமைந்தனவாகிய, வரால் மீன் - வரால்மீன்கள் (வெருண்டு), பாளை விரிய - கமுகுமுதலியவற்றின் பாளைகள் விரியவும், குதிகொள் - குதித்தலைக்கொண்ட, பண்ணைவளநாடா - வயல்வளமுள்ள கோசலநாட்டையுடையானே, உற்றபகல் - திருமணத்துக்கமைந்ததினம், நாளையென - நாளையென்று, நல் தவன் உரைத்தான் - நல்லதவத்தையுடைய விசுவாமித்திரமுனிவன் சொன்னான்—எ-று. (சக)

முதுகையென்பதில், ஐ - சாரியை.

1242. சொற்றபொழு தத்தரசர் கைதொழு தெழத்தன்
ஒற்றைவயி ரச்சுரிகொள் சங்கினொலி பொங்க
சொற்றட முடிப்புது வெயிற்பொழி தரப்போய்
நற்றபன னுச்சிதொடு நன்மனை புகுந்தான்.

(இ-ள்.) சொற்றபொழுதத்து - சொன்னகாலத்தில், அரசர் - அரசர்கள், கைதொழுது எழ - அஞ்சலிசெய்து தொழுதெழாநிற்க, தன் - தனது, ஒற்றை - ஒப்பற்ற, வயிரம் - வயிரப்பூணணிந்த, சுரி கொள் - சுரிமுகத்தைக்கொண்ட, சங்கின் ஒலிபொங்க - சங்கோசைமிகவும், பொன் - பொன்னாற் செய்யப்பட்ட, தடம் - பெரிய, முடி - முடியானது, புதுவெயில் பொழிதர - இளவெயிலைப்பொழியவும், போய் - சென்று, நல் - கோள்களிற்சிறந்த, தபனன் - சூரியனை, உச்சி - சிகரத்தினால், தொடும் - தீண்டுகின்ற, நல்மனை புகுந்தான் - நல்லமனையிற் பிரவேசித்தான்—எ-று. (சஉ)

உச்சிதொடுங்கால் தன்னியல்பு குறைவின்றி யெய்திநிற்றலின் நற்றபனன் எனவும், சுரர்நாடீந்த பெருமிதமுடையானுக்குத் தங்குமிடமாதல்பற்றி, நன்மனையெனவுங் கூறினார்.

1243. அன்னமரி திற்பிரிய வண்ணலு மகன்றப்
பொன்னினெடு மாடவரை புக்கனன் மணிப்பூண்
மன்னவர் பிரிந்தனர்கண் மாதவர்கள் போனார்
மின்னுசுடர் நாயகனு மேருவின் மறைந்தான்.

(இ-ள்.)அன்னம்- (சீதாபிராட்டியாகிய) அன்னம், அரிதின்பிரிய - அருமையாகப்பிரிந்து செல்ல, அண்ணலும் - ஸ்ரீராமபிரானும், அகன்று - நீங்கிச்சென்று, அ - அந்த, பொன்னின் நெடுவரை - நீண்ட பொன்மலையை யொத்த, மாடம்புக்கனன் - மாளிகையில் புகுந்தான், மணிப்பூண் - ரத்நாபரணங்களையணிந்த, மன்னவர் - அரசர்கள், பிரிந்தனர்கள் - தனித்தனிப் பிரிந்துபோனார்கள், மாதவர்கள் போனார் - முனிவர்கள் சென்றார்கள், மின்னு - விளங்குகின்ற, சுடர்நாயகனும் - சூரியனும், மேருவில்மறைந்தான் - மேருமலையிலொளித்தான்—எ-று.

எல்லாச்சுடர்களுள்ளுஞ் சிறந்தமையின் சூரியனைச் சுடர்நாயகன் என்றார். ஸ்ரீராமபிரானைப் பிரிய மனமில்லாமையினால் அரிதிற்பிரிவாளாயினாள்.

உக - வது கோலங்காண்படலம் முற்றிற்று.

# உஉ - வது. கடிமணப்படலம்.



விவாஹத்தைக் குறித்துக் கூறும் படலம்.

---:*:---

1244. இடம்படு புகழ்ச்சனகர் கோனினிது பேணக்
கடம்படு களிற்றரச ராதியிடை கண்டோர்
தடம்படு புயத்தசிறு தம்பியர்கள் காறும்
உடம்பொடு துறக்கநக ருற்றவரை யொத்தார்.

(இ-ள்.) இடம்படுபுகழ் - மிக்க புகழையுடைய, சனகர்கோன் - ஜனகர்களுக் கரசன், இனிது - இனிதாக, பேண - (உண்டிமுதலியவற்றால்) உபசரிக்க, கடம்படு களிறு - மதம்பொருந்திய யானைப்படையையுடைய, அரசர் ஆதி - அரசர்கள் முதல், தடம்படுபுயத்த - பெருமைபொருந்திய புயங்களையுடைய, சிறுதம்பியர்கள் காறும் - சிறிய தம்பியர்கள்வரையும், இடைகண்டோர் - இடையே தன்னால் காணப்பட்டார் யாவரும், உடம்பொடு - சரீரத்தோடு, துறக்கநகர் - சுவர்க்கநகரை, உற்றவரை - அடைந்தவரை, ஒத்தார் - ஒத்து இன்பமடைந்தார்கள்—எ-று. (க)

இடை கண்டோர் என்றது அமைச்சர் சேனைத்தலைவர் முதலியோரை. உணச்சுவைமுதலிய வெறுத்தனராகலின் முனிவரையொழித்து அரசராதியென்றார். பேண - காரணப்பொருட்டு.

1245. தேடரு நலத்தபுன லாசைதெற லுற்றார்
மாடொர்தட முற்றதனை யெய்தும்வகை காணார்
ஈடழி வுறத்தளர்வொ டேமுறுவ ரன்றே
ஆடக வளைக்குயிலு மந்நிலைய ளானாள்.

(இ-ள்.) தேடு அரு - தேடக்கிடையாத, நலத்த - நன்மையையுடைய, புனல் ஆசை - நீரினது ஆசையால், தெறல் உற்றார் - வருத்தலுற்றாராகி, மாடு - அருகே, ஒர் தடம் உற்று - ஒரு தடாகத்தைச்சேர்ந்து, அதனை - அந்த நீரை, எய்தும் வகைகாணார் - அடையும்வகை காணாதவர்கள், ஈடு அழிவுற - (தம்முடலின்) வலி அழியும்படி, தளர்வொடு - தளர்ச்சியோடு, ஏமுறுவர் அன்றே - உன்மத்தராவ ரன்றோ, ஆடகம் - பொன்னினாலாகிய, வளை - வளையலையணிந்த, குயிலும் - குயிலை யொப்பாளாகிய சீதாபிராட்டியும், அ நிலையள் ஆனாள் - அத்தன்மையளானாள். (உ)

பிராட்டி நினைக்கின்றவற்றைக் கூறுகின்றார்.

வேறு.

1246. உரவே துமிலா ருயிரீது மெனாக்
கரவே புரிவா ருளரோ கதிரோன்
வரவே யெனையா ளுடையான் வருமே
இரவே கொடியாய் விடியா யெனுமால்.

(இ-ள்.) உரவு எதும் இலார் - வலி சிறிதுமில்லாதாரது, உயிர் - உயிரை, ஈதும் எனா - ஈவோமென்றுசொல்லி, கரவுபுரிவார் - (ஈயாமல்) உலோபத்தைச் செய்வார், உளரோ - உண்டோ, (இல்லை, நீ அவ்வாறு செய்யாநின்றாய்) கதிரோன்

வர - சூரியனுதித்தலும், என்னை ஆள் உடையான்வரும் - என்னை யடிமையாக உடையவன் வருவான், இரவே - இராக்காலமே, கொடியாய் - கொடுமையுடையாய், விடியாய் என்னும் - நீங்காயென்பாள்—எ-று. (௩)

ஸ்ரீராமபிரான் வில்லை முறித்த நாள்முதல் ஒவ்வொருநாளிரவிலுங் கண்படைபெறாது கங்குறைந்து, நாளை தன்னை மணம்புணர்வனெனத் தன்னுட்டெளிந்து, காமப்படர் தணிவாளாகலின் அதனை யிரவின்மேலேற்றி, "உயிர்நுமெனுக் கரவேபுரிவாருளரோ" வென்றாள்.

1247. கருநா யிறுபோல் பவர்கா லொடுபோய்
வருநா ளயலே வருவாய் மனனே
பெருநா ளுடனே பிரியா துழல்வாய்
ஒருநாள் தரியா தொழிவா ருளரோ.

(இ-ள்.) மனனே - மனமே, கரு நாயிறுபோல்பவர் - கரிய திருமேனியையுடைய சூரியனையொத்தவரது, காலொடுபோய் - சீபாதங்களோடு தொடர்ந்து சென்று, வருநாள் - வருகின்றநாளில், அயலேவருவாய் - அருகே வருவாய், (வராதிராய்) - பெருநாள் - இனி அநேகநாள், உடனே - (அவருடனே), பிரியாது உழல்வாய் - பிரியாமல் தங்கியிருப்பாய், (அப்படியிருக்க) ஒருநாள் தரியாது - ஒருநாள் சகிக்காமல், ஒழிவார் உளரோ - விட்டு நீங்குவாருமுளரோ, (நீயேனவரிடஞ் சென்றனை—எ-று. (௪)

1248. கனையேழ் கடல்போல் கருநா ழிகைதான்
வினையேன் வினையால் விடியா விடினீ
தனியே பறவாய் தகவே துமிலாய்
பனைமே லுறைவாய் பழிபூ ணுதியோ.

(இ-ள்.) கனை - ஒலிக்கின்ற, எழ் கடல்போல் - எழு கடல்களைப்போல்கின்ற, கருநாழிகை - இரவானது, வினையேன் வினையால் - தீவினையை யுடையேனது பாவத்தால், விடியாவிடின் - விடியாமற்போனால், பனைமேல் உறைவாய் - பனையின்மீதுள்ள அன்றிலே, நீ தனியே பறவாய் - நீ (உன் துணையைப்பிரிந்து) தனித்துப் பறவாய், தகவு எதும் இலாய் - (என்னைவருத்துதலால்) நடுவுநிலைமை சிறிதுமில்லாயாகி பழிபூணுதி - பழியைப் பூண்கின்றாய்—எ-று. (௫)

போல் - வினைத்தொகை. கருநாழிகை - சினையாகுபெயர்.

1249. அயில்வே லனல்கால் வனவா நிழலாய்
வெயிலே யெனநீ விரிவாய் நிலவே
செயிரே துமிலா ருடல்தேய் வுறுவார்
உயிர்கோ ளுறுவா ருளரோ வுரையாய்.

(இ-ள்.) நிலவே - சந்திரனே, அயில்வேல் - கூர்மையாகிய வேல்போன்ற, அனல் கால்வனஆம் - அனலை வீசுவனவாகிய, நிழல்ஆய் - ஒளிகளாகி, வெயிலேயென - வெயில்போலவே, நீ விரிவாய் - நீ பரவுவாய், செயிர் எதும் இலார் - குற்றஞ் சிறிதுமில்லார், உடல் தேய்வுறுவார் - தம்முடல் மெலிவார், உயிர் - (அவரது) உயிரை, கோளுவார் - சொள்வார், உளரோ - உண்டோ (இல்லை), உரையாய் - (உளராயின்) நீ சொல்வாய்—எ-று. (௬)

உடல்மெலியாநின்ற நான், நினக்கு யாதொரு குற்றமும் புரிந்தேனல்லேன், அங்ஙனமாகவும் என்னுயிரை வருத்தாநின்றாயென்று சொன்னபது கருத்து வேல் - பயனுவமம். கால்வன - பால்வழுவமைதி.

1250. மன்றற் குளிர்வா சம்வயங் கனல்வாய்
மின்றொத் தநிலா நகைவீழ் மலயக்
குன்றிற் குலமா முழையிற் குடிவாழ்
தென்றற் புலியே யிரைதே டுதியோ.

(இ-ள்.) குளிர்மன்றல் - குளிர்ந்த மன்றலாகிய, வாசம் வயங்கு - மணம் விளங்குகின்ற, அனல்வாய் - அழலமைந்த வாயையும், மின்தொத்து - ஒளித்தொகையாகிய, நிலாநகை - நிலாவென்னும் நகையையும், (உடைய) வீழ் - யாவரும் விரும்புகின்ற, மலயக்குன்றில் - பொதியமலையில், குலம் மா முழையில் - சிறந்த பெருங்குகையில், குடிவாழ் - குடியாக வாழ்கின்ற, தென்றல் புலியே - தென்றலாகிய புலியே, இரைதேடுதியோ - இரையைத் தேடுகின்றாயோ—எ-று. (எ)

தமிழ்ப் பெருங்கடல் தந்ததேயன்றி, வானோர்க் குபகாரத்தின் பொருட்டு, உவர்ப்பெருங்கடலுட் செருக்கொழிய வுட்கொண்ட பேராற்றலுடைய முனிவனுறைதலின், வீழ்மலயமென்றாள்.

1251. தெருவே திரிவா ரொருசே வகனார்
இருபோ தும்விடா ரிதுவென் னைகொலாம்
கருமா முகில்போல் பவர்கன் னியர்பால்
வருவா ருளரோ குலமன் னவரே.

(இ-ள்.) குலமன்னவர் - குலமன்னர்களில், கன்னியர்பால் - கன்னியரிடத்தில், வருவார் உளரோ - வருவாருண்டோ, (இல்லை அப்படியிருக்க) மா - பெருமையாகிய, கருமுகில் போல்பவர் - கரிய மேகத்தை யொத்தவராகிய, ஒரு சேவகனார் - ஒரு வீரர், தெருவே திரிவாராய், இருபோதும் - இரவும் பகலுமாகிய இரண்டு காலத்திலும், விடார் - என்னை விட்டுப் பிரியார், இது என்னை - இதுயாது.

1252. தெருளா வினைதீ யவர்சே ரலர்தோள்
அருளா நெறியோ டுமவா வதுவோ
கருளார் கடலோ கரைகா ணரிதால்
இருளா னதுதா னெனையூழி கொலாம்.

(இ-ள்.) தெருளா - (பிறரால்) அறியப்படாத, வினைதீயவர் - செயல்தீயவராயினார், சேரலர் - தழுவார், அருளாநெறியோடும் - (அவர்) அருள் செய்யாத வழியினால், தோள் அவாவதுவோ - (அவருடைய) தோள்களைத் தழுவ விரும்புவதோ, (கூடாது) கருள் ஆர் - இருள் நிறைந்த, கடலோ - (இரவாகிய) கடலோ கரைகாண் அரிது - கரைகாணுதல் அரிது, எனை ஊழி - எத்தனை ஊழிக்காலம், இருளானது கொல் - இரவாயினதோ (அறியேன்)—எ-று. (க)

அருளல் புல்லுதலைப் பயக்குமாகலின், அது நிகழ்த லின்றாகவே அருளாநெறியென்றாள். கருள், இருள், என்பன குணவாகுபெயர்கள்.

1253. பண்ணோ வொழியா பகலோ புகுதா
தெண்ணோ தவிரா விரவே விடியா

துண்ணோ வொழியா ருயிரோ வகலா
கண்ணோ துயிலா விதுவோ கடனே.

(இ-ள்.) பண்ணோ ஒழியா - இசைகளோ அடங்கா, பகலோ புகுதாது - பகற்பொழுதோ வாராது, எண்ணோதவிரா - எண்ணங்களோ நீங்கா, இரவோ விடியாது - இரவோ விடியாது, உள்ளோ ஒழியா - உள்ளத்தின் வருத்தங்களோ ஒழியா, உயிரோ அகலா - உயிரோ (உடலைவிட்டு) நீங்காது, கண்ணோதுயிலா - கண்களோ தூங்கா, இதுவோ கடன் - இவையோ என் கடன்மைகள்—எ-று. (௧௦)

துன்பம் பயப்பதிற் பண்முதலியன தனித்தனி யொன்றுக்கொன்று தோலாது நிற்றற் சிறப்புப்பொருள்தரலின் ஓ - சிறப்பு. இது தொகுதி யொருமை.

1254. இடையே வளைசோ ரவெழுந் துவிழுந்
தடலேய் மதனன் சரமஞ் சினையோ
உடலோய் வுறநா ளுமுறங் கலையால்
கடலே யுரைநீ யுமொர்கன் னிகொலாம்.

(இ-ள்.) கடலே - சமுத்திரமே, அடல் ஏய் - வலி அமைந்த, மதனன - மன்மதனது, சரம் - பாணத்திற்கு, அஞ்சினையோ - பயந்தனையோ, நீயும் - நீயும், ஓர் கன்னிகொல் - என்னைப்போல கன்னிகையோ, உரை - சொல்லுவாயாக, (ஏன் எனின்) (நான்) இடையே - இடையான காலத்தில், வளை - கைவளைகள், சோர - கழலும்படி, எழுந்து - மேலெழுந்தும், விழுந்து - கீழ்விழுந்தும், உடல் - சரீரம், ஓய்வு உற - தளர்ச்சியையடைய, நாளும் - நாள்தோறும், (உறங்கிலேன் அது போல)

(கடலே நீ) இடை - உன்னிடத்தினின்றும், வளை - சங்குகள், சோர - நழுவிக்கரை ஏற, எழுந்து - அலையுருவாய் மேலெழுந்தும், விழுந்து - மறிந்து கீழ் விழுந்தும், உடல் ஓய்வு உற - உடல் தள்ளாட, நாளும் - நாள்தோறும், உறங்கிலை - தூங்கினையில்லை (ஆதலால்)—எ-று. (௧௧)

நானே யன்றி எனப் பொருள் தரலால், நீயும் என்னும் உம்மை, இறந்தது தழீஇயது, அன்றி கன்னியான நானேயன்றி, முதுமையும் பெருமையும் உள்ள நீயும் எனப் பொருள்படுதலான் உயர்வு சிறப்பு எனினுமாம். ஆல், ஆம், இரண்டும் அசைகள். சரம் அஞ்சினையோ என்பதற்கு, சரத்தை அஞ்சினையோ, என இரண்டனுருபும் விரித்துரைக்கலாம். அடல் - மன்மதனுக்கும், சரத்துக்கும் விசேடணமாக்கலாம்.

ஸ்ரீராமபிரான் நினைக்கின்றவற்றைக் கூறுகின்றார்.

1255. என வின்னன பன்னி யிருந் துளைவாள்
துனியுன்னி நலங் கொடுசோர் வுறுகால்
மனைதன்னில் வயங்குறும் வைகிருள் வாய்
அனகன் னினைகின் றனயா மறைவாம்.

(இ-ள்.) என - என்று, இன்னனபன்னி - இவைபோல்பவற்றைப் பலகாலெடுத்துச்சொல்லி, (வேறு வழியில்லாமையால்) இருந்து - செயலற்றிருந்து, உளைவாள் - வருந்துவாளாகிய பிராட்டியானவள், துனி உன்னி - தான்படுந்துன்பத்தைக் கருதா நின்று, நலம்கொடு - பெண்ணலத்தோடு, சோர்வுறுகால் - சோர்வடையுங்காலத்தில், மனைதன்னின் - மாளிகையின்கண், வயங்குறும் - விளங்கா

நின்ற, வைகு இருள்வாய் - கழியுமியல்புள்ள இருளில், அனகன் - பரிசுத்தனு கிய ஸ்ரீராமபிரான், நினைகின்றன - நினையுமவற்றை, யாம் அறைவாம் - யாம் கூறுவோம்—எ-று. (கஉ)

1256. முன்கண்டு முடிப்பரு வேட்கை யினால்
என்கண் டுணைகொண் டிதயத் தெழுதிப்
பின்கண்டு மோர் பெண்கரை கண்டிலெனால்
மின்கண் டவரெங் கறிவார் வினையே,

(இ-ள்) மின்கண்டவர் - மின்போல் வாளைக்கண்டவர், வினை - (காட்சியாகிய) தொழிலின்கரையை, எங்கு அறிவார் - எவ்வாறு காண்பார், (காணமாட்டார் ஆதலால், கன்னிமாடத்தில்) முன் கண்டு - முன்னேபார்த்து, முடிப்பு அரு வேட்கையினால் - முடித்தலருமையாகிய ஆசைப்பெருக்கத்தால், என்கண் துணை கொண்டு - என்கண்ணிணையைக்கொண்டு, இதயத்து எழுதி - இதயத்திற்பதிய எழுதி, பின் - பின்னே, கண்டும் - (அரசவைக்கண்) பார்த்தும், ஓர் பெண் - ஒரு பெண்ணினது அழகை, நான் கரைகண்டிலன் - நான் கரைகண்டேனல்லேன்-எ-று.

1257. திருவே யனையாள் முகமே தெரியின்
கருவே கனியே விளைகாம விதைக்
கெருவே மதியே யிதுவென் செய்தவா
ஒருவே னொடுநீ யுறவா கலேயோ.

(இ-ள்.) மதியே - சந்திரனே, தெரியின் - ஆராயுமிடத்து, விளை - விளைகின்ற, காமவித்தைக்கு - காமவித்துக்கு, கரு - காரணமும், கனி - (அதின்காரிய (மாகிய) கனியும், எரு - (அதற்குத் துணைக்காரணமாகிய) எருவும் (ஆயினை), ஆதலால் நீ) திருவே அனையாள் முகமே - திருமகளையே யொத்தவளது முகமே (வேறன்று), (அங்ஙனமானால்) ஒருவேனொடும் - என்னொருவனோடும், நீ உறவாகலை - நீ உறவாகினையல்லை, இது என்செய்த ஆறு - இது என்செய்தவிதம்—எ - று.

அவள்முகமே நீ யாயினையாதலால் அவள்முகத்துக்கு இனியானாகிய என்னோடுறவாகி நின்று தண்ணிலவெறித்து, உள்ளங்குளிர்ப்பியாமல், உறவாகாது நின்று அழலெறித்துக் கொளுந்தல் செய்கின்றனை, அதுசொல்ல என்வாயும் நாணுகின்றதென்னுங் கருத்தால், இது என்றான். ஆயினை, என்பது சொல்லெச்சம்.

1258. கழியா வுயிருந் தியகா ரிகைதன்
விழிபோ லவளர்ந் ததுவீ கிலதால்
அழிபோ ரிறைவன் படவஞ் சியவன்
பழிபோ லவளர்ந் ததுபா யிருளே.

(இ-ள்.) பாய் இருள் - (எவ்விடத்தும்) பரந்தவிருளானது, கழியா உயிர் - (என்னுடலினின்றும்) நீங்கா நிலைமைத்தாகிய வுயிரை, உந்திய - தள்ள, காரிகை விழிபோல - அப்பெண்ணினுடைய கண்களைப்போல, வளர்ந்தது - வளர்ந்ததாகி, வீகிலது - குறையாமல், அழிபோர் - அழிகின்றபோரில், இறைவன்பட - தலைவன் இறக்க, அஞ்சியவன் - அஞ்சியோடின வீரனுடைய, பழிபோல - பழியைப்போல, வளர்ந்தது - மேலும்வளர்ந்தது—எ-று. (கங)

1259. நினையா யொருகால் நெடிதோ நெறிதான்
வினவா தவர்பால் விடைகொண் டிலேயோ

புனமா னனையா ரொடுபோ யினவென்
மனனே யெனை நீயு மறந் தனையோ.

(இ-ள்.) புனம் - புனத்திலுள்ள, மான் அனையாரொடு - மானையொத்தவரோடு, போயின - சென்ற, என்மனனே - என்மனமே, ஒருகால் - ஒருதரம், நினையாய் - (என்பால்வர) நினையாய், நெறிநெடிதோ - (வரும்) வழிதூரமாயினதோ, வினவாதவர்பால் - (நீயேன்வந்தாயென்று) கேளாதவரிடத்து, விடைகொண்டிலையோ - விடைபெற்றிலையோ, நீயும் - (அவரைப்போல) நீயும், என்னை மறந்தனையோ - என்னை மறந்தாயோ—எ-று. (கசு)

1260. தன்னோக் கெரிகால் தகைவா ளரவின்
பன்னோக்கின தென்பது பண்டு கொலாம்
என்னோக்கினி நெஞ்சினு மென்று முளார்
மென்னோக் கினதே கடுவல் விடமே.

(இ-ள்.) கடுவல் விடம் - கடுமையாகிய வலிய விடமானது, தன் நோக்கு - தன் கண்களில், எரிகால் - தீயைக்கக்குகின்ற, தகை - தன்மையையுடைய, வாள் - ஒளிபொருந்திய, அரவின்பல் - பாம்பின்பல்லை, நோக்கினது என்பது - இடமாகக் குறித்ததென்பது, பண்டு - பூர்வத்தில், (இப்போது) என்நோக்கினும் - என் பார்வையினும், நெஞ்சினும் - நெஞ்சினும், என்றும் உள்ளார் - எக்காலத்தும் நீங்காதிருப்பவரது, மெல்நோக்கினதே - மெல்லியபார்வையி னிடத்ததேயாம்—எ-று.

அரவின்பல் என்றது காளி, கராளி, காளாத்திரி, யமதூதி என்னும் விடப்பல் நான்கினை.

1261 கல்லார் மலர்சூழ் கழிவார் பொழிலோ
டெல்லா முளவா யினுமென் மனமோ
சொல்லா ரமுதின் சுவையோ டினிதாம்
எல்லோ தியர்தாம் விளையா டிடமே.

(இ-ள்.) கல் - மலையும், ஆர் - (தேன்) நிரம்பிய, மலர்சூழ் - மலர்கள் நிறைந்த, கழி - கழிக்கரையும், வார்பொழில் - நீண்ட சோலையும், எல்லாம் - மற்றுமெல்லாம், உள ஆயினும் - உள்ளனவாயினும், சொல் - சொல்லானது, ஆர் அமுதின் - அரிய அமுதத்தின், சுவையோடு - சுவையினும், இனிது ஆம் - இனிதாகிய, எல்-(அணியின்) ஒளியமைந்த, ஓதியர் - கூந்தலையுடையார், விளையாடு இடம் - விளையாடுகின்ற இடம், என்மனமோ - (இப்போது) என்மனமோ (அறியேன்)—எ-று. ()

கல்லார் மலர்சூழ் கழி என்பதற்குக், கல்லாரமலர் சூழ்ந்த கழியெனினுமமையும். கல்லாரம் என்னும் நிறுத்தசொல் மகரம், மலர் என்னுங் குறித்துவருகிளவிநோக்கி, "மகரவிறுதி வேற்றுமையாயிற், றுவரக்கெட்டு வல்லெழுத்து மிகுமே" என்னுஞ் சூத்திரத்தில் துவரவென்றதனு னியல்புக்கணத்துக்கட் கெட்டு அகரந் தொகுத்ததெனக்கொள்க.

வேறு.

1262. வானவர் பெருமானும் மனநினை வினதாகத்
தேநகு குழலாடன் றிருமண வினைநாளை
பூநகு மணிவாசம் புனைநக ரணிவீரென்
றூனையின் மிசையாண ரணிமுர சறைகென்றான்.

(இ-ள்) வானவர்பெருமானும் - தேவர்கோனாகிய ஸ்ரீராமபிரானும், மனம் நினைவு இனன் ஆக - மனக்கருத் தித்தன்மையனாக, (ஜநகமஹாராஜன்) (வள்ளுவனைநோக்கி) தேம் நகு - மலர்த்தேன்விளங்குகின்ற, குழலாள் - கூந்தலையுடையாளது, திருமணவினை - திருமணத்தொழில், நாளை - நாளையாகும், (ஆதலால்) பூ - மலாமாலைகளாலும், நகும் மணி - பிரகாசிக்கின்ற மணிவடங்களாலும், வாசம்-சீலைகளாலும், புனை - அலங்கரித்தற்குரிய, நகர் - நகரத்தை, அணிவீர் என்று - அலங்கரியுங்கோளென்று, ஆனையின் மிசை - யானையின்மேல், யாணர் - புதிய, அணி - அழகிய, முரசு - மணமுரசை, அறைக என்றான் - கொட்டுகவென்று சொன்னான்—எ-று. (கக)

பூ, மணி, வாசம், ஆகுபெயர்கள்.

1263. முரைசறை தலுமான முதியரு மிளையோரும்
விரைசெறி குழலாரும் விரவினர் விரைகின்றார்
உரைசெறி கிளையோடும் உவகையி னுயர்கின்றார்
கரைசெறி வரிதாகு மிரவொரு கரைகண்டார்.

(இ-ள்.) முரசு அறைதலும - முரசறைந்தவுடன், மானம் - பெருமையமைந்த, முதியரும் - முதியோர்களும், இளையோரும் - இளையவர்களும், விரைசெறிகுழலாரும் - வாசனையோடு நெருங்கிய கூந்தலையுடையமாதரும், விரவினர் - கலந்தவர்களாய், விரைகின்றார் - (அலங்கரிக்க) விரைகின்றாரும், உரைசெறிகிளையோடும் - உசாவுதலையுடைய சுற்றத்தோடும், உவகையினுயர்கின்றார் - (திருமணத்தைக்குறித்து) களிப்பினால் மிகுகின்றாருமாகி, கரைசெறிவு அரிது ஆகும் - கரைகாண்டலரிதாகிய, இரவு - இரவினது, ஒருகரைகண்டார் - ஒப்பற்றகரையைக் கண்டார்கள்—எ-று. (உ0)

நகரையணிதற்கும், திருமணத்தைக் காணுதற்கும், விரைகின்ற வலைகையுடையார்க்கு, அவ்விராப்போது என்னையூழிகொலா மென்னும்படி, நீடியதாய்த் தோற்றினமையின், "கரைசெறிவரிதாகுமிர" வென்றார்.

1264. அஞ்சன வொளியானு மலர்மிசை யுறைவாளும்
எஞ்சலின் மணநாளைப் புணர்குவ ரெனலோடும்
செஞ்சுட ரிருள்கீறித் தினகர னொருதேர்மேல்
மஞ்சனை யணிகோலங் காணிய வெனவந்தான்.

(இ-ள்.) அஞ்சனவொளியானும் - மைபோலுந் திருநிறத்தையுடைய இறைவனும், அலர்மிசை உறைவாளும் - செந்தாமரைமலரில் வசிக்குமிறைவியும், நாளை - நாளைக்கு, எஞ்சல் இல் - குறைவில்லாத, மணம் புணர்குவர் - மணம்புணர்வார்கள், எனலோடும் - என்றுசொல்லுதலோடும், செஞ்சுடர் - தன்செஞ்சுடர்களால், இருள்கீறி - இருளைப்பிளந்து, தினகரன் - சூரியன், ஒருதேர்மேல் - ஒப்பற்ற தேரின்மேல், மஞ்சனை - (தன்மரபிலவதரித்த) புத்திரனை, அணி-அலங்கரிக்கின்ற, கோலம் - மணக்கோலத்தை, காணிய என - காணவந்தானென்னும்படி, வந்தான் - உதயஞ்செய்தான்—எ-று. (உக)

1265. தோரண நடுவாருந் தூணுமறை பொதிவாரும்
பூரண குடமெங்கும் புனைதுகில் புனைவாரும்
காரணி நெடுமாடங் கதிர்மணி யணிவாரும்
ஆரண மறைவாணர்க் கின்னமுத டுவாரும்

(இ-ள்) (நகரமாக்களிற்சிலர்) தோரணம் நடுவாரும் - தோரணகம்பங்களை நாட்டுவோரும், தூண்களை, உறை - (சித்திரித்த) உறைகளால், பொதிவாரும் - மூடுவாரும், எங்கும் - (வைத்தற்குரிய) இடமெங்கும்வைத்த, புனை - புனைதற்குரிய, துகில் - ஆடையை, புனைவாரும் - அணிவாரும், கார் அணி - மேகத்தைச்சிகரத்திற்பொருந்திய, நெடுமாடம் - நெடியமாளிகைகளுக்கு, கதிர் - கதிர்களைவீசுகின்ற, மணி - மணிவடங்களை, அணிவாரும் - அணிவோரும், ஆரணம் - சாகைகளையுடைய, மறைவாணர்க்கு - வேதவாழ்க்கையையுடைய அந்தணர்களுக்கு, இன் அமுது - இனியவுணவை, அடுவாரும் - சமைப்பாரும் (ஆயினர்)—எ-று. (உஉ)

1266. அன்னமென் னடையாரும் மழவிடை யனையாரும்
கன்னிநன் னகர்வாழை கமுகொடு நடுவாரும்
பன்னரு நிரைமுத்தம் பரியன தெரிவாரும்
பொன்னணி யணிவாரும் மணியணி புனைவாரும்.

(இ-ள்.) அன்னம் - அன்னத்தையொத்த, மெல்நடையாரும் - மெல்லியநடையையுடையமாதரும், மழவிடை அனையாரும் - இளமையாகிய இடபத்தையொத்த நடையையுடைய ஆடவரும், கன்னி - அழிவற்ற, நல்நகர் - நல்லநகரத்தில், வாழை - வாழைமரங்களை, கமுகொடு - கமுகமரங்களோடு (சேர்த்து), நடுவாரும் - நடுவோரும், பன் அரு - விலைகூறலரிய, நிரைமுத்தம் - வரிசையாகிய முத்துவடங்களில், பரியன - பெரியவற்றை, தெரிவாரும் - ஆராய்ந்தெடுப்பாரும், பொன் அணி அணிவாரும் - பொன்னாற்செய்யப்பட்ட அணிகளையணிவோரும், மணி அணி புனைவாரும் - ரத்நாபரணங்களையணிவோரும் (ஆயினர்)—எ-று. ()

1267. சந்தன மகிலுறுஞ் சாந்தொடு தெருவெங்கும்
சிந்தினர் திரிவாருஞ் செழுமலர் சொரிவாரும்
இந்திர தனுநாறு மெரிமணி நிரைமாடத்
தந்தமில் விலையாரக் கோவைக ளணிவாரும்.

(இ-ள்.) சந்தனம் - சந்தனத்தையும், அகில் - அகிலாற்சமைத்த, நாறும் - பரிமளிக்கின்ற, சாந்தொடு - சாந்தோடு, தெரு எங்கும் - தெருக்களிலெல்லாம், சிந்தினர் திரிவாரும் - சிந்தித்திரிவோரும், செழுமலர் சொரிவாரும் - செழிய மலர்களைச் சொரிவோரும், இந்திரதனு நாறும் - இந்திரவில் நாறும்படியான எரி - ஒளியையுடைய, மணி நிரை - மணிவரிசைகள் பதித்த, மாடத்து - மாளிகைகளில், அந்தம் இல் - முடிவில்லாத, விலை - விலையையுடைய, ஆரக்கோவைகள் - முத்துவடங்களை, அணிவாரும் - அணிவோரும் (ஆயினர்)—எ-று. (உச)

1268. தளங்கிளர் மணிகாலத் தவழ்சுட ரிமிழ்தீபம்
இளங்குளிர் முளையார்நற் பாலிகை யினமெங்கும்
விளிம்புபொன் விரைநாற வெயிலொடு நிலவீனும்
பளிங்குடை யுயர்திண்ணைப் பத்தியின் வைப்பாரும்.

(இ-ள்) விரைநாற - (தம்மேல்மெழுகிய) சந்தனம் பரிமளிக்க, வெயிலொடு நிலவு ஈனும் - வெயிலையும் நிலவையும் வீசுகின்ற, பொன்விளிம்பு - பொன்னோரத்தையுடைய, உயர் - உயர்ந்த, பளிங்கு உடை திண்ணை - பளிங்குத்திண்ணைகளெங்கும், தளங்கிளர் - கனகமாகி ஒளிர்கின்ற மணி - மணிகள், கால - வீசுதலால், தவழ்-தவழ்கின்ற, சுடர் - அச்சுடரைப்போலும், இமிழ - சுடரை வீசுகின்ற, தீபம் - தீபக்குடங்களையும், இள குளிர் முளை ஆர் - இளமையாகிய குளிர்ந்த

முளைகள் நிரம்பிய, நல்பாலிகை இனம் - நல்ல பாலிகைக்கூட்டங்களையும், பந்தியின் - வரிசையாக, எங்கும் வைப்பாரும் - எங்கும்வைப்பாருமாயினர்—எ-று. ()

1269. மந்தர மணிமாட முன்றிலின் வயினெங்கும்
அந்தமி லொளிர்முத்தின் அகனிரை யொளிவீச
இந்திர னெடுவானம் மீனலர் குவதென்னப்
பந்தரி னிழல்வீசப் படர்வெயில் கடிவாரும்.

(இ-ள்) மந்தரம் - மந்தரமலையையொத்த, மணி - அழகிய, மாளம் - மாளிகைகளின், முன்றிலின் - முற்றங்களின், வயின் எங்கும் - இடமெங்கும், இந்திரன் - இந்த்ரனுடைய (ஆளுகைக்குள்ளமைந்த,) நெடு வானம் - நெடியவானம், மீன் - விண்மீன்களை. அலர்குவது என்ன - பூத்ததுபோல, அந்தம் இல் - முடிவில்லாத, ஒளிர் - ஒளிர்கின்ற, அகல் - பரந்த, முத்தின் நிரை - முத்துவடத்தின் வரிசைகள், ஒளிவீச - ஒளியைவீசவும், பந்தர் - பச்சைப்பந்தல், இன் - இனிய, நிழல்வீச - நிழலைத்தரவும், படர் - படர்ந்த, வெயில் - வெயிலை, கடிவாரும்-கடிந்து நீக்குவாரும் (ஆயினர்)—எ-று.

நெடுவானத்தை உவமைகூறினமையின் பந்தர் பசுமையதென்பது பெறப்பட்டது.

1270. வயிரமி னொளியீனும் மரகத மணிவேதிச்
செயிரறு மொளிதீபஞ் சிலதியர் கொணர்வாரும்
வெயில்விர வியபொன்னின் மிடைகொடி மதிதோயும்
எயிலினி னடுவாரு மகிலெரி யிடுவாரும்.

(இ-ள்.) வயிரம் - (ஓரத்தில்) வயிரமணிகள், இன் ஒளி ஈனும் - இனியவொளியைவீசுகின்ற, மரகதமணி - மரகதமணியாலமைந்த, வேதி - ஓமகுண்டத்தின் பக்கலில், செயிர் அறும் - குற்றமற்ற, ஒளிசெய்கின்ற, தீபம் - தீபக்குடங்களை, சிலதியர் - சேடியர், கொணர்வாரும் - கொண்டுவந்துவைப்பாரும், (அவர்களுடைய கணவர்கள்) வெயில் விரவிய - வெயில்நிரம்பிய, பொன்னின் - பொன்னாற்செய்யப்பட்ட, மிடை - நெருங்கிய, கொடி - கொடிகளை, மதிதோயும் - சந்திரன்பொருந்துகின்ற, எயிலினில் - மதிலின்புறத்தே, நடுவாரும் - நடுவோரும், அகில் எரி இடுவாரும் - அகிற்கட்டைகளை நெருப்பிலிட்டுப் புகைப்பாரும் (ஆயினர்).—எ-று.

1271. பண்டியி னிறைவாசப் பனிமலர் கொணர்வாரும்
தண்டலை யிலையோடு கனிபல தருவாரும்
குண்டலம் வெயில்வீசக் குரவைகள் புரிவாரும்
உண்டைகொண் மதவேழத் தோடைக ளணிவாரும்.

(இ-ள்) பண்டியில் - பண்டிகளில், நிறைவாசம் - நிறைந்த மணமமைந்த, பனிமலர் - குளிர்ந்தமலர்களை, கொணர்வாரும் - கொண்டுவருவாரும், தண்டலை - சோலையிலுள்ள, இலையோடு - (வாழைமுதலியவற்றின்) இலைகளோடு, பலகனி - பல (வகைக்) கனிகளை, தருவாரும் - கொண்டுவந்து கொடுப்பாரும், குண்டலம் - (காதிலணிந்த) குண்டலங்கள், வெயில்வீச - வெயிலைவீசும்படி, குரவைகள்புரிவாரும் - குரவைக்கூத்தாடுவாரும், உண்டைகொள் - உண்டையடியைக்கொண்ட, மதவேழத்து - (நீராட்டிய) மதயானைகளுக்கு, ஓடைகள் அணிவாரும் - முகபடாத்தை யணிகின்றாரும் (ஆயினர்)—எ-று. (உஅ)

உண்டைகொள் வேழமென்றதனால், நீராட்டியவென்பது பெறப்பட்டது. இலை - வெள்ளிலை யெனினு மொக்கும்.

1272. கலவைகள் புனைவாருங் கலைநல தெரிவாரும்
மலர்குழல் மலைவாரும் மதிமுக மணியாடித்
திலகமு னிடுவாருஞ் சிகழிகை யணிவாரும்
இலவிதல் பொலிகோல மெழில்பெற விடுவாரும்.

(இ-ள்.) கலவைகள் புனைவாரும் - கலவைச் சந்தனத்தைப் பூசுவாரும், நல்ல கலைதெரிவாரும் - நல்ல ஆடையைத் தெரிந்தெடுப்பாரும், மலர்குழல் மலைவாரும் - மலர்களைக் கூந்தலிலணிவாரும், மதிமுகம் - சந்திரனையொத்த முகத்தில், மணி - அழகிய, ஆடிமுன் - கண்ணாடியின்முன், திலகம் இடுவாரும் - திலகந்தரித்துக்கொள்வாரும், சிகழிகை அணிவாரும் - மாலைகளையணிவாரும், இலவு - இலவமலரையொத்த, இதழ் - அதரத்தில், பொலி - பொலிகின்ற கோலம்- (செஞ்சாயக்) கோலத்தை, எழில்பெற - அழகுபெற, இடுவாரும் - இடுவாரும் (ஆயினர்)—எ-று.

1273. தப்பின மணிகாசுஞ் சங்கமு மயிலன்னார்
ஒப்பனை புரிபோது மூடலி னுகுபோதும்
துப்புற ழிளவாசச் சுண்ணமு முதிர்தாதும்
குப்பைக ளெனவாரிக் கொண்டனர் களைவாரும்.

(இ-ள்.) தப்பின - தெரியாமற் சிந்தின, மணி (உம்) - முத்துக்களையும், காசும்- ரத்நங்களையும், சங்கமும் - கைவளைகளையும், மயில் அன்னார் - மயிலையொத்த மாதர்கள், ஒப்பனைபுரி - அலங்காரம் செய்வதிலுதிர்ந்த, போதும் - மலர்களையும், ஊடலின் உகுபோதும் - ஊடற்காலத்திற் சிந்தின மலர்களையும், துப்பு உறழ் - பவளத்தையொத்த, இளவாசம் - மெல்லிய பரிமளமுள்ள, சுண்ணமும் - பரிமளப் பொடியையும், உதிர்தாதும் - உதிர்கின்ற பொற்பொடியையும், குப்பைகள் என - குப்பைகளென்று, வாரிக்கொண்டனர் - வாரிக்கொண்டு, களைவாரும் - (மனையினின்று) நீக்குவாரும் (ஆயினர்)—எ-று. (௩0)

1274. மன்னவர் வருவாரும் மறையவர் நிறைவாரும்
இன்னிசை மணியாழி னிசைமது நுகர்வாரும்
சென்னியர் திரிவாருஞ் சிலதியர் செறிவாரும்
கன்னலின் மணவேலைக் கடிகைக டெரிவாரும்.

(இ-ள்.) மன்னவர் வருவாரும் - அரசர்கள் வருவாரும், மறையவர் நிறைவாரும் - வேதியர்கள் நிறைவாரும், இன் இசை - இனிய பாட்டிசையும், மணியாழின் இசை - அழகிய யாழினிசையுமாகிய, மது - நறவை, நுகர்வாரும் - செவிவாயாலுண்பாரும், சென்னியர் திரிவாரும் - பாணர்கள் உலாவுவாரும், சிலதியர் செறிவாரும் - சிலதியர் கூடுவாரும், கன்னலின் - நாழிகைவட்டிலால், மணவேலை - திருமணத் தொழிற்குரிய, கடிகைகள் - நாழிகைகளை, தெரிவாரும் - ஆராய்வாரும் (ஆயினர்)—எ-று, (௩௧)

1275. கணிகையர் தொகுவாருங் கலைபல பயில்வாரும்
பணியணி யினமுத்தம் பலவித நிலமன்னர்
அணிநெடு முடியொன்றொன் றறைதலி னுகும்பொன்
மணிமலை தொகுமன்னன் வாயிலின் மிடைவாரும்.

(இ-ள்.) கணிகையர் - நிருத்த மாதர்கள், தொகுவாரும் - கூடுவாரும், கலை பல பயில்வாரும் - நூல்கள் பலவற்றையும் பழகுவாரும், பணி அணி - வடங்களிற் கோர்த்த, இனமுத்தம் - ஓரினமாகிய முத்துக்களில் உதிர்ந்தவையும், அணி நெடு முடி - அலங்கரித்த நெடிய முடிகள், ஒன்று ஒன்று அறைதலின்-ஒன்றோடொன்று தாக்குதலால் உகும் - உதிர்கின்ற, அம்பொன் - அழகிய பொன்னும், மணி - மணிகளும், மலைபோல் தொகும் - குவிகின்ற, மன்னன்வாயிலின் - சக்ரவர்த்தி வீற்றிருக்கின்ற மனைவாயிலில், மிடைவாரும் - (பலசிலமன்னர்) நெருங்குவாரும் (ஆயினர்)—எ-று. (கூஉ)

1276. கேடகம் வெயில்வீசக் கிளரயி னிலவீனக்
கோடுயர் நெடுவிஞ்சைக் குஞ்சர மதுபோல
ஆடவர் திரிவாரு மரிவையர் களிகூரும்
நாடக நவில்வாரும் நகையுயிர் கவர்வாரும்.

(இ-ள்.) கேடகம் — இடக்கையிற்பிடித்த) கேடகமானது, வெயில்வீச - வெயிலெறிக்கவும், கிளர் - (வலக்கையிற்பிடித்த) விளங்குகின்ற அயில் - வாளானது நிலவு ஈன - நிலவை வீசவும், கோடுஉயர் - தந்தங்களுயர்ந்த, நெடுவிஞ்சை - பெரிய போர்க்கல்வியிற் றேர்ச்சியையுடைய, குஞ்சரம்போல - யானையைப்போல, ஆடவர் திரிவாரும் - புருடர்கள் திரிவாரும், அரிவையர்கள் - கணிகை மாதர்கள், களி கூரும் - (கண்டோர்) களிப்புமிகுதற்கேதுவாகிய, நாடகம் நவில்வாரும் - நாடகமாடுவாரும், நகை - நகையால், உயிர் - (அவ்வாடவருடைய) உயிரை, கவர்வாரும் - கிரகிப்பாரும் (ஆயினர்)—எ-று. (கூஉ)

அயில் என்னும் பலபொருளொருசொல், குணவாகுபெயராய்க் கேடகத்துக் கினமாகிய வாளையுணர்த்திற்று.

1277. கதிர்மணி யொளிகாலக் கவர்பொரு டெரியாவா
றெதிர்சுடர் தரமின்னுற் றெழுதலி னிமையோரும்
மதுவிரி குழலாரும் மதிலுடை நெடுவானம்
அதுவிது வெனவோரா தலமர லுறுவாரும்.

(இ-ள்.) கதிர்மணி - கிரணங்களையுடைய மணிகள், ஒளிகால - ஒளிவீசுதலால், கவர் - விரும்புதற்குரிய, பொருள் - பொருள்கள், தெரியா ஆறு - இத்தன்மையவென்று தம்மைக் காண்போர்க்குத்) தோன்றுதவகை, எதிர்சுடர்தர - எதிரொளிவீசும்படி, மின்னுற்று எழுதலின் - (அம்மணிகளின்) ஒளியைப்பெற்றுத் தம்மியற்கை மாறுதலால், இமையோரும் - தேவர்களும், மதுவிரிகுழலாரும் - மலர்த்தேன் ஒழுகுகின்ற கூந்தலையுடைய தெய்வப்பெண்களும், மதில் உடை நெடுவானம் - மதிலையுடைய நெடிய சுவர்க்கம், அது இது என ஓராது - (தாமிருந்த) அந்நகரமென்றும் (தாம்வந்த இந்நகரமென்றும் உணராமல், அலமரல் உறுவாரும் - மயங்குவாரும் (ஆயினர்)—எ-று. (கூச)

1278. தேர்மிசை வருவாருஞ் சிவிகையில் வருவாரும்
ஊர்தியில் வருவாரு மொளிமணி நிறையோடைக்
கார்மிசை வருவாருங் கரிணியில் வருவாரும்
பார்மிசை வருவாரும் பண்டியில் வருவாரும்.

(இ-ள்.) தேர்மிசை வருவாரும - தேரின்மேல் வருவாரும், சிவிகையில் வருவாரும் - சிவிகையின்மேல் வருவாரும், ஊர்தியில் வருவாரும் - குதிரையின்மேல்

வருவாரும், ஒளிமணி நிரை ஓடை கார்மிசை வருவாரும் - ஒளியையுடைய மணிகளை முறையே பதித்த முகபடாமணிந்த யானையின்மேல் வருவாரும், கரிணியில் வருவாரும் - பெண்யானையின்மேல் வருவாரும், பார்மிசை வருவாரும் - பூமியின் மேல்நடந்துவருவாரும், பண்டியில் வருவாரும் - பண்டியின்மேல் வருவாரும், (ஆயினர்)—எ-று. (௩௫)

ஊர்தி என்பதற்குப், பரிமா வென்பது பாரி சேடத்தாற் பெறப்பட்டது, ஈண்டுக்கூறுதொழிந்த ததுவே யாகலின்.

1279. முத்தணி யணிவாரும் மணியணி முனிவாரும்
பத்தியி னிமிர்செம்பொற் பலகலன் மகிழ்வாரும்
தொத்துறு தொழின்மாலை சுரிகுழ லணிவாரும்
சித்திர நிரைதோயுஞ் செந்துகில் புனைவாரும்.

(இ-ள்.) முத்து அணி அணிவாரும் - முத்தினாற் செய்யப்பட்ட அணிகளை யணிவாரும், மணி அணி முனிவாரும் - (முன்னணிந்திருந்த மற்றை) மணியணிகளை நீக்குவாரும், பத்தியின் - முறைப்பட, நிமிர்செம்பொன் - உயர்ந்த செம்பொன்னாற் செய்யப்பட்ட, பலகலன் - பல அணிகளை, மகிழ்வாரும் - மகிழ்ந்தணிவாரும், தொத்து உறு - பூங்கொத்துக்கள் தங்கிய, தொழில் - தொழில் குறைவின்றி முடிந்த, மாலை - மாலையை, சுரிகுழல் அணிவாரும் - சுழித்தகொண்டையில் அணிவாரும், சித்திரம் - சித்திரத்தொழிலானது, நிரைதோயும் - முறையாயமைந்த, செந்துகில் புனைவாரும் - செம்பொனுடையை யுடுப்பாரும் (ஆயினர்)—எ-று. (௩௬)

1280. விடநிகர் விழியாரு மமுதெனு மொழியாரும்
கிடைபுரை யிதழாருங் கிளர்நகை வெளியாரும்
தடமுலை பெரியாருந் தனியிடை சிறியாரும்
பெடையன நடையாரும் பிடியென வருவாரும்.

(இ-ள்.) விடம் நிகர் - விஷத்தையொத்த, விழியாரும் - கண்களையுடையாரும், அமுது என்னும் - அமுதென்று சொல்லுதற்குரிய, மொழியாரும் - சொற்களையுடையாரும், கிடைபுரை இதழாரும் - செங்கிடையையொத்த இதழையுடையாரும், கிளர் நகை வெளியாரும் - விளங்குகின்ற வெண்ணகையையுடையாரும், தடம் முலை பெரியாரும் - மலைபோன்ற முலைகள் பெரியாரும், தனி இடை சிறியாரும் - (நுண்பொருள்களில்) ஒப்பற்ற இடைசிறியாரும், பெடை அன்னம் நடையாரும் - பெண்ணன்னம்போலும் நடையை யுடையாரும், பிடி என வருவாரும் - பெண்யானைபோல வருவாரும் (ஆயினர்)—எ-று. (௩௭)

1281. உண்ணிறை நிமிர்செல்வ மொருதுறை சொலவென்றும்
கண்ணுற லரிதென்றுங் கருதுத லரிதம்மா
எண்ணுறு சுடர்வானத் திந்திரன் முடிசூடும்
மண்ணுறு திருநாளே யொத்தத மணநாளே.

(இ-ள்.) உள் - மிதிலாநகரத்தினுள், நிறை - (இவ்வாறு) நிறைந்து, நிமிர் செல்வம் - உயர்ந்தவைபவத்தை, ஒருதுறைசொல்ல - ஒருவாறு முழுதுஞ்சொல்லி முடிக்க, என்றும் - எப்பொழுதும், கண்ணுறல் அரிது - பார்த்தளவிடலுமரிது, என்றும் - எப்பொழுதும், கருதுதல் அரிது - கருதியளவிடலுமரிது, அம்மா - இதுவியக்கத்தக்கது, எண்ணுறு - யாவரும் மதிக்கின்ற, சுடர் - ஒளியமைந்த,

வானத்து - சுவர்க்கத்தில், இந்திரன் - இந்திரனானவன், முடிசூடும் - முடிசூடுதற் குரிய, மண்ணுறு - அலங்கரிக்கப்பெற்ற, திருநாளே - திருநாளையே, அ மண நாள் - அத்திருமணநாளானது, ஒத்தது - ஒத்திருந்தது—எ-று. (௩௮)

வேறு.

1282. கரைதெரி வரியது கனகம் வேய்ந்தது
வரையென வுயர்ந்தது மணியிற் செய்தது
நிரைவளை மணவினை நிரப்பு மண்டபம்
அரைசர்த மரசனு மணுகன் மேயினான்.

(இ-ள்.) கரை தெரிவு அரியது - (நீளம் பரப்பு இவற்றின்) எல்லை யறிவரியதும், கனகம் வேய்ந்தது - பொற்றகட்டால் முகடுமூடியதும், வரையெனவுயர்ந்தது - மலைபொலுயர்ந்ததும், மணியின் செய்தது - (சுவர்தூண் முதலியன) மணிகளாற்செய்ததுமாகிய, நிரைவளை - வரிசையா யணிந்த வளையலையுடைய பிராட்டியின், மணவினை - திருமணத்துக்குரிய காரியங்களை, நிரப்பும் - குறைவின்றி நிறைவேற்றிவைத்த, மண்டபம் - மண்டபத்தில், அரைசர்தம் அரசனும் - சக்ரவர்த்தியும், அணுகல் மேயினான் - சேர்தலைப்பொருந்தினான்—எ-று. (௩௯)

1283. வெண்குடை யிளநிலா விரிக்க மின்னெனக்
கண்குடை யினமணி வெயிலுங் கான்றிடப்
பண்குடை வண்டினம் பாட வாடன்மா
மண்குடை தூளிவிண் மறைப்ப வேகினான்.

(இ-ள்.) வெண் குடை-தன்வெண்கொற்றக்குடைகள், இளநிலாவிரிக்க-புதுநிலவெறிப்பவும், மின் என்-மின்னலைப்போல, கண் குடை-கண்களையுருவுகின்ற, இனம் மணி - கூட்டமாகிய பலமணியணிகள், வெயிலும் கான்றிட - (நிலவையே யன்றி) வெயிலையும் வீசவும், பண் - பண்பாடு மியல்பமைந்த, குடை-தன்தோள் மாலையில் குடைந்துமொய்த்த, வண்டினம் - வண்டின் கூட்டங்கள், பாட - பாடவும், ஆடல்மா - வெற்றியையுடைய குதிரைகள், மண்குடைதூளி - மண்ணைக் (காலால்) கிளைத்தற்கண் எழுந் துகள், விண்மறைப்ப - ஆகாயத்தை மறைக்கவும், ஏகினான் - சென்றான்—எ-று. (௪௦)

1284. மங்கல முரசின மழையி னார்த்தன
சங்குகள் முரன்றன தாரை போரெனப்
பொங்கின மறையவர் புகலு நான்மறை
கங்குலி னொலிக்குமா கடலும் போன்றவே.

(இ-ள்.) மங்கலமுரசு இனம் - மங்கலமுரசின்கூட்டம், மழையின் ஆர்த்தன - மேகம்போலொலித்தன, சங்குகள் - சங்குகள், முரன்றன - ஒலித்தன, தாரை - தாரைகள், போர் என - போரென்று, பொங்கின - மிக்கொலித்தன, மறையவர் - வேதியர்கள், புகலும் - சொல்லுகின்ற, நால்மறை - நால்வேத வோசைகள், கங்குலின் - இரவில், ஒலிக்கும் - (மிகுதியும்) ஒலிக்கின்ற, மாகடலும்போன்ற - பெரிய கடலோசையையும் ஒத்திருந்தன—எ-று. (௪௧)

உம்மை - சிறப்பு. போர் - ஒலிக்குறிப்பு.

1285. பரந்ததேர் களிறுபாய் புரவி பண்ணையில்
தரந்தர நடந்தன தானை வேந்தனை

நிரந்தரந் தொழுதெழு நேமி மன்னவர்
புரந்தரன் புடைவரு மமரர் போன்றனர்.

(இ-ள்.) தேர் - தேர்களும், களிறு - யானைகளும், பாய்புரவி-பாய்ந்துசெல்லுங் குதிரைகளும், பண்ணையில் பரந்த - அணியாகப்பரவிச்சென்றன, தானை - பதாதிப் படைகள், தரம்தரம் - இனமினமாக, நடந்தன - நடந்தன, வேந்தனை - சக்கரவர்த்தியை, நிரந்தரம்-எப்பொழுதும், தொழுது எழும் - தொழுதெழுகின்ற, நேமிமன்னவர் - பூலோகத்தரசர்கள், புரந்தன் புடைவரும் - இந்திரனுக்கு அயலில்வருகின்ற, அமரர்போன்றனர் - தேவர்களையொத்திருந்தனர்—எ-று. (சஉ)

1286. அனையவன் மண்டப மணுகி யம்பொனின்
புனைமணி யாதனம பொலியத் தோன்றினன்
முனைவரு மன்னரு முறையி னேறினர்
சனகனுந் தன்கிளை தழுவ வேறினன்

(இ-ள்.) அனையவன்-அத்தன்மையனாய்வந்த சக்ரவர்த்தி, மண்டபம் அணுகி-மண்டபத்தைச்சேர்ந்து, அம்பொன்னின்புனை - அழகிய பொன்னாலலங்கரித்த, மணி ஆதனம் - மணிகள் பதித்த ஆசநத்தில், பொலிய-(அது) பொலிவை யடையும்படி, தோன்றினன் - ஏறி வீற்றிருந்தான், முனைவரும் - முனிவர்களும், மன்னரும் - அரசர்களும், முறையின் ஏறினர் - முறையாக (ஆசநங்களில்) ஏறியிருந்தார்கள், சனகனும் - ஜநகமஹாராஜனும், தன்கிளைதழுவ-தன்சுற்றத்தார் சூழும்படி, ஏறினன் - (ஆசநத்தில்) ஏறியிருந்தான்—எ-று. (சங)

1287. மன்னரு முனிவரும் வானு ளோர்களும்
அன்னமென் னடையணங் கனைய மாதரும்
துன்னினர் துவன்றினர் சுடர்கள் சூழ்வரும்
பொன்மலை யொத்ததப் பொருவில் கூடமே.

(இ-ள்.) சுடர்கள் சூழ்வரும் - (சூரியன் முதலிய) சுடர்கள் வலம் வருகின்ற, பொன்மலை ஒத்தது - மேருமலையை யொத்ததாகிய, பொருவு இல் - வேறு ஒப்பில்லாத, அ கூடம்-அந்த மண்டபத்தில், மன்னரும் - அரசர்களும், முனிவரும் - முனிவர்களும், வான் உளோர்களும் - தேவர்களும், அன்னம் மெல் நடை - அன்னத்தின் மெல்லிய நடையையுடைய, அணங்கு அனைய - தெய்வப்பெண்ணை யொத்த, மாதரும் - மங்கையர்களும், துன்னினர்துவன்றினர் - நெருங்கிநிறைந்தனர்—எ-று. (சச)

மண்டபத்திற்கும் அண்டத்திற்கும்.

1288. புயலுள மின்னுள பொருவில் மீனுள
இயன்மணி யினமுள சுடரி ரண்டுள
மயன்முதற் றிருத்திய மணிசெய் மண்டபம்
அயன்முதற் றிருத்திய வண்ட மொத்ததே.

(இ-ள்.) மயன் - மயனென்னுந் தெய்வத்தச்சன், முதல் - ஆதியில், திருத்திய - குற்றமறச்செய்த, மணிசெய் - மணிகளாற் சமைக்கப்பட்ட, மண்டபம் - மண்டபமானது, (தன்னுள்) புயல் உள - மேகங்களுள்ளன, மின் உள - மின்னல்களுள்ளன, பொருவு இல் - ஒப்பில்லாத, மீன் உள-விண்மீன்களுள்ளன, இயல் - (ஒளியாகிய) இயல்பமைந்த, மணி இனம் உள-மணிக்கூட்டங்களுள்ளன, சுடர் இரண்டு உள - இரண்டு சுடர்களுமுள்ளன, (அதனால்) அயன் - பிரமன், முதல் -

முதலுனில், திருத்திய - படைத்த, அண்டம் ஒத்தது - அண்டத்தையொத்திருந்தது—எ-று. (சரு)

மழையானது உலகிற்கின்றி யமையாத் துணைக்காரணமாதலின், புயலையும்: அதற்குற்பாதமாய் முன்னிகழ்வ தாகலின் மின்னையும்: இரவில்மிளிர்ந்து அண்டத்தை யழகுபெறச் செய்தலின் மீனையும்: மக்கள் முதலியோர் விரும்பும் பொருள்களுள் சிறந்தனவாதலின் மணியினத்தையும்: கிரகபதி சூரியனும், உடுபதி சந்திரனுமாதலின், அத்தலைமை பற்றிச் சுடரிரண்டையும் எடுத்துக் கூறினூர். இங்ஙனங் கூறவே மண்டபம் வானந் தன்னுள் அடங்க உயர்ந்தோங்கிய தென்பதுகருத்து. இவ்வாறன்றிப், புயல்முதல் மணிகாறும் மண்டபத்திலுள்ள மகளிர்களுடைய கூந்தல், இடை, விழி, அணி கலன்கள்மேலேற்றிப் பொருள் கூறுவாருமுளர்.

மண்டபத்திற்கும் திருமால் உதரத்திற்கும்,

1289. எண்டவ முனிவரு மிறைவர் யாவரும்
அண்டரும் பிறரும்புக் கடங்கிற் றுதலால்
மண்டபம் வையமும் வானும் வாய்மடுத்
துண்டவன் மணியணி யுதர மொத்ததே.

(இ-ள்.) எண் - மதிக்கத்தக்க, தவம் - தவத்தையுடைய, முனிவரும் - முனிவர்களும், இறைவர்யாவரும் - எல்லாவிறைவர்களும், அண்டரும் - தேவர்களும், பிறரும் - மற்றையோரும், புக்கு அடங்கிற்று ஆதலால் - புகுந்தடங்கியதாதலால், மண்டபம் - அம்மண்டபமானது, வையமும் - பூமியையும், வானும் - ஆகாயத்தையும், வாய்மடுத்து உண்டவன் - வாயிலிட்டு விழுங்கின இறைவனது, மணி - கௌஸ்துபமணியினுல், அணி - அலங்கரிக்கப்பெற்ற, உதரம் ஒத்தது - திருவயிற்றையொத்திருந்தது—எ-று. (சசு)

இறைவர் என்பதை, மணியணி யுதரத்தின்மே லேற்றிக் கூறும்போது, விதிசிவாதிய ரெனவும், மண்டபத்தின்மேலேற்றிக் கூறும்போது, அரசரெனவும் பொருள் கொள்க. அண்டங்கள் யாவும் வாய்மடுத் துண்டவனென்பார், அவற்றிற்கு முதற்காரணமாகிய பூதங்களைந்தனுள் வையமும் வானும் எனக் கடையும் முதலு மெடுத்துக்கூறினூர்.

ஸ்ரீராமபிரானது செய்தியைச் சொல்லத்தொடங்கினூர்.

1290. தராதல முதலுல கனைத்துந் தள்ளுற
விராவின குவிந்தன விளம்ப வேண்டுமோ
அராவணை துறந்துபோந் தயோத்தி யெய்திய
இராகவன் செய்கையை யியம்பு வாமரோ.

(இ-ள்.) தராதலம் முதல் - பூமிமுதலிய, உலகு-அனைத்தும் - உலகங்களெல்லாம், (திருமணத்தைக் காணவேண்டுமென்னும் விருப்பத்தால்) தள்ளுற - தள்ளப்படலால், விராவினகுவிந்தன - நெருங்கிக்கூடின, விளம்பவேண்டுமோ - (அதை) யான் சொல்லவேண்டுமோ, (வேண்டியதில்லை) அரா அணை - சர்ப்பசயனத்தை, துறந்து போந்து - நீங்கிவந்து, அயோத்தி எய்திய - திருவயோத்தியில் அவதரித்த, இராகவன் செய்கையை - ஸ்ரீராமபிரானது செய்தியை, இயம்புவாம் - சொல்வாம்—எ-று. (சஎ)

திருமஞ்சனம் கண்டருளினூர் என்பது.

1291. சங்கினந் தவழ்கட லேழிற் றந்தன
சிங்கலி லருமறை தெரிந்த தீர்த்தங்கள்

கங்கையே முதலிய கலந்த நீரினால்
மங்கல மஞ்சன மரபி னாடியே.

(இ-ள்.) சங்கு இனம்-சங்குக்கூட்டங்கள், தவழ்-தவழ்கின்ற, கடல் ஏழின் தந்தன - எழுகடலி னின்றுங் கொண்டு வரப்பட்டவற்றையும், சிங்கல் இல் - கெடுதலில்லாத, அருமறைதெரிந்த - அரியவேதங்களால் அறியப்பட்ட, தீர்த்தங்கள் - தீர்த்தங்களாகிய, கங்கையே முதலிய - கங்கை முதலியவற்றையும், கலந்த - சேர்ந்த, நீரினால் - நீரினால், மரபின் - முறைமைப்படி, மங்கலமஞ்சனம் ஆடி - மங்கலமாகிய திருமஞ்சனமாடி—எ-று. (௬௮)

திருமண்காப்பு தரித்தாரென்பது.

1292. என்றுநான் முகன்முதல் யாரும் யாவையும்
நின்றபே ரிருளினை நீக்கி நீணெறி
சென்றுமீ ளாக்குறி சேரச் சேர்த்திடு
தன்றிரு நாமத்தைத் தானுஞ் சாத்தியே,

(இ-ள்.) என்றும் - எப்பொழுதும், நான்முகன் முதல் - பிரமன் முதலாகிய, யாரும் - யாவரும், யாவையும் - யாவும், நின்ற - நிலைத்த, பேர் - பெரிய, இருளினை - (அவித்தை யென்கிற) இருளை, நீக்கி-போக்கி, நீள்நெறி-(ப்ரபத்தி நிஷ்டையென்னும்) பெருவழியில், சென்று - (வேண்டுதல் வேண்டாமையில்லாமல் - ஒழுகி, மீளாக்குறி சேர - மீளாக்கதியாகிய பரமபதத்தில் சேரும்படி, சேர்த்திடு) (நாள் தோறும் நெற்றிமுதலிய தானங்களில்) தரிக்கின்ற, தன் திருநாமத்தை - தனது திருமட்குறியை, தானும் சாத்தி - தானுந்தரித்து—எ-று. (௬௯)

"நின்ற பேரிருளினைநீக்கி நீணெறிசென்று" என்பதற்கு நீணெறி சென்று நின்ற பேரிருளினை நீக்கியெனக்கொண்டுகூட்டி, நெடிய அர்ச்சிராதிமார்க்கத்திற்சென்று, நித்தியமாகிய மூலப்பிரகிருதியைக்கடந்து எனப் பொருள் கொள்ளினு மமையும். நான்முகன் முதலிய அமரர்களுக்கும் ஏனையோருக்கும் வேற்றுமைதோன்ற, "யாரும் யாவையுமெனவும்," அடைந்தோர் மீண்டும் பிறவாவியல் பிற்றாய், வேதபுருஷன் முதலியோரால் உயர்வாகக் கருதிக் கூறப்படுவது வீடு ஒன்றுமேயாகலின், அதனை "மீளாக்குறி" யெனவும், அக்குறியைச் சேரக்கருதுவோர்க்கு இன்றியமையாத அங்கங்கள் பலவற்றுள்ளும் இது முதன்மைத்தாகலின், "சேரச் சேர்த்திடு" மெனவும், தன்திருவடியாகிருதியாயிடப்படுவதாகலின் "தன்றிருநாம" மெனவும், அது தான்கொண்ட அவதாரத்திற்கேற்ப இட்டானாகலின், சிறப்பும்மை கொடுத்துத் தானுஞ் சாத்தியெனவுங் கூறினார்.

தம் குலதெய்வமாகிய பெருமாளை வணங்கினாரென்பது.

1293. கோதறு தவத்துத்தங் குலத்து ளோர்தொழும்
ஆதியஞ் சோதியை யடி வணங்கினான்
காதியல் கயல்விழிக் கன்னி மார்களை
வேதியர்க் கருமறை விதியி னல்கியே.

(இ-ள்.) கோது அறு - குற்றமற்ற, தவத்து - தவத்தையுடைய, தம்குலத்து உள்ளோர் - தமதுகுலத்திலுள்ளார், தொழும் - வணங்காநின்ற, ஆதியஞ்சோதியை - ஆதியஞ்சோதியாகிய ஆயிரமௌலிப் பெருமானுடைய, அடிவணங்கினான்-திருவடிகளை வணங்கினான், காது இயல் - காதளவுமுலாவுகின்ற, கயல்விழி - சேல்போன்ற கண்களையுடைய, கன்னிமார்களை - கன்னிப்பெண்களை, வேதியர்க்கு - அந்தணர்களுக்கு, அருமறைவிதியின் - அரியவேதவிதிப்படி, நல்கி - தானஞ்செய்து—எ-று. (௭௦)

சாத்துபடி அணிந்தாரென்பது.

1294. அழிவரு தவத்தினோ டறத்தை யாக்குவான்
ஒழிவருங் கருணையோ ருருவு கொண்டென
எழுதரு வடிவுகொண் டிருண்ட மேகத்தைத்
தழுவிய நிலவெனக் கலவை சாத்தியே

(இ-ள்.) அழிவரு தவத்தினோடு - (காப்பாரில்லாமல்) அழிதல் வருகின்ற தவத்தோடு, அறத்தை - தர்மத்தை, ஆக்குவான் - வளர்க்க, ஒழிவு அரு - நீங்குதலில்லாத, கருணை - கிருபையென்பது, ஓர் உருவு கொண்டென-ஓர்வடிவுகொண்டாற்போல, எழுது அரு - எழுதுதலரிய, வடிவுகொண்டு - திருவுருக்கொண்டு, இருண்டமேகத்தை-இருண்ட மேகத்தினை, தழுவிய நிலவு என-தழுவிய நிலவைப்போல, கலவைசாத்தி - கலவைச்சந்தனத்தைத் திருமார்பு முதலிய இடங்களில் அப்பி—எ-று. (ருக)

இருண்டமேகமும், தழுவிய நிலவும் இறைவனது லீலாமாநுஷ விக்ரஹத்துக்கும் அதன்மீது சாத்திய கலவைச்சந்தநத்துக்கும் உவமை.

பலவிதமாலை தரித்தாரென்பது.

1295. மங்கல முழுநிலா மலர்ந்த திங்களைப்
பொங்கிருங் கருங்கடல் பூத்த தாமெனச்
செங்கிடைச் சிகழிகைச் செம்பொன் மாலையும்
தொங்கலுந் துயல்வரச் சுழியஞ் சூடியே.

(இ-ள்.) மங்கலம் - மங்களகரமான, முழுநிலா - முழுநிலவை, மலர்ந்த - விரித்த, திங்களை - பூர்ணசந்திரனை, பொங்கு - பொங்குகின்ற, இரு - பெருமையமைந்த, கருங்கடல் - கருங்கடலானது, பூத்தது ஆம் என - பூத்தது என்னும்படி, செங்கிடை - செங்கிடையாற்செய்த, சிகழிகைச் செம்பொன் மாலையும் - 'சிகழிகை' என்னும் செம்பொன்னாற்செய்த மாலையும், தொங்கலும்-பூமாலையும், துயல்வர - (முகத்தருகே) அசையும்படி, சுழியம் - சுழித்துமுடிக்கும் மயிர்முடியில், சூடி - தரித்து—எ-று. (ருஉ)

செங்கிடை - செஞ்சடை.

குண்டலங்கள் அணிந்துகொண்டாரென்பது.

1296. ஏதமி லிருகுழை யிரவு நன்பகல்
காதல்கண் டுணர்ந்தன கதிருந் திங்களும்
சீதைதன் கருத்தினைச் செவியி னுள்ளுறத்
தூதுசென் றுரைப்பன போன்று தோன்றவே.

(இ-ள்.) ஏதம் இல் - குற்றமில்லாத, இருகுழை - இரண்டு குண்டலங்களும் இரவுநன்பகல் - இரவிலும் நன்பகலிலும், காதல்கண்டு உணர்ந்தன - (தன்பால் வைத்த) ஆசையைக்கண்டு உணர்ந்தனவாகிய, கதிரும்திங்களும் - சூரியனும் சந்திரனும், சீதைதன்கருத்தினை - சீதாபிராட்டியின் கருத்தை, செவியின் உள் உற-(இறைவனது) திருச்செவிகளில் மிகவும், தூதுசென்று உரைப்பனபோன்று தோன்ற - தூதாகப்போய்ச் சொல்வன போன்று விளங்க—எ-று. (ருங)

வீரபட்ட மணிந்தனரென்பது.

1297. கார்விடக் கறையுடைக் கணிச்சி வானவன்
வார்சடைப் புடையினோர் மதி மிலைச்சித்தான்

சூர்சுடர்க் குலமெலாஞ் சூடி னனென
வீரபட் டத்தொடு திலக மின்னவே.

(இ-ள்) கார் — கருமையாகிய, விடக்கறை - விஷக்கறையை, உடை - (கண்டத்தில்) உடைய, கணிச்சிவானவன் - சிவனுக்கு, வார் - நீண்ட, சடைப்புடையின் - சடையின் பக்கத்தில், ஓர்மதிபிலைச்சி - ஒருபிறைச்சந்திரனை அணிந்தருளி, தான் - தான், சூர் - தெய்வத்தன்மையுள்ள, சுடர்க்குலம் எல்லாம் - (தேய்வில்லாத) சுடர்க்கூட்டங்களையெல்லாம், சூடினன் என - சூடினனென்னும்படி, வீரபட்டத்தோடு - வீரபட்டத்துடன், திலகம் - திருமட்குறி, மின்ன - நெற்றியில் மின்னுதல்செய்ய—எ-று. (௬௭)

கணிச்சி - மழு.

முத்துவடம் அணிந்தனரென்பது.

1298. சக்கரத் தயல்வருஞ் சங்க மாமென
மிக்கணி கழுத்தணி தரள வெண்கொடி
மொய்க்குமென் குழலினாள் முறுவ லுள்ளுறப்
புக்கன நிறைத்துமெய் பொடித்த போன்றவே.

(இ-இ.) சக்கரத்து அயல்வரும் - சக்கரத்துக்கயலில்வருகின்ற, சங்கம்ஆம் என - சங்கமென்னும்படி, கழுத்து - கண்டத்தில், மிக்க - விலைமிகுந்த, அணி - செம்மணி அணிக்குஅயலில், அணி - அணியப்பட்டிருக்கிற, தாளம் வெண்கொடி - முத்தவெண்மாலைகள், மொய்க்கும் - நெருங்கும், மெல்குழலினாள் - மெல்லிய கூந்தலையுடைய சீதாபிராட்டியின், முறுவல் - நகைகள், உள் - உள்ளத்தில், உற - பொருந்த, புக்கன - புகுந்தனவாகி, நிறைந்து - நிரப்பி, மெய் - மார்பில், பொடித்த போன்ற - அரும்பின போன்றன—எ-று. (௬௮)

கொடி - உருமவாகுபெயர். மெய்யென்பதற்கு மார்பென்றது உள்ளத்துக்கிட மதுவாதலினென்க.

வாகுவலயம் அணிந்தனரென்பது.

1299. பந்திசெய் வயிரங்கள் பொறியிற் பாடுற
அந்தமில் சுடர்மணி யழலிற் றோன்றலால்
சுந்தரத் தோளணி வலயந் தொல்லைநாள்
மந்தரஞ் சுற்றிய வரவை மானுமே.

(இ-ள்.) பந்தி செய் - முறையாகப்பதித்த, வயிரங்கள் - வயிரமணிந்த, பொறியின் - புள்ளிகளைப்போல, பாடு உற - பெருமையாய்ப்பொருந்த, அந்தம் இல் - முடிவில்லாத, சுடர் - சுடரையுடைய, மணி - செம்மணிகள், அழலின் தோன்றலால் - தீயைப்போலத்தோன்றுதலால், சுந்தரம் — அழகாகிய, தோள்அணி - தோளில்அணிந்த, வலயம் - வலயமென்னும் அணியானது, தொல்லை நாள் - முன்னாளில், மந்தரம்சுற்றிய - மந்தரமலையைச்சுற்றிய, அரவைமானும் - பாம்பையொத்தது—எ-று. (௬௯)

அழலென்றது மந்தரத்தைச்சுற்றிக் கடையாநிற்புழி வாசுகி உடல் வருத்தத்தாற் சீறிக்கண் உமிழ்ந்ததீயை.

கைநடுவில் கோவைவடம் அணிந்தனரென்பது.

1300. கோவையின் பெருவட முத்தங் கோத்தன
காவல்செய் தடக்கையி னடுவட் காந்துவ
மூவகை யுலகிற்கு முதல்வ னுமென
ஏவரும் பெருங்குறி யிட்ட போன்றவே.

(இ-ள்.) பெருமுத்தம்கோத்தன - பெரியமுத்துகளால் கோக்கப்பட்டனவாகிய, கோவையின் வடம் - கோவை வடங்கள், காவல்செய் - (எல்லாவுயிர்களையும்) காக்கின்ற, தடம் கையின் நடுவண் - பெரியகையினடுவில், காந்துவ - விளங்குவன, (எத்தன்மைத் தெனின்) மூவகை உலகிற்கும் - மூவகைப்பட்ட உலகங்களுக்கும், முதல்வன் ஆம் என - முதல்வன் இவனுமென்று, (யாவருமுணரும்படி) ஏவரும் - நீங்குதலரிய, பெருங்குறி இட்டபோன்ற - பெருங்குறியிட்டது போன்றன—எ-று. (இஎ)

கடகங்கள் அணிந்தனரென்பது.

1301. மாண்டபொன் மணியணி வலயம் வந்தெதிர்
வேண்டினர்க் குதவுவான் விரும்பிக் கற்பகம்
ஈண்டுதன் கொம்பிடை யீன்றதாமென
காண்டகு தடக்கையிற் கடக மின்னவே.

(இ-ள்.) மாண்டபொன் - மாட்சிமைப்பட்ட பொன்னாலும், மணி - மணிகளாலுமமைந்த, அணி - அழகாகிய, வலயம் - வாகுவலயமானது, எதிர்வந்து - தன்னெதிரேவந்து, வேண்டினர்க்கு - வேண்டினவர்களுக்கு, உதவுவான் - (விரும்பியபொருளைக் காலவிளம்பம் செய்யாமல்) உதவும்படி, விரும்பி - இச்சித்து, கற்பகம் - கற்பகத்தருவானது, ஈண்டுதன் கொம்பு - வளர்கின்ற தன்கொம்பை, இடை ஈன்றது ஆம் என - இடையே கிளைத்தாற்போல, காண்தகு - விளங்கத்தக்க, தடக்கையின் - பெரிய கைகளில், கடகம் மின்ன - கடகங்கள்மின்னும்படி அணிந்து—எ-று. (இஅ)

முன்கைகளிற் கடகமணிதலை யணிந்துரைப்பார், அதுவிட்டுக் கடகமின்னவெனவாளாகூறித் தோள்வலயத்தை யீண்டு மணிந்துரைத்தது, ஆடவர்பெண்மையை யவாவுஞ் சுந்தரத்தோள்களாகலின், அவற்றின்பேரழகில் தங்கருத்து முற்றத் தோய்ந்ததனு லென்க. இதுபற்றியன்றே உலாவியற்படலத்தில் பத்தொன்பதாவது திருவிருத்தத்தில், அவயவங்களைக்கூறுவார் தோளை முற்கூறியதூஉமென வுணர்க. இப்பெருங்காப்பியத்துட் பலவிடத்து மிவ்வாறே தோளைக் கூறல் ஆங்காங் குணர்க.

திருமார்பில் மணிவடம் அணிந்தனரென்பது.

1302. தேனுடை மலர்மகள் திளைக்கு மார்பினில்
தானிடை விளங்கிய தகையி னாரந்தான்
மீனொடு சுடர்விட விளங்கு மேகத்து
வானிடு வல்லென வயங்கிக் காட்டவே.

(இ-ள்.) தேன் உடை மலர்கள் - தேனைத் தன்னிடத்துடைய தாமரைமலரிலெழுந்தருளிய திருமகள், திளைக்கும் - வசித்தற்குரிய, மார்பின்இடையில் - மார்பினது இடையில், விளங்கிய - விளங்காநின்ற, தகையின் - அழகை யுடைய, ஆரம் - (பலமணிகள்கோத்த) வடமானது, மீன்சுடர்விட - விண்மீன்கள் (தன்

னிடத்தே) ஒளிசெயலால், விளங்குமேகத்து - விளங்குகின்ற மேகத்தில், வானிடு வில் என - வானவில்லைப்போல, வயங்கிக்காட்ட - பிரகாசித்துத்தோன்ற—எ-று.

ஓடு - இசைநிறை தான் - இரண்டும் அசை.

உத்தரீயம் அணிந்தனரென்பது.

1303. நணுகவு நிமிரவு நடக்கும் ஞானத்தர்
உணர்வினி னொளிதிக ழுத்த ரீயந்தான்
தணிவருங் கருணைதன் கழுத்திற் சாத்திய
மணியுமிழ் கதிரென மார்பிற் றோன்றவே.

(இ-ள்) நணுகவும் - தன்னிலடங்கவும், நிமிரவும் - அடங்காதுவிரிந்து உயரவும், நடக்கும் - நடக்கின்ற, ஞானத்தர் - ஞானத்தை யுடையாரது, உணர்வினின் - (மாசற்ற) அறிவைப்போல, ஒளிதிகழ் - ஒளிவிளங்குகின்ற, உத்தரீயம் - வெண்பட்டுத்தரீயமானது, தணிவு அரு - அடங்காது பெருகுகின்ற, கருணை - அருளே உருவமாயினனது, கழுத்தில் சாத்திய - கழுத்தில்பூண்ட, மணி - முத்துவடம், உமிழ் - இருபக்கங்களிலுமெறிகின்ற, கதிர் என - நிலவைப்போல, மார்பில்தோன்ற - மார்பினிடத்துக்காணப்பட—எ-று. (௬0)

முப்புரிநூலின் காட்சி இவையென உணர்த்துகின்றது.

1304. மேவருஞ் சுடரென விளங்கு மார்பினூல்
ஏவருந் தெருந்தினி துணர்மி னீண்டெனத்
தேவரு முனிவருந் தெரிக்க லாமுதல்
மூவருந் தானென முடிந்த தொத்ததே.

(இ-ள்.) மேவு அரு - அடைதலரிய, சுடர் என - சூரியனைப்போல, விளங்கும் - பிரகாசிக்கின்ற, மார்பின் நூல் - மார்பிலணிந்த முப்புரிநூலானது தேவரும் - தேவர்களாலும், முனிவரும் - முனிவர்களாலும், தெரிக்கலா - தெரிவிக்கலாகாத, முதல் - முதன்மையாகிய, மூவரும் - மும்மூர்த்திகளும், தான் என - தானேயென்று, ஏவரும் - எவர்களும், ஈண்டு - இவ்விடத்து, தெரிந்து இனிது உணர்மின் என - இனிதாய்த் தெரிந்துணருங்கோள் என, முடிந்தது ஒத்தது - முடிந்ததையொத்தது—எ-று. (௬௧)

உதரபந்தனம் என்னும் அணியை அணிந்தனரென்பது.

1305. சுற்றுநீ டணிமணிச் சோதி பொங்கமேல்
ஒற்றைமா மணியுமி ழுதர பந்தனம்
மற்றுமோ ரண்டமு மயனும் வந்தெழப்
பொற்றடந் தாமரை பூத்த போன்றதே.

(இ-ள்.) அணி மணி - (தன்னிற்பதித்த) அழகிய மணிகளின், சுற்றும் நீடு - சுற்றிலும்பெருகுகின்ற, சோதிபொங்க - ஒளிமிகாநிற்ப, மேல் - மேலிடத்தில், ஒற்றை மாமணி - ஒன்றாகிய பெரியமணி, உமிழ் - (ஒளியை) உமிழ்கின்ற, உதர பந்தனம் - உதரபந்தனம் என்னும் அணி, மற்றும் ஓர் அண்டமும் - வேறுமோரண்டமும், அயனும் - பிரமனும், வந்து எழ - வந்துதிக்கும்படி, தடம் - பெரிய, பொன் தாமரை பூத்த போன்றது - பொற்றாமரை பூத்ததை யொத்திருந்தது. ()

உதரபந்தனம், அடிவயிற்றினின்று நழுவி விழாமல் ஆடைமுதலியவற்றை இறுக்குதற்குக் கட்டும் அணி.

வெள்ளிறப்பட்டாடை அணிந்தனரென்பது.

1306. மண்ணுறு சுடர்மணி வயங்கித் தோன்றிய
கண்ணுறு கருங்கட லதனைக் கைவளர்
தண்ணிறப் பாற்கடல் தழீஇய தாமென
வெண்ணிறப் பட்டொளி விளங்கச் சாத்தியே.

(இ-ள்) மண்ணுறு - அலங்கரித்தற்குரிய, சுடர்மணி - சுடரையுடையமணிகள், வயங்கித் தோன்றிய - ஒளிசெய்து தோன்றிய, கண் உறு - பெருமையமைந்த, கருங்கடலதனை - கருங்கடலை, கைவளர் - அழகுமிக்க, தண் - குளிர்ச்சியமைந்த, நிறம் - வெண்ணிறத்தை யுடைய, பால் கடல் - பாற்கடலானது, தழீஇயது ஆம் என - தழுவியதுபோல, (நானாவித ரத்நாபரணங்கள் திருமேனியில் விளங்கா நிற்கத் திருவரையில்), ஒளிவிளங்க - ஒளிவிளங்கும்படி, வெள் நிறம் பட்டு சாத்தி - வெண்ணிறப் பட்டாடையை யணிந்து—எ-று. (சஙு)

வாள் கட்டினரென்பது.

1307. சலம்வரு தரளமுந் தயங்கு நீலமும்
அலம்வரு நிழலுமி ழம்பொற் கச்சினுல்
குலம்வரு கனகவான் குன்றை நின்றுடன்
வலம்வரு கதிரென வாளும் வீக்கியே.

(இ-ள்.) சலம் வரு தரளமும் - (தன்னிற் கோத்த) நீடிய பகை யமைந்த முத்துகளும், தயங்கும் நீலமும் - விளங்குகின்ற நீலமணிகளும், அலம்வரு - நிரம்பிய, நிழல் உமிழ் - ஒளியைவீசுகின்ற, அம்பொன் கச்சினுல் - அழகிய பொற்கச்சினுல், குலம்வரு - தன்னினங்கள் சூழ்ந்துவருகின்ற, வான் - சிறந்த, கனகக் குன்றை - பொன்மலையை, நின்று - நிலைபெற்று, உடன் வலம் வரு - சேர வலம் வருகின்ற, கதிர் என - சூரியனைப்போல, வாளும் வீக்கி - வாளையும் கட்டி—எ-று.

முறையே வெண்ணிலவும் காரொளியும் விரித்தலிற் "சலம்வரு தரளமு நிலமு" மென்றார். சலம்வரல் இலக்கணை.

வாளின்பக்கத்தில் மணிமாலை தொங்குப்படி அணிந்தனரென்பது.

1308. முகைவிரி சுடரொளி முத்தின் பத்திவான்
தொகைவிரி பட்டிகைச் சுடருஞ் சுற்றிடத்
தகையுடை வாளெனுந் தயங்கு வெய்யவன்
நகையிள வெயிலெனத் தொங்க னாற்றியே.

(இ-ள்.) முகை விரி - அரும்புவிரிகின்ற, சுடர் சுடராகிய, ஒளி - ஒளியையுடைய, முத்தின்பத்தி - முத்துவரிசையின், வான் தொகை - மிக்கதொகையால் அமைத்த, விரி - விரிந்த, பட்டிகை சுடரும் - அரைப்பட்டியினது சுடரும், சுற்றிட - சூழாநிற்க, தகை உடைவாள் என்னும் - அழகையுடைய வாளென்ற, தயங்கு - விளங்குகின்ற, வெய்யவன் - சூரியனது, நகை - ஒளியாகிய, இளவெயில் என - இளவெயில்போல, தொங்கல் நாற்றி - (அவ்வாளின் பக்கத்தில்) மணிமாலையைத் தொங்க அணிந்து—எ-று. (சஙு)

1309. காசொடு கண்ணிழல் கஞலக் கைவினை
ஏசறு கிம்புரி எயிறு வெண்ணிலா

விசலின் மகரவாய் விளங்கு மின்னென
ஆசையை யொளிகளா லளந்து காட்டவே

(இ-ள்) காசொடு - மணிவடங்களி னெழியோடு, கண் நிழல் கஞல-(வியந்து பார்ப்போருடைய) கண்ணொளியும் நிரம்பாநிற்க, கைவினை - கைத்தொழில், ஏசு அறு - பழிப்பில்லாத, கிம்புரி-(அவ்வாளினுடைய) கிம்புரிப்பூணினது, எயிறு - தந்தங்கள், வெள் நிலா வீசலின் - வெண்ணிலவை வீசுதலை யுடைய. மகர வாய் - மகரமீன் வாயில், விளங்கும் - விளங்காநின்ற, மின் என - மின்னலைப் போல, ஆசையை - திசைகளை, ஒளிகளான் - தம்மொளிகளால், அளந்துகாட்ட - (இவ்வளவினவென்று) அளந்துகாட்டாநிற்க—எ - று. (௬௬)

சிலம்புகள் அணிந்தனரென்பது.

1310. இனிப்பரந் துலகினை யளப்ப தெங்கனத்
தனித்தனித் தடுப்பன போலுஞ் சால்பின
நுனிப்பரு நுண்வினைச் சிலம்பு நோன்கழல்
பனிப்பருந் தாமரைப் பாதம் பற்றவே

(இ-ள்) பரந்து - பரந்தவடிவாகி, உலகினை - உலகத்தை, இனி அளப்பது எங்கு என - இனியளப்பதெப்படியென்று, தனித்தனி தடுப்பன போலும் சால்பின - தனித்தனி நின்று தடுப்பன வொக்கின்ற இயல்பினவாகி, நுனிப்பு அரு - நுட்பமா யறிதலுமரிய, நுண்வினை - நுண்டொழிலமைந்த, சிலம்பு - சிலம்புகள், நோன்கழல் - வலிய வீரக்கழலையணிந்த, பனி - குளிர்ச்சியையுடைய, பருந்தாமரை - பெரிய தாமரை மலர்போன்ற, பாதம் - பாதங்களை, பற்ற - சூழப் பொருந்த—எ - று. (௬௭)

தேவர்கள் தவவலியால் யோகநித்திரை நீங்கிய இறைவனாகிய
ஸ்ரீராமபிரான்மேற்கொண்ட அலங்காரத்தைக் கொண்டனரென்பது.

1311. இன்னண மொளிர்தர விமைய வர்க்கெலாம்
தன்னையே யனையதோர் கோலந் தாங்கினான்
பன்னக மணிவிளக் கழலும் பாயலுள்
அன்னவர் தவத்தினா லனந்த னீங்கினான்

(இ-ள்) இன்னணம் - இவ்வாறு, ஒளிர்தர - விளங்கும்படி, இமையவர்க்கு எல்லாம் - எல்லாத்தேவர்களினும், தன்னையே அனையது - தன்னையே யொத்ததாகிய, ஓர் - வேறு ஒப்பில்லாத, கோலம் தாங்கினான் - அலங்காரத்தைக்கொண்டான், மணிவிளக்கு அழலும் - மாணிக்கவிளக்குகள் பிரகாசிக்கிற, பன்னகப்பாயலுள் - சர்ப்ப சயநத்தில், அன்னவர் - அந்தத்தேவர்களுடைய, தவத்தினால் - தவவலியால், அனந்தல் நீங்கினான்-யோகநித்திரை நீங்கிய இறைவனாகிய ஸ்ரீராமபிரான்—எ - று. (௬௮)

இமையவர்க்கெலாம் நான்காவது ஐந்தாவதன் உறழ்பொருளில் வந்தது.
ஆதியஞ்சோதியுருவை அங்குவைத்து இங்குப்பிறந்த
ஸ்ரீராமபிரானுக்குச்செய்த அலங்காரத்தைப் புகழ்ந்துரைக்கலாகாதென்றார்
ஆசிரியர் என்பது.

1312. முப்பரம் பொருளிற்குண் முதலை மூலத்தை
இப்பரந் துடைத்தவ ரெய்து மின்பத்தை

அப்பனை யப்பினு ளமிர்தந் தன்னையே
ஒப்பனை யொப்பினை யுரைக்க வெண்ணுமோ.

(இ-ள்! முப்பரம் பொருளிற்குள் - மூன்று பரம்பொருள்களில், முதலை - முதன்மையாகிய பொருளுக்கு, மூலத்தை-(அதற்கு) ஆதியாயினுனுக்கு, இ பரம் துடைத்தவர் - இவ்வுலக இன்பத்தை முற்றத்துறந்தோர், எய்தும் இன்பத்தை - அடைதற்குரிய இன்பமாயினுனுக்கு, அப்பனை - (யாவரும் எளிதில்கண்டு சேவிக்குந் திருவுருக்கொண்ட) அப்பனுக்கு, அப்பினுள அமிர்தந்தன்னை - (எல்லாப் பொருள்களிலும் தான் பரந்தமுறைமையால்) நீரில் சுவையாயினுனுக்கு, ஒப்பனை - (வேறொப்பின்றித்) தன்னைத்தானே யொப்பவனுகிய ஸ்ரீராமபிரானுக்கு, ஒப்பனை - (செய்திருக்கும்) அலங்காரத்தை, உரைக்க - புகழ்ந்துசொல்ல, ஒண்ணுமோ - [எமக்குக்] கூடுமோ—எ - று.

முன்னரும் பின்னரும் விரிந்துநின்ற முறைக்கேற்ப விரிந்து நில்லாமையால், அப்பினுளமுதமென்றவிடத்து, ஐயுருபு தொகுத்தது. முதலை முதலாயின வுருபுமயக்கம்.

முப்புரம் பொருள் என்றது சங்கர்ஷணன், ப்ரத்யும்நன், அநிருத்தன் என்னுமிவர்களை. இவர்களுள் சங்கர்ஷணன், சிவனுக்குள் நின்று அழித்தலையும், ப்ரத்யும்நன், பிரமனுக்குள் நின்று படைத்தலையும்; அநிருத்தன், அவ்வாறு சேதாங்களுக்குள் நில்லாது தனித்து நின்று காத்தலையும்; புரிகின்றமையின், முப்பரம்பொருளுக்குள் முதலையெனவும், "இம் மூன்றுருவத்திற்குங் காரணனுகிய வ்யூஹாவதாரவாசுதேவனை மூலத்தையெனவும், அவ்வாசுதேவனுக்கு மூலமாகிய பரமபதநாதனை" இப்பரந்துடைத்தவரெய்து மின்பத்தை யெனவும், "பதிகளிற்சிறந்த கோயில், திருமலை, பெருமாள்கோயில்" என்னு மூன்றனுள், நடுநின்ற சிறப்புப் பற்றி அர்ச்சாவதார வடவேங்கடமுடையானை, அப்பனையெனவும், எங்கு முறையும் அந்தர்யாமியை, கூப்பார்க்குத்துப்பாக்கித் துப்பாயதாநின்ற சிறப்புப்பற்றி ஐம்புலப்பே ருருவைந்தனுள், அப்பிலு ளமிர்தத்தையெனவும், விபவாவதார சீராமபிரானைத் தன்னையே யொப்பனையெனவுங் கூறினரென வுணர்க

பரமபதநாதனுக்கு வாசுதேவன் மனமெனவும், சங்கர்ஷணன் அகங்காரமெனவும், ப்ரத்யும்நன் சித்தமெனவும், அநிருத்தன் புத்தியெனவும் பரமவைதிகர் கூறுப. இவவுரு வைந்தின் திறமனைத்தும் ஈண்டுரைப்பிற் பெருகுமாகலின், வைதிகாகம புராணங்களிற் காண்க. பரத்துவம், வியூகத்துவம், விபவத்துவம், அந்தரியாமித்துவம், அர்ச்சாவதாரத்துவம் முதலியவற்றை முறையே கூருது பிறழக்கூறிய தென்னையோவெனின், இறைவனுடைய அநந்த கல்யாணகுணமாக் கடலாடு மியல்பினராகிய ஆசிரியர்பிரானுக்கு ஒப்பனை கூருகிற்புழித் தாம் கூறியவாறே பாவனை தமக்குட்டோன்றலும், வண்ணப்பெண்கள் "அஞ்சொற்கள் இன்னைக்கெல்லா மருளினுளழகைமாந்தித், தஞ்சொற்கள் குழறித்தத்தந்தகைதடு மாறிநின்ருர்" என்றவாறே. தந்தகை தடுமாறியதனுமென்க திருவேங்கடத்தானை அப்பன் என்றல், சடகோபர்முதலியோர் பொய்யில் பாடல்களாகிய அருளிச்செயல்களினுங் காண்க.

1313. பல்பதி னுயிரம் பசுவும் பைம்பொனும்
எல்லையி னிலனொடு மணிகள் யாவையும்
நல்லவர்க் குதவினு னவிலு நான்மறைச்
செல்வர்கள் வழுத்துறத் தேர்வந் தேறினுன்.

(இ-ள்) பல்பதினாயிரம் பசுவும் - பலவாகிய பதினாயிரம் பசுக்களையும், பைம்பொன்னும் - பசும்பொன்னையும், எல்லை இல் - வரம்பில்லாத, நிலனொடு - நிலங்களோடு, மணிகள்யாவையும் - நவரத்நங்களையும், நல்லவர்க்கு - நல்லொழுக்கமுடைய அந்தணர்களுக்கு, உதவினான் - கொடுத்தவனாகி, நவிலும் - சிறப்பாக எடுத்துச் சொல்லப்படுகிற, நால்மறைச்செல்வர் - நால்வேத வொழுக்கமாகிய செல்வத்தையுடைய முனிவர்கள், வழுத்துற - துதியாநிற்ப, வந்து தேர் ஏறினான் - வந்து தேரிலேறினான் — எ - று.

1314. பொற்றிர ளச்சது வெள்ளிச் சில்லிபுக்
குற்றது வயிரத்தி னுற்ற தட்டது
சுற்றுறு நவமணி சுடருந் தோற்றத்த
தொற்றையா ழிக்கதிர்த் தேரொ டொத்ததே.

(இ-ள்) (அத்தேர்) பொன்திரள் அச்சது - பொன்னாலாகிய திரண்ட அச்சையுடையது, வெள்ளி சில்லி புக்கு உற்றது - வெள்ளிச்சக்கரங்களில் புகுந்து பொருந்தியது, வயிரத்தின் உற்ற தட்டது - வயிரமணிகளாற்செய்த தட்டையுடையது, சுற்று - சுற்றிலும், உறு - மிகுந்த, நவமணி - நவமணிகள், சுடரும் - ஒளிசெய்கின்ற, தோற்றத்தது - தோற்றத்தை யுடையது, கதிர் - சூரியனது, ஒற்றை ஆழி - ஒற்றைச்சக்கரத்தையுடைய, தேரொடு ஒத்தது - தேரினையொத்தது—எ-று. (௭௧)

1315. நூல்வருந் தன்மையை நுனிக்கு நோன்மைய
சால்பெருஞ் செவ்விய தரும மாதிய
நாலையு மனையன புரவி நான்கொரு
பாலமை யுணர்ந்தவன் பக்கம் பூண்டவே.

(இ-ள்) நூல்வரும் தன்மையை - (அசுவவடிவு இலக்கணஞ் சொல்லும்) நூலிலமைந்த இலக்கணங்களை, நுனிக்கும் - (கற்றோர்) நுட்பமா யுணர்தற்குரிய, நோன்மைய - பெருமையை யுடையனவும், சால்பெருஞ் செவ்விய - நிறைந்த பேரழகையுடையனவும், தருமம் ஆதிய நாலையும் அனையன - அறமுதலாகிய நான்கையு மொத்தனவுமாகிய, நான்கு புரவி - நான்குகுதிரைகள், (யாவற்றையும்) ஒருபாலமை உணர்ந்தவன் பக்கம் - ஒருதன்மையவா யுணர்ந்தவனாகிய ஸ்ரீராமபிரான் பக்கலில், பூண்ட - தேரில் கட்டப்பட்டன—எ-று. (௭௨)

பாலமை என்றது வளமை என்றாற்போல இடையே அகரம் பெற்றது. உயிர்கள் சாத்தியமாகிய தன்னை யடைதற்குச் செய்யுஞ் சாதனத்தின் வழி நிற்பவனாகலின், தானூருந் தேர்க்குதிரைகளைத் ''தருமமாகிய நாலையு மனையன'' வெனவும், பிரமன்முதல் எறும்புகாறும் ஒருங்கொப்பநோக்கிக் காப்பவனாகலின் "ஒருபாலமை யுணர்ந்தவன்" எனவுங் கூறினார். உணர்ந்தவனென்பது விரைவுபற்றி வந்த காலவழுவமைதி.

1316. அனையதொர் தேரினி லருண னின்றெனப்
பனிவரு மலர்க்கணப் பரதன் கோல்கொளக்
குனிசிலைத் தம்பிபின் கூட வேனையன்
இனியபொற் கவரிகா லியக்க வேகினான்.

(இ-ள்) அனையது - அத்தன்மையதாகிய, ஓர் தேரினில் - ஒப்பற்றதேரின் மீது, அருணன் நின்றென - அருணன் நின்றாற்போல, பனிவரும் - குளிர்ச்சி பொருந்திய, மலர் - தாமரைமலர்போன்ற, கண் - கண்களையுடைய, அப்பரதன்

கோல்கொள - அந்தப்பரதன் கோலைக் கைக்கொள்ளவும், குனிசிலைத்தம்பி - வளைத்தற்குரிய வில்லையுடைய தம்பியாகிய லக்ஷ்மணன், பின் கூட - பின்னே காத்து நிற்கவும், ஏனையன் - மற்றொரு தம்பியாகிய சத்ருக்நன், பொன் - பொற்காம்பமைந்த, கவரி - சாமரத்தினால், கால் இயக்க - காற்றையுண்டாக்கிக்கொண்டு வரவும், ஏகினான் - சென்றான்—எ-று. (எங)

1317. அமைவரு மேனியா னழகி னாயதோ
கமையுறு மனத்தினாற் கருத வந்ததோ
சமைவுற வறிந்திலந் தக்க தாருக
இமையவ ராயினா ரிங்கு ளாருமே.

(இ-ள்) அமைவு அரு - அமைத லருமையாகிய மேனியான் - திருமேனியையுடைய ஸ்ரீராமபிரானது, அழகின் ஆயதோ - அழகினால் ஆனதோ, கமை உறு மனத்தினால் - பொறுமைதங்கிய தம்மனத்தினால், கருதவந்ததோ - (அவ்வழகொன்றையே) நினைக்கவந்ததோ, சமைவு உற அறிந்திலம், - தெளிவுபொருந்தவுணர்ந்தோமில்லை, தக்கது ஆருக - தகுதியானது காரணமாகக் கடவது, இங்கு உள்ளாரும் - இவ்வுலகத்திலுள்ளவர்களும், இமையவர் ஆயினார் - தேவர்களைப் போன்றிருந்தார்கள்—எ-று. (எச)

தஞ்சிந்தையிற் செய்கையாற் சிற்றமிலராகிய கோசலநாட்டாரை இம்மிதிலாபுரியார் போல்வாராகலிற் "கமையுறுமன" மென்றார்.

1318. வரம்பறு முலகினை வலிந்து மாய்வின்றித்
திரம்பயி லரக்கர்தம் வருக்கந் தேய்வின்று
நிரம்பிய தெனக்கொடு நிறைந்த தேவரும்
அரம்பையர் குழாத்தொடு மாடன் மேயினார்.

(இ-ள்) வரம்பு அறும்-முடிவற்ற, உலகினை - உலகிலுள்ளாரை, வலிந்து - வருத்தி, மாய்வு இன்றி - அழிவில்லாமல், திரம்பயில் - உறுதிபெற்ற, அரக்கர் தம்வருக்கம் - ராக்ஷஸவர்க்கம், தேய்வு - தேய்வையடைதல், இன்று நிரம்பியது - இன்று முடிந்தது, எனக்கொடு - என்று தம்மனத்திற்கருதி, நிறைந்ததேவரும் - நிறை நெஞ்சுடைய தேவர்களும், அரம்பையர் குழாத்தொடும் - தெய்வப்பெண்கள் கூட்டத்தோடு, ஆடல் மேயினார் - ஆடுதலி லமைந்தார்கள்—எ-று- (எடு)

தேவரும் என்னு மும்மை இறந்தது தழீயதனோடு
சிறப்புப்பொருளும்பட நின்றது

1319. சொரிந்தனர் பூமழை சுண்ணந் தூவினர்
விரிந்தொளிர் காசுபொன் றூசு வீசினர்
பரிந்தன ரழகினைப் பருகி னார்கொலாம்
தெரிந்திலந் திருநகர் மகளிர் செய்கையே.

(இ-ள்) பூமழை சொரிந்தனர் - பூமழையைப் பொழிந்தார்கள், சுண்ணம் தூவினர் - பரிமளப்பொடியைத் தூவினார்கள், விரிந்து ஒளிர் - (கிரணங்கள்) மலர்ந்தொளிர்கின்ற, காசு - மணிகளையும், பொன் - பொன்னையும், தூசு - ஆடையையும், வீசினர் - (இரப்போர்க்குக்) கொடுத்தார்கள், (ஆதலால்) பரிந்தனர் - விரும்பி, அழகினை - (இறைவனது) அழகாகிய மதுவை, பருகினார்கொல் - பருகி

ஞர்களோ, (அன்றி) திருநகர் - அத்திருநகரத்திலுள்ள, மகளிர் செய்கை - மாத ரது செய்கைக்குக் காரணம், தெரிந்திலம் - அறியோம்—எ-று. (எசு)

1320. வள்ளலை நோக்கிய மகளிர் மேனியின்
எள்ளரும் பூணெலா மிரிய நிற்கின்றார்
உள்ளன யாவையு முதவிப் பூண்டவும்
கொள்ளையிற் கொள்கெனக் கொடுக்கின் றாரினே.

(இ-ள்.) உள்ளன யாவையும் - (தம்பால்) உள்ளன வெல்லாவற்றையும், உதவி - (இரப்போர்க்கு) உதவி, பூண்டவும் - தாம் பூண்டவற்றையும், கொள்ளை யின் - மிகுதியாக, கொள்க என - கொள்ளக்கடவீரென்று, கொடுக்கின்றாரின் - கொடுப்பவரைப்போல, வள்ளலை நோக்கிய - ஸ்ரீராமபிரானைநோக்கிய, மகளிர் - மாதர்கள், மேனியில் - தம்முடம்பிலணிந்த, எள் அரு-பழிப்பில்லாத, பூண் எல் லாம் - ஆபரணங்களெல்லாம், இரிய-கழலும்படி, நிற்கின்றார் - நிற்கின்றார்கள்.

தன் திருநாமத்தை ஒருகாற் கூறியமாத்திரையின், அன்னோர்க்கு வீடுபேறு முதலியவற்றை எண்ணி யாங்கு வரையாது பயத்தலின், வள்ளல் என்றார். பிர மன் சிவன் முதலிய சேதனர் ஒருங்கொப்பத் தன் பேரருளை வரையாது தருபவ னாதலின், வள்ளலென்றாரெனினும் ஒக்கும்.

வேறு.

1321. எஞ்சலி லுலகத்துள்ள வெறிபடை யரசவெள்ளம்
குஞ்சரக் குழாத்திற்சுற்றக் கொற்றவ னிருந்தகூடம்
வெஞ்சினத் தனுவலானு மேருமால் வரையிற்சேரும்
செஞ்சுடர்க் கடவுளென்னத் தேரிடைச் சென்றுசேர்ந்தான்.

(இ-ள்.) எஞ்சல் இல் - (ஆற்றலில்) குறைவில்லாத, உலகத்து உள்ள - உல கத்திலுள்ள, எறிபடை - (பகைவர்மேல்) எறிதற்குரிய படைகளையுடைய, அரச வெள்ளம் - அரசர்கூட்டம், குஞ்சரம் குழாத்தின் சுற்ற - யானைக்கூட்டம்போ லச் சுற்றியிருப்ப, கொற்றவன் இருந்த கூடம் - சக்ரவர்த்தி வீற்றிருக்கிற திவ்ய மண்டபத்தில், வெம் சினம் - வெவ்விய சினமமைந்த, தனுவலானும் - விற்றொ ழிலில் வல்ல ஸ்ரீராமபிரானும், மால் - பெருமையாகிய, மேருவரையில் சேரும் - மேருமலையிற் சேர்கின்ற, செஞ்சுடர்க்கடவுள் என்ன - செவந்த கிரணங்களை யுடைய சூரியனைப்போல, தேர் இடை சென்று சேர்ந்தான் - தேர்மீது சென்று சேர்ந்தான்—எ-று. (எஅ)

தேரை, ஒற்றையாழிக்கதிர்த் தேரோடொத்த தென்றதற் கேற்பத், தேர்ப் பாகனுப் நின்றபரதனுக்கு அருணனையும், மண்டபத்திற்கு மேருமால்வரையை யும், ஸ்ரீராமபிரானுக்குச் செஞ்சுடர்க் கடவுளையு முவமைகூறினார்.

1322. இரதமாண் டிழிந்தபின்ன ரிருமருங் கிரண்டுகையும்
பரதனு மிளையகோவும் பரிந்தன ரேந்தப்பைந்தார்
வரதனு மெய்திமைதீர் மாதவர்த் தொழுதுநீதி
விரதமெய்த் தாதைபாதம் வணங்கிமா டிருந்தவேலை.

(இ-ள்.) ஆண்டு - அவ்விடத்தில், இரதம் இழிந்தபின்னர் - தேரினின்று மிழிந்தபின்பு, இருமருங்கு - இரண்டுபக்கங்களிலும், இரண்டு கையும் - இரண்டு திருக்கரங்களையும், பரதனும் இளையகோவும்-பரதனும் இலக்குமணனும், பரிந்த

னர் ஏந்த - அன்பினராய்த் தம்கைகளால் ஏந்தாநிற்க, பைந் தார் - பசிய மலர் மாலையை யணிந்த, வரதனும் - ஸ்ரீராமபிரானும், எய்தி - சென்று, மை தீர் - குற்றம் நீங்கிய, மாதவர்த்தொழுது - முனிவரரைவணங்கி, நீதி-நீதியையும், விரதம் - விரதமாகக்கொண்ட, மெய் - உண்மையையுமுடைய, தாதை - தந்தையாகிய சக்ரவர்த்தியின், பாதம் - பாதங்களை, வணங்கி - தொழுது, மாடு இருந்தவேலை-பக்கத்திலிருந்தகாலத்தில்—எ-று. (எக)

1323. சிலையுடைக் கயல்வாட்டிங்க ளேந்தியோர் செம்பொற்கொம்பர்
முலையிடை முகிழ்ப்பத்தேர்மேன் முன்றிசை முளைத்ததன்னாள்
அலைகடற் பிறந்துபின்னை யவனியிற் றோன்றிமீள
மலையிடை யுதிக்கின்றாள்போல் மண்டப மதனில்வந்தாள்.

(இ-ள்.) சிலை உடை - வில்லைமேற்புறத்திலுடைய, கயல் - (இரண்டு) கயல் மீன்களை (இடையேபெற்ற), வாள்-ஒளிநிறைந்த, திங்கள் - சந்திரனை, ஏந்தி - சுமந்து, ஓர் செம்பொன் கொம்பர் - ஒரு செம்பொற்கொம்பானது, முலை - முலையாகிய அரும்புகள், இடை - தன்னிடத்தில், முகிழ்ப்ப - அரும்ப, தேர்மேல் - தேரின்மேல், முன்திசை - கீழ்த்திசையில், முளைத்தது அன்னாள் - முளைத்ததை யொத்த பிராட்டியானவள், அலைகடல் பிறந்து - அலையு மியற்கையுள்ள கடலிற் றோன்றி, பின்னை - பிறகு, அவனியில் தோன்றி - பூமியில் தோன்றி, மீள - மறுபடியும், மலையிடை உதிக்கின்றாள்போல் - மேருமலையில் உதிக்கின்றாள்போல மண்டபமதனில் வந்தாள் - மண்டபத்தில் தோன்றினாள்—எ-று. (அ0)

வே று.

1324. நன்றிவா னவரெலா மிருந்த நம்பியை
துன்றிருங் கருங்கடல் துவைப்பத் தோன்றிய
மன்றலங் கோதையாள் மாலை சூட்டிய
அன்றினு மின்றுடைத் தழகென் றாரரோ.

(இ-ள்.) நன்றி - செல்வநலமுள்ள, வானவர் எல்லாம் - தேவர்களெல்லாம், இருந்த நம்பியை-வீற்றிருந்த ஸ்ரீராமபிரானை, துன்று - நிறைந்த, இருங்கரு-மிகுதியும் பெருமையுள்ள, கடல்-பாற்கடலாகிய வாச்சியமானது, துவைப்ப - முழங்காநிற்ப, தோன்றிய - அதனிடத் தவதரித்த, மன்றல் அம் கோதையாள் - மணமமைந்த கூந்தலையுடைய இறைவி, மாலைசூட்டிய அன்றினும் - மாலைசூட்டிய அந்நாளினும், இன்று - இந்நாளில், அழகு உடைத்து என்றார் - அழகானது உடையதென்றார்—எ-று. (அக)

வானவர், போகபூமிவாசிகளாதலின், உடைமையாகிய அழகைவியந்து உடையதாகக் கூறினர்.

1325. ஒலிகட லுலகினி லும்பர் நாகரில்
பொலிவது மற்றிவள் பொற்பென் றாலிவள்
மலிதரு மணம்படு திருவை வாயினால்
மெலிதரு முணர்வினன் விளம்புகே னரோ.

(இ-ள்.) ஒலி - ஒலிக்கின்ற, கடல் - கடல் சூழ்ந்த, உலகினில் - உலகத்தார்களிலும், உம்பர் - தேவர்களிலும், நாகரில் - நாகர்களிலும், பொலிவது - விளங்குவது, இவள்பொற்பு என்றால் - இவளது அழகேயென்றால், இவள் - இவளுடைய, மலிதரு - நிறைந்த, மணம்படு-திருமணத்திலுண்டாகிய, திருவை - வைப

வத்தை, மெலிதரும் உணர்வினேன் - சிற்றறிவினையுடைய நான், வாயினால் விளம்புகேன் - வாயினால் சொல்ல வல்லேனோ—எ-று. (அஉ)

எனவே, வாக்கினாலு மறிவினாலு மெட்டப்படாதென்பது கருத்து. மற்றென்பது இடம் பற்றிவந்த வினைமாற்று வாய் - கருவியாகுபெயர். உணர்வா லுணரினும் ஒருபொருளைப் பிறர்க்குப் புலப்பட வுணர்த்துவது சொல்லேயாக லின், அச்சிறப்புப்பற்றி உணர்த்துகேன் என்னும் வேறுவினைக்குரிய வுணர்வி னென்பது விளம்புகேன் என்பதைக் கொண்டு முடிந்தது.

1326. இந்திரன் சசியொடு மெய்தி னானிளஞ்
சந்திர மௌலியுந் தைய லாளொடும்
வந்தனன் மலரயன் வாக்கி னாளுடன்
அந்தரம் புகுந்தன னழகு காணவே

(இ-ள்.) அழகு காண - (இறைவன் இறைவி இவ்விருவருடைய) மணக்கோலத்தைச் சேவிக்கும்பொருட்டு, அந்தரம் - ஆகாயத்தில், இந்திரன் - இந்த்ரனவன், சசியொடும் - இந்த்ராணியோடும், எய்தினான் - வந்து சேர்ந்தான், இளஞ்சந்திர மௌலியும் - இளஞ்சந்த்ரனைத்தரித்த ஜடைமுடியையுடைய சிவனும், தையலாளொடும்-உமாதேவியோடும், வந்தனன்-வந்து சேர்ந்தான், மலர் அயன் - தாமரைமலரில் வசிக்கின்ற பிரமன், வாக்கினாளுடன் - கலைமகளோடு, புகுந்தனன் - வந்துசேர்ந்தான்—எ-று. (அந)

1327. நீந்தருங் கடலென நிறைந்த வேதியர்
தோய்ந்தநூன் மார்பினர் சுற்றத் தொன்னெறி
வாய்ந்தநல் வேள்விக்கு வசிட்டன் மையற
ஏய்ந்தநற் றருப்பையொ டினிதி னெய்தினான்.

(இ-ள்.) நீந்து அரு - நீந்துதலரிய, கடல் என - கடலைப்போல, நிறைந்த - நிறைவாகிய, வேதியர் - வேதமோதுந்தொழிலினரும், தோய்ந்தநூல் மார்பினர் - முப்புரிநூல்தங்கிய மார்பையுடையவருமாகிய அந்தணர்கள், சுற்ற - சூழ்ந்துவர, தொல்நெறிவாய்ந்த - (வேதத்திற்கூறிய) பழையமார்க்கத்திற்பொருந்திய, நல்வேள்விக்கு - நல்ல திருமணவேள்விசெய்தற்பொருட்டு, வசிட்டன் - வசிஷ்டமுநிவன், மை அற ஏய்ந்த - குற்றமற வமைந்த, நல் - சிறந்த, தருப்பையோடு - தருப்பைப்புல்லோடு, இனிதின் எய்தினான் - பெருமகிழ்வோடு வந்து சேர்ந்தான்—எ-று. (அச)

தருப்பைக்குச் சிறப்பாவது அக்கினிகார்யங்களில் தான் இன்றியமையாமை. நற்றருப்பை என்பதற்கு நுனித்தருப்பை எனப்பொருள் கூறுவாருமுளர்.

1328. தண்டுலம் விரித்துநற் றருப்பை சாத்தியே
மண்டலம் விதிமுறை வகுத்து மென்மலர்
கொண்டவை சொரிந்தெரி குழும மூட்டினன்
பண்டுள மறைநெறி பரவிச் செய்தனன்.

(இ-ள்.) தண்டுலம் விரித்து - அரிசியைப்பரப்பி, நல்தருப்பைசாத்தி - நல்ல தர்ப்பையைச்சாத்தி, மண்டலம் - மண்டலத்தை, விதிமுறை - வேதவிதியின் முறையாக, வகுத்து - ஏற்படுத்தி, மெல்மலர்கொண்டு - மெல்லிய மலர்களை யெடுத்து, அவைசொரிந்து - அவற்றின்மேற்றூவி, எரி - நெருப்பை, குழுமமூட்

டினன் - திரளமூட்டினவனும், பண்டு உள்ள - தொன்றுதொட்டுள்ளனவாகிய மறை - வேதமந்த்ரங்களால், நெறி - முறையாக, பரவி - துதித்து, செய்தனன் - (அத்திருமணவேள்வியைச்) செய்தான்—எ-று. (அ௫)

வேறு.

1329. மன்றலின் வந்து மணத்தவி சேறி
வென்றி நெடுந்தகை வீரனு மார்வத்
தின்றுணை யன்னமு மெய்தி யிருந்தார்
ஒன்றிய போகமும் யோகமு மொத்தார்.

(இ-ள்.) மன்றலின் வந்து - திருமணம்புரியுமிடத்தில் வந்து, மணத்தவிசு ஏறி - திருமணத்தவிசிலேறி, வென்றி - வெற்றியையும், நெடுந்தகை - பெருங்குணத்தையு முடைய, வீரனும் - ஸ்ரீராமபிரானும், ஆர்வத்து-(அவனிடத்து) அன்புடைய, இன்துணை - இனியதுணையாகிய, அன்னமும் - (நடையினால்) அன்னம் போல்வாளாகிய பிராட்டியும், எய்தி இருந்தார் - நெருங்கி வீற்றிருந்தார்கள், (அவ்விருவரும்) ஒன்றிய - சாத்தியமாகப்பொருந்திய, போகமும் - பேரின்பசுகத்தையும், யோகமும் - ஸாதநமாகிய தியாநத்தையும், ஒத்தார் - ஒத்திருந்தார்கள்.

இறைவியை முன்னிட்டுக்கொண்டு இறைவனை யடைதலின், வீரனுக்குப் போகத்தையும், பிராட்டிக்கு யோகத்தையும் உவமை யாக்கினார்.

1330. கோமகன் முன்சன கன்குளிர் நன்னீர்
பூமக ளும்பொரு ளும்மென நீயென்
மாமக டன்னொடு மன்னுதி யென்னாத்
தாமரை யன்ன தடக்கையி னீந்தான்.

(இ-ள்.) கோமகன் முன் - சக்ரவர்த்தித் திருமகனாகிய ஸ்ரீராமபிரானுக்கு எதிரே நின்று, சனகன் - ஜநகமகாராஜன், குளிர் நல் நீர் - குளிர்ந்த நல்லநீரை, பூமகளும் - திருமகளும், பொருளும் - இரண்டுசெல்வப்பொருளும், என - போல, நீ - நீ, என் - என்னுடைய, மாமகள் தன்னொடு - பெருமைதங்கிய மகளுடன் கூடி, மன்னுதி என்னா - நிலைபெற்றிரு என்றுகூறி, தாமரை அன்ன - தாமரை மலரை யொத்த, தடம் கையின் - பெரியவலக்கையில், ஈய்ந்தான் - வார்த்தான்—எ-று. (அஎ)

1331. அந்தண ராசி யருங்கல மன்னார்
தந்தபல் லாண்டிசை தார்முடி மன்னர்
வந்தனை வானவர் வாழ்த்தொலி போல
முந்திய சங்க முழங்கின மாதோ.

(இ-ள்.) அந்தணர் ஆசி - அந்தணர்களுடைய ஆசீர்வாதவோசையும், அருங்கலம் அன்னார் - அருமையாகிய அணிகலத்தையொத்த அவர்களுடைய தேவியர், தந்த - கூறிய, பல்லாண்டு இசை - பல்லாண்டிசையும், தார்முடிமன்னர் - மாலையையணிந்த முடிமன்னர்களும், வந்தனை - வணங்குதற்குரிய, வானவர் - தேவர்களும், வாழ்த்து - வாழ்த்திய, ஒலி - ஓசையும், போல - போல, முந்திய - வாச்சியங்களுள் முற்பட்ட, சங்கம் - சங்கங்கள், முழங்கின - ஒலித்தன—எ-று. ()

1332. வானவர் பூமழை மன்னவர் பொற்பூ
ஏனையர் தூவு மிலங்கொளி முத்தம்

தானகு நாண்மல ரென்றிவை தம்மால்
மீனகு வானின் விளங்கிய திப்பார்.

(இ-ள்). வானவர் - தேவர்கள் சொரிந்த, பூமழை - கற்பகப்பூ மழையும், மன்னவர் - அரசர்கள் சொரிந்த, பொன் பூ - பொன்மலர்மழையும், ஏனையர் தூவும் - மற்றையோர் சொரிந்த, இலங்கு - விளங்குகின்ற, ஒளி-ஒளியையுடைய, முத்தம் - முத்துமழையும், நகு - பொலிகின்ற, நாண்மலர் - புதியமலர்மழையும், என்ற இவைதம்மால் - என்று சொல்லப்பட்ட இவைகளால், இப் பார் - இந்தப் பூமியானது, மீன் நகு - விண்மீன்கள் விளங்குகின்ற, வானின் - ஆகாயத்தைப் போல, விளங்கியது - பிரகாசித்தது—எ-று. (௯)

தான் - அசை.

1333. வெய்ய கனற்றலை வீரனு மந்நாள்
மையறு மந்திர முற்றும் வழங்கா
நெய்யமை யாகுதி யாவையு நேர்ந்தான்
தையல் தளிர்க்கை தடக்கை பிடித்தான்.

(இ-ள்.) வெய்ய கனற்றலை-வெவ்விய கனலையுடைய வேள்வியில், வீரனும்-ஸ்ரீராமபிரானும், அந் நாள் - அந்தநாளில், மை அறு - குற்றமற்ற, மந்திரம் முற்றும் வழங்கா - மந்திரமுழுதுஞ்சொல்லி, நெய் அமை - நெய்யாலமைத்த, ஆகுதி யாவையும் - ஆகுதிகளெல்லாவற்றையும், நேர்ந்தான் - இசையச் செய்தவனாய், தையல் - பிராட்டியின், தளிர்க்கை-தளிர்போன்ற திருக்கரத்தை, தடக்கைபிடித்தான் - தனது பெரிய திருக்கரத்தால் பிடித்தான்—எ-று. (௧௦)

1334. இடம்படு தோளவ னோடியை வேள்வி
தொடங்கிய வெங்கனல் சூழ்வரு போதின்
மடம்படு சிந்தையள் மாறு பிறப்பின்
உடம்புயி ரைத்தொடர் கின்றதை யொத்தாள்.

(இ-ள்.) மடம்படு சிந்தையள் - மடமைக் குணமமைந்த சிந்தையை யுடையவளாகிய சீதாபிராட்டியானவள், இடம்படு தோளவனோடு - விசாலமானதோள்களையுடைய ஸ்ரீராமபிரானோடு, இயைதொடங்கி வேள்வி - இயைந்து செய்யத் தொடங்கினவேள்வியின்கண், வெம்கனல் - வெவ்வியதீயை, சூழ்வருபோதில் - பின்தொடர்ந்துசூழ்ந்து வருகின்றகாலையில், மாறுபிறப்பின் - மாறு மியற்கையுள்ள பிறப்புகளில், உடம்பு - உடல்கள், உயிரை - உயிர்களை, தொடர்கின்றதை ஒத்தாள் - தொடர்கின்றதை ஒத்திருந்தாள்—எ-று. (௧௧)

1335. வலங்கொடு தீயை வணங்கினர் வந்து
பொலம்புரி செய்வன செய்பொருண் முற்றி
இலங்கொளி யம்மி மிதித்தெதிர் நின்ற
கலங்கலில் கற்பி னருந்ததி கண்டார்

(இ-ள்.) தீயை - வேள்வித்தீயை, வலங்கொடு வணங்கினர் - வலம்வந்து வணங்கி, வந்து - (அருகே) வந்து, பொலம்பொரிசெய்வன - அழகிய பொரியாற் செய்வனவற்றையும், செய்பொருள் முற்றி - அவ்விடத்துச் செய்யவேண்டிய மற்றைக்காரியங்களையும் செய்துமுடித்து, இலங்கு ஒளி-விளங்குகின்ற ஒளியையுடைய, அம்மி மிதித்து - அம்மியைமிதித்து, எதிர்நின்ற - எதிரேநின்ற, கலங்

கல் இல் - கலங்குதலில்லாத, கற்பின் - கற்பையுடைய, அருந்ததி-அருந்ததியை, கண்டார் - பார்த்தார்கள்—எ-று. (கஉ)

தானொழுகிய வொழுக்கம் உலகர்க்குச் சிறந்தவிதியாமன்றே, அங்கனமாதலின், மங்கையர் கற்பழித்தாரேல், மனையின்மாட்சியையழித்து இழி மாதவப் பன்னி கருங்கலாய்ச் சமைந்தாற்போல இழிதற்பால ராவரென்பது குறிப்பிக்க அம்மிக்கல்லை மிதிப்பித்து, அங்ஙனமன்றி உடையாரேல் தன்னாசிரியன் பன்னி போல வுயர்தற்பாலர் ஆவர் என்பது குறிப்பிக்க அருந்ததியைநோக்குவித்தான். பிரானும் பிராட்டியும் காரணநகையில் பூவுமணமும் போல்வராகலின், அவ்வொற்றுமை நயத்தால் மிதித்துக் கண்டார் என்றார். அம்மி மிதித்தற்கு வேறு காரணங் கூறலுமுண்டு.

1336. மற்றுள செய்வன செய்து மகிழ்ந்தார்
முற்றிய மாதவர் தாண்முறை சூடிக்
கொற்றவ னைக்கழல் கும்பிட லோடும்
பொற்றொடி கைக்கொடு நன்மனை புக்கான்.

(இ-ள்.) செய்வன - செய்தற்குரியனவாகிய, மற்று உள - மற்றுள்ளவற்றையும், செய்து - செய்துமுடித்து, மகிழ்ந்தார் - களித்தவராய், முற்றியமாதவர் - முடிந்தபெருந்தவத்தினரது, தாள் - பாதங்களை, முறைசூடி - முறையாகத் தலையிற்சூடி, கொற்றவனை - சக்ரவர்த்தியையும், கழல்கும்பிடலோடும் - அடிவணங்குதலும், (ஸ்ரீராமபிரான்) பொற்றொடி கைக்கொடு-சீதாபிராட்டியின் கையைப் பற்றிக்கொண்டு, நல்மனைபுக்கான்-அழகானமாளிகையில் பிரவேசித்தான்-எ-று.

1337. ஆர்த்தன பேரிக ளார்த்தன சங்கம்
ஆர்த்தன நான்மறை யார்த்தனர் வானோர்
ஆர்த்தன பல்கலை யார்த்தன பல்லாண்
டார்த்தன வண்டின மார்த்தன வேலை

(இ-ள்) (புகுந்தமாத்திரத்தில்) பேரிகள் ஆர்த்தன - பேரிகள் ஆரவாரித்தன, சங்கம் ஆர்த்தன - சங்கங்கள் ஆரவாரித்தன, நால்மறை ஆர்த்தன - நான்கு வேதங்கள் ஆரவாரித்தன, வானோர் ஆர்த்தனர் - தேவர்கள் ஆரவாரித்தார்கள், பல்கலை ஆர்த்தன - பல நூல்கள் ஆரவாரித்தன, பல்லாண்டு ஆர்த்தன - பல்லாண்டுகள் ஆரவாரித்தன, வண்டு இனம் - வண்டுக்கூட்டங்கள், ஆர்த்தன - ஆரவாரித்தன, (இவைகளெல்லாம் ஆரவாரித்தல்) வேலை ஆர்த்தன்ன - கடல்கள் ஆரவாரித்தனபோலும்—எ-று. (கூ௩)

வண்டினம் என்றது பூமாலைகளில் மொய்த்தவற்றை. ஆர்த்தன்ன - ஆர்த்தாலன்ன.

1338. கேகயன் மாமகள் கேழ்கிளர் பாதம்
தாயினு மன்பொடு தாழ்ந்து வணங்கா
ஆயத னன்னை யடித்தலை சூடித்
தூய சுமித்திரை தாமொடு லோடும்.

(இ-ள்.) (நன்மனைபுகுந்த ஸ்ரீராமபிரான்) கேகயன் - கேகயதேசத் தரசனுடைய, மா - பெருமைபொருந்திய, மகள் - மகளாகிய கைகேசியினது, கேழ்கிளர் - செந்நிறம் விளங்குகின்ற, பாதம் - பாதங்களை, தாயினும் - தன்தாயினிடத்துவைத்த அன்பினுமிகுந்த, அன்பொடு அன்போடு, தாழ்ந்துவணங்கா - தாழ்ந்து

வணங்கி, ஆய - தன்னை யீன்றாளாகிய, தன் அன்னை - தன் தாயாகிய கௌசலை யினது, அடித்துணை சூடி - இரண்டுபாதங்களையு முடியிற்சூடி, தூயசுமித்திரை - பரிசுத்தமானகுணத்தையுடைய சுமித்திரையினது, தாள் - பாதங்களை, தொழ லோடும் - வணங்குதலோடும்—எ-று. (கூ௫)

பாதம் என்றதற்கேற்ப, கேழ் என்பதற்குச் செந்நிறமென்று பொருளுரைக் கப்பட்டது. சக்கரவர்த்திக்கு மிக்க அன்புடையாளும் தன்னிடத்து மிக்க அன் புடையாளு மாகலின், கேகயன் மாமகளை முன் வணங்கினன்.

1339. அன்னமு மன்ன வரம்பொன் மலர்த்தாள்
சென்னி புனைந்தனள் சிந்தை யுவந்தார்
கன்னி யருந்ததி காரிகை காண
நன்மக னுக்கிவ ணல்லணி யென்றார்.

(இ-ள்.) அன்னமும் - ஜாநகியாகிய அன்னமும், அன்னவர்-அம்மூவருடைய அம் - அழகாகிய, பொன் - பொலிவமைந்த, மலர் தாமரைமலர்போன்ற, தாள் - பாதங்களை, சென்னி புனைந்தனள் - தன் சிரசிற் சூடினள், (அவர்கள்) சிந்தை உவந்தார் - மனங்களித்தவராய், கன்னி - கற்பழிவில்லாத, அருந்ததி - அருந்ததி யாகிய, காரிகை - பெண், காண - (கற்புக்கிலக்காகப்) பார்க்கும்படி, நல்மக னுக்கு - (நமது) நல்லபுத்திரனுக்கு, இவள் - இவள், நல் அணி என்றார் - நல்ல அணியையொப்பாளென்றார்கள்—எ-று. (கூசு)

1340 சங்க வளைக்குயி லைத்தழி நின்றார்
அங்கண னுக்குரி யாருள ராவார்
பெண்க ளினிப்பிற ரெங்குள ரென்றார்
கண்கள் களிப்ப மனங்கள் களிப்பார்.

(இ-ள்.) சங்கம் வளை - கூட்டமாகிய வளையலையணிந்த, குயிலை - குயில் போல்வாளாகிய பிராட்டியை, தழிநின்றார் - தழுவிநின்றவர்களாய், அங்கண னுக்கு - அழகிய அருளுடையவனாகிய ஸ்ரீராமபிரானுக்கு, உரியார் உளர் ஆவார் - மனைவியராவார், பெண்கள் - பெண்களில், இனி-இனி பிறர்-பிறர், எங்கு உளர் - எவ்விடத்துள்ளார், என்றார் - என்றுசொல்லி, கண்கள் களிப்ப - கண்கள் களியா நிற்க, மனங்கள் களிப்பார் - மனங்கள் களிப்பார்கள்—எ-று. (கூஎ)

தழீஇ என்றபாலது தழி எனக் குறுக்கல்பெற்றது

1341. எண்ணில கோடிபொன் னெல்லையில் கோடி
வண்ண வருங்கல மங்கையர் வெள்ளம்
கண்ணக னாடொடு காசுயர் தூசும்
பெண்ணி னணங்கனை யாள்பெறு கென்றார்.

(இ-ள்.) எண் இல - கணக்கில்லாதனவாகிய, கோடி பொன் - பலகோடி பொற்காசையும், வண்ணம் - அழகிய, அருங்கலம் - அருமையாகிய அணிகளை யணிந்த, எல்லை இல்கோடி - அளவற்ற கோடியாகிய, மங்கையர் வெள்ளம் - மாதர்வெள்ளத்தையும், கண் அகல் - இடமகன்ற, நாடொடு-நாடுகளுடன், காசு - மணிகளையும், - உயர்தூசும் - உயர்ந்த ஆடைகளையும், பெண்ணின் அணங்கு அனை யாள் - பெண்களுக்குத் தெய்வத்தையொத்த சீதை, பெறுக என்றார் - பெறக்கட வளென்றார்கள்—எ-று. (கூஅ)

1342. நூற்கட லன்னவர் சொற்கட னோக்கி
மாற்கட லன்ன மனத்தவ ளோடும்
காற்கடல் போற்கரு ணைக்கடல் பண்டைப்
பாற்கட லன்னதொர் பாய லணைந்தான்

(இ-ள்.) நூல் - நூற்கேள்வியில், கடல் அன்னவர்-கடலை யொத்தவராகிய முனிவரது, சொல்கடன் நோக்கி - சொல்லின் கடன்மையைப்பார்த்து, மால் கடல் அன்ன - காதலானது கடலையொத்த, மனத்தவளோடும் - மனத்தையுடைய பிராட்டியோடும், கால் - காற்றினால் வீசப்பட்டுப் பொங்கிய, கடல்போல் - கடலைப்போல், (களிப்பு மிகுந்து) கருணைக்கடல் - கிருபாசமுத்திரமாகிய ஸ்ரீராம பிரான், பண்டை - தாம் முன் பள்ளிகொண்ட, பால் கடல் அன்னது - பாற்கடலை யொத்ததாகிய, ஓர் - ஒப்பற்ற, பாயல் அணைந்தான்-சயனத்தில் சேர்ந்தான்-எ-று.

1343. பங்குனி யுத்தர மான பகற்போ
தங்க ணிருக்கினி லாயிர நாமச்
சிங்க மணத்தொழில் செய்த திறத்தால்
மங்கல வங்கி வதிட்டன் வகுத்தான்.

(இ-ள்.) பங்குனி - பங்குனி மாதத்தில், உத்தரம் ஆன பகற்போது-உத்தர நக்ஷத்ரமாகிய நாளில், அங்கண் - அம்மிதிலாநகரத்தின்கண், இருக்கினில் - வேதங்களில், ஆயிரம் நாமம் - ஆயிரந் திருநாமங்களையுடைய, சிங்கம் - (போர்த்தொழிலில்) சிங்கமாகிய ஸ்ரீராமபிரானது, மணத்தொழில் - திருமணத்தொழிலை, செய்த திறத்தான் - செய்தவகையால், மங்கல அங்கி - மங்கலத்தீயை, வதிட்டன் வளர்த்தான் - வசிட்டமுனிவன் வளர்த்தான்—எ-று. (௫00)

1344. வள்ள றனக்கிளை யோர்க டமக்கும்
எள்ளலில் கொற்றவன் யான்பி னளித்த
அள்ளன் மலர்த்திரு வன்னவர் தம்மைக்
கொள்ளு மெனத்தம ரோடு குறித்தான்.

(இ-ள்.) எள்ளல் இல் - நிந்தை யில்லாத, கொற்றவன் - ஜநகமஹாராஜன் (சக்ரவர்த்தியைநோக்கி) (நீர் சீதைக்கு) பின் - பின், யான் அளித்த - யான்பெற்ற, அள்ளல் - சேற்றில் விளைகின்ற, மலர் - தாமரைமலரிலெழுந்தருளிய, திரு அன்னவர் தம்மை - திருமகளையொத்த மங்கையர்களை, வள்ளல்தனக்கு - ஸ்ரீராமபிரானுக்கு, இளையோர்கள் தமக்கும் - இளையவர்களாகிய பரத லக்ஷ்மணசத்ருக்நர்களுக்கும், கொள்ளும் என - (உரியவர்களாகக்) கொள்ளுவீரென்று, தமரோடு - சுற்றத்தாரோடு சென்று, குறித்தான்-பேசி நிச்சயித்தான்—எ-று. (௫0௧)

தன்னிளையான் சிறுமியராயினும் அவர்க்குத் தாம் தந்தையென்னு முறை நோக்கி "யான்பினளித்த திருவன்னவர்" என்றான்.

1345 கொய்நிறை தாரன் குசத்துவசப்பேர்
நெய்நிறை வேலவன் மங்கையர் நேர்ந்தார்
மைநிறை கண்ணியர் வானுறை நீரார்
மெய்நிறை மூவரை மூவரும் வேட்டார்.

(இ-ள்.) மை நிறை - மைநிறைந்த, கண்ணியர் - கண்களையுடையாரும், வான் உறை நீரார் - சுவர்க்கத்தில் வசித்தற்குரிய அழகாகிய குணத்தையுடையாரும் ஆகிய கொய்நிறை தாரன் - கொய்து குறைவறத் தொடுத்த மலர்மாலையை

யுடையவனாகிய, குசத்துவசப்பேர்-குசத்வஜன் என்னும் பெயர்பெற்ற, செய்நிறை வேலவன்-செய்யை முற்றத்தடவிய வேலையேந்திய அரசனது, மங்கையர் - பெண்கள், நேர்ந்தார் - இசைந்தார்கள், மெய்-உண்மையொழுக்கமும், நிறை - நிறைக்குணமும் அமைந்த, மூவரை - (அந்த) மூன்று பெண்களையும், மூவரும் - பரத லக்ஷ்மண சத்ருக்நர்களாகிய மூவரும், வேட்டார் - மணம்புரிந்தார்கள் — எ - று. (௧0௨)

பரதருக்கு மாண்டவியும், லக்ஷ்மணருக்கு ஊர்மிளையும், சத்ருக்நருக்கு சுருதகீர்த்தியும் எனக்கொள்க.

1346. வேட்டவர் வேட்டபின் வேந்தனு மேனாள்
கூட்டிய சீர்த்தி கொடுத்தில னல்லால்
ஈட்டிய மெய்ப்பொருள் யாவுள வெல்லாம்
வேட்டவர் வேட்டவை வேண்டள வீய்ந்தான்.

(இ-ள்) அவர் - அவர்கள், வேட்டு - (ஒருவரையொருவர்) விரும்பி, வேட்டபின்-மணம்புரிந்தபின்பு, வேந்தனும்-சக்ரவர்த்தியும், மேல்நாள்கூட்டிய-தொன்றுதொட்டுக்கூட்டிய, சீர்த்தி - கீர்த்தியை, கொடுத்திலன் அல்லால் - கொடுத்திலனன்றி, மெய் ஈட்டிய - மெய்ம்மையாகிய நல்வழியிற் சம்பாதித்த, பொருள்யாஉள - பொருள்களெவையுள்ளன, எல்லாம் — (அவற்றை) யெல்லாம், வேட்டவர் வேட்டவை — விரும்பினவர் விரும்பியவற்றை, வேண்டு அளவு - வேண்டியமட்டும், ஈய்ந்தான் - கொடுத்தான் — எ-று. (௧0௩)

1347. ஈய்ந்தன வில்லதொ ரின்ப நுகர்ந்தே
ஆய்ந்துணர் கேள்வி யருந்தவ ரோடும்
வேந்தனு மந்நகர் வைகினன் மெள்ளத்
தேய்ந்தன நாள்சில செய்த துரைப்பாம்.

(இ-ள்) வேந்தனும் - சக்ரவர்த்தியும், ஈய்ந்து - (அவ்வாறு) கொடுத்து, அளவு இல்லது - அளவற்றதாகிய, ஓர் - ஒப்பற்ற, இன்பம் - சுகத்தை, நுகர்ந்து- அநுபவியாநின்று, ஆய்ந்து, - (வைதிகநூல்களை) யாராய்ந்து, உணர் - உண்மையையுணர்ந்த, கேள்வி - ஞானக்கேள்விகளை யுடைய, அருந்தவரோடும் - அரிய தவத்தினரோடும், அந்நகர் - அந்தமிதிலாநகரத்தில், வைகினன் - தங்கினான், சில நாள் - சிலநாள்கள், மெள்ளதேய்ந்தன - மெள்ளக்கழிந்தன, செய்தது - (அதின் பிறகு) செய்ததை, உரைப்பாம் - சொல்லுவோம் — எ - று. (௧0௪)

வேந்தனுஞ் சிறப்பும்மை. சக்ரவர்த்தி முதலாயினோர் வேண்டியவற்றை வேண்டியாங்கு, ஜநகனால் தரப்பெற்று, நாட்கழிவு முணராதவாறு கருத்து முற்ற இன்பங்களை நுகர்ந்தனராதலின், "மெள்ளத்தேய்ந்தன நாளசில" என்றார்.

௨௨-வது கடிமணப்படலம் முற்றிற்று.

## உந-வது பரசுராமப்படலம்.



திருவயோத்திக்கு வரும் வழியில் பரசுராமனைக்கண்டு அவனை வெற்றிகொண்டதைக் குறித்துக் கூறும்படலம்.

1348. தானுவதோர் வகையேநனி சனகன்றருதயலும்
நானுவித முறுபோகமு நுகர்குன்றவந் நாள்வாய்
ஆனுமறை நெறிமாதவ முனிகோசிக னருளிப்
போனுன்வட திசைவாயுயர் பொன்மால்வரை புக்கான்.

(இ-ள்) தான் - (வினைவயத்தாலன்றி) தானே, ஆவது - திருவவதரித்தலாகிய, ஓர் வகையே - ஒரு வகையால், நனி - மிகவும், சனகன் தருதயலும் - ஜநக மஹாராஜன் பெற்ற பெண்ணாகிய சீதாபிராட்டியும், (சக்ரவர்த்தித் திருமகனும்) நானுவிதம் உறுபோகமும் - நானுவிதமாகிய மிக்க போகங்களையும், நுகர்கின்ற அந்நாள்வாய் - அநுபவிக்கிற அக்காலத்தில், ஆனு - நித்யமாகிய, மறைநெறி - வேத நெறிகளை, மாதவமுனிகோசிகன் - பெரியதவத்தை யுடைய கௌசிக முனிவன், அருளி - (அவர்களுக்கு) உபதேசித்த, போனுன் - சென்று, வடதிசைவாய் - வடதிசையில், உயர் - உயர்ந்து தோன்றுகின்ற, மால் - பெரிய, பொன் வரை புக்கான் - மேருமலையை யடைந்தான்—எ - று. (க)

பிராட்டி யொருத்தியையுமே யெடுத்துக்கூறி, ஏனையோரை உம்மையாற் றழுவினுர். எல்லா வின்பங்களுக்கும் அவள் கருணைகாரணமாகலின், உம்மை சிறப்பு. பெரும்பான்மையுஞ் சனகன்மகளென்றே உலகர் கருதினமையின், "நனி சனகன் றருதயலும்" என்றுர். தயல் - பேரலி.

1349. அப்போதினின் முடிமன்னவ னணிமாநகர் செலவே
இப்போதுந மணிகந்துணை யெழுகென்றினி திசையாக்
கைப்போதக நிகர்காவலர் குழுவந்தடி கதுவ
ஒப்போதரு தேர்மீதினி லினிதேறின னுரவோன்.

(இ-ள்) அப்போதினில் - அந்நாளில், உரவோன் - சிறந்தவலியுள்ளவனுகிய, முடிமன்னவன் - சக்ரவர்த்தி, இப்போது - இப்பொழுது, நம் - நமது, அணிகம் துணை - சேனைவரைக்கும், (யாவரும்) அணி - அழகிய, மா - பெரிய, நகர் - அயோத்யாநகரத்திற்கு, செல்ல - போதற்பொருட்டு, எழுக என்று - புறப்படுக வென்று, இனிது இசையா - இனிமையாகச்சொல்லி, கைபோதகம் நிகர் - துதிக்கையையுடைய யானையையொத்த, காவலர் குழுவந்து - அரசர் கூட்டம்வந்து, அடிகதுவ - (தன்) பாதங்களை நெருங்காநிற்க, ஒப்பு ஓது அரு - ஒப்புரைத்தலரிய, தேர்மீதினில் - தேரின்மேல், இனிது ஏறினன் - இனிதாயேறினுன்—எ-று. (உ)

1350. தன்மக்களு மருமக்களும் நனிதன்கழல் தழுவ
மன்மக்களு மயன்மக்களும் வயின்மொய்த்திட மிதிலைத்
தென்மக்களு மனமுக்குயிர் பிரிவென்பதோர் துயரின்
வன்மைக்கடல் புகவுய்ப்பதோர் வழிபுக்கன னுரவோன்.

(இ-ள்.) தன் மக்களும் - தன் புத்திரர்களும், மருமக்களும் - தன் மருகியர்களும், நனி - மிகுதியும், தன் கழல் தழுவ - தன்பாதங்களைச் சேர்ந்துசெல்லவும், மன்மக்களும் - அரசர்களும், அயல்மக்களும் - மற்றையோரும், வயின் - இடந்தோறும், மொய்த்திட - நெருங்கிச்செல்லவும், மிதிலை - மிதிலாநகரத்தின், தொல் மக்களும் - பழைய குடிமக்களும், மனம் உக்கு - மனமுருகி, உயிர்பிரிவு என்பது - உயிரைப்பிரிதலென்பதாகிய, ஓர் துயரின் - ஒப்பற்ற துயரமென்கிற, வன்மைக்கடல் - வலிய கடலில், புகவுய்ப்பது - மூழ்கச்செலுத்துவதாகிய, ஓர் வழி புக்கனன் - ஒப்பில்லாதவழியிற் சென்றான், உரவோன் - சிறந்த வலியுள்ளவனாகிய சக்கிரவர்த்தி—எ-று. (௩)

1351. முன்னேநெடு முடிமன்னவன் முறையிற்செல மிதிலை
நன்மாநக ருறைவார்மனம் நனிபின்செல நடுவே
தன்னேபுரை தருதம்பியர் தழுவிச்செல மழைவாழ்
மின்னேபுரை யிடையாளொடு மினிதேகினன் வீரன்.

(இ-ள்) நெடுமுடி மன்னன் - நெடிய முடியை யணிந்த சக்கிரவர்த்தியானவன், முறையின் - முறையாக, முன்னே செல்ல - முன்னேசெல்லவும், மிதிலை - மிதிலையென்கிற, நல் மாநகர் - நல்ல பெரியநகரத்தில், உறைவார் - வசிப்பவர்களது, மனம் - மனமானது, நனி - மிகவும், பின் செல்ல - தன்பின்னே செல்லவும், தன் நேர் புரை தரு - தனக்கு நிகராகின்ற, தம்பியர் - தம்பிமார்கள், தழுவிச்செல்ல - (இருபுறத்தும்) தழுவிச்செல்லவும், நடுவே - (அவர்களுக்கு) இடையில், மின்னே புரை - மின்னலையேயொத்த, இடையாளொடும் - இடையையுடைய பிராட்டியோடும், வீரன் - ரகுவீரன், இனிது ஏகினன் - இனிதாகச் சென்றான்.

தன்னேர் புரைதரு என்பதற்குத், தம்மைத்தாமே நிகர்ப்பவராகிய தம்பியர் என்பாருமுளர். இப்பொருட்குத் தன்னென்பது பன்மையி லொருமை வந்த வழுவமைதி.

1352. ஏகும்மள வையின்வந்தன வலமும்மயி லிடமும்
காகம்முத லியமுந்திய தடைசெய்வன கண்டான்
நாகம்மன னிடையிங்குள திடையூறென நடவான்
மாகம்மணி யணிதேரொடு நின்றானெறி வந்தான்.

(இ-ள்.) ஏகும் அளவையின் - (இவ்வாறு) செல்லுங்காலத்தில், மயில் வலமும் - மயில் வலப்பக்கமும், காகம் முதலிய - காகமுதலியவைகள், இடமும்-இடப்பக்கமும், வந்தன - வந்தனவாகி, முந்திய - முற்பட்டு, தடை செய்வன - தடுப்பவற்றை, கண்டான் - கண்டு, நெறிவந்தான் - நன்னெறியி லொழுகினவனும், நாகம் அன்னன் - யானையையொத்த வலியமைந்தவனுமாகிய சக்ரவர்த்தி, இங்கு - இவ்வழியில், இடை - நடுவே, இடையூறு உளது என - இடையூறுண்டென்று கருதி, நடவான் - (அப்புறத்தில்) செல்லாமல், மாகம் அணி - ஆகாயத்தைத் தீண்டுகிற, அணி - அழகிய, தேரொடு நின்றான் - தேர் அப்புறப்படாமல் நின்றான்—எ-று. (௫)

நெறிவந்தான் என்பதற்கு வழியேவந்தானெனப் பொருள்கொள்ளினு மமையும். காகம்முதலிய வலியன் — விச்சுளி செம்போத்து - இவை வலம் ஆகவேண்டியவை இடமாயினமையின் நடவாதாயினன்.

1353. நின்றேநெறி புணர்வானொரு நிணைவாளனை யழையா
நன்றேபழு துளதோநடு வுரைநீ நயமென்னக்

குன்றேபுரை தோளானெதிர் புள்ளின்குறி கொள்வான்
இன்றேவரு மிடையூறது நன்றாய்விடு மென்றான்.

(இ-ள்.) நின்று - (சக்ரவர்த்தி அவ்வாறு) நின்று, நெறி - சகுனங்களை, உணர்வான் - அறிபவனாகிய, ஒருநினைவாளனை அழையா - ஒரு ஆராய்ச்சியுள்ளவனை யழைத்து, நன்றோ - (இச்சகுனத்தினாலுண்டாகும் பயன்) நன்றுதானோ, பழுது உளதோ - (அன்றித்) தீங்குண்டாகுமோ, நயம் - இனிமையாயும், நடு - நடுவு நிலையாயும், நீ உரை என்ன - (அஞ்சாமல்) நீ சொல்வாயென்றுகேட்க, புள்ளின் குறி கொள்வான் - பட்சி நிமித்தங்களை ஆராய்பவனாகிய அவன், குன்று புரைதோளான் எதிர் - மலையையொத்த தோள்களையுடைய சக்ரவர்த்திக்கெதிர் ஆய்ந்து, இன்று இடையூறுவரும் - இன்று இடையூறுளதாம், அது - அந்த இடையூறு, நன்றுஆய்விடும் - வெற்றியைத்தருவதாய்விடும், என்றான் - என்றுசொன்னான் - எ-று.

நெறியின்பால் நிகழும் புள் நிமித்தத்தை, நெறியென்றார் இடவாகுபெயரான். நன்று - பண்பாகுபெயர்.

1354. என்னும்மள வினில்வானக மிருள்கீறிட வொளியாய்
மின்னும்படி புடைவீசிய சடையான்மழு வுடையான்
பொன்னின்மலை வருகின்றது போல்வானனல் கால்வான்
உன்னுந்தழல் விழியானுரு மதிர்கின்றதொ ருரையான்.

(இ-ள்.) என்னும் அளவினில் - என்று சொல்லுமளவில், வானகம் - ஆகாயமானது, இருள்கீறிட - தன்கண்ணுள்ள இருள்சிதைந்துநீங்க, ஒளி ஆய் - ஒளியையுடையதாய், மின்னும்படி - மின்னும்வகை, புடைவீசிய சடையான் - பக்கங்களில் வீசிய சடையை யுடையானும், மழு வுடையான் - மழுவாயுதத்தை யுடையானும், பொன்னின்மலைவருகின்றதுபோல்வான் - பொன்மலை நடந்துவருவதை யொப்பானும், அனல்கால்வான் - கோபத்தீயை மேனியினால் உமிழ்வானும், உன்னும் - (கண்டோர் அச்சத்தால் மீட்டும்) நினைத்தற்குரிய, தழல் விழியான் - நெருப்புக்கண்களை யுடையானும், உரும் - இடியைப்போல, அதிர்கின்றது - முழங்குவதாகிய, ஓர் உரையான் - ஒப்பற்ற சொல்லையுடையானும் —எ-று. (எ)

கார்த்த வீரியன்முதலிய சூரியகுலமன்னர்களைக் கொலைபுரிவான் சென்ற நாளினும் இந்நாளிற் சினமிகுதியு முடையா னென்பது தோன்ற 'உன்னுந் தழல் விழியான்" என்று கூறினார். அனல் கால்வானென்றதற்கு, மேனி வெப்பம் என்றது. தழல்விழி எனப் பின்னுங் கூறினமையின், "உருமதிர்கின்றதொ ருரையான்" என்பதற்கு, இடியானது (கண்டு) நடுங்குதற் கேதுவான சொல்லை யுடையான் என்று உரைப்பினும் பொருந்தும்.

1355. கம்பித்தலை யெறிநீருறு கலமொத்துல குலையத்
தம்பித்துயிர் திசையானைகள் தளரக்கடல் சலியா
வெம்பித்திரி தரவானவர் வெருவுற்றிரி தரவோர்
செம்பொற்சிலை தரியாவயின் முகவாளிகள் தெரிவான்.

(இ-ள்.) உலகு - உலகானது, கம்பித்து - நடுங்கி, அலை எறி - அலைவீசாநின்ற, நீர் உறு - கடலின்கட்பட்ட, கலம் ஒத்து - மரக்கலத்தையொத்து, உலைய - நிலைகெடவும், உயர் - உயர்ந்த, திசையானைகள் - திக்குகஜங்கள், தம்பித்து - (அச்சத்தால்) அசைவற்றுநின்று, தளர - (மனவலி) தளரவும், கடல் - கடல்கள், சலியா - நிலைமாறி, வெம்பி - கொதித்து, திரிதர - கரைபுரளவும், வானவர் - தேவர்

கள், வெருவுற்று - பயந்து, இரிதர - ஓடவும், ஓர் - ஒப்பற்ற, செம்பொன் சிலை தரியா - செம்பொன் வில்லைத்தரித்து, அயில்முகம் - கூர்மையாகிய முகத்தை யுடைய, வாளிகள் - அம்புப்பயிற்சியில், தெரிவான் — தேர்ச்சியையுடையானும்.

1356. விண்கீழுற வென்றேபடி மேல்கீழுற வென்றே
எண்கீறிய வுயிர்யாவையும் யமன்வாயிட வென்றே
புண்கீறிய குருதிப்புனல் பொழிகின்றன புரையக்
கண்கீறிய கனலான்முனி வியாதென்றயல் கருதேம்

(இ-ள்) விண்கீழ் உறவென்றே - விண்ணுலகம் பூமியில் பொருந்த வென்று தானோ, படிமேல் கீழுறவென்றே - பூமி விண்பாதலம் பொருந்தவென்று தானோ, எண்கீறியவுயிர்யாவையும் - (பிரமன்) கணக்கிலெழுதிய வுயிர்களெல்லாவற்றை யும், யமன்வாய் இடவென்றே - யமனுடையவாயி லிடவென்றுதானோ, முனிவு - கோபம், அயல்யாது என்று கருதேம் - வேறே யாதுக்கென்று நினையேம், புண் கீறிய - புண்கள் பிளந்ததினால் வருகின்ற, குருதிப்புனல் - உதிரப்புனலை, பொழிகின்றன புரைய - பொழிகின்றனவற்றை யொத்திருக்கும்படி, கண் கீறிய கனலான் - கண்ணினின்றும் வெளிப்படுகிற (கோவமாகிய) தீயையுடையானும்.

1357. போரின்மிசை யெழுகின்றதோர் மழுவின்சிகை புகையத்
தேரின்மிசை மலைசூழ்வரு கதிருந்திசை திரிய
நீரின்மிசை வடவைக்கனல் நெடுவானுற முடுகிப்
பாரின்மிசை வருகின்றதொர் படிவெஞ்சுடர் படர.

(இ-ள்) போரின் மிசை - போரின் மேல், எழுகின்றது - எழாநின்றதாகிய, ஓர் — ஒப்பற்ற, மழுவின்சிகை புகைய - குடாரத்தின் சிகையானது புகைவதனாலும், தேரின்மிசை - தேர்மீதேறி, மலை - மேருமலையை, சூழ்வரு - சூழ்ந்துவருகின்ற, கதிரும் - சூரியனும், திசை திரிய - திக்குமாறிச் செல்லும்படி, நீரின்மிசை- கடலினிடத்து, வடவை கனல் - வடவைத்தீயானது, நெடுவான் உற - நெடிய ஆகாயத்தை யளாவ, முடுகி - விரைந்து, பாரின் மிசை வருகின்றது - பூமியின் மேல் வருகின்றதாகிய, ஓர்படி - ஒப்பற்றவகையாக, வெம் சுடர் படர - (தன்மேனி யின்) வெவ்விய சுடர்கள் பரவுதலாலும்—எ-று. (சO)

தேரின்மிசை சூழ்வருகதிர் என்றமையால் மலையென்பது மேருவை யுணர்த் திற்று. "வலனேர்புதிரிதரு பலர்புகழ்ஞாயிறு" என்றார் பிறரும். சூழ் என்னு முதனிலை, ஈண்டு வினையெச்சப்பொருட்டு.

1358. பாழிப்புய முயர்திக்கிடை யடையப்புடை படரும்
சூழிச்சடை முடிவிண்டொட வயல்வெண்மதி தோற்ற
ஆழிப்புன லெரிகானில மாகாயமு மழியும்
ஊழிக்கடை முடிவிற்றனி யுமைகேள்வனை யொப்ப.

(இ-ள்) பாழிப் புயம் - பெருமையாகிய புயங்கள், உயர் - உயர்ந்த, திக்கு இடை அடைய - திசைகளிலடைவதனாலும், புடைபடரும் - பக்கங்களிற் படர்ந்த, சூழி - உச்சியிற் சேர்த்துக்கட்டிய, சடைமுடி - சடாமகுடமானது, விண்தொட - ஆகாயத்தைத் தொடுவதனாலும், அயல் - அயலில், வெள்மதி தோற்ற - வெள் ளிய சந்திரன் தோன்றுதலாலும், ஆழிபுனல் - (உம்) கடலினீரும், எரி - (உம்) நெருப்பும், கால் - (உம்) காற்றும், நிலம் (உம்) - பூமியும், ஆகாயமும் - ஆகாசமும், அழியும் - அழிகின்ற, ஊழி - கற்பத்தின், கடை - கடையாகிய, முடிவில் - காலத்

தில், தனி - தனித்துநின்ற, உமைகேள்வனை ஒப்ப - உமாநாயகனாகிய சிவனை ஒத்திருக்க—எ-று. (கக)

உயர் என்பதை வினைத்தொகையாகக் கொள்ளாமல், உயர்ந்து என்னும் இறந்தகால வினை யெச்சமாகக் கொள்ளினும் பொருந்தும். ஐம்பெரும் பூதங்களு மழியுங்காலமாதலின், "ஆழிப்புனலெரிகாலில மாகாயமு மழியும் ஊழிக் கடைமுடிவு" என்றார்.

1359. அயிர்சுற்றிய கடன்மாநில மடையதனிபடரும்
செயிர்சுற்றிய படையானடன் மறமன்னவர் திலகன்
உயிருற்றதொர் மரமாமென வோராயிர முயர்தோள்
வயிரப்பணை துணியத்தொடு வடிவாய்மழு வுடையான்.

(இ-ள்) அயிர்சுற்றிய - நுண்மணலோடு கூடிச்சூழ்ந்த, கடல் - கடலையுடைய மாநிலம் அடைய - பெரிய நிலவுலக முழுதும், தனி - ஒப்பற, படரும் - செல்லுகின்ற, செயிர் சுற்றிய - கோவம்நிரம்பிய, படையான் - சேனையையுடையானாகிய அடல் - வெற்றிக்கேதுவாகிய, மற - வீரத்தையுடைய, மன்னவர் திலகன் - அரசர்களுக்குள் திலகம்போற் சிறந்தவனாகிய (கார்த்தவீரியார்ச்சுநன்), உயிர் உற்றது - உயிரைப் பொருந்தினதாகிய, ஓர் மரம் ஆம் என - ஒருமரமென்னும்படி, (அவனுடைய) உயர் - உயர்ந்த, ஓர் ஆயிரம் தோள் - ஓராயிரந்தோள்களாகிய, வயிரம் - வயிரம்பெற்ற, பணை - கிளைகள், துணிய - அற, தொடு - வீசிய, வடிவாய் - கூர்மை பொருந்திய, மழு உடையான் - மழுவாயுதத்தை யுடையானும்—எ-று. (கஉ)

அயிர் - நீர் என்பாருமுளர்.

1360. நிருபர்க்கொரு பழிபற்றிட நிலமன்னவர் குலமும்
கருவற்றிட மழுவாள்கொடு களைகட்டுயிர் கவரா
இருபத்தொரு படிகாலெழு கடலொத்தலை யெறியும்
குருதிக்குரை புனலிற்புக முழுகித்தனி குடைவான்.

(இ-ள்) ஒருபழி - (தன்பிதாவைக்கொன்ற) ஒப்பற்ற பழியானது, நிருபர்க்கு பற்றிட - அரசர்களுக்குப் பொருந்துதலால், இருபத்தொரு படிகால் - இருபத்தொரு தலைமுறைவந்து, மழுவாள் கொடு - மழுவாயுதத்தைக்கொண்டு, நிலம் - உலகத்திலுள்ள, மன்னவர் குலமும் - அரசர்குலமும், கரு அற்றிட - வேரற்றுப் போம்படி, களைகட்டு - களைகடிந்து, உயிர்கவரா - (அவர்களுடைய) உயிரை வாங்கி, எழு - (காற்றால்) கிளர்ந்தெழுகின்ற, கடல் ஒத்து - கடலைப் போன்று, அலை எறியும் - அலைகள் வீசுகின்ற, குரை - ஒலிக்கின்ற, குருதிப் புனலில் - உதிர நீரில், புக - (தன்னுடல்) அமிழும்படி, முழுகி - மூழ்கி, தனிகுடைவான் - தனியே நீராடினவனும்—எ-று. (கங)

நாயகனை யிழந்த தன்தாய் இருபத்தொரு முறை, மார்பில் அடித்துக்கொண்டதைப்பற்றி இருபத்தொருமுறை வந்து அரசர்களைக் கொலைபுரிவானாயினன்.

1361. கமையொப்பதொர் தவமுஞ்சுடு கனலொப்பதொர் சினமும்
சமையப்பெரி துடையானெதிர் தளர்வுற்றிடை தவிரும்
அமையத்துயர் பறவைக்கினி தாறும்வகை சீருச்
சிமையக்கிரி யுருவத்தனி வடிவாளிக டெரிவான்.

(இ-ள்) கமை ஒப்பது - (தன்) பொறுமையை யொப்பதாகிய, ஓர்தவமும் - ஒப்பற்றதவத்தையும், சுடு - எரிக்கின்ற, கனல் ஒப்பது - நெருப்பை யொப்பதாகிய

சினமும் - கோவத்தையும், சமைய - அமைய, பெரிது உடையான் - மிகுதியுமு டையானும், எதிர் - எதிரே, தளர்வுற்று - தளர்ச்சியடைந்து, இடைதவிரும் அமையத்து - (செல்லும்வழியை) இடையில் தவிர்கின்றசமயத்தில், உயர் - (பறவைகளில்) உயர்ந்த, பறவைக்கு - (அன்றிற்) பறவைகளுக்கு, இனிது - வருத்தமின்றிச்செல்ல, ஆறு ஆம்வகை - வழியாகும் விதம், சீறு - கோவித்து, சிமையம் - சிகரத்தையுடைய, கிரி - மலையை, உருவ - உருவிச்செல்ல, தனி - ஒப்பில்லாத, வடி - கூர்மையாகிய, வாளிகள் - அம்புகளை, தெரிவான் - எய்யுந்தொழிலில் தேர்ச்சியுடையானும்—எ-று (கச)

சிவனிடத்தில் படைக்கலப்பயிர்ச்சிசெய்த காலை, சுப்பிரமணியனும், இவனும் அவன்வழிநிற்க, மேருமலையில் அம்பை எய்யும்படி அம்மூர்த்தி கட்டளையிட, இவன் எய்த அம்பு அம்மலையை உருவிச்சென்றது, அவன் எய்தகணை பிளந்தது இதுபற்றி முருகனுக்கு வரைபக எறிந்தோனெனப் பெயர்வழங்கும்.

1362. சையம்புக நிமிரக்கடல் தழுவும்படி சமைவான்
மையினுயர் மலைநூறிய மழுவாளவன் வந்தான்
ஐயன்றனை யரிதிற்றரு மரசன்னது கண்டான்
வெய்யன்வர நிபமென்னைகொ லெனவெய்துறு மெல்லை

(இ-ள்.) சையம்புக - மலையானது விழுதலால், நிமிர்-மேலெழுந்த, அக்கடல்- அக்கடலினீர், தழுவும்படி - தழுவும்வண்ணம், சமைவான் - உருவமமைவானும் ஆகிய, மையின் - மேகமண்டலத்தினும், உயர் - உயர்ந்த, மலை - க்ரௌஞ்சகிரியின் வலியை, நூறிய - அழித்த, மழுவாளவன் - பரசுராமனானவன், வந்தான் - வந்தனன், ஐயன்தனை - ஸ்ரீராமபிரானை, அரிதின்தரும் - அருமையாகப்பெற்ற, அரசன் - சக்ரவர்த்தி, அதுகண்டான் - அவ்வருகையைப்பார்த்து, வெய்யன் - இக்கொடியோன், வர - வருதற்கு, நிபம் என்னை கொல் என - காரணமென்னையோவென்று, வெய்துறும் எல்லை - அஞ்சுகின்றகாலத்தில்—எ-று. (கரு)

மழுவைப் பலகாலெடுத்துக்கூறியது, பல்பகல் தவம்புரிந்து இறைவன்பாற் பெற்ற பெருமையுடையதும், அரசரைக் களைகட்டு வெற்றியயர்தலும் என்பது உணர்த்தற்கு. இதுபற்றியன்றே இவனியற்பெயர்க்கு அடைபாய்வருவதுமென்க.

1363. பொங்கும்படை யிரியக்கிளர் புருவங்கடை நெரிய
வெங்கண்பொறி சிதறக்கடி துருமேறென விடையாச்
சிங்கம்மென வுயர்தேர்வரு குமரன்னெதிர் சென்றான்
அங்கண்ணர சவனும்மிவ னாரோவெனு மளவில்.

(இ-ள்.) பொங்கும் - களித்துச்செல்லுகின்ற, படை - படைகள், இரிய -பயந்தோட, கிளர் - விளங்குகின்ற, புருவம் - புருவங்கள், கடைநெரிய - கடைநெரியவும், வெங்கண் - வெவ்வியகண்களில், பொறிசிதற - நெருப்புப்பொறிகள் சிந்தவும், கடிது - விரைவாக, உருமேறு என - சிறந்த இடியைப்போல, இடையா - (சக்ரவர்த்திக்குப்பக்கமாக) ஒதுங்கி, உயர் தேர் - உயர்ந்ததேரில், சிங்கம் என - சிங்கம்போல, வரு - வருகின்ற, குமரன் எதிர்சென்றான் - ஸ்ரீராமபிரானுக்கெதிரில் போயினன், அங்கண் அரசு அவனும் - அழகிய கருணையையுடைய அச்சீராமபிரானும், இவன் ஆரோ எனும் அளவில் - இவன் யாவனோவென்று நினைக்குமளவில்—எ-று. (கசு)

1364. அரைசன்னவ னிடைவந்தினி தாராதனை புரிவான்
விரைசெய்முடி படிமேலுற வடிமேலுற விழலும்

கரைசென்றில னணையானெடு முடிவின்கனல் கால்வான்
முரைசின்குரல் படவீரன தெதிர்நின்றிவை மொழிவான்.

(இ-ள்.) அரைசன் - சக்கரவர்த்தியானவன், அவணிடைவந்து - அப்பரசுராமனிடத்தில் வந்து, இனிது - இனிதாக, ஆராதனை புரிவான் - ஆராதனஞ்செய்பவனாகி, விரைசெய் - மணம்வீசுகின்ற, முடி - (மாலையையணிந்த) முடியானது, படிமேல் உற - பூமியிற்பொருந்தும்படி, அடிமேல் - அவனடிகளின்மேல், உறவிழுலும் - மிகுதியும் விழுந்துவணங்குதலும், கரைசென்றிலன் அனையான் - (கோபக்கடலின்) கரையை யடையாதவனாகிய அவன், நெடு - நெடிய, முடிவின்கனல் கால்வான் - ஊழித்தீயைப்போலும் கோபத்தைக் காட்டுவானாகி, முரசின்குரல் பட - முரசிமொலியுண்டாக, வீரனது எதிர்நின்று - ரகுவீரனுக்கெதிரில் வந்து நின்று, இவை மொழிவான் - இம்மொழிகளைச் சொல்வான்—எ-று. (கஎ)

1365. இற்றோடிய சிலையின்றிற மறிவென்னினி யானுன்
பொற்றோள்வலி நிலைசோதனை புரிவானசை யுடையேன்
செற்றோடிய திறடோளுறு தினவுஞ்சிறி துடையேன்
மற்றோர்பொரு ளிலையிங்கிதென் வரவென்றன னுரவோன்,

(இ-ள்.) உரவோன் - வலியுடயோனாகிய பரசுராமன், இற்று ஓடிய - (உன் தோள்வலிக்கு) முறிந்தொழிந்த, சிலையின் திறம் - வில்லினது திறத்தை, யான் அறிவென் - நானறிவேன், இனி - இனி, உன் - உனது, பொன்தோள் - அழகிய தோளினது, வலிநிலை - வலியினிலைமையை, சோதனைபுரிவான் - சோதனைசெய்ய, நசை உடையேன் - விருப்பமுடையேன், செற்று ஓடிய - அரசர்களை வென்றுவிட்ட, திரள்தோள் - திரண்டதோள்களில், உறுதினவும் - மிகுந்ததினவும், சிறிது உடையேன் - சிறிதுடையேனு யிருக்கிறேன், மற்று ஓர் பொருள் இல்லை - வேறொருபொருளில்லை, இங்கு - இவ்விடத்தில், என் வரவு - என்வரவுக்குக் காரணம், இது - இதுதான், என்றனன் - என்றான்—எ-று. (கஅ)

1366, அவனன்னது பகரும்மள வையின்மன்னவ னயர்வான்
புவனம்முழு வதும்வென்றொரு முனிவற்கருள் புரிவாய்
சிவனும்மய னரியும்மலர் சிறுமானிடர் பொருளோ
இவனும்மென துயிரும்முன தபயம்மினி யென்றான்.

(இ-ள்.) அவன் - அந்தப்பரசுராமன், அன்னது - அப்பொருளை, பகரும் அளவையில் - சொல்லுமளவில், மன்னவன் - சக்ரவர்த்தி, அயர்வான் - மனந்தளர்வானாகி, புவனம் முழுவதும் - பூமிமுழுதும், வென்று - வெற்றிகொண்டு, ஒரு முனிவற்கு - ஒப்பற்ற (காசிப) முனிவனுக்கு, அருள்புரிவாய் அருள்புரிந்தவனே சிவனும் - சிவனும், அயன் - (உம்) பிரமனும், அரியும் - இந்திரனும், அலர் - அல்லராகிய, சிறுமானிடர் - சிறுமனிதர்கள், பொருளோ - (உனக்கொரு) பொருளோ, இனி இனி, இவனும் - இச்சிறுவனும், எனது உயிரும் - என்னுயிரும், உனது அபயம் என்றான் - உன்னுடைய அபயம் என்றான் —எ-று. (கக)

இச்சீராமபிரான் தன்னுயிரினுஞ் சிறந்தானென்பான் முற்படவெண்ணி இவனும் எனவும், இவனுக்கோர் இடுக்கண்வரின் உய்யேனென்பான், பிற்பட "எனதுயிரும்" எனவும், நின்னுடைமையாய் நின்ற எம்மை நீ யாதுசெய்யினும் எதிர்க்கு மாற்றலில்லேமென்பான் "உனதபயம்" எனவுங் கூறினான். அரியென்பதற்குத் திருமாலெனப் பொருளுரைப்பாருமுளர், ஸ்ரீராமபிரானே யவனாதலால் அது பொருந்தாதென் றொழிக்க.

1367. விளியார்விளி வதுதீவினை விழைவாருழை யன்றே
களியாலிவ னயர்கின்றன வுளவோகன லுமிழும்
ஒளிவாய்மழு வுடையாய்பொர வுரியாரிடை யல்லால்
எளியாரிடை வலியார்வலி யென்னாகுவ தென்றான்

(இ-ள்.) விளியார் - கொலையுண்பார், விளிவது - கொலையுண்பது, தீவினை விழைவாருழை அன்றே - தீவினைகளை விரும்புவாரிடத்தன்றே, (நல்வினைவிழையு மூன்னிடத்தன்று) களியால் - செருக்கால், இவன் - இச்சிறுவன், அயர்கின்றன உளவோ - (உனக்குச் செய்யும் வணக்கங்களில்) மறந்தனவுளவோ, கனல் உமிழும்-தீயை யுமிழ்கின்ற, ஒளிவாய் - ஒளிவாய்ந்த, மழு உடையாய் - மழுப்படையை யுடையவனே, வலியார்வலி - வல்லவருடைய வலியானது, பொரவுரியாரிடை அல்லால் - போர்செய்தற்குரியாரிடத்தன்றி, எளியாரிடை - வலியற்றவரிடத்து, என் ஆகுவது என்றான் - என்ன பயன்படுமென்றான்—எ-று. (உ௦)

எளியார், எதிர்த்திலராதலின் வலியார் வலி அவரிடத்துப் பயன்படாதென் றவாறாயிற்று.

1368. நனிமாதவ முடையாயிது பிடிநீயென நல்கும்
தனிநாயக முலகேழையு முடையாயிது தவிராய்
பனிவார்கடல் புடைசூழ்படி நரபாலரை யருளா
முனிவாறினை முனிகின்றது முறையோவென மொழிவான்.

(இ-ள்) நனிமாதவம் உடையாய் - மிகவும் பெருந்தவத்தை யுடைய காசிப முனிவனே, நீ இது பிடிஎன நல்கும் - நீ யிதைத் தக்ஷிணையாக வேற்றுக்கொள்ளென்று கொடுத்த, தனி - ஒப்பற்ற, நாயகம் - இறைமைத்தன்மை யுள்ளவனே, உலகு ஏழையும் உடையாய் - உலகேழையு முடையவனே, இது தவிராய் - (எம்மைக் கோவித்தலாகிய) இதையொழிவாய், பனி - குளிர்ச்சியுள்ள, வார்கடல் - நெடியகடலானது, புடைசூழ் - புறத்துச சூழப்பெற்ற, படி - உலகத்திலுள்ள, நரபாலரை - அரசருக்கு, அருளா - கிருபைசெய்து, முனிவு ஆறினை - (அவர்கள் மீதுகொண்ட) கோவந்தணிந்தாய், முனிகின்றது - (இப்போது) கோவிப்பது, முறையோ - நீதியோ, என மொழிவான் - எனச் சொல்வானுமாயினன்—எ—று.

ஆறினை யென்ப திறப்பாதலின் முனிகின்றது என்பது இப்போது என நிகழ்விற்கொண்டுரைக்கப்பட்டது.

1369. புறனின்றவ ரிகழும்படி நடுவின்றலை புணராத்
திறனின்றுயர் வலியென்னதொ ரறனின்றரு செயலோ
அறனின்றத னிலைநின்றுயர் புகழொன்றுவ தன்றே
மறனென்பது மறவோயிது வலியென்பது வலியோ.

(இ-ள்.) அறவோய் - அறநிலையையுடையானே, புறன் நின்றவர் - நடுவுநிலைமையில் நின்ற அறிவுடையோர், இகழும்படி - இகழும்படியாக, நடுவின்தலை புணரா - நடுவுநிலையிற் பொருந்தாத, திறன் நின்று - முயற்சிவகையினின்று, உயர் - உயர்கின்ற, வலி - வலியானது, என்னது - யாதாகும், (அது) ஓர் - ஒப்பற்ற, அறனின்தரு செயலோ - அறத்தின்வழியால் தரப்படு முயற்சியோ, மறன் என்பதும் -

வீரமென்பதும், அறன் நின்று - அறம் தன்னிடத்துநிற்க, அதன் நிலைநின்று-அதின் நிலையிலேநின்று, உயர் - (பகைவரைவென்று) உயர்கின்ற, புகழ் - புகழை, ஒன்று வது அன்றோ - அடைவதல்லவோ, (அங்ஙனமின்றி எம்மை வெற்றிகொள்ளும்) இது - இது, வலியென்பது - வலியென்று சிறப்பித்துச் சொல்லப்படுவதாகிய, வலியோ - வலியாகுமோ—எ-று. (உஉ)

"நடுவின்றலை புணராத்திறன்" எனப் பின்னர்க் கூறினமையிற் "புறனென் றதற்கு" நடுநிலைமையெனப் பொருள் கொள்ளப்பட்டது.

1370. சலத்தோடியை வில்லனென்மக னனையானுயிர் தபுமேல்
உலத்தோடெதிர் தோளாயென துறவோடுயி ருகுவேன்
நிலத்தோடுயர் கதிவானுற நெடியாயுன தடியேன்
குலத்தோடற முடியேலிது குறைகொண்டனெ னென்றான்.

(இ-ள்.) என்மகன் - என்புத்திரன், சலத்தோடு இயைவு இலன் - (உன்னிடத்தில் எங்குலத்தார்க்கு) தொன்று தொட்டுவந்த பகையோடு பொருந்தினானல்லன், அனையான் - அத்தன்மையானது, உயிர்தபுமேல் - உயிர் நீங்குமாயின், உலத்தோடு - திரள் கல்லோடு, எதிர் - எதிர்க்கின்ற, தோளாய் - தோள்களையுடையானே, எனது உறவோடு - என்சுற்றத்தாரோடும், நிலத்தோடு - என்னாட்டாரோடும், உயர்கதி - உயர்ந்த கதியாகிய, வான் உற - விண்ணுலகை யடையும்படி, உயிர் உகுவேன் - உயிர் நீங்குவேன், நெடியாய் - பெரியோனே, உனது அடியேன் - உன்னடியேனை, குலத்தோடு - வமிசத்துடன், அற - அற்றுப்போம்படி, முடியேல் - முடியாதே, இது - இதை, குறைகொண்டனென் என்றான் - (உன்பால்) யாசித்தேனென்று சொன்னான்—எ-று. (உங)

1371. என்னாவடி விழுவானையு மிகழாவெரி விழியாப்
பொன்னார்கலை யணிவானெதிர் புகுவானிலை யுணராத்
தன்னாலொரு செயலின்மையை நினையாவுயிர் தளரா
மின்னாலயர் வுறும்வாளர வெனவெய்துற லுற்றான்.

(இ-ள்.) என்னா - என்றுசொல்லி, அடி விழுவானையும் - தன்பாதங்களில் விழுகின்ற சக்ரவர்த்தியையும், இகழா - அவமதித்து, எரி விழியா - தீயைப்போல விழித்துப்பார்த்து, பொன் ஆர்கலை அணிவான் எதிர் - பொன்னாலாகிய அரிய ஆடையை யணிந்த ஸ்ரீராமபிரானுக்கெதிரே, புகுவான் - போவான், நிலை - அவனது கருத்தின் நிலையை, உணரா - (சக்ரவர்த்தி) தெரிந்துகொண்டு, தன்னால் ஒரு செயல் இன்மையை - (இனி) தன்னாற்செய்யத் தக்கதொரு செயலுமில்லாமையை, நினையா - நினைத்து, உயிர்தளரா - உயிர்தளர்ந்து, மின்னால் - மின்னலால், அயர்வுறும் - சோர்வடைகின்ற, வாள் அரவு என - ஒளியையுடையபாம்பு போல, வெய்துறல் உற்றான் வருத்தத்தை யடைந்தான்—எ-று. (உச)

1372. மானம்முடை முடிமன்னவன் மதிசோர்வுறன் மதியான்
தானந்நிலை யுறுவானுறு வினையுண்டது தவிரான்
ஆனம்முடை யுமையண்ணலை யந்நாளுறு சிலைதான்
ஊனம்முள ததன்மேனிலை கேணீயென வுரைப்பான்.

(இ-ள்.) மானம் உடை - மானத்தையுடைய, முடிமன்னவன் - முடிமன்னவனாகிய சக்ரவர்த்தி, மதிசோர்வுறல் - அறிவு சோர்தலை, மதியான் - எண்ணிலன்,

தான் - தான், அந்நிலை - அவ்வரசனது நிலையை, உறுவான் - அடைதற்குக்காரணமாக, உறு - பொருந்திய, வினை உண்டு - வினையுளது, (ஆதலால்) அதுதவிரான் - அக்கோவந்தணியான், ஆனம் உடை - இடக்கையென்னும் வாச்சியத்தையுடைய, உமை அண்ணலை - உமாநாயகனிடத்தில், அந்நாள் உறு - அந்தநாளில் சேர்ந்த, சிலை - (த்ரியம்பகம் என்னும்) வில்லானது, ஊனம் உளது - ஊனமுள்ளது, அதன் - அதனது, மேல்நிலை - பழமையாகிய நிலைமையை, நீ கேள் என - நீ கேளென்று, உரைப்பான் - (சக்ரவர்த்தித் திருமகனைநோக்கி) சொல்லுகின்றான்—எ-று. (உரு)

1373. ஒருகால்வரு கதிராமென வொளிகால்வன வுலையா
வருகார்தவழ் வடமேருவின் வலிசால்வன வையம்
அருகாவினை புரிவானுள னவனாலமை வனதாம்
இருகார்முக முளயாவையு மேலாதன மேனாள்.

(இ-ள்.) மேல் நாள் - முன்னாளில், ஒருகால் - ஒற்றைச் சக்கரத்தையுடைய தேரின்மேல், வரு - (உலகத்தைச்சூழ்ந்து) வருகின்ற, கதிர் ஆம் என - சூரியன் போல, ஒளிகால்வன - ஒளியை யுமிழ்வனவும், உலையா - அழியாமல், வரு-நீருண்டு வருகின்ற, கார் - மேகங்கள், தவழ் - தவழாநின்ற, வடமேருவின் - வடமேருவைப்போல, வலி சால்வன - வலி மிக்கனவும், வையம் - உலகம், அருகா-(வளம்) குறையாமல், வினைபுரிவான் உளன் - மனத்தொழில் புரியும் மயனென்பவன் உளன், அவனால் அமைவன - அவனால் செய்யப்படுவனவு மாகிய, இரு கார்முகம் உள - இரண்டு விவ்லுள்ளன, யாவையும் ஏலாதன - (அவைதமக்கொப்பாக) எவற்றையும் ஏற்காதனவாகும்—எ-று. (உசு)

வடமேருவின் என்பதற்கு வடமேருவினும் எனப் பொருளுரைத்தலுமாம் - இப்பொருளில் இன் உறழ்பொருளில் வந்ததாகக் கொள்க. தாம் - அசை.

வேறு.

1374. ஒன்றினை யுமையாள்கேள்வ னுவந்தனன் மற்றையொன்றை
நின்றுல களந்தநேமி நெடியமா னெறியிற்கொண்டான்
என்றிஃ துணர்ந்தவிண்ணோ ரிரண்டினும் வன்மையெய்தும்
வென்றிய தியாவதென்று விரிஞ்சனை வினவவந்நாள்.

(இ-ள்.) (அவ்விரண்டனுள்) ஒன்றினை - ஒருவில்லை, உமையாள் கேள்வன் உமாநாயகன், உவந்தனன் - மகிழ்ந்து தாங்கினான், மற்றையொன்றை - வேறொரு வில்லை, நின்று - (த்ரிவிக்ரமனாய்) நின்று, உலகு அளந்த - உலகங்களையளந்த, நேமி - சக்ராயுதத்தை யேந்திய, நெடிய மால் - யாவரினும் பெரிய திருமாலானவன், நெறியின்கொண்டான் — முறையாகத் தாங்கினான், என்று இஃது உணர்ந்த என்றிதனையறிந்த, விண்ணோர் - தேவர்கள், இரண்டினும் - இரண்டனுள்ளும், வன்மை எய்தும் - வன்மையால் அடைதற்குரிய, வென்றியது - வெற்றியையுடையது, யாவது என்று - யாதென்று, விரிஞ்சனை வினவ - பிரமனை வினவ, அந்நாள் - அந்நாளில்—எ-று (உஎ)

1375. சீரிது தேவர்தங்கள் சிந்தனை யென்பதுன்னி
வேரியங் கமலத்தோனு மியைவதோர் வினயந்தன்னால்

யாரினு முயர்ந்தமூலத் தொருவரா மிருவர்தம்மை
மூரிவெஞ் சிலைமேலிட்டு மெய்யமர் மூட்டிவிட்டான்.

(இ-ள்.) தேவர்தங்கள் சிந்தனை - தேவர்களுடைய கருத்து, சீரிது - நன்மையுள்ளது, என்பது உன்னி - என்பதை நினைத்து, வேரி அம் கலமத்தோனும் - தேன் அமைந்த அழகிய தாமரைமலரில் வசிக்கும் பிரமனும், இவையது - அதற்கிசைவதாகிய, ஓர் விநயம் தன்னால் - ஒரு தந்திரத்தால், யாரினும் - எல்லாரினும், உயர்ந்த - உயர்ந்த, மூலத்து - காரணதசையில், ஒருவர் ஆம் - ஒருவராகிய- இருவர் தம்மை - இருவரையும், மூரி - வலியமைந்த, வெம்சிலை மேல் இட்டு - வெவ்விய வில்லின்மேல் சார்த்தி, மொய் அமர் மூட்டிவிட்டான் - வலியபோர் மூட்டிவிட்டான்—எ-று. (உஅ)

மூலத் தொருவரா மிருவர் என்றதை, கடிமணப்படலத்தில், சுகூ-வது திருவிருத்தத்தில் உய்த்துணர்ந்து கொள்க.

1376. இருவரு மிரண்டுவில்லு மேற்றின ருலகமேழும்
வெருவரத் திசைகள்பேர வெங்கனல் பொங்கமென்மேல்
செருமலை கின்றபோழ்திற் றிரிபுர மெரித்ததேவன்
வரிசிலை யிற்றதாக மற்றவன் முனிந்துமன்றே

(இ-ள்) இருவரும் - இவ்விருவரும், இரண்டு வில்லும் - இரண்டு விற்களையும், ஏற்றினர் - நாணேற்றினவர்களாய், உலகம் ஏழும் வெருவர - ஏழுலகமும் பயமடையவும், திசைகள்பேர - திசைகள் நிலைபெயரவும், மேல் மேலும், வெம்கனல் பொங்க - வெவ்விய கோவத்தீயானது அதிகப்படவும், செருமலைகின்ற போழ்தில் - யுத்தஞ்செய்யுங்காலத்தில், திரிபுரம் எரித்ததேவன் - சிவனது, வரிசிலை - கட்டமைந்தவில்லானது, இற்றது ஆக - முறிய, அவன் - அச்சிவன், முனிந்து - கோவித்து—எ-று. (உகூ)

1377. மீட்டும்போர் தொடங்கும்வேலை விண்ணவர் விலக்கவல்வில்
நீட்டினன் றேவர்கோன்கை நெற்றியிற் கண்ணன்வெற்றி
காட்டிய கரியமாலுங் கார்முகந் தன்னைப்பாரில்
ஈட்டிய தவத்தின்மிக்க விரிசிகற் கீய்ந்துபோனான்

(இ-ள்) மீட்டும் - மீண்டும், போர்தொடங்கும் வேலை - போர்தொடங்குங்காலத்தில், விண்ணவர் விலக்க - தேவர்கள் மறுத்துவிட, நெற்றியில்கண்ணன் - நெற்றியிற்கண்ணையுடைய சிவன், வல்வில் - வலியற்ற அந்தவில்லை, தேவர்கோன்கை - இந்திரன்கையில், நீட்டினன் - கொடுத்தான், வெற்றி காட்டிய - வெற்றியையடைந்த, கரியமாலும் - கரிய திருமேனியையுடைய இறைவனும், கார்முகம் தன்னை - தன் வில்லை, பாரில் - பூமியில், ஈட்டிய - செய்த, தவத்தின் மிக்க - தவத்தாலுயர்ந்த, இரிசிகற்கு ஈந்து - இரிசிகமுனிவனுக்குக் கொடுத்து, போனான் - சென்றான்—எ-று. (கூ௦)

வலியற்றவில்லை வல்வில் என்றது தகுதி.

1378. இரிசிக னெந்தைக்கீய வெந்தையு மெனக்குத்தந்த
வரிசிலை யிதுநீநொய்தின் வாங்குதி யாயின்மன்ன

குரிசில்க ணின்னொடொப்பா ரில்லையான் குறித்தபோரும்
புரிகிலே னின்னொடின்னம் புகல்வது கேட்டியென்றான்.

(இ-ள்.) இரிசிகன் - இரிசிக முனிவன், எந்தைக்கு ஈய - என்தந்தைக்குக் கொடுக்க, எந்தையும் - என்தந்தையும், எனக்குத்தந்த - எனக்குக்கொடுத்த, வரிசிலை இது - வரிசிலையிதுவாகும், நீ - நீ, நொய்தின் - எளிதாக, வாங்குதி ஆயின் - (இதை) வளைப்பாயானால், மன்ன - அரசனே, நின்னொடு ஒப்பார் - உன்னோடொப்பவராகிய, குரிசில்கள் இல்லை - அரசர்களில்லை, யான்குறித்தபோரும் - நான் கருதிவந்த மல்லுப்போரும், புரிகிலேன் - செய்யேன், இன்னம் - இன்னமும், நின்னொடு புகல்வது - உன்னிடத்தில் நான்சொல்வதை, கேட்டியென்றான் - கேட்பாயென்று சொன்னான்—எ-று. (௩௧)

1379. ஊனவில் லிறுத்தமொய்ம்பை நோக்கமுந் தூக்கமன்றால்
மானவமற்றுங்கேளாய் வழிப்பகையுடையதும்பால்
ஈனமி லெந்தைசீற்ற நீக்கினா னென்னமுன்னோர்
தானவ னனையமன்னன் கொல்லயான் சலித்துமன்னோ.

(இ-ள்.) ஊன வில் - ஊனமாகியவில்லை, இறுத்த - முறித்த, மொய்ம்பை - வலியை, நோக்க - மதிக்க, முந்தூக்கம் அன்று - ஆண்மையன்று, ஆல் - ஆகையால், மானவ - பெருமையுடையானே, மற்றும் கேளாய் - மேலுங் கேட்பாய், உம்பால் - உங்கள் பக்கலில், வழிப்பகையுடையது - தொன்றுதொட்டுவந்தபகைமை (என்னை) உடையது, ஈனம் இல் - வசையில்லாத, எந்தை - என்தந்தை, சீற்றம் நீக்கினான் என்ன - கோவத்தை நீக்கினவனென்றுணர்ந்து, முன் - முற்காலத்தில், ஓர் தானவன் அனைய மன்னன் - ஓரசுரனையொத்த அரசன், கொல்ல - கொன்றதனால், யான்சலித்து - நான் மனநிலை தளர்ந்து—எ-று. (௩௨)

தானவனனையமன்னன் - கார்த்தவீரியன்.

1380 மூவெழு முறைமைபாரின் முடியுடை வேந்தையெல்லாம்
மேவெழு மழுவின்வாயால் வேரறக் களைகட்டன்னார்
தூவெழு குருதிவெள்ளத் துறையிடை முறையினெந்தை
காவன கடன்கணேர்ந்தே னருஞ்சின மடக்கிப்போந்தேன்.

(இ-ள்) மூவெழுமுறைமை - இருபத்தொருமுறைவந்து, பாரில் - உலகிலுள்ள, முடி உடை வேந்தை எல்லாம் - முடியையுடைய (துஷ்ட) அரசர்களையெல்லாம், மேவெழும் - விரும்பியெழுகின்ற, மழுவின்வாயால் - பரசாயுதத்தின் வாயால், வேர் அற - சந்ததியற்றுப்போக, களைகட்டு - களைந்து, அன்னார் - அவர்களுடைய, தூ எழு - தசையிலெழுந்த, குருதிவெள்ளத்துறையிடை - உதிரநீர்த்துறையில், முறையின் - முறைமையாக, எந்தைக்கு - என்தந்தைக்கு, ஆவனம் செய்யத்தகுவனவாகிய, கடன்கள் - நீர்க்கடன்களை, நேர்ந்தேன் - இசைந்துசெய்தேன், (அதனால்) அருஞ்சினம் அடக்கிப்போந்தேன் - (உங்கள்மேல்வைத்த பிறரால் தடுத்தற்கு) அரிய கோவத்தையடக்கிவந்தேன்—எ-று. (௩௩)

1381. உலகெலா முனிவர்க்கீய்ந்தே னாறுபகை யொடுக்கிப்போந்தேன்
அலகின்மா தவங்கள்செய்தே னருவரை யிருந்தேனாண்டைச்

சிலையைநீ யிறுத்தவோசை செவியுறச் சீறிவந்தேன்
மலைகுவென் வல்லையாகின் வாங்கிடித் தனுவையென்றான்.

(இ-ள்.) உலகு எல்லாம் - (யான் வென்று) இவ்வுலக முழுமையும், முனி வற்கு - ஒருமுனிவனுக்கு, ஈந்தேன் - தந்தேன், உறு - மிக்க, பகை - பகைவர்களை ஒழிக்கிப்போந்தேன் - ஒடுக்கிவந்தேன், அலகு இல் - அளவற்ற, மாதவங்கள் செய் - பெரியதவங்களைச் செய்தற்குரிய, அரு - அருமையாகிய, தென்வரை - தெற்கிலுள்ள மஹேந்த்ரகிரியில், இருந்தேன் - தங்கினேன், ஆண்டை - அவ்வி டத்தில், நீ சிலையை இறுத்தவோசை - நீ வில்லைமுறித்தவோசையானது, செவி உற - செவியிற்பொருந்த, சீறிவந்தேன் - கோவித்துவந்தேன், மலைகுவென் - போர் செய்வேன், வல்லையாகின் - நீயொரு சமர்த்தனாயிருந்தால், இத்தனுவை - இந்த வில்லை, வாங்கிடு - வளைத்திடு, என்றான் - என்றுசொன்னான்—எ-று. (ருச)

ஆண்டையென்றது அம்மிதிலையிலென்றபடி. பகை - பண்பாகுபெயர். ஒரு முனியென்றது காசிபமகாமுனியை.

1382. என்றன னென்னநின்ற விராமனு முறுவலெய்தி
நன்றொளிர் முகத்தனாகி நாரணன் வலியினாண்ட
வென்றவிற் றருகவென்னக் கொடுத்தனன் வீரன்கொண்டத்
துன்றிருஞ் சடையோனஞ்சத் தோளுற வாங்கிச்சொல்லும்.

(இ-ள்.) என்றனன் - என்றுசொன்னான், என்ன - என்சொல்ல, நின்ற - (அவனுக்கெதிரில்) நின்ற, இராமனும் - ஸ்ரீராமபிரானும், முறுவல் எய்தி - நகைத்து, நன்று ஒளிர்முகத்தன் ஆகி - நன்குவிளங்குகின்ற முகத்தையுடையவ னாகி, நாரணன் - இறைவன், வலியின் ஆண்ட - தன்வலியினாலாண்ட, வென்றி வில் - வெற்றிவில்லை, தருக என்ன - தரக்கடவாயென்று கேட்க, கொடுத்தனன் - தந்தான், வீரன் - வீரனாகிய ஸ்ரீராமபிரான், கொண்டு - அதைப்பெற்று, அ - அந்த, துன்று - நெருங்கிய, இருசடையோன் - பெரியசடையையுடைய பரசுரா மன், அஞ்ச - அஞ்சும்படி, தோள் உற - தோளிற்பொருந்த, வாங்கி - வளைத்து சொல்லும் - சொல்லுவான்—எ-று. (ருரு)

1383, பூதலத் தரசையெல்லாம் பொன்றுவித் தனையென்றாலும்
வேதவித் தாயமேலோன் மைந்தனீ விரதம்பூண்டாய்
ஆதலிற் கொல்லலாகா தம்பிது பிழைப்பதன்றால்
யாதிதற் கிலக்கமாவ தியம்புதி விரைவினென்றான்

(இ-ள்.) பூதலத்து அரசையெல்லாம் - பூமியிலுள்ள அரசர்களையெல்லாம், பொன்றுவித்தனையென்றாலும்-கொன்றனையாயினும், வேத வித்து ஆய மேலோன் மைந்தன் நீ - வேதமாகிய தருவுக்கு வித்தாகிய மேலோனுக்குப் புதல் வன் நீ, (அன்றியும்) விரதம் பூண்டாய் - தவவேடத்தை மேற்கொண்டாய், ஆத லால், பிழைப்பது அன்று - தவறுவது அல்ல, ஆல் - ஆதலால், இதற்கு இலக்கமா வதுயாது - இதற்குலக்ஷ்யமாவதுயாது, விரைவின் இயம்புதி - விரைவாகச்சொல் வாய், என்றான் - என்றுசொன்னான்—எ-று. (ருசு)

வேதவித்து என்பதற்கு, வேதமாகிய கனிக்கு வித்து என்பாருமுளர், வித்து நேரே கனிக்குக் காரணமன்மையானும், தருவைப்போல வேதமும் அநேகசாகைகளையுடைய தாதலானும் தருவென்றலே பொருத்தமென்க.

வேறு.

1384. நீதியாய் முனிந்திடே லீயிங் கியாவர்க்கும்
ஆதியா னறிந்தனெ னலங்க னேமியாய்
வேதியா விறுவதே யன்றி வெண்மதிப்
பாதியான் பிடித்தவில் பற்றப் போதுமோ

(இ-ள்.) (அதுகேட்ட பரசுராமன்) நீதியாய் - நீதியையுடைய ஸ்ரீராமபிரானே, முனிந்திடேல் - கோவங்கொள்ளாதை, நீ - நீ, இங்கு யாவர்க்கும் ஆதியான் - இவ்வுலகத்துள்ள எல்லார்க்கும் முதன்மையானவன், அறிந்தனென் - (அதை) அறிந்தேன், அலங்கல் நேமியாய் - மாலையையணிந்த சக்ராயுதத்தை யுடையானே, வேதியா - வேதப்ரதிபாத்யனே, வெண்மதிப் பாதியான் - வெள்ளிய மதிப்பிளவை யணிந்த சிவன். பிடித்தவில் - கையிற்பற்றிய வில்லானது, இறுவதேயன்றி - முறிவதேயல்லாமல், பற்றப்போதுமோ - நீண்டத்தான்போதுமோ—எ-று. (கஎ)

வேதியா என்பதற்கு வேறுபட்டென்றலுமாம்.

1385. பொன்னுடை வனைகழற் பொலங்கொ டோளினய்
மின்னுடை நேமியா னுதல் மெய்ம்மையால்
என்னுள துலகினுக் கிடுக்கண் யான்றந்த
உன்னுடை வில்லுமுன் னுரத்துக் கீடன்றால்.

(இ-ள்) பொன் உடை - அழகையுடைய, வனை அலங்கரித்த, கழல் - வீரகண்டையைத்தரித்த பாதங்களையும், பொலம் கொள் தோளினய் - பொன்னணிகளைக்கொண்ட தோள்களையு முடையானே, மின் உடை - ஒளியையுடைய, நேமியான் ஆதல் - சக்ராயுதத்தையுடைய இறைவன் நீயாதல், மெய்ம்மை - உண்மையாம், ஆல் - ஆதலால், உலகினுக்கு - உலகத்துக்கு, இடுக்கண் - துன்பம், என் உளது - என்ன இருக்கிறது, யான் தந்த - நான் கொடுத்த, உன் உடை வில்லும் - உன்னுடைய வில்லும், உன் உரத்துக்கு ஈடு அன்று-உன்வலிமைக்குத்தக்கதன்று. ()

1386 எய்தவம் பிடைபழு தெய்தி டாமலென்
செய்தவம் யாவையுஞ் சிதைக்க வேயெனக்
கையவ னெகிழ்தலுங் கணையுஞ் சென்றவன்
மையுறு தவமெலாம் வாரி மீண்டதே.

(இ-ள்.) எய்த அம்பு - எய்த அம்பானது, (இதுவரையில் தவறாமல்) இடை பழுது எய்திடாமல் - இடையிலே தவறிக்குற்றம்பொருந்தாமல், என் செய்தவம் யாவையும் - என்செய்தவங்க ளெல்லாவற்றையும், சிதைக்க என - சிதைக்கக் கடவதென்று, அவன் - அவ்விடத்தில், கைநெகிழ்தலும் - கையைவிரித்தலும், கணையும் - ஸ்ரீராமபாணமும், சென்று — போய், அவன் - அவனது, மை அறு தவம் எல்லாம் - குற்றமற்ற தவத்தையெல்லாம், வாரிமீண்டது - வாரிக்கொண்டு திரும்பினது—எ-று. (ரு௯)

1387. எண்ணிய பொருளெலா மினிது முற்றுக
மண்ணிய மணிநிற வண்ணா வண்டுழாய்க்
கண்ணிய யாவர்க்குங் களைக ணாகிய
புண்ணிய விடையெனத் தொழுது போயினான்.

(இ-ள்.) மண்ணிய - வேகடஞ்செய்த, மணி - நீலமணியினது, நிறம் - நிறம் போன்ற, வண்ணா - நிறத்தையுடையோனே, வண்துழாய்க்கண்ணிய - வளவிய துளசிமாலையையணிந்தவனே, யாவர்க்கும் - எல்லார்க்கும், களைகண் ஆகிய - ஆதாரமாகிய, புண்ணிய - புண்ணியனே, எண்ணிய - நீநினைத்த, பொருள் எல்லாம் - சர்வார்த்தங்களும், இனிது முற்றுக-எளிதாகச் சித்திப்பனவாகுக, விடை—விடைகொடுப்பாய், என - என்று, தொழுது - வணங்கி, போயினான் - (தன்னிடத்துக்குச்) சென்றான்—எ-று. (சுO)

1388 அழிந்தவன் போனபி னமலன் ஐயுணர்
வொழிந்தன னுயிருலைந் துருகு தாதையைப்
பொழிந்தபே ரன்பினாற் றொழுது முன்புபுக்
கிழிந்தவான் றுயர்க்கடற் கரைநின் றேற்றினான்.

(இ-ள்.) அவன் - அப்பரசுராமன், அழிந்துபோனபின் - (செருக்கும், தவமும்) அழிந்துபோனபிறகு, அமலன் - மலரஹிதனாகிய ஸ்ரீராமபிரான், ஐயுணர்வு ஒழிந்தனன் - ஐம்புல வுணர்ச்சி நீங்கினவனாய், உயிர் உலைந்து - உயிர் வருந்தி, உருகு - (தன்னைக்குறித்து) உருகாநின்ற, தாதையை - தந்தையை, முன்பு புக்கு (அவனுக்கு) எதிரேசென்று, பொழிந்தபேர் அன்பினால் - பொங்கிய மிக்க அன்பினால், தொழுது - வணங்கி, இழிந்த - (அவன்) இழிந்த, வான்துயர்க்கடல்நின்று - பெரிய துன்பக்கடலினின்றும், கரை ஏற்றினான் - (களிப்பாகிய) கரையிலேற்றிவிட்டான்—எ-று. (சுக)

1389. வெளிப்படு முணர்வினன் விழுமம் நீங்கியே
தளிர்ப்புறு மதகரித் தானை யானிடை
குளிப்பருந் துயர்க்கடற் கோடு கண்டவன்
களிப்பெனுங் கரையிலாக் கடலு ளாழ்ந்தனன்.

(இ-ள்.) வெளிப்படும் உணர்வினன் - (அழிந்து) உணர்வு வெளிப்பட்டவனாகி, விழுமம் நீங்கி - துன்பம் நீங்கி, தளிர்ப்பு உறு - களிக்கின்ற, மதகரிதானையான் - மதயானைச்சேனையையுடைய சக்ரவர்த்தி, இடை - இடையில், குளிப்பு அரு - மூழ்குதலரிய, துயர்கடல் - துன்பக்கடலினது, கோடுகண்டவன் - கரையைக்கண்டவன, களிப்பு என்னும் - களிப்பென்கிற, கரை இல்லாத - கரையற்ற, கடலுள் - கடலில், ஆழ்ந்தனன் ஆழ்ந்தான்—எ-று. (சுஉ)

1390. பரிவறு சிந்தையப் பரசு ராமன்கை
வரிசிலை வாங்கியோர் வசையை நல்கிய
ஒருவனைத் தழுவிநின் றுச்சி மோந்துதன்
அருவியங் கண்ணெனுங் கலச மாட்டினான்.

(இ-ள்.) பரிவு அறு - (அரசர்மேல்) அன்பில்லாத, சிந்தை-சிந்தையையுடைய, அப்பரசுராமன் - அந்தப்பரசுராமனது, கை - கையிற்றாங்கிய, வரிசிலை வாங்கி - கட்டமைந்த வில்லைவாங்கி, ஓர்வசையை - ஒப்பற்ற பழிப்பை, நல்கிய - (அவனுக்குக்) கொடுத்த, ஒருவனை - உவமை யற்றவனாகிய ஸ்ரீராமபிரானை, தழுவி நின்று - தழுவி நின்று, உச்சி மோந்து - உச்சியைமோந்து, அருவி - அருவியைப்போல நீரொழுகாநின்ற, தன்கண் என்னும் - தன் கண்களென்கிற, கலசம் - கலசங்களைக் கொண்டு, ஆட்டினன் - நீராட்டினன்—எ-று. (சுக)

1391. பொய்ம்மையிற் சிறுமையிற் புரிந்த வாண்டொழில்
மும்மையி னுலகினால் முடிக்க லாவதோ
மெய்ம்மையிச் சிறுவனே வினைசெய் தோர்களுக்
கிம்மையு மறுமையு மீயு மென்றனன்.

(இ-ள்.) பொய்ம்மை இல் - வஞ்சனையில்லாத, சிறுமையின் புரிந்த - எளிதிற் செய்த, ஆண் தொழில் - ஆண்மைத்தொழில், மும்மையின் உலகினால் - மூன்றுலகத்தாராலும், முடிக்கல் ஆவதோ - முடித்தலாகுமோ, இச்சிறுவனே - இவ்விளைஞனே, வினைசெய்தோர்களுக்கு - இருவினையைச் செய்தவர்களுக்கு, (அவ்வினைகட்குத்தக்கவாறு) இம்மையும் - இம்மைப் பயனையும், மறுமையும் - மறுமைப் பயனையும், ஈயும் - கொடுக்கவல்லன், மெய்ம்மை என்றனன் - (இது) உண்மையென்றான்—எ-று. (சுச)

1292. பூமழை பொழிந்தனர் புகுந்த தேவருள்
வாமவேல் வருணனை மான வெஞ்சிலை
சேமியென் றுதவித்தன் சேனை யார்த்தெழ
நாமநீ ரயோத்திமா நகரம் நண்ணினான்.

(இ-ள்.) பூமழை பொழிந்தனர் - பூமாரி சொரிந்தவர்களாய், புகுந்த - (அங்கு) வந்த, தேவருள் - தேவர்களுள், வாமம் - அழகாகிய, வேல் - வேலைத்தாங்கிய, வருணனை - வருணனை (நோக்கி,) மானம் - பெருமைபொருந்திய, வெம்சிலை - வெவ்வியவில்லை, சேமி என்று - (பிறரறியாவகை) சேமித்துவையென்று, உதவி - கொடுத்து, தன்சேனை - தன்சேனைகள், ஆர்த்து எழ - ஆரவாரித்தெழாநிற்க, நாமம் - அச்சத்தைத்தருகின்ற, நீர் - நீர்சூழ்ந்த, மா - பெரிய, அயோத்தி நகரம் நண்ணினான் - அயோத்யா நகரைச்சேர்ந்தான்—எ-று. (சுரு)

1392. நண்ணின ரின்பத்து வைகு நாளிடை
மண்ணுறு முரசினம் வயங்கு தானையவ்
வண்ணலப் பரதனை நோக்கி யாண்டகை
எண்ணருந் தகையதோர் பொருளி யம்புவான்.

(இ-ள்.) நண்ணினர் - (யாவரும்) அடைந்தவர்களாகி, இன்பத்து - இன்பத்தில், வைகும் நாள் இடை - தங்கியிருக்கும் நாளில், மண் உறு - மார்ச்சனையமைந்த, முரசு இனம் - முரசினங்கள், வயங்கு - (ஒலித்து) விளங்குகின்ற, தானை - சேனையையுடைய, அவ்அண்ணல் - அந்தத்தசரதன், அப்பரதனை நோக்கி - அந்தப் பரதனைப் பார்த்து, ஆண் - ஆண்மக்களில், தகை - பெருமையுடையானாகிய சக்ர

வர்த்தி, எண் அரு தகையது - (இதுவரையில்தான்) நினைத்தலில்லாத தன்மை யதாகிய, ஓர்பொருள் - ஒருசெய்தியை; இயம்புவான் - சொல்லுவான்—எ-று.

ஸ்ரீராமபிரான் பெறும் பேறெல்லாம் தான்பெற்றாற் போலவே களித்து, அவன்பக்கல் வரம்பறுகாதலனென்பார் அப்பரதன் எனவும். "ஓவியவெழிலுடை யொருவனையலதோ, ராவியுமுடலமுமிலதென" மேவி யிருப்பவனென்பார் அவ் வண்ணலெனவும், தான்கருதிய பொருளுக்கு யாதோரிடையூறு வரினும் நீக்கு மாற்றலுடையா னென்பார். ஆண்டகையெனவும், தன்கருத்துக்குப் பரதனினங் கானென அன்னோன் கருதியதுதக்கதன்றென்பார் "எண்ணருந்தகையதோர்" பொருளெனவும் கூறினர். தன்கருத்தாவது ஸ்ரீராமபிரானுக்கு முடிசூட்டக் கருதுதல்.

1394. ஆணைநின் றன்முது தாதை யையநிற்
காணிய விழைவதோர் கருத்த னாதலால்
கேணியில் வளைமுரல் கேக யம்புகப்
பூணொளிர் மார்பநீ போதி யென்றனன்.

(இ-ள்.) ஐய - ஐயனே, ஆணை - (தன்னுட்டார்மேற் செலுத்தும்) ஆணையை யுடைய, நின்றன்முதுதாதை - உன்பாட்டன், நிற்காணியவிழைவது - உன்னைக் காணவிரும்புவதாகிய, ஓர் கருத்தன் - ஒரு கருத்துடையான், ஆதலால் - ஆகையால், கேணியில வளைமுரல் - குளங்களில் சங்குகளொலிக்கின்ற, கேகயம் - கேகயநாட்டில், புக - பிரவேசிக்கும்படி, பூண் ஒளிர் - ஆபரணங்க ளொளிர்கின்ற, மார்ப - மார்பையுடையானே, நீபோதி என்றனன் - நீபோவென்று சொன்னான்.

1395. ஏவலு மிறைஞ்சிப்போ யிராமன் சேவடிப்
பூவினைச் சென்னியிற் புனைந்து போயினான்
ஆவியங் கவனல தில்லை யாதலான்
ஓவலி லுயிர்பிரிந் துடல்சென் றென்றவே.

(இ-ள்.) ஏவலும் (சக்ரவர்த்தி) கட்டளையிடுதலும், இறைஞ்சிப்போய்-வணங்கிச்சென்று இராமன் - ஸ்ரீராமபிரானுடைய, சேவடிப் பூவினை - சிவந்த பாதத்தாமரைமலர்களை, சென்னியில் புனைந்து - தலையிற் சூடி, ஆவி - தன்னுயிர், அங்கு - அவ்விடத்து, அவன் அல்லது - அவனையன்றி, இல்லை ஆதலால் - வேறில்லையாதலால், ஓவல் இல் - ஒழிதலில்லாத, உயிர்பிரிந்து - உயிரைப்பிரிந்து, உடல் சென்றென்ன - உடல்சென்றாற்போல, போயினான் - சென்றான்—எ-று.

1396. உளைவிரி புரவித்தே ருதாசித் தென்றெனும்
வளைமுரல் தானையான் மருங்கு போதப்போய்
இளையவன் றன்னொடு மேழு நாளிடை
ஈளிர்புனற் கேகய நாடு நண்ணினான்.

(இ-ள்.) உளைவிரி - புறமயிர்விரிந்த, புரவி-குதிரைகட்டிய, தேர்-தேர்ப்படையையுடைய, உதாசித்து என்று என்னும் - உதாசித்தென்று சொல்லப்படுகின்ற, வளைமுரல் - சங்குகளொலிக்கின்ற, தானையான்மருங்கு - படையையுடைய அரசனிடத்து, போத - புகுத, இளையவன் தன்னொடும் போய் - சத்ருக்னனோடுசென்று,

ஏழுநாள் இடை-ஏழுநாளில், நளிர்-குளிர்ந்த, புனல்-நீர்வளமமைந்த, கேகயநாடு-கேகயதேசத்தை, நண்ணினான் - அடைந்தான்—எ-று. (சக)

1397. ஆனவன் போனபின் னரசர் கோமகன்
ஊனமில் பேரர சுய்க்கு நாளிடை
வானவர் செய்தமா தவமுண் டாகலான்
மேனனி நிகழ்ந்தன விளம்பு வாமரோ.

(இ-ள்.) ஆனவன் - அவ்வாறு சென்றவனாகிய பரதன், போனபின் - போனபிறகு, அரசர்கோமகன்-சக்ரவர்த்தி, ஊனம் இல்-குற்றமில்லாத, பேர் அரசு உய்க்கும் நாளிடை - பெரிய அரசாட்சி செலுத்துங்காலத்தில், வானவர் - (பிரமன் முதலிய) தேவர்கள், செய்த - பண்ணின, மாதவம் உண்டு ஆகலால் - பெரிய தவமுளதாகலால், மேல் - அதற்குப்பிறகு, நனிநிகழ்ந்தன - மிகுதியும் நடந்தசெய்திகளை, விளம்புவாம் - சொல்லுவோம்—எ-று. (௪௰)

ஊனம் இல்பேர் அரசு - வர்ணாச்சிரமதருமங்கள் செவ்விதிற்பொலியவும், வலியார் எளியாரை நலிதல்முதலிய தீமைகள் தன்னிலத்தின்றி மெலியவும் நடத்துஞ் செங்கோன்மை.

பரசுராமப்படலம் - முற்றிற்று.

---

பாலகாண்டம் மூலமும் - உரையும்,

ஸ்ரீமத் கம்பநாட்டாழ்வார் திருவடிகளே சரணம்.

முற்றுப்பெற்றது.



